த.பா.நி. (க.வெ.) வரிசை எண்—766

# கூட்டுறவின் வரலாறும் கொள்கைகளும்

(பி.காம். பட்டப்படிப்பிற்குரியது)

(திருத்தப்பட்ட பாடத்திட்டத்தின்படி வெளியிடப்படுகின்றது)

(இரண்டாம் புத்தகம்)

## பலவகைக் கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாடும், இயக்கத்தின் மதிப்பீடும், எதிர்காலமும்

ஆசிரியர்கள்

**அ. பழனியப்ப முதலியார்**, எம்.ஏ., ஐ.ஏ.எஸ். (ஓய்வு),
ஓய்வுபெற்ற கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளர்,
சென்னை.

**ஏ. பி. பாலசுப்ரமணியம்**, எம்.ஏ., ஜே.பி. (ஓய்வு),
ஓய்வுபெற்ற கூட்டுறவுச் சங்கங்களின் துணைப் பதிவாளர்
மற்றும்
கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியின் முன்னாள் விரிவுரையாளர்,
சென்னை.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — September, 1977

Number of Copies — 2,000

T.N.T.B.S. (C.P.) No. 766



# History and Principles of Co-operation

(Book II)

A. PALANIAPPA MUDALIAR AND

A. P. BALASUBRAMANIAM

**Price Rs. 11-10**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

This book has been printed out of concessional paper made available by the Government of India.

*Printed by*

N[illegible] & Company,
Main Road, Velacheri,
Madras-600 042.

# அணிந்துரை

(திரு. செ. அரங்கநாயகம், தமிழகக் கல்வி அமைச்சர்

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினேழாண்டு கள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் இளங்கலை வகுப்புவரை மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வந்தனர். 1969ஆம் ஆண்டிலிருந்து அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளில் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்துள்ள நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது. இவ்வகையில் கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்களுக்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகமும் சென்னைப் பல்கலைக்கழகமும் ஆண்டு தோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்ல வேண்டும்.

வரலாற்றியல், அரசியல், உளவியல், பொருளியல், மெய்ப் பொருளியல், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணித வியல், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளி யியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல், சட்டவியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்று இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறு வனம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான **கூட்டுறவின் வரலாறும் கொள்கைகளும் (இரண்டாம் புத்தகம்)** என்னும் இந்நூல் தமிழ்நாட்டுப் பாட நூல் நிறுவனத்தின் **766** ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான **35** நூல்களையும் சேர்த்து இதுவரை **801** நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் 'மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்ட'த்தின்கீழ் வெளியிடப் படுகிறது.

தமிழில் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம்பெற வேண்டும் என்பதே நம் குறிக்கோளாகும். கல்லூரிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் கலையியற்பாடங்களையும், அறிவியற் பாடங்களையும், தொழில்நுட்ப அறிவுப் பாடங்களையும் பயிலுகின்ற மாணவர்கள், அவற்றைத் தமிழில் பயிலவேண்டும் என்பதை வலியுறுத்தி வருவதற்குக் காரணம், தமிழறிவு வளர வேண்டும் என்பதைவிட, தமிழ் மக்களின் அறிவு, ஆற்றல் எளிதாக, விரைவாக வளரவேண்டும் என்பதுதான். 'எதிலும் தமிழ்; எங்கும் தமிழ்' என்னும் குறிக்கோளை நிறைவேற்ற வேண்டிய கடப்பாடு தமிழகத்து ஆசிரியப் பெருமக்களையும் மாண வர்களையும் சார்ந்ததாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம்கலந்த நன்றி உரியதாகுக.

**செ. அரங்கநாயகம்**

# பொருளடக்கம்

பக்கம்

இரண்டாம் புத்தகம்

# பலவகைக் கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாடும், இயக்கத்தின் மதிப்பீடும், எதிர்காலமும்

(Different Types of Co-operatives, Evaluation and Future of the Movement)

# 8. சங்கங்களை வகைப்படுத்துதல்
(Classification of Societies)

## கடன் வசதி – கடன் பற்றற்ற சங்கங்களும், விவசாயம் – விவசாயமல்லாத சங்கங்களும்
(Credit and Non-Credit Societies, Agricultural and Non-Agricultural Societies)

கூட்டுறவுச் சங்கங்களைப் பொதுவாக இரண்டு வகுப்புகளாக, அதாவது, கடன் வசதிச் சங்கங்கள் என்றும், கடன் பற்றற்ற சங்கங்கள் என்றும் வகுக்கலாம். ஒரு கடன் வசதிச் சங்கம், தன் உறுப்பினர்களுக்குக் கடன் வழங்குதலை முதன்மை நோக்கமாக மட்டுமன்றித் தன் செயலாகவும்கூடக் கொண்ட ஒரு நிறுவன மாகும். ஒரு கடன் பற்றற்ற சங்கம், கடன் வழங்குதல் அல்லாத இதரச் செயல்கள் புரிவதை முக்கிய நோக்கமாகக் கொண்ட ஒரு நிறுவனம். அத்தகைய செயல்களில், உதாரணமாக, நுகர்வோர் பொருள்கள் விநியோகம், பால் வழங்குதல், கைத்தறியையும் இதரத் தொழிற் பொருள்களையும் உற்பத்தி செய்தல், வீட்டு வசதிகளை ஏற்பாடு செய்தல் முதலியன அடங்கியிருக்கும். கடன் வசதி நிறுவனங்கள் இருவகையானவை யாகும்—விவசாயக் கடன் சங்கங்களும் விவசாயமல்லாத கடன் சங்கங்களும். 1904ஆம் வருடத்திய கூட்டுறவுக் கடன் சங்கங்களின் சட்டம், கடன் சங்கங்களைக் கிராமச் சங்கங்கள் என்றும் அல்லது நகரச் சங்க கள் என்றும் வகைப்படுத்தியது. மற்றும், உறுப்பினர்களில் $\frac{4}{5}$ பகுதியினர், ஒரு கிராமச் சங்கத்தில் விவசாயிகளாக இருக்க வேண்டும் என்றும், ஒரு நகரச் சங்கத்தில் விவசாயிகள் அல்லாத வர்களாக இருக்கவேண்டும் என்றும் நிர்ணயிக்கப்பட்டது. கிராமச் சங்கங்கள், நகரச் சங்கங்கள் என்ற இந்த வேறுபாடு, 1912ஆம் வருடத்திய கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில் கைவிடப்பட்டது. அதற்குப் பதிலாக, பொறுப்பின் அடிப்படையின்பேரில் அதாவது, வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்கள் என்றும் வரையறுக் கப்பட்ட பொறுப்புச் சங்கங்கள் என்றும் சங்கங்களை வகைப் படுத்த வேண்டியிருந்தது. 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின்கீழ், ஒரு விவசாயக் கடன்

சங்கம், கூட்டுறவுப் பதிவாளரால் அனுமதிக்கப்படும் சமயங்களில் தவிர, வரையறுக்கப்படாத பொறுப்பின் அடிப்படையின் பேரில் மட்டுந்தான் அமைக்கப்பட முடியும். பின்னர், வரையறுக்கப்படாத பொறுப்பானது கட்டாயமானதாகச் செய்யப்படக் கூடாது என்றும், கடன் சங்கங்களின் நடவடிக்கைகளை விரிவாக்கம் செய்வதை முன்னிட்டும், சங்கத்தின் வகையையும், பொறுப்பையும் முடிவு செய்வது சங்கத்தின் அமைப்பாளர்களின் யுக்தத்திற்கு விட்டுவிடப்பட வேண்டுமென்றும் கருதப்பட்டது. எனவே, 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தில், வரையறுக்கப்படாத பொறுப்பிலாவது அல்லது வரையறுக்கப்பட்ட பொறுப்பிலாவது ஒரு சங்கத்தை அமைப்பதற்காகச் சரத்துச் செய்யப்பட்டது. நாணயச் சங்கங்கள் இரு வகைப்படுகின்றன: விவசாயக் கடன் சங்கங்களும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் போன்ற குறுகிய காலக் கடனையும் மத்தியக் காலக் கடனையும் வழங்கும் சங்கங்களும், நிலவள வங்கிகள் போன்ற நீண்ட காலக் கடனை வழங்கும் சங்கங்களும். கடன் பற்றற்ற சங்கங்களில், நுகர்வோர் சங்கங்களும், பால் வழங்கும் சங்கங்களும், நெசவாளர் சங்கங்களும் மற்றும் இதரக் குடிசைத் தொழில் சங்கங்களும் போன்ற உற்பத்திச் சங்கங்களும், வீட்டு வசதிச் சங்கங்களும், கடன் வழங்குதல் அல்லாமல் மற்றவைகளை முக்கிய நோக்கமாகக் கொண்ட பல்வேறு இதர வகைச் சங்கங்களும் அடங்கியுள்ளன. இச் சங்கங்கள், அவற்றின் நோக்கங்கள், நடவடிக்கைகள், உறுப்பினர்கள் ஆகியவற்றிற்கிணங்க, விவசாயச் சங்கங்கள் என்றும் விவசாயமல்லாத சங்கங்கள் என்றும்கூட வகைப்படுத்தப்படலாம்.

## வகைப்படுத்துதலின் நோக்கம்
## (Object of Classification)

1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 15ஆவது பிரிவின் கீழும், 1963ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் விதிகளின் 11 (5)ஆவது விதியின் கீழும், கூட்டுறவுச் சங்கங்களின் பதிவாளர், சங்கங்களை, அவைகளின் நோக்கங்கள், அலுவல் எல்லை, அங்கத்துவம் ஆகியவற்றைக் குறித்தும், அல்லது விதிகளில் குறிக்கப்பட்ட வேறு எந்த வகையிலும் வகைப்படுத்தலாம். இந்த வகைப்படுத்துதல், சில புள்ளி விவரங்களுக்காக மட்டுமன்றி, கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாட்டு இயல்பையும், முறைகளையும், அவற்றின் முக்கிய நோக்கங்களையும், அவற்றால் பயனடையும் தொகுதியினர் அல்லது மக்கள்தொகையையும் எளிதாகக் காட்டுவதற்காகவும்கூட

அவசியப்படுகிறது. ஆகவே, கடன் வழங்குதலேயும் மற்றும் தொடர்பான விவசாயப் பணிகளையும் முக்கிய நோக்கமாகக் கொண்ட விவசாயக் கடன் சங்கங்களும், விவசாயமல்லாத கடன் சங்கங்களும் உள்ளன; மற்றும், விவசாய விளைபொருள்கள் விற்பனையை முக்கியப் பணியாகக் கொண்ட விற்பனைச் சங்கங்களும், கூட்டுறவுப் பருத்திக்கொட்டை நீக்கும் ஆலைகள், கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள், கூட்டுறவு அரிசி ஆலைகள் முதலியன போன்ற கச்சாப் பொருள்களை எளிதான விற்பனைக்காகவும், ஏற்றிச் செல்வதற்காகவும் தக்கநிலைக்கு மாற்றம் செய்தலை மேற்கொள்கின்ற பதனப்படுத்தும் சங்கங்களும், பால் உற்பத்தியையும் விற்பனையையும் மேற்கொள்ளுகின்ற பால் வழங்கும் சங்கங்களும், நுகர்வோர் பொருள்கள் வழங்குதலை மேற்கொள்ளுவதை முக்கிய நோக்கமாகக் கொண்ட விநியோக அல்லது நுகர்வோர் சங்கங்களும், நெசவாளர் சங்கங்கள், மற்றும், இதரத் தொழில் கூட்டுறவுச் சங்கங்கள்—கிராமத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள், கதர்க் கூட்டுறவுச் சங்கங்கள், சிற்றளவுத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் போன்ற உற்பத்திச் சங்கங்களும்—வீடு கட்டுதல் முதலியவற்றிற்காக வசதிகள் வழங்குவதை நோக்கமாகக் கொண்ட வீட்டு வசதிச் சங்கங்களும் போன்ற கடன் பற்றற்ற விவசாயச் சங்கங்களும், கடன்பற்றற்றதும் விவசாயமல்லாததுமான சங்கங்களும் உள்ளன. நகர வங்கிகளும், ஊழியர்கள் சங்கங்களும், அதுபோன்ற சங்கங்களும், கூட்டுறவு விவசாயப் பண்ணைச் சங்கங்களும், விற்பனைச் சங்கங்களும், பதனப்படுத்தும் சங்கங்களும், பால் வழங்கும் சங்கங்களும் அதுபோன்ற சங்கங்களும் விவசாயத் துறைப் பக்கத்தில் ஒரு வகுப்பில் இருக்கின்றன. வீட்டு வசதிச் சங்கங்களும், நகரப் பண்டசாலைகளும் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களும் அதுபோன்ற சங்கங்களும் விவசாயமல்லாத துறைப் பக்கத்தில் மற்றொரு வகுப்பாக அமைகின்றன. பிரதம சங்கங்கள் என்றும், மத்தியச் சங்கங்கள் என்றும், தலைமைச் சங்கங்கள் என்றும் சங்கங்கள் மேலும் வகைப்படுத்தப் படலாம். உதாரணமாக, பிரதம கடன் வசதிச் சங்கங்கள், நிதி வழங்கும் மத்திய வங்கிகள் (மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகள்), மற்றும், தலைமை வங்கி (மாநிலக் கூட்டுறவு வங்கி).

தமிழ்நாட்டுச் சங்கங்களின் விரிவான ஒரு பாகுபாட்டிற்குத் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தால் வெளியிடப்பட்ட 'கூட்டுறவுச் சட்ட வரலாறும் நடைமுறைகளும்' என்ற நூலின் அத்தியாயம் IV, பாகம் II ஐப் பார்க்கவும். பின்வரும் 3 அட்டவணைகள், மிக முக்கிய வகைச் சங்கங்களை வகைப்படுத்துதலைக் குறித்து ஒரு கருத்தைக் கொடுக்கும்.

## (1) கடன் வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள்



# (2) கடன் பற்றற்ற கூட்டுறவுச் சங்கங்கள் (விவசாயம்)



# (3) கடன் பற்றற்ற கூட்டுறவுச் சங்கங்கள்
## (விவசாயமல்லாத சங்கங்கள்)



# 9. விவசாயக் கூட்டுறவுக் கடன் வசதி
(Agricultural Co-operative Credit)

## (அ) பொதுக் கூறுகள்
(General Features)

### 1. விவசாயக் கடனின் முக்கியத்துவம்

நம் விவசாயப் பொருளாதார அமைப்பானது முன்னேறி வந்துகொண்டுள்ளது. வருகின்ற ஆண்டுகளில், அது மேலும் பலத்தைப் பெறுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. நவீனத் தொழில் நுட்பத்தை மேற்கொள்ளுதலானது, விவசாய வளர்ச்சியின் வாய்ப்பு வசதிகளைத் திறந்துள்ளது. ஆகவே, விவசாயக் கடன் எப்போதையும்விட அதிக முக்கியத்துவம் வாய்ந்ததாகியுள்ளது. நான்காவது திட்டம், விவசாய உற்பத்தியில் ஆண்டு தோறும் சுமார் 5 சதவிகித வளர்ச்சியை ஏற்படுத்தும் நோக்கங் கொண்டது. கிராம மக்கள்தொகையின் எல்லாப் பகுதியினரும், சிறப்பாகப் பொருளாதார வலுவற்ற பகுதியினர், விவசாய வளர்ச்சியில் பங்கேற்று, அதன் பயனில் பங்கு பெறுவதைச் சாத்தியப்படுத்துவதும் அந்தத் திட்டத்தின் நோக்கமாக விருந்தது. உயர் விளைச்சல் கொடுக்கும் ரகங்கள் திட்டங்களையும், மற்றும் இதரத் தீவிர விவசாய வளர்ச்சித் திட்டங்களையும், அதிகமான பகுதிகளுக்கும், அதிகமான பயிர்களுக்கும் விரிவுபடுத்துவதற்குத் திட்டமிடப்பட்டிருக்கிறது. போதுமான அளவிற்கும், பெருமளவு கடன்பேரிலும், உர வகைகள், விதைகள், பூச்சிகொல்லிகள் மற்றும், இதர விவசாய உற்பத்தித் தேவைகளனைத்தும் வழங்கப்பட வேண்டும். மேலும், விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்காக மேற்கொள்ளப்படவேண்டிய பல்வேறு முதலீட்டுப் பணி இனங்களிருக்கின்றன. சாகுபடி செய்பவர்களுக்கு அப் பணிகளுக்காகவும்கூட, நிதி தேவைப்படுகிறது. பெரும்பாலும், ஒவ்வோர் அறுவடைக்கும் பிறகு அடுத்த அறுவடை வரைக்கும் விவசாயத் தொழிலுக்காகவும், அல்லது குடும்பப் பராமரிப்புக்காகவும் தேவைப்படும் நிதியைப் பொதுவாகப் பயிரிடுபவர் சேமித்து வைக்க இயலாமலுள்ளனர். இந்தியாவிலுள்ள விவசாய மக்கள்தொகையில் பெரும்பாலோர்,

சிறு குடியானவர்களாகவும், விவசாயத் தொழிலாளர்களாகவு மிருக்கின்றனர். இந்தியாவில் சாகுபடி செய்பவர்களுள், ஏறக் குறைய ½ பாகத்திலிருந்து ¾ பாகம் வரை சிறு குடியானவர் களாகவே இருக்கின்றனர் என்று மதிப்பீடு செய்யப்பட்டிருக் கிறது. அனைத்திந்தியக் கிராமக் கடன் மறு ஆய்வுக் குழுவினரின் (1969) (All India Rural Credit Review Committee) கருத்தின் படி, 'மிகச் சிறிய நிலமுடையவர்களின் எண்ணிக்கை பெருகிக் கொண்டு வருகிறது; நடப்பிலுள்ள தங்கள் பண்ணைத் தொழில் அலகுகளின் தன்னிறைவற்ற தன்மையிலிருந்து எழுகின்ற பிரச்சினை கள் மட்டுமன்றி, கடன் வசதி, வழங்குதல் முதலியவற்றைப் பெறுவதைக் குறித்த சங்கடங்களுங்கூட அவர்கட்கு உண்டு'. எனவே, பிரச்சினையானது, ஒரு நியாயமான அல்லது குறைந்த வட்டி விகிதத்தில் தேவைப்படும் அளவிற்கு வெறுங்கடன் பெறுவ தாக மட்டுமன்றி, உற்பத்தித் திறனை மேம்படுத்துவதற்காக அத்தகைய கடன் பிரதானமாக உபயோகப்படுத்தப்பட வேண்டு மென்பதாகவும்கூட இருக்கிறது. மேலும், குடியானவர் அதிகப் படுத்தப்பட்ட தம் உற்பத்தியின் பலனைப் பெறவும், அவர் விளைச்சல் செய்யும் விளைபொருள்களுக்காக மேலான இலாபத் தைத் தரும் இதரப் பொருளாதார நடவடிக்கைகளின் அனு கூலத்தைப் பெறவும் வகைசெய்து, அவருடைய பொதுவான பொருளாதார நிலைமையை மேம்படுத்துவதும், இன்று இருப்பதை விட அவரை ஒரு மேலான மனிதராகச் செய்வதும் அப் பிரச்சினை யிலடங்கியுள்ளன.

## 2. விவசாயக் கடனளிப்பில் கூட்டுறவு அமைப்பின் மேன்மை

விவசாயத்திற்கு நிறுவனக் கடன் வசதி மிகப் பொருத்த மானது என்பது எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக் கிறது. வளர்ச்சிக்கான வழிவகையானது, குறிப்பாகச் சிறு குடியானவனை மையமாகக் கொண்டுள்ள ஒரு பொருளாதார அமைப்பில், பிரதானமாகக் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் விவசாயக் கடனை விரிவுபடுத்தும் திசையில் இருக்கவேண்டும் என்பதும் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. இந்த ஏற்பு, கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் விவசாயக் கடனை விரிவு படுத்துதலையும், கடனை விற்பனையுடன் இணைத்தலையும், கூட்டுறவு வளர்ச்சிக்கான பெரிய திட்டங்களுள் ஒன்றாகத் தொடர்ந்து வரும் ஐந்தாண்டுத் திட்டங்களில் சேர்த்துக் கொள்வதற்குத் திட்டக் குழுவை வழிசெலுத்தியது. அனைத்திந்தியக் கிராமக் கடன் மறு ஆய்வுக் குழுவினரும்கூட (1969), அரசினரின் தீவிர

ஆதரவின் மூலமாகவும், உதவியின் மூலமாகவும் (நிதி ரீதியாகவும், இதர முறையிலும்) அரசால் வளர்க்கப்படவேண்டிய ஒரு கிராமக் கடனமைப்பு இருக்கவேண்டுமானால், அது, கூட்டுறவுச் சங்கமாகத்தான் இருக்குமென்று திரும்பக் கூறும் வகையில் பரிவுரை செய்திருக்கின்றனர்.

## 3. கூட்டுறவுக் கடன் வசதி இயக்கத்தின் வளர்ச்சி

கடன் வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள், அண்மை ஆண்டுகளில் கிராமக் கடனளிப்பிற்கு ஒரு முக்கிய உதவியைப் புரிந்திருக்கின்றன. 1952ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணை, கூட்டுறவுச் சங்கங்களால் அளிக்கப்பட்ட கடன் மிக அற்பமானதாக, அதாவது மொத்தத்தில் 3 சதவிகிதமாக இருந்தது என்பதை வெளிப்படுத்தியது. இந்தச் சதவிகிதம், குறுகிய கால, மத்தியக் காலக் கடனைக் குறித்து மட்டுமே 1968–69ஆம் ஆண்டில், 25 சதவிகிதத்திற்கும், 1970–71ஆம் ஆண்டு இறுதியில் சுமார் 33 சதவிகிதத்திற்கும் அதிகரித்தது. கிராமப் பகுதிகளில், குறுகிய கால, மத்தியக் காலக் கடனளிப்பில், பிரதம விவசாயச் சங்கங்கள், பலநோக்குச் சங்கங்கள் ஆகியவைகளின் வருடாந்தர நடவடிக்கைகள், 1950–51ஆம் ஆண்டில் ரூ. 23 கோடியிலிருந்து 1970–71ஆம் ஆண்டில் ரூ. 578 கோடிக்கும், 1971–72ஆம் ஆண்டில் ரூ. 613 கோடிக்கும் அதிகரித்திருந்தன. சில மாநிலங்களில் சாதனை மேலும் அழுத்தமாக உள்ளது. அம் மாநிலங்களில், கூட்டுறவுச் சங்கங்கள் குடியானவர்களின் கடன் தேவைகளில் பாதிக்கும் மேற்கொண்டு பூர்த்தி செய்கின்றன. நீண்ட கால விவசாயக் கடனைப் பொறுத்தமட்டில், நாட்டில் நிலவள வங்கிகளின் சாதனை இதைவிட இன்னும் வியக்கத் தக்கதாக இருந்துள்ளது. 1950–51ஆம் ஆண்டில், மொத்தக் கடனளிப்பு ரூ. 1·4 கோடியாக விருந்தது. ஆனால், 1971ஆம் ஆண்டுச் சூன் மாதத்துடன் முடிவடைகிற கூட்டுறவு ஆண்டில், அது ரூ. 167 கோடிக்கு உயர்ந்திருந்தது. நான்காவது திட்டக் காலத்தின் போது, ரூ. 680 கோடிக்கு எதிர்பார்க்கப்படும் குறுகிய காலக் கடனளிப்புக்கெதிரே, ஐந்தாவது திட்டக் காலத்தின் இறுதியாண்டின்போது ரூ. 1,200 கோடிக்குக் கூட்டுறவுச் சங்கங்கள் கடனளிக்கக்கூடும். அவ்வாறே, ஐந்தாவது திட்டக் காலத்து ஐந்தாண்டுகளிலும், புதிய மத்தியக் காலக் கடன் பட்டுவாடா ரூ. 350 கோடியாகவும், நீண்ட காலக் கடன் பட்டுவாடா ரூ. 1,500 கோடியாகவும் இருக்கும். இந்த நீண்ட காலக் கடன் பட்டுவாடாவில், ரூ. 1,100 கோடி இயல்பான கடனளிப்பின் கீழும்,

ரூ. 400 கோடி விவசாய மறுநிதிக் கழகத்தின் சிறப்புக் கடனளிப் பின்கீழும் பட்டுவாடாச் செய்யப்படும். இவ்வாறாகக் கூட்டுறவுக் கடனளிப்பு, பருமத்தில் உயர்ந்துகொண்டு வந்துள்ளது.

தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில், கூட்டுறவுச் சங்கங்களால் அளிக்கப்பட்ட கடன், முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியில், வருடாந்தரம் ரூ. 5 கோடியாக இருந்து, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது, வருடாந்தரம் ரூ. 25 கோடிக்கும், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதியாண்டின்போது வருடாந்தரம் ரூ. 30·34 கோடிக்கும், நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கடையாண்டுக்கு முந்தின ஆண்டில் (1972-73), ரூ. 64·60 கோடிக்கும் அதிகரித்தது. நான்காவது திட்டக் காலத்து இறுதியாண்டில், ரூ. 78·82 கோடியளவுக்குக் கடன்கள் வழங்கப்பட்டன. இது மொத்த நடப்பு உற்பத்தி முதலீட்டில் அதாவது ரூ. 210 கோடியில் ஏறக்குறைய 38 சதவிகிதத்திற்குக் கணக்காகிறது. ஐந்தாவது திட்டக் காலத்து இறுதியாண்டின்போது, குறுகிய கால, மத்தியக் காலக் கடனளிப்பிற்காக உத்தேசிக்கப்பட்ட இலக்கு ரூ. 105 கோடியாகும். தேவைப்படும் மொத்த விவசாய உற்பத்திக் கடனில் இது 50 சதவிகிதத்திற்கு, அதாவது ரூ. 210 கோடிக்குக் கணக்காகிறது. நீண்ட காலக் கடன் துறையில், நிலவள வங்கிகளின் நடவடிக்கைகள் ஒரு பெரிதான அதிகரிப்பைப் பதிவு செய்துள்ளன. மூன்றாவது திட்ட இறுதி வரை, வருடாந்தரக் கடனளிப்புச் சுமார் ரூ. 3 கோடிக்கிருந்தது. 1967–68ஆம் ஆண்டில் ரூ. 6·96 கோடியிலிருந்து, 1971–72ஆம் ஆண்டில் ரூ. 24·99 கோடிக்குக் கடனளிப்பு உயர்ந்தது. நான்காவது திட்டக் காலத்து இறுதியாண்டின்போது, கடனளிப்பு ரூ. 25 கோடியளவிற்கிருக்குமென்று எதிர்பார்க்கப்பட்டது. இந்த நிகழ்ச்சிகளின் அடிப்படையில், ஐந்தாவது திட்டக் காலத்தின்போது, ரூ. 150 கோடிக்குக் கடனளிப்பதற்குப் பிரதம நிலவள வங்கிகள் எதிர்பார்க்கப்படுகின்றன. (விவசாய மறுநிதி வசதிக் கழகம்—தீவிர விவசாய வளர்ச்சித் திட்டங்களின்கீழ், ரூ. 60 கோடியும், இயல்பான செயல்திட்டங்களின்கீழ், ரூ. 90 கோடியும்.)

### 4. காரியத்திற்கும் காலத்திற்குமேற்பக் கடன்களை வகைப் படுத்துதலும் கடன் வகைகளும்

வெவ்வேறு காரியங்களுக்காகவும், வெவ்வேறான காலங்களுக்காகவும் குடியானவர்களுக்குக் கடன்கள் தேவைப்படுகின்றன. அவைகளைக் குறுகிய காலமென்றும், மத்தியக் காலமென்றும்,

நீண்ட காலமென்றும் வகைப்படுத்தலாம். பருவக் கால விவசாய நடவடிக்கைகளுக்காகவும் பயிர் விற்பனைக்காகவும், குடியானவர்களுக்குக் குறுகிய காலக் கடன்கள் தேவைப்படுகின்றன. நிலவரி செலுத்துதல், குடும்பச் செல்மானச் செலவுகள் போன்ற சில நடப்புச் செலவுகளுக்காகவும்கூடக் குடியானவர்களுக்குக் கடன்கள் தேவைப்படுகின்றன. இக் கடன்கள், குடியானவனின் அடுத்த அறுவடையின் வருவாயிலிருந்து திருப்பிச் செலுத்தப்பட வேண்டியவையாகும். இக் கடன்கள், பொதுவாக, 12 மாதங்களுக்கு மிகாத ஒரு காலவரையில் செலுத்தப்பட வேண்டியிருக்கின்றன. கரும்பு போன்ற பயிர்கள் விஷயத்தில் 15 மாதங்களாகவும், எந்தப் பயிரை விளைவிப்பதற்காகக் கடனளிக்கப்படுகின்றதோ அந்தப் பயிரின் தன்மைக்கேற்பவும், திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய கால வரை நிருணயிக்கப்படுகிறது. பெரும்பாலும், குறுகிய காலக் கடன், பொதுவாக, ஓர் ஓராண்டுக் கடனாக ஏற்றுக்கொள்ளப்படுகிறது. சுருங்கக் கூறின், சாகுபடி செய்வதற்கான குறுகிய காலக் கடன், அறுவடைமீது முதல்ஈடாக இருக்கவேண்டும். பயிர்க் கடன்கள் அறுவடைக்குப் பின் உடனடியாகத் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும்.

பயிர்க் கடன் முறையின்கீழ் (பின்னர் விவரமாக விளக்கப்படும்), குறுகிய காலத் தேவைகள் கீழ்க்காணும் தலைப்புகளின் கீழ் வகைப்படுத்தப்பட்டுள்ளன:

(அ) பயிர் ரீதியில், உற்பத்திக்காக ஓர் ஏக்கர் அடிப்படையில் நிருணயிக்கப்பட்ட ரொக்கத் தேவைகள்; மழைவழிப் பயிர்களுக்காக (Rainfed Crops) இவை, சாதாரணமாக ஓர் ஏக்கர் அடிப்படையில் உற்பத்தியின் சராசரி மதிப்பில் சுமார் $\frac{1}{4}$ ஆக இருக்கவேண்டும்; பாசனப் பயிர்களுக்காக (Irrigated Crops) இவை $\frac{1}{3}$ வரை போகலாம்.

(ஆ) உர வகைகள், பூச்சிகொல்லிகள், விதைகள் முதலியவற்றிற்காக ஓர் ஏக்கருக்குத் தேவைப்படும் தொகை.

(இ) மேலே (ஆ-வில்) குறிப்பிடப்பட்ட விவசாயத் தேவைகளின் உபயோகத்திலிருந்து எழுகின்ற அதிகப்படியான தொழிற் செலவுகளுக்காகத் தேவைப்படும் ஒரு ரொக்கத் தொகை, சாதாரணமாகப் (ஆ-வின் கீழ்) பெறப்பட்ட தொகையில் சுமார் ஒரு பாதிக்கு மேற்படாத தொகை.

(ஈ) குடும்பப் பராமரிப்புத் தேவைகளின் ஒரு பகுதியைப் பூர்த்தி செய்வதற்காகக் குடும்பம் ஒன்றுக்கு ரூ. 50-க்கு மேற்படாமல், ரொக்கத்தில் ஒரு மொத்தமான தொகை.

(உ) முந்திய ஆண்டின்போது, கூட்டுறவுச் சங்கத்தின்மூலம் உறுப்பினரால் விற்பனை செய்யப்பட்ட விளைபொருள்களின் 5 சதவிகிதத்திலிருந்து 20 சதவிகிதத்திற்குச் சமமான ஒரு கூடுதலான ரொக்கத் தொகை.

**மத்தியக் காலக் கடன்கள்:** நிலத்தின்மீதான நடப்புச் செலவுகளுக்காக மட்டுமன்றி, இதர உற்பத்திக் காரியங்களுக்காகவும்கூட விவசாயிக்குக் கடன் தேவைப்படுகிறது. எருதுகள் வாங்குவதற்காகவும், நிலச்சீர்திருத்தத்திற்காகவும், கிணறு வெட்டுதல் அல்லது ஆழப்படுத்துதலுக்காகவும், பம்புசெட்டுகளைப் பொருத்துவதற்காகவும், விவசாய இயந்திரங்களையும், கருவிகளையும், போக்குவரத்துத் தளவாடங்களையும் வாங்குவதற்காகவும், வீடுகளுக்குப் பழுது பார்த்தல் முதலியவற்றிற்காகவும் மத்தியக் காலக் கடன் விவசாயிக்குத் தேவைப்படுகிறது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளில் பங்குகள் வாங்குவதற்காகவும்கூடக் குடியானவர்களுக்கு மத்தியக் காலக் கடன் தேவைப்படுகிறது. இக்கடன்கள், கடன் வாங்கும் காரியத்திற்கும், தனிநபர் கடன் வாங்குபவரின் திருப்பிச் செலுத்தும் சக்திக்குமேற்ப, 12 மாதங்களுக்கு மேற்பட்டதும், 2 ஆண்டுகளுக்கும் 5 ஆண்டுகளுக்குமிடையே பரவியுள்ளதுமான காலவரைகளுக்கு வழங்கப்படுகின்றன. ஆனால், 5 ஆண்டுகளுக்கு மேற்பட்ட காலவரைக்கு இக்கடன் அளிக்கப்படுவதில்லை. வருடாந்தரத் தவணைகளில் இக்கடன்கள் கடன் வாங்குபவர்களின் வருடாந்தரச் சேமிப்புகளிலிருந்தோ, நிலத்தின்மீது செய்யப்பட்ட கடன் முதலீட்டினுலுண்டாக்கப்பட்ட கூடுதலான வருவாயிலிருந்தோ நிச்சயமாகத் திருப்பிச் செலுத்தப்படவேண்டும்.

**நீண்ட காலக் கடன்கள்:** பழைய கடன்களைத் தீர்ப்பதற்காகவும், அல்லது நிலத்திற்கு நிரந்தர அபிவிருத்தியை நிறைவேற்றுவதற்காகவும், நீண்ட காலக் கடன் விவசாயிக்குத் தேவைப்படுகிறது. சில சந்தர்ப்பங்களில், நில அபிவிருத்திக்கான கடன்கள் வாங்கப்பட்டு, பின்னர், ஒரு நீண்ட காலக் கடனையெடுப்பதன்மூலம், அக் கடன்களைத் தீர்ப்பதற்கு முயலப்படுகிறது. பல்வேறு பாசனத் திட்டங்களால் தழுவப்படும் பகுதிகளில், நிலங்களை மீட்புச்செய்து அவைகளைச் சாகுபடிக்குத் தக்கவையாக்குவதற்கு, விவசாயிகளுக்கு நிதியுதவி தேவைப்படுகிறது. பாசனக் காரியங்களுக்காக, மின்சார மோட்டார்களையும், விலையுயர்ந்த நீரேற்றும் இயந்திரங்களையும், மின்சாரம் கிடைக்காத இடங்களில் எண்ணெய் இயந்திரங்களையும் வாங்குவதற்குக் குடியானவர்கள் விரும்புகின்றனர். மற்றும், பாசன வசதிகளில்லாத

பகுதிகளில் கிணறுகளை வெட்டவேண்டியிருக்கிறது; இக் காரி யங்களுக்காக நீண்ட காலக் கடன் அவசியமாகவுள்ளது. நீண்ட காலக் கடன்கள், 10-லிருந்து 20 ஆண்டுகள் வரை பரவியுள்ள ஒரு காலவரைக்கு அளிக்கப்படுகின்றன. இக் கடன்கள், பொது வாக, ஆண்டுத் தவணைகளில், நிலத்தில் செய்யப்பட்ட முதலீட்டி லிருந்து விளைகின்ற கூடுதலான வருவாயிலிருந்து திருப்பிச் செலுத்தப்பட வேண்டும்.

## 5. கிராமக் கூட்டுறவுக் கடன் வசதி அமைப்பு

நம் பொருளாதார அமைப்பில், நன்கிணைந்த ஒரு கூட்டுறவுக் கிராமக் கடன் அமைப்பு உருவாக்கப்பட்டுள்ளது. குறுகிய கால, மத்தியக் காலக் கடன் துறையில், அது, ஒரு மூன்றடுக்கு அமைப் பாகவும், நீண்ட காலக் கடன் துறையில், ஓர் இரண்டடுக்கு அமைப்பாகவும் உள்ளது. இவ் விரண்டும் கூட்டாட்சி வகை யானவையாக உள்ளன. மற்றும், இக் கடனமைப்பு இரண்டு தனிப்பட்ட கிளைகளையுடையது—குறுகிய கால, மத்தியக் காலக் கடன் வசதி நிறுவனங்களும் நீண்ட காலக் கடன் வசதி நிறுவ னங்களும். பெரும்பாலும் கடன் வசதி இயக்கத்தின் தொடக்கத் திலிருந்தே அது அவ்வாறாக இருந்துள்ளது. ஏனென்றால், (i) பிரதம கடன் வசதிச் சங்கங்கள், மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகள் ஆகியவற்றின் குறுகிய அறிவிப்புப் பொறுப்புகளி லிருந்து (Short Notice Liabilities) நீண்ட காலக் கடன்களை வழங்குதல் சரியான வங்கித் தொழில் நடைமுறையாக இராது; (ii) நீண்ட காலக் கடன்கள் நிலத்தின் ஆதாரத்தின் பேரில் வழங்கப்படுகின்றதால், அதற்காகத் தேவைப்படும் சிக்க லான சட்ட ஏற்பாடுகளைப் பற்றிய அறிவு, பிரதம கடன் வசதிச் சங்கங்களின் சிப்பந்திகள், அலுவலர்-நிர்வாகக் குழுவினர் ஆகி யோருடைய சாமர்த்தியத்திற்கு அப்பாற்பட்டது. ஆகையால், நீண்ட காலக் கடனளிப்பிற்காகத் தனிப்பட்ட நிறுவனங்களை யமைப்பது ஒரு பொதுவான வழக்கமாகவுள்ளது.

குறுகிய காலக் கடனமைப்பு (மத்தியக் காலக் கடன்களையும் உள்ளடக்கியிருக்கிறது), அடிமட்டத்தில் (கிராம மட்டத்தில்) பிரதம விவசாயக் கடன் வசதிச் சங்கங்களையும், மாவட்ட மட்டத் தில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும், மாநில மட்டத்தில் தலைமைக் கூட்டுறவு வங்கியையும் கொண்டிருக்கிறது. நீண்ட காலக் கடனமைப்பு, அடிமட்டத்தில் (தாலுக்கா அல்லது, பொதுவாக வட்டார வட்டத்தில்) பிரதம நிலவள வங்கி களையும், மாநில மட்டத்தில் மாநில நிலவள வங்கியையும்

கொண்டிருக்கிறது. இவ் வமைப்பையும், ஒவ்வொரு வகையான நிறுவனங்களின் எண்ணிக்கையையும் கீழ்க்காணும் அட்டவணை சுட்டிக்காட்டும் :

**கிராமக் கடன்**

குறுகியகாலமும், மத்தியக் காலமும்
- பிரதம விவசாயச் சங்கங்கள் –157, 454 (5,562)
- மத்தியக் கூட்டுறவு வங்கி 341(16)
- மாநிலக் கூட்டுறவு வங்கி 26(1)

நீண்டகாலம்
- பிரதம நிலவள வங்கிகள் 869 (223)
- மாநில நிலவள வங்கி 19(1)

குறிப்பு: இந்த எண்கள் 30–6–1972ஆம் நாளன்று, அனைத்து இந்தியாவுக்குத் தொடர்புள்ளவை. அடைப்பிலுள்ள எண்கள் தமிழ் நாட்டிற்குத் தொடர்புள்ளவை.

கிராம மட்டத்திலுள்ள பிரதம கடன் வசதிச் சங்கங்களில், தனி நபர்கள் மட்டுமே உறுப்பினர்களாக இருக்கின்றனர். பிரதம சங்கங்களின் பிரதானக் கடமை, அதன் உறுப்பினர்கட்குக் கடனளிப்பதற்காக நிதிகளை ஏற்பாடு செய்வதாகும். இச் சங்கங்கள் இயக்கத்தின் அடித்தளமாக அமைந்து, பொதுமக்களுடன் நேரடித் தொடர்புகொண்டுள்ளன. இப் பிரதம சங்கங்கள் தங்களைக் கூட்டுறவு மத்திய வங்கியாக அமைத்துக் கொள்கின்றன. மத்திய வங்கிகள், பொதுவாக, சங்கங்களையும் தனி நபர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டுள்ளன. அவைகளுடன் சங்கங்கள் இணைக்கப்படுகின்றன. பொதுவாக, ஒவ்வொரு மாவட்டத்திலும் ஒரு மத்திய வங்கி யுள்ளது. ஒரு சில சந்தர்ப்பங்களில், ஒரு சில மாவட்டத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட மத்திய வங்கிகளுமிருக்கலாம். கூட்டுறவு மத்திய வங்கியானது, மாவட்ட மட்டத்தில் நிதிகளைத் திரட்டிப் பிரதம கடன் வசதிச் சங்கங்களுக்கு நிதி வழங்குகின்ற ஓர் அமைப்பாகும். மத்தியக் கூட்டுறவு வங்கிகள், தங்களை ஒரு தலைமை வங்கியாக மேலும் அமைத்துக்

கொண்டு, அதனுடன் அவை இணைக்கப்படுகின்றன. தலைமை வங்கி மாநிலம் முழுவதிலும் இயங்கி, மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நடவடிக்கைகளுக்கு வசதி செய்கின்றது. பிரதம கடனுதவிச் சங்கங்களுக்குக் கடனளிப்பதற்காக அது மத்திய வங்கிகளுக்கு நிதியுதவி யளிக்கின்றது. தலைமை வங்கி, வெளிப் பணச் சந்தையுடன் (Outside Money Market) தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு, மாநிலத்திலுள்ள கூட்டுறவு இயக்கத்திற்கும் கூட்டுறவுக் கடன் இயக்கத்திற்கு நிதி வழங்கும் ரிசர்வ் வங்கிக்கும் இடையிலான ஒரு தொடர்புச் சாதனமாகவும் (liaison) இயங்குகின்றது. இந்தியாவில் கூட்டுறவுக் கடன் இயக்கத்தின் பொதுவான முன்னேற்றத்தைப் பற்றிய விவரம், 'இந்தியாவின் கூட்டுறவு இயக்கத்தின் வரலாறு' என்ற தலைப்புள்ள அத்தியாயத்தின் பிற்சேர்க்கையில் தரப்பட்டிருக்கின்றன.

## 6. கூட்டுறவுக் கடன் வசதி அமைப்பில் அரசு பங்காளித்துவமும் அரசு பங்குகொள்ளுதலும்

**1. அரசு பங்காளித்துவம், அரசு பங்குகொள்ளுதல் ஆகியவையின் நோக்கம்:** கிராமக் கடன் விசாரணைக் குழுவினரால் (1951) விவரிக்கப்பட்ட ஒருங்கிணைந்த கிராமக் கடன் திட்டத்தில் செய்யப்பட்ட பிரதானப் பரிவுரைகளிலொன்று, வெவ்வேறு மட்டங்களில் அரசு பங்காளித்துவமாகும். கூட்டுறவுச் சங்கங்கள் சரிவர இயங்கக் கூடிய நிலைமைகள் ஏற்படுத்தப்படவேண்டுமென்றும், இக்காரியத்திற்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் உதவப்படவேண்டுமென்றும், அவை இறுதியாக அத்தகைய உதவியை நிறுத்திவிடும் அல்லது குறைத்துவிடும் வகையில் அவ்வாறு உதவப்பட வேண்டுமென்றும் அக் குழுவினர் கருத்துக் கொண்டனர். அக் குழுவினரின் கருத்தின்படி, இவ்வுதவி தேவைப்படும் அளவிற்கும், ஊன்றிய நலமிகளின் எதிர்ப்பைச் சமாளிப்பதற்குக் கூட்டுறவு நிறுவனங்களுக்கு வகைசெய்யும் ஒரு மாதிரியாகவும் இருக்கவேண்டுமானால், அது அரசிடமிருந்துதான் வர முடியும். அவ்வுதவியின் விதமானது வெறும் ஆட்சியாக அல்லது நிருவாகமாக இருக்கக் கூடாது. அக் குழுவினர் கருத்தின்படி, அரசினர் உதவியானது, கடந்த காலத்தில், 'மிகையான ஆட்சியும், குறைந்த நிதியளிப்பும்' என்ற வடிவத்தில் இருந்துள்ளது. நெடுங்காலமாக, அரசுக்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்குமிடையேயிருந்த உறவு முறையானது, எப்போதாவது நேருகின்ற ஒன்றாகவும், நெருங்கிய ஒன்றாக வில்லாமலும் இருந்தது. அரசு உதவியும், அரசு வழிகாட்டலும் போதா. அக் குழுவினர் கருத்தின்படி,

தேவைப்படுவதெல்லாம் கூட்டுறவுச் சங்கங்களின் எல்லா மட்டங் களிலும் அரசு பங்காளித்துவமே. அப் பங்காளித்துவமானது, இயற்கையாகவே சங்கங்களின் நிருவாகத்திலும் அலுவலிலும் அரசு பங்கு கொள்ளுதலிலும்கூட முடிவடைகிறது. 'கிராமக் கடன் பிரச்சினையானது, கிராமக் கடனைச் சீரமைத்தல் மட்டு மன்று; அது பயனுறுதியாகவும் வலுவற்றவரின் நலனுக்காகவும் இயங்கக் கூடிய நிலைமைகளை உண்டாக்குவதே யாகும். தற்போது நிலவுகின்ற நிலைமைகள், அந் நிலைமைகளால் கொடுமைப்படுத்தப் பட்டுப் பலவீனமாக்கப்பட்ட நபர்களாலேயே மாற்றப்பட முடியாது. குறைந்தபக்ஷம், மாற்றுதல் செய்கின்ற சக்திகள், எதிர்க்கப்படுவதற்கு முயலப்படும் சக்திகளைப் போன்ற வல்லமை யுடையவைகளாகவாவது இருக்கவேண்டும். அத்தகைய சக்திகள் கூட்டுறவுச் சங்கங்களால் மட்டும் விளைவிக்கப்பட முடியாது. அரசுடன் சேர்ந்துதான் கூட்டுறவுச் சங்கங்களால் அவை உண்டுபண்ணப்படக்கூடும்' என்று அக் குழுவினரின் அறிக்கை யில் கூறப்பட்டிருந்தது. கூட்டுறவுக் கடனமைப்பைப் பலப்படுத்து வதற்கு, அரசு பங்காளித்துவம்தான் மிகச் சிறந்த ஒரு பய னுறுதியான முறை என்று அவ் வறிக்கை சுட்டிக் காட்டியது. இக் காரியத்திற்காக, அரசு, எல்லா மட்டங்களிலும் கூட்டுறவுச் சங்கங்களில்—தலைமை வங்கி, மத்திய வங்கிகள், பிரதம சங்கங் களில்—பங்குகளையெடுப்பது மட்டுமன்றி, சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் தன் நியமிகளை இடம்பெறச் செய்யவும் வேண்டும்; அப்பொழுதுதான், அரசு கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகத்தி லும்கூட ஒரு குரலைப் பெறக்கூடும். இவ் வண்ணமாக, கூட்டுறவுச் சங்கங்களில், அரசு அவற்றின் அலுவல்களில் ஒரு நிதி வகை யான முனைப்பைப் பெற்றுள்ள ஒரு பங்காளியாகி, அவற்றின் அலுவல்களின் நிருவாகத்திலும் பங்குகொள்பவராகிறது.

**2. அரசு பங்காளித்துவத்தின் நோக்கம்:** அது பல பக்கங் களைக் கொண்டது. முதலாவதாக, கூட்டுறவு அமைப்புகளின் நிதியடிப்படை எல்லா மட்டங்களிலும் பலப்படுத்த வேண்டி யுள்ளது. சங்கங்களுக்கு அரசு கடனளிப்பதனாலும் அல்லது அவற் றுடன் வைப்புகளை வைப்பதனாலும் இது செய்யப்பட முடியாது. இந்த நடவடிக்கைகளினால், அரசு, சங்கங்களின் யாதொரு சிறப்புப் பொறுப்புமில்லாத ஒரு கடனீவோனாகி விடுகிறது. இரண் டாவதாக, எல்லா மட்டங்களிலும் கடன்களையும் வைப்புகளையும் பெறுவதன்மூலம் அதிகமான நிதிகளை எழுப்பக்கூடிய ஆதாரத்தைப் பெறும் வகையில், பங்கு மூலதன அமைப்பைப் பலப்படுத்துவ தற்கான தேவையுள்ளது. பங்கு மூலதனத்திற்குக் கொடுக்கப் படும் உதவித்தொகை, மாநில அரசால் ரிசர்வ் வங்கியிடமிருந்து

பெறப்பட்டுப் பல்வேறு கூட்டாட்சியமைப்புகளுக்கும், பிரதம அமைப்புகளுக்கும் வழங்கப்படுகிறது. மூன்றாவதாக, அரசு பங்காளித்துவமானது, கிராமக் கூட்டுறவுக் கடன் நிறுவனத்துடன் நேரடியான வகையில் ஒரு தீவிரமான பங்குகொண்டு, நிறுவனங்களின் செயற்பாட்டில் ஒரு குரலைப் பெறுவதற்கு அரசுக்கு வகை செய்கிறது. கூட்டுறவுச் சங்கங்கள் நிதி ரீதியாகச் சரியான வழிகளில் நடத்தப்படுகின்றன வென்பதைக் கவனிக்கும் காரியத்திற்காக மட்டுமன்றி, திட்டத்தின் குறிக்கோள்கள் கருத்தில் கொள்ளப்பட்டிருக்கின்றன வென்பதையும் அதை அமல்படுத்துவதற்குப் பயனுறுதியான நடவடிக்கை யெடுக்கப்படுகிற தென்பதையும் நிச்சயப்படுத்தும் காரியத்திற்காகவும் இது அவசியமாக இருக்கிறது. திட்டத்தின் குறிக்கோள்களில் ஒன்று, அதன் பலன் விவசாய உற்பத்தியாளர்களிடையே குறைந்த வருவாய் வகுப்பினருக்குக் கிடைப்பதை நிச்சயப்படுத்துவதாகும். இந்தக் குறிக்கோளை யடைவதற்கு, எல்லாக் கட்டங்களிலும், அரசு கூட்டிற்கான ஏற்பாடு செய்தல் அவசியமாகும். நிருவாகத்தில் அவ்வாறு அரசு பங்கு கொள்ளுதல், சங்க விவகாரங்களின் அன்றாட நிருவாகத்தில் ஏதாவதொரு தலையீடாகப் பொருள்படக் கூடாது. தலைமை நிறுவனத்திலும் அல்லது மத்திய வங்கியிலும்கூட அரசு நேர்முகமாகப் பிரதிநிதித்துவம் பெறலாம். கீழ் மட்டத்தில் பிரதிநிதித்துவம், சாதாரணமாக, நிதி வழங்கும் கூட்டாட்சி அமைப்புகளின் மூலம் நியமனம் வாயிலாக இருக்கலாம். நான்காவதாக, கூட்டுறவுக் கடனமைப்பு, கிராம வர்த்தகர், வட்டிக்குக் கடனளிப்பவர், இதர ஊன்றிய நலமிகள் ஆகியவர்களின் பலம் பொருந்திய சக்தியுள்ள எதிர்ப்பை எதிர் நோக்க வேண்டியுள்ளது. முன்னேற்றத்தைத் தடைப்படுத்தி வந்த அத்தகைய நலமிகளிலிருந்து எழும் எதிர்ப்பைச் சமாளிப்பதற்குக் கூட்டுறவு நிறுவனங்களுக்கு அரசு பங்காளித்துவம் வகை செய்யும். ஐந்தாவதாக, அரசு பங்காளித்துவம், பலவீனமான கிராமக் கூட்டுறவுக் கடனியக்கத்திற்கும், பலமான நகரப் பொருளாதார அமைப்புக்குமிடையே ஒரு சமப்படுத்தும் காரணியை வழங்கும். ஆறாவதாக, அரசு பங்காளித்துவம் கூட்டுறவுச் சங்கத்தின் கௌரவத்தையும் அந்தஸ்தையும் உயர்த்தி, கூட்டுறவு நிறுவனங்களில் பொதுமக்களுடைய அதிகமான நம்பிக்கையையும்கூடத் தூண்டச் செய்யும். ஏழாவதாக, அரசால் உதவப்பட்ட பங்கு மூலதனம், சங்கங்களுக்கும் அவற்றின் நட்டங்களுக்குமிடையே மத்தியிலிருக்கும் ஒரு மெத்தையாகப் பயன்படும். எட்டாவதாக, கடன் நிறுவனங்கள், எக் காலத்திலும் தங்கள் உறுப்பினர்கள் நலன்களைப் பாதிக்கும் வகையில், வழி தவறிப் போகாமலிருப்பதை நிச்சயப்படுத்துவதற்கு அரசு ஒரு தொடர்ச்

சியான வாய்ப்பைப் பெறும். ஒன்பதாவதாக, அரசு பங்காளித்துவம், சங்கங்களுக்கு அவசியமான கடன் வாங்கும் சக்தியை ஏற்படுத்தித் தங்கள் உறுப்பினர்களின் கடன் தேவைகளை விரும்பப்படும் அளவிற்குப் பூர்த்தி செய்வதற்கு, அவற்றிற்கு வகை செய்யும். அது கடன் விரிவாக்கத்தை விளைவிக்கும்.

கூட்டுறவுச் சங்கங்களில் அரசு பங்குகொள்ளுதல், அரசு பங்காளித்துவம் ஆகிய கருத்துக்கோப்பும், அக் குழுவினரின் இதரத் துணைப் பரிந்துரைகளும், நம் நாட்டில் பொதுவாக அறியப்பட்ட கூட்டுறவுக் கொள்கைகளிலிருந்து பெரிய ஒரு விலகுதலாக அமைந்துள்ளன. அரசு பங்காளித்துவமானது, கூட்டுறவுக் கடன் இயக்கம் தன் சுயாட்சித் தன்மையை இழப்பதை விளைவிக்குமென்றும், அது அதிகார இன ஆட்சிப் போக்கு அபாயத்திற்கு இடந்தருமென்றும் சில வட்டாரங்களில் அஞ்சப்படுகிறது. எனினும், அக் குழுவினர், அரசு பங்காளித்துவ வடிவத்தில் அரசுதவியைப் பரிவு செய்ததன் நோக்கங்கள், முற்றிலும் ஐயத்துக்கிடமின்றி யிருந்தன என்று விரைவில் உணரப்பட்டு, அவர்களின் யோசனைகள் பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டன. அரசு பங்காளித்துவ வடிவில் உதவி பெறுவது, கூட்டுறவுக் கொள்கைகளுக்கும் அல்லது நிறுவனங்களின் கூட்டுறவுத் தன்மைக்கும் அல்லது அவற்றின் சுயாட்சி இயல்புக்கும் முரணானது அன்று. சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் அரசு பிரதிநிதிகளின் எண்ணிக்கை சிறிதாகவே இருக்கிறது. அதாவது, நிருவாகக் குழு உறுப்பினர்களின் மூன்றிலொரு பங்குக்கு மேற்படாது அல்லது 3, இதில் எது குறைவோ அந்த எண்ணிக்கையில்தான், அரசு பிரதிநிதிகள் இருப்பார்கள். கூட்டுறவு நிறுவனங்களிலுள்ள அரசினருடைய ஏராளமான நிதிகளின் காரணமாகவும், பொது மக்களுடைய ஏராளமான நிதிகளின் காரணமாகவும், ஐந்தாண்டுத் திட்டங்களின் குறிக்கோள்கள் அமல்படுத்தப்படுவதை நிச்சயப்படுத்த வேண்டிய தேவையின் காரணமாகவும், நிறுவனங்களில் அத்தகைய பிரதிநிதிகள் அநேகமாகக் காவலாளிகள் போன்று இருக்கின்றனர். சங்கங்களின் உள் நிருவாகத்திலோ அன்றாடச் செயற்பாட்டிலோ, அரசு அல்லது அரசின் பிரதிநிதிகள் தலையீடு செய்ய எதிர்பார்க்கப்படுகின்றனரல்லர். வழி காட்டுவதற்கும், அவசியப்பட்டால் முக்கிய விஷயங்களில் கொள்கைகளை உருவாக்குவதற்கும், கடனளிப்பு அல்லது மேற்கொள்ளப்பட்ட வேறு எந்தத் தொழில் சம்பந்தமான சரியான கொள்கைகளைச் சங்கங்கள் மீறாமலிருப்பதைக் கவனிப்பதற்குமே, அரசு பிரதிநிதிகள் நிருவாகக் குழுவிலிருக்கின்றனர். கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் இப் பிரதானப் பரிவுரையானது எல்லா மாநிலங்க

ளாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுப் பல்வேறு வடிவங்களில் அமல் படுத்தப்பட்டது.

**அரசு பங்காளித்துவ முறை:** அரசு பங்காளித்துவம், நேர்முகமாகவோ மறைமுகமாகவோ இருக்கலாமென்று கிராமக் கடன் விசாரணைக் குழுவினர் பரிவுரை செய்தனர். முதல் கட்டத்தில், அரசு தன் சொந்தப் பெயரில் கூட்டுறவுச் சங்கத்தில் நேர்முகமாகப் பங்குக ளெடுக்கும். இரண்டாவது கட்டத்தில், ஒரு நிறுவனம் இதர நிறுவனங்களில் பங்குகளை யெடுக்கும் காரியத்திற்காகப் பிரத்தியேகமாக உபயோகிக்கப்படு வதற்கு, அந்த நிறுவனத்திற்கு அரசு நிதிகளை வழங்கும். இந் நிறுவனங்களில், இயல்பான காரியங்களுக்காகவும், அல்லது பதிவேட்டுக் காரியங்களுக்காகவும், பங்குகள் அரசால் நிதி வழங்கப் பட்ட நிறுவனங்களின் பெயரில் வைக்கப்பட்டிருந்தாலும், அர சினரே உண்மையான பங்குதாரராக விருக்கின்றனர். நேர்முகப் பங்காளித்துவம் எளிமையானது. ஆனல், மறைமுகப் பங்காளித் துவம் ஒருவாறு சிக்கலான ஒரு நடைமுறை யாகும். மறைமுகப் பங்காளித்துவத்தைக் குறித்துக் கிராமக் கடன் விசாரணைக் குழு வினர் பின்வருமாறு கூறியுள்ளனர்: 'தலைமைச் சங்க மட்டத் தில் கூட்டாளித்துவம் நேர்முகமாக இருக்கும். அதாவது, மாநில அரசு சம்பந்தப்பட்ட நிறுவனங்களின் பங்கு மூலதனத்திற்கு நேர்முகமாக உதவியளிக்கும். மாவட்ட மட்டத்தில் அரசு பங்காளித்துவம் தலைமை நிறுவனத்தின் மூலம் இருக்கும்; மாநில அரசு, தலைமை நிறுவனம் மாவட்ட மட்டத்திலுள்ள நிறுவனங்களின் பங்கு மூலதனத்திற்கு உதவியளிப்பதற்கு, அதற்கு நிதிகள் வழங்கும். பிரதம மட்டத்திலும் கூட, அரசு பங்காளித்துவம் மறைமுகமாக இருக்கும்; அது தலைமை நிறுவனத் திற்கு அளிக்கப்படும் அதேமாதிரியான உதவித்தொகை வடி வத்தை எடுக்கும். இந்த உதவித்தொகையைக் கொண்டு, தலைமை நிறுவனம், மாவட்ட மட்டத்திலுள்ள நிறுவனங்களுக்கு நிதிகள் வழங்கி, மாவட்ட நிறுவனங்கள் தங்களின் முறைப்படி பிரதம மட்டத்திலுள்ள நிறுவனங்களின் பங்கு மூலதனத்திற்கு உதவித்தொகை யளிக்கும்'. அரசு பங்காளித்துவம் எந்த முறை யில் அடையப்பட வேண்டுமென்பது மாநிலங்களுக்கு விட்டு விடப்பட்ட ஒரு விஷயம். ஆனல், பங்கு மூலதனத்தின் அபாயத் தில் பங்கு கொள்ளுதல் என்ற உண்மையான அர்த்தத்தில் மாநில அரசு ஒரு பங்காளி என்பதையும், ஒரு வெறும் கடனீவோனை பொருளில் பங்காளியன்று என்பதையும், ஒன்றிணைந்த ஒரு கட ணமைப்பின் தலைமை நிறுவனமாக, தலைமை வங்கியின் நிலைமை யானது, முடியுமானல் பலப்படுத்தபட வேண்டுமென்பதையும்,

அந்த நிலைமை எந்தச் சந்தர்ப்பத்திலும் பாதிக்கப்படக் கூடாது என்பதையும் நிச்சயப்படுத்துவது அவசியமாக வுள்ளது.

30-6-72ஆம் நாளன்று, இந்தியாவின் 26 மாநிலக் கூட்டுறவு வங்கிகளில் அரசினரின் பங்கு மூலதனம் ரூ. 15.1 கோடியாகவும், 341 மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் ரூ. 45.3 கோடியாகவும், 1,57,454 பிரதம விவசாயக் கடன் சங்கங்களில் ரூ. 21 கோடியாகவும் இருந்தது.

தமிழ் நாட்டில், கிராமக் கடனமைப்பில் அரசு பங்காளித் துவக் கொள்கை ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் பரிவுரைகளை யொட்டி, தலைமைக் கூட் டுறவு வங்கியின் மட்டத்தில் பங்காளித்துவம் நேர்முகமாக இருக் கிறது. மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகளின் மட்டத்தில் அது மறைமுகமாக இருக்கிறது. தமிழ் நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் பங்கு மூலதனத்திற்கு அரசினர் நேர்முகமாக உதவித் தொகை யளிக்கின்றனர். மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகள் மட்டத்தில், மாநில அரசு தமிழ் நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு நிதிகளை வழங்குவதன்மூலம், மாநிலக் கூட்டுறவு வங்கி, மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகளின் பங்கு மூலதனத்திற்கு, உதவித்தொகை யளிப்பதற்கு வகை செய்யப் படுகிறது. பிரதம மட்டத்திலும்கூட அரசு பங்காளித்துவம் மறைமுகமாக உள்ளது. தமிழ் நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு அவசியப்படும் நிதிகளை அரசு வழங்கி, அவ் வங்கி அந் நிதிகளை மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகளுக்கு வழங்கி, மாவட்டக் கூட்டுறவு வங்கிகள் தங்கள் முறைப்படி அந் நிதிகளை பிரதம கடன் சங்கங்களின் பங்கு மூலதனத்திற்கு உதவுகின்றன.

இக் காரியத்திற்காக, மாநில அரசு ரிசர்வ் வங்கியிட மிருந்து நிதிகளைப் பெறுகிறது. ரிசர்வ் வங்கி, தேசிய விவசாயக் கடன் (நீண்ட கால நடவடிக்கை) நிதியை அமைத்துள்ளது. இந்த நிதியிலிருந்து மாநில அரசுகளுக்குக் கடன்கள் அளிக்கப் பட்டு, அந் நிதிகளைக்கொண்டு மாநில அரசுகள் கடன் சங்கங் களின் பங்கு மூலதனத்திற்கு உதவியளிப்பதற்கு வகை செய்யப் படுகிறது. 30-6-74ஆம் நாளன்று, அரசினரால் போடப் பட்டிருந்த பங்கு மூலதனத் தொகை, தமிழ்நாடு மாநிலக் கூட் டுறவு வங்கியில் ரூ. 126 இலட்சமாகவும், மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகளில் ரூ. 296.15 இலட்சமாகவும், பிரதம விவ சாயக் கடன் வசதிச் சங்கங்களில் ரூ. 224.56 இலட்சமாகவு மிருந்தது. விவசாயக் கடன் சங்கங்களின் நிருவாகக் குழுக்களில் மாநில அரசுக்குப் பிரதிநிதி கிடையா.

கூட்டுறவுச் சங்கங்களில் அரசு பங்காளித்துவக் கொள்கை யானது, விவசாயக் கடன் சங்கங்கள், அவற்றின் உயர் நிதிநிறு வனங்கள் விஷயத்தில் போன்று, ஏறக்குறைய அதேமாதிரியான நோக்கங்களுடன் கூட்டுறவு மைய நிலவள வங்கிக்கும், பிரதம நிலவள வங்கிகளுக்கும் மட்டுமன்றி, விற்பனை வசதிச் சங்கங் களுக்கும் பதனப்படுத்தும் சங்கங்களுக்கும் நுகர்வோர் நிறுவ னங்களுக்கும் நகரக் கூட்டுறவு வங்கிகளுக்கும்கூட நீடிக்கப் பட்டுள்ளது.

## (ஆ) பிரதம விவசாயக் கூட்டுறவுக் கடன்வசதி அமைப்பு

(Primary Agricultural Co-operative Credit Structure)

### 1. அமைப்பு வகையின் பரிணமம்

தொடக்க ஆண்டுகளில், கிராமக் கடன் வசதிச் சங்கங்கள் பெரும்பாலும் ரெய்ஃபெய்சன் கொள்கைகளின் அடிப்படையில் அமைக்கப்பட்டன. அவைகளாவன: (i) உறுப்பினர்கள் பரஸ்பர அறிவைப் பெறும் வகையில் சிறிய அலுவல் எல்லை, (ii) சிறிய மதிப்புள்ள பங்குகள், (iii) நிகர இலாபத்தை ஒரு பிரிக்க முடியாத காப்பிருப்புக்கு ஒதுக்கீடு செய்தல், (iv) உறுப்பினர் களின் வரையறுக்கப்படாத பொறுப்பு, (v) கடன்கள் உறுப்பி னர்களுக்கு மட்டும், (vi) உற்பத்திக் காரியத்திற்காகவும், வருங்காலச் சேமிப்புக் காரியத்திற்காகவும் மட்டும் கடன்கள், (vii) இலாப நோக்கு இல்லாமை, (viii) அலுவலர்—நிருவாகக் குழுவினரின் ஊதியம் பெறுத சேவை, (ix) உறுப்பினர்களின் பொருளாதார வளத்தையும், ஒழுக்க மேம்பாட்டையும் வளர்ச்சி செய்தல். இச் சங்கங்களின் செயற்பாட்டில் பெற்று வந்த அனுபவத்தையொட்டி, கடந்த 2 பத்தாண்டுகளில், அலுவல் எல்லை, பொறுப்பின் தன்மை, ஆற்றப்படும் சேவைகள், ஊதியம் பெறுத பணியாளர்களுக்குப் பதிலாக ஊதியம் பெறும் பணி யாளர்களை அமர்த்துதல் போன்ற சில முக்கிய விஷயங்களில், இக் கொள்கைகளிலிருந்து ஒரு மெதுவான விலகுதல் இருந்து வந்துள்ளது.

பல ஆண்டுகளுக்கு முன்னரும், 1940ஆம் ஆண்டுகளி லிருந்தும், கிராமக் கடன் வசதிச் சங்கங்கள், கடனளிப்புடன் கூடுதலான நடவடிக்கைகளையும் மேற்கொள்ள வேண்டுமென்றும், வெறுங்கடனளிப்பானது குடியானவர்களின் நிலையை மேம்படுத்து வதற்காக அதிகமாகப் பயன்படாதென்றும், சங்கங்கள் தங்கள்

துணைவிதிகளில் கூடுதலான பலநோக்குக் காரியங்களையும் சேர்த்துக்கொண்டு, பல நோக்குக் கூட்டுறவுச் சங்கங்களாக இயங்க வேண்டுமென்றும் கருதப்பட்டது. அவ் வாண்டுகளுக்குப் பிறகு அமைக்கப்பட்ட சங்கங்களும்கூடப் பலநோக்கு வகையான வையாக இருந்தன. விரைவில் சங்கங்களில் ஊதியம் பெறும் சிப்பந்திகள்கூட அமர்த்தப்பட்டனர். சங்கங்களின் நடவடிக்கை கள் அதிகரித்துக்கொண்டிருந்தமையால், கௌரவ நிருவாகம் சாத்தியப்படாமலிருந்தது.

வரையறுக்கப்பட்ட எல்லை, வரையறுக்கப்படாத பொறுப்பு ஆகிய இதர இரண்டு கொள்கைகளிலிருந்து விலகுதல் 1955-ஆம் ஆண்டு முதல் யோசிக்கப்பட்டது. சங்கங்கள், பலவீனமான தான, சிறிய, தன்னிறைவற்ற அமைப்புகளாக இருந்தன வென் றும், அவை தங்களுக்குமுன் வைக்கப்பட்ட குறிக்கோள்களைத் திடமாக நிறைவேற்றவில்லையென்றும் ஒரு வளர்ந்துவரும் உணர்வு இருந்தது. அவற்றின் வைப்புகள் மிகக் குறைவாக மட்டுமன்றி, அவை விவசாயப் பொருளாதார அமைப்பின்மீது போதுமான ஒரு செயல்விளைவைச் செய்யாமலிருந்தன. பெரிய அளவுச் சங்கங் கள் உத்தேசிக்கப்பட்டன. ஒரு பரிசோதனை நடவடிக்கையாக, அத்தகைய சங்கங்கள் ஒரு சில தொடங்கப்பட்டன. தமிழ் நாட் டில், ஒரு பரிசோதனை நடவடிக்கையாக 1955ஆம் ஆண்டில், ஒரு மாவட்டத்திற்கு 2 வீதத்தில், கிராம வங்கிகள் (Rural Banks) நிறுவப்பட்டன. ஒரு கிராம வங்கி, 10-லிருந்து 15 கிராமங்களைத் தழுவினது; அதன் உறுப்பினர்களின் பொறுப்பு அவர்கள் பங்கு மூலதனத்தில் 5 மடங்குகளுக்கு வரையறுக்கப் பட்டிருந்தது; ஒரு கௌரவச் செயலாளருக்குப் பதில், அது ஊதியம்பெறும் ஒரு செயலாளரைக் கொண்டிருந்தது. ஆயினும், அதன் நடவடிக்கை, விவசாயத்திற்கான மத்தியக் காலக் கடன் களை யளிப்பதற்கு மட்டும் கட்டுப்படுத்தப்பட்டது. பின்னர், அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவினரின் பரிவுரை களின் அடிப்படையின் பேரில், 1956–57ஆம் ஆண்டின்போது, பெரிய அளவுச் சங்கங்கள், விவசாயக் கடன் சங்கத்தின் வழக்கமான கடமைகளுடன் நிறுவப்பட்டன.

**பெரிய அளவுச் சங்கங்கள்:** 1955ஆம் ஆண்டில், ரிசர்வ் வங்கியால் அமைக்கப்பட்ட அனைத்திந்தியக் கிராமக் கடன் விசா ரணையின் கட்டளைக் குழுவினர், பெரிதான அலுவல் எல்லைகளைத் தழுவுகின்ற பெரிய அளவுச் சங்கங்கள் திசையில், தாமதமின்றி, வருங்கால வளர்ச்சிவழியானது இருக்கவேண்டுமென்று பரிவுரை செய்தனர். அவர்கள் கருத்தின்படி, கணக்குகளை வைப்பதற்குச்

சரிவரப் பயிற்சி பெற்ற சிப்பந்திகளை யமர்த்துவதற்கு முடியாத, வைப்புகளை ஈர்க்க இயலாத தன்னிறைவற்ற அமைப்புகளாகச் செய்யும், குறைந்த வருவாய், சிறிய நடவடிக்கைகள் போன்ற பிரதம விவசாயக் கடன் சங்கங்களின் உள்ளார்ந்த பலவீனங் களுக்குப் பரிகாரமாக அத்தகைய சங்கங்கள் அவசியப்படுகின் றன. இந்தப் பரிவுரையானது, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது அமல்படுத்துவதற்காக இந்திய அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. பெரிய அளவுச் சங்கங்கள், (தமிழ் நாட்டில் அவை விவசாய வங்கிகளென்று வழங்கப்படுகின்றன). சிறிய சங்கங்களை இணைப்பதன்மூலம் அமைக்கப்படுவதற்கான செயல் திட்டம் தீவிரமாக அமல்படுத்தப்பட்டது. தமிழ்நாட்டில் அத்தகைய 330 வங்கிகள், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்து முதல் மூன்றாண்டுகளின்போது நிறுவப்பட்டன. தொடக் கத்தில், இப் பெரியஅளவுச் சங்கங்களை நிறுவுவதற்குச் சில எதிர்ப்பு இருந்தது. மக்களுக்கு வழக்கமானதும் அவர்கள் பற்று வைத் திருந்ததாகவுமான உள்ளூர்க் கடன் நிறுவனங்கள் அழிக்கப் பட்டதே இதற்குக் காரணம். படிப்படியாக, எதிர்ப்புப் பிசுபிசுத்து விட்டது. பெரிய அளவுச் சங்கங்கள், ஒப்பிடும் வகையில், மக்களுக்கு மேலும் திறமையாகச் சேவைகளைப் புரிந்த காரணத் தால், அச் சங்கங்கள் போற்றப்பட்டன. தமிழ் நாட்டில் ஒரு பெரிய அளவுச் சங்கம், பொதுவாக, 5-லிருந்து 10 கிராமங்களைத் தழுவின. 5 மைல்கள் தூரத்திலுள்ள அதன் உறுப்பினர்களின் பொறுப்பானது, அவர்களுடைய பங்கு மூலதனத்தின் 10 மடங்கு களுக்கு வரையறுக்கப்பட்டது. ஊதியம்பெறும் செயலாளர் ஒருவர் இருந்தார். அவை பெரும்பாலும் 3 அல்லது 4 சங்கங் களை இணைப்பதன் மூலம் நிறுவப்பட்டன. 1959ஆம் ஆண்டில், சங்கங்களின் அளவைக் குறித்து இந்திய அரசின் கொள்கையில் ஒரு மாற்றம் ஏற்பட்டது. ஏனென்றால், சில மாநிலங்களில் பெரிய அளவுச் சங்கங்கள் மிகப் பெரியதாகவும், அக் காரணத்தால் அவை கூட்டுறவுத் தன்மையை இழந்து, தனி மனிதரைச் சுட்டாத நிறுவனங்களாகவும் இயங்கத் தொடங்கின. பெரிய அளவுச் சங்கம் அமைத்தல் கைவிடப்பட வேண்டும் என்றும், கடன் வசதிச் சங்கங்கள் சிறிய பகுதிகளுக்காக மட்டுந்தான் இருக்கவேண்டு மென்றும் இந்திய அரசு விரும்பியது. 1959ஆம் ஆண்டில், தேசிய அபிவிருத்தி அவை (N.D.C.) பெரிய அளவுச் சங்கங்களுக்கு எதிர்ப்புத் தெரிவித்து, கூட்டுறவு ஒரு மக்கள் இயக்க மாக வளர்ச்சி பெறுவதற்காகக் கூட்டுறவுச் சங்கங்கள், கிராமச் சமுதாயத்தை ஒரு பிரதம பகுதியாகக் கொண்ட அடிப் படையில், அமைக்கப்படுவது அவசியமென்று பரிவுரை செய் தது. ஆகையால், 1959ஆம் ஆண்டில், கிராம மட்டத்தில்,

பொதுவான சங்க வகையானது 'ஒரு கிராமத்தில், ஒரு சங்கம்' என்ற அடிப்படையின் பேரிலும், கடன் வசதியையும் இதரச் சேவைக் கடமைகளையும் மேற்கொண்டும், 1000-க்கும் மேற்படாத ஒரு மக்கள்தொகையைத் தழுவியும் இருக்க வேண்டுமென்றும், பின்தங்கிய பகுதிகளுக்காகவும் மக்கள்தொகை மிகக் குறைவாகவுள்ள பகுதிகளுக்காகவும் மற்றுமுள்ள இதரத் தனிப் பகுதிகளுக்காகவும் இன்னொரு பாணியான சங்கம் ஏற்றுக் கொள்ளப்படலாமென்றும், இந்திய அரசு முடிவு செய்தது. சிறப்புப் பாணியின்கீழ், ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பல நோக்குக் கூட்டுறவுச் சங்கமிருக்கும். ஆனால், அது கடனல்லாத இதரச் சேவைகளுக்குத் தன் பணியைக் கட்டுப்படுத்திக் கொள்ளும். 5 அல்லது 6 அத்தகைய சங்கங்களின் ஒரு தொகுதி, ஒரு 'கடன் ஒன்றியமாக', கூட்டமைப்புச் செய்யப்படும். 'கடன் ஒன்றியம்' சுமார் 5 ஆயிரம் மக்கள்தொகையைக் கொண்ட ஓர் அடக்கமான எல்லையை உள்ளடக்கும். இப் பகுதியின் எந்தப் பாகமும், அதன் தலைமை இடத்திலிருந்து 3 மைல்களுக்கு மேற் பட்ட தூரத்திலிராது. இணைக்கப்பட்ட பலநோக்குச் சங்கங் களின் உறுப்பினர்கள் மட்டுமே, கடன் ஒன்றியத்தின் உறுப்பின ராக விருப்பர். அதன் பணி கடன் வழங்குதலுக்குக் கட்டுப்படுத்தப் படும். கடன் ஒன்றியம், தனக்கு இணைக்கப்பட்ட பலநோக்குச் சங்கங்களின் குறிப்பிட்ட பரிவுரையின் பேரில்தான் கடன்கள் ஒப்பளிக்கும். கடன்களின் உபயோகத்தை மேற்பார்வை செய்வ தற்காகவும், கடன்களை வசூல் செய்வதற்காகவும் இச் சங்கங்கள் பயன்படுத்தப்படும். நாளடைவில், இச் சங்கங்கள் கடன்களையுங் கையாளும் நிலைமைக்கு வந்து, கடன் ஒன்றியத்தைப் பெயர்த்து விடுமளவுக்கு அபிவிருத்தி செய்யப்படவேண்டும். கடன் ஒன்றி யங்கள் ஒரு சில மாநிலங்களில் நிறுவப்பட்டன. தமிழ்நாட்டில் 1959–61ஆம் ஆண்டின்போது, 507 பலநோக்குச் சங்கங்களைத் தங்கள் துணையமைப்புகளாகக்கொண்டு, 150 கடன் ஒன்றியங் கள் நிறுவப்பட்டன. 1960–61ஆம் ஆண்டிற்குப் பிறகு, கடன் ஒன்றியம் அமைத்தலுங்கூடக் கைவிடப்பட்டது. 'ஒரு கிராமத்திற்கு ஒரு சங்கம்' என்ற அடிப்படையில், ஒரு கிராமத் திற்கு மேற்பட்ட எல்லையைத் தழுவும் நடப்புச் சங்கங்களைப் பிளவு செய்வதன் மூலம், ஏராளமான சிறு சங்கங்களுங் கூட அமைக்கப்பட்டன. மறுபடியும், கூட்டுறவுக் கடன் பற்றிய மேதா குழுவினரின் அறிக்கையையொட்டி இக் கொள்கை யானது மாற்றம் செய்யப்பட்டது.

தன்னிறைவான ஒரு அடிப்படையிலும் கூட்டுறவுக் கொள் கைகளைப் பலியிடாமலும் கிராமச் சங்கங்கள் சீரமைக்கப்பட

வேண்டுமென்று மேதா குழுவினர் பரிவுரை செய்தனர். அமைக்கப்படும் சங்கங்களும், சீரமைக்கப்படும் சங்கங்களும் மிகப் பெரியதாகவும், மிகச் சிறியதாகவு மில்லாமல், தன்னிறைவான ஒரு அடிப்படையி லிருக்க வேண்டும். அவ்வாறு இருப்பினும், அவை திறம்பட இயங்கிக் கூடுதலான மிகப் பாரமான பொறுப்புகளை நாளடைவில் அவை மேற்கொள்ளும்போது எழும் நெருக்கடிகளையும், சங்கடங்களையும் சமாளிப்பதற்குப் போதுமான பலமுள்ளவையாக இருக்க வேண்டும். அக் குழுவினர் கருத்தின்படி, ஒரு தன்னிறைவுள்ள (Viable) சங்கம், கீழ்க்காணும் பணிகளைப் புரிவதற்கு ஆற்றலுள்ளதாக இருக்க வேண்டும்.

(i) சிறிய நில உடைமையாளர்களும் குத்தகைப் பயிரிடுபவர்களுமுட்பட விரிவடைந்துவரும் உற்பத்தியாளர்கள் பரப்பிற்குப் போதுமான கடனளித்தல்,

(ii) உர வகைகள், விதைகள், கருவிகள், வீட்டுப் பொருள்கள் போன்ற அத்தியாவசியமான உற்பத்தித் தேவைகளை வழங்குதலும், விளைபொருள்களை விற்பனை செய்வதற்கு உதவி செய்தலும்,

(iii) சேமிப்புகளைத் திரட்டுதல்,

(iv) கடன்கள் சரிவர உபயோகப்படுத்துவதை நிச்சயப்படுத்துவதற்கான மேற்பார்வை.

தன்னிறைவுள்ள ஒரு சங்கம், ஒரு வரையறுக்கப்பட்ட காலத்திற்காகத் தவிர அரசு நிதியுதவியின்மீது சார்ந்திராமல், ஒரு நியாயமான காலவரைக்குள், இந்த முக்கியமான சேவைகளைத் திறம்படவும், ஏராளமான உற்பத்தியாளர்கட்கும் புரியும் என்று எதிர்பார்க்கப்படலாம். இச் சாதனையை அடைவதற்கு, அச் சங்கம், கீழ்க்காணும் ஆற்றல்களைப் பெற்றிருக்க வேண்டும்:

(i) தகுதி படைத்த சிப்பந்திகளை யமர்த்தி, அவர்களின் செலவை முழுமையாக ஏற்றுக்கொள்ள வேண்டும்,

(ii) தன் அலுவலகக் கட்டடத்திற்காக வாடகை செலுத்த வேண்டும்,

(iii) புத்தகங்கள், படிவங்கள், பயணங்கள், கடன்களை வசூலித்தல் முதலியவற்றின்மீதான சாதல்வார்ச் செலவுகளை ஏற்க வேண்டும்,

(iv) காப்பிருப்புகளுக்காக ஏற்பாடு செய்வதற்கும், வராக் கடன்களுக்காகவும், ஐயக் கடன்களுக்காகவும் ஒரு நிதியைப் பராமரிப்பதற்காகவும் பங்கு மூலதனத்தின்மீது ஒரு நியாயமான மறுபயன் செலுத்துவதற்காகவும் போதுமான இலாபத்தை ஈட்ட வேண்டும்.

அக் குழுவினர், கூட்டுறவு அம்சமும், தன்னிறைவுத் தன்மையைப் போன்று சமமுக்கியத்துவம் வாய்ந்ததென்றும், சங்கம் நபர்த் தொடர்பில்லாத ஒரு நிறுவனமாகத் தன்னைப் பெரிதாக்கிக் கொள்ளல் கூடாதென்றும் கருதினர். ஒரு பலமான கூட்டுறவு நிறுவனம், பரஸ்பர அறிவு, பரஸ்பரத் தொடர்பு ஆகியவையின் அடிப்படையின்மீதி லல்லாது பிரதம மட்டத்தில் அமைக்கப்பட முடியாது என்றும் அக் குழுவினர் தீவிரமாக உணர்ந்தனர். தன்னிறைவுத் தன்மைக்காக, கீழ்க்காணும் பிரமாணங்களையும் கூட அவர்கள் யோசனை கூறினர்.

(1) மக்கள்தொகை சுமார் 3,000-க்கு இருக்க வேண்டும் (600 குடும்பங்கள் அல்லது 500 விவசாயக் குடும்பங்கள்),

(2) 2 அல்லது 3 கிராமங்கள் தொகுதியாகச் சேர்க்கப்பட வேண்டுமானால், எந்தக் கிராமமும் தலைமைக் கிராமத்திலிருந்து 3 அல்லது 4 மைல்களுக்கதிகப்பட்ட ஒரு தூரத்திலிருக்கக்கூடாது.

எனினும், சங்கப் பாணியைப் பற்றிய விவரங்களைக் குறித்து ஒருநெகிழ்வு தேவைப்படும் என்பதைக் குழுவினர் ஏற்றுக்கொண்டு, விவரங்கள், உள்ளூர் நிலைமைகளை யொட்டி, குழுவினரால் விவரிக்கப்பட்ட கொள்கையின் பரந்த கட்டுக்கோப்பிற்குள், மாநில அரசுகளால் வகுக்கப்பட வேண்டுமென்று அவற்றை மாநில அரசுகளுக்கே விட்டுவிட்டனர்.

சங்கங்களின் பங்கு மூலதனத்தில் அரசு பங்குகொள்ளுதலையும், தன்னிறைவுச் செயல்திட்டத்தின் கீழ்வரும் சங்கங்கட்குச் சிப்பந்தி மானிய மளிப்பதையும், இறுதிநிலைக் குடியானவர்கட்கும் கீழிறுதிநிலைக் குடியானவர்கட்கும் வழங்கப்பட்ட கடன்களிலிருந்து எழும் நட்டங்களைச் சமாளிப்பதற்காக எல்லாச் சங்கங்களின் வராக் கடன் சிறப்புக் காப்பிருப்புக்கு மொத்தமான உதவித்தொகை யளிப்பதையுங்கூடக் குழுவினர் பரிவுரை செய்தனர்.

இப் பரிவுரைகள் இந்திய அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டன. தன்னிறைவு அடிப்படையில், மேதா குழுவினரால் விவரிக்கப் பட்ட பரந்த கட்டுக்கோப்பிற்குள் தக்க தரங்களை மேற்கொண்டு சங்கங்களைச் சீரமைப்பதற்கான ஒரு செயல்திட்டத்தைத் தயா ரிக்க வேண்டுமென்று மாநில அரசுகளுக்கு இந்திய அரசு யோசனை கூறியது. தமிழ் நாட்டில், 2,000-லிருந்து 3,000 ஏக்கர்களைத் தழுவிய ஓர் அலுவல் எல்லையையும், ரூ. 2 இலட்சமளவிற்கு ஒரு வருடாந்தர நிகழக்கூடிய கடன் நடவடிக்கையையும், தன் னிறைவுத் தன்மைக்கான பிரமாணங்களாக மேற்கொள்ளப் பட்டு, 1965–66ஆம் ஆண்டில் மத்திய வங்கிகளின் ஆலோசனை யுடன் ஒரு செயல்திட்டம் தயாரிக்கப்பட்டது. 480 விவசாய வங்கிகளும், கடன் ஒன்றியங்களும், 1,452 விவசாயக் கடன் சங்கங்களும், அவைகளின் தன்னிறைவுத் தன்மை அல்லது தன் னிறைவுத் தன்மை வாய்ப்புக் காரணமாக, அச் செயல்திட்டத்தி லிருந்து தவிர்க்கப்பட்டன. கடன் ஒன்றியங்களின் துணையமைப்பு களாக விருந்த எல்லாப் (507) பலநோக்குச் சங்கங்களும் கலைக்கப் பட்டு, கடன் ஒன்றியங்கள் கடனளிப்பதுடன் இதரச் சேவைகளை யும் புரிவதற்கான விதிகளைக் கொண்ட பலநோக்குச் சங்கங் களாக மாற்றப்பட்டன. 22 கிராம வங்கிகள், குறுகிய காலக் கடன் வழங்குதலுக்காகவுங்கூட விதிகளைக் கொண்ட பலநோக்குச் சங்கங்களாகச் சீரமைக்கப்பட வேண்டுமென்றிருந்தன. தன் னிறைவில்லாத எஞ்சியுள்ள சங்கங்கள் தன்னிறைவுள்ள சங்கங் களாகவும் அல்லது தன்னிறைவு வாய்ப்புள்ள சங்கங்களாகவும் திருத்தியமைக்கப்பட்டு வருகின்றன. இச் செயல்திட்டம் முடி வடைகிறபோது, மாநிலத்தில், 30–6–75ஆம் நாளன்றிருந்த 11,565 சங்கங்களுக்கெதிராகச் சுமார் 4,750 சங்கங்கள் மட்டும் இருக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. தமிழ்நாட்டில் கிராமங் களின் எண்ணிக்கை 14,124 ஆக இருப்பதால், சீரமைக்கப்பட்ட ஒரு சங்கம் 2-லிருந்து 3 கிராமங்களைத் தழுவும்.

தமிழ் நாட்டு அரசால் அமைக்கப்பட்ட 'சந்தானம் குழு வினர்' (1969), விவசாயக் கடன் சங்கங்களின் தன்னிறைவுத் தன்மையைக் குறித்த மேதா குழுவினரின் பரிவுரைகளைப் பொது வாக ஆதரித்து, எல்லா விவசாயக் கடன் சங்கங்களும் முடிந்த வரை ஒரு குறுகிய காலத்திற்குள் தன்னிறைவுள்ளவையாகச் செய்யப்படுவது அவசியமானது என்று கருதினர். அக் குழுவினர் கருத்தின்படி, ஒரு விவசாயக் கடன் சங்கம், தன்னிறைவுள்ளதாக இருப்பதற்குச் சுமார் 3 மைல்கள் தூரத்தி லுள்ள ஓர் எல்லையையும் சுமார் 3,000 மக்கள்தொகையையும், ஓராண்டில் ரூ. 2 இலட்சத்திற்குக் குறையாத கடன் நடவடிக்கை

களை அனுமதிக்கும் சாகுபடி நிலங்களையும் தழுவ வேண்டும். மத்திய வங்கிகளுடன் ஆலோசித்துப் பலவீனமான சங்கங்களை இணைப்புச் செய்வதற்குப் பதிவாளருக்கு அதிகாரங்களை யளித்துச் சென்னைச் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் (1961) பிரிவு 13 திருத்தப்பட வேண்டுமென்றுங்கூட அவர்கள் யோசனை கூறினர். வருங்காலத்தில், எல்லா விவசாயக் கடன் சங்கங்களும் வரை யறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின் பேரில்தான் பதிவு செய்யப்பட வேண்டும். தன்னிறைவுள்ளதாக விருக்கும், வரை யறுக்கப்பட்ட பொறுப்பை மேற்கொள்ள விரும்பும், நடப்புச் சங்கம் அவ்வாறு செய்து கொள்வதற்கு அனுமதிக்கப்பட வேண் டுமென்றும் அவர்கள் யோசனை கூறினர். ஆகையால், பிரதம விவசாயக் கடன் சங்கங்கள் பாணியின் முதன்மையான அம்சங் கள் கீழ்க்காணும் வகையி லிருக்க வேண்டும்:

(i) ஒரு தன்னிறைவுள்ள அல்லது தன்னிறைவு வாய்ப்புள்ள அமைப்பு,

(ii) கடனளிப்பு மட்டுமன்றி, விவசாயத்திற்குத் தொடர் புள்ள இதரச் சேவைகளையும் மேற்கொள்ளும் ஒரு பலநோக்கு நிறுவனம், அதாவது ஒரு விவசாயச் சேவைச் சங்கமாக இயங்குதல்,

(iii) பரஸ்பர மேற்பார்வையை நிச்சயப்படுத்துவதற்கும், உறுப்பினர்களிடையே நேர்முகத் தொடர்பைப் பராமரிப்பதற் கும், சாத்தியப்படும் வகையில் விவகார எல்லை,

(iv) உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப்படுதல்,

(v) ஊதியம்பெறும் சிப்பந்திகள் சங்கங்களின் செயலாளர் களாகவும், மேலாளர்களாகவும் அமர்த்தப்படுதல்.

## 2. பிரதம விவசாயக் கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கத்தின் செயற்பாட்டைப் பற்றிய சில அடிப்படைக் கொள்கைகள்

உருவாக்கப்பட்ட கொள்கைகளுள் சில, விவாதத்திற்குரிய வையாக இருந்துள்ளன. அவைகளைப்பற்றி வேறுபாடுள்ள கருத்துக ளிருந்து வந்துள்ளன. அவையாவன :

(i) சங்க நடவடிக்கைகளின் பரப்பு, ஒருநோக்குச் சங்கமா? அல்லது பலநோக்குச் சங்கமா?

(ii) சங்கத்தின் அளவு, சிறிய அலுவல் எல்லையா? பெரிய அலுவல் எல்லையா? ஒரு கிராமத்திற்கு ஒரு சங்கமா? ஒரு கிராமத் தொகுதிக்காக ஒரு சங்கமா?

(iii) சங்க உறுப்பினர்களின் பொறுப்பு வரையறுக்கப் பட்டதா? வரையறுக்கப்படாததா?

இக் கொள்கைகள் ஒவ்வொன்றைப் பற்றியும் சற்று விவர மாக ஆராய்வோம்.

**(i) ஒருநோக்குச் சங்கத்திற்கெதிராகப் பலநோக்குச் சங்கம்:** ஒரு கிராமக் கடன் வசதிச் சங்கத்தின் துணை விதிகள், கடனல்லாத நடவடிக்கைகளுக்காகச் சரத்துக் கொண்டிருந்தும், அத்தகைய நடவடிக்கைகள் முந்தைய ஆண்டுகளில், அச் சங்கங்களால் மேற் கொள்ளப்படவில்லை. கடந்த சில பத்தாண்டுகளாக, விவசாயக் கடனளிப்பவையாகத் தங்கள் முதன்மையான பணியைச் சரி வர ஆற்றுவதற்காகக் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் ஒருநோக்குக் கொண்டதாக விருக்க வேண்டுமா? பலநோக்குக் கொண் டதாக விருக்கவேண்டுமா? என்பதுபற்றி, இரண்டு வேறுபட்ட கருத்துகள் மாறிமாறியும், சகநிலையிலும் இருந்துவந்திருக்கின் றன. விவசாயத்தைப் பற்றிய இராயல் ஆணைக் குழு (1928), 'கொள்கை ரீதியாக, ஒருநோக்குச் சங்கமானது சிறந்த வளர்ச்சி முறையாகத் தோன்றுகிறது. 'ஒரு சமயத்தில் ஒரு காரியம்' என்பதே கொள்கையாக விருக்கவேண்டும்' என முடிவு செய்தது. அத்தகைய ஒரு முடிவுக்குக் காரணங்கள், அக் குழுவின் கருத்தின் படி பின்வருமாறு இருந்தன:

(i) ஒரு கடன் வசதிச் சங்கம் நிர்வகிப்பதற்கு எளிதானது. வாணிக நிர்வாகம் உள்ளடங்கியிருக்கும் இடத்தில், அதற்கான ஆற்றலைச் சங்கங்களின் உறுப்பினர்களிடையே யிருந்து காண்பது எளிதன்று,

(ii) வாணிகத்தை மேற்கொள்வதற்கு வரையறுக்கப்பட்ட பொறுப்பு மேலான தகுதியுடையதாக விருக்கின்றதால், கடன் சங்கங்களின் வரையறுக்கப்படாத பொறுப்பு ஒரு தடையாக விருக்கிறது,

(iii) கொள்கைக் காரணங்களுக்காகப் பலநோக்குச் சங்கம் பரிவுரை செய்யப்படுகிறதில்லை; மற்றும், சங்கங்களின் துணை விதிகள் இரண்டாந்தரப் பணிகள் சிலவற்றை மேற்கொள்வதற் காகச் சரத்துகளைக் கொண்டிருந்தாலும், ஒருநோக்குக் கருத் தானது பொதுவான ஏற்பைப் பெற்றுள்ளது,

(iv) சங்கங்கள் பலநோக்கு நடவடிக்கைகளை மேற்கொண்டாலும்கூட, தனிப்பட்ட கணக்குகள் வைக்கப்பட வேண்டியுள்ளன.

இதற்கு மாறாக ரிசர்வ் வங்கி, தான் 1937ஆம் ஆண்டில் வெளியிட்ட முதன்முதலான துண்டு அறிக்கையில், பலநோக்குக் கருத்தை ஆதரித்தது. 'ஒரு கிராமச் சங்கம் மலிவான கடன் வழங்குதலுக்கான ஓர் அமைப்பாக மட்டும் பணியாற்றினால், குடியானவர்களின் நிலைமையை மேம்படுத்துவதில் அது, எந்தப் பெரிய அளவிற்கும் வெற்றி பெறாது; ஏனென்றால், எந்த வகையிலும், கடன் கிராக்கி அவர்களின் நிலைமைக்கு ஒரே ஒரு காரணமாக இருக்கிறதில்லை'. பலநோக்குக் கருத்துவாதிகளி லொருவர், 'ஒருநோக்குச் சங்கம் தன் உறுப்பினர்களின் விசுவாசத்தையும், முழு ஒத்துழைப்பையும் பெறுவது கடினமாக உள்ளது; அவர்கள் கடன் பெறுகிற வரையில் சங்கத்துடன் இருந்துவருகின்றனர். இதற்கு மாறாக, தொடர்பு தொடர்ச்சியாகவும், குறைந்த வட்டி விதிப்பின் மூலம் ஏற்படும் ஒரு சில ரூபாய்களின் வெறும் சேமிப்பைக்காட்டிலும் அதன் நன்மைகள் மேலான திடமானவையாகவுமிருந்தால், பலநோக்குச் சங்கங்கள், உறுப்பினர்களுடைய மிக அதிகமான விசுவாசத்தை எப்பொழுதுமே பெறும். சாதாரணச் சாகுபடி செய்பவர் அநேகக் குறைபாடுகட்குப் பழக்கப்பட்டுள்ளதால், இங்குமங்கும் கிடைக்கும் ஒரு சிறிய இலாபமானது, அதிகமாக அவர் மனத்தைக் கவர்வதில்லை. கூட்டுறவு நிறுவனத்துடன் அவருடைய சேர்க்கையிலிருந்து பலமான இலாபத்தை அவர் எதிர்பார்க்கிறார். ஆகையால், 'மேலான விவசாயத் தொழிலும், மேலான வாணிகமும், மேலான வாழ்க்கையும்' என்ற சர் ஹொரேஸ் ப்ளங்கெட் (Sir Horace Plunkett) அவர்களின் புகழ்மிகு சூத்திரத்தின்படி, நாம் கூட்டுறவுச் சங்கத்தின் நோக்க எல்லையை விரிவுசெய்ய வேண்டும்' என்று கூறியுள்ளார். கிராமக் கடன் சங்கங்கள், காலாந்தரத்தில், விவசாயிகளின் அனைத்தும் தழுவிய ஒரு பொருளாதார மேம்பாட்டை நோக்கமாகக் கொண்டும், சாத்தியப்படுபவையும் உபயோகமானவையும் இலாபகரமானவையுமான பல பணிகள் புரிவதைத் தன் நோக்கப் பரப்பில் சேர்த்துக்கொண்டும், ஒரு பலநோக்குச் சங்கமாகச் செயற்படும் வகையில், சீரமைக்கப்பட வேண்டுமென்று ரிசர்வ் வங்கி பரிவுரை வழங்கியது.

சென்னையில் கூட்டுறவு பற்றிய குழு (1940), 'சங்கங்களின் மாதிரித் துணைவிதிகளில் உத்தேசிக்கப்பட்ட எல்லாக் கடமைகளையும் ஆற்றுவதற்கு அவைகளைச் செய்ய வைப்பதன் மூலம்'

கிராமக் கடன் வசதிச் சங்கங்களின் நடவடிக்கைகள் விரிவுபடுத்தப் பட வேண்டுமென்று கருத்துக் கொண்டது. 'இக் கடமைகளில், உர வகைகள், விதைகள், மேம்படுத்தப்பட்ட கருவிகள் மற்றும், விவசாயத்திற்காகத் தேவைப்படும் இதர அவசியமான தளவா டங்கள் ஆகியவற்றை வழங்குதலும், தேவைப் பட்டியல் முறை யில் கூட்டுக் கொள்முதல் செய்தலும், விளைபொருள்களை விற்பனை செய்தலும் அடங்கும்; சங்கங்கள் கூட்டு அடிப்படையில் மின்சா ரத்தையும், இதர இயந்திர மின்சக்தியையும் வழங்குதலையுங்கூட மேற்கொள்ளலாம். கூட்டுறவு அடிப்படையில் பண்ணைத் தொழி லையும், நிருவாகக் குழுவால் தீர்மானிக்கப்படும் அத்தகைய இதரத் தொடர்பான பணிகளையுங்கூட அவை மேற்கொள்ளலாம். கூட்டுறவுச் சங்கங்களின் இலட்சியத்தை அடைவதற்கும், மேலான விவசாயத் தொழில், மேலான வாணிகம், மேலான வாழ்க்கை யென்ற முச்செயல் திட்டத்தை நிறைவேற்றுவதில் கிராமத்திற்கு உதவுவதற்கும், இந் நோக்கங்கள் உருவாக்கப்பட்டன. பல நோக்குச் சங்கங்கள் புதியனவல்ல. அவற்றின் கரு, நடப்பிலுள்ள நம் துணைவிதிகளிலேயே அமைந்திருக்கிறது. தற்போதுள்ள துணைவிதிகளில் விதிக்கப்பட்டிருக்கும் வரம்புகள் வரையிலுங்கூட, முதலில் சங்கங்கள் தங்கள் நடவடிக்கைகளை விரிவு செய்தால், முற்றும் மலர்ந்த பலநோக்குச் சங்கங்கள், மலர்ச்சியில் அடுத்த விருத்தியாக விருக்குமென்று நாங்கள் நம்புகிறோம்' என்றும் அக் குழுவினர் கூறினர்.

அனைத்திந்தியக் கூட்டுறவுத் திட்டக் குழு (1946), கிராமக் கூட்டுறவுச் சங்கம், தன் உறுப்பினர்களின் பொதுப் பொருளா தார மேம்பாட்டிற்கான ஒரு நிலையமாகப் பணி செய்து, குறிப் பாகப் பின்வரும் பணிகளைப் புரிய வேண்டுமென்று பரிந்துரை வழங்கியது : (1) பயிர் உற்பத்திக்கு நிதி யுதவியளித்தல், (2) விளைபொருள்களின் விற்பனைக்காக, மிக அருகிலுள்ள கூட்டுறவு விற்பனை வசதி நிறுவனத்திற்கு, ஒரு பிரதிநிதியாகச் செயற் படுதல், (3) விதைகள், கால்நடைத் தீவனம், உர வகைகள், விவசாயக் கருவிகள் போன்ற எளிய தேவைகளையும், மற்றும் துணி, மண்ணெண்ணெய் போன்ற நுகர்பொருள்களையுங்கூட, தேவைப்பட்டியல் முறையில் அல்லது நிலைப்படுத்தப்பட்ட தேவை களடிப்படையில் விவசாயிகட்கு வழங்குதல், (4) மிக அருகி லுள்ள பால் பண்ணைக்காகப் பால் சேகரிக்கும் ஒரு நிலையமாக வும் செயற்படுதல், (5) உறுப்பினர்களின் கூட்டு உபயோகத்திற் கான விவசாய இயந்திரங்களின் பராமரிப்புக்கான ஒரு நிலைய மாகவும் செயற்படுதல், (6) தன் உறுப்பினர்களுக்காகத் துணைத் தொழில்களை (Subsidiary Occupations) ஊக்குவித்தல்.

1947ஆம் ஆண்டில், சென்னையில் நடைபெற்ற சங்கப் பதிவாளர்களின் 15ஆவது மாநாடும், அதேயாண்டில் நடைபெற்ற சென்னை மாகாணக் கூட்டுறவு மாநாடும், இப் பரிவுரைகளை ஆதரித்தன. தமிழ்நாட்டில், நடப்பிலுள்ள கடன் வசதிச் சங்கங்கள், அங்ஙனமே, தங்கள் துணைவிதிகளில் கூடுதலான பலநோக்கங்கள் சேர்க்கப்பட்டுப் பலநோக்குக் கூட்டுறவுச் சங்கங்களாக மாற்றப்பட்டன. அதன் பின்னர் அமைக்கப்பட்ட சங்கங்களுங் கூட, பலநோக்கு வகையானவையாக இருந்தன. இவ்வாறாக, பலநோக்குக் கூட்டுறவுச் சங்கமானது, சங்க அளவிலும் அல்லது பொறுப்பு வகையிலும் எந்த மாறுதலு மில்லாமலே கிராம மக்களுக்குக் கடனளிப்பதல்லாத இதரப் பணிகளையும் புரிவதன் மீது வற்புறுத்தலை விதிக்க முயற்சித்தது.

கூட்டுறவு பற்றிய சென்னைக் குழுவினர் (1956) இந்தப் பிரச்சினையைச் சற்று விவரமாக ஆலோசித்தனர். அச் சமயம் உத்தேசிக்கப்பட்டு அமைப்பு நடவடிக்கையிலிருந்த பெரிய அளவுச் சங்கங்கள், பலநோக்குப் பணிகளை மேற்கொள்ள வேண்டுமென்று அவர்கள் கருத்துக் கொண்டனர். அக் குழுவினர் இப் பிரச்சினையின் குறைநிறைகளைப் பரிசீலனை செய்தனர். பலநோக்குச் சங்கங்களின் சார்பில் பின்வருமாறு கூறப்பட்டது: (1) 'மேலான விவசாயத் தொழில், மேலான வாணிகம், மேலான வாழ்க்கை' யாகிய முப்பணிகளை நிறைவேற்றுவதற்கு முயல்வதன் மூலம், விவசாயிகளின் அனைத்தையும் தழுவிய மேம்பாட்டை ஏற்படுத்துவதற்கு அவை மிகச் சிறப்பான பொருத்தமுடையவையாக இருக்கின்றன, (2) தங்கள் தேவைகளுக்காக, ஒற்றையான ஒரு நிறுவனத்துடன் நடவடிக்கையை வைத்துக் கொள்வது, கிராம மக்களுக்கு அதிக வசதியாக வுள்ளது; அதனால், சங்கத்துடன் மிக நெருங்கிய உறவை அமைத்துக் கொள்ள முடிகிறது, (3) தகுதி படைத்த பணியாளர்—தொகுதிக்காகவும், சிப்பந்திச் செலவுகளின் சிக்கனத்திற்காகவுமான தேவையானது, பலநோக்குச் சங்கத்தை, ஒரு தனிப்பட்ட பணியைப் புரியும் பல்வேறு சங்கங்களைக் காட்டிலும் ஒரு மேலான கருவியாகச் செய்கிறது, (4) இறுதியாக, உர வகைகள், விவசாயக் கருவிகள், வீட்டுத் தேவைகள் போன்ற பொருள் வடிவத்தில் கடன்களைப் பட்டுவாடாச் செய்வதன்மூலம் கடன்கள் துர்ப்பிரயோகப் படுத்தல் குறைக்கப்பட முடியும், (5) உலகத்தின் பல விவசாய நாடுகளின் கூட்டுறவு இயக்கத்தின் போக்குகளும், ஜப்பான் நாட்டு உதாரணமும், பலநோக்குச் சங்கங்களின் வளர்ச்சியை ஊக்குவிக்கிறது.

அதற்கு மாருக, பின்வரும் காரணங்களுக்காக, நம் கிராமங்களுக்குப் பலநோக்குச் சங்கங்கள் பொருந்தியவையாகக் கருதப்படுகிறதில்லை: (i) ஒருநோக்குச் சங்கம் ஒன்றைக்கூட நிருவகிப்பதற்குப், போதுமான அளவிற்குத் தகுதி படைத்த நபர்களில்லாமலிருக்கும்போது, அதைக் காட்டிலும் பலநோக்குச் சங்கங்களை நிருவகிப்பதற்குச் சிரமமாக இருக்கும்; அன்றியும், எல்லாப் பணிகளும் தோல்வியடைதல் கூட நேரலாம், (ii) தற்போது, கடன் வசதிச் சங்கம், வரையறுக்கப்படாத பொறுப்பின்மீது, ஒரு வரையறுக்கப்பட்ட அலுவல் எல்லையைக் கொண்டுள்ளது. ஆகையால், அதன் கொள்கையை மாற்றி, வங்கித் தொழிலை வர்த்தகம் அல்லது விற்பனைப் பணிகளுடன் கூட்டுச் சேர்ப்பது அபாயமற்றதாக இராது, (iii) ஒரு சங்கம் பல பணிகளை மேற்கொண்டு, எதிலும் வெற்றிபெருமலிருப்பதைக் காட்டிலும், ஒரு பணியைத் திறமையாகப் புரிதல் மேலானதாகக் கருதப்படுகிறது.

இவ் வாதங்கள், தற்போதுள்ள சிறிய அளவுக் கிராமச் சங்கங்களைக் குறித்து மிக்க வலிமை பெற்றிருந்தாலும், அவை, உத்தேசிக்கப்பட்ட புதிய பெரிய அளவுச் சங்கத்தின் சந்தர்ப்பத்தில், செல்லுபடியாகக் கூடியவையல்ல என்று அக் குழுவினர் கருதினர். அக் குழுவினரின் கருத்தின்படி, பெரிய அளவுச் சங்கம், கடனளிப்பு நடவடிக்கையுடன் இதர நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுவதற்குச் சிறப்புப் பொருத்தமுடையவையாக இருக்கும். அத்தகைய இதர நடவடிக்கைகளாவன: உறுப்பினர்களின் விவசாயத் தேவைகளையும் வீட்டுத் தேவைகளையும் கூட்டுக் கொள்முதல் செய்து விநியோகம் செய்தல், அவர்களின் பயிர்களை ஒரு பிரதிநிதித்துவ அடிப்படையில் விற்பனை செய்தல், செயல் விளக்கப் பணிகளை நடத்துதல் முதலியவை.

இந்திய அரசின் கூட்டுறவுக் கொள்கை பற்றி 11-5-1959 நாளிட்ட தன் கடிதத்தில், கீழ்க்காணும் முறையில் பிரதமக் கூட்டுறவுச் சங்கத்தின் பரவலான பணியைச் சுட்டிக் காட்டியது. 'குறுகிய கால, மத்தியக் காலக் கடனளிப்பும், விவசாயத் தேவைகளையும், இதர உற்பத்தித் தேவைகளையும் வழங்குதலும், கிராமக் கூட்டுறவுச் சங்கங்களின் முதன்மையான பணிகளாக விருக்கும். இப் பணிகளன்றியும், கூட்டுறவுச் சங்கங்கள், கிராமத்திற்காக ஒரு விவசாய உற்பத்தித் திட்டத்தை வகுப்பதற்கும், அமல் படுத்துவதற்கும் உதவி செய்து, உறுப்பினர்கள் மேற்கொள்ள விரும்பும் அறிவு புகட்டக் கூடிய பணியையும், ஆலோசனைப் பணியையும், வாழ்க்கை நலப் பணியையும் மேற்கொள்ளும்.'

கூட்டுறவுக் கடன் பற்றிய அனைத்திந்தியக் குழுவினர் (1960), மேற்குறிக்கப்பட்ட கருத்துகளை ஆதரித்து, ஒரு பிரதம கடன் சங்கம் சில சேவைகளைச் செய்து, அவைகளுக்குப் பொருந்திய வகையில், சில கடமைகளை நிறைவேற்ற வேண்டுமென்று கருதினர். இவைகளுள் அதிமுக்கியமானவை கீழே குறிக்கப்பட்டவையாகும்:

(அ) உற்பத்தி முன்னேற்றத்துடன் தன்னை இணக்கம் செய்து கொள்ளுதல்.

(ஆ) போதுமான அளவிற்குக் கடனளித்தல், அதாவது எல்லா உற்பத்தியாளர்களுக்கும், சிறப்பாக, விவசாய உற்பத்தியாளர்களுக்குப் போதுமான தொகைகளைக் கடனளித்து, இந் நடவடிக்கையில், சிறிய உற்பத்தியாளர்களுக்கு அதிகரித்துவரும் வகையில் உதவி செய்தல்; இவர்களுடைய செல்மானத் தேவைகளுக்கும், விவசாயத் தொழிலாளிகளின் செல்மானத் தேவைகளுக்குங்கூட ஒரு வரம்புக்குட்பட்ட அளவிற்கு உதவி செய்தல்; ஆனால், கடன் வாங்குபவர், அவர் குடியானவராகவும், கைவினைஞராகவும் அல்லது தொழிலாளியாகவுமிருந்தாலும், கடனைத் திருப்பிச் செலுத்தக் கூடியவராகவும், திருப்பிச் செலுத்துபவராகவும் இருப்பார் என்ற நிபந்தனையும், திருப்பிச் செலுத்துதலை நிச்சயப்படுத்துவதற்கான போதுமான வசதிகளிருக்கின்றன என்ற நிபந்தனையு மிருக்கவேண்டும்.

(இ) சங்கம் மேற்கண்ட காரியங்களுக்காகப் போதுமான அளவில் கடன் வாங்குதல், அதாவது, மத்திய நிதி நிறுவனங்களிலிருந்து போதுமான கடன்களைப் பெறுவதற்காகத் தன்னை நிதி வகையிலும், இதர வகையிலும் சித்தப்படுத்திக் கொள்ள வேண்டும்.

(ஈ) பங்கு மூலதனமாக மட்டுமன்றி, தவணை வைப்புகள் முதலியவையாகவும் கூட, சாத்தியப்படும் உயர்ந்த அளவுக்கு உள்ளூர்ச் சேமிப்புகளை ஈர்த்தல்.

(உ) கடன்கள், சிறப்பாக மத்தியக் காலக் கடன்கள் உபயோகத்தை மேற்பார்வை செய்தல்.

(ஊ) கடன்களைத் திரும்பப் பெறுதலும், கடன்கள் காலந் தவறுமல் திருப்பிச் செலுத்தப்படுகின்றதைக் கவனித்தலும்.

(எ) உர வகைகள், விதைகள், விவசாயக் கருவிகள் முதலியவைகளைத் தன் சொந்தச் சார்பிலோ பிரதிநிதியாகவோ விநியோகித்தல்.

(ஏ) மண்ணெண்ணெய், சர்க்கரை முதலியவை போன்ற சாதாரணமாகத் தேவைப்படும் சில நுகர்பொருள்களை வழங்குதல்.

(ஐ) அவசியப்படும்போது, நுகர்வோர் சங்கம், விற்பனை வசதிச் சங்கம் அல்லது அரசு ஆகியவைகளின் சார்பாக விளை பொருள்களைச் சேகரித்தல் அல்லது கொள்முதல் செய்தல்.

(ஒ) விளைபொருள்களைச் சேமித்து வைத்தல்.

(ஓ) பொதுவாக, கிராமத்திற்கான வாழ்க்கை நலம், பொருளாதாரம் மற்றும், இதரச் செயல்திட்டங்களோடு தன்னை இணக்கம் செய்து கொள்ளுதல்.

தன்னிறைவுள்ள கடன் வசதிச் சங்கங்கள், மேற்கொண்ட பணிகள் புரிதலைத் தங்கள் குறிக்கோளாகக் கொண்டு, ஒரு பல நோக்குக் கூட்டுறவுச் சங்கமாக அல்லது ஒரு விவசாயச் சேவைச் சங்கமாகச் செயற்பட வேண்டுமென்று அக் குழுவினர் கருத்துக் கொண்டனர்.

தமிழ் நாட்டில் சந்தானம் குழுவினர் (1969), விவசாயக் கடன் வசதிச் சங்கங்கள் கூடுதலான சில நடவடிக்கைகளை மேற் கொள்ள வேண்டுமென்று யோசனை கூறினர். அரசினர் சார்பில் இரசாயன உரங்களை விநியோகிப்பதுடன், அவை இரசாயன உரங்களையும் (நேரான உரம் அல்லது கலவை உரம்) இதரத் தேவைகளையும் தங்கள் சொந்தக் கணக்கில் விநியோகிப்பதற் காகக் கொள்முதல் செய்ய வேண்டுமென்றும் அவர்கள் யோசனை கூறினர். பூச்சிகொல்லிகளைக் கூட்டாகத் தெளித்தற் பணியை யும் சங்கங்கள் மேற்கொள்ளலாம் என்றுங்கூட அவர்கள் யோசனை கூறினர். தன்னிறைவுள்ள சங்கங்கள், தங்கள் உறுப்பினர்களின் சுட்டுறுதிக்காக, ஆயுள் காப்பீட்டுக் கழகத்திலிருந்து பிரதிநிதித்து வத்தையும்கூட எடுக்கலாமென்று அவர்கள் கருதினர். இது உறுப்பினர்களுக்குப் பலனளிப்பது மட்டுமன்றித் தேசிய நலங் களுக்குக்கூட உதவும்.

சுருங்கக்கூறின், கிராமப் பொருளாதார அமைப்பை ஒட்டு மொத்தமாகச் சீர்படுத்தும் தற்போதைய சமயத்தில், பலநோக் குச் சங்கங்கள் அதிகமாக ஆதரிக்கப்படவேண்டும். எனினும், அத்தகைய சங்கங்கள், தன்னிறைவுள்ள அமைப்புகளாக, அதா வது தன்னிறைவு அடிப்படையி லிருக்க வேண்டியுள்ளது. இக் காரியத்திற்காகச் சங்கங்கள் போதுமான அளவுக்குப் பெரிதாக இருக்கவேண்டும். அப்போதுதான், அவை தங்கள் உறுப்பினர்

களுக்குப் பயனுறுதியான சேவையைப் புரிவதற்காக அவசியப் படும் தேவைகளைத் தங்கட்கு வழங்கிக்கொள்ள முடியும். ஆகை யால், பிரதம விவசாயக் கடன் சங்கத்தின் மற்றொரு முக்கிய அம்சமாகச் சங்கத்தின் அளவு உள்ளது.

**(ii) பெரிய அளவுச் சங்கங்களுக்கெதிரே சிறிய அளவுச் சங்கங்கள்:** கிராமக் கூட்டுறவுச் சங்கத்தின் அளவு நாற்பதாண் டிற்கு மேலாக விவாதத்திற்குரிய ஒரு பொருளாக இருந்துள்ளது. சர் ஃபெரிட்ரிக் நிக்கல்சன் அவர்களின் பரிவுரையின் பேரில், ரெய்ஃபெய்சன் மாதிரியின் அடிப்படையின்மீது சிறிய அளவுச் சங்கங்கள் ஒரு கிராமமும் அதன் குக்கிராமங்களும் சேர்ந்த எல்லையில் அமைக்கப்பட்டன. இவ் வைதீகக் கருத்துக்கோப்பின் படி, 'ஒரு கிராமத்திற்கு ஒரு சங்கம்' என்ற முறையானது, பல் வேறு அனுகூலங்களைப் பெற்றிருக்கும்; அதாவது (i) ஊதியம் பெறுத நிருவாகத்தின்கீழ், ஓர் அடக்கமான கிராமச் சமுதாயத் தில் சங்கம் இயங்கும், (ii) பரஸ்பர அறிவும் மேற்பார்வையும் சங்கத்தின் திறமையான செயற்பாட்டை நிச்சயப்படுத்தும், (iii) அலுவல் எல்லை அடக்கமாகவும், உறுப்பினர்கள் ஒருவருக் கொருவரைப் பற்றிய அறிவைப் பெற்றிருப்பதாலும், வரை யறுக்கப்படாத பொறுப்பு உறுப்பினர்களால் மேற்கொள்ளப் படும், (iv) வரையறுக்கப்படாத பொறுப்புக் கொள்கை, உறுப்பினர்களிடையே ஒரு கூட்டுப் பொறுப்புணர்ச்சி வளர்ச்சிக்கு உதவி, வைப்புத்தொகையாளர்களின் நம்பிக்கையைத் தூண்டி, வெளிக்கடன் நிதி திரட்டுவதை எளிதாகச் செய்கிறது. 'ஒரு கிராமத்திற்கு ஒரு சங்கம்' என்ற கருத்துக்கோப்பு, இருபதாண்டு கட்கு மேலாகக் கடைபிடிக்கப்பட்டு வந்தது. எனினும், 1930ஆம் ஆண்டுகளில் அனைத்துலகப் பொருளாதார மந்தம், இந்த முறைக் குக் கடுமையான ஓர் அதிர்ச்சியைத் தந்தது. இந்த முறை, திறமையானதாகவிருந்ததா என்பது பற்றியும், கடனளிப்புப் பணியையும் மற்றும் இதரத் துணைப் பணிகளையும் காலந்தவறுமலும் திறமையாகவும் புரிவதற்கு ஏற்றதாக இருந்ததா என்பது பற்றி யும் ஐயப்பாடுகள் எழுந்தன. ஏறக்குறைய ஒவ்வொரு மாநிலத் திலும் விசாரணைக் குழுக்கள், கிராமக் கடன் முறைச் சீரமைப்புப் பிரச்சினையைப் பரிசீலித்து, ரெய்ஃபெய்சன் கொள்கையை அடிப் படையாகக் கொண்ட கிராமக் கடன் முறை, தன் பணிகளைத் திறமையாக நிறைவேற்றுவதற்குச் சக்தியற்றிருந்தது மட்டுமன்றி, கிராமப் பொருளாதார அமைப்பைப் பலப்படுத்துவதற்கும் ஆற்ற லற்றிருந்தது. அது ஒரு பலவீனமான பயனுறுதியற்ற [illegible] க் க[illegible] னமைப்பாக இருந்துவந்து, வட்டிக் கடனளிப்பவர்கள் [illegible] ந்த கர் [illegible] கள் ஆகியவர்களின் பலமான போட்டியைச் சமாளிப்ப [illegible] தச்

சக்தியற்றிருந்தது. சென்னையில் கூட்டுறவு பற்றிய 'விஜய ராகவாச்சாரி குழு' (1940) இப் பிரச்சினையைப் பரிசீலித்தது. 'சிறிய அளவுச் சங்கங்கள் சில ஒரே சங்கமாகச் சேர்க்கப்பட்டுத் தொகுதிப்படுத்தப்படுவதன்மூலம், பரவலான ஓர் அடிப்படையில் அவை திருத்தியமைக்கப்படவேண்டும். திட்டவட்டமான விதிகளை நிருணயித்து அத்தகைய திருத்தியமைக்கப்பட்ட சங்கங்களுக்கு எது சமாளிக்கக்கூடிய அலுவல் எல்லையாக இருக்கவேண்டுமென்று கூறுவதற்கு எங்கட்குக் கடினமாக வுள்ளது. ஆனால், முடிந்தவரை உறுப்பினர்களிடையே எளிதான அணுகுதலுக்கும் பரஸ்பரத் தொடர்புக்குமான வசதிகளுக்கும், சவுகரியத்திற்கு மேற்ப மூன்றிலிருந்து ஐந்து மைல்கள் ரேடியஸ் சீரமைப்பின் இயல்பான அம்சமாக இருக்கலா'மென்று அக் குழுவினர் கூறினர். கிராம வங்கித் தொழில் விசாரணைக் குழுவும் (1944), அனைத்திந்தியக் கூட்டுறவுத் திட்டக்குழுவுங்கூட (1945), அதே மாதிரியான கருத்தைக் கொண்டிருந்தன. அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவினர், வரையறுக்கப்பட்ட பொறுப்புடனும், ஊதியம் பெற்ற நிருவாகத்துடனும் பெரிய அளவுச் சங்க அடிப்படையில் கிராமக் கடன் முறையைச் சீரமைப்பதற்காக ஒரு திட்டத்தைத் தயாரித்தனர். பெரிய அளவுச் சங்கத்திற்குச் சாதகமாக வாதிக்கப்பட்ட விவரங்களாவன: (i) சாதாரணமாக, ஒரு கிராமத்தை மட்டும் தன் நடவடிக்கை எல்லையாகக் கொண்ட சிறிய அளவுச் சங்கங்கள், கடனளிப்புத் துறையில், அதற்கும் குறைவாக இதர நடவடிக்கைகள் துறையில், கிராம மக்கள்தொகையில் பெருவாரியான சாமான்ய மக்களைக் குறிப்பாகக் குறைந்த வருவாய் வகுப்பினர்களை அடைவதற்கு இயலாமலிருந்தன. எனவே, வகை மாறுதல் ஒன்று அவசியப்படுகிறது. (ii) பெரிய அளவுச் சங்கமான புதியபாணிச் சங்கம், கூட்டுறவுக் கடன் நிறுவன அமைப்பைத் தன் பிரதம வடிவத்தில் பலப்படுத்தித் தன் நிதியாதாரங்களை அதிகரிக்கச் செய்து, மக்களில் மிக அதிகமான பிரிவினரைத் தழுவும் வகையில் தன் அங்கத்துவத்தை விரிவுபடுத்தும். அந் நடவடிக்கையில் சாதாரணக் கடன் சங்கம், தக்க ஒரு பரவலான எல்லைக்கு நீடித்துக்கொள்ள வேண்டும். (iii) சங்க நடவடிக்கைகளின் அளவு விரிவுபடுத்தப்படாவிட்டால், கடனளிப்பின் சீரமைப்புப் பயனுள்ளதாக இராது. அதிகரிக்கப்பட்ட ஒரு பெரிய அளவுச் சங்கம், நிதி ரீதியாகத் தன்னிறைவான ஒரு மேலான நிலையிலிருந்து சிக்கன வளர்ச்சி மற்றும் கடனளிப்புத் துறையில் மட்டுமன்றி, தேவைகளை வழங்குதல், விளைபொருள்களை விற்பனை செய்தல், விவசாயத் தொழில்களில் மேலான முறைகளைப் புகுத்தல் போன்ற இதரச் சேவைகளைப் புரிவதற்கும் ஆற்றல் பெறும். (iv) அதிகமான அளவுடைய

நடவடிக்கைகள், சங்கத்திற்கு அதிகமான வருவாயைத் தரு கின்றன. அதைக்கொண்டு ஊதியம்பெறும் சிப்பந்திகள் பரா மரிப்பு உள்பட நிர்வாகச் செலவுகளை ஏற்பதற்குச் சாத்தியப் படும். கடனளிப்பு மட்டுமன்றி, விளைபொருள்களைச் சேகரித்து விற்பனைச் சங்கத்தின்மூலம் விற்பனை செய்தலுட்பட இதரக் கூடுதலான நடவடிக்கையையும் பெரிய அளவுச் சங்கம் மேற் கொள்ளும்போது, ஊதியம் பெறும் சிப்பந்திகள் அவசியப்படு வார்கள். விற்பனைச் சங்கத்தின்மூலம் விற்பனைக்காக விளை பொருள்களைச் சேகரிப்பதற்கு ஓர் அடக்கமுள்ள கிடங்கும், விளைபொருள்களைப் பெற்று அவற்றை விற்பனைக் கேந்திரத்திற்கு அனுப்பி வைப்பதற்காக ஏற்பாடு செய்ய யாராவது ஒருவரின் சேவையும் தேவைப்படும். அவ்வாறே, விவசாயத் தேவைகளை வாங்குவதற்காகவும். வர்த்தகர்களிடம் உறுப்பினர்கள் அதற் காகப் போகவேண்டியதில்லாமல், அவற்றை விற்பனைக்காக வழங் குவதற்காகவுமான ஏற்பாடுகளை அமைப்பதன்மூலம் உற்பத்திச் செலவு குறைக்கப்படக்கூடும். சங்கங்கள், மேம்படுத்தப்பட்ட கருவிகளையும் தேவைகளையும் வழங்கி, இதர அபிவிருத்திகளைப் புகுத்துவதற்கான வாய்க்காலாகவும் ஆகலாம். இவை யாவும் பிரதம அமைப்பு, சில சிப்பந்திகளையும் சில கிடங்குவசதி அலு வலக இடத்தையும் பெற்றிருந்தால் மட்டுமே சாத்தியப்படு கிறது. (v) மற்றும், பெரிய அளவுச் சங்கம், சிறிய அளவு அமைப்பைக்காட்டிலும் மேலாக, வைப்புகளைப் பொதுமக்களிட மிருந்து ஈர்ப்பதற்கு முடியும். சிப்பந்தியும் அலுவலகமும் போன்ற சில ஏற்பாடுகளைச் சங்கம் கொண்டிருந்தால் மட்டுமே, சேமிப்புகளையும் இதர வைப்புகளையும் பெற்று, அவைகள் திரும் பக் கேட்கப்படும்போது எளிதாக வாபஸ் பெறுவதற்கான வசதிகளை வழங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்யமுடியும். மற் றும், உறுப்பினர்களால் சேமிப்புக் கணக்குகள் திறக்கப்பட்டால், அவர்களுக்கு ஒப்பளிக்கப்படும் கடன்கள் அவர்களின் சேமிப்புக் கணக்குகளில் வரவு வைக்கப்பட்டு, தேவைப்படும் அப்போதைக் கப்போது தவணைகளில் கடன்களை வாங்கிக் கொள்ளலாம். (vi) ஒரு பெரிய அளவு அமைப்பின் மற்றொரு நன்மையாவது, கிராமங்கள் தொகுதி செய்யப்பட்டமையால் நிர்வாகக் குழு தேர்ந்தெடுக்கப்படவேண்டிய தொகுதிப் பரப்பும் விரிவுபடுகிறது. (vii) பிரதம சங்கம் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் பேரிலிருந் தால், அதன் பங்கு மூலதனத்தில் அரசு பங்கு கொள்ளமுடியும். பெரிய அளவுச் சங்கங்கள், வரையறுக்கப்பட்ட பொறுப்பின் பேரில் அமைக்கப்படவேண்டி யிருக்கின்றன. பெரிய அளவுச் சங் கத்தில் பங்கு மூலதனமாக, அரசு முதலீடு செய்வதற்குச் சாத்திய மாகவும் எளிமையாகவும் இருக்கும்.

கிராமக் கடன் விசாரணைக் குழுவினர், குறைந்தபட்சம் 500 நபர்களை உறுப்பினர்களாகக் கொண்டு, ஒரு கிராமங்கள் தொகுதிக்காகப் பெரிய அளவுச் சங்கம் நிறுவப்படலாம் என்று பரிவுரை செய்தனர். இச் சங்கங்கள், கடனளிப்பு நடவடிக்கையையும் கடனளிப்பு அல்லாத நடவடிக்கைகளையும் மேற்கொள்கின்ற முற்றிலும் தன்னிறைவுள்ள ஓர் அமைப்பாக இருக்கும் என்று எதிர்பார்க்கப்பட்டன. ஒவ்வொரு சங்கமும், ஓர் அலுவலகத்தையும், ஒரு முழுநேர ஊதியம்பெறும் மேலாளரையும் பராமரிப்புச் செய்யவேண்டியிருந்தது. குறைந்தபட்ச எண்ணிக்கையான 500 அங்கத்தினர்களை வழங்கும்வண்ணம், அதன் அலுவல் எல்லை பல கிராமங்களைத் தழுவக்கூடும். அதன் உறுப்பினர்களின் பெருமம் எண்ணிக்கை 1,000 வரை போகலாம்.

முன்னர்க் கூறியபடி, நாட்டின் பெரிய அளவுச் சங்கங்கள் அமைத்தல் கட்டங்களடங்கிய ஓர் அடிப்படையில் மேற்கொள்ளப் பட்டது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதிக்குள், 10,372 பெரிய அளவுச் சங்கங்கள் அமைக்கப்படவேண்டுமென்று திட்டமிடப்பட்டது. அத்தகைய சங்கங்கள் நிறுவப்பட்டுக் கொண்டிருக்கும்போதே, அவை அமைக்கப்படுவதற்கு விரும்பத் தக்கவையா அல்லது பிரதம கடன் சங்கங்களை ஒரு பெரிய அலுவல் எல்லையுடன் சீரமைக்கலாமா என்ற ஐயப்பாடுகள் எழுந்தன. இந்திய அரசின் வேண்டுகோளின் பேரில் கொழும்புத் திட்டத்தின்கீழ், நம் திட்டக்குழுவிற்கு ஒரு கூட்டுறவு ஆலோசகராக சர் மால்காம் டார்லிங் (Sir Malcolm Darling) அவர்களால் 1957ஆம் ஆண்டில் அவர் இந்தியாவிற்கு வந்தபோது பெரிய அளவுச் சங்கக் கொள்கைக்கு எதிரான முதற்கண்டனம் செய்யப் பட்டது. பெரிய அலுவல் எல்லையானது, உறுப்பினர்களின் பரஸ் பரத் தொடர்புக்கும் மேற்பார்வைக்கும் குந்தகம் செய்யுமென்று அவர் கருதினார். பெரிய அளவுச் சங்கத்தின் அமைப்புக் குறித்து, ஒரு முன்ஜாக்கிரதையான அணுகுதலை அவர் யோசனை கூறின போது, அவர் பெரிய அளவுச் சங்கத்திற்கு முற்றிலும் பாதகமாக இல்லை. 'பெரிய அளவுச் சங்க அமைப்புப் பரிசோதனையானது, சிறிய சங்கத்தை மேலாகத் தன்னிறைவுள்ளதாகச் செய்வதற்கு மேற்கொள்ளப்படவேண்டிய ஒரு சிறப்பு முயற்சியுடன் சேர்ந்து நடத்தப்படவேண்டும்' என்று அவர் கூறியிருந்தார். சில மாநிலங் களில் பெரிய அளவுச் சங்கம் என்ற கருத்துச் சரிவர உணரப் படாமல் சங்கங்கள் 20 அல்லது 30 கிராமங்களை உள்ளடக்கும் ஓர் அலுவல் எல்லையைக் கொண்டவையாக அமைக்கப்பட்டன. பெரிய அளவுச் சங்கத்திற்கு எதிரே கூறப்பட்ட கண்டனம், இச் சங்கங்கள் மிகப் பெரியவையாகி அவை கூட்டுறவுத் தன்

மையை இழந்து, நபர்த் தொடர்பில்லாத நிறுவனங்களாக ஆகி விடுகின்ற போக்கில் இருந்தன என்ற காரணங்களே அடிப்படையாகக் கொண்டிருந்தது. பெரிய அளவுச் சங்கம், சிறிய அளவுச் சங்கத்தைவிட மேலாகச் செயல்படலாம் என்றாலும், அது ஒரு தாற்காலிகமான அனுகூலமாகத்தான் இருக்கும் என்றும், கிராமக் கடன் இயக்கத்தின்மீது அதன் இறுதியான செயல் விளைவு பாதகமாகவிருக்கும் என்றும் கூறப்பட்டது. 1958ஆம் ஆண்டில், மூன்றாவது இந்தியக் கூட்டுறவுக் காங்கிரசைத் தொடங்கிவைக்குங்கால், பண்டித நேரு அவர்கள், கூட்டுறவுச் சங்கங்களின் அளவைக் குறித்த கொள்கையைப்பற்றிக் கருத்துத் தெரிவித்தார். 'சிறிய கூட்டுறவுச் சங்கங்களைக் கலைத்துவிட்டு அவற்றைவிடப் பெரிய சங்கங்களை அமைப்பதற்கான ஒரு போக்கும்கூட இருந்துள்ளது. இப் போக்கு, கிராமக் கடன் விசாரணைக் குழு அறிக்கையின் காரண ஆய்விலிருந்து பெறப்பட்டது என்று நான் நம்புகிறேன். பெரிய அளவுச் சங்கங்கள், மிக அதிகமான நிதி ஆதாரங்களைப் பெற்றிருந்து, ஓரளவு பயிற்சி பெற்ற சிப்பந்திகளின் செலவை ஏற்று, மிக மேலான பணியைப் புரியக்கூடும் என்பதே வாதமாக இருந்து வந்துள்ளது. மற்றும், அவ் வாதத்தில் ஓரளவு பொருள் இருக்கிறதென்று நான் ஒப்புக்கொள்கின்றேன். பெரிய அளவுச் சங்கம், சில தாற்காலிகப் பலன்களை நன்கு அடையலாம்; அது நிரந்தரத் தீங்கைச் செய்து, தற்சார்பு, ஒருவரோடு ஒருவர் ஒத்துழைத்தல் ஆகிய உணர்ச்சியின் வளர்ச்சியை மீண்டும்தடுத்து, முற்றிலும் தவறானது என்று நான் நம்பும் சில வளர்ச்சியை, அதாவது, இந்த நாட்டில் அதிகமாக நிலவும், ஒவ்வொன்றிற்காகவும் அரசை எதிர்நோக்கும் உணர்ச்சியை ஊக்குவிக்கும்' என்று அவர் கூறினர். பெரிய அளவுச் சங்கத்திற்கு எதிரே, சிறிய அளவுக் கூட்டுறவுச் சங்கத்திற்காகப் பண்டித ஜவகர்லால் நேரு அவர்களின் தேர்வு விருப்பத்திற்குக் காரணம், அரசியல், பொருளாதார, சமுதாயத் துறையில் இந்தியாவின் முழு அமைப்பை அமைப்பதற்காக ஒவ்வொரு கிராமமும், 'அடித்தளத்தில் மூன்று அடிப்படைத் தூண்கள்' என்ற கூட்டுறவுச் சங்கத்தையும், பஞ்சாயத்தையும், பள்ளிக்கூடத்தையும் பெற்றிருக்கவேண்டும் என்ற ஓர் அடிப்படைத் தத்துவமே.

முன்னர்க் கூறியபடி, இந்திய அரசு, பெரிய அளவுச் சங்கங்கள் அமைத்தலை நிறுத்தம் செய்துவிட்டது. சுமார் 700 பெரிய அளவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டிருந்து மேற்கொண்டு இச் சங்கங்களின் அமைப்புத் தொடரப்படாமலிருந்தது. மேற்கொண்டு நடந்த நிகழ்ச்சிகள் யாவும் ஏற்கெனவே விளக்கப்பட்டுள்ளன. எனினும், பிரதம விவசாயக் கடன் வசதிச் சங்கத்தின் அளவு

பற்றிய பிரச்சினையைக் குறித்து, கூட்டுறவுக் கடன் பற்றிய அனைத் திந்தியக் குழுவின் கருத்துகளைக் குறிப்பது அவசியமாகும். இக் குழுவினர், கிராமக் கடன் சங்கம் ஒரு தன்னிறைவான அடிப் படையின் பேரில் அமைக்கப்படுவதை வலியுறுத்தினர். முன்னர்க் குறிப்பிடப்பட்ட பலநோக்கு நடவடிக்கைகளை முழுமையாகவும், போதுமான அளவுக்கும் நிறைவேற்றுதல் மட்டுமன்றி, ஒரு குறுகிய ஆரம்பக் காலவரைக்குப் பிறகு அரசு உதவியின்றிச் செயற்படக்கூடிய ஒரு சங்கத்தைத் தன்னிறைவு உள்ள அமைப் பாக அவர்கள் கருதினர். தன்னிறைவு அம்சத்தைப் போன்று கூட்டுறவு அம்சமும் சம முக்கியமானதென்று அவர்கள் கருத்துக் கொண்டனர். ஒரு கூட்டுறவுச் சங்கம், தன்னை நபர்த் தொடர் பில்லாத ஒரு நிறுவனமாக விரிவுபடுத்திக்கொள்ளுதல் கூடாது. ஒரு திடமான கூட்டுறவு நிறுவனம், பரஸ்பர அறிவு, பரஸ்பரத் தொடர்பு ஆகியவற்றின் அடிப்படையின்பேரி லல்லாது பிரதம மட்டத்தில் அமைக்கப்பட முடியாது. ஆகையால் உறுப்பினர் எண்ணிக்கை மிகப் பெரியதாக விருத்தல் கூடாது. மற்றும், அலுவல் எல்லை அடக்கமானதாக விருக்கவேண்டும். போக்கு வரத்து வசதிகள் சரியாக இருக்கின்றனவா குறைபாடுள்ள தாகவிருக்கின்றனவா என்பதன்மீதும், அலுவல் எல்லை எவ்வளவு நெருக்கமான அல்லது சிதறுண்ட மக்கள்தொகையைக் கொண் டது என்பதன்மீதும் ஒரு பெரும் பாகம் சார்ந்திருக்கும். கிரா மம் அல்லது கிராமங்கள் என்ற நிபந்தனைகளில் சங்கத்தின் அலுவல் எல்லை எதுவாக இருக்கவேண்டும் என்பதைக் கூறுவதற்கு அக் குழுவினர் முயற்சிக்கவில்லை. ஆனால், பெரும் வரம்பு 3,000 மக்கள்தொகையாக அதாவது, 600 குடும்பங்கள் அல்லது சுமார் 500 குத்தகைச் சாகுபடி செய்பவர்களாக விருக்கவேண்டு மென்று அவர்கள் கருதினர். அதேசமயத்தில், அவ் வரம்புகள் கண்டிப்பானவையல்ல என்றும், நெகிழ்ச்சித் தன்மைக்கு இட மிருக்கிறது என்றும் அவர்கள் கூறினர். விரிவுபட்டதும், பல தரப்பட்டதுமான தன் பணியை நிறைவேற்றும் ஆற்றல் வாய்ப் புடைய ஒரு நிறுவனத்தை அடித்தளத்தில் அமைப்பதற்கான நிலை யான தேவையைக் கருத்திற்கொண்டு, நடைமுறைப்படுத்தப்படக் கூடிய இணக்கங்களைச் செய்யவேண்டிய பொறுப்பை மக்களும் அரசும் ஏற்றுக்கொள்ள வேண்டும். இந் நிலைமையை இந்திய அரசு ஏற்றுக்கொண்டுள்ளது. தற்போது ஒரு தன்னிறைவு அடிப்படையின் பேரில் சங்கங்களைச் சீரமைப்பதற்கு நாடு முழு மைக்குமான ஒரு செயல்திட்டம் தயாரிக்கப்பட்டுத் தீவிரமாக அமல் செய்யப்பட்டு வருகிறது. சுருங்கக் கூறின், பிரதம விவசாயக் கடன் சங்கம் தன்னிறைவுள்ளதாக அல்லது தன் னிறைவுவாய்ப்புள்ளதாக இருக்கவேண்டுமென்பது எல்லோராலும்

ஏற்றுக்கொள்ளப்பட்ட நடப்புக் கருத்தாகுமென்று கூறலாம். அதாவது, அவசியமான ஊதியம்பெறும் சிப்பந்திகளையமர்த்தவும், அலுவலகக் கட்டடம், கிடங்கு முதலியன போன்ற இதர வசதிகளுடன், தன்னை வசதிப்படுத்திக் கொள்ளும் வகையில் போதிய வாணிகத்தைப் பெற்று, போதிய வருவாய் சம்பாதிக்கும் நிலைமையிலிருந்து, வெறுங் கடனளிப்பு மட்டுமன்றி, ஏற்கெனவே சுட்டிக் காட்டப்பட்ட இதரத் துணைச் சேவைகளையுங்கூட வழங்குகின்ற ஒரு விவசாயச் சேவைக் கூட்டுறவுச் சங்கமாக உண்மையாகவே செயற்படும் ஒரு தன்னிறைவுள்ள அமைப்பு அது. அத்தகைய சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பின் அடிப்படையின் பேரிலுங்கூட அமைக்கப்படவேண்டும். ஒரு கூட்டுறவுச் சங்கம் ஓர் ஒற்றையான கிராமத்தில் செயல்பட்டாலுங்கூட அங்குத் தழுவப்படுவதற்குப் போதிய எண்ணிக்கையுள்ள குடும்பங்களிருந்தாலும் மற்றும், சங்கம் நிதி ரீதியாகப் பலம் பொருந்தியதாகக்கூடிய வகையில் அதற்கிருக்கும் வாணிகத்தின் பருமமிருந்தாலும், அது தன்னிறைவை அடையக் கூடும். ஒரு சங்கத்தில், ஒன்றுக்கு மேற்பட்ட கிராமங்களைத் தொகுப்புச் செய்ய அவசியப்பட்டால், அமைக்கப்படும் சங்கம் மிகப் பெரியதாக விராமலிருக்கும்பொருட்டு, சில வரம்புகள் அனுசரிக்கப்படவேண்டும். உள்ளடக்கப்படவேண்டிய குடும்பங்கள் அல்லது சாகுபடி செய்யும் குடும்பங்களின் எண்ணிக்கை அல்லது ஏக்கர்களின் எண்ணிக்கை அல்லது கிராமங்களின் எண்ணிக்கையைக் குறித்த வரம்புகள் உள்ளூர் நிலைமைகளையொட்டி மாநிலத்திலுள்ள தக்க நிறுவனங்களால் முடிவு செய்யப்படவேண்டிய விஷயங்களாகும். எனினும், சங்கம் மிகப் பெரியதாகவும் அல்லது மிகச் சிறியதாகவும் இருக்கக் கூடாது. அதாவது, பெரிய அளவானதாக அல்லது சிறிய அளவானதாக வில்லாமல் நியாயமான அளவுள்ளதாக விருக்கவேண்டும்.

**(iii) வரையறுக்கப்படாத பொறுப்பிற்கு எதிரே வரையறுக்கப்பட்ட பொறுப்பு:** சங்க அளவுப் பிரச்சினையுடன் நெருங்கிய தொடர்புள்ளது அதன் பொறுப்பு வகைப் பிரச்சினையாகும். வரையறுக்கப்படாத பொறுப்பாவது, ரெய்ஃபெய்சன் முறையை நெருங்கப் பின்பற்றுகிற இந்தியாவின், கிராமக் கூட்டுறவுக் கடன் நிறுவனத்தின் அடிப்படைக் கொள்கைகளில் ஒன்முக இருந்து வந்துள்ளது. இக் கொள்கை, முதலில், 1904ஆம் வருடத்திய கூட்டுறவுக் கடன் சங்கங்களின் சட்டத்தில் இடம் பெற்று, 1912ஆம் வருடத்திய கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திலும் (இந்திய அரசு சட்டம்), சில மாகாணங்களில் அந்த இந்தியச் சட்டத்திற்குப் பதிலாக இயற்றப்பட்ட மாகாணச்

சட்டங்களிலும் மீண்டும் இடம்பெற்றது. கிராமக் கூட்டுறவுக் கடன் நிறுவனத்தின் ஓர் அடிப்படைக் கொள்கையாக அதைக் கருதுகின்ற கூட்டுறவாளர்கள் சிலர் இன்றும் இருக்கின்றனர். வரையறுக்கப்படாத பொறுப்பின்படி, ஒரு சங்கத்தின் உறுப்பினர்கள், ஒரு சங்கத்தின் கடன்களுக்காகக் கூட்டாகவும், தனித்தனியாகவும் பொறுப்புள்ளவர்களாக இருக்கின்றனர். ஒரு சங்கம் கலைக்கப்படும் சமயத்தில், அதற்குக் கடன் கொடுத்தவர்களின் பாக்கியைத் தீர்ப்பதற்கு வகைசெய்யும் பொருட்டு, சங்கத்தின் ஆஸ்திகளுக்கு உறுப்பினர்கள் உதவித்தொகை யளிக்கத் தேவைப் படுவார்கள். தங்களுடைய ஒப்பிய பங்கு மூலதன அளவிற்கு மட்டுமன்றி, தங்கள் சொத்துகளின் முழு அளவிற்குங்கூட, அவ்வாறு உறுப்பினர்கள் உதவித்தொகை யளிப்பதற்குத் தேவைப் படுவார்கள். தனிநபர் உறுப்பினர்களின்மீது ஒரு கடன் கொடுத்தவர் நேர்முக நடவடிக்கைகளையெடுக்கத் தடைப்படுத்தப் பட்டிருப்பதால், சங்கத்தின் பற்றுக்குறையை உறுப்பினர்களிடமிருந்து, அவர்கள்மீது விதிக்கப்படும் தலா விதிப்பின் மூலம் வசூலிக்கப்படும். உதவித்தொகை யளிப்பதற்கு ஓர் உறுப்பினர் கேட்கப்படும் வரம்பு வரையானது, சங்கத்திலேற்படும் நிகரப் பற்றுக்குறை, உதவித்தொகை யளிப்பதற்கு உறுப்பினர்களின் சக்தி ஆகியவை போன்ற பல காரணிகளின்மீது சார்ந்திருக்கும். இந்த விதிப்பு, அவர்களுக்குக் குறுமமான இன்னலை விளைவிக்கும் வகையில் நியாயமானதாகவும், சமநிலை நேர்மையானதாகவும் இருக்கவேண்டும்.

வரையறுக்கப்படாத பொறுப்புக் கொள்கைக்குச் சாதகமான வாதங்கள் பின்வருமாறு:

(i) வரையறுக்கப்படாத பொறுப்பானது, கிராமக் கடன் சங்கங்களின் உறுப்பினர்களிடையே கூட்டுப் பொறுப்புணர்ச்சியையும், பரஸ்பரக் கவனிப்பையும் உண்டாக்குவதற்கு உருவாக்கப் பட்ட ஓர் அத்தியாவசியமான கூட்டுறவுக் கொள்கையாகும். புறக்கணிக்க முடியாத அளவு அதன் ஒழுக்கரீதியான பயன் மிகப் பெரியதாக உள்ளது. வரையறுக்கப்பட்ட பொறுப்புக் கொள்கையில் ஓர் அபாயமிருக்கிறது. ஏனென்றால், ஒருவர் முழு அதிகாரத்தையும் தம் கையில் பெற்று, அவர் பங்கு மூலதனத் தொகைக்காக மட்டும் பொறுப்பாளி யாக்கப்படலாம். ஆனல், பொறுப்பு வரையறுக்கப்படாததாக இருந்தால், சங்கம் சரிவர நிருவகிக்கப்படுவதைக் கவனிப்பது ஒவ்வோர் உறுப்பினரின் நலனுக்கும் அவசியமானதாகும்.

(ii) வரையறுக்கப்படாத பொறுப்பானது, போதுமான பாதுகாப்புகளால் வேலியிடப்பட்டிருக்கிறது. அவையாவன: உறுப்பினர்களை எச்சரிக்கையுடன் தேர்ந்தெடுத்தலும், தனிநபர் ஆதாரத்தின்மீதும், அடைமான ஆதாரத்தின்மீதும் கடன் அளித்தலும், பங்கு மூலதனத்தையும், காப்புஇருப்புகளையும் ஏற்படுத்துதலும் ஆகும். இப் பாதுகாப்புகள், உறுப்பினர்களுக்காக ஒரு முழுமையான பாதுகாப்பாக அமைந்திருக்கின்றன. ஆகையால், உறுப்பினர்கள் வரையறுக்கப்படாத பொறுப்பைக் குறித்து அச்சமுறவோ அந்த அடிப்படையின்பேரில் அமைக்கப்பட்ட ஒரு கூட்டுறவுச் சங்கத்தில் சேருவதற்குத் தயக்கப்படவோ தேவையில்லை.

(iii) வரையறுக்கப்படாத பொறுப்பின் கடுமைகள் ஏதாயினும் இருந்தால், அவை, அதன் நிறைவேற்றுதலைக் குறித்து, கூட்டுறவு இலாக்காவால் விடுக்கப்பட்ட அறிவுரைகளினால் மென்மைப்படுத்தப்பட்டிருக்கின்றன. உதவித்தொகைகள் விதிக்கப்பட வேண்டியிருந்தால், அவை உறுப்பினர்கட்கு மிகக் குறைந்த இன்னலை விளைவிக்கும் வகையில், ஒரு நியாயமானதும், சமநிலை நேர்மையானதுமான முறையில் விதிக்கப்படவேண்டும். உண்மையிலேயே வரையறுக்கப்படாத பொறுப்பு நிறைவேற்றுவதன் மூலம் மிகச் சிறிய தொகையே வசூலிக்கப்படுகிறது. விதிக்கப்படும் உதவித்தொகையானது, பொதுவாகக் கலைக்கப்பட்ட சங்கங்களில் நட்டத் தாவா செய்யப்பட்ட தொகைகளை அல்லது திருப்பிச் செலுத்தப்படவேண்டிய கடன் பொறுப்புகளை நோக்குமிடத்து உயர்வாக இருக்கிறதில்லை. தமிழ்நாட்டில், விதிக்கப்பட்ட உதவித்தொகையில் மிகப் பெரியதான வகுப்பு ரூ. 250-க்குக்கீழ் உள்ளவகுப்பைச் சேரும். சந்தர்ப்பத்திற்கேற்ப அதாவது கருத்தான துர்நிருவாகம், கையாடல் அல்லது பொய்யான நடவடிக்கைகள் ஆகியவைகளின்மூலம் விளைந்த நட்டங்களுக்குப் பொறுப்பாக உள்ள நபர்கள் விஷயங்களில் உதவித்தொகைகள் உயர்வான தொகைகளுக்காக விதிக்கப்படுகின்றன.

(iv) கடன் கொடுத்தவர்களுக்கு, குறிப்பாகக் கூட்டுறவு மத்திய வங்கிகளுக்கு வரையறுக்கப்படாத கொள்கை மேற்கொள்ளப்படுவதன்மூலம் பாதுகாப்பு அளிக்கப்படுகிறது. உண்மையாகவே, இயக்கத்தின் ஆரம்பக் கட்டங்களில், சங்கங்களுக்கு நிதியுதவி யளிக்க மைய வங்கிகளுக்காக முதன்மையான ஆதார அடிப்படையாக வரையறுக்கப்படாத பொறுப்பு அமைந்திருந்தது. ஏனென்றால், இக் கொள்கையின்கீழ், சங்கத்தின்

எல்லா உறுப்பினர்களுடைய ஒன்றுசேர்ந்த சொத்து, கூட்டுறவு மத்திய வங்கிகளால் அளிக்கப்பட்ட கடன்களுக்காகவும் அல்லது எந்தக் கடன் கொடுத்தவருக்காகவும் ஆதாரமாக அமைந்துள்ளது.

(v) வரையறுக்கப்படாத பொறுப்பிலிருந்து, வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்கு ஒரு முழுமையான மாற்றம், நம்பிக்கைக்கு அதிர்ச்சியைக் கொடுத்து, இயக்கத்தில் பணம் பாய்ச்சலைப் பாதிக்கச் செய்யலாம். வரையறுக்கப்படாத பொறுப்பிற்குப் பதிலாக வரையறுக்கப்பட்ட பொறுப்பு மேற்கொள்ளப்பட வேண்டுமானால், அது முதலில் உத்தரவாதப் பொறுப்பாக இருக்க வேண்டும். அதாவது, ஓர் உறுப்பினரின் பொறுப்பு, அவருடைய ஒப்பிய பங்கு மூலதனம் மட்டிற்குப் பதிலாக, அவருடைய ஒப்பிய பங்கு மூலதனத்தின் 5 அல்லது 10 மடங்குகளுக்கு வரையறுக்கப்படும்.

பல ஆண்டுகளாக வளர்க்கப்பட்ட காப்பிருப்புகள், பெருகி வரும் பங்கு மூலதனம் ஆகியவைகளின் காரணமாகவும், பெரும்பான்மையான குடியானவர்களின் கடன் தேவைகளை நிறைவு செய்வதற்குக் கூட்டுறவுச் சங்கங்கள் உபயோகத்தின் உணர்வு பெருகி வருகின்ற காரணமாகவும் வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்குச் சாதகமான கருத்து மெதுவாக ஏற்கப்பட்டிருக்கின்றது. உண்மையாகவே, கிராமத்திலுள்ள எல்லாக் குடும்பங்களையும் அல்லது பெரும்பான்மையான குடும்பங்களைத் தழுவுதலே கூட்டுறவுச் சங்கத்தின் குறிக்கோளாகும். கடனளிப்பிற்கும் மேற்பட்ட கூடுதலான நடவடிக்கைகளை மேற்கொள்ளுதலில் சங்கம் ஆற்றவேண்டிய சேவையின் காரணமாக வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்கள் அதிகமாக விரும்பப்பட்டன. வரையறுக்கப்படாத பொறுப்பு மேற்கொள்ளப்படுவதற்கு எதிராகக் கூறப்படும் வாதங்கள் பின்வருமாறு:

(i) திரு. கோகலே (Mr. Gokale) அவர்கள் கூற்றின்படி, 'வரையறுக்கப்படாத பொறுப்பானது, கிராம இந்தியாவின் பல பாகங்களில் நம் குடியானவர்கள் புரிந்துகொள்ள முடியாத ஒரு கொள்கையாகவிருக்கிறது. அத்தகைய கொள்கையை வற்புறுத்தல் செய்வது, புதிய சங்கங்களில் எந்த வகுப்பு மக்களின் உதவியும், ஒத்துழைப்பும் இன்றியமையாதவையாக இருக்குமோ அவர்களைச் சேரவிடாமல் தடை செய்யும்.' 1904ஆம் வருடத்திய கூட்டுறவுக் கடன் சங்கங்களின் சட்டத்தில் (இந்திய அரசு சட்டம்) இடம் பெற்றிருந்த இக் கொள்கையானது இந்தியக் கவர்னர்-ஜெனரல் சபையில் விவாதத்தி லிருந்தபோதும், அது

எதிர்க்கப்பட்டபோதும், திரு. கோகலே அவர்கள் இக் கருத்தைத் தெரிவித்தார். அன்று அவர் கூறியது, இன்றுங்கூட உண்மையாக இருக்கிறது.

(ii) வரையறுக்கப்படாத பொறுப்பு எந்த அளவில் நிறைவேற்றப்பட்டாலும் உறுப்பினர்கட்குத் துன்பத்தை விளைவிக்கிறது. உறுப்பினர்களில் சிலர், கடன் வாங்காதவர்களாகவும், தவணை தவறிய பாக்கியில்லாதவர்களாகவும் இருக்கின்றனர். வரையறுக்கப்படாத பொறுப்பானது, கிராம மக்கள் மனத்தில் அச்சத்தை விளைவித்து, இயக்கத்தைப் பொதுவாக இகழ்ச்சிக்குக் கொண்டு வருகிறது.

(iii) சங்கத்தின் திறமையான நிருவாகத்திற்கு உதவிஅளிப்பதற்குப் பெறுமானமுள்ள அல்லது செல்வாக்குள்ள உயர்வகை விவசாயிகளின் அனுதாபத்தையும், பொருளாதார உதவியையும், தார்மீக உதவியையும் பெறவேண்டியிருக்கிறது. வரையறுக்கப்படாத பொறுப்பானது, அத்தகைய விவசாயிகளைச் சங்கத்தில் சேரவிடாமல் தடுத்திருக்கிறது.

(iv) சங்கக் கலைப்பையும் அதன் விளைவாக இறுதியில் தங்கள்மீது வரையறுக்கப்படாத பொறுப்பு நிறைவேற்றப் படுதலையும் கண்டு பயந்து, சங்கத்தில் சேர்ந்துள்ளவர்கள் தங்கள் சொத்துகளைப் பராதீனம் செய்ய முடியாது என்று வரையறுக்கப் படாத பொறுப்பானது பொருள்படாது. தங்கள் உறுப்பினர்-காலத்தின்போது, தங்கள் சொத்தைத் தாங்கள் பராதீனம் செய்வதை வரையறுக்கப்படாத பொறுப்புத் தடை செய்யாம லிருக்கின்றவரையில், வரையறுக்கப்படாத பொறுப்பின் நடைமுறை உபயோகம் ஐயப்பாட்டிற்குரியது. ஒரு சங்கம் தன் ஒருமித்த தன்மையை (Corporate character) வைத்துக்கொண்டிருக்கும் வரை, வரையறுக்கப்படாத பொறுப்பு உறுப்பினர்களின்மீது நிறைவேற்றப்பட முடியாது. ஒரு சங்கம் கலைக்கப்பட்ட பின்னர் எழுகின்ற ஓர் உடந்தையான பொறுப்புத்தான் (Contributory liability) வரையறுக்கப்படாத பொறுப்பாகும். இந்த உடந்தையான பொறுப்பும்கூடச் சங்கத்தின் உறுப்பினர்களுள் மேலான சாமர்த்தியமுள்ளவர்களால் அல்லது நாணயமற்றவர்களால் ஏய்க்கப்படக்கூடும் அல்லது தடுக்கப்படக்கூடும்.

(v) வரையறுக்கப்படாத பொறுப்பைவிட, திறமையான நிருவாகம்தான் நிதிநிறுவனங்களிடையேயும், வைப்புத் தொகையாளர்களிடையேயும் நம்பிக்கையைத் தூண்டுகிறது.

ஆய்வு, தணிக்கை மற்றும் இதரச் சட்டப்படியான கண்காணிப்பு வகைகள் வாயிலாக, இயக்கத்திற்கு அரசு ஆதாரமாக இருக்கிறது என்ற நம்பிக்கையும், அதைவிடவும் மேலாகச் சங்கத்தின் நல்ல நிருவாகம்தான், வரையறுக்கப்படாத பொறுப்பு வகையைக் காட்டிலும் மேலாகப் பொதுமக்களிடையே நம்பிக்கையைத் தூண்டுகிறது. உண்மையான காரியாம்சத்தில், ஒரு நிதி நிறுவனம் ஒரு கூட்டுறவுச் சங்கத்துடன் நடவடிக்கை கொள்ளும் போது, அச் சங்கத்தின் திறமையான நிருவாகத்திற்கும், அரசினரால் கையாளப்படும் கட்டுப்பாட்டிற்கும், மேற்பார்வைக்குந்தான், தன் மேலான கவனத்தைச் செலுத்துகிறது. தனிநபர் உறுப்பினர்கட்குக் கடன்களையும் முன்பணங்களையும் வழங்கும்போது, அசையாச் சொத்து அடைமானத்தையும் அல்லது நல்ல தனிநபர்ப் பிணையத்தையும் அல்லது பயிர்கள் ஈடுகாட்டலையும் மிகச் சிறந்த தகுதிவாய்ந்த ஆதாரமாக நிதிநிறுவனம் கருதுகிறது.

(vi) வரையறுக்கப்படாத பொறுப்பானது, ஒரு கிராமச் சங்கத்தின் உறுப்பினர்கள் ஒருவருக்கொருவருடைய அலுவல்களின் பரஸ்பர அறிவைப் பெற்றிருந்து, அவர்கள் கடன் வாங்கும் விஷயத்திலும், அக் கடன்களைக் காலம் தவறுது திருப்பிச் செலுத்தும் விஷயத்திலும் அவர்கள்மீது கண்காணிப்பைச் செய்கின்றனர் என்ற மூலாதாரக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டுள்ளது. ஆனுல், குறைந்தபட்சம் நிதிரீதியான நடவடிக்கைகளைப் பொறுத்தமட்டில் இந்த ஊகித்தல்கள் எப்பொழுதுமே நிகழ்கிறதில்லை.

(vii) வரையறுக்கப்படாத பொறுப்பானது, நம் காலத்தில் உபயோகமுள்ளதாக இருந்திருந்தாலுங்கூட, அது தன் உபயோகம் அற்றுப்போன பிறகும் நீடித்திருக்கின்றது.

(viii) கூட்டுறவுக் கடன் நிறுவனங்களின் முன்னேற்றத்திற்கு, வரையறுக்கப்படாத பொறுப்பு, எதிர்பார்க்கப்படும் அளவிற்கு உதவியாக இருந்திருக்கவில்லை. சங்கங்களின் அலுவல்களை நடத்துவதிலும், உறுப்பினர்களிடையே பரஸ்பர விழிப்பையும், பரஸ்பரக் கவனத்தையும் அது நிச்சயப்படுத்தாமல் இருந்துள்ளது.

கூட்டுறவு பற்றிய சென்னைக் குழு (1940), கடன் சங்கத்தின் பொறுப்புப் பிரச்சினையைக் குறிப்பாகக் கடன் சங்கங்கள் விரிவான ஓர் அடிப்படையின் பேரில் நிறுவப்பட வேண்டும் என்ற தன் யோசனையையொட்டி ஆலோசித்தது. இயல்பாகக் கிராமச் சங்கங்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாக இருக்கவேண்டும்

என்றும், ஆனால், உள்ளூர்ப் பொதுக் கருத்தும் இதரச் சூழ்நிலைகளும் வரையறுக்கப்படாத பொறுப்பை மேற்கொள்வதற்கு உகந்தவை யாகவிருப்பின், சங்கம் வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின்பேரில் அமைக்கப்படலாம் என்றும் அது கருத்துக் கொண்டது.

கூட்டுறவுத் திட்டக் குழு (1947), பல மாகாணங்களின் கருத்துப் போக்கு வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்குச் சாதக மாக இருந்தது என்பதைக் கண்டு, வரையறுக்கப்படாத பொறுப்பு நல்ல பலன்களை விளைவித்திருக்கின்ற இடங்களில் தவிர, மற்ற இடங்களில் சீரமைக்கப்பட்ட பிரதம கடன் சங்கங்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டதாக விருக்க வேண்டுமென்று பரி வுரை செய்தது. எனினும், இப் பொறுப்பு, சங்கத்தால் தேவைப்படும் நிதிகளின் ஒரு பெரும் பகுதியைப் பங்கு மூலதனத்தின் வாயிலாகத் திரட்ட முடியுமென்ற நிபந்தனைக்குட்பட்டு, ஓர் உறுப்பின ரால் வைக்கப்பட்டிருக்கும் பங்குகளின் மதிப்பிற்கோ அந்த மதிப்பின் பல மடங்குகளுக்கோ வரையறுக்கப்படவேண்டும்.

கூட்டுறவு பற்றிய சென்னைக் குழுவின்படி (1956), தமிழ் நாட்டில் விவசாயக் கடன் சங்கங்கள் பெரும்பாலும் வரையறுக் கப்படாத பொறுப்பின்மீது அமைக்கப்படுகின்றன. இப் பொறுப்பிலிருந்து முதல் விலகுதலானது, கிராம வங்கிகள் (Rural Banks) அமைக்கப்பட்டபோது செய்யப்பட்டது. கிராம வங்கிகள் விஷயத்தில் பொறுப்பு, உறுப்பினர்களின் செலுத் தப்பட்ட பங்கு மூலதனத்திற்கு 5 மடங்குகளாக நிருணயிக்கப் பட்டது. இது, நிலைமாறு காலத்தின்போது வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்கும், வரையறுக்கப்படாத பொறுப்பிற்குமிடையே ஓர் இடைநிலை ஏற்பாடாக விருந்தது. அக் குழுவின் கருத்தின்படி, பொதுவாக நம் மாநிலத்தில்( தமிழ்நாட்டில்) கூட்டுறவுக் கருத்து, உத்தரவாத வரையறுக்கப்பட்ட பொறுப்பை மேற்கொள்ளு வதற்குச் சாதகமாகத் திரும்பி வந்துகொண்டிருக்கிறது.

அனைத்திந்தியக் கிராமக் கடன் மறு ஆய்வுக் குழுவினர் (1952), தங்களால் பரிந்துரைக்கப்பட்ட பெரிய அளவுச் சங்கம் வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின்பேரில் இருக்க வேண்டும் என்று கருத்துக் கொண்டனர். ஒரு பெரிய அளவுச் சங்கத்தின் அலுவல் எல்லை விரிவாக இருக்கும் என்று எதிர் பார்க்கப்பட்ட காரணத்தினால் மட்டுமல்லாமல், வரையறுக்கப் படாத பொறுப்பு அடிப்படையின்மீதுள்ள சிறிய கடன் சங்கங் களுடன் அரசினர் பங்காளித்துவம் கொள்ள முடியாது என்ற

காரணத்தினுலுங்கூட அவ்வாறு அக் குழுவினர் கருதினர். அரசினர் ஒரு வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்ந்து, அதன் கலைப்பு நேரத்தில் அதன் எல்லா நட்டங்களுக்காகவும் பொறுப்பேற்க முடியாது.

கூட்டுறவுக் கடன் பற்றிய குழு (மத்தியக் குழு 1960), வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்கள், கிராம மட்டத்தில் கூட்டுறவுக் கடனமைப்பில் பிரதானமானவையாக இருக்கின்றனவென்றும், 30-6-1958ஆம் நாளன்று சங்கங்களின் ஏறக்குறைய 55 சதவிகிதம் வரையறுக்கப்படாத பொறுப்புள்ளவை யானவையாகவிருந்தனவென்றும் குறித்தனர். உத்தரப்பிரதேசம், பீகார், பம்பாய் ஆகிய மூன்று மாநிலங்களில் தவிர, ஏனைய மாநிலங்களில் வரையறுக்கப்படாத பொறுப்புத்தான் பொதுவிதியாக இருக்கின்றதென்பதையும் வரையறுக்கப்பட்ட பொறுப்பு ஒரு விலக்காகவே இருக்கிறது என்பதையும் அக் குழுவினர் கண்டனர். சில மாநிலங்களில் கருத்துப் போக்கு வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்குச் சாதகமாகவிருக்கிறது. இதர மாநிலங்களில் புதிய நிறுவனங்கள் இன்னும் வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின்பேரில் இருக்கின்றன. அக் குழுவினர், தங்களால் பிரேரேபிக்கப்பட்ட பிரதம கடன் சங்க வகைக்காகவும், அதாவது தன்னிறைவுள்ள சங்கத்திற்காகவும், அத்தகைய சங்கம் மேற்கொள்வதற்கு எதிர்பார்க்கப்படுகிற சேவைகளுக்காகவும், வரையறுக்கப்பட்ட பொறுப்பை அடிப்படையாகக் கொண்ட நிறுவனமே மிக்க ஏற்றதாக இருக்கும் என்று பரிவுரை செய்தனர்.

சென்னையில் சந்தானம் குழுவினர் (1969), விவசாயக் கடன் சங்கங்களின் பொறுப்புப் பிரச்சினையை ஆலோசித்தனர். இரண்டு அல்லது மூன்று கிராமங்களைத் தழுவிய ஒரு நியாயமான பெரிய அளவுள்ள ஒரு விவசாயக் கடன் சங்கமிருக்க வேண்டுமென்றும், அதன் எல்லையிலுள்ள வயது வந்த ஒவ்வொரு நபரும் உறுப்பினராக அதில் சேர்க்கப்படுவதற்கு உரிமையுள்ளவர்களாக இருந்து, சங்கம் வழங்கும் கடன்களையும் பிற சேவைகளையும் பயன்படுத்திக் கொள்ளவேண்டுமென்றும் யோசிக்கப்பட்டிருப்பதாலும், சங்கம், அபாயங்கள் உள்ளிட்ட கடனல்லாத தன் நடவடிக்கைகளை விரிவுபடுத்த வேண்டியிருப்பதாலும், வரையறுக்கப்படாத பொறுப்பை இன்னும் வைத்துக் கொள்வதற்குச் சிறு நியாயமும் கிடையாது என்று அக் குழுவினர் கூறினர். ஆகையால், எதிர்காலத்தில் எல்லா விவசாயக் கடன் சங்கங்களும் வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின் பேரில்தான் பதிவு செய்யப்படவேண்டுமென்று அக் குழுவினர் பரிவுரை

செய்தனர். நடப்பிலுள்ள சங்கங்களைப் பொறுத்தமட்டில், வரையறுக்கப்பட்ட பொறுப்பை மேற்கொள்ள விரும்பும் தன்னிறைவுச் சங்கங்கள் அவ்வாறு மேற்கொள்ள அனுமதிக்கப்பட வேண்டும்.

மேற்கூறியதிலிருந்து வரையறுக்கப்படாத பொறுப்பின் சிறப்புக் குணங்கள் எப்படியிருந்திருப்பினும், கடன் இயக்கத்தின் ஆரம்பக் கட்டங்களில் அதன் அவசியம் எவ்வாறு இருந்திருப்பினும், கிராமப் பொருளாதார அமைப்பனைத்தையும் மேம்படுத்தும் நோக்கத்துடன் விவசாய மக்களின் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்து பலநோக்கு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டிய கடன் சங்கத்தின் பணி அவசியமாகவுள்ள தற்போதைய சந்தர்ப்பத்தில், வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்கள் அதிகமாக விரும்பப்படவேண்டும் என்பது தெற்றென விளங்கும். கூட்டுறவுக் கருத்துப் போக்கும்கூட அவ்வாறாகத்தான் உள்ளது.

# 10. பிரதம விவசாயக் கடன் வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள்

## (Primary Agricultural Credit Co-operatives)

### இந்தியாவிலும் தமிழ்நாட்டிலும் பிரதம விவசாயக் கடன்வசதிச் சங்கங்களின் பொது நிலவரம்

1. விவசாயக் கடன் வசதிச் சங்கங்கள் பிரதம கூட்டுறவுச் சங்கங்களிடையே மிக முக்கியமான பகுதியாக அமைந்திருக்கின்றன. நாட்டில் கூட்டுறவுச் சங்கங்களின் மொத்த எண்ணிக்கையில் அவை 50 சதவிகிதத்திற்கும் மேலான எண்ணிக்கையுள்ளவையாக இருந்து, கூட்டுறவுக் கடன் இயக்கத்தின் அடித்தளமாக அமைந்திருக்கின்றன. விவசாயக் கடன் துறையானது ஒரு மூன்று அடுக்கு அமைப்பைக் கொண்டுள்ளது. மைய வங்கிகளையும், மாநில வங்கிகளையும் கொண்ட மேல்கட்டடத்தின் பலம் பிரதம சங்கங்களின் பலத்தின்மீது சார்ந்துள்ளது. பிரதம சங்கங்கள் பலவீனமாக விருக்கும்போதுங்கூட அது ஒரு நல்ல நிலையிலிருப்பதாக ஒருவேளை தோற்றமளித்தாலும், அதன் பலம் பிரதம சங்கங்களின் பலத்தைத்தான் பொறுத்துள்ளது.

2. அரசியல் விடுதலைக்குப் பிந்திய காலத்தில், பிரதம விவசாயக் கடன் சங்கங்களின் எண்ணிக்கையிலும், அங்கத்துவத்திலும், நடவடிக்கையிலும் ஒரு மிகத் துரிதமான விரிவாக்கம் இருந்துள்ளது. 1972ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், 320 இலட்ச உறுப்பினர்களைக் கொண்ட 1,57,454 சங்கங்களிருந்தன. நாட்டிலுள்ள மொத்தக் கிராமங்களில் ஏறக்குறைய 91.7 சதவிகிதக் கிராமங்களை அவை தழுவியிருந்தன. இந்நாட்டுக் கிராமங்களின் மொத்த எண்ணிக்கையானது 5,70,008 ஆகும்; மொத்தக் கிராம மக்கள்தொகையானது ஏறக்குறைய 4,230 இலட்சமாகும். இச் சங்கங்கள் கிராமங்களில் மொத்த எண்ணிக்கையில் 91 சதவிகிதத்தைத் தழுவியிருந்தன. சங்கங்களின் மொத்த எண்ணிக்கையில் 20,894 சங்கங்கள், அதாவது மொத்த

எண்ணிக்கையில் 13.2 சதவிகிதமுள்ள சங்கங்கள் செயலற்றுக் கிடந்தன. கடன் வாங்கிய உறுப்பினர்களின் எண்ணிக்கை 110 இலட்சமாக இருந்தது. இது மொத்த உறுப்பினர் எண்ணிக்கையில் 35.5 சதவிகிதம் மட்டுமே இருந்தது. சங்கங்களின் மொத்த எண்ணிக்கையில், 38,028 வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின் பேரிலும், 1,19,426 வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின் பேரிலும் இருந்தன. அரசினர் 31,539 சங்கங்களில் பங்காளித்துவம் கொண்டிருந்தனர், அதாவது அரசு அச் சங்கங்களில் பங்குகளை முதலீடு செய்திருந்தது. சங்கங்களின் செலுத்தப்பட்ட மூலதனம் ரூ. 224.82 கோடியாக விருந்தது. அதில், அரசு பங்கு மூலதன முதலீடு 20.98 கோடியாக விருந்தது. சங்கங்களின் காப்பிருப்புகள் ரூ. 67.39 கோடித் தொகைக் கிருந்தன. அதில், ரூ. 34.84 கோடிக்குச் சட்டப்படியான காப்பிருப்பும், ரூ. 5.36 கோடிக்குச் சிறப்பு வராக்கடன் காப்பிருப்பும், ரூ. 27.19 கோடிக்கு இதரக் காப்பிருப்புகளும் அடங்கியிருந்தன. இச் சங்கங்கள் ரூ. 74.78 கோடி யளவிற்கு வைப்புகள் பெற்றிருந்தன. அவற்றின் கடன் பெற்ற முதல் ரூ. 740.22 கோடியாக விருந்தது; அதாவது, மைய நிதி வசதி நிறுவனங்களிடமிருந்து ரூ. 694.45 கோடியாகவும், அரசினரிடமிருந்து ரூ. 10.04 கோடியாகவும், இதர ஆதாரங்களிலிருந்து ரூ. 35.73 கோடியாகவும் இருந்தன. சங்கங்களின் மொத்த நடைமுறை மூலதனம் ரூ. 1,276.16 கோடி யளவுக் கிருந்தது. 1970 ஜூன் இறுதியிலிருந்த எண்கள் அடிப்படையில், செலுத்தப்பட்ட பங்கு மூலதனமும், காப்பிருப்புகளும், நடைமுறை மூலதனத்தில் 26.1 சதவிகிதமாக விருந்தன. வைப்புகள் 6.8 சதவிகிதமாகவும், மையக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்து வாங்கிய கடன்கள் 62.5 சதவிகிதமாகவும் அமைந்திருந்தன. உறுப்பினர்களால் செலுத்தப்படவேண்டிய நிலுவைக் கடன்கள் ரூ. 858.26 கோடிக் கிருந்தன. அதில், ரூ. 696 கோடி, குறுகியகாலக் கடன்களாகவும், ரூ. 162.26 கோடி, மத்தியக்காலக் கடன்களாகவு மிருந்தன. நிலுவையிலிருந்த கடன்களில் ரூ. 376.66 கோடி தவணை கடந்த பாக்கியாகவிருந்தது. அதில், ரூ. 327.23 குறுகியகாலக் கடன்களாகவும், ரூ. 49.43 கோடி மத்தியக்காலக் கடன்களாகவு மிருந்தன. தவணை கடந்த பாக்கிகள், நிலுவைக் கடன்களில் சுமார் 40 சதவிகிதமாக விருந்தன. இலாபத்தில் வேலை செய்த சங்கங்களின் எண்ணிக்கை 94,357 ஆகவும், இலாபத் தொகை ரூ. 19.78 கோடியாகவு மிருந்தன. நட்டத்தில் வேலை செய்த சங்கங்களின் எண்ணிக்கை 48,493 ஆகவும், நட்டத் தொகை ரூ. 10.99 கோடியாகவு மிருந்தன. 14,519 சங்கங்கள் இலாபமும் நட்டமு மில்லாமல் வேலை செய்தன. இலாபத்தில் வேலை

செய்த சங்கங்களின் சதவிகிதம் 59.9 ஆகவும், நட்டத்தில் வேலை செய்த சங்கங்களின் சதவிகிதம் 30.8 ஆகவும், இலாபமும் அல்லது நட்டமுமில்லாமல் வேலை செய்த சங்கங்களின் சதவிகிதம் 9.2 ஆகவு மிருந்தன. விவசாய விளைபொருள்களை விற்பனை செய்தல், விவசாய உற்பத்தித் தேவைகளை வழங்குதல், நுகர்பொருள்களை விநியோகித்தல், விளைபொருள்களைப் பதனப்படுத்துதல் போன்ற பலநோக்கு நடவடிக்கைகளையும் இச் சங்கங்கள் மேற்கொண்டன. 2,067 சங்கங்கள் ரூ. 39.40 கோடி மதிப்பிற்கு விளைபொருள்களின் விற்பனையை மேற்கொண்டன. 61,556 சங்கங்கள் ரூ. 153.28 கோடி மதிப்பிற்கு விவசாய உற்பத்தித் தேவைகள் வழங்குவதை மேற்கொண்டன. 45,306 சங்கங்கள் ரூ. 95.91 கோடி மதிப்பிற்கு நுகர்பொருள்கள் விநியோகத்தையும், 64 சங்கங்கள் ரூ. 12.82 கோடி மதிப்பிற்குப் பொருள்கள் பதனப்படுத்துதலையும் மேற்கொண்டன. 53,299 சங்கங்கள் ஊதியம்பெறும் முழுநேரச் செயலர்களையும் 48,144 சங்கங்கள் ஊதியம்பெறும் பகுதிநேரச் செயலர்களையும் தங்கள் அன்றாட நிருவாகத்தைக் கவனிப்பதற்காக அமர்த்தியிருந்தன. கடன் வசதிச் சங்கங்கள் ஒரு குறிப்பான விரிவாக்கத்தை அடைந்திருந்தன.

**3. தமிழ்நாட்டில் பொது நிலைமை :** தமிழ்நாட்டில், இச் சங்கங்களின் முன்னேற்றப் பதிவு வியக்கத்தக்கதாக வுள்ளது. விவசாயக் கடன் சங்கங்களின் அளவைக் குறித்தும், அவைகளின் பணிகளைக் குறித்தும் கொள்கை மாறுதல்கள் அடிக்கடி ஏற்பட்டிருந்தாலும், விவசாயக் கடன் வசதியைப் பலப்படுத்துவதற்காகவும், விரிவுபடுத்துவதற்காகவும் தொடர்ச்சியான முயற்சிகள் இருந்துவந்துள்ளன. 1972 ஜூன் இறுதியில், 5,562 பிரதம விவசாயக் கடன் சங்கங்கள் இருந்தன. அவற்றில், 5,233 சிறிய அளவுக் கிராமக் கடன் சங்கங்களாகவும், 317 பெரிய அளவுச் சங்கங்கள் வகையான விவசாய வங்கிகளாகவும், 12 கிராம வங்கிகளாகவு மிருந்தன. எல்லாச் (5,562) சங்கங்களிலும் 33 இலட்ச மொத்த எண்ணிக்கையுள்ள உறுப்பினர்க ளிருந்தனர். அவை, மாநிலத்தில் 29.2 கிராம மக்கள்தொகையைக் கொண்ட எல்லா 15,735 கிராமங்களையும் தழுவியுள்ளன. சங்கங்களின் மொத்த எண்ணிக்கையில் 921 சங்கங்கள், அதாவது 16.5 சதவிகிதம் செயலற்றுக் கிடந்தன. கடன் வாங்கிய உறுப்பினர்களின் எண்ணிக்கை ஏறக்குறைய 8 இலட்சமாக, அதாவது மொத்த உறுப்பினர் எண்ணிக்கையில் 23.9 சதவிகிதம் மட்டுந்தான் இருந்தது. சங்கங்களின் மொத்த எண்ணிக்கையில் 1,318 வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின்பேரிலும், 4,181 வரையறுக்கப்

படாத பொறுப்பு அடிப்படையின் பேரிலுமிருந்தன. இச் சங்கங்களுள், 2,341-ல் அரசு பங்காளித்துவம் கொண்டிருந்தன. இச் சங்கங்களின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ. 1.76 கோடியாக விருந்தது. காப்பிருப்புகள் ரூ. 18.93 கோடிக்கிருந்தன. அதில், ரூ. 3.26 கோடிக்குச் சட்டப்படியான காப்பு நிதியும், ரூ. 0.97 கோடிக்குச் சிறப்பு வராக்கடன் காப்பிருப்பும், ரூ. 4.70 கோடிக்கு இதரக் காப்பிருப்புகளும் அடங்கியிருந்தன. இச் சங்கங்கள் ரூ. 4.8 கோடிக்கு வைப்புகளைப் பெற்றிருந்தன. அவற்றின் கடன் பெற்ற முதல் ரூ. 55.94 கோடிக்கிருந்தன. அதில், அரசினரிடமிருந்து பெற்ற தொகை ரூ. 1.13 கோடியும், மைய வங்கியிலிருந்து பெற்ற தொகை ரூ. 53.88 கோடியும், இதர ஆதாரங்களிலிருந்து பெற்ற தொகை ரூ. 0.93 கோடியும் அடங்கியிருந்தன. சங்கங்களின் மொத்த நடைமுறை மூலதனம் ரூ. 103.04 கோடி யளவிற் கிருந்தது. உறுப்பினர்கள் வாங்கியிருந்த கடன்கள் நிலுவை ரூ. 71.80 கோடியாக விருந்தது. அதில் ரூ. 60.43 கோடி குறுகியகாலக் கடன்களாகவும், ரூ. 11.378 கோடி மத்தியக் காலக் கடன்களாகவு மிருந்தன. தவணை கடந்த பாக்கிக் கடன்கள் ரூ. 20.45 கோடியாக, அதாவது, நிலுவைக் கடன்களுக்கு ஏறக்குறைய 28 சதவிகிதமாக விருந்தன. இதில் ரூ. 18.19 கோடி குறுகியகாலக் கடன்களாக விருந்தன. இலாபத்தில் வேலை செய்த சங்கங்களின் எண்ணிக்கை 3,875 ஆகவும், சம்பாதிக்கப்பட்ட இலாபத் தொகை ரூ. 1.56 கோடியாகவு மிருந்தன. நட்டத்தில் வேலை செய்த சங்கங்களின் எண்ணிக்கை 1,592 ஆகவும், மொத்த நட்டத் தொகை ரூ. 1.42 கோடியாகவு மிருந்தன. 95 சங்கங்கள் இலாபமும், நட்டமுமில்லாமல் வேலை செய்தன. இலாபத்தில் வேலை செய்த சங்கங்களின் சதவிகிதம் 69.5 ஆகவும், நட்டத்தில் வேலை செய்த சங்கங்களின் சதவிகிதம் 28.6 ஆகவும், இலாபமும் நட்டமுமில்லாமல் வேலை செய்த சங்கங்களின் சதவிகிதம் 1.8 ஆகவுமிருந்தன. சங்கங்கள் பலநோக்கு நடவடிக்கைகளையும் மேற்கொண்டன. 267 சங்கங்கள் விவசாய விளைபொருள்களின் ஈட்டின்பேரில் கடன்கள் வழங்கின; 2,345 சங்கங்கள் விவசாய உற்பத்தித் தேவைகளை வழங்கின. 1,731 சங்கங்கள் நுகர்-பொருள்கள், அதாவது ரூ. 1.50 கோடி மதிப்பில் உணவுத் தானியங்கள், ரூ. 0.44 கோடி மதிப்பிற்கு இதரப் பொருள்கள் விநியோகத்தை மேற்கொண்டன. 4,171 சங்கங்கள் ஊதியம் பெறும் முழுநேரச் செயலர்களையும், 349 சங்கங்கள் ஊதியம் பெறும் பகுதிநேர ஊழியர்களையும் தங்கள் அன்றாட வேலையைக் கவனிப்பதற்காக அமர்த்தியன.

## பிரதம விவசாயக் கடன்வசதிச் சங்கங்கள் செயற்பாட்டில் முதன்மையான கூறுகள்

**1. அலுவல் எல்லை:** சாதாரணமாக, ஒவ்வொரு பிரதம சங்கமும் உறுதியான ஒரு நிலப்பகுதி எல்லையை அல்லது பொதுவாகக் கூறப்படும் அலுவல் எல்லையைக் கொண்டிருக்க வேண்டும். அந்த எல்லைக்குள் குடியிருக்கும் நபர்கள் மட்டுந்தான் அதன் உறுப்பினர்களாக விருக்கலாம். ஒரு விவசாயக் கடன் சங்க விஷயத்தில், அதன் அலுவல் எல்லையில் குடியிருக்காமல் நிலங்களையுடைய நபர்களுங்கூட உறுப்பினராவதற்குத் தகுதியுடையவராவர். ஒரு பிரதம விவசாயக் கடன் சங்கம், பொதுவாக ஒரு கிராமத்தின்மீது அல்லது ஒரு கிராமத்திற்கு மேற்பட்ட எல்லையின்மீது செயற்படுகிறது. ஒரு சங்கத்தின் அலுவல் எல்லை எதுவாக விருக்க வேண்டும் என்ற பிரச்சினையானது, நாம் அறிந்துள்ளபடி 20 ஆண்டுகட்கு மேலாகச் சர்ச்சைக்குரிய ஒரு விஷயமாக இருந்துள்ளது. முந்திய ஓர் அத்தியாயத்தில் இது விளக்கப்பட்டுள்ளது. தற்போதைய நிலைமையானது, ஒரு சங்கத்தின் அலுவல் எல்லையின் அளவு, அதன் தன்னிறைவுத் தன்மையைப் போன்று அவ்வளவு முக்கியமானதன்று என்பதாகும். ஒரு சங்கம் மூன்று மைல்கள் தூரத்திற்குள்ளுள்ள கிராமங்களையும், சுமார் 3,000 எண்ணிக்கையுள்ள ஒரு விவசாய மக்கள் தொகையையும் தழுவலாம். தமிழ்நாட்டில், 2,000-லிருந்து 3,000 ஏக்கர் நிலங்களையும், ரூ. 2 இலட்சம் வரை நிகழக்கூடிய வருடாந்தரக் கடனளிப்பு நடவடிக்கைகளையும் தழுவும் ஓர் அலுவல் எல்லையைத் தன்னிறைவுத் தன்மைக்கான ஒரு பிரமாணமாக ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. இவ் வரம்புகள் முடிவானவையாக அல்லது மாற்ற முடியாதவையாக எடுத்துக்கொள்ளப்படக் கூடாது. மாறிக்கொண்டு வரும் பொருளாதார நிலைமைகளுக்கேற்ப அவை நெகிழ்ச்சியுள்ளவையாக இருக்கவேண்டும். அமைப்பானது, தன்னிறைவுள்ளதாகவும் அல்லது வலிமைத்திறனுள்ளதாகவு மிருப்பதையும், அதேசமயத்தில் அதன் கூட்டுறவுத் தன்மையையும், உறுப்பினர்களிடையே பரஸ்பர அறிவையும் மேற்பார்வையையும் பெறுவதற்கான தேவையையும் கருத்தில் கொள்வதை நிச்சயப்படுத்துவதே அவசியமானது.

**2. நோக்கங்கள் :** ஒரு விவசாயக் கடன் சங்கத்தின் முதன்மையான நோக்கம், உற்பத்திக்கான காரியங்களுக்காகவும் உபயோகமுள்ள காரியங்களுக்காகவும், உறுப்பினர்களுக்குக் கடன்கள் அளிப்பதற்காக உறுப்பினர்களிடமிருந்தும், மற்றவர்களிடமிருந்தும் நிதிகளைக் கடன் வாங்குதலாகும். சங்கங்களின் துணை

விதிகளில் பல்வேறு இதர நோக்கங்களும் அடங்கியுள்ளன. இவை விவசாய உற்பத்தித் தேவைகளை வழங்குதல், விவசாய விளை பொருள்களை விற்பனை செய்தல், நுகர்பொருள்களை விநியோகித்தல் போன்ற இதரத் துணையான விவசாயச் சேவைகளைப் புரிவதற்கு வகை செய்கின்றன. இடைநிகழ்ச்சியாக, அதன் நோக்கங்களில் ஒன்று, உறுப்பினர்களிடையில் சிக்கனத்தை வளர்த்து, கிராமச் சேமிப்புகளைத் திரட்டுவதாகும். பிரதம விவசாயக் கடன் சங்கம் ஓர் ஏகநோக்குச் சங்கமாக இருக்க வேண்டுமா பலநோக்குச் சங்கமாக இருக்கவேண்டுமா என்பது பற்றிய பிரச்சினை, முந்திய ஓர் அத்தியாயத்தில் விவரமாக விவாதிக்கப்பட்டுள்ளது. தற்போதைய நிலைமையானது, ஒரு விவசாயக் கடன் சங்கம் 'ஒரு விவசாயச் சேவைக் கூட்டுறவுச் சங்க'மாக இயங்கி, கடனளிப்பு மட்டுமன்றிக் கிராமப் பொருளாதார அமைப்பு முழுவதையும் மேம்படுத்தி, குடியானவர் ஒரு மேலானதும், முழுமையானதுமான வாழ்க்கையை நடத்துவதற்கு வகைசெய்யும் இதரத் துணையான விவசாயச் சேவைகளையும் மேற்கொள்ளவேண்டும் என்பது.

**3. உறுப்பாண்மை:** 18 வயதுக்கு மேற்பட்டவரும், ஒப்பந்தம் செய்துகொள்ளத் தகுதியுள்ளவரும், சங்க அலுவல் எல்லையில் குடியிருப்பவரும் அல்லது இயங்காச் சொத்துடையவருமான எந்த ஒரு நபரும், ஒரு விவசாயக் கடன் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளப்படத் தகுதி பெற்றவராவர். தமிழ்நாட்டில், விண்ணப்பத்தின் பேரில், ஒருவரை உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளுதல் சங்க நிருவாகக் குழுவின் கடமையாகும். அவசியமாகக் கருதப்பட்டால், இவ்வாறு சேர்த்துக் கொள்ளப்பட்ட ஓர் உறுப்பினர், அவர் சேர்த்துக் கொள்ளப்பட்ட தேதியிலிருந்து இரண்டு மாதங்களுக்குள், பதிவாளரின் அங்கீகாரம் பெற்று விலக்கப்படலாம். வயது வராத அல்லது சித்த சுவாதீனமில்லாத ஒரு நபருங்கூட அவருக்குச் சொந்தமான இயங்காச் சொத்தின் ஈட்டின் பேரில் கடன் வாங்குவதற்காக, அவருடைய காப்புப் பொறுப்பாளர் (Guardian) மூலம், சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளப் படலாம். அரசினரும் அல்லது சங்க அலுவல் எல்லையில் செயற்படும் மத்தியக் கூட்டுறவு வங்கியுங்கூட, சங்கத்தின் உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படுவதற்குத் தகுதியுள்ளவர்கள். 18 வயதிற்கு மேற்பட்டவரும் ஒப்பந்தம் செய்யத் தகுதியுள்ளவருமான எந்த ஒரு நபரும், அவரைச் சேர்த்துக்கொள்ளுவது சங்கத்தின் சார்பாக ஓர் உறுப்பினரால் எழுதிக் கொடுக்கப்பட வேண்டிய எந்த ஒரு பத்திரத்திலும் கூட்டுச் சேர்ந்து எழுதிக் கொடுப்பதற்கும்,

அல்லது நகை ஈட்டின் பேரில் கடன் வாங்குவதற்கும் அவசியமாக இருந்தால், ஒரு 'பெயரளவு' உறுப்பினராகச் (Nominal Member) சேர்த்துக் கொள்ளப்பட்டு, 'பி' பிரிவுப் பங்குகள் வழங்கப்படலாம்.

**4. பொறுப்பு:** சங்கங்களின் தன்னிறைவுத் தன்மையுடன் நெருங்கிய தொடர்புள்ளது அவற்றின் உறுப்பினர்கள் பொறுப்புப் பிரச்சினையாக விருக்கிறது. இருவகைப் பொறுப்பின் சாதக பாதகங்கள் விவரமாக முந்திய ஓர் அத்தியாயத்தில் விவாதிக்கப்பட்டுள்ளன. தமிழ்நாட்டில் கிராமக் கடன் சங்கத்தைப் பொறுத்தமட்டில், அவை பொதுவாக வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின் பேரில் அமைக்கப்படுகின்றன. எனினும், கீழ்க்கண்ட வகை உறுப்பினர்கள், அவர்கள் சங்கத்தில் செலுத்தியுள்ள பங்குத்தொகை வரையில் மட்டும்தான் பொறுப்புள்ளவர்களாவார்கள். (அ) வயது வராதவர்கள் அல்லது சித்த சுவாதீனமற்றவர்கள், (ஆ) பெயரளவு உறுப்பினர்கள், (இ) அரசினர்.

விவசாய வங்கிகளும், கிராம வங்கிகளும் வரையறுக்கப்பட்ட பொறுப்பு அல்லது உத்தரவாதப் பொறுப்பு அடிப்படையின் பேரில் அமைக்கப்படுகின்றன. விவசாய வங்கிகளின் உறுப்பினர்களுக்குள்ள பொறுப்பு, அவர்கள் செலுத்தியுள்ள பங்கு மூலதனத்தைப்போல் 10 மடங்காகும். கிராம வங்கிகளின் உறுப்பினர்களுக்குள்ள பொறுப்பு அவர்கள் செலுத்தியுள்ள பங்கு மூலதனத்தைப்போல் 5 மடங்காகும். சாதாரண வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையைக் கொண்ட ஒரு சங்க விஷயத்தில், சங்கத்தின் கடனைக் குறித்து உறுப்பினர்களுக்குள்ள பொறுப்பு அவர்கள் செலுத்தியுள்ள பங்கு மூலதனத்திற்கு வரையறுக்கப்படும். தமிழ்நாட்டில் பிரதம கடன் சங்கங்களை வரையறுக்கப்பட்ட பொறுப்பு அல்லது வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையின் பேரில் பதிவு செய்யலாம். முன்னரே குறிக்கப்பட்டபடி, நாட்டில் பொதுவான கருத்துப் போக்கு வரையறுக்கப்பட்ட பொறுப்பிற்குச் சாதகமாகவிருக்கிறது. தமிழ்நாட்டில் அமைக்கப்பட்டுவரும் தன்னிறைவுள்ள சங்கங்களும் அல்லது தன்னிறைவு அடிப்படையில் சீரமைக்கப்படும் சங்கமும் வரையறுக்கப்படாத பொறுப்பு அடிப்படையைக் கொண்டுள்ளன.

**5. நிதிகள்:** பிரதம விவசாயக் கடன் சங்கங்களின் நிதிகள் (i) பங்கு மூலதனத்தையும், (ii) வைப்புகளையும், (iii) கூட்

டுறவு மத்திய வங்கிகளிடமிருந்தும், அரசினர் போன்ற மற்றவர் களிடமிருந்தும் வாங்கும் கடன்களையும், (vi) சட்டப்படியான காப்பிருப்பையும், வராக்கடன் காப்பிருப்பு, சிறப்பு வராக்கடன் காப்புநிதி போன்ற இதரக் காப்பு இருப்புகளையும் கொண்டுள் ளன. மைய வங்கிகளிலிருந்து பெறும் கடன்கள் வாயிலாகச் சங்கங்கள் தங்கள் நடைமுறை மூலதனத்தின் ஒரு பெரும்பகுதி யைப் பெறுகின்றன.

**(i) பங்கு மூலதனம்:** ஒரு பிரதம சங்கத்திற்குப் பங்கு மூலதனமானது, மூன்று கண்ணோட்டங்களிலிருந்து முக்கியமாக விருக்கின்றது. (அ) அது தன் உறுப்பினர்களிடையே சிக்கனப் பழக்கத்தை வளர்க்கிறது, (ஆ) அது சங்கத்திற்குச் சொந்த மான நிதி ஆதாரங்களுக்கு உதவி புரிகிறது. தன் அலுவலில் உபயோகிக்கப்படுவதற்கும், குறிப்பாக, தவணை கடந்த பாக்கிகளை உறிஞ்சுவதற்கும் மற்றும், மைய வங்கிகளிலும் விற்பனைச் சங்கங் களிலும், சங்கம் பங்குகளை யெடுப்பதற்கு வசதி செய்வதற்குங்கூட இச் சொந்தமான ஆதாரங்கள் உபயோகப்படுத்தப்படக்கூடும், (இ) அது சங்கத்தின் கடன் வாங்கும் சக்தியை அதிகரிப்பதற்கு உதவுகிறது.

பங்கு மூலதனம் சங்கத்தின் சொந்தமான நிதியாதாரங் களில் ஒரு பெரும் பகுதியாக அமைந்துள்ளது. அது உறுப்பினர் களால் வாங்கப்பட்ட கடன்களுக்குத் தொடர்புடையது. தமிழ் நாட்டில், கடன் தொகைக்குப் பங்கு மூலதனத்தின் விகிதம் பொதுவாக 10 சதவீதமாக வுள்ளது. 20 சதவிகிதத்தை யடை யும் வரை இந்த விகிதத்தைப் படிப்படியாக அதிகப்படுத்துவதற் காக ஒரு முயற்சி இருந்து வந்துள்ளது. இது விரும்பத்தக்க ஒரு நடவடிக்கை யென்றாலும், சில சந்தர்ப்பங்களில் சங்கடத்தை விளை விக்கலாம். ஆகையால், இது பொதுவாக வற்புறுத்தப்படுகிற தில்லை.

அநேக சங்கங்களில் உறுப்பினர்கள் பாக்கிக்காகத் தங்கள் பங்கு மூலதனத்தை முழுமையாக அல்லது பகுதியாக ஈடு செய்வது பொதுவான ஒரு வழக்கமாக வுள்ளது. இச் செயல்முறை சரியான தன்று. உறுப்பினர்களுள் பலர் அதே பயிர் செய்யும் நிலங்களை யும், அதேமாதிரியான சாகுபடி வகையையும் தொடர்ந்து வைத்துக் கொண்டிருப்பர். அவர்களின் கடன் தேவையளவு ஆண்டுக்காண்டு ஏறக்குறைய ஒரேமாதிரியாகத்தான் இருக்கும். எனவே, பங்கு மூலதனத்தைக் கடனுக்காக ஈடு செய்து, பின்னர் ஒரு சில மாதங்களுக்குப் பிறகு அதே பங்கு மூலதனத்தை மீண்டும்

வசூலிப்பது அநாவசியமான கணக்குப் பதிவை அதிகமாக விளைவிக்கின்றது. பங்கு மூலதனத்தில் ஏற்படும் ஒரு குறைவானது, மைய வங்கிகளிலிருந்து வாங்கும் தம் கடனுக்காகச் சங்கத்தின் வசமிருக்கின்ற ஓர் ஆதாரத்தைக் குறைக்கும். ஆகையால், கடன் பாக்கிகளுக்காகப் பங்கு மூலதனத்தை ஈடு செய்யும் நடைமுறையானது, ஒரு நபர், மரணத்தாலும் அல்லது சங்க அலுவல் எல்லைக்கு வெளியே குடிபோகும் காரணத்தாலும் அல்லது உறுப்பினர் பதவியிலிருந்து விலக்கப்படும் காரணத்தாலும், சங்க உறுப்பினர் பதவியிலிருந்து நிறுத்தப்படுகின்ற சூழ்நிலைகளில் தவிர அனுமதிக்கப்படக்கூடாது. துணை விதிகளில் நிருணயிக்கப்பட்ட காலம் முடிவடைகிற வரையில், உறுப்பினர்கள், சங்கத்திலிருந்து தம் விருப்பம் போல் விலகுவதன்மூலம், பங்கு மூலதனத்தைத் திரும்பப் பெற்றுக் கொள்வதற்குக்கூட அனுமதிக்கப்படக்கூடாது. பொதுவாகச் சங்கங்கள் இக் காரியத்திற்காக உறுப்பினராகச் சேர்ந்த தேதியிலிருந்து மூன்று அல்லது ஐந்து ஆண்டுகளைக் கொண்ட ஒரு கால வரம்பை நிருணயிக்கின்றன.

1960ஆம் ஆண்டிலிருந்து, அரசினர் பிரதம கடன் சங்கத்தின் பங்கு மூலதனத்தில், ஒரு சிறிய சங்கத்தில் உயர்ந்த பட்சம் ரூ. 5,000-க்குட்பட்டும், விவசாய வங்கிகள் போன்ற பெரிய அளவுச் சங்கங்களில் ரூ. 10,000-க்குட்பட்டும், சரிசம அடிப்படையில் பங்கு கொண்டு வந்திருக்கின்றனர். உறுப்பினர் பதவியைக் குறித்த அரசு பொறுப்பு, அதனுல் உண்மையாகவே செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்திற்கு மட்டும் வரையறுக்கப்படவேண்டும் என்றுங்கூட முடிவு செய்யப்பட்டது. பின்னர், ரிசர்வ் வங்கி, நான்காவது திட்டத்தின்போது, மாநில அரசு ஒரு தன்னிறைவுள்ள அல்லது தன்னிறைவு வாய்ப்புள்ள ஒவ்வொரு சங்கத்திற்கும், சரிசம உதவித்தொகையை வற்புறுத்தாமல், ரூ. 10,000 வரைக்கும் பங்கு மூலதன உதவித்தொகையளிக்கலாம் என்று முடிவு செய்தது. ஆனுல், இவ்வாறு செலுத்தப்படும் அரசு பங்கு மூலதன உதவித்தொகையானது, சங்கத்தின் தவணை கடந்த பாக்கிகள் அதன் நிலுவைக் கடன்களின் 30 சதவிகிதத்திற்கு மேற்படாமலும், சங்கத்தின் தணிக்கைப் பாகுபாடு 'ஏ' 'பி' அல்லது 'சி' ஆகவும், கடன்களைப் பங்கு மூலதனத்திற்குப் படிப்படியாக 5:1 தரத்தில் இணைப்பதற்காகத் தன் துணை விதிகள் சரத்துக் கொண்டவையாகவும் சரத்திருக்க வேண்டுமென்ற நிபந்தனைகளுக் குட்பட்டது. 1970ஆம் ஆண்டில், அரசினரின் பங்கு கொள்ளுதல் ரூ. 10,000-க்கு மேற்படலாம் என்றும், ஆனுல் சங்கத்தின் தவணை கடந்த பாக்கிகள் 5 சதவிகிதத்திற்கு மேற்படாமலிருக்க வேண்டுமென்றும், உற்பத்தியல்லாத

காரியங்களுக்காக அதன் கடனளிப்பு 5 சதவிகிதத்திற்கு மேற்படாமலிருக்க வேண்டுமென்றும், அரசு பங்குகள் சங்கத்தின் மொத்தப் பங்குகளில் 60 சதவிகிதத்திற்கு மேற்படாமலிருக்க வேண்டுமென்றும் ரிசர்வ் வங்கி முடிவு செய்தது. கடன்களுடன் பங்கு மூலதனத்தின் கட்டாய இணைப்பும் 1:10-க்குக் குறைக்கப் பட்டது.

பிரதம கூட்டுறவுச் சங்கங்களில் அரசு பங்குகொள்ளுதல் செய்யும் முறையானது முந்திய ஓர் அத்தியாயத்தில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

30-6-70ஆம் நாளன்று, ஒரு பிரதம கூட்டுறவுச் சங்கத்தின் சராசரிப் பங்கு மூலதனம் (அனைத்திந்திய) ரூ. 11,600 ஆகவும் ஓர் உறுப்பினரின் சராசரிப் பங்கு மூலதனம் ரூ. 63 ஆகவும் இருந்தது. தமிழ்நாட்டில் ஒரு சங்கத்தின் சராசரி ரூ. 25,620 ஆகவும், ஓர் உறுப்பினரின் சராசரி ரூ. 51 ஆகவுமிருந்தது.

**(ii) வைப்புகள்:** சங்கங்கள் உறுப்பினர்களிடமிருந்தும் உறுப்பினரல்லாதவர்களிடமிருந்தும் வைப்புகளை ஏற்கின்றன. தவணை வைப்புகள், தொடர் (மாதாந்தர) வைப்புகள், சேமிப்பு வைப்புகள் போன்ற பல்வேறு வகையான வைப்புகளைச் சங்கங்கள் ஏற்றுக்கொள்வதற்கு அனுமதிக்கப்பட்டுள்ளன. கிராமக் கடன் சங்கங்களால் நடப்புக் கணக்குகள் ஏற்றுக்கொள்ளப்படுகிறதில்லை. உயர்ந்த பட்ச ஊக்கத்தையளித்து வைப்புகள் வாயிலாகக் கிராமச் சமுதாயத்தின் சேமிப்புகளைச் சங்கங்கள் திரட்ட வேண்டுவது மிக்க அவசியமாகவும் விரும்பத்தக்கதாகவு முள்ளது. சங்கங்கள் தவணை வைப்புகள்மீது கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களை வழங்கலாம். 30-6-70ஆம் நாளன்று, ஒரு பிரதம கடன் சங்கத்தால் வாங்கப்பட்டிருந்த வைப்புகளின் அனைத்திந்தியச் சராசரித் தொகை ரூ. 3,852 ஆகவும், ஒவ்வோர் உறுப்பினருடைய சராசரி வைப்புகள் ரூ. 21.1 ஆகவு மிருந்தன. தமிழ்நாட்டில், ஒவ்வொரு சங்கத்தின் சராசரி வைப்புத் தொகை ரூ. 5,954 ஆகவும், ஒவ்வோர் உறுப்பினரின் சராசரி வைப்புத் தொகை ரூ. 12 ஆகவு மிருந்தன. வைப்புகளைப் பலப்படுத்துவதற்கான அவசியம் பெரிதாக இருக்கிறது.

உறுப்பினர்களின் சில விதக் கட்டாயச் சேமிப்பு, சங்கங்களின் நிதியாதாரங்களை அபிவிருத்தி செய்வதற்கு ஒரு வழியாகும். தமிழ்நாட்டில், சிக்கன வைப்பு முறை அமலிலிருந்துள்ளது. இதன்

படி, உறுப்பினர்களால் வாங்கப்படும் கடனில் 2 சதவிகிதம் சிக்கன வைப்பாக வசூலிக்கப்பட்டு அவ் வசூல்கள் கடன்களி லிருந்து பட்டுவாடாச் சமயத்தில் பிடிப்பதன் மூலம் செய்யப் பட்டிருந்தன. எந்த உறுப்பினரும், தம் உறுப்பினர் காலத்தின் போது, தம் சிக்கன வைப்புகளின் எந்தப் பகுதியையும் திரும்பப் பெறுவதற்கு அனுமதிக்கப்படவில்லை. இம் முறையானது முற்றி லும் வரவேற்கப்படவில்லை. சிக்கன வைப்புகள், தற்போதுள்ள படி, வழங்கப்பட்ட கடன்களில் 2 சதவிகிதம் வசூலிக்கப்பட வேண்டுமென்றிருந்தாலும் வசூலித்தல், கடன்களிலிருந்து பிடிப்ப தன்மூலம் அல்லாமல் கடன்கள் திருப்பிச் செலுத்தப்படும் சமயத் திலிருக்கவேண்டும். ஓர் உறுப்பினரால் செய்யப்படும் இருசால் களை, முதலாவதாக, சிக்கன நிதிக்காகவும், எச்சத்தை இதரப் பாக்கிகளுக்காகவும் வரவு வைப்பதற்கான ஒரு சரத்து, சங்கத் துணைவிதிகளில் செய்யப்படவேண்டுமென்றும் யோசனை கூறப் பட்டது. சிக்கன வைப்பு மைய வங்கியில் முதலீடு செய்யப்பட வேண்டும். மத்திய வங்கியும் அதற்கு ஒரு நியாயமான வட்டியை அனுமதிக்க வேண்டும். சங்கம், உறுப்பினர்களுக்கு அதே வட்டி விகிதத்தைக் கொடுக்கவேண்டும். வட்டியானது, உறுப்பினரின் பாக்கிகளுக்காக ஈடு செய்யப்படாமல் ரொக்கத்தில் செலுத்தப் படவேண்டும். 3 ஆண்டுகளுக்கொருமுறை, தாம் செலுத்தி யிருக்கும் சிக்கன நிதியில் 50 சதவிகிதத்திற்கு மேற்படாமல் திரும்பப் பெறுவதற்கு ஓர் உறுப்பினர் உரிமையுள்ளவராக இருக்க வேண்டும். மற்றும், ஓர் உறுப்பினரின் சிக்கன நிதி அவர் காப்பீட்டுக் கட்டணத்தைச் செலுத்துவதற்காகவுங்கூடப் பயன் படுத்தப்படலாம். மேற்கூறப்பட்ட யோசனை அமல் செய்யப் பட்டால், சங்கத்தின் நிதியாதாரங்களை வளர்ப்பதற்கும், நாள டைவில் உறுப்பினர்களுக்கு அனுகூலம் செய்வதற்கும் பெரிதும் உதவும்.

**(iii) மைய வங்கியிடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் கடன் பெறுதல்:** சங்கங்கள் பிரதானமாக உயர்நிலை நிதி நிறு வனங்களிலிருந்து கடன் வாங்குகின்றன. 1970ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் அத்தகைய கடன் வாங்குதல், சங்கங்களின் மொத்தக் கடன் வாங்குதலில் 93.2 சதவிகிதமாக அமைந்திருந் தது. சங்கங்கள் நேரடியாக மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கி யிடமிருந்து நிதிகளைப் பெறுகின்றன. மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகள், முறையே மாநிலக் கூட்டுறவு வங்கியிட மிருந்து கடன் வாங்குகின்றன. விவசாயக் கடன் சங்கங்களுக்கு நிதி வழங்குவதற்காக மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு ரிசர்வ் வங்கி தேவையான நிதியுதவியை வழங்குகிறது. அரசிடமிருந்

தும், மற்றவர்களிடமிருந்தும் வாங்கப்படும் கடன்கள், ஒப்பிடும் வகையில் சிறியதாக இருக்கின்றன.

**(iv) சட்டப்படியான காப்பிருப்பும் இதரக் காப்பிருப்புகளும்:** பிரதம விவசாயக் கடன் சங்கங்களின் நடைமுறை மூல தனத்திற்கு, மத்தியக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்து பெற்றிருந்த கடன் தொகைகள், சங்கத்தின் சொந்த நிதிகள், வைப்புகள் ஆகியவற்றின் சதவிகிதத்தைக் கீழ்க்காணும் அட்டவணை காண்பிக்கும்.

**நிதிகள் பெறப்படும் ஆதாரங்கள்**

| முடிவடையும் ஆண்டு | நடைமுறை மூலதனத்திற்குள்ள சதவிகிதம் | | |
|---|---|---|---|
| | செலுத்தப் பட்ட பங்கு மூலதனமும் காப்பிருப்புகளும் | வைப்புகள் | மத்திய வங்கி களிடமிருந்து வாங்கப் பட்ட கடன்கள் |
| ஜூன், 1968 | 26.8 | 6.7 | 62.4 |
| ஜூன், 1969 | 26.5 | 7.0 | 62.8 |
| ஜூன், 1970 | 26.1 | 6.8 | 62.5 |
| ஜூன், 1972 | 22.1 | 5.8 | 55.5 |

**v. பிரதம கடன் சங்கங்களின் கடன் வாங்கும் உச்ச அளவு:** கடன் வாங்கும் உச்ச அளவு வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்களுக்காகப் பொதுவாக அவற்றின் சொந்த நிதிகளைப் போல 8 மடங்காகவும், வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்களுக்காக, உறுப்பினர்களின் நிகர ஆஸ்திகளின் மதிப்பில் 1/8 பாகமாகவும் நிருணயிக்கப்பட்டுள்ளன. இவ் வரம்புகள், சாதாரணமாகப் போதுமானவையாக விருந்தாலும் அவை வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்கங்கள் விஷயத்தில், சொந்த நிதிக்கு 10-லிருந்து 12 மடங்குக்கும், வரையறுக்கப்படாத பொறுப்புச் சங்கங்கள் விஷயத்தில், உறுப்பினர்களின் நிகர ஆஸ்திகள் மதிப்பில் 1/6-க்கும் உயர்த்தப்படலாம்.

தமிழ்நாட்டில், ஒரு வரையறுக்கப்படாத பொறுப்பு விவசாயக் கடன் சங்கத்தின் கடன் வாங்கும் உச்ச அளவானது,

மாற்ற முடியாத ஒரு முறையில் நிருணயிக்கப்படுவது வழக்கமாக இருந்தது; ஆனால், அது உறுப்பினர்களின் நிகர ஆஸ்திகளில் 1/8 ஆகக் கணக்கிடப்பட்டது. உறுப்பினர்களின் எண்ணிக்கை யும் நிகர ஆஸ்திகளும் வேறுபடும் ஒவ்வொரு சமயத்திலும், துணை விதிகள் திருத்தம் செய்யப்படவேண்டி யிருந்தன. மற்றும், இந்த விதிமுறை கால தாமதத்தை விளைவித்தது. ஆகையால், வரை யறுக்கப்படாத பொறுப்புக் கடன் சங்கங்களின் கடன் வாங்கும் உச்ச அளவு, துணைவிதிகள் அடிக்கடி திருத்தப்படுவதற்கான தேவையைத் தவிர்த்து, உறுப்பினர்களின் நிகர ஆஸ்திகளில் 1/8-க்கு நிருணயிக்கப்படுகிறது.

சிறப்புச் சந்தர்ப்பங்களில், பிரதம கடன் வசதிச் சங்கங் களின் கடன் வாங்கும் உச்ச அளவு உறுப்பினர்களின் நிகர ஆஸ்திகளில் 1/5 வரைக்கும் தளர்த்தப்படுவதற்கு, அரசு அனுமதித் துள்ளது. உதாரணமாக, தீவிர விவசாய வளர்ச்சித் திட்டப் பகுதிகளிலுள்ள சங்கங்கள் விஷயத்தில் இவ்வாறு அனுமதிக்கப் பட்டிருக்கின்றது. வரையறுக்கப்பட்ட பொறுப்புச் சங்க விஷயத்தில் அதன் கடன் வாங்கும் உச்ச அளவு பொதுவாக அதன் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம், காப்பிருப்பு ஆகியவைகளின் கூட்டுத் தொகையைப்போல் 10 மடங்குக்கு நிருணயிக்கப்பட் டுள்ளது. விவசாய வங்கிகள் விஷயத்தில் இதுவே வரம்பாக வுள்ளது.

**6. உறுப்பினர்களுக்குக் கடன்:** பிரதம கடன் சங்கங்களின் நிதிகள், தம் முதற் கடமையான தம் உறுப்பினர்களுக்குக் கடன் வழங்குவதற்காக முக்கியமாகப் பயன்படுத்தப்படுகின்றன. பொதுவாக, பின்வரும் நிபந்தனைகளுக்குட்பட்டு, ஓர் உறுப்பினர் கடன் வழங்கப்படுகிறார். (அ) ஓர் உறுப்பினர் தம் கடனுக்கு விதிக்கப்பட்ட விகிதத்தில் பங்குகளைச் செலுத்தியிருக்க வேண்டும், (ஆ) அவர் ஒரு தவணை கடந்த பாக்கிதாரராக இல்லாமலிருக்க வேண்டும், (இ) ஒரு கடன் பத்திரத்தை அவர் எழுதிக் கொடுக்க வேண்டும், (ஈ) அவர் தம் விளைபொருள்களைக் கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் மூலம் விற்பனை செய்வதற்கு எழுத்தில் ஒப்புக்கொள்ள வேண்டும். பெரும்பாலும், உற்பத்திக்கான காரியத்தைக் காட்டிலும் நிலச் சொத்தைத்தான் கடனளிப்பானது பின்பற்றி வந்துள்ளது. இந் நடைமுறை, விவசாய உற்பத்தியின் மீது ஒரு பாதகமான விளைவைக் கொண்டுள்ளது. வெவ்வேறு மாநிலங்களில் மேற்கொள்ளப்பட்ட பல்வேறு நிலச் சீர்திருத்த நடவடிக்கைகள் எக் காரணமான வெளியேற்றத்திலிருந்தும் குத்த கைச் சாகுபடியாளர்களுக்குப் பாதுகாப்பை வழங்கி, அவர்கள்

தங்களால் பயிரிடப்பட்ட பயிர்களின் அதிகமான ஒரு பங்கைப் பெறுவதற்கு வகைசெய்துள்ளன. அவர்களின் அந்தஸ்தும், பொருளாதார நிலைமையும் கட்டாயமாக மேம்பாடடையுமாகை யால், சாகுபடி செய்யும் இவ் வகையான உறுப்பினர்களுங்கூட, அவர்கள், நாணய முள்ளவர்களாகவும், தேவைப்படுமளவிற்குத் திருப்பிச் செலுத்தும் சக்தியுடையவர்களாகவு மிருந்தால், கூட்டுற வுச் சங்கங்கள், கடன்கள் அளிக்க வேண்டுவது அவசியமாகும். பிணைதாரர்கள் (Sureties) சொந்தமான நிலமுடையவர்களாக விருக்கவேண்டியது அவசியமில்லை. இரண்டாவது திட்டக் காலத் தின் போது, விவசாயக் கடன் சங்கங்களில் கடனளிப்பிற்காகக் கொடுக்கப்பட்ட வலியுறுத்தல், 'நபரின் கடன் தகுதித் தன்மை யிலிருந்து', 'காரியத்தின் கடன் தகுதித் தன்மைக்கு' மாற்றப் பட்டது. இம் மாற்றமானது, 'பயிர்க்கடன் முறை'யின் (Crop Loan System) தொடக்கமாக அமைந்தது என்று கூறலாம்.

### (i) குறுகிய காலக் கடன்கள்

**(அ) பயிர்க்கடன் முறை:** பயிர்களை விளைவிப்பதற்காக, உறுப்பினர்—குடியானவர்களுக்கு அவர்களின் உற்பத்தித் தேவைகளின் அடிப்படையில், கடன் சங்கங்களால் கடன்கள் அளிக்கப்பட்டு அவ்வாறு விளைவிக்கப்பட்ட பயிர்களின் விற்பனைத் தொகைகளிலிருந்து கடன்கள் திரும்ப வசூல் செய்யப்படுகின்ற ஒரு கடன் முறை என்று, பயிர்க்கடன் முறையை விளக்கம் கூறலாம். சாகுபடி செய்யும் குடும்பங்களில் தேவைப்படும் கடன் தொகை, அவர்களால் வரப்போகும் பயிர்ப் பருவத்தில் பயிரிடப்படும் வெவ்வேறு பயிர்களைக் குறித்த உற்பத்தித் தேவைகளைப் பொறுத்து நிச்சயிக்கப்பட வேண்டு மென்றும், அவர்களின் திருப்பிச் செலுத்தும் சக்திக்குட்பட்டுத் தனி நபர்க் கடன் வரம்புகள் நிருணயிக்கப்பட வேண்டு மென்றும், இக் கடன் முறை எதிர்நோக்குகின்றது. உற்பத்தி நோக்குக் கடனை வழங்கும் இம் முறையானது, 'பயிர்க் கடன் முறை' என்று எல்லோராலும் வழங்கப்படுகிறது. கூட்டுறவுக் கடன் பற்றிய குழு (1960), பயிர்க்கடன் முறை யானது, நாட்டில் எல்லாப் பாகங்களிலும் புகுத்தப்படவேண்டு மென்று யோசனை கூறினது. ரிசர்வ் வங்கியின் அறிவுரையின் பேரில், ஏறக்குறைய எல்லா மாநிலங்களும் பயிர்க்கடன் முறையை இப்பொழுது மேற்கொண்டுள்ளன.

**(ஆ) பயிர்க்கடன் முறையின் கூறுகள் :** பயிர்களை விளை விக்கின்ற சாகுபடியாளர்களுக்குப் போதுமானதும், குறித்த

காலத்திலானதுமான கடனை வழங்குவதும், எந்தக் காரியத்திற்காகக் கடன்கள் வழங்கப்பட்டனவோ அந்தக் காரியத்திற்காக அவைகள் உபயோகப்படுத்தப்படுவதை நிச்சயப்படுத்தவும், விளைபொருள்கள் விற்பனை செய்யப்பட்ட பிறகு தாமதமில்லாமல் கடனை வசூல் செய்வதும் இம் முறையின் நோக்கமாகவுள்ளது. இந் நோக்கத்தை அடையும்பொருட்டுத் தக்க நடைமுறை உபாயங்கள் வகுக்கப்பட்டுள்ளன. பயிர்க்கடன் என்ற பொதுப் பெயரின் முக்கியத்துவமானது, கடனுக்கு ஓர் ஆதாரமாக நிலத்தைக் காட்டிலும் பயிரின்மீது வலியுறுத்தல் வைப்பதில் அடங்கியுள்ளது. அது ஆஸ்தி மீக்கோள் தரத்திலிருந்து உற்பத்தி மீக்கோள் தரத்திற்கு ஒரு மாற்றம் என்று பொருள்படுகிறது. இம் மாற்றத்தின் விளைவாக, குத்தகைப் பயிரிடுபவர்களுங்கூடக் கடன் பெறுவதற்குத் தகுதிபெற்றவர்க ளாகின்றனர்.

(ii) ஏக்கர் ஒன்றுக்குப் பல்வேறு பயிர்களுக்குரிய செலவு விகிதங்களுக்கு ஏற்பக் கடனளவு. சாகுபடித் தேவைகளுக்குத் தொடர்பு கொண்டுள்ளது. எனவே, உற்பத்திக் காரியம் வற்புறுத்தப்படுகிறது.

(iii) கடன் தொகை ரொக்கத்திலும், பொருளிலும் பட்டுவாடாச் செய்யப்படுகிறது. கடனின் ஒரு பெரும் பகுதியானது, மேம்படுத்தப்பட்ட விதைகள், இரசாயன உரங்கள், பூச்சிகொல்லிகள் போன்ற சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் பொருள்கள் வடிவத்தில் வழங்கப்படவேண்டும். இவ் வேற்பாடு, கடன்கள் சரியாக உபயோகப்படுத்துவதை நிச்சயப்படுத்துகின்றது.

(iv) கடன் பட்டுவாடா பருவ காலத்தை அனுசரித்து மேற்கொள்ளப்படுகிறது; அதாவது, தேவைகள் எழும் அவ்வப்போது கடன் தொகை தவணைகளில் பட்டுவாடாச் செய்யப்படவேண்டும். கடன்கள் சரியாக உபயோகப்படுத்தப்படுவதை உறுதிப்படுத்துவதற்கு இது மற்றோர் உபாயமாக வுள்ளது.

(v) கடன் திருப்பிச் செலுத்தப்படுவதற்குரிய தேதியானது, சம்பந்தப்பட்ட பயிரின் அறுவடைக் காலத்தைக் குறித்து நிர்ணயிக்கப்படுகிறது. கடன் வாங்கினவர் தம் விளைபொருள்களை விற்பனை செய்த பிறகு கடனைத் திருப்பிச் செலுத்துவதற்கு வசதி செய்யும் வகையில், இந்தத் தேதி நிர்ணயிக்கப்படுகிறது. எனவே, கடன் திருப்பிச் செலுத்தப்படவேண்டிய தேதிக்கும், பயிர்கள் விற்பனை செய்யப்படும் தேதிக்குமிடையே ஓர் உறவு நிறுவப்படுகிறது.

(vi) விற்பனையுடன் கடன் இணைக்கப்பட வேண்டியுள்ளது. கடன் வாங்கியவர் தம் விளைபொருள்களை மேலான விலைக்கு விற்பனை செய்ய வகைசெய்வதற்கும், அவருக்கு அளிக்கப்பட்ட கடன் எளிய முறையில் வசூல் செய்யப்படுவதை வசதி செய்வதற்கும், அவர் தம் விளைபொருள்களைத் தம்முடைய கடன் சங்கத்துடன் இணைக்கப்பட்ட விற்பனைச் சங்கத்தின்மூலம் விற்பதற்குக் கேட்டுக்கொள்ளப் படுகிறார். இந்த இணைப்பு எங்குச் சாத்தியப் படுகிறதோ அங்குப் பயிர்க்கடன் முறை நன்கு செயல்படும்.

## (இ) பயிர்க்கடன் முறையின் உள்ளுறைப் பொருள்

(i) பயிர்க்கடன் முறையில், ஒவ்வோர் உறுப்பினர்-சாகுபடியாளரின் கடன் தேவைகளைப் பற்றிய முழுமையான ஒரு பகுத்தாராய்தல் அடங்கியுள்ளது. ஒவ்வோர் உறுப்பினர் வைத்திருக்கும் நிலத்தைக் குறித்து முழுமையானதும், மிகவும் கடைசியானதுமான விவரங்களையும், அவர் பயிரிடும் ரகம், அவருடைய உற்பத்தித் தேவைகள், அவருடைய திருப்பிச் செலுத்தும் சக்தி ஆகியவை பற்றிய விவரங்களையும், கடன் சங்கம் பெற்றிருக்க வேண்டும். இவ் விவரங்களனைத்தும் சரியான கடனளிப்புச் செய்தலுக்காகத் தேவைப்படுகின்றன.

(ii) பயிர்களுக்குரிய கடன் விகிதங்கள், ஒரு மெய்மையானதும், யுத்தமானதுமான அடிப்படையில் நிர்ணயிக்கப்பட்டு, நிர்ணயிக்கப்பட்ட விகிதங்கள்படி போதுமான கடன் வழங்கும் பொருட்டுப் போதுமான நிதியாதாரங்கள் திரட்டப்படவேண்டும்.

(iii) கடன் வாங்குபவரின் திருப்பிச் செலுத்தும் சக்தியை மதிப்பீடு செய்வதில், அவருடைய வரவு செலவைப் பற்றிய ஒரு விவரமான கணக்கெடுத்தல் ஈடுபட்டுள்ளது. அக் காரியத்திற்காக ஒவ்வொரு சாகுபடியாளரின் வரவு செலவு பற்றிய போதுமானதும், நம்பத்தகுந்ததுமான விவரங்களைச் சேகரிக்கவும், சாகுபடியாளரின் வரவு செலவைக் குறித்து அவருடைய திருப்பிச் செலுத்தும் சக்தியை மதிப்பீடு செய்வதற்கான ஒரு நியாயமான வழிமுறையை வகுக்கவும் அவசியப்படுகிறது. இதில் ஏதாவது தவறு ஏற்பட்டால், ஒரு குறிப்பிட்ட வகைச் சாகுபடியாளர்களுக்குச் சாதகமாக வேற்றுமையைக் காட்டுவதற்கு வழி ஏற்படும்.

(iv) தன் உறுப்பினரின் உற்பத்தித் தேவைகளனைத்தையும், அதாவது, மேம்படுத்தப்பட்ட அல்லது உயர்விளைச்சல் கொடுக்கிற விதைகள், இரசாயன உரங்கள், கலவை உரங்கள், பூச்சி

கொல்லிகள் முதலியவற்றைக் குறைந்தபட்ச விலையில் கொள் முதல் செய்து, அவற்றைத் தக்க சமயத்தில் கடனின் பொருள்-பகுதியாக வழங்குவதற்குக் கடன் சங்கம் ஆற்றல் பெற்றிருக்க வேண்டும். இத் தேவைகள் பல்வேறு இடங்களில் அமைக்கப் பட்ட பல்வேறு அமைப்புகளின் மூலம் வழங்குவதற்குப் பதிலாகக் கடன் சங்கத்திலேயே கிடைக்குமாறு செய்தல் மேலானதாக இருக்கும்.

(v) கடனை விற்பனையுடன் இணைக்கும்பொருட்டும், கடனை விளைபொருள்களின் விற்பனைத் தொகையிலிருந்து வசூல் செய்யும் பொருட்டும், ஒரு திறமையானதும், சரியானதுமான கூட்டுறவு விற்பனையமைப்பு இருக்க வேண்டும். விற்பனைச் சங்கம் போது மான அளவுக்குப் பலமாகவும், திறனுள்ளதாகவுமிருந்து, சாகுபடி யாளர்களைத் தங்கள் விளைபொருள்களை அதன்மூலம் விற்பனை செய்வதற்குத் தூண்டி, ஈர்த்தாலொழிய விற்பனையுடன் கட னிணைப்புச் சாத்தியப்படாது.

(vi) பயிர்க்கடன் முறையைச் சரியாக அமல்படுத்து வதற்கு, நிதிநிறுவனங்களின் சிப்பந்திகளைப் பெருமளவு விரிவு படுத்தவும், மேம்படுத்தவும் தேவைப்படுகிறது.

(vii) திட்டமிட்டபடி, காரியங்கள் நடைபெறுவிட்டால், முறையில் பெருமளவு மாற்றம் செய்யத் தேவைப்படும். ஏனென் றால், நீர் வசதியில் எதிர்பாராத திருப்பம், மழை பெய்தல், விலைவாசி ஆகியவற்றின் விளைவாக, உண்மையாக விளைவிக்கப் பட்ட பயிர்களும், அவற்றின் நிலப் பரப்பளவும் மூலத் திட்டத்தி லிருந்து மாறுபடலாம். மாறுதல் செய்யப்பட்ட உண்மையான பயிர் ரகம், நிலப் பரப்பளவு ஆகியவற்றிற்கேற்ப, சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் பொருள்கள் வழங்கப்பட வேண்டும்.

### (ஈ) பயிர்க்கடன் முறையின் செயல் வரம்புகள்

பயிர்க்கடன் முறையானது ஒரு சீரிய கடன் முறையாக விருப்பினும், அது முற்றிலும் குறைபாடுகளற்றதன்று. அது தனக்கேயுரிய செயல் வரம்புகளையும் குறைபாடுகளையும் கொண் டுள்ளது. அவைகளில் சில அம் முறையில் உள்ளடங்கியுள்ளன. மற்றவை, அதன் செயல்பாட்டிற்கு இடைநிகழ்ச்சியானவை.

(i) உற்பத்திக் கடன் தேவைகளை, ஒப்பிடும் வகையில், அதிகமாகப் பெற்றுள்ள பெரும்பாலான சாகுபடியாளர் வகை யினரை, அது பயனடையச் செய்கிறது. ஒரு சாகுபடியாளரின்

உற்பத்தி நடவடிக்கை எவ்வளவு அதிகமாகவும், அதிகத் தீவிர மாகவு முள்ளதோ அந்த அளவிற்கு அவருடைய கடன் தேவையும் அதிகமாக வுள்ளது. பெரிய குடியானவர்கள், கரும்பு முதலியன போன்ற வணிகப் பயிர்களைப் பயிரிடுபவர்கள் ஆகியவர்களின் தேவைகளை ஏறக்குறைய முழுமையாகவே பயிர்க்கடன் முறை பூர்த்தி செய்யக்கூடும். இவ் வகைச் சாகுபடியாளர்கள், சாதாரண மாகத் தங்கட்குச் சொந்தமான சில நிதியாதாரங்களை யுடையவர் களாக விருக்கின்றனர். தாராளமான விகிதத்தின்பேரில் கணக் கிடப்பட்ட பயிர்க்கடன் வரம்பு, அவர்களுடைய இயல்பான தேவைகளைப் பூர்த்தி செய்யக்கூடும். அதற்கு மாருகச் சிறிய சாகுபடியாளர்களுக்கும், உணவுத் தானியங்கள் போன்ற குறைந்த செலவுப் பயிர்களை விளைவிக்கும் சாகுபடியாளர்களுக்கும், அதே யளவில் பயிர்க்கடன் முறை பயனளிக்க முடியாது. ஏனென்ருல், அவர்களுடைய உற்பத்திக் கடன் தேவைகள், அவர்கள் கடன் தேவைகளுக்கு ஒப்பிடும் வகையில் குறைந்த விகிதமாக அமைந் துள்ளன.

(ii) நடைமுறையிலிருக்கும் பயிர்க்கடன் முறையில், விவ சாயிகளின் வாழ்க்கைக் கடன் தேவைகளுக்காக ஓர் ஏற்பாடும் செய்யப்படவில்லை. சாகுபடியாளர்கள், பயிர்களை விளைவிப்பதற் காக மட்டுமன்றி, குடும்பப் பராமரிப்பிற்காகவுங்கூடக் கடனுதவி கோருகின்றனர். சாகுபடியாளர் எவ்வளவு சிறியவராக இருக் கிருரோ அவ்வளவு பெரியதாக அவருடைய வாழ்க்கைத் தேவை கள், அவருடைய மொத்தக் கடன் தேவைகளுக்கு விகிதம் கொண்டுள்ளன. எனவே, அவர் பயிர்க்கடன் முறையின்கீழ்ப் பெறுகின்ற கடன்தொகை மிகவும் போதாததாகவுள்ளது. கூடுதலான கடன்களைத் தனியார் வட்டிக்கடன் கொடுப்பவர் களிடமிருந்து வாங்குவதற்கு, அவர் நிர்ப்பந்தப்படுத்தப்பட்டு, அவர்களால் சுரண்டப்படும் நிலைமையிலேயே நீடித்து வந்துள் ளார். சமுதாயத்தில் வலிவற்ற பகுதியினராகவும், உற்பத்திக் கடன் தேவைப்படாதவருமாகவுள்ள நிலமில்லாத் தொழிலாளர், சங்கத்தில் உறுப்பினராகவிருந்தாலுங்கூட, எந்த விதமான உதவி யையும் பெருமல் போய்விடுகிருர்.

(iii) பயிர்க்கடன் முறையானது, தன்னிறைவற்ற குடி யானவரின் அடிப்படைப் பிரச்சினைக்குத் தானே ஒரு முழுமை யான தீர்வை வழங்க முடியாது. கூட்டுறவு உற்பத்தியும் தொழிலாளர் நடவடிக்கையும் பலவிடங்களில் வளர்ச்சியடைவ தன்மூலம், கூடுதலான வேலைவாய்ப்புத்தான் அத்தகைய குடி யானவனுக்குத் தேவைப்படுகிறதேயன்றி அவனுக்குத் தேவைப் படுவது அதிகமான கடன் வசதியன்று.

(iv) நடைமுறையிலிருக்கும் பயிர்க்கடன் முறையின்படி, கடன் வாங்குபவர் தம் கடனை ஓராண்டில் ஒரு குறிப்பிட்ட காலத்தில் முழுமையாகத் திருப்பிச் செலுத்த வேண்டும். சாகுபடி செய்தலானது, பருவக்கால வரவும், ஏறக்குறைய முறையான செலவும் உள்ளடங்கிய தொடர்ச்சியான ஓர் உற்பத்தி நடவடிக்கையாகும். எனவே, சாகுபடியாளரின் கணக்கு, கால முறையான எடுத்தலும், போடலும் கொண்டு ஒரு நடப்புக் கணக்காகப் பாவிக்கப்படுவது சரியானதாக விருக்கலாம். இந் நடவடிக்கைகளைக் குறித்தே, அக் கணக்கின் நடத்தையின் மேலான திருப்தியளிக்கும் ஒரு குறியீட்டெண்ணை ஏற்படுத்த வேண்டியிருக்கலாம்.

**(உ) தமிழ்நாட்டில் செயற்படுத்தப்படும் பயிர்க்கடன் முறையின் நடவடிக்கைக் கூறுகள்**

பயிர்க்கடன் முறையின் நடவடிக்கைக் கூறுகளை, இரண்டு விரிவான தலைப்புகளுக்குள் வகைப்படுத்தலாம்.

(1) கடன் அளவுகளை நிர்ணயித்தல்.

(2) திருப்பிச்செலுத்துவதற்குரிய தேதிகளை நிர்ணயித்தல்.

**கடன் அளவு:** பயிர்க்கடன் முறையின்கீழ், குறுகிய காலக் கடன்கள் ரொக்கத்திலும், பொருளிலும் பட்டுவாடாச் செய்யப் படுகின்றன. ரொக்கப் பகுதியானது, சாகுபடி செய்வதற்காக நிலத்தைப் பண்படுத்தும் செலவையும், உழுதல், களைபிடுங்குதல் முதலியவற்றின் செலவையும் பூர்த்தி செய்வதற்காக வழங்கப் படுகிறது. சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் பொருள்களுக்காகத் தேவைப்படும் கடன் தொகையானது, விதைகள், உரங்கள், பூச்சிகொல்லிகள் வடிவத்தில், பொருளாக வழங்கப்படுகிறது. ஒரு குடியானவருக்கு வழங்கப்படுகின்ற பொருட்பகுதியின் மொத்தத் தொகையானது அவருடைய மொத்த விவசாய வருவாயின் மூன்றில் ஒரு பங்குக்கு மேற்படக்கூடாது. ரொக்கப் பகுதியின் விகிதமும், பொருட்பகுதியின் விகிதமும், கடன் சங்கங்களின் பிரதிநிதிகள், மத்திய வங்கியின் பிரதிநிதிகள், விவசாயத்துறை மற்றும், கூட்டுறவுத் துறை அதிகாரிகள் ஆகியவர்களின் வருடாந்தரக் கள மாநாட்டில் (Field Conference) தீர்மானிக்கப்படுகின்றன. இந்த மாநாடு, ஒவ்வோர் ஏக்கர் நிலத்திற்கும் ஒவ்வொரு பயிருக்குமென, கடனளவைப் பரிந்துரை செய்கிறது.

**வருடாந்தரக் கடன்வரம்பு விவரப்பட்டியல்** (Annual Credit Limit Statement)

மேற்குறிப்பிட்ட கடன் விகிதம், கடனளவு ஆகியவற்றின் அடிப்படையைக் கொண்டு, கடன் சங்கம் மேற்பார்வையாளர்

களின் உதவியுடன் வருடாந்தரக் கடன் வரம்பு விவரப்பட்டியலைத் தயாரித்து, உள்ளூர் மேற்பார்வை ஒன்றியத்திற்கு அனுப்பி வைக்கிறது. ரூ. 2,000-க்கு மேற்பட்ட கடன் தேவைப்படுபவர்களுக்காக, ஒரு தனிப்பட்ட வருடாந்தரக் கடன் வரம்பு விவரப் பட்டியல் தயாரிக்கப்பட்டு ஒன்றியத்தின்மூலம் அனுப்பப்பட வேண்டும். வருடாந்தரக் கடன் வரம்பு விவரப் பட்டியல்கள் ஒன்றியத்தால் பரிசீலிக்கப்பட்டு அதன் பரிவுரையுடன் மத்திய வங்கிக்கு அவை அனுப்பி வைக்கப்படுகின்றன. தனிநபர் உச்சக் கடனளவு, பிணைதாரர் கடன்களுக்காக ரூ. 10,000 ஆகவும், நில அடைமானத்தின்மீதான கடன்களுக்காக ரூ. 15,000 ஆகவும் உள்ளது. சர்க்கரை ஆலைகளுடன் பதிவு செய்யப்பட்ட கரும்புப் பயிரிடுபவர்கள் விஷயத்தில், கடன் வரம்பு பிணைதாரர் கடன்களுக்காக ரூ. 15,000 ஆகவும் நில அடைமானத்தின் மீதான கடன்களுக்காக ரூ. 20,000 ஆகவும் உள்ளது. இந்த வரம்பானது நடுத்தரச் சாகுபடியாளர்களுக்காகப் போதுமானதாகத் தெரிகிறது.

வருடாந்தரக் கடன் வரம்பு விவரப்பட்டியல்கள், மத்திய வங்கியின் நிருவாகப் பிரிவாலும், நிர்வாக அதிகாரியாலும் பரிசீலனை செய்யப்பட்டு, ஒப்பளிப்பிற்காகச் செயற்குழுவின் முன்பு வைக்கப்படுகிறது. கால தாமதத்தைத் தவிர்ப்பதற்காக, மத்திய வங்கியின் செயற்குழு, மாதமிருமுறை கூடுகிறது.

### பணம் வாங்குதல் ஒப்பளித்தல் (Sanction of drawals)

ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகளுக்குட்பட்டு, ஒவ்வொரு பயிரின் விதை விதைக்கும் பருவத்திற்கு 30 நாள்களுக்கு முன்பு, சங்கங்கள் பணம் வாங்குதல் விவரப் பட்டியல்களைச் சமர்ப்பித்துப் பணத்தை வாங்குகின்றன. மத்திய வங்கிச் செயலரால் இவ் விவரப் பட்டியல்கள் ஒப்பளிக்கப்படுகின்றன. ஒப்பளிக்கப்பட்ட பணம் வாங்குதல் விவரப்பட்டியல்களின் நகல்கள், மேற்பார்வை ஒன்றியத்திற்கும், விற்பனைச் சங்கத்திற்கும், பஞ்சாயத்து ஒன்றியத்திற்கும் நேரடியாக அனுப்பப்படுகின்றன. அவற்றின் அடிப்படையில், விற்பனைச் சங்கத்தால் உரமும், உள்ளூர்ப் பஞ்சாயத்து ஒன்றியத்தின் விவசாயப் பண்டகத்தால் பூச்சிகொல்லியும் வழங்கப்பட்டு, அவற்றின் விலையானது மத்திய வங்கியிலிருந்து வசூலிக்கப்படுகிறது.

### பிணையம் (Security)

கடனுக்காகப் பிணையம், எதிர்நோக்கப்பட்ட விளைபொருளே யன்றி, நிலம் அன்று என்பது தெளிவாக உணரப்படவேண்டும்.

எனவே, குத்தகைச் சாகுபடியாளர்களுக்குப் பயிர் உற்பத்திக்காக ஜாமீன் கடன்கள் வழங்கப்படலாம்.

**ரொக்கப் பகுதியின் பட்டுவாடா** (Disbursement of cash component)

ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்பின் தொகைகளுக்காகச் சங்கங்கள், மத்திய வங்கிகளுக்குச் சாதகமாக, வெண்கடன் பத்திரங்களை (Promissory Notes) எழுதிக் கொடுத்து, ரொக்கப் பகுதிப் பணத்தை வாங்கி, ஒப்பளிக்கப்பட்ட கடன்களை உறுப்பினர்களுக்குப் பட்டுவாடாச் செய்கின்றன. வழங்கப்பட்ட உரங்கள், பூச்சிகொல்லிகள் ஆகியவைகளுக்காக, விற்பனைச் சங்கத்தின் பட்டியல்களும், விவசாயப் பண்டகத்தின் பட்டியல்களும், முறையே மத்திய வங்கிக்கு அனுப்பப்படுகின்றன. பட்டியல்களின் தொகைக்கு மத்திய வங்கி, சம்பந்தப்பட்ட சங்கங்களின் கணக்குக்குப் பற்று வைத்துத் தொகைகளை விற்பனைச் சங்கத்திற்கும், விவசாயப் பண்டகத்திற்கும் காசோலைகள்மூலம் இருசால் செய்கிறது.

**தவணைத் தேதிகளை நிர்ணயித்தல்**

அந்தந்தப் பயிர்களின் அறுவடைக் காலத்தைக் குறித்துத் தவணைத் தேதிகள் நிர்ணயிக்கப்படுகின்றன. ஆகையால், தங்கள் கடன்களைத் திருப்பிச் செலுத்துவதில் கடன் வாங்கினவர்கட்கு எந்தவிதச் சங்கடமும் இருக்க முடியாது.

**விற்பனையுடன் கடனிணைப்பு**

கடன் வாங்கியவர் தம் விளைபொருள்களை விற்பனைச் சங்கத்தின்மூலம் விற்க வேண்டும். மற்றும், அவரிடமிருந்து வர வேண்டிய கடன் தொகை, விளைபொருள்களின் விற்பனைத் தொகையிலிருந்து, விற்பனைச் சங்கத்தின்மூலம், வசூல் செய்யப்படுகிறது. பயிர்க்கடன் முறையின் வெற்றிக்கு, இந்த இணைப்பு அவசியமாக உள்ளது.

பயிர்க்கடன் முறையின் ஏற்பானது, வழங்கப்பட்ட கடன் பருமத்தின் வளர்ச்சிக்கு உதவிவரும் ஒரு பெரும் காரணியாக இருந்துள்ளது.

பயிர்க்கடன் முறையின்கீழ், கடனளிப்பின் போதுகை அல்லது போதாமை பற்றிய பிரச்சினையைச் சந்தானம் குழுவினர் பரிசீலித்துப் பின்வரும் பரிவுரைகளைச் செய்தனர்:

(i) சாகுபடிக் கடனளவில், குடும்பத்தின் வாழ்க்கைச் செலவு களுக்காகவும் ஒரு நியாயமான தொகை அடங்கியிருக்க வேண்டும். (ii) கடன் தொகையிலுள்ள தற்போதைய உச்ச வரம்பு, அதாவது, மொத்த விலைபொருள்களின் முன்னேக்கப் பட்ட மதிப்பில் 35 சதவீதமானது குறுகியகாலக் கடன்களுக்காக அவசியப்படும்போதெல்லாம் மொத்த விலைபொருள்களின் மதிப் பைக் குறித்து 50 சதவீதத்திற்கு உயர்த்தப்படலாம். (iii) வாழ்க் கைச் செலவுகளுக்காகவும், விவசாயமல்லாத காரியங்களுக்காக வும், சிறுதொகைக் கடன்கள், நிலமில்லாத தொழிலாளர் களுக்கும் விவசாயத்திற்கு அத்தியாவசியமான சேவைகளைப் புரியும் தச்சர்கள், கொல்லர்கள் போன்ற கைவினைஞர்களுக்கும் கொடுக்கப்படவேண்டும். எனினும், அத்தகைய கடன்களின் மொத்தப் பருமம், ஓராண்டில், ஒரு சங்கத்தால் வழங்கப்பட்ட மொத்தக் கடன்களில் 10 சதவிகிதத்திற்கு மேற்கொண்டு இருக்க முடியாது. ரிசர்வ் வங்கி இக் கடன்களை விவசாய உற்பத்திக்கான கடன்களாகப் பாவித்து, செலவு ஈடு செய்யும் உதவியை (Reimbursement) அது வழங்கவேண்டும். (iv) கூட் டுறவுச் சங்கங்கள், நகையீட்டுக் கடன்களுக்கான வசதிகளை வழங்க வேண்டும். மோட்டார்ப் பம்புசெட்டுகள் முதலியவற்றிற்கு அவசரப் பழுதுபார்த்தல் போன்றதும், சாகுபடிக் கடன்களால் தழுவப்பட முடியாததுமான விசேஷச் செலவினங்களைப் பூர்த்தி செய்யும் பொருட்டு, விவசாயிகளுக்கு ஓர் 2-வது வரிசைக்கடன் அவசியமாகவுள்ளது. அத்தகைய சந்தர்ப்பங்களில், குடியானவர் வட்டிக்கடைக்காரனை அடுக்க வேண்டியுள்ளது. வைப்புகள் வாயிலாக நிதி ஆதாரங்களைப் பெற்றும், நகையீட்டுக் கடன்களை அளிப்பதற்கான வசதிகளைப் பெற்றுமுள்ள விவசாயக் கடன் சங்கங்கள் இதைச் செய்யவேண்டும். (v) கடனின் பொருட் பகுதிப் பட்டுவாடாவிற்காக, உற்பத்தித் தேவைகள் எதாவதை ஒரு சங்கம் விநியோகிக்க முடியாமலிருக்கும் சமயங்களில், இதர அங்கீகரிக்கப்பட்ட ஆதாரங்களிலிருந்து அவைகளைக் கொள்முதல் செய்ய அனுமதிக்கப்பட்டு, அத்தகைய கொள்முதல்களின் மதிப்புத் தொகையானது சங்கத்தால் முடியுமானால், அவற்றை வழங்கும் நிறுவனங்களுக்கு, அல்லது கொள்முதல் பட்டியல்கள் சமர்ப்பிப்பதன் பேரில் உறுப்பினர்களுக்கு மறு ஈடு செய்யப்பட வேண்டும். (vi) கடன் வரம்பு விவரப்பட்டியல், ஆண்டிற் கொருமுறைக்குப் பதிலாக, ஐந்தாண்டுகளுக்கு ஒருமுறை தயாரிக் கப்படலாம். ஏனென்றால், அந்த விவரப்பட்டியல் ஒவ்வோர் ஆண்டும் தயார் செய்வதானது, சங்கத்தின் சிப்பந்திகளுக்கும், மத்திய வங்கியின் சிப்பந்திகளுக்கும் அதிகமான வேலையைக் கொடுக்கிறது. இக் காலவரையறைக்குள் ஏதாவது மாறுதல்கள்

ஏற்பட்டால், அவற்றை ஒரு துணையான கடன் வரம்பில் சேர்த்துக் கொள்ளலாம். (vii) ஐந்து வருடக் காலவரைக்காகச் செல்லுபடியாகும் ஒரு கடன்செல்லுப் புத்தகம் (Credit pass book) ஒவ்வோர் உறுப்பினருக்கும் வழங்கப்படவேண்டும். அது, சொந்த மாகவுள்ள நிலம், சாகுபடி செய்யப்பட்ட நிலம், பயிர் ரகம், கடன் வரம்பு, பங்கு மூலதனம், சிக்கன நிதி, பணம் வாங்குதல், திருப்பிச் செலுத்துதல் ஆகியவற்றின் விவரங்களையும், இதர விவரங்களையும் கொண்டிருக்கும்.

## (ii) மத்தியக் காலக் கடன்கள்

பொதுவாக, மத்தியக் காலக் கடன்களுக்காகத் தனிநபர் களுக்குத் தனிப்பட்ட கடன் வரம்பு எதுவும் நிர்ணயிக்கப்படுகிற தில்லை. குறுகிய காலமானதாக விருந்தாலும் அல்லது மத்தியக் காலமானதாக விருந்தாலும், எல்லாக் கடன்களும் சங்கத்தால் தனிநபர்களுக்காக நிர்ணயிக்கப்பட்ட கடன் வரம்பிற்குள் இருக்க வேண்டும். மத்தியக் காலக் கடன்கள் அதாவது 3-லிருந்து 5 ஆண்டுகளுக்கான கடன்கள் விஷயத்தில், இயங்காச் சொத்தின் பிணையம் எப்பொழுதுமே பெறப்படுகிறது. தமிழ் நாட்டில், மத்தியக் காலக் கடன் ரூ. 1,000-க்கும் குறைந்த தொகையை யுடையதாகவிருந்தால், அது நபர் ஜாமீன் பிணையத்தி லிருக்கலாம். கடன் வாங்குபவர், அவருடைய நிலத்தின் மீது ஓர் ஈட்டை ஏற்படுத்துவதன் பேரில், ரிசர்வ் வங்கி ரூ. 1,000-க்கும், ரூ. 1,500-க்கும் இடையிலுள்ள தொகைக்குக் கடன்கள் அனுமதித்துள்ளது. ரூ. 1,500-க்கு மேற்படும் தொகை யுடைய கடன்கள், அடைமானப் பிணையத்தின்பேரில் கொடுக்கப் படலாமென்று ரிசர்வ் வங்கி அனுமதித்துள்ளது. கிணறு வெட்டு வதற்காகவும், பம்புசெட்டுகளுக்காகவும், நபர் ஜாமீன் அடிப் படையில் ரூ. 3,500 வரைக்கும், மத்தியக்காலக் கடன்களைக்கூட ரிசர்வ் வங்கி அனுமதித்துள்ளது. விவசாய இயந்திரங்களை வாங்குகின்ற கடன் வாங்குபவர்கள், அந்த இயந்திரங்களின் மொத்த விலையில் குறைந்த பட்சம் 15 சதவிகிதத்தைத் தம் சொந்த நிதி ஆதாரங்களிலிருந்து பூர்த்தி செய்து, கடன் தொகை யில் 10 சதவிகித அளவிற்கு இயல்பான உதவித் தொகையைத் தம் சங்கத்தின் பங்கு மூலதனத்திற்கு அளிக்கவேண்டும் என்ற நிபந் தனையின் பேரில், ரூ. 3,500 வரையான தொகையையுடைய மத்தியக்காலக் கடன்கள்கூட வழங்கப்படலாம். அத்தகைய சந்தர்ப்பங்களில் இயந்திரங்கள் வாங்கப்பட்ட வியாபாரிகளுக்குக் கடன் பட்டுவாடாச் செய்யப்பட்டு, வாங்கப்பட்ட இயந்திரம் கடனளிக்கும் சங்கத்திற்குச் சாதகமாக ஈடு செய்யப்பட்டு, அது ஈட்டுறுதியும் செய்யப்படவேண்டும். பால்பண்ணை, கோழி

வளர்ப்புப் பண்ணை முதலியன போன்ற காரியங்களுக்காக, நபர் ஜாமீன் பேரில் சிறு குடியானவர்களுக்கு ரூ. 2,000 வரை கடன்கள் அளிப்பதைக்கூட ரிசர்வ் வங்கி அனுமதித்துள்ளது. ஆனால், உற்பத்திப் பொருள்களின் விற்பனைக்கான ஏற்பாடுகள் அலுவல் எல்லையில் இருக்க வேண்டும்.

### (iii) தனிநபர் உச்சக் கடனளவு

பல மாநிலங்களில், குறுகியகாலக் கடன்களை அல்லது மத்தியக் காலக் கடன்களைக் குறித்த தனிநபர் உறுப்பினரின் உச்சக்கடன் வரம்புகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. தமிழ்நாட்டில், ஒரு தனி நபர் உறுப்பினரின் உச்சக்கடன் வரம்பு ரூ. 5,000ஆக விருந்து அவ்வப்போது அது உயர்த்தப்பட்டு இப்பொழுது பின்வருமாறு உள்ளது. ஓர் உறுப்பினர் குறுகியகாலக் கடன்களாக ரூ. 10,000 வரையிலும், மத்தியக்காலக் கடன்களாக ரூ. 1,000 வரையிலும் நபர் ஜாமீன் பேரில் கடன் வாங்கலாம். இவ் வரம்புகளுக்கு அதிகப்பட்ட கடன்களுக்காக, இயங்காச் சொத்தின் பேரிலும் அடைமானப் பிணையத்தின் பேரிலும் ஒரு நபர் வாங்கக்கூடிய மொத்தக் கடன் தொகை, குறுகியகாலக் கடன்களாக ரூ. 15,000 ஆகவும் மத்தியக்காலக் கடன்களாக ரூ. 10,000 ஆகவும் அதாவது, மொத்தத்தில் 25,000 ஆக உள்ளது. எந்தச் சர்க்கரை ஆலையுடனும் பதிவு செய்யப்பட்ட கரும்புப் பயிரிடுபவராகவுங்கூட இருக்கின்ற ஓர் உறுப்பினர் விஷயத்தில், கடன் வரம்பு இன்னும் அதிகமாக விருக்கிறது. ரூ. 25,000 வரை நபர் ஜாமீன் பேரிலும், ரூ. 10,000 வரை அடைமானப் பிணையத்தின் பேரிலும் குறுகியகாலக் கடன்களும் அடைமானப் பிணையத்தின் பேரில் ரூ. 10,000 வரை மத்தியக் காலக் கடன்களும் அதாவது மொத்தத்தில் ரூ. 45,000 வரை, அவர் கடன் வாங்கலாம். பொது வரம்பிற்கு மேற்பட்ட கூடுதல் வரம்பு, கரும்புப் பயிரிடுபவருக்காகக் கருதப்பட்டுள்ளது. ஒரு சங்கத்தின் நிதி ஆதாரங்கள், சாத்தியப்படுமளவு பல நபர்களுக்கு, குறிப்பாக நடுத்தரச் சாகுபடியாளர்களுக்கும், சிறு சாகுபடியாளர்களுக்கும் கிடைக்குமாறு நிச்சயப்படுத்துவது அவசியமாகும். பெருமளவுள்ள தேவைகளைப் பெற்றவர்கள், சுதந்திரமாகப் போதுமான கடனைப் பெறுவதற்குரிய நிலைமையிலிருக்கும் பெரிய சாகுபடியாளர்கள் ஆகியவர்களுக்குச் சாதகமாகச் சிறு சாகுபடியாளர்கள், மத்தியத் தரச் சாகுபடியாளர்கள் ஆகியவர்களின் தேவைகள் பலியிடப்படும் சாத்தியக்கூறைத் தடுப்பதற்கும் இவ் வரம்புகள் அவசியமாக இருக்கின்றன.

## (iv) கடன் வட்டி விகிதம்

ஒரு சங்கத்தால் கடன்கள் பேரில் தன் உறுப்பினர்களுக்கு விதிக்கப்படும் வட்டிவிகிதம் நியாயமானதாக விருக்கவேண்டும். அது மிகக் குறைந்ததாகவுங்கூட இருக்கக்கூடாது. ஏனென்றால், அப்படிச் செய்வது கவலையற்றுக் கடன் வாங்குதலுக்கு வழி செலுத்தலாம். உறுப்பினர்கள் சங்கத்தினிடமிருந்து கடன் வாங்கி, அந்தப் பணத்தைப் பின்னர் உறுப்பினரல்லாதவர்களுக்கு மீண்டும் கடன் கொடுக்கும் சந்தர்ப்பங்கள்கூட எழலாம். கடன்கள் மீது ஒரு குறைந்த வட்டி விகிதத்தை விதித்தால், வைப்புகள் மீது கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களை அளிப்பதற்குச் சாத்தியப் படாது. ஆகையால், இது வைப்புகள் நிலைமையில் ஒரு குறை வாகுதலுக்கு வழி செலுத்தலாம். ஒரு சங்கத்தால் விதிக்கப்படு கின்ற வட்டி விகிதமானது, (i) நிதி நிறுவனங்களிடமிருந்து நிதிகளையும் அல்லது வைப்புகளையும் சங்கம் பெறக்கூடிய வட்டி விகிதத்தின்மீதும், (ii) சங்க நிருவாகத்திற்காகக் குறிப்பாக, தகுதிபடைத்த சம்பளச் சிப்பந்திகளைப் பராமரிப்பதற்கான அவ சியமுட்படத் திறமையுடன் சங்கத்தை நடத்துவதற்குத் தேவைப் படும் செலவுகளின்மீதும், (iii) சங்கத்தின் சொந்த நிதிகளின் பரப்பின்மீதும் சார்ந்துள்ளது.

பல மாநிலங்களில் குறுகியகாலக் கடன்களைக் குறித்த கடன்வட்டி 9 சதவிகிதம் அல்லது அதற்கும் மேலாகவும், மத்தியக் காலக் கடன்களைக் குறித்து 9.5 சதவிகிதம் அல்லது அதற்கு மேலாகவும் இருந்துள்ளது. தமிழ்நாட்டில், உறுப்பினர்கட்கு விதிக்கப்படும் இறுதி வட்டி, குறுகியகாலக் கடன்கள்மீது 7.8 சதவிகிதமாகவும் மத்தியகாலக் கடன்கள்மீது 9 சதவிகிதமாக வும் முறையே இருந்தன. இந்த வட்டி விகிதங்கள் அண்மையில் மாற்றுதல் செய்யப்பட்டன. 1974–75ஆம் ஆண்டில் வட்டி விகிதங்கள், குறுகியகாலக் கடன்களுக்கு 12.60 ஆகவும், மத்தியக் காலக் கடன்களுக்கு 13.80 ஆகவும் இருக்கின்றன.

## (v) வட்டி விளிம்பு

பிரதம சங்கங்களின் கடன் வட்டி விகிதங்களுக்கு நெருங் கிய தொடர்புள்ளது, ஒரு விவசாயக் கடன் சங்கம் தன் செயற் பாட்டிற்காகப் பெற்றிருக்க வேண்டிய விளிம்பு. அதாவது, அதன் வாங்கும் கடன் வட்டிவிகிதத்திற்கும் கொடுக்கும் கடன் வட்டி விகிதத்திற்கு மிடையேயுள்ள வித்தியாசம். சங்கங்களின் பலவீன மான நிலைமைக்கான முக்கியக் காரணங்களில் ஒன்று, அவைகள் போதுமான காப்பிருப்புகளை வளர்ப்பதற்கு வகை செய்யாத

தற்போதுள்ள பற்றுக்குறை விளிம்பு. பல சங்கங்கள் ஓர் இலாப ஈவையும் அல்லது பெயர்சொல்லக்கூடிய எந்த இலாப ஈவையும் அறிவிக்க இயலாமலிருந்துவந்துள்ளன. தமிழ்நாட்டில், 1967–68ஆம் ஆண்டுவரை, பல்வேறு மட்டங்களில், விளிம்புகள் மாநிலக் கூட்டுறவு வங்கிக்கும், மத்திய வங்கிகளுக்கும், பிரதம சங்கங்களுக்கும் முறையே 0.5 ஆகவும், 2.2 ஆகவும், 1.7 ஆகவுமிருந்தன. உறுப்பினர்களுக்கு விதிக்கும் வட்டிவிகிதம், குறுகிய காலக் கடனுக்காக 12.60 சதவிகிதமாகவும், மத்தியக்காலக் கடனுக்காக 13.80 சதவிகிதமாகவும் இருக்கின்றது. சம்பளச் சிப்பந்திகளைப் பராமரிப்பதற்காகவும், காப்பிருப்புகளை வளர்ப்பதற்காகவும், இலாப ஈவை அறிவிப்பதற்காகவும் போதுமான இலாபங்களைப் பிரதம சங்கங்கள் சம்பாதிக்க முடியும் பொருட்டு, விவசாயக் கடன் சங்கங்களுக்கான வட்டிவிளிம்பானது 3 சதவிகிதத்திற்கு அதிகரிக்கப்படலாம். மராட்டியத்தில் அது 3 சதவிகிதமாகவுள்ளது. எளிதான அல்லது நியாயமான கடனைவிட அதிமுக்கியமானது, கூட்டுறவுக் கடனமைப்பின் உறுதித் தன்மையாகும். தாங்கள் வாங்கும் கடன் தொகைக்காகக் குறைந்த வட்டி விகிதத்தைக் காட்டிலும் குடியானவர்கள் விரும்புவது மேலான காலக்கிரமக் கடன் வசதியும், தங்கள் விவசாய நடவடிக்கைகளுக்காகவும், இதரக் காரியங்களுக்காகவும் தேவைப்படுகின்ற அளவில் கடன் வசதியுமே.

## 7. விவசாயச் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினருக்காகக் கடன் வசதி

விவசாயச் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினருக்கு சிறப்பாக, நிலமில்லாத குத்தகைப் பயிரிடுபவர்களுக்கு, கடனளித்தல் ஒரு பிரச்சினையாக விருந்துள்ளது. குத்தகைப் பயிரிடுபவரும், மற்றும், இதரச் சிறு சாகுபடியாளர்களும் நிலப்பரப்பளவு, பயிர்வகை, கடன்விகிதம் ஆகியவற்றைக் குறித்துக் கடன்கள் வழங்கப்பட வேண்டும். சிறு சாகுபடியாளர்கள் புதிய சாகுபடித் தொழில் நுட்பங்களை மேற்கொள்ள முன்வரும்போது கடன் பெறுதல் தொடர்பாகவோ, வழங்குதல் மற்றும் சேவைகளைப் பெறுதல் தொடர்பாகவோ, அவருக்கு முட்டுக்கட்டை எதுவுமில்லாமலிருப்பதை நிச்சயப்படுத்த வேண்டும். மற்றும், கடன் பாய்ச்சலைத் தடைப்படுத்தும் நடைமுறைகள் திருத்தப்பட வேண்டும். புதிய தொழில் நுட்பம் மேற்கொள்ளப்பட்டால் மட்டுமே, ஓர் இறுதி நிலையிலிருந்து உபரியை விளைவிக்கும் ஒரு நிலைக்கு உயர்த்துவதன் மூலம் தங்கள் பண்ணைத் தொழில் தன்னிறைவு பெறக்கூடிய நிலையிலுள்ள எல்லாச் சாகுபடியாளர்கள் விஷயத்திலும், இது தனி முக்கியத்துவத்தைப் பெற்றுள்ளது.

சிறு குடியானவர்கள், இறுதிநிலைக் குடியானவர்கள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியவர்களின் நலனுக்காகத் தொடங்கப்பட்ட சிறப்புத் திட்டங்கள் காரணமாகவும், மேம்படுத்தப்பட்ட முறைகளுக்கும் சாகுபடியில் புதிய தொழில் நுட்பத்திற்கும் இக் குடியானவர்களிடமிருந்து கிடைக்கின்ற பெருகிவரும் ஆர்வம் காரணமாகவும், கூட்டுறவுக் கடன் சங்கங்கள் விவசாயத் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினரைக் தழுவுதல் (Coverage) வருங்காலத்தில் மேலும் அதிகரிக்க எதிர்பார்க்கப்படுகிறது.

'சாகுபடியாளர்களுக்குக் கூட்டுறவுச் சங்கங்களால் பட்டுவாடாச் செய்யப்பட்ட கடன்களில் ஒரு பகுத்தாராய்தல் வெளிப்படுத்தியதாவது, 1971–72ஆம் ஆண்டின்போது 15 மாநிலங்களிலும், 6 யூனியன் பகுதிகளிலும் பிரதம விவசாயக் கடன் சங்கங்களால் வழங்கப்பட்ட ரூ. 613.3 கோடித் தொகையுள்ள மொத்தக் கடன்களில், தலா 2 ஹெக்டார்கள் வரைக்குமுள்ள நிலவுடைமையாளர்களுக்குக் கொடுக்கப்பட்ட கடன்கள் ரூ.160.5 கோடிக்கு, அதாவது, மொத்தக் கடன்களில் 26.2 சதவிகிதத்திற்கு இருந்தன. ஆனால், தலா 2 ஏக்கர்களுக்கு மேற்பட்ட நிலங்களை யுடையவர்களுக்குச் சுமார் ரூ. 408.6 கோடிக்கு அல்லது 66.6 சதவிகிதத்திற்குக் கடன்களளிக்கப்பட்டன. குத்தகைச் சாகுபடியாளர்கட்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் வழங்கப்பட்ட கடன்கள் ரூ. 20.6 கோடியாக இருந்தன. ஆக, பிரதமக் கடன் சங்கங்களின்மூலம், 2 ஹெக்டார்கள் வரைக்கும் நிலங்களையுடைய சாகுபடியாளர்களுக்கும், குத்தகைச் சாகுபடியாளர்களுக்கும், விவசாயத் தொழிலாளர்களுக்கும் வழங்கப்பட்ட மொத்தக் கடன் தொகை, (கிடைக்கப் பெற்ற எண்கள் அடிப்படையில்) ரூ. 181.1 கோடிக்கு இருந்தது. அது 1971–72ஆம் ஆண்டின்போது, அளிக்கப்பட்ட மொத்தக் கடன் தொகைகளின் 29.5 சதவிகிதமாக அமைந்தது.' (இந்தியாவில், 1971–72ஆம் ஆண்டின்போது, கூட்டுறவு இயக்கத்தைக் குறித்து ரிசர்வ் வங்கியின் புள்ளி விவரங்கள் கொண்ட விவரப்பட்டியல்.)

பலங்குன்றிய பகுதியினர்கள் ரூ. 200/-க்கு அதிகப்படாத தனிநபர் உச்சக் கடனளவு பெற்ற உறுப்பினர்களாக, முதன் முதலில் விளக்கம் செய்யப்பட்டனர். எனினும், ரூ. 200/– தொகையுடைய ஒரு கடனனது, ஓர் ஏக்கர் நிலத்தைக் கூடச் சாகுபடி செய்வதற்குப் போதுமானதாக இராது. சந்தானம் குழுவினரின் கருத்தின்படி, தரமுள்ள இரண்டு ஏக்கர்களை அல்லது அதற்கும் குறைவான நிலத்தைச் சொந்தமாக வைத்திருக்கும் சாகுபடியாளர்களும், நிலமில்லாத குத்தகைப்

பயிரிடுபவர்களும், விவசாயத் தொழிலாளர்களும், சிறு குடியானவர்களும், விவசாயச் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினரைச் சார்ந்தவர்களாகவும் கருதப்படவேண்டும். சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் விதிகளில் தரப்பட்டுள்ள பொருள் விளக்கத்தின்படி, இரண்டு ஹெக்டார்கள் நிலத்திற்கு மேற்படாத நிலத்தைச் சொந்தமாகப் பெற்றிருக்கின்ற அல்லது சாகுபடி செய்கின்ற ஒரு குடியானவர் ஒரு சிறு குடியானவராவர். சிறுகுடியானவர்களுக்கும், இறுதிநிலை, கீழிறுதிநிலைச் சாகுயாளர்களுக்கும் கடன் வழங்குவதற்குக் கடன் கொடுப்பவர்கள்பால் சில முன்பின்னுலோசித்தல் இருந்துள்ளது என்பதை மறுக்க முடியாது. சொந்த நிலமுடைய சாகுபடியாளர்களுக்காகப் போன்றே, குத்தகைப் பயிரிடுபவர்களுக்காகவும் ஏக்கர் ஒன்றுக்கான கடன் விகிதம் ஒரேமாதிரியாக வுள்ளது. குத்தகைப் பயிரிடுபவர், வாடகையைச் செலுத்த வேண்டியிருப்பதால், அவருடைய திருப்பிச் செலுத்தும் சக்தி, ஒப்பிடும் வகையில் குறைவாக வுள்ளது. நிலமுடையவர்களைக் காட்டிலும், குத்தகைப் பயிரிடுபவர்கள் விஷயத்தில், தவணைகடந்த பாக்கியுள்ள உறுப்பினர்களின் சதவிதமும், அவர்களின் தவணைகடந்த பாக்கிகளின் சதவிகிதமுங்கூட அதிகமாக விருப்பது காணப்படுகிறது. எழுத்துச் சான்றில்லாமல் வாக்குவாயிலாகக் குத்தகையளிக்கும் பரந்த ஒரு நடைமுறையுங்கூட, நிலையில்லாது குத்தகைப் பயிரிடுபவர்களுக்குக் கடனளிப்பதில் சங்கங்கள்பாலுள்ள முன்பின் ஆலோசித்தலுக்குக் காரணமாகவிருக்கிறது. இவ் வகைக் கடன் வாங்குபவருக்குத் தாராளமான கடன் பாய்ச்சலைத் தடுக்கின்ற சில நிபந்தனைகளை மத்திய வங்கிகள் விதிக்கின்றன. உதாரணமாக, தமிழ்நாட்டில், அத்தகைய கடன் வாங்குபவர் விஷயத்தில் குத்தகை விடுபவர் அல்லது நிலவுடைமையாளர்—உறுப்பினரின் நபர் ஜாமீன் வற்புறுத்தப்படுகிறது; தனிநபர்க் கடன் வாங்கும் வரம்புங்கூடக் குறைவாக விருக்கிறது; அது ரூ. 300/-லிருந்து 5000/- வரைக்கும் வேறுபடும் வகையிலுள்ளது. நிலவுடைமையாளர்களாகவும் அல்லது குத்தகைப் பயிரிடுபவர்களாகவுமுள்ள சிறு சாகுபடியாளர்களுக்குச் சாதகமாகக் கூட்டுறவுக் கடன் சங்கங்களின் கடன் கொள்கைகளையும், கடன் நடைமுறைகளையும் மறுதிருப்பம் செய்வதற்கும், அவர்களுக்குத் தேவைப்படும் கடனை வழங்கும் பொருட்டு நிதி நிறுவனங்களுக்கு வகைசெய்வதற்கும், நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. இதன் சார்பில் எடுக்கப்பட்ட நடவடிக்கைகள் கீழே விவரிக்கப்பட்டுள்ளன.

**(i) கூட்டுறவுக் கடன் சங்கத்தில் ஒரு பங்கின் மதிப்பு, பொதுவாக, ரூ. 10/-ஆகவும், அது ஒதுக்கப்பட்டவுடன் முழு**

மையாகச் செலுத்தப்பட வேண்டுமென்று முள்ளது. எனினும், சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்—உறுப்பினர்களிடமிருந்து பங்கு மதிப்பு 5 சமமான தவணைகளில் வசூலிக்கப்படலாம்; முதல் தவணை, ஒதுக்கப்பட்டவுடன் செலுத்தப்பட வேண்டும்; எச்சம், அரையாண்டு அல்லது ஆண்டுத் தவணைகளில் செலுத்தப்பட வேண்டும். மற்றும், பெரிய சாகுபடியாளர்கள், ஒப்பிடும்வகையில் தங்கள் கடன் வாங்குதலில் அதிகமான ஒரு விகிதத்தைப் பங்கு மூலதனத்திற்காகச் செலுத்தக் கடமைப்பட்டவர்களாக இருக்கவேண்டும். அப்போதுதான் பங்கு மூலதனத்திற்குதவும் சுமையானது சிறு குடியானவர்கள்மீது குறைவாக இருக்கக் கூடும்.

(ii) கடன் வசதி நிறுவனங்கள், அவசியமில்லாத முன்பின்னுலோசனையின்றி, இப் பகுதியினர்களுக்குக் கடன்களை வழங்க ஊக்குவிக்கப்படும் பொருட்டு, கடன் நிறுவனங்களுக்கு அரசால் ஒட்டுமொத்த உதவித்தொகைகள் அளிக்கப்படுகின்றன. 1962-63ஆம் ஆண்டில் சங்கங்களின் 'வராக்கடன் சிறப்புக் காப்பிருப்பிற்கு' அரசு உதவித்தொகைத் திட்டமொன்று தொடங்கப்பட்டது. ஓராண்டில் விவசாயக் காரியங்களுக்காக முந்திய ஆண்டுக்கு மேலாக நிகழ்ந்த மொத்தக் கடனளிப்புயர்வின் மீது மைய வங்கிகளுக்கு 1 சதவிகிதத்திலும், விவசாயக் கடன் சங்கங்களுக்கு 3 சதவிகிதத்திலும், உதவித்தொகை யளிக்கப்பட்டது. 1961—62ஆம் ஆண்டிலிருந்து, அந்தத் திட்டம் அமலுக்கு வந்தது. அண்மையில், உதவித்தொகை அடிப்படையைக் குறித்த கொள்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டுள்ளது. உதவித்தொகையானது, விவசாயச் சமுதாயத்தின் பலம்குன்றிய பகுதியினருக்கு வழங்கப்பட்ட, கடன்களைக் குறித்து மட்டுந்தான் கொடுக்கப்படுகிறது. அத்தகைய கடன்கள் நிலுவையில், முந்திய ஆண்டிற்கு மேலாக, ஓராண்டில் நிகழ்ந்த உயர்வின்மீது 4 சதவிகிதத்திலும், 12 சதவிகிதத்திலும் முறையே மத்திய வங்கிக்கும், பிரதமக் கடன் சங்கங்களுக்கும் அரசு உதவித்தொகை யளிக்கிறது. தமிழ்நாட்டில், 30-6-74ஆம் நாளன்று, இந்தத் திட்டத்தின் கீழ், அரசின் மொத்த உதவித்தொகை ரூ. 115.92 இலட்சமாக விருந்தது. மத்திய வங்கிகளுக்கு ரூ. 19.12 இலட்சமாகவும், பிரதமசங்கங்களுக்கு ரூ. 96.80 இலட்சமாகவும் இந்தக் காப்பிருப்புகள், பதிவாளரின் அனுமதியைப் பெற்றுப் பலங்குன்றிய பகுதியினருக்கு வழங்கப்பட்ட கடன்களிலிருந்து எழுகின்ற வராக்கடன்களையும், சந்தேகக் கடன்களையும் தள்ளுபடி செய்வதற்குப் பயன்படுத்தப்பட வேண்டியவை.

**(iii) சிறு குடியானவர்களின் நலன்களை வளர்ப்பதற்கு விவசாயக் கடன் சங்கங்களின் நிருவாகத்தில் அன்னவர்களுக்குப்**

பிரதிநிதித்துவம் கொடுக்கப்படவேண்டும். சந்தானம் குழுவினர், ஒவ்வொரு விவசாயச் சேவாக் கூட்டுறவுச் சங்கத்தின் நிருவாகக் குழுவில் ஒரு குறைந்தபட்ச எண்ணிக்கையான இடங்களை விவசாயச் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்களுக்கு ஒதுக்க, ஒரு சட்டப்படியான சரத்து அவசியமாகுமென்று கருதினர். ஒவ்வொரு விவசாயச் சேவாக் கூட்டுறவுச் சங்கத்தின் நிருவாகக் குழுவுக்கும், பலங்குன்றிய பகுதியினர் —உறுப்பினர்களிலிருந்து குறைந்தபட்சம் 2 இயக்குநர்கள் தேர்ந்தெடுக்கப்படவேண்டுமென்று அவர்கள் பரிவுரை செய்தனர். 1970ஆம் வருடத்திய 'தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் திருத்தச் சட்டம், மாவட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நிருவாகக் குழுக்களில் சிறு குடியானவர்களின் பிரதிநிதித்துவத்திற்காகச் சரத்துச் செய்துள்ளது. எனவே, பலங்குன்றிய பகுதியினரின் தனித்தேவைகளையும், பிரச்சினைகளையும் ஏற்றுக்கொண்டு, இவ்வகை விவசாயிகளுக்கு, உணவு உற்பத்திப் பெருக்கத்திற்காகக் கடனையும், இனி இதரச் சேவைகளையும் அளிப்பதற்கான நடவடிக்கைகளை யெடுப்பதற்குச் சாத்தியப்படும்.

(iv) பலங்குன்றிய பகுதியினர்களுக்கு உதவி செய்யும் இந்தச் சந்தர்ப்பத்தில்தான் சிறுகுடியானவர்களின் வளர்ச்சி நிறுவனங்கள் திட்டம், (Small Formers Development Agency) இறுதிநிலைக் குடியானவர்கள், விவசாயத் தொழிலாளருக்கான திட்டம், (Marginal Farmers and Agricultural labourers development Agency) போன்ற தனித்திட்டங்களின் மூலம், சிறு குடியானவர்கள் உதவப்படுகின்றனர். இத் திட்டங்களின் கீழ், 'நட்டவச்சநிதி', (Risk Fund) வடிவத்திலும், சிப்பந்தி மானிய வடிவத்திலும், கூட்டுறவுக் கடனமைப்பைப் பலப்படுத்துவதற்காக நிதியுதவி வழங்கப்பட்டு வருகிறது.

(v) விவசாய மக்களின் பலங்குன்றிய பகுதியினர்களுக்கும், சிறுபான்மைப் பகுதியினர்களுக்கும் உதவிபுரியும் வகையில், கூட்டுறவுச் சங்கங்களின் கடன் நடவடிக்கைகளில் ஓர் உறுதியான திருப்பத்தை ஏற்படுத்தும் பொருட்டு, ஆண்டிறுதியில் உறுப்பினர்கள் கொடுக்க வேண்டிய குறுகிய காலக் கடன் நிலுவையில் குறைந்தது, 20 சதவிகிதம், இவ்வகையான உறுப்பினர்களுக்கு அளிக்கப்பட்ட கடனாக விருக்கவேண்டுமென்று, ரிசர்வ் வங்கி வற்புறுத்தி வந்துள்ளது.

தமிழ்நாட்டில் விவசாயக் கடன் சங்கங்களால் பலங்குன்றிய பகுதியினர்களுக்கு வழங்கப்பட்ட கடன், வளர்விகிதமாக

அதிகரித்து வந்திருப்பது, கீழ்க் காணும் அட்டவணையிலிருந்து காணப்படும்.

அட்டவணை

(ரூபாய், கோடியில்)

| | மொத்தக் கடன் | பலங்குன்றிய பகுதியினர்களுக்கு |
|---|---|---|
| 1969–70 | 42.77 | 21.18 |
| 1970–71 | 44.83 | 24.18 |
| 1971–72 | 57.34 | 28.08 |
| 1972–73 | 64.60 | 32.47 |
| 1973–74 | 60.78 | 31.77 |

(31-12-73ஆம் நாள் வரையில்).

1972-73ஆம் ஆண்டின்போது பலங்குன்றிய பகுதியினர்களுக்கு அளிக்கப்பட்ட கடன்களின் சதவிகிதம் ஏறக்குறைய 50·2ஆக அமைந்திருந்தது. 1973-74ஆம் ஆண்டின்போது வழங்கப்பட்ட கடன்கள் விஷயத்தில், அது 51·6 சதவிகிதமாகவிருக்கிறது.

சிறு குடியானவர்களுக்கு நிதியுதவும் பிரச்சினையானது, கூட்டுறவுச் சங்கங்களுக்கு மட்டும் அடைக்கப்பட்ட ஒன்றாக இல்லை. நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள்கூட, அதேமாதிரியான ஒரு நிலவரத்தை எதிர்நோக்கியுள்ளன. சிறு குடியானவர்களுக்கு நிதியளிப்பதில் அடங்கியுள்ள அபாயங்களை யுணர்ந்து 'கடன் உத்தரவாத இந்தியக் கழகம்' (Credit Guarantee Corporatian) 1971ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திலிருந்து செயற்பட்டு வருகிறது. சிறு குடியானவர்களுக்கு மட்டுமன்றி, அதேமாதிரி நிலவரத்திலுள்ள இதரத் தொழில்களிலுள்ள நபர்களுக்கும் கடனளிப்பதில் அடங்கியுள்ள அபாயங்களைத் தழுவுவதற்கு இந்தக் கழகம் உத்தேசிக்கப்பட்டுள்ளது. viஆவது அனைத்திந்தியக் கூட்டுறவுக் காங்கிரஸ் (1971) நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள் விஷயத்தைப் போன்று, கூட்டுறவுச் சங்கங்களுக்கும்கூட, இந்திய அரசு கடன் உத்தரவாதத் திட்டத்தைப் பயன்படுத்த வேண்டுமென்று யோசனை கூறியது. கூட்டுறவு நிறுவனங்களும் இந்தக் கழகத்தின் நோக்க எல்லைக்குள் வரவேண்டுமென்ற பிரச்சினையானது பரிசீலனைக்குரியது.

## 8. கடன்களுக்கான பிணையம்

தமிழ்நாட்டில் பயிர்க்கடன் முறை பின்பற்றப்படுவதற்கு முன்பு, ஓர் உறுப்பினருக்கு அளிக்கப்பட்ட கடன் தொகை, பொதுவாக, அவர் சொத்தின் பெறுமானம் அடிப்படையிலிருந்தது. கடனுக்கான பிணையம், பெரும்பாலும் மற்றோர் உறுப்பினரின் நபர் ஜாமீனாக இருந்தது. மத்தியக்காலக் கடன்கள் விஷயத்தில் அதாவது, 3-லிருந்து 5 ஆண்டுகளுக்கான கடன்கள் விஷயத்தில், எப்பொழுதுமே பிணையம் இயங்காச் சொத்தாக இருந்தது. தொடர் அடைமான அடிப்படையில், குறுகிய காலக் கடன்கள் அளிக்கும் முறையுங்கூட இருந்தது. ஆனால், இது ஒரு குறைந்த அளவில்தான் பின்பற்றப்பட்டது. நில மதிப்பிற்குப் பதில், மொத்த விளைபொருள்களின் மதிப்பு, சாகுபடிச்செலவு ஆகியவை கடன் தொகையைத் தீர்மானிக்கும் காரணிகளாக விருக்கவேண்டு மென்பதும், சில வரம்பிற்கு மேற்பட்ட குறுகிய காலக் கடன்கள் இயங்காச் சொத்தின்மீது இருக்கவேண்டுமென்பதும் ரூ. 1000-க்கும், அதற்குக் குறைவாகவு முள்ள மத்தியக் காலக் கடன்கள் நபர்ஜாமீன்பேரில் இருக்கலா மென்பதும் தவிர மேலே விவரிக்கப்பட்ட அதேவகையான நடைமுறையானது பிணையம் விஷயத்தில் தற்போதுங்கூடப் பின்பற்றப்படுகிறது.

நபர்ஜாமீன் முறையானது, ஒரு பிணைய வகையாக மட்டுமின்றி, காலதாமதமில்லாமல் திருப்பிச் செலுத்துவதற்காகக் கடன் வாங்கினவர்களிடையே பரஸ்பர அழுத்தம் கொடுக்கும் ஒரு முறையாக மேற்கொள்ளப்பட்டது. பொதுவாக, இரண்டு உறுப்பினர்கள் ஒருவருக்கொருவர் தாங்கள் பெறும் கடன்களுக்காகப் பிணைதாரர்களாக நிற்கின்றனர். பிணைதாரர், கடன் வாங்குபவருக்குக் கொடுக்கப்பட்ட கடனுக்காகத் தேவைப்படும் விகிதத்தில் பங்கு மூலதனத்தைப் பெற்றிருக்கத் தேவையில்லை. மற்றும், அவர் பிணைதாரராக நிற்கும் கடன் தவணை கடந்து விட்டால், அதன் காரணமாக அவர் சங்கத்திலிருந்து கடன் பெறுவதில் தடையிராது. 1972ஆம் ஆண்டுச் ஜூன் இறுதியில், நிலுவையிலிருந்த கடன்களின் பிணையம்படியான பாகுபாடு அடுத்துத் தரப்பட்டுள்ளது.

(ரூபாய், ஆயிரக் கணக்கில்)

| | 30-6-76 ஆம் நாளன்று நிலுவையிலிருந்த தொகைமொத்தம் | தவணை வைப்புகள் | அரசு கடன் பத்திரங்கள் | முன்னேறக்கப் பட்ட பயிர்கள் | விவசாய விளைபொருள் உற்பத்தி | வணிகச் சரக்குகள் | பொன், வெள்ளிச் சாமான்கள் | இயங்காச் சொத்துகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| அனைத்திந்தியாவில் | 858,26,23 | 172,81 | 3,61 | 266,77,55 | 21,16,43 | 4,26 | 4,99,38 | 301,91,93 |
| தமிழ்நாட்டில் | 71,80,35 | 94,04 | இல்லை | 10,85,35 | 1,15,96 | இல்லை | 52,89 | 17,18,89 |

| | நபர்ஜாமீன் | ஆதாரமற்றவை | இதரவை |
|---|---|---|---|
| | 10 | 11 | 12 |
| அனைத்திந்தியாவில் | 307.64.39 | 43,97 | 11,53.52 |
| தமிழ்நாட்டில் | 40,1[illegible],08 | இல்லை | 1,01,08 |

நபர்ஜாமீன்மீதான கடன் தொகைகளும், இயங்காச் சொத்துப் பிணையத்தின்மீதான கடன் தொகைகளும், நாட்டு முழுமைக்காக ஏறக்குறையச் சமமாகவிருந்தாலும், தமிழ்நாட்டில் நபர்ஜாமீன்மீதான கடன்கள் முதன்மையானவையாக வுள்ளன. தமிழ்நாடு உள்ளிட்ட 6 மாநிலங்கள் மட்டுந்தான் பொன், வெள்ளி (நகைகள்) ஆகியவையின் ஈட்டின்பேரில் கடன்கள் வழங்குகின்றன. பொதுவாகப் பல்வேறு வகையான பிணையத்தின்மீது அளிக்கப்படும் கடன்களுக்கு, உச்சக் கடன் வரம்புகள் நிர்ணயிக்கப்படுகின்றன. உதாரணமாகத் தமிழ்நாட்டில் ஓர் உறுப்பினர்க்கு நகையீட்டுக் கடன்களும், விளைபொருள்கள் ஈட்டுக் கடன்களும், ஒவ்வொரு கடனும் ரூ. 1000 தொகை வரம்பு வரைக்கும் அளிக்கப்படுகின்றன. விவசாயக் கடன் சங்கங்களில் கடன்பெறுபவர், அவர் நிலமுள்ள சாகுபடியாளராக விருந்தாலும்சரி, குத்தகைச் சாகுபடியாளராக விருந்தாலும்சரி, தம் இயங்காச் சொத்துகளின்மீது ஓர் ஈட்டை (Charge) ஏற்படுத்துவதற்காக மராட்டியச் சட்டத்தைப் போன்று சட்டப்படியான ஒரு சரத்துச் செய்யப்படலாமென்று யோசனை கூறப்பட்டுள்ளது. இவ் வேற்பாட்டினால், கடன் வாங்கும் ஒவ்வொரு சமயமும், நபர்ஜாமீன் பெறுவதற்கு அவசியமிராது.

## 9. கடன்களை வசூலித்தல்

ஒரு கூட்டுறவுக் கடனமைப்பின் வலுவு, பெருமளவு காலதாமதமில்லாத கடன் வசூலின்மீது சார்ந்துள்ளது. கடன் வசதியானது தளர்த்தப்படும்போது காலதாமதமற்ற கடன் வசூலை நிச்சயப்படுத்துவதற்குக்கூட, கவனம் செலுத்தப்பட வேண்டியுள்ளது. எனினும், அதிகரித்துவரும் தவணை கடந்த பாக்கிகள் கூட்டுறவுக் கடன் நிறுவனங்களி லிருந்து வருகின்றன. கடன் தேக்கத்திற்கு இது வழி செலுத்த நேரிடலாம். ஐந்தாவது திட்டத்திற்கான கூட்டுறவு பற்றிய நடைமுறைக் குழுவின் அறிக்கை பின்வருமாறு கூறுகிறது. 'கூட்டுறவுக் கடன் நிறுவனங்களை எதிர் நோக்குகின்ற மிக முக்கியமானதும், கவலை தருவதுமான பிரச்சினையானது தவணை கடந்த பாக்கிகளே. நிறுவனக் கடன் அமைப்புகள், உற்பத்தி வளர்ச்சிக்காகப் போதுமான நிதி ஆதரவைத் தொடர்ந்து அளிக்க வேண்டுமானால், காலக்கிரமக் கடன் திருப்பிச் செலுத்துதலைக் குறித்துச் சாகுபடியாளர்களிடையே ஒரு பொறுப்புணர்ச்சியை ஏற்படுத்துவது மிக முக்கியத்துவம் வாய்ந்தது.'

அடுத்த பக்கம் அட்டவணை 1967–68ஆம் ஆண்டிலிருந்து, தவணை தவறிய பாக்கிகள் நிலைமையைக் காட்டும்.

## கடன் நிலுவைக்குத் தவணை தவறிய பாக்கிகளின் சதவிகிதம்

| ஆண்டு | நபர்களால் விவசாயக் கடன் சங்கங்களுக்கு | சங்கங்களால் மத்திய வங்கிகளுக்கு |
|---|---|---|
| 1967–68 | 32 | 24.7 |
| 1969–70 | 38 | 29.1 |
| 1970–71 | 41 | 29 |
| 1971–72 | 44 (28) | 36(9) |

குறிப்பு: அடைப்புக் குறியிலுள்ள எண்கள் தமிழ்நாட்டின் சதவிகிதங்களுக்குத் தொடர்புள்ளவை.

பிரதம விவசாயக் கடன் வசதிச் சங்கங்களைப் பொறுத்த மட்டில், நாடு முழுமைக்காகவுமுள்ள தவணை கடந்த பாக்கிகள் 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் ரூ.377 கோடியாக விருந்தன. அத் தொகையானது சங்கங்களால் ஒப்பளிக்கப்பட்ட கடன்களின் நிலுவைத் தொகையில் 44 சதவிகிதமாக அமைந்திருந்தது. தமிழ் நாட்டில் அந்தச் சதவிகிதம் 28 ஆக விருந்தது. மத்தியக் கூட்டுறவு வங்கிகளைப் பொறுத்தமட்டில் நாடு முழுமைக்காகவும், தவணை கடந்த பாக்கிகள், பெரும்பாலும் பிரதமக் கூட்டுறவுச் சங்கங் களுக்குக் கொடுக்கப்படுகின்ற கடன்களின் நிலுவைகளில் 36 சதவிகிதமாக அமைந்திருந்தன. தமிழ்நாட்டில் அந்தச் சதவிகிதம் 9 ஆக இருந்தது.

அனைத்திந்தியக் கிராமக் கடன் மறு ஆய்வுக் குழுவினர் (1969), தவணை கடந்த பாக்கிகளுக்கான முக்கியக் காரணங்களை பின்வருமாறு கூறியுள்ளனர். (i) போதாத மேற்பார்வை, (ii) குற்றமுள்ள கடனளிப்புக் கொள்கைகள், (iii) பலம்குன்றிய நிருவாகம், (iv) ஒப்பிடும் வகையில் குறைந்த வட்டிவிகிதம், (v) தவணை கடந்த பாக்கிகளை உறிஞ்சுவதற்கு உள்ளிட்ட ஆதாரங்களின் குறைவு, (vi) பயிர் சாவியாதல், (vii) அரசியல் தலையீடு, (viii) விற்பனையுடன் கடனிணைப்பின் தோல்வி. 1968-70ஆம் ஆண்டு, ரிசர்வ் வங்கி தனது 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் ஆய்வு மதிப்பீட்டில்,' தவணை கடந்த பாக்கி களுக்கான காரணங்களைப் பின்வருமாறு தெரிவித்துள்ளது.

'கடன் பெறுபவர்களின் திருப்பிச் செலுத்தும் சக்தியைப் பாதிக்கும் வெள்ளங்கள், வறட்சி முதலியன போன்ற இயற்கை விபத்துகளைத் தவிர, வங்கிகளால் மேற்கொள்ளப்பட்ட போதாததும் திறமையற்றதுமான மேற்பார்வையும், சங்கங்கள், வங்கிகள் ஆகியவற்றின் நிருவாகத்தின் தரமும், விற்பனையுடன் கடனிணைப்பு இல்லாமையும், நிர்ப்பந்தமான நடவடிக்கைகளை மேற்கொள்ள விருப்பமில்லாமையும், அல்லது மேற்கொள்ளும் போது நிறைவேற்றல் துறையில் கடன் தீர்ப்புகளைக் காலதாமதமில்லாமல் நிறைவேற்றுவதற்கு ஆற்றலின்மையுமே சாரமற்ற செயல்பாட்டிற்கு முக்கியமான காரணங்கள் என்று கூறலாம்.'

நாட்டில் குறுகிய கால, மத்தியக் கால விவசாயக் கடனை வழங்குகின்ற கூட்டுறவுச் சங்கங்களில் பெருகிவரும் தவணை தவறிய பாக்கிகளின் காரணங்களைப் பகுத்தாராய்ந்து தக்க பரிகார நடவடிக்கைகளை யோசனைகூறும்பொருட்டு, 1972ஆம் ஆண்டு டிசம்பரில் ரிசர்வ் வங்கியின் ஒரு நிருவாக இயக்குநராக இருந்த திரு. சி. டி. டாட்டே (C. D. Datey) அவர்கள் தலைமையில் ஓர் ஆராய்ச்சி அணியை (Study Team) ரிசர்வ் வங்கி அமைத்தது. அந்த ஆராய்ச்சி அணி 1974ஆம் ஆண்டுப் பிப்ரவரியில் தன் அறிக்கையைச் சமர்ப்பித்தது. இக்குழுவின் ஆராய்ச்சியின்படி, தவணை கடந்த பாக்கிகளுக்கான முக்கியமான காரணங்களாவன: (i) கடன்களைத் திருப்பிச் செலுத்துவதற்குச் சாகுபடியாளர்களிடையே விருப்பமின்மையும், ஒழுக்கக் கட்டுப்பாடின்மையும், (ii) கடனளிக்கும் கொள்கைகளின் குறைபாடுகள். (iii) தவணை தவறிய உறுப்பினர்கள்மீது விரைவான நடவடிக்கையை எடுப்பதற்கு நிருவாகங்களின் விருப்பமின்மை, (iv) காலக் கிரமத்தில் கடன்கள் திருப்பிச் செலுத்தப்படுவதை ஊக்குவிக்காத மாநில அரசுகளின் சில நோக்கங்களும், கொள்கைகளும். கடன்களைத் திருப்பிச் செலுத்துதலைப் பொறுத்தமட்டில், அந்த ஆராய்ச்சிக் குழுவினர் சிறு குடியானவர்கள், நடுத்தரக் குடியானவர்கள் அல்லது பெரிய குடியானவர்கள் ஆகிய எல்லாக் குடியானவர்களும் ஏறக்குறைய ஒரே ரீதியாகவே நடந்து கொண்டு வந்துள்ளனர் என்ற கருத்தைத் தெரிவித்தனர். சிறு விவசாயிகளுள், மிகமிகச் சிறிய விவசாயிகள், அதாவது மூன்று ஏக்கர்களுக்குக் குறைந்த நிலங்களை வைத்திருப்பவர்கள், தவணை தவறியவர்களின் மிகப் பெரிய தனித்த ஒரு தொகுதியாக உள்ளனர். அதாவது, தவணை தவறியவர்களின் மொத்த எண்ணிக்கையில் அவர்கள் 33 சதவிகிதமாக அல்லது மூன்றில் ஒரு பாகமாக வுள்ளனர்.

தவணை கடந்த பாக்கிகளுக்கான காரணங்களும், அவற்றிற்குத் தக்க பரிகாரங்களும்:

## 1. இயற்கை விபத்துகள்

தவணை கடந்த பாக்கிகளுக்கான காரணங்களுள் ஒன்று வறட்சி, வெள்ளங்கள், பயிர்களைப் பாதிக்கும் பூச்சிக்கொல்லிகள் போன்ற இயற்கை விபத்துகளாகும். ஒரு சில ஆண்டுகள் முன்புவரை, சாகுபடிக் கடன்களைத் திருப்பிச் செலுத்துவதற்காகக் குறுகிய நீடிப்புகள் அனுமதிக்கப்பட்டன. ரிசர்வ் வங்கி முதற்கொண்டு விவசாயக் கடன் வங்கிகள் கடைசியாகப் பல்வேறு மட்டங்களில், 'விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதி' அமைக்கப்பட்டதிலிருந்து, அத்தகைய சந்தர்ப்பங்களில் குறுகிய காலச் சாகுபடிக் கடன்கள், மத்தியக் காலக் கடன்களாக மாற்றப்படுதல் வசதி செய்யப்பட்டுள்ளது. 1961ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட விதிகளில் 46ஆவது விதியின்கீழ், விவசாயக் கடன் சங்கங்களும், நிதி வங்கிகளும் தங்கள் இலாபத்தில் 10 சதவிகிதத்தை, 'விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதிக்கு' ஒதுக்கி வைக்கத் தேவைப்படுகின்றன. இந் நிதியானது பஞ்சம், வறட்சி அல்லது அதுபோன்ற எதிர்பாராத சம்பவங்கள் காரணமாகக் கடன்கள் திருப்பிச் செலுத்தப்படுதலை ஒத்திவைப்பதற்குக் கடன் வாங்கியவர்களுக்கு வகை செய்ய உபயோகப்படுத்தப்பட வேண்டும். ரிசர்வ் வங்கியால் வகுக்கப்பட்ட ஒரு திட்டத்தின் கீழ், மாநில அரசு, மாநிலக் கூட்டுறவு வங்கி மட்டத்தில் 'விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதிக்கு' ஒட்டுமொத்தமான ஓர் உதவித்தொகையை அளித்துவந்துள்ளது. இக் காரியத்திற்காக, இந்திய அரசால் உதவி வழங்கப்படுகிறது. தமிழ்நாட்டில், மாநில அரசு இதுவரை ரூ. 177.75 இலட்சம் தொகையை, மாநிலக் கூட்டுறவு வங்கியின் 'விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதி'க்கு உதவித்தொகையாக அளித்துள்ளது. 1973ஆம் ஆண்டு டிசம்பர் இறுதிவரை, விவசாயிகளுக்கு நிவாரணம் அளிப்பதற்காக, மத்தியக் காலக் கடன்களாக மாற்றப்பட்ட மொத்தக் குறுகிய காலக் கடன்களின் தொகை ரூ. 19.58 கோடியாக இருந்தது. அத்தகைய கடன் மாற்றுதல் அனுமதிக்கப்படும் முன்னர் ஒரு முக்கியமான தேவையானது, எதிர்நோக்கப்பட்ட பயிர் விளைச்சல், 'அன்னவாரியின்' படி 6 அணுக்களுக்குக் குறைவாக அல்லது அதற்குச் சமமாக வுள்ளது என்று வருவாய்த்துறை சான்று செய்யவேண்டும். கடன்கள் திருப்பிச் செலுத்துவதற்கான தேதிக்கு முன்பு, அவ்வாறு மாற்றப்படும்பொருட்டு, வருவாய்த்துறையின் சான்றிதழ் காலத்தில் வழங்கப்பட வேண்டும். எவ்விதமான தாமதத்தையும் தவிர்க்கும்பொருட்டு, யாதொரு சங்கத்தின் விண்ணப்பத்தின் பேரிலும், மத்திய

வங்கியானது மாவட்ட வேளாண்மை அதிகாரியைச் சம்பந்தப் பட்ட கிராமங்களை ஆய்வு செய்து, விளைச்சல் 50 சதவிகிதத் திற்குக் குறைவாக இருக்க நேரிடுமா என்பதுபற்றி, ஓர் அறிக்கையை அனுப்பும்படி கேட்டுக்கொள்ள வேண்டும். இவ் வேண்டுகோள் அறுவடைக்கு முன்பு, குறைந்தது ஒரு மாதத் திற்குள் செய்யப்பட வேண்டும். வேண்டுகோள் செய்யப்பட்ட ஒரு மாதத்திற்குள், அதாவது அறுவடைக்கு முன்பு, இந்த அறிக்கை அனுப்பப்பட வேண்டுமென்று, பொதுவான அறிவுரை களை வேளாண்மைத்துறை வெளியிட வேண்டும். இவ் வறிக்கையைப் பெற்றவுடன் மத்திய வங்கி கடன் மாற்றுதலுக்கான நடவடிக் கையை யெடுக்க வேண்டும்.

மற்றும், இயற்கை விபத்துகள் காரணமாக நிகழக்கூடிய நட்டங்களை ஏற்பதற்கு, இந்திய அரசு ஒரு 'விவசாயக் கடன் (உத்தரவாதம், நிவாரணம்) நிதி'யை, மாநில மட்டத்தில் அதற்கு ஒரு நேரான நிதியுடன் ஏற்படுத்தியுள்ளது. தொடர்ந்து நிகழும் பயிர் சாவியாதல்களாலும், மற்றும், அதுபோன்ற காரணங்களாலும் எழுகின்ற, வசூல் செய்ய முடியாத பாக்கிகளைத் தள்ளுபடி செய்வதற்காகக் கடன் நிறுவனங்களுக்கு நிவாரண வகையான உதவித்தொகைகளை அளிக்கும் நோக்கத்துடன் இந் நிதியானது அமைக்கப்பட்டது. தமிழ்நாட்டில் ஒரு விவசாயக் கடன் உத்தரவாத நிவாரண நிதியானது மாநில மட்டத்தில் சங்கங்களால் அளிக்கப்பட்ட கடன்களில் ஒரு சதவிகிதத்தில் அரசால் அளிக்கப்பட்ட உதவித்தொகைகளைக் கொண்டு அமைக்கப் பட்டுள்ளது. அரசு இதுவரை ரூ.43.24 இலட்சம் தொகையை உதவியுள்ளது. 31–12–73ஆம் நாளன்று இந் நிதியில் ரூ. 73.00 இலட்சம் வரவு இருப்பு இருந்தது.

## 2. கடனளிப்புக் கொள்கைகளின் குறைவுகள்

(அ) அடிக்கடி கூட்டுறவுச் சங்கங்கள் போதாக் கடன்களை வழங்குகின்றன, அதாவது, உறுப்பினர்களின் தேவைகளுக்கு மிகக் குறைந்த அளவுள்ள கடன்கள். இதனால், தங்கள் மிச்ச மான தேவைகளுக்காக, அவர்கள் வட்டிக்கடைக்காரர் களிடமிருந்து கடன் வாங்க நிர்ப்பந்தப்படுத்தப்படும் நிலைமை யிலுள்ளனர். வட்டிக்கடைக்காரரிடமிருந்து பெறும் கடன் அதிக மான வட்டி விகிதத்தைக் கொண்டது என்ற காரணத்தாலும், வட்டிக்கடைக்காரர்கள் கொடுக்கும் அதிகமான தொந்தரவின் காரணமாகவுங்கூட அவர்களிடமிருந்து வாங்கின கடன்களை முதலில் திருப்பிச் செலுத்துவதற்கு அவர்கள் அதிகமாக விரும்பு கிறார்கள். எனவே, கடன் வாங்கியவர்கள், சங்கத்திற்குத்

தங்கள் கடன் பாக்கியைத் தீர்ப்பதற்குப் போதுமான உபரிப் பணத்தைப் பெற்றிராம லிருக்கலாம். அதன் விளைவாக, தவணை கடந்த பாக்கிகள் குவிகின்றன. ஆகையால், சிறு குடியானவர்கள், நன்னிறைவற்ற குடியானவர்கள் ஆகியோர்களுக்கு முழுமையாக உதவிபுரிந்து, அவர்களை வட்டிக்கடைக்காரர்க ளிடமிருந்து விடுதலை செய்யும் வண்ணம் அவர்களுக்குச் சங்கங்கள் போதுமான கடனைக் கிடைக்கச் செய்ய வேண்டும்.

(ஆ) கடனளிப்பில் தாமதம். 'தாமதப்படுத்தப்பட்ட கடன் மறுக்கப்பட்ட கடனாகும்'' (Credit delayed is Credit denied). காலத்தில் கட னளிக்கப்படாவிட்டால், உறுப் பினர்கள் உள்ளூர் வட்டிக்காரர்களையும் அல்லது வர்த்தகர்களையும் தங்கள் உடனடியான தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக அணுகுகின்றனர். கூட்டுறவுச் சங்கக் கடன்கள் ஒப்பளிக்கப்படு கின்றபோது, அவர்கள் அவற்றைப் பெற்று இதரச் சில காரியங் களுக்காக அவற்றை உபயோகப்படுத்துகின்றனர். அதன் பின்னர்க் கூட்டுறவுக் கடன்களைக் காலக்கிரமத்தில் திருப்பிச் செலுத்து வது கடினமாகிறது. ஆகவே, பாக்கிகள் குவிவதற்கு இது வழி செலுத்துகிறது. ஆகையால், காலக்கிரமமான கடன் பட்டுவாடா வானது, கால தாமதமில்லாத திருப்பிச் செலுத்துதலை வசதி செய்கின்றது. பயிர்க்கடன் முறையின்கீழ், தாமதத்தை மிகக் குறைவாக்குவதற்கு நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. அவை பயனுறுதியாக அமல் செய்யப்பட வேண்டும்.

### (இ) பெயரிரவல் கடன்கள், பொய்க்கடன்கள் இருத்தலும், கடன்கள் பட்டுவாடாவில் முறைகேடுகளும்

சங்கங்களின் நிருவாக்குழு அலுவல் இயக்குநர்கள், மற்ற வர்கள் பெயரில் கடன்களை வாங்கி அவற்றை உற்பத்தியல்லாத காரியத்திற்காக உபயோகப்படுத்தக் கூடும். சிலவேளைகளில், அரசியல் செல்வாக்கானது பலமுறை தகுதியற்றவர்களுக்குக் கடன்கள் அளிக்கப்படுவதை விளைவிக்கின்றது. வீக்கப்படுத்தப் பட்ட உச்சக்கடன் வரம்புகளும் தயாரிக்கப்படுகின்றன. மற்றும், திருப்பிச் செலுத்தும் சக்தியை அனுசரிக்காமல், உறுப்பினர்கள் கடன்கள் அளிக்கப்படலாம். அவர்கள் காலக்கிரமத்தில் திருப்பிச் செலுத்தத் தவறினல், தவணைகடந்த பாக்கி ஏற்படுகிறது. அத்தகைய ஒழுங்கீனங்களுக்காகச் சம்பந்தப்பட்ட நபர்கள் மீது நடவடிக்கை யெடுப்பதுடன், சங்கங்கள் தகுதியுள்ள கடன் வாங்குபவர்களுக்குக் கடன்கள் அளிக்கப்படுவதை நிச்சயப் படுத்தவேண்டும். கடன்கள் பொருளில் வழங்கப்படுதல் இந்தத் தீயபழக்கங்களைச் சில அளவிற்குக் குறைக்கலாம். கண்டிப்பான

மேற்பார்வையும், கடன்களைச் சரிபார்த்தலும், பெயரிரவல் கடன்களையும், பொய்க்கடன்களையும் மிகக் குறைவு செய்வதற்கு உதவும். சங்கம் இணைக்கப்பட்ட மத்திய வங்கிக் கிளையில் பணமாக்கப்பட வேண்டிய காசோலைகள் மூலம், ஒரு சங்கம் தன் உறுப்பினர்களுக்குக் கூடுமானவரை கடனின் ரொக்கப் பகுதியைப் பட்டுவாடாச் செய்ய வேண்டும். காசோலைகள் ஒன்றுக்கு மேற்பட்ட சங்க நிர்வாகக்குழு அலுவல் இயக்குநர்களால் கையெழுத்திடப்பட வேண்டும்.

### 3. கடன்களின் உபயோகத்தின்மீது மேற்பார்வைக்குறைவு

இதுவும், தவணை கடந்த பாக்கிகளுக்கு ஒரு காரணமாகக் கூறப்படலாம். மேற்பார்வை ஏற்பாடுகள் போதாதவையாகவாவது அல்லது மேற்பார்வைச் சிப்பந்திகள் அசட்டையாகவாவது இருக்கலாம். தமிழ்நாடு உள்ளிட்ட பல மாநிலங்களில் இருப்பதுபோன்று மேற்பார்வைக்கான பொறுப்பு மத்திய வங்கி வசம் இருக்க வேண்டும். கடன் உபயோகத்தின்மீது மேற்பார்வைக் குறைவானது உற்பத்தியல்லாத காரியங்களுக்காகக் கடன்கள் துர்ப்பிரயோகம் செய்யப்படுவதை விளைவிக்கின்றது. அவ்வாறு துர்ப்பிரயோகம் செய்வதற்கு ஒரு காரணம், பயிர்க்கடன் முறையின்கீழ் வாழ்க்கைச் செலவுக்காகக் கடன்கள் அளிக்கப்படாதது. ஆகையால், கடன்களின் உபயோகத்தின்மீது கண்டிப்பான மேற்பார்வை இருக்கவேண்டும். இந்தக் காரியத்திற்காகப் போதுமான சிப்பந்திகள் அமர்த்தப்படவேண்டும். கடன்வாங்கினவர்கள் கடன்களைத் துர்ப்பிரயோகம் செய்தால், கடன்களைத் திரும்பப் பெறுவதற்குக் காலதாமதமில்லாத நடவடிக்கையெடுக்கப்படவேண்டும். கூட்டுறவுச் சங்கங்கள் வாழ்க்கைச் செலவுகளுக்காகவுங்கூட ஒரு நியாயமான கடன் பகுதியை வழங்கவேண்டும்.

### 4. தவணை தவறிய உறுப்பினர்கள்மீது விரைவான நடவடிக்கையெடுப்பதற்கு நிர்வாகத்தின்பால் அக்கறையின்மை

நடுவர் தாவாக்களையும், நிறைவேற்றல் மனுக்களையும் தாக்கல் செய்வதற்கு, விவசாயக் கடன்வசதிச் சங்கங்களின் நிருவாகக் குழுக்கள் வேண்டுமென்றே தாமதம் செய்திருக்கின்ற சந்தர்ப்பங்களிருக்கின்றன. உறுப்பினர்களிடமிருந்து பாக்கிகளை வசூல் செய்வதற்காக, நிருவாகக் குழுக்கள் தங்களைப் பொறுப்பாளிகளாக ஏற்படுத்திக் கொள்ளவேண்டும். சம்மதிக்கச் செய்யும் முயற்சிகள் தோல்வியுறும்போது, ஒரு கடனைத் தவணைத் தேதியிலிருந்து மூன்று மாதங்களுக்குள் வசூல் செய்வதற்கான

நடவடிக்கைகளைத் தொடங்குவது நிருவாகக் குழுவினர்பாற்பட்ட கடமையாக இருக்க வேண்டும். இந்தக் காலவரைக்குள், நிருவாகக் குழு நடவடிக்கை எடுக்கத் தவறினால், சங்கத்தின் செயலர் நடவடிக்கை யெடுக்கவேண்டும். அடுத்த மூன்று மாதத்திற்குள், செயலர் நடவடிக்கை யெடுக்கத் தவறினால், ஒரு தக்க சட்டப்படியான சரத்தின்மூலம் நிதிவங்கிகள் நடவடிக்கை யெடுக்க அதிகாரமளிக்கப்பட வேண்டும். தங்கள் உறுப்பினர் களிடமிருந்து எல்லாத் தவணை கடந்த பாக்கிகளையும் திரும்பப் பெறுவதில் சங்கங்களுக்கு உதவிசெய்தல், மத்திய வங்கிகளின் பொறுப்பாகும். திரும்பப்பெறும் காரியத்தில், சங்கங்களையும், மத்திய வங்கிகளையும் மெதுவாகப் போகச் செய்யும் முடிவையுடைய அரசியல் செல்வாக்கும் அல்லது இதரப் புறம்பான ஆலோசனையும் கொண்டுவரப்படக்கூடாது.

## 5. விற்பனையுடன் கடனிணைப்பு இல்லாமை

இந்தத் திட்டத்தின் பயனுறுதியான அமல் இல்லாமையின் காரணமாக, உறுப்பினர்கள் தங்கள் விளைபொருள்களைப் பிரதி கூலமான ஒரு விலைக்கு மற்றொரு வர்த்தகருக்கு விற்றுவிடு கின்றனர். தங்கள் பயிர்களைக் கூட்டுறவு அமைப்புகளின்மூலம், விற்பனை செய்வதற்கு ஒப்புக்கொண்டு, பிரதம கடன் சங்கங் களின் கடன் வாங்குபவர்கள் ஒப்பந்தப் பத்திரங்கள் எழுதிக் கொடுத்தாலுங்கூட, இந்த ஒப்பந்தங்கள் பெரும்பாலும் மதிக்கப் படுவதில்லை. அவைகளைக் கடனளிக்கும் அமைப்புகளும் நிறை வேற்றுதல் செய்கிறதில்லை. விற்பனைச் சங்கத்தின்மூலம் விற்கப் பட்ட பயிர்களின் விற்பனைத் தொகையிலிருந்து வசூல் செய்யப் பட்ட கடன்கள், கடன் சங்கங்களால் வழங்கப்பட்ட மொத்தக் கடன்களில் ஒரு புறக்கணிக்கக்கூடிய விகிதமாகவே வுள்ளது. அதன் விளைவாக, தவணை கடந்த பாக்கிகளை ஏற்படுத்தும் வகையில் கடன் வசூலில் தாமதமிருக்கிறது. விற்பனையுடன் கடனிணைப்புக் கான திட்டம் பயனுறுதியாக அமல் செய்யப்பட்டு, கடன் வசூல், விற்பனைச் சங்கங்கள் மூலம் கிடைத்த விற்பனைத் தொகை யிலிருந்து செய்யப்படவேண்டும்.

## 6. திருப்பிச் செலுத்துவதற்கு, சாகுபடியாளர்களிடையே விருப்பக் குறைவும், ஒழுங்குக்கட்டுப்பாட்டுக் குறைவும்

இது பெரும்பாலும் உறுப்பினர்களிடையே சரியான கல்வி இல்லாமையினாலும், தலைவர்கள் குறைவினாலும் ஏற்படுகிறது. நிருவாகக் குழு அலுவல்இயக்குநர்கள் விழிப்பாக இருந்து,

உறுப்பினர்கள் காலந்தவறாத திருப்பிச் செலுத்துதலின் பலனை உணரும்போது, காலந்தவறாத கடன் வசூல் நிச்சயப்படுத்தப் படக்கூடும்.

## 7. சாதகமற்ற அரசு கொள்கைகள்

ஆராய்ச்சிக் குழுவின் கருத்தின்படி, மாநில அரசுகளால் பின்பற்றப்பட்ட நோக்கங்களும் சில கொள்கைகளும் கூட்டுறவுப் பாக்கிகளைத் திருப்பிச் செலுத்துவதற்காகச் சாதகமற்ற ஒரு சூழ்நிலையை ஏற்படுத்தியுள்ளன. தங்கள் விவசாயக் கடன்களைத் தள்ளுபடி செய்வதற்குச் சில மாநில அரசுகளின் முடிவுகள் கூட்டுறவுச் சங்கங்களின் தவணை தவறியவர்களிடையே தங்கள் கடன்கள்கூடத் திருப்பிச் செலுத்தப்படத் தேவையில்லை என்ற ஓர் எண்ணத்தை ஏற்படுத்தியுள்ளது என்றும் கூறப்படுகிறது. மேலும், சில மாநில அரசுகள், கூட்டுறவுப் பாக்கிகள் வசூலித்தலைக் குறித்த நிறைவேற்றுதல் நடவடிக்கையை அதிகமாகத் தாமதப்படுத்தியுள்ளன, அல்லது ஒத்திப்போட்டுள்ளன. மற்றும், சில மாநில அரசுகளின் பிரதிநிதிகளால் வெளியிடப்பட்ட சில அறிக்கைகள் தங்கள் கூட்டுறவுப் பாக்கிகள் திருப்பிச் செலுத்தப் படத் தேவையில்லை என்ற எண்ணத்தை வெளிப்படையாகவோ ஊகையாகவோ கடன் வாங்கினவர்களுக்குக் கொடுத்துள்ளது என்றும் கூறப்படுகிறது. இவை எல்லாவற்றின் மொத்தமான விளைவு, தவணை தவறுதலின்மீது ஒரு மதிப்புயர்வு கொடுப்பதும், காலந்தவறாத திருப்பிச் செலுத்துதலுக்கான சூழ்நிலையைப் பாதிப் பதுமாக இருந்துள்ளது. ஆகையால், ஆராய்ச்சிக்குழு, கூட்டுறவுச் சங்கங்களின் தவணை தவறியவர்கள் எந்தச் சந்தர்ப்பங்களிலும், தக்காவிக்கடன்கள் வாயிலாகவோ இதர வகைகளிலோ அரசால் கடனுதவி செய்யப்படக்கூடாது என்ற அனைத்திந்தியக் கிராமக் கடன் மறுஆய்வுக்குழுவின் பரிவுரைகளை ஆதரித்தது. ஓராண்டுக்கு மேற்பட்டுத் தவணை தவறுதல் செய்திருக்கிற தவணை தவறிய உறுப்பினர்கள் எந்தப் பிரதம கடன் சங்கங்கத்தின் பேரவைக் கூட்டங்களிலும் அல்லது ஒரு தேர்தலிலும் வாக்களிக்க அனுமதிக்கப்படக்கூடாதென்றும் ஆராய்ச்சிக்குழு அறிவுரை செய்துள்ளது. கடனைத் திருப்பிச் செலுத்துதல் ஒத்திவைக்கப்படக் கூடும் என்று கூட்டுறவுச் சங்கங்களில் கடன் வாங்கினவர்களுக்கு ஓர் எண்ணத்தைக் கொடுக்கக்கூடிய எந்தவிதமான அறிக்கையைச் செய்யாமலும், தங்கள் அதிகாரிகளுக்கு எந்தவித அறிவுரை களும் அனுப்பாமலும், மாநில அரசுகள் நடந்து கொள்ள வேண்டும் என்றுங்கூட அந்த ஆராய்ச்சிக்குழு யோசனை கூறியது.

கடன்கள் தாமதமில்லாமல் வசூல் செய்யப்படுவதற்காகச் சந்தானம் குழுவினர் கீழ்க்காணும் நடவடிக்கைகளை யோசனை கூறியுள்ளனர்.

(i) விற்பனையுடன் கடனிணைப்புத் துறையில் விற்பனைச் சங்கத்திற்கு விளைபொருள்களை எடுத்துச் செல்வதற்காகக் கடன் வாங்கினவர்களுக்கு ஓர் ஊக்குவிப்பை வழங்கும் பொருட்டு, விற்பனைச் சங்கத்தின்மூலம் தங்கள் விளைபொருள்களை விற்பனை செய்பவர்கள், இயல்பான கடன் வரம்புக்கு மேலாக 10 சதவிகித அளவு கூடுதலான ஒரு கடன் வரம்பு ஒப்பளிக்கப் படவேண்டும்.

மேலும், விற்பனைச் சங்கங்களால் செய்யப்பட்ட கடன் வசூல் களின்மீது அச் சங்கங்கள் கடன் சங்கங்களால் 0.25 விகிதமுள்ள ஒரு தரகு (Commission) அளிக்கப்பட வேண்டும்.

(ii) இந்திய உணவுக் கழகமும், இதர அரசு அமைப்பு களும் நெல் கொள்முதல் செய்யும்போது, விவசாயிகள் தங்கள் சங்கங்களுக்குச் செலுத்தவேண்டிய பாக்கிகளைத் தெரிந்து கொண்டு, அந்தப் பாக்கிகளை வசூல் செய்ய உதவி செய்வதைக் கடமையாகப் பெற்றிருக்க வேண்டும். அறுவடைக்காலத்தில், ஒவ்வொரு சங்கமும் தன் உறுப்பினர்கள் பாக்கிகள் பட்டியலைத் தயாரித்து உணவுக் கழகத்திற்கும், விற்பனைச் சங்கத்திற்கும் தங்கள் விளைபொருள்களைக் கொள்முதல் செய்யும் இதர நிறுவனங் களுக்கும் அதன் நகல்களை அனுப்ப வேண்டும்.

(iii) ஒரு விவசாயச் சங்கத்தின் உறுப்பினர்களிடமிருந்து பெறவேண்டிய பாக்கிகள், சென்னை நிலவரி வசூல் சட்டத்தின் கீழ், சங்கத்திலிருந்து ஒரு வேண்டுகோளின்பேரில், நிலவரிப் பாக்கியாக வசூலிக்கப்பட வேண்டும். இந்தக் காரியத்திற்காக அந்தச் சட்டத்தின்கீழ், கூட்டுறவுப் பதிவாளர் மாவட்ட ஆட்சி யாளராகக் கருதப்பட வேண்டும்.

சங்கம் மத்திய வங்கிக்குத் தவணை தவறியிருந்தால், ஒரு தவணை தவருத உறுப்பினருக்கு ஒரு புதிய கடனை மறுப்பது நியாயமாகா. ஆனால், சங்கத்தால் தவணை தவறுதல் எந்த அளவிற்கும் இருக்கக்கூடாது. தமிழ்நாட்டில் மத்திய வங்கி களால் ஒப்புக்கொண்டுள்ளபடி தவணை தவறுதலில் அனுமதிக் கப்படக்கூடிய வரம்பு, நிலுவைக்கடன்களில் அல்லது கேட்பில் 50 சதவிகிதமாக உள்ளது. அத்தகைய ஒரு வரம்பு அவசியமாக உள்ளது. ஏனென்றால், ஒரு சங்கத்தால் குறைந்த பட்சம் 50

சதவிகிதக் கடன்கள் தீர்க்கப்பட்டாலொழிய, அது சரியாக நிர்வாகம் செய்யப்படுகிறது என்று கூறமுடியாது. அத்தகைய சங்கம், பாக்கிகளை வசூல் செய்வதற்குத் தன் பொறுப்பைச் சங்க நிர்வாகத்தின் கவனத்திற்குக் கொண்டுவர வேண்டுமானால், புதிய கடன் மறுக்கப்பட வேண்டும்.

ஒரு சங்கத்தில் தவணை கடந்த பாக்கிகள் கடனிலுவையில் 50 சதவிகிதத்திற்கு மேற்பட்டிருந்தால், அத்தகைய சங்கம், புதிய கடன் மறுக்கப்பட வேண்டுமென்றும், சங்கத்தில் உறுப்பினர்களுக்குக் கடனுதவி செய்வதற்கான மாற்று ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டுமென்றும் சந்தானம் குழுவினர் கூறியிருந்தனர். மத்திய வங்கி அந்தச் சங்கத்தின் நிருவாகத்தைத் தன்வசம் எடுத்துக்கொண்டு, புதிய உறுப்பினர்களுக்கும், தவணைதவறாத உறுப்பினர்களுக்கும், கடன்கள் வழங்கப்பட வேண்டும், அல்லது மத்திய வங்கிகளின் எல்லையிலுள்ள குடியானவர்களுக்கு அவை தாங்களே நேரடியாகக் கடன்கள் வழங்கலாம். ஒரு தாற்காலிக நடவடிக்கையாக இந்தக் காரியத்திற்காக மத்திய வங்கிக்கு உதவி புரிய உள்ளூர்க் குழு ஒன்று அமைக்கப்படலாம். எல்லையிலுள்ள தகுதிவாய்ந்த உறுப்பினர்களுக்குக் காலக்கிரமமான கடன் வழங்கும் நோக்கத்தில் இந்த நடைமுறை மாற்றம் நியாயப்படுத்தப்படும்.

## 8. பிரதம விவசாயக் கடன்வசதிச் சங்கங்களின் இதர நடவடிக்கைகள்

தன்னிறைவுள்ள விவசாயக் கடன் சங்கங்கள் கடனளித்தல் மட்டுமன்றி, விவசாயத்திற்குத் துணையாகவுள்ள அநேகப் பணிகளையும் மேற்கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றன. இந்த நோக்கத்துடன்தான், விவசாயக் கடன் சங்கங்கள் சீரமைக்கப்பட்டு, அவசியமான சம்பளச் சிப்பந்திகளையும், அலுவலகக்—கிடங்கு, கட்டடம் முதலியவற்றையும் கொண்டிருக்கின்றன. எனினும், விவசாயத் தேவைகள் வழங்குதல் துறையில் சங்கங்களின் செயற்பாடு முற்றிலும் குறிப்பானதாக இல்லாமலுள்ளது. அரசினர் சார்பாக இரசாயன உரங்கள் விநியோகம் செய்வதுடன், சங்கங்கள் தங்கள் சொந்தக் கணக்கில் இரசாயன உரங்களையும் (நேரான உரங்களையும், கலவை உரங்களையும்) இதரத் தேவைகளையும் கொள்முதல் செய்யவேண்டும். சங்கங்கள் பூச்சிகொல்லிகளைத் தெளித்தல் அல்லது தூவுதலையும்கூட மேற்கொள்ளலாம். தன் உறுப்பினர்களின் காப்பீட்டுக்காக, ஆயுள் காப்பீட்டு ஈட்டுறுதிக்

கழகத்திலிருந்து முகமை எடுத்துக் கொள்ளலாம். 1963ஆம்
ஆண்டின் திருத்தப்பட்ட காப்பீட்டு விதிகள், கூட்டுறவுச்
சங்கங்களும் பஞ்சாயத்துகளும் ஆயுள் காப்பீட்டுக் கழகத்தின்
பதிலியாகச் செயற்பட உரிமங்கள் எடுத்துக்கொள்வதை வகை
செய்கின்றன. இந்தக் காரியத்திற்காக, நல்ல முறையில் செயற்
படும் சங்கங்கள் தெரிந்தெடுக்கப்பட வேண்டும். உறுப்பினர்
களின் சிக்கன நிதி, காப்புறுதிக் கட்டணங்களைச் செலுத்து
வதற்காகக் கிடைக்கும்படி செய்யப்படலாம்.

## 9. நிருவாகம்

ஒரு விவசாயக் கடன் சங்கத்தின் செயல் நிருவாகம்
5 அல்லது அதற்கு மேற்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட—
பொதுவாக 5 உறுப்பினர்களைக் கொண்ட—ஒரு நிருவாகக்
குழுவின் வசம் அமைந்துள்ளது. தமிழ் நாட்டில் சங்கங்களின்
நிருவாகக்குழு 'பஞ்சாயத்து' என்று வழங்கப்பட்டுப் பேரவை
யால் தேர்ந்தெடுக்கப்படுகிறது. விவசாய வங்கிகளைப்
போன்ற பெரிய அளவுச் சங்கங்களில் தவிர, ஒரு
கிராமக் கடன் சங்கத்தின் நிருவாகக் குழுவில் அரசு நியமியோ
மத்திய வங்கியின் நியமியோ இருக்கத் தேவையில்லை
யென்று தமிழ்நாட்டு அரசு உத்தரவிட்டுள்ளது. பஞ்சாயத்
தார்களிடையிலிருந்து, ஒரு தலைவரும், ஒரு செயலரும், சில
சமயங்களில் ஒரு துணைச்செயலரும் தேர்ந்தெடுக்கப்படுகின்ற
னர். தலைவரே அலுவலால் பொருளாளராகவும் இருப்
பார். அவர் சங்க அலுவலர்கள்மீதான பொதுக் கண்காணிப்பைப்
பெற்றும், அதன் சொத்துகளின் பாதுகாப்பாளராகவு முள்
ளார். பஞ்சாயத்தின் சேவைகள் ஊதியம் பெறுதவையாக
உள்ளன. தலைவரின் கண்காணிப்பிற்குட்பட்டுச் செயலர்,
சங்கத்தின் நிருவாக வேலையைக் கவனித்து, சங்கக் கணக்குகளைப்
பராமரித்து, நிருவாகக் குழுவின் அறிவுரைகளையும், தலைவரின்
அறிவுரைகளையும் செயற்படுத்துகிறார். செயலர் சங்கத்தின்
எழுத்தர் வேலையைக் கவனிக்கும்போது, அவருக்குப் பொது
நிதிகளிலிருந்து கைம்மாறு செலுத்தப்படலாம். தனிச் சேவை
களுக்காக ஒரு தனிக் கைம்மாறும்கூட இலாபங்களிலிருந்து
செலுத்தப்படலாம். இவை தவிர, பஞ்சாயத்தார்களின்
சேவைகள் கவுரமானதாக வுள்ளன. 'பெரிய அளவுச் சங்கங்கள்'
என்ற கருத்துக்கோப்பும், 'தன்னிறைவுச் சங்கங்கள்' என்ற
கருத்துக்கோப்பும் தோன்றும்வரை இந்த நடைமுறை நீண்ட
காலமாக இருந்துவந்துள்ளது. ஒரு தன்னிறைவுள்ள சங்கத்
தில், ஒரு சம்பளச் செயலர் இருக்கவேண்டுவது முக்கியம்.

தலைவர் அல்லது கௌரவச் செயலர் எவ்வளவு சுறுசுறுப்பாக இருந்தாலும், தற்போதைய நிலைமையில் அவர் கணக்குகளையும் பதிவேடுகளையும் பராமரித்தல், விவரப் பட்டியல்களையும் விவர அறிக்கைகளையும் சமர்ப்பித்தல் முதலியவற்றில் அடங்கியிருக்கும் பெருகிவரும் வேலைச்சுமையைச் சமாளித்து, இதர அன்றாட வேலைகளைச் செய்வதற்கு எதிர்பார்க்கப்பட முடியாது. சம்பளச் செயலர், அடிப்படைப் பாடத்திட்டத்தில் கூட்டுறவுப் பயிற்சியைப் பெற்றிருக்க வேண்டும். அவர், நேர்முக ஆளெடுத்தல் மூலம் அல்லது மத்திய வங்கியிடமிருந்து மறுவேலைக்கு அனுப்புதல் மூலம் அமர்த்தப்பட வேண்டும். சம்பளச் செயலர்களைச் சங்கங்கள் அமர்த்துவதற்காகப் பொதுப்பணி முறைப் பிரிவைக் கொண்ட நபர்ப் பட்டியல் ஒன்றையும் மைய வங்கியானது பராமரிக்கலாம். அவர்கள், மத்திய வங்கியால், மாவட்டத்திற்குள், மாற்றுதல் செய்யப்படுவதற் குட்பட்டிருக்க வேண்டும். இந்த ஏற்பாடானது, சம்பளச் செயலருக்குச் செயல் சுதந்திரத்தையும், அதே சமயத்தில் நிதி வங்கியின் கண்காணிப்பையும் நிச்சயப்படுத்தும். சம்பளச் செயலர்கள் இருக்கிற இடங்களில்கூட, அரசு பணியாளரல்லாத ஊழியர்களின் சேவைகள் அங்கீகரிக்கப்பட்டுச் சங்கத்திற்குச் சேவை செய்வதற்கான ஓர் ஊக்குவிப்பாக ரூ. 5,000 பெருமத்திற் குட்பட்டு, ஓராண்டில் சங்க நிகர இலாபங்களிலிருந்து 10 சதவிகித அளவுக்குத் தலைவர் அல்லது இதர எந்த இயக்குநரும் ஒரு கௌரவ ஊதியம் கொடுக்கப்படலாம்.

சங்கத்திற்குத் தொடர்புள்ள எல்லாக் காரியங்களிலும், உறுப்பினர்களின் பேரவை இறுதியான அதிகாரம் கொண்டது. பேரவையானது, ஆண்டிற்கொருமுறை, அல்லது தேவைப்பட்டால் பலமுறை கூடுகின்றது. பேரவையின் முக்கிய அதிகாரங்களாவன: பஞ்சாயத்தார்களின் தேர்தலும், துணைவிதிகளின் திருத்தமும், வருடாந்தரத் தணிக்கை உத்தரவுகளை ஆலோசித்தலும், பஞ்சாயத்து உறுப்பினர்களுக்கும் அவர்களின் உறவினர்களுக்கும் கடனளித்தலும், உள்ளூர் ஒன்றியத்திற்கும், மத்திய வங்கிக்கும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தலும், உள்ளூர் ஒன்றியத்திற்கும், மத்திய வங்கிக்கும் சங்கத்தை இணைத்தலும் முதலியன. ஓர் உறுப்பினரை விலக்குவதும், பஞ்சாயத்தார்கள் அல்லது உறுப்பினர்களில் எவர்மீதும் புகார்களை ஆலோசித்தலுங்கூட அதன் கடமைகளாக வுள்ளன.

தற்போது விவசாயக் கடன்வசதிச் சங்கங்கள் பெரும்பாலும் வாடகைக் கட்டடங்களை அலுவலகமாகக் கொண்டுள்ளன.

அவற்றில் சில, தலைவர்கள் வீட்டிலும், இதர நிருவாகக்குழு அலுவல் இயக்குநர் வீட்டிலும் அலுவலகங்களை வைத்திருக்கின்றன. ஒவ்வொரு தன்னிறைவுள்ள விவசாயக் கடன் சங்கமும், திறம்படச் சேவையைப் புரிவதற்காகத் தனக்குச் சொந்தமான ஓர் அலுவலகக் கிடங்குக் கட்டடத்தைப் பெற்றிருக்க வேண்டும். மற்றும், சாகுபடி நடவடிக்கைக்காக உறுப்பினர்களுக்கு ஒப்பளிக்கப்பட்ட கடன்களின் பொருள் பகுதியாக விநியோகிப்பதற்காக, உரவகைகளையும், சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் இதரப் பொருள்களையும் இருப்புவைப்பதற்குச் சங்கங்கள் அவசியமான வசதிகளைப் பெற்றிருக்க வேண்டும். விற்பனைச் சங்கங்களின்மூலம் விற்பனைக்காக ஏற்பாடு செய்வதற்காகச் சங்கங்கள் தங்கள் உறுப்பினர்களின் உபரி விளைபொருள்களை இருப்பு வைக்கவுங்கூட வேண்டும். கிடங்குகளாக உபயோகப்படுத்துவதற்குக் கட்டடங்களையும், சங்கங்களுக்கான அலுவலகக் கட்டடங்களையும், பணிமனைகளையும் கட்டுவதற்காக அரசு நிதியுதவி கொடுத்து வந்துள்ளது. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 18,876 சங்கங்கள் சொந்தமாகக் கிடங்குகளை வைத்திருந்தன. 11,903 சங்கங்கள் கிடங்குகளை வாடகைக்கு எடுத்திருந்தன. தமிழ்நாட்டில் 1339 சங்கங்கள் சொந்தமாகக் கிடங்குகளை வைத்திருந்தன. நிதியுதவி 50 சதவிகிதம் கடன் வடிவமாகவும், எச்சம் மானியமாகவும் அளிக்கப்படுகிறது. 851 சங்கங்கள் கிடங்குகளை வாடகைக்கு எடுத்திருந்தன. சங்க அலுவலகங்களை அமைப்பதற்காகவும், சேமித்து வைத்தல் காரியங்களுக்காகவும், அதிகமான கட்டடங்கள் தேவைப்படுகின்றன. அண்மையில் அமைக்கப்படும்படி தமிழ்நாடு அரசால் உத்தரவிடப்பட்ட 'கூட்டுறவு வளர்ச்சி நிதி'யானது (Co-operative Development Fund), சங்கங்களுக்காக அலுவலகக் கிடங்கு, கட்டடங்களை ஏற்படுத்துதலை உள்ளிட்டுப் பிரதம கடன் சங்கங்களைப் பலப்படுத்துவதற்காக உபயோகப்படுத்தப்படலாம்.

## 10. இலாப விநியோகம்

ஒரு விவசாயக் கடன் சங்கத்தின் இலாபங்கள், நிருவாகச் செலவுகளை ஏற்றுக்கொண்ட பிறகு கடன் வாங்கும் வட்டி விகிதத்திற்கும், கடனளிக்கும் வட்டி விகிதத்திற்கும் இடையிலுள்ள வித்தியாசத்திலிருந்து பெறப்படுகின்றன. நிகர இலாபங்களில் ஒரு சில சதவிகிதம், காப்பு நிதிக்காக ஒதுக்கப்பட வேண்டும். இது விவசாயக் கடன் சங்கங்களால் வருடாந்தரம் ஒதுக்கப்பட்ட உதவித்தொகையைக் கொண்ட ஒரு சட்டப்படியான காப்பிருப்பாகும். தமிழ்நாட்டில், நிகர இலாபங்களில் 30 சதவிகிதம், காப்பு நிதி மற்றும் இதரக்

காப்பிருப்புகள் ஆகியவற்றின் மொத்தம் சங்கத்தின் செலுத் தப்பட்ட பங்கு மூலதனத்திற்குச் சமமாகும்வரை காப்பு நிதிக்கு எடுத்துச்செல்லப்படுகிறது. அதன் பின்னர், நிகர இலாபங்களில் 20 சதவிகிதத்திற்குக் குறையாமல், காப்பு நிதிக்கு எடுத்துச்செல்லப்படுகிறது. நிகர இலாபத்தில் மீதி இருக்கும் தொகை, உறுப்பினர்களால் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தின்மீது இலாபஈவு கொடுப்பதற்காக உபயோகப் படுத்தப்படுகின்றது. தமிழ் நாட்டில், ஒரு கிராமச் சங்கத்தால் கொடுக்கக்கூடிய உயர்ந்த பட்ச இலாப ஈவு விகிதம் $6\frac{1}{4}$ சதவிகிதம். தணிக்கை நிதி, கூட்டுறவுக் கல்வி நிதி, விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதி, இலாப ஈவு சமப்படுத்தும் நிதி, கட்டட நிதி முதலிய இதர நிதிகளுக்கு நிகர இலாபத்திலிருந்து தொகைகள் சேர்க்கப்படுகின்றன. ஒரு சங்கத்தின் நிருவாகக்குழு அலுவலர்கள் அல்லது பஞ்சாயத்தார்களுக்குக் கௌரவ ஊதியமும்கூட, சில வரம்புகளுக்குட்பட்டு நிகர இலாபங்களி லிருந்து கொடுக்கப்படலாம். சட்டப்படியான காப்பு நிதியைத் தவிர, ஒரு விவசாயக் கடன் சங்கத்தில் வராக் கடன் காப்பிருப்பு, வராக்கடன் சிறப்புக் காப்பிருப்புப் போன்ற இதரக் காப்பிருப்பு களும் உள்ளன. காப்புநிதி எதிர்பாராத நட்டங்களை ஈடுசெய்ய உத்தேசிக்கப்பட்டுள்ளது. வராக்கடன் காப்பிருப்பு, சாதாரண வர்த்தக நட்டங்களை ஈடுசெய்ய உத்தேசிக்கப்பட்டுள்ளது. வராக் கடன்களுக்கும் சந்தேகக் கடன்களுக்கும் எதிராக ஓர் அரணாகப் பயன்படும்பொருட்டு இந்தக் காப்பிருப்பு மொத்த இலாபத்தில் ஒருசில சதவிகிதத்தை ஒதுக்குதல்மூலம் அமைக்கப்படுகிறது. இது வராக்கடன்களும், சந்தேகக்கடன்களும் தள்ளுபடி செய்யப்படும்போது வராக்கடன் காப்பிருப்பு அந்த அளவிற்கு மதிப்பிறக்கப்படுகிறது.

வராக்கடன் சிறப்புக் காப்பிருப்பானது, விவசாயச் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினருக்கு வழங்கப்பட்ட கடன்களைக் குறித்த கடன் நிலுவையின் உயர்வில் 12 சத விகிதத்தில், அரசால் வழங்கப்பட்ட ஒட்டுமொத்தமான உதவித் தொகைகளைக்கொண்டு அமைக்கப்படுகிறது.

## சிறப்புக் கடன் திட்டங்கள்

**(i) கட்டுமொத்தத் திட்டம்** (Package Scheme). '*தீவிர விவசாய மாவட்டச் செயல்திட்டம்*, (Intensive Agricultural District Programme) என்று வழங்கப்படும் கட்டு மொத்தத் திட்டம், இந்தியாவின் உணவுப் பிரச்சினைகளைக்

குறித்தும் அவைகளைச் சமாளிப்பதற்கான நடவடிக்கைகளைக் குறித்தும் அறிக்கை சமர்ப்பிப்பதற்கு, 1959ஆம் ஆண்டில், ஃபோர்டு ஃபவுண்டேஷன் (Ford Foundation) நிறுவனத்தால் ஆதரவளிக்கப்பட்ட விவசாய உற்பத்திக்குழுவினரால் கூறப்பட்ட சில யோசனைகளின் விளைவாகும். ஒருங்கிணைக்கப்பட்ட ஒரு திட்டமாகக் கடன்களையும் இதர அத்தியாவசிய விவசாயச் சேவைகளையும் குடியானவர்களுக்கு வழங்குவதன் மூலம், உணவு உற்பத்திப் பெருக்கத்தை அந்தச் செயல்திட்டம் நோக்கமாகக் கொண்டது. விவசாய உற்பத்தியில் உடனடியான இலாபங்களைப் பெறும்பொருட்டு, வாய்ப்புள்ள பகுதிகளில் ஒரு தீவிர முறையில் முயற்சிகளை ஒருமுகப்படுத்துதலுக்காக அது ஒரு செயல் திட்டமாகவுள்ளது. முதன்முதலாக 1960ஆம் ஆண்டில் நாட்டில் 7 மாவட்டங்களில் திட்டம் தொடங்கப்பட்டது. அவற்றுள் தஞ்சை மாவட்டமும் ஒன்று. நிச்சயமான குடிப்பாசனநீர், நன்கு வளர்ச்சியடைந்த கூட்டுறவுச் சங்கம், பஞ்சாயத்து ஆகியவை யிருத்தலைக் கவனத்தில் கொண்டு வெள்ளம் முதலியனபோன்ற இயற்கை ஆபத்துகளிலிருந்து கூடுமானவரை விடுதலைபெற்றதாகவும், உணவு உற்பத்திக் கோணத்திலிருந்துங்கூட ஒரு முக்கியமான பகுதியாகவு மிருக்கும் மாவட்டம் தெரிந்தெடுக்கப்பட்டது. தெரிந்தெடுக்கப்பட்ட மாவட்டங்களில் கடன் மட்டுமன்றி உரவகைகள், பூச்சிகொல்லிகள், புழுக்கொல்லிகள், மேம்படுத்தப்பட்ட விதைகள், விவசாயக் கருவிகள் போன்று உற்பத்திப் பெருக்கத்திற்காகத் தேவைப்படும் எல்லாக் காரணிகளும் ஒரே சமயத்தில் வழங்கப்பட வேண்டும். இப் பகுதிகளில் கூடுதலான சிப்பந்திகள், விற்பனைச் சங்கத்தின்மூலம் விற்பனைக்கான ஏற்பாடுகள், போக்குவரத்து வசதிகள் முதலியவை ஏற்படுத்தப்பட வேண்டும். இத் திட்டத்தின் 5ஆவது ஆண்டிறுதியில் எதிர் பார்க்கப்பட்ட உற்பத்திப் பெருக்கம் அடிப்படை ஆண்டிற்குமேல் சுமார் 40—60 சதவிகிதமாக மதிப்பீடு செய்யப்பட்டது. இந்த 7 மாவட்டங்களில் சாகுபடி செய்யப்பட்ட மொத்த நிலப்பகுதி 58 இலட்ச ஏக்கர்களாகவுள்ளன. அவற்றில், 30 இலட்ச ஏக்கர்கள் பாசன நிலங்களாக இருக்கின்றன. உணவுப் பெருக்கத்திற்கான கடன்கள், கடன் சங்கங்களால் வழங்கப்படும். அவை தக்கவாறு பலப்படுத்தப்படும். சுமார் ரூ.22 கோடி குறுகிய காலக் கடனாகவும், ரூ.7 கோடி மத்தியக் காலக் கடனாகவும் கூடுதலான கடன் தேவைகள் மதிப்பீடு செய்யப்பட்டன. திட்டத் தொடக்ககாலத்தில் கிடைத்திருந்த கடன் சுமார் ரூ 3-லிருந்து 4 கோடிக்கு மட்டுமே இருந்தது. கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் மூலம் சாகுபடியாளர்களின் விளைபொருள்களை விற்பனை செய்வதற்கான ஏற்பாடுகளை வழங்குதலானது திட்டத்

தின் ஒரு முக்கியப் பகுதியாகவுள்ளது. 7 தெரிந்தெடுக்கப்பட்ட மாவட்டங்களின், 100 வட்டாரங்களுக்கான திட்டத்தின் மொத்தச் செலவு 5 ஆண்டுக் காலவரைக்கும் ரூ.7.92 கோடியாக மதிப்பீடு செய்யப்பட்டது. இந்த மொத்தச் செலவில் இந்திய அரசின் பங்கு ரூ.1.76 கோடியாகவும், மாநில அரசுகளின் பங்கு ரூ. 2.77 கோடியாகவுமுள்ளது. ரூ.4.37 கோடிப் பெருமம் வரைக்கும் ஃபோர்டு ஃபவுண்டேஷன் நிறுவனம் ஓர் ஒட்டுமொத்தமான உதவித்தொகையை அளிக்கிறது. இவை, ஏற்கெனவே சுட்டிக்காட்டப்பட்ட கடன் தேவைகளின் மதிப்பீடுகள் நீங்கலானவை யாகும். பின்னர், திட்டம் 7 மாநிலங்களில் மற்றொரு 8 மாவட்டங்களில் தொடங்கிவைக்கப்பட்டிருக்கிறது.

தீவிர விவசாய வளர்ச்சிச் செயல்திட்ட மாவட்டங்களில் கூட்டுறவு நிறுவனங்கள் விவசாயச் செயல்திட்டங்களுக்கு ஆதரவு அளிக்கின்றன. இந்த மாவட்டங்களில், 1965–66ஆம் ஆண்டில், பிரதம விவசாயக் கடன் சங்கங்களால் அளிக்கப்பட்ட மொத்தக் கடன் தொகை ரூ.18 கோடியாக இருந்தது. கூட்டுறவு விற்பனைச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள்களின் பெறுமானம் 1965–66ஆம் ஆண்டில் ரூ.10.35 கோடிக்கு இருந்தது. அந்த ஆண்டில் கூட்டுறவுச் சங்கங்கள் ரூ.8.86 கோடிப் பெறுமானமுள்ள உரவகைகளை விநியோகித்தன. உற்பத்தித் தேவைகளை விநியோகிப்பதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களால் பராமரிக்கப்பட்ட பண்டங்களின் எண்ணிக்கை 4,825 ஆக இருந்தது.

தமிழ்நாட்டில் தீவிர விவசாய வளர்ச்சிச் செயல்திட்டம் தஞ்சை மாவட்டத்தில் 1960ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. அந்த மாவட்டத்தில் 36 வட்டங்களில் இத் திட்டம் அமல்படுத்தப்பட்டுவருகிறது. இத் திட்டம் 4.43 இலட்ச உறுப்பினர்களைக் கொண்ட 1,045 கூட்டுறவுச் சங்கங்களைத் தழுவுகின்றது. இத் திட்டம் அதன் தொடக்கக் காலத்தில் நெல்லையும், மாவட்டத்தின் ஒரு வரையறுக்கப்பட்ட பகுதியையும் மட்டுந்தான் தழுவியது. அது படிப்படியாக ஏறக்குறைய மாவட்டம் முழுவதுக்கும் மற்றும், சோளம், கம்பு, கேழ்வரகு, மக்காச்சோளம், தேங்காய், கரும்பு, வேர்க்கடலை, பருத்தி, காய்கறிகள் போன்ற இதரப் பயிர்களுக்கும் நீடிக்கப்பட்டது. இச் செயல்திட்டத்தின்கீழ்க் கூட்டுறவுச் சங்கங்களால் மேற்கொள்ளப்பட்ட பணியானது ஒவ்வொன்றிற்காகவும் தயாரிக்கப்பட்ட பண்ணைத் திட்டங்களுக் கிணங்க விவசாயிகளுக்குக் கடன் வழங்குதலும், சாகுபடியில் ஈடுபடுத்தப்

பட்ட இதரப்பொருள்கள் வழங்குதலுமாகவிருந்தது. 1966-67ஆம் ஆண்டில் இச் செயல்திட்டத்தின்கீழ் ரூ.2.57 கோடி அளவிற்குக் கடன்கள் வழங்கப்பட்டன. மாவட்டத்தில் கிடங்குகளுக்கான திட்டத்தின்கீழ், 1967ஆம் ஆண்டுச் சூன் இறுதிவரை 351 கிடங்குகள் அரசு நிதியுதவியைக் கொண்டு சங்கங்களால் கட்டப் பட்டிருந்தன.

**(ii) தீவிர விவசாயப்பகுதிச் செயல்திட்டம்:** தீவிர விவசாய வளர்ச்சித் திட்டத்தின் செயற்பாட்டில் பெற்ற அனுபவத்தின் அடிப்படையில் 'தீவிர விவசாயப் பகுதிச் செயல்திட்டம்' (Intensive Agricultural Area Programme) என்று வழங்கப்படும் மற்றொரு திட்டம் தமிழ்நாட்டில் 1965ஆம் ஆண்டில் செங்கை, கோவை, மதுரை, திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களில் தெரிந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் நெல், கேழ்வரகு, சோளம், வேர்க்கடலை, பருத்தி ஆகியவற்றின் தீவிரச் சாகுபடிக்காகத் தொடங்கப்பட்டது. திட்டத்தில் பங்கு கொள்பவர்களுக்காகத் தயாரிக்கப்பட்ட விவசாயப் பண்ணைத் திட்டங்களின் அடிப்படையில் கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு பகுதி ரொக்கமாகவும் மற்றொரு பகுதி பொருளாகவும் கடன்கள் வழங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்கின்றன. 1966–67ஆம் ஆண்டின்போது 3,417 விவசாயக் கடன் சங்கங்கள் எல்லா மாவட்டங்களிலும் இத் திட்டத்துடன் தொடர்புகொண்டிருந்தன.

**(iii) கட்டுமொத்தத் திட்டம்:** தொடங்கப்பட்ட மற்றொரு விவசாய வளர்ச்சிச் செயல்திட்டம், வணிகப் பயிர்களுக்கான கட்டுமொத்தத் திட்டமாகும். தெரிந்தெடுக்கப்பட்ட பகுதிகளில் வேர்க்கடலை, பருத்தி, தேங்காய், வாழைப்பழம், புகையிலை போன்ற பயிர்களை இந்தத் திட்டம் தழுவுகிறது. இத் திட்டம் அமல்படுத்தப்படும் முறையானது தீவிர விவசாயப்பகுதிச் செயல் திட்டத்தைப்போன்று அதேமாதிரியாகவே வுள்ளது. அதாவது, சாகுபடியாளர்களைத் தெரிந்தெடுத்தலும், அவர்களுக்காக விவசாயப் பண்ணைத் திட்டங்களைத் தயாரித்தலும், கடனையும் சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் இதரப் பொருள்களையும் கட்டுமொத்தத் திட்ட நடைமுறைகளுக்கொப்ப வழங்குதலும், சாகுபடியை மேற்பார்வை செய்தலுமாம். இத் திட்டத்தை 3,292 விவசாயக் கடன் சங்கங்கள் அமல் செய்து 1966–67ஆம் ஆண்டின் போது ரூ. 2.90 கோடியளவிற்குக் கடன்கள் வழங்கின.

**(iv) சிறு குடியானவர்கள் வளர்ச்சி நிறுவனங்கள் (Small Farmers Development Agencies):** 46 மாவட்டங்களில்

தங்கள் பகுதிகளிலுள்ள சிறு குடியானவர்களின் பிரச்சினைகளையும், தேவைகளையும், அடையாளப்படுத்துவதற்கும் தக்க செயல் திட்டங்களைத் தயாரித்து அவசியமான சாகுபடியி லீடுபடுத்தப்படும் பொருள்களுடனும், சேவைகளுடனும், கடன்களுடனும் அவற்றை அமல்படுத்துவதற்கும், சிறு குடியானவர்கள் வளர்ச்சி நிறுவனங்களை மத்திய அரசு அமைத்துள்ளது. நடப்புக் கடன் நிறுவனங்கள் இக் காரியத்திற்காக உபயோகப்படுத்தப்படும். சிறு குடியானவர்களுக்குக் கடன் பாய்ச்சலைக் கிளர்த்துவதற்கு மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குப் பிரதம கடன் சங்கங்களுக்கும், கூட்டுறவு நிலவள வங்கிகளுக்கும், 'சிறப்பு நட்டவச்ச நிதிகளை' (Special Risk Funds) அமைப்பதற்காக, உதவித்தொகைகளை இந் நிறுவனங்கள் வழங்கும். மேலாண்மைச் சிப்பந்திகளுக்காகவும், மேற்பார்வைச் சிப்பந்திகளுக்காகவுங்கூட, விசேஷ உதவி இந் நிறுவனங்களால் அளிக்கப்படுகிறது

**(v) இறுதிநிலைக் குடியானவர்கள் மற்றும் விவசாயத் தொழிலாளர்கள் வளர்ச்சி நிறுவனம்** (Marginal Farmers and Agricultural Labourers Development Agency) தவிரவும், இறுதி நிலைக் குடியானவர்களுக்காகவும், விவசாயத் தொழிலாளர்களுக்காகவும், மத்திய அரசு 40 திட்டங்களைக்கூட ஏற்படுத்தியுள்ளது. இந்தத் திட்டங்கள், துணைத்தொழில்கள்மீதும், இதர வேலைவாய்ப்புகள்மீதும் சிறப்பான வலியுறுத்தலை யிடுகின்றன. இத் திட்டங்களில் பலங்குன்றிய வகுப்பினர்களுக்காகவும் அல்லது சிறப்புரிமையற்ற வகுப்பினர்களுக்காகவும் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் கடனளிப்பு அதிகப்படுத்தப்படும்.

மேற்குறிக்கப்பட்ட இரண்டு திட்டங்களுக்காகவும் 4ஆவது திட்டத்தில் ரூ.115 கோடி ஏற்பாடு செய்யப்பட்டது. இது ரூ.300-கோடி அளவிற்கு நிறுவன ஆதரவை உண்டுபண்ண எதிர்பார்க்கப்பட்டது. (ரூ.100-கோடிக்குக் குறுகியகாலக் கடனையும், ரூ.200-கோடிக்கு மத்தியக் கால, நீண்டகாலக் கடனையும் வழங்குவதற்காக).

தமிழ்நாட்டில் சிறு குடியானவர்கள் வளர்ச்சி நிறுவனங்கள், தென்னார்க்காடு மாவட்டத்தில் 12 வட்டாரங்களிலும், மதுரை மாவட்டத்தில் 18 வட்டாரங்களிலும், திருநெல்வேலி மாவட்டத்தில் 16 வட்டாரங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. இறுதி நிலைக் குடியானவர்கள், விவசாயத் தொழிலாளர்கள் வளர்ச்சி நிறுவனத்திட்டம், சேலம் மாவட்டத்தில் 2 வட்டாரங்களிலும், வடார்க்காடு மாவட்டத்தில் 2 வட்டாரங்களிலும் அமல்படுத்தப்

படுகிறது. இந்தத் திட்டங்கள் 1971ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்திலிருந்து அமல்படுத்தப்பட்டு வருகின்றன.

தமிழ்நாட்டில் இரண்டு ஏக்கர்களுக்கும், மூன்று ஏக்கர்களுக்கு மிடையிலான நஞ்சை நிலத்தை அல்லது மூன்று ஏக்கர்களுக்கும், ஐந்து ஏக்கர்களுக்கு மிடையிலான புன்செய் நிலத்தையுடையவர்கள் சிறு குடியானவர்களாவர். இரண்டு ஏக்கர்கள் வரை நஞ்சை நிலத்தை அல்லது இரண்டு ஏக்கர்கள் முதல் நான்கு ஏக்கர்கள்வரை புன்செய் நிலத்தையுடையவர்கள் இறுதி நிலைக் குடியானவர்களாவர். ஓர் ஏக்கர் அல்லது அதற்கும் குறைந்த நஞ்சை நிலத்தை அல்லது இரண்டு ஏக்கர்கள் அதற்கும் குறைந்த புன்செய் நிலத்தையுடையவர்கள் கீழிறுதிநிலைக் குடியானவர்களாவர். ஒரு வீட்டுமனையைப் பெற்றுத் தங்கள் வருவாயில் 50 சதவிகிதத்தை, அல்லது அதைவிட அதிகமாக, விவசாயக் கூலிகளிலிருந்து சம்பாதிப்பவர்கள் விவசாயத் தொழிலாளர்களாவர்.

ஒரு மாவட்டத்தில் சிறு குடியானவர்கள் வளர்ச்சி நிறுவனம், 50,000 குடியானவர்களுக்குப் பயன்பட வேண்டும். இறுதிநிலைக் குடியானவர்களுக்காகவும், விவசாயத் தொழிலாளர்களுக்குமான திட்டம் 20,000 நபர்களுக்குப் பயனளிக்க வேண்டும். சிறு குடியானவர்கள் வளர்ச்சி நிறுவனம் என்று வழங்கப்படும் ஒரு தனி நிறுவனம், சிறு குடியானவர்கள் திட்டம் அமல்படுத்தப்படுகிற ஒவ்வொரு மாவட்டத்திலும், மாவட்ட ஆட்சியாளரைத் தலைவராகக் கொண்டு, 'சங்கங்கள் பதிவுச் சட்டத்தின்' கீழ்ப் (Societies Registration Act) பதிவு செய்யப்படுகிறது. இறுதிநிலைக் குடியானவர்கள், விவசாயத் தொழிலாளர்கள் நிறுவனத் திட்டம் அமல்படுத்தப்படுகிற மாவட்டங்களில் மாவட்ட ஆட்சியாளரைத் தலைவராகக்கொண்டு, அதே வகையான ஒரு நிறுவனம் அமைக்கப்படுகிறது. இந்த நிறுவனம் திட்டத்தை அமல்படுத்துவதற்காகத் தேவைப்படும் நிதியுதவியை, நேரிடையாக இந்திய அரசிடமிருந்து பெற்றுத் திட்டத்தை நிறைவேற்றுவதற்காகப் பொறுப்பாளியாக விருக்கும்.

சிறு குடியானவர்கள் திட்டத்தின் கூட்டுறவுப் பகுதியானது, திட்டப் பகுதியில் விவசாயிகளின் குறுகிய கால உற்பத்தித் தேவைகள் விவசாயக் கடன் சங்கங்களால் பூர்த்தி செய்யப்படுவதோடு, கிணறுகள் வெட்டுவதற்காகவும், நடப்புக் கிணறுகளை ஆழப்படுத்துவதற்காகவும், பம்புச் செட்டுகளை வாங்குவதற்காகவும், குடியானவர்களின் நீண்டகாலக் கடன் தேவைகள்

நிலவள வங்கிகளால் வழங்கப்படும். பால்பண்ணை, கோழி வளர்ப்புப் பண்ணை, ஆடு வளர்ப்புப்பண்ணை முதலியன போன்ற துணைத்தொழில்களுக்கான மத்தியக் காலத் தேவைகள் விவசாயக் கடன் சங்கங்களால் வழங்கப்படும்.

சாகுபடிக் கடனுக்கும், விற்பனைக்குமிடையே ஓர் இணைப்பை ஏற்படுத்துவதன்மூலம் கூட்டுறவு விற்பனை வளர்ச்சியையுங்கூட இத் திட்டம் எதிர்நோக்குகிறது. உரவகைகளைப் பயனுறுதியாகச் சேமித்துவைப்பதற்காகவும், விநியோகம் செய்வதற்காகவும், மற்றும், தங்கள் விளைபொருள்களுக்கு ஒரு மேலான விலைக்காகக் காத்திருப்பதை வகைசெய்யும் பொருட்டு உறுப்பினர்களின் விளைபொருள்களைச் சேமித்து வைப்பதற்காகவும், சங்கங்கள் வசமிருக்கும் பொருட்சேமிப்பு வசதிக் கொள்ளளவும், புதிய கிடங்குகள் கட்டுவதன் மூலம் அதிகரிக்கப்படும். இறுதிநிலை, கீழிறுதிநிலைக் குடியானவர் வளர்ச்சிக்கான திட்டத்தின்கீழ், கூட்டுறவுச் சங்கங்கள், சிறு குடியானவர்களின் திட்டத்தின்கீழ்ப் போன்று, அதே பணியைப் புரிய வேண்டும். விவசாயத்தொழிலாளர்களுக்காகத் தக்க இலாபகரமான வேலைவாய்ப்பைத் தேடிக் கொடுப்பதற்குத் தொழில் ஒப்பந்தச் சங்கங்கள் அமைக்கப்படும். நிலமில்லாத விவசாயத் தொழிலாளர்கள் நலனுக்காகக் கோழிப் பண்ணை, ஆட்டுப்பண்ணை வளர்ச்சித் திட்டங்கள்கூட அமல்படுத்தப்படும்.

சிறு குடியானவர்கள் திட்டத்தின்கீழ் 1971–72ஆம் ஆண்டின் போது புதிய கிணறுகளை வெட்டுவதற்காகவும், பழைய கிணறுகளை ஆழப்படுத்துவதற்காகவும், மின்சார மோட்டார்கள்-பம்புச் செட்டுகள் வாங்குவதற்காகவும், நிலச் சீர்திருத்தத்திற்காகவும் அளிக்கப்பட்ட மொத்த நீண்டகாலக் கடன்கள் ரூ.27.07 இலட்சமாக இருந்தது. பால்பண்ணை, கோழிப்பண்ணை, ஆட்டுப்பண்ணை, கையால் இயக்கப்பட்ட தெளிப்புகள், உழவு எருதுகள், நிலத்தைச் சமப்படுத்துதல் முதலியனவற்றிற்காகத் திட்டத்தின்கீழ்த் தெரிந்தெடுக்கப்பட்ட குடியானவர்களுக்கு ரூ.33.40 இலட்சத் தொகைக்கு மத்தியக் காலக் கடன்கள் வழங்கப்பட்டன. குறுகியகாலக் கடன் வசதியின்கீழ் 141.18 இலட்சத் தொகையளவிற்குப் பயிர்க்கடன்கள், எல்லா 3 மாவட்டங்களிலுமுள்ள சிறு குடியானவர்களுக்கு வழங்கப்பட்டன.

இறுதிநிலைக் குடியானவர்கள் விவசாயத் தொழிலாளர்கள் திட்டத்தின்கீழ், வடார்க்காடு, சேலம் மாவட்டத்திலுள்ள நிலமில்லாத விவசாயத் தொழிலாளர்கள், பெண் ஆடுகள், பொலிகாளைகள், செம்மறி ஆடுகள், கோழி வகைகள், கன்றுகள்,

வாத்துகள் ஆகியவற்றை வாங்குவதற்காக 0.88 இலட்சமள விற்குக் கடன்கள் அளிக்கப்பட்டனர். இந்த இரண்டு மாவட்டங் களிலுள்ள கீழிறுதிநிலைக் குடியானவர்கள் நிலச்சீர் திருத்தம், கோழி வளர்ப்பு, ஆடு வளர்ப்பு, விவசாயக் கருவிகள் வாங்குதல், கறவைமாடுகளையும் கன்றுகளையும் வாங்குதல் முதலிய காரியங்களுக்காக ரூ. 12.16 இலட்ச அளவிற்குக் கடன்களையும், பயிர்க் கடன்களையும் பெற்றனர். புதிய கிணறுகளை வெட்டுதல், பழைய கிணறுகளை ஆழப்படுத்துதல், பம்புச் செட்டுகள் வாங்கு தல், கையால் இயக்கப்பட்ட தெளிப்பான்களை வாங்குதல், கோழிப்பண்ணை வளர்ச்சி, பழச் செடிகளை வளர்த்தல் முதலிய காரியங்களுக்காகக்கூட இறுதிநிலைக் குடியானவர்களுக்கு ரூ. 15.41 இலட்சத்திற்குக் கடன்கள் அளிக்கப்பட்டன.

**(vi) உயர் விளைச்சல் தரும் வகைகள் திட்டம்:** மிகப் பெரிய அளவில் உணவு உற்பத்தியைப் பெருக்கும் நோக்கத்துடன், **'உயர் விளைச்சல் தரும் வகைகள் திட்டம்'** (High Yielding Varieties Programme) என்று வழங்கப்படும் ஒரு பிரும்மாண்டமான விவசாயச் செயல் திட்டம் தமிழ்நாடு முழுவதிலும் 1966ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. இரசாயன உரங்கள் உபயோகத்திற்கு விரைவாக இலாபமளிக்கும் சிறப்பு உயர் விளைச்சல் கொடுக்கும் வகை நெல், சோளம், கம்பு, கேழ் வரகு போன்ற தானியங்கள் சாகுபடி செய்தலை இத் திட்டம் உத்தேசிக்கிறது. ஆகையால், அத்தகைய பயிர்களைச் சாகுபடி செய்வதற்காக ஓர் ஏக்கருக்கான கடனளவுகள், பாரம்பரியச் சாகுபடிக்காக ஏற்கப்படும் கடனளவுகளைவிட, அதிகமாக நிர்ணயிக்கப்படுகின்றன. இந்த அதிகப்படியான கடனளவுகளைக் கடன் வடிவத்திலும், சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் பொருள்கள் வடிவத்திலும் கூட்டுறவுச் சங்கங்கள் வழங்குகின்றன. முதலாண்டின்போது உயர் விளைச்சல் கொடுக்கும் வகைகள் திட்டத்தின்கீழ்க் கடன்கள் வழங்குவதற்காக, அரசு உத்தர வாதத்தால் தழுவப்பட்ட சிறப்புக் கடன் வரம்புகளை ரிசர்வ் வங்கி ஒப்பளித்தது. 1967–68ஆம் ஆண்டு முதல் உயர் விளைச்சல் கொடுக்கும் வகைகளுக்கான கடன்கள்கூட ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப்பட்ட இயல்பான கடன் வரம்புகளால் தழுவப் படுகின்றன. 1966–67ஆம் ஆண்டின்போது, 3.24 இலட்ச ஏக்கர்கள், பல்வேறு உயர் விளைச்சல் கொடுக்கும் வகைப் பயிர்கள் சாகுபடியின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. வழங்கப் பட்ட கடன்கள் ரூ. 2.39 கோடிக்கு இருந்தன. சுமார் 6,000 விவசாயக் கடன் சங்கங்களின் உறுப்பினர்கள் இத் திட்டத்தில் பங்கு கொண்டனர்.

**(vii) மேல்வளர்ச்சிக்கான யோசனைகள்:** விவசாயக் கடன் வசதிஇயக்கம் விவசாயச் சமுதாயத்தினிடையே அதிகமான நம்பிக்கையைத் தூண்டி, விவசாய உற்பத்தியையும், விவசாயப் பொருளாதார அமைப்பு முழுவதையும் மேம்படுத்துவதில் ஒரு நிலையான பங்கை ஏற்பதற்குக் கீழ்க்காணும் நடவடிக்கைகள் தீவிரமாகப் பின்பற்றப்படுவது அவசியமாகும். இந் நடவடிக்கைகள் முந்தைய பத்திகளில் விவரமாக விளக்கப்பட்டுள்ளன. அவற்றை மீண்டும் நினைவுபடுத்திக் கொள்ளுதல் பயன்தரும். (i) ஒரு தன்னிறைவு அடிப்படையில் விவசாயக் கடன் சங்கங்களைச் சீரமைத்தல், (ii) சீரமைக்கப்பட்ட விவசாயக் கடன் சங்கங்கள் வரையறுக்கப்பட்ட பொறுப்பை ஏற்றுக் கொள்ளுதல், (iii) கிராம மக்கள்தொகை முழுவதையும் அல்லது அதில் பெரும்பான்மையைத் தழுவுதல், (iv) உறுப்பினர்களைச் செயலுக்குத் தூண்டுதல், (v) ஒரு பலம்பொருந்திய பங்கு மூலதன அடித்தளத்தை அமைத்தல், (vi) சங்கங்களில் கிராமச் சேமிப்புகளைச் சேகரித்தலும், வைப்புகளைச் சேகரித்தலும், வைப்புகளைப் பெருக்குவதும், (vii) விவசாய மக்கள் தொகையின் எல்லா வகுப்பினர்களுக்கும், சிறப்பாக விவசாயச் சமுதாயத்தின் பலம் குன்றிய பகுதியினர்களுக்குப் போதுமானதும், காலக் கிரமமானதுமான கடனை அளிக்கும் வகையில், கடன் கொள்கைகளைத் தளர்த்துவதும், மறுதிருப்பம் செய்வதும், (viii) சங்கத்தால் போதுமான விளிம்பு பராமரிக்கப்படுதல், (ix) விற்பனையுடன் கடனிணைப்பும் தவணை கடந்த பாக்கிகளைத் தவிர்த்தலும் உட்படக் கடன்களை வசூலிப்பதற்காகக் காலதாமதமில்லாததும், பயனுறுதியானதுமான நடவடிக்கைகளையெடுத்தல், (x) சங்கத்தின் அன்றாட வேலையைக் கவனிப்பதற்கு நல்ல சம்பளம் அளிக்கப்பட்டவர்களும், பயிற்சி பெற்றவர்களுமான சிப்பந்திகளை அமர்த்துதல், (xi) அலுவலகக் கிடங்கு வசதிக் கட்டடங்களையும், பொருட் சேமிப்புக்கான தக்க வசதிகளையும் ஏற்படுத்துதல், (xii) கடனுக்கும் கூடுதலான நடவடிக்கைகளையும், விவசாயத்திற்குத் துணையான சேவைகளையும் மேற்கொள்ளுதல். (xiii) பிரதம மட்டத்தில் அல்லது உள்ளூர் மட்டத்தில் சரியான தலைவர்களை ஊக்குவித்தல். (xiv) தெளிவு பெற்ற அங்கத்துவத்தை வளர்ச்சி செய்தல்.

# 10. மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகள்

## (District Co-operative Central Banks)

### 1. கூட்டுறவு மத்திய வங்கிகளின் தோற்றமும், அவற்றிற்கான அவசியமும் [சிறப்பாகத் தமிழ்நாட்டைக் குறித்து]

முதலில், பெரும்பாலும் கிராம மட்டத்தில் அமைக்கப் பட்ட பிரதம கடன் சங்கங்கள், தங்கள் நிதிஆதாரத்திற்காக உள்ளூர் வைப்புகள்மீதும், அரசிடமிருந்துபெற்ற சிறு கடன்கள் மீதும் சார்ந்திருந்தன. இந்த நிதிஆதாரங்கள் தேவைக்கேற்பப் போதாமலிருந்தன என்பதும், அரசிடமிருந்து கடன்கள் ஒரு தாற்காலிக உபாயமாக மட்டும்தான் பெறமுடியும் என்பதும், விரைவில் புலனாயிற்று. ஆகையால், நகரப் பகுதிகளிலிருந்து வைப்புகளை ஈர்த்து அவைகளைப் பிரதம சங்கங்களுக்காகப் பயன்படுத்தக்கூடிய ஓர் அமைப்பின் தேவை உணரப்பட்டது. இந்தச் சூழ்நிலையில் மாநிலம் முழுவதிலுமுள்ள (முன்னாள் சென்னை இராஜதானி) கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதிவழங்கும் நோக்கத்துடன் சென்னை மத்திய நகர வங்கி 1905ஆம் ஆண்டு அக்டோபரில், 1904ஆம் வருடத்திய கடன் கூட்டுறவுச் சங்கங் களின் சட்டத்தின்கீழ்ப் பதிவு செய்யப்பட்டது. 1904ஆம் வருடத்திய சட்டம் சங்கங்களின் ஒரு கூட்டிணைப்பை அனுமதிக்க வில்லை. சென்னை மைய நகர வங்கியின் அங்கத்துவம் தனி நபர்களுக்கு அடைக்கப்பட்டிருந்தது; அதன் அமைப்பானது ஒரு கூட்டுப் பங்கு வங்கியின் அமைப்பிற்கு மிகவும் ஒத்திருந்ததே அதற்குக் காரணமாகும். இந்த வங்கி அமைக்கப்பட்ட நான்கு ஆண்டுகளுக்கும் குறைந்த ஒரு காலவரைக்குள் மாவட்ட மத்திய வங்கிகள் அமைப்பின்மூலம், மேலான திருப்தியளிக்கக்கூடிய பரவலான நிதி வழங்கும் ஏற்பாடுகளுக்கான தேவை உணரப் பட்டது. 1909ஆம் ஆண்டில், சேலம் மாவட்ட மத்திய வங்கி தோன்றியது. அதையொட்டி, படிப்படியாக இதர மத்திய வங்கிகளும் பதிவு செய்யப்பட்டன. முதலில் இந்த வங்கிகளின் அங்கத்துவம் தனி நபர்ப் பங்குதாரர்களுக்கு மட்டும் அடைக்கப் பட்டிருந்தது. பின்னர், 1912ஆம் வருடத்திய IIஆவது சட்டம் நிறைவேற்றப்பட்டவுடன், மையவங்கிகள், சங்கங்களைக்கூட, தங்கள் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொண்டன. 1912ஆம்

ஆண்டில், ஒரு வங்கித் தொழில் ஒன்றியம் (Banking Union) என்று வழங்கப்பட்ட ஒரு புதிய வகை மத்திய வங்கி, தனி நபர்களையும் சங்கங்களையும் பங்குதாரர்களாகக் கொண்ட மதுரை-இராமநாதபுரம் மத்திய வங்கியின் மூலம் தோன்றியது. நிதி வழங்குதல் மட்டுமன்றி, இணைக்கப்பட்ட சங்கங்களின் மேற்பார்வையும், கண்காணிப்பும்கூட அதன் நோக்கமாக இருந்தது. அம் மாதிரியான வங்கிகள் மேலும் மூன்று, 1915ஆம் ஆண்டுக்கு முன்பு பதிவு செய்யப்பட்டன. ஒன்றுக்குப்பின் ஒன்றாக மாவட்ட மட்டத்தில் மையக் கூட்டுறவு வங்கிகள் நிறுவப்பட்ட போது, சென்னை மத்திய வங்கி, மத்திய கூட்டுறவு வங்கிகள் அமைக்கப்பட்ட மாவட்டங்களில் பிரதம சங்கங்களுக்கு நிதி வழங்குதலை நிறுத்திவிட்டு, இந்த மாவட்டங்களில் பிரதம சங்கங்களுக்குத் தன்னால் ஆரம்பத்தில் வழங்கப்பட்ட கடன்களை இந்த மாவட்ட மத்திய வங்கிகளுக்கு மாற்றியது. இறுதியாக, 1917ஆம் ஆண்டில், பிரதானமாகத் தனக்கிணைக்கப்பட்ட மத்திய வங்கிகளுக்கு நிதி வழங்குவதற்காகவும், மாவட்ட மத்திய வங்கிகளுக்கான ஓர் இருப்புக் கட்டும் நிலையமாகவும் (Balancing Centre) கூடச் செயற்படுவதற்காகவும், சென்னை மத்திய நகர வங்கி மாநில மட்டத்து ஒரு தலைமை வங்கியாக மாற்றப்பட்டது. எனவே, குறுகிய கால, மத்தியக்காலக் கடனுக்காக, மத்தியக் கூட்டுறவு வங்கிகள் நடு அடுக்காக அமைந்த ஒரு மூன்றடுக்கு அமைப்புத் தோற்றுவிக்கப்பட்டது.

## 2. மத்திய வங்கிகளின் கடமைகள்

இந்தியாவில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள், தங்கள் அலுவல் எல்லையில் செயற்படும் எல்லாவிதமான கூட்டுறவுச் சங்கங்களின் கூட்டிணைப்புகளாக இருக்கின்றன. தமக்கு இணைக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதி வழங்குவதற்காக ஏற்பாடு செய்வது இவ் வங்கிகளின் பிரதான குறிக்கோளாக உள்ளது. அவை கூட்டுறவு இயக்கத்தின் நிதி வழங்கும் அமைப்பின் முதுகெலும்பாக அமைந்திருக்கின்றன. பிரதம சங்கங்கள் தங்கள் உறுப்பினர்களின் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குப் போதிய பலம் கொண்டவையாக இல்லாமலிருக்கின்ற கூட்டுறவு அமைப்பு வளர்ச்சியின் தற்போதைய கட்டத்தில், பிரதம சங்கங்களுக்கு ஒரு முறையான நிதிப் பாய்ச்சலை ஏற்படுத்துவதன் மூலம் மத்தியக் கூட்டுறவு வங்கிகள் ஒரு முக்கியமான பணியைப் புரிகின்றன. இரண்டாவதாக, ஏற்றுக்கொள்ளப்பட்ட கடன் கொள்கைகள் திருப்திகரமாக அமல்செய்யப்படுவதை நிச்சயப்படுத்தும் வகையில் அவை பிரதம சங்கங்களுக்கு வழிகாட்டவும், அவற்றை மேற்பார்வை செய்யவும், கண்காணிக்கவும் வேண்டும். மூன்றாவ

தாக, மாவட்டத்திலுள்ள பிரதம சங்கங்களுக்காக, அவைகளுக்கு நிதி குறைவாயுள்ள காலங்களில் நிதிவழங்கியும், அவை வசம் உபரிநிதிகள் உள்ளபோது ஒரு தீர்வகமாகச் (Clearing House) செயற்பட்டும், பிரதம சங்கங்களுக்காக ஓர் இருப்புக் கட்டும் நிலையமாகவும் (Balancing Centre) மையக் கூட்டுறவு வங்கிகள் செயற்படுகின்றன. நான்காவதாக, மாவட்டத்தின் நிதிவசதியுள்ள பகுதியிலிருந்து நிதி ஆதாரங்களைச் சேகரித்து, ஒப்பிடும் வகையில் பின்தங்கியும் வளர்ந்தும் வருகின்ற பகுதிகளுக்கு நிதியுதவியை நீடிக்கவும் அவை செயற்படக் கூடும். ஐந்தாவதாக, கிராமப் பகுதிகளில் வங்கித் தொழில் வசதிகளை வளர்த்தும், நீடித்தும், கிராம மக்களை வங்கித் தொழிலுணர்வுள்ளவர்களாகச் செய்வதற்கும், அவை உதவியாக வுள்ளன. ஆறுவதாக, உள்ளாட்சி நிறுவனங்கள் அரசாங்க ஸ்தாபனங்கள் போன்ற நிறுவனங்கள் ஆகியவற்றின் உபரி நிதிகளை வைப்பதற்கான தக்க அமைப்புகளாகவும் அவை உள்ளன. ஏழாவதாக, மத்தியக் கூட்டுறவு வங்கிகள், பொதுவாக, மாவட்டத்தில் கூட்டுறவு இயக்கத்தின் பொது முன்னேற்றத்திற்குகந்த நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுகின்றன. எனவே, இந்த வங்கிகள் கூட்டுறவுக் கடனமைப்பில் முக்கியமான ஓர் இடத்தை வகித்துவருவது மட்டுமன்றி, மாவட்டங்களில் கூட்டுறவு நடவடிக்கையின் ஒரு நரம்பு நாடியாகவும் அமைந்துள்ளன.

### 3. மத்திய வங்கியின் அலுவல் எல்லை

ஒரு மத்திய வங்கியின் அலுவல் எல்லை, பொதுவாக, ஒரு வருவாய்த்துறை மாவட்டமாக விருக்கிறது. தமிழ்நாட்டில், மாவட்டத்திற்கு ஒன்று வீதம், 16 மத்தியக் கூட்டுறவு வங்கிகளிருக்கின்றன. ஆனல், திருச்சிராப்பள்ளி, தஞ்சை மாவட்டங்கள் ஒவ்வொன்றிலும், இரண்டு மத்தியக் கூட்டுறவு வங்கிகள், ஒவ்வொரு மைய வங்கியும் அம் மாவட்டங்களின் சில தாலுக்காகளைத் தன் அலுவல் எல்லையாகக் கொண்டிருக்கின்றன. ஒவ்வொரு வருவாய்த்துறை மாவட்டத்திலும் ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கி இருக்க வேண்டுமென்பது கொள்கையாக விருந்தாலும் ஒரே மாவட்டத்தில் ஏற்கெனவே ஒன்றுக்கு மேற்பட்ட மத்திய வங்கிகள் இருந்துவந்தால், அவை தன்னிறைவு அடைந்திருந்தால் கலைக்கப்படக்கூடாதென்று பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. ரிசர்வ் வங்கியின் கிராமக் கடன், மற்றும், கூட்டுறவுக் கடன் பற்றிய நிலையான ஆலோசனைக் குழு 1965ஆம் ஆண்டுச் சனவரியில் நடைபெற்ற தன் கூட்டத்தில் முடிவு செய்தபடி, ஒரு மத்திய வங்கியின் தன்னிறைவுத் தன்மைக்கான பிரமாணம் எதிர்பார்க்கப்பட்ட வகையில் ஒரு மத்திய வங்கியால்

திறம்படச் சேவை புரிவதற்காக அவசியப்படுகின்ற குறைந்த பட்ச மட்டத்து வாணிகம் சுமார் ரூ. 1 கோடித் தொகையுள்ள சராசரி நிலுவைக் கடன்களாகும். பொதுவாக, ஒரு வருவாய்த் துறை மாவட்ட முழுவதிலும் செயற்படுகின்ற மத்தியக் கூட்டுறவு வங்கிகள் இப் பிரமாணத்திற்கு இணங்கி யிருக்க முடியும்.

## 4. அமைப்பும், நிர்வாகமும்

**(i) அமைப்பு:** தமிழ்நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள் ஒரு கலப்பு வகையைச் சேர்ந்தவை. தம் அலுவல் எல்லையிலுள்ள கூட்டுறவுச் சங்கங்களையும்—பிரதம சங்கங்களும் மத்தியச் சங்கங்களும்—தனி நபர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டிருக்கின்றன. பொதுமக்களிடையே நம்பிக்கையை உண்டுபண்ணும் வகையில், அனுபவமுள்ளவர்களும், முக்கியமானவர்களுமான நபர்கள் வங்கி நிர்வாகத்திற்காகக் கிடைக்கும் பொருட்டு, ஆரம்ப ஆண்டுகளில் தனிநபர்கள் வங்கிகளின் உறுப்பினர்களாகச் சேர்க்கப்பட்டனர். ஆரம்பக் கட்டங்களில், அவர்கள் சில மூலதனமுங்கூட அளித்தனர். பின்னர், மத்திய வங்கிகளின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கையில் 10 சதவிகிதத்திற்கு மேற்படாதவாறு தனிநபர் உறுப்பினர்கள் எண்ணிக்கை இருக்கும் வண்ணம், தனிநபர் உறுப்பினர்கள் தங்கள் பங்கு மூலதனத்தைத் திரும்பப்பெற விண்ணப்பிக்கும் போதெல்லாம், தனிநபர் உறுப்பினர்களைப் படிப்படியாகக் கழித்து விடுவதே கொள்கையாக விருந்துவந்திருக்கிறது. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், 9,596 தனிநபர்களும் மற்றவர்களும் தமிழ்நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் உறுப்பினர்களாக விருந்தனர். சங்க உறுப்பனர்களின் எண்ணிக்கை 13,711 ஆக இருந்தது. சங்க உறுப்பினர்களால் வைக்கப்பட்டிருந்த பங்கு மூலதனம் ரூ.10.16 கோடியாக இருந்து தனிநபர்களாலும், மற்றவர்களாலும் வைக்கப்பட்டிருந்த பங்கு மூலதனம் ரூ. 6.44 இலட்சமாக மட்டுமே இருந்தது. தனி நபர் உறுப்பினர்கள் நிருவாகக் குழுவில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டிருந்தனர். ஒரு மத்திய வங்கியில் அத்தகைய இயக்குநர்களின் எண்ணிக்கை 3-லிருந்து 7 வரை, 1963ஆம் ஆண்டுவரையில் இருந்துவந்தது. 1963ஆம் ஆண்டில், பதிவாளர், சென்னைக் கூட்டுறவுச் சங்கங்கள் விதிகளின் 34ஆவது விதியின்கீழ், யாதொரு மத்திய வங்கியின் நிருவாகக் குழுவில் தனிநபர்ப் பங்குதாரர்களின் பிரதிநிதிகளாக 2 இயக்குநர்கள் மட்டுமே இருக்க வேண்டுமென்று விதித்தார். சந்தானம் குழுவினர், மத்திய வங்கிகளில் தனிநபர் அங்கத்துவம், தன் அவசியத்தை இழந்துங்கூட நீடித்திருந்ததாகவும், மத்திய வங்கிகளின் அங்கத்துவத்தைக் கூட்டுறவுச்

சங்கங்களுக்கு மட்டும் அடைப்பதற்குரிய காலம் வந்திருந்த தென்றும் கருதினர். 1970ஆம் ஆண்டில் மத்திய வங்கிகளின் நிருவாகத்திற்காக வகுக்கப்பட்ட விதிகளின்கீழ், தனிநபர்ப் பங்குதாரர்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை: ஆனாலும், குறிப்பிட்ட நலன்களுக்கு நிருவாகக் குழுவில் பிரதி நிதித்துவமளிக்க, தனிநபர்களை நியமிப்பதற்காகச் சரத்து இருக் கிறது. கூட்டுறவுச் சங்கங்களில் அரசு பங்காளித்துவத் திட்டத்தின் கீழ், அரசு, மத்திய வங்கியின் ஓர் உறுப்பினராக இருக்கிறது. மற்றும், மத்திய வங்கிகளில் அது பங்குகள் வைத்திருக்கிறது. அவ்வாறு அரசால் வைக்கப்பட்டிருந்த பங்கு மூலதனம் ரூ.3.27 கோடியாக இருந்தது. மத்திய வங்கிகள் நிருவாகக் குழுவில் அரசு பிரதிநிதியானவர் கூடுதலான பதிவாளர் அந்தஸ் துள்ள, ஒரு கூட்டுறவு அதிகாரியாவர். இந்த அதிகாரி மத்திய வங்கி நிருவாகக் குழுவின் ஓர் அலுவலால் உறுப்பினராக இருக் கிறார்.

**(ii) நிருவாகம்:** மத்திய வங்கியின் நிருவாகம் இயக்குநர் குழுவின்வச முள்ளது. இயக்குநர் குழு உறுப்பினர்களில், ஒருவர் அரசு நியமியாகவும், ஏனையவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட வர்களாகவு முள்ளனர். மத்திய வங்கியின் அலுவல் எல்லை யிலுள்ள ஒவ்வொரு மேற்பார்வை ஒன்றியமும், தனக்கு இணைக் கப்பட்ட விவசாயக் கடன் சங்கங்களுக்குப் பிரதிநிதியாக விருக்க, ஓர் இயக்குநரைத் தேர்ந்தெடுக்கிறது. இதர வகைச் சங்கங் களுக்கும், அவற்றின் எண்ணிக்கைப் பலத்தைக் குறித்து ஒரு சில எண்ணிக்கையுள்ள இடங்கள் ஒதுக்கப்படுகின்றன. தனிநபர் உறுப்பினர்களுக்குப் பிரதிநிதியாக இரண்டு இயக்குநர்கள் தேர்ந் தெடுக்கப்படுகின்றனர். அவர்களுள் ஒருவர், துணை விதிகளில் நிருணயிக்கப்பட்ட அளவிற்கு, வில்லங்கமில்லாத வைப்புகளைப் பெற்றிருக்க வேண்டும். மேற்பார்வை ஒன்றியங்களின் எண்ணிக் கையில், விவசாயக் கடன் சங்கங்களல்லாத சங்கங்களுக்கு அளிக்கப்பட்ட பிரதிநிதித்துவ அளவு, ஒரு மத்திய வங்கியி லிருந்து மற்றொன்றிற்கு வேறுபடுகிறது. எனவே இயக்குநர் குழு வின் எண்ணிக்கை 8-லிருந்து 31-க்கு வேறுபட்டிருக்கின்றது.

இயக்குநர் குழு, தன் பணிகளில் பெரும்பாலானவற்றைத் தன்னால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு செயற் குழுவிற்கு ஒப்படைக் கிறது. இக் குழு, பொதுவாகத் தலைவரையும், துணைத்தலைவரை யும் மற்றும் 3-லிருந்து 5 வரையிலுமுள்ள இதர இயக்குநர் களையும் கொண்டிருக்கிறது. கடன் விண்ணப்பங்களை ஆலோ சிப்பது செயற்குழுவிற்கு ஒப்படைக்கப்பட்ட பணிகளிலொன்றாக

எப்பொழுதுமுள்ளது. 1970ஆம் ஆண்டில், சட்டத்தின்கீழ், மத்திய வங்கிகளின் நிருவாகக்குழு, செயற்குழு ஆகியவற்றின் அமைப்பைக் குறித்த விதிகள் வகுக்கப்பட்டவரையிலும், இதுவே ஏற்பாடாக இருந்திருக்கிறது. இவ் விதிகளின்கீழ் ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கியின் நிருவாகம், பின்வரும் உறுப்பினர்களைக் கொண்ட ஒரு நிருவாகக் குழுவின்வச மிருக்கிறது:- (i) சங்கங்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள், (ii) சமுதாயத்தின் பலம்குன்றிய பகுதியினர்கள், இதர நலமிகள் ஆகியவர்களின் பிரதிநிதி களாகப் பதிவாளரால் நியமிக்கப்பட்ட உறுப்பினர்கள், (iii) மண்டல இணைப்பதிவாளர் அலுவலால் உறுப்பினர். சங்கங் களின் பிரதிநிதிகளைப் பொறுத்தமட்டில், ஒவ்வொரு மேற் பார்வை ஒன்றியத்தின் அலுவல் எல்லைக்குள்ள விவசாயக் கடன் சங்கங்கள் ஓர் உறுப்பினரைத் தேர்ந்தெடுக்க வேண்டும். எனவே, அத்தகைய பிரதிநிதிகளின் எண்ணிக்கையானது ஒரு மாவட்டத்திலுள்ள ஒன்றியங்களின் எண்ணிக்கையின்மீது சார்ந்திருக்கும். நிலவள வங்கிகள், ஏற்றுப்பாசன சங்கங்கள், கூட்டுறவு நூற்பாலைகள், கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள், விற்பனைச் சங்கங்கள், கூட்டுறவுப் பண்ணைச் சேவைச் சங்கங்கள், நகர வங்கிகள், ஊழியர்கள் கடன் சங்கங்கள், நுகர்வோர் சங்கங்கள், நெசவாளர் சங்கங்கள், எண்ணெய் உற்பத்தியாளர் சங்கங்கள், (பனைவெல்லம் உற்பத்திச் சங்கங்களைத் தவிர) மற்றக் கிராமத் தொழிற்சங்கங்கள் முதலியன போன்ற இதரச் சங்கங்கள், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நிருவாகக் குழுவில் தனிப் பிரதிநிதித்துவமளிக்கப்படுகின்றன. சங்கப் பிரதிநிதிகளின் எண்ணிக்கை, ஒவ்வொரு மத்தியக் கூட்டுறவு வங்கி விஷயத்திலும் 4-லிருந்து 18 வரை வேறுபடுகிறது. பதிவாளர் நியமிகளைப் பொறுத்தமட்டில், சிறு குடியானவர்களுக்கும் அட்டவணை வகுப் பினர்களுக்கும், அட்டவணை மலைவாசிகளுக்கும், மகளிர்களுக்கும், தேர்தல் மூலம் பிரதிநிதித்துவமடையாத இதர நலமிகளுக்கும், பிரதிநிதித்துவ மளிக்கப்படுகிறது. சிறு குடியானவர்களுக்குப் பொதுவாக ஒவ்வொரு மத்திய வங்கிக்காகவும் 2 பிரதிநிதிகள் அளிக்கப்பட்டுள்ளனர். ஒரு சில சந்தர்ப்பங்களில் 3 அல்லது 4 பிரதிநிதிகளுங்கூடக் கொடுக்கப்பட்டுள்ளனர். மகளிருக்கும், அட்டவணை வகுப்பினருக்கும், அட்டவணை மலைவாசிகளுக்கும், பொதுவாக ஒவ்வொரு மைய வங்கியிலும் ஒரு பிரதிநிதி கொடுக்கப்பட்டுள்ளது. தேர்தல் மூலம் பிரதிநிதித்துவமடை யாத இதர நலமிகள் ஒவ்வொரு மத்திய வங்கியிலும் ஒரு பிரதிநிதி கொடுக்கப்பட்டுள்ளனர். ஒவ்வொரு மத்திய வங்கி நிருவாகக் குழுவுக்கு நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர் களின் எண்ணிக்கை 3-லிருந்து 11வரை வேறுபட்டிருக்கிறது.

சம்பந்தப்பட்ட மண்டலத்தின் கூட்டுறவு இணைப்பதிவாளர் தம் அலுவல் எல்லையிலுள்ள மத்திய வங்கியின் நிருவாகக் குழுவின் அலுவலால் உறுப்பினராக இருக்கிறார். நிருவாகக் குழுவின் தலைவரும், துணைத்தலைவரும் நிருவாகக் குழுவின் உறுப்பினர்களிடையே யிருந்து நிருவாகக் குழுவால் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

ஒரு மத்திய வங்கியின் நிருவாகக் குழு அன்றியும், ஒவ்வொரு மத்திய வங்கியின் செயற் குழுவிற்காகவும், விதிகள் ஏற்பாடு செய்துள்ளன. செயற்குழு தலைவரையும், துணைத்தலைவரையும் இதர 5 உறுப்பினர்களையும் கொண்டிருக்கும். இந்த 5 உறுப்பினர்களில் நால்வர், தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களிடையே யிருந்து தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். மற்றொருவர், நியமனம் செய்யப்பட்ட உறுப்பினர்களிடையேயுள்ள உறுப்பினராக இருக்கவேண்டும். வங்கியின் தலைவரும், துணைத்தலைவரும் செயற்குழுவில் அலுவலால் தலைவராகவும் துணைத்தலைவராகவும் இருக்கவேண்டும். மத்திய வங்கியின் நிருவாகக் குழுவால் தனக்கு ஒப்படைக்கப்படும் அதிகாரங்களைச் செயற்குழு கையாண்டு, தன் பணிகளை நிறைவேற்றும்.

புதிய விதிகள், மத்திய வங்கிகளின் நிருவாகக் குழுவில், சங்கங்களுக்கும், இதர நலமிகளுக்கும் நியாயமான பிரதிநிதித்துவம் அளிப்பதை ஏற்படுத்தியுள்ளன.

**பேரவைக் கூட்டம்:** எல்லா இதர வகைக் கூட்டுறவு நிறுவனங்களைப் போன்று, மத்திய வங்கிகளின் நிருவாகத்தைக் குறித்த எல்லா விஷயங்களைப் பற்றிய இறுதியான அதிகாரம் மத்திய வங்கியின் பேரவை வச முள்ளது. அப் பேரவை (i) நிருவாகக்குழு உறுப்பினர்களையும், (ii) தனிநபர் உறுப்பினர்களையும், (iii) சங்கங்களின் பிரதிநிதிகளையும் உறுப்பினர்களாகக் கொண்டுள்ளது. ஒவ்வொரு சங்க உறுப்பினரும், தம் பேரவைக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு பிரதிநிதியை, மத்திய வங்கியின் பேரவைக் கூட்டத்தில் தம் பிரதிநிதியாக விருப்பதற்கு அமர்த்த வேண்டியிருக்கிறது. சங்க உறுப்பினர்கள், தனிநபர் உறுப்பினர்களைக் காட்டிலும், அதிக எண்ணிக்கையிலிருப்பதால், அவர்கள், பொதுவாக, மத்திய வங்கியின் பேரவைக் கூட்டத்தில் பிரதானமான குரலைப் பெற்றிருக்கின்றனர்.

ஒவ்வொரு மத்திய வங்கிக்காகவும் ஒரு சம்பளச் செயலர் இருக்கின்றார். அவர் வங்கியின் அன்றாட நிருவாகத்திற்குப் பொறுப்பாகவுள்ள தலைமை நிருவாக அதிகாரியாக உள்ளார்.

சங்கங்களின் மேற்பார்வைக்காக, ஒரு நிருவாக அதிகாரியுங்கூட மத்திய வங்கியில் உண்டு.

## 5. மத்திய வங்கிகளின் தற்போதைய பொது நிலவரம்

**(i) அனைத்திந்திய நிலவரம்:** 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் எண்ணிக்கை, 341 ஆக இருந்தது. கிளைகள், அலுவலகங்கள் (தலைமை அலுவலகம் உட்பட) ஆகியவற்றின் எண்ணிக்கை 4,317 ஆக இருந்தது. 2,44,239 சங்கங்களும், 74,702 தனிநபர்களும், மற்றவர்களும், இந்த வங்கிகளின் உறுப்பினர்களாக இருந்தனர். இவ் வங்கிகளின் மொத்தப் பங்கு மூலதனம் ரூ.157.63 கோடியாக இருந்தது. இதில், அரசு பங்கு மூலதனம் ரூ.45.32 கோடியாகவும், கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனம் ரூ. 111.40 கோடியாகவும், தனி நபர்களின் பங்கு மூலதனமும் மற்றவர்கள் பங்கு மூலதனமும் ரூ. 0.90 கோடியாகவு மிருந்தன. இவ் வங்கி களால் வைக்கப்பட்டிருந்த மொத்த வைப்புகள் ரூ.509.73 கோடியாகவிருந்தன. இதில் சங்கங்களின் வைப்புகள் ரூ.202.75 கோடியாகவும், தனிநபர் வைப்புகளும் உள்ளாட்சி நிறுவனங் கள் உட்பட ஏனையவர்களுடைய வைப்புகளும் ரூ.306.98 கோடியாகவுமிருந்தன. இவ் வங்கிகளின் சட்டப்படியான காப்பு நிதியும், விவசாய நிலைப்படுத்தும் நிதியும், வராக் கடன் காப்பிருப் பும், வராக் கடன் சிறப்புக் காப்பிருப்பும், இதரக் காப்பிருப்பு களும் ரூ.47.89 கோடித் தொகைக்கிருந்தன. சட்டப்படியான காப்பு நிதி மட்டும், ரூ.22.97 கோடித் தொகைக்கிருந்தது. இவ் வங்கிகள் வாங்கிய கடன்கள் 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் ரூ. 401.09 கோடியாகவும், அவற்றின் மொத்த நடைமுறை மூலதனம் ரூ. 1,193.56 கோடியாகவும் இருந்தன. இவ் வங்கிகள் ரூ. 961.34 கோடி குறுகிய காலக் கடன்களாகவும், ரூ. 94.49 கோடி மத்தியக் காலக் கடன்களாகவும், மொத்தம் ரூ. 1,055.83 கோடியளவுக்குக் கடன்கள் வழங்கியிருந்தன. ஆண்டிறுதியில் நிலுவையிலிருந்த கடன்கள் ரூ. 888.86 கோடியாகவிருந்தன. இதில் ரூ. 708.21 கோடி குறுகிய காலக் கடன்களாகவும், ரூ.180.64 கோடி மத்தியக் காலக் கடன்களாகவும் இருந்தன. ஆண்டிறுதியில் தவணை கடந்த பாக்கிகள் ரூ. 319.35 கோடியாக இருந்தன. அவற்றுள் ரூ. 274.80 கோடி குறுகிய காலக் கடன் பாக்கியாகவும், ரூ. 44.55 கோடி மத்தியக் காலக் கடன் பாக்கியாகவு மிருந்தன. கடன் நிலுவைத் தொகைக்குத் தவணை கடந்த பாக்கிக் கடன்களின் சதவிகிதம் 8.3 ஆக இருந்தது.

1968, 1970, 1972 ஆண்டுகளினிறுதியில் நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் முன்னேற்றத்தைக் காண்பிக்கும் ஒரு விவரப்பட்டியல் அடுத்தபக்கத்தில் தரப்பட்டுள்ளது.

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| | | 1968 | 1969-70 | 1971-72 |
|---|---|---|---|---|
| 1. | மத்திய வங்கிகளின் எண்ணிக்கை | 344 (16) | 340 (16) | 341 (16) |
| 2. | அலுவலகங்கள், கிளைகளின் எண்ணிக்கை | 2,489 (101) | 3,438 (181) | 4,317 (286) |
| 3. | பங்கு மூலதனம் | 101.1 கோடி (9.86) | 127.9 கோடி (11.09) | 157.63 கோடி (13.15) |
| 4. | காப்பு இருப்புகள் | 34.3 கோடி (6.58) | 46.2 கோடி (7.24) | 47.89 கோடி (7.20) |
| 5. | வைப்புகள் | 300.5 கோடி (22.74) | 381.7 கோடி (28.15) | 509.73 கோடி (40.14) |
| 6. | இதரக் கடன்கள் | 270 கோடி (24.61) | 372 கோடி (31.76) | 401.09 கோடி (37.57) |
| 7. | நடைமுறை மூலதனம் | 706.08 கோடி (61.57) | 927.8 கோடி (78.19) | 1,193.56 (103.01) |
| 8. | ஆண்டின்போது வழங்கப்பட்ட கடன்கள் | 726.9 கோடி (47.27) | 827.5 கோடி (58.48) | 1,055.83 (101.40) |
| 9. | நிலுவையிலுள்ள கடன்கள் | 549.8 கோடி (39.10) | 739.8 கோடி (59.24) | 888.86 (83.57) |
| 10. | தவணை கடந்த பாக்கிகள் | 135.8 கோடி (10.40) | 215.2 கோடி (12.30) | 319.35 (7.28) |
| 11. | நிலுவைக் கடன்களுக்குத் தவணை கடந்த பாக்கிகளின் சதவிகிதம் | 24.7% (2.5%) | 29% (2%) | 35.9% (8.3%) |

(அடைப்புக் குறியிலுள்ள எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்புள்ளவை.)

(ii) தமிழ்நாட்டில், 286 அலுவலகங்களைக் கொண்ட (தலைமை அலுவலகங்களுட்பட) 16 மத்தியக் கூட்டுறவு வங்கிகளிருக்கின்றன. அவற்றின் உறுப்பினர் எண்ணிக்கையில் 13,711 சங்கங்களும், 9,596 தனிநபர்களும் மற்றவர்களும் அடங்கியிருந்தனர். இவ் வங்கிகள் ரூ. 13.15 கோடி பங்கு மூலதனத்தைக் கொண்டிருந்தன. இதில் ரூ. 2.92 கோடி அரசு பங்கு மூலதனமாகவும், ரூ. 10.16 கோடி சங்கங்களின் பங்கு மூலதனமாகவும், ரூ. 06 கோடி தனிநபர்களின் பங்கு மூலதனமாகவும், மற்றவர்களின் பங்கு மூலதனமாகவு மிருந்தன. இவ் வங்கிகளால் வைக்கப்பட்டிருந்த மொத்த வைப்புகள் ரூ. 40.14 கோடிக்கிருந்தன. இதில் சங்கங்களின் வைப்புகள் ரூ.22.60 கோடியாகவும், உள்ளாட்சி நிறுவனங்களுட்படத் தனிநபர்களின் வைப்புகளும் மற்றவர்களின் வைப்புகளும் ரூ. 17.54 கோடியாகவு மிருந்தன. இவ் வங்கிகளின் சட்டப்படியான காப்பு நிதியும், வராக்கடன் காப்பு இருப்பும், வராக்கடன் சிறப்புக் காப்பிருப்பும், இதரக் காப்பிருப்புகளும் ரூ. 7.26 கோடிக்கிருந்தன. சட்டப்படியான காப்புநிதி மட்டும் ரூ. 2.99 கோடிக்கிருந்தது. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் இவ் வங்கிகள் வாங்கிய கடன்கள் ரூ. 37.55 கோடிக்கும், அவைகளின் மொத்த நடைமுறை மூலதனம் ரூ. 103.01 கோடிக்கு மிருந்தன. இவ் வங்கிகள் ரூ. 101.40 கோடி யளவிற்குக் கடன்கள் வழங்கின. அதில் ரூ. 91.88 கோடி குறுகியகாலக் கடன்களாகவும், ரூ. 9.52 கோடி மத்தியக் காலக் கடன்களாகவு மிருந்தன. ஆண்டிறுதியில், நிலுவையிலிருந்த கடன்கள் ரூ. 83.56 கோடியாக இருந்தன. இதில், ரூ. 66.26 கோடி குறுகியகாலக் கடன்களாகவும், ரூ. 17.30 கோடி மத்தியக் காலக் கடன்களாகவு மிருந்தன. ஆண்டிறுதியில், தவணை கடந்த பாக்கிகள் ரூ. 7.28 கோடியாக இருந்தது. அது நிலுவையிலிருந்த கடன்களுக்கு 8.3 சதவிகிதமாக இருந்தது.

## 6. மத்திய வங்கிகளின் நிதிஆதாரங்கள்

மத்திய வங்கிகளின் நிதிஆதாரங்கள், பங்குமூலதனம், காப்புநிதி, இதரக் காப்பிருப்புகள், வைப்புகள், இதரக் கடன்கள் போன்ற சொந்த நிதிகளாகும். இவை அவ் வங்கிகளின் நடைமுறை முதலாக அமைந்துள்ளன.

**(i) பங்கு மூலதனம்:** பங்கு மூலதனம், மத்திய வங்கிகளில் நிதிகளின் பிரதான ஆதாரமாகவுள்ளது. வைப்புகளை ஈர்ப்பதற்கும், பொதுமக்களிடையே நம்பிக்கை உண்டுபண்ணுதற்கும் மட்டுமன்றி, அவசியமான கடன்வாங்கும் சக்தியைப் பெறுவதற்குங்கூட மத்தியவங்கிகள் ஒரு கணிசமான செலுத்தப்

பட்ட பங்கு மூலதனத்தை உடைத்தாயிருப்பது அவசியமாக உள்ளது. இந்த மூலதனம் சங்கங்களுக்கும் தனி நபர்களுக்கும் ஒதுக்கப்பட்ட பங்குகள் மூலம் திரட்டப்படுகிறது. ஒரு பங்கின் மதிப்பு, பொதுவாக, ரூ.50 அல்லது ரூ. 100ஆக உள்ளது. மத்திய வங்கிகளின் பங்குமூலதனத்தின் பெரும்பகுதி, உறுப்பினர்-சங்கங் களால் கொடுக்கப்படுகின்றன. பங்குமூலதனத்தை அதிகப்படுத்து வதற்கான இரண்டு முக்கிய முறைகளாவன: (1) அரசு பங்கு மூலதனத்தை வழங்குதல், (2) பங்குவைப்புகளைக் கடன்கள் வாங்குதலுக்குப் பல்வேறு மட்டங்களில் இணைத்தல். நாட்டில் 341 மத்திய வங்கிகளால் பெறப்பட்டிருந்த ரூ.157.63 கோடி மொத்தம் செலுத்தப்பட்ட பங்குமூலதனத்தில், அரசு பங்கு மூலதனம் ரூ.45.32 கோடியாக இருந்தது. தமிழ்நாட்டில், அரசு மத்திய வங்கிகள் பங்கு மூலதனத்தில் ரூ.2.92 கோடி யளவுக்கு ஈடுபட்டிருந்தது. பங்கு வைப்பைக் கடன் வாங்கு தலுக்கு இணைத்தல் பொறுத்தமட்டில், இந்த நடைமுறையானது நீண்டகாலமாக அமுலிலிருந்திருக்கிறது. தமிழ்நாட்டில், விவ சாயக்கடன் சங்கங்கள், மத்தியக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்து தாங்கள் பெற்ற கடன் தொகையில் $6\frac{2}{3}$ சதவிகிதத்திலிருந்து 10 சதவிகிதம்வரை வேறுபடும் வீதத்தில் பங்குகள் எடுப்பதற்குத் தேவைப்படுகின்றன. இதர வகைச் சங்கங்கள் விஷயத்தில், பங்குமூலதனம் அவைகளால் மத்தியக் கூட்டுறவு வங்கியி லிருந்து பெற்ற கடன் அல்லது முன்பணத்தின் 2 சதவிகிதமாகப் பொதுவாகவுள்ளது. ஆனால், சில வங்கிகள் அதிகமான விகிதத் தில் வசூல் செய்கின்றன. ஓர் உறுப்பினரின் பங்கு மூலதன மானது மற்றொரு சங்கத்திற்கு மாற்றுதல் செய்வதன் மூலமல் லாது, திரும்பப்பெற முடியாததாகும்.

**(ii) சட்டப்படியான காப்புநிதியும் இதரக் காப்பிருப்பு களும்:** பங்கு மூலதனத்தைத் தவிர மத்திய வங்கிகள் தங்கள் சட்டப்படியான காப்பு நிதியையும், இதரக் காப்பிருப்புகளையும் அமைத்துள்ளன. இவை, வங்கிகளின் பங்குமூலதனத்துடன் அவற்றின் சொந்த நிதிகளாக அமைகின்றன. 30.6.72ஆம் நாளன்று, மைய வங்கிகளின் நடைமுறை முதலுக்குச் சொந்த நிதிகளின் சதவிகிதம் 18.9ஆக இருந்தது. தமிழ்நாட்டில், அது 19.5 சதவிகிதமாக இருந்தது. சட்டப்படியான காப்புநிதி, ஒரு வங்கியால் ஒவ்வோர் ஆண்டும் ஈட்டப்பட்ட நிகர இலாபங் களிலிருந்து அமைக்கப்படுகிறது. பொதுவாக, மத்திய வங்கிகள், தங்கள் நிகர இலாபங்களில் குறைந்தபட்சம் நான்கில் ஒரு பகுதியை இந்த நிதிக்குக் கொண்டுபோக வேண்டுமென்று சட்டத்தால் தேவைப்படுகின்றன. தமிழ்நாட்டில், சென்னைக்

கூட்டுறவுச் சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட விதிகளின்படி, இவ் வங்கிகள், தங்கள் நிகர இலாபங்களில் 20 சதவிகிதத்திற்குக் குறையாமலும், 30 சதவிகிதத்திற்கு மேற்படாமலும் காப்பு நிதிக்குக் கொண்டுபோக வேண்டும். 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நாட்டில், எல்லா மத்திய வங்கிகளின் காப்புநிதி ரூ. 22.97 கோடிக்கும், தமிழ்நாட்டில் ரூ. 2.99 கோடிக்கும் இருந்தது.

நிகர இலாபங்களில் ஒரு பகுதி விவசாய நிலைப்படுத்தும் நிதிக்கு எடுத்துச் செல்லப்படுகிறது. தமிழ்நாட்டில் விதிகளின்கீழ் நிகர இலாபங்களில் 15 சதவிகிதம் இந்த நிதிக்குக் கொண்டு போகப்படவேண்டும். பஞ்சம், வறட்சி அல்லது அத்தகைய இதர எதிர்பாராத சூழ்நிலைகள் காரணமாகக் கடன் திருப்பிச் செலுத்துதலைத் தள்ளிப்போடல் செய்வதற்குக் கடன் வாங்குபவர்களுக்கு வசதி செய்ய இந்த நிதி உபயோகப்படுத்தப்பட வேண்டும். பயிர் சாவியாதல் நிகழ்கின்றபோது, மத்திய வங்கிகள் குறுகிய காலச் சாகுபடிக் கடன்களை மத்தியக் காலக் கடன்களாக மாற்றுகின்றன. அத்தகைய கடன்களின் 15 சதவிகிதம் மத்திய வங்கிகளின் நிதியிலிருந்தும், எஞ்சியுள்ளவை மாநிலக் கூட்டுறவு வங்கியால் தன் சொந்த விவசாய நிலைப்படுத்தும் நிதியிலிருந்தும் வழங்கப்படுகிறது. நாட்டில், மத்திய வங்கிகள் இந்த நிதியின்கீழ் ரூ.8.44 கோடியை வைத்திருந்தன. தமிழ்நாட்டில் 1972 சூன் இறுதியில் இந்த நிதியில் ரூ.1.37 கோடி இருந்தது. 1968–69ஆம் ஆண்டின்போது, பயிர்கள் சாவியாதல் பரவலாக இருந்ததனால் 5 மத்திய வங்கிகளால், 31.3.1969ஆம் நாள் வரை கடன் மாற்றுதல் கையாளப் பட்டது.

சட்டப்படியான காப்புநிதியைத் தவிரவும், வராக்கடன் காப்பிருப்பு வடிவத்தில் இன்னுமொரு பாதுகாப்பு வரிசை, மத்திய வங்கிகளால் தங்கள் நிதிநிலைமையைப் பலப்படுத்துவதற்காக ஏற்படுத்தப்படுகிறது. மதிப்பீடு செய்யப்பட்ட வராக்கடன்கள் மற்றும், சந்தேகக் கடன்களைக் குறித்து, மத்திய வங்கி, தன் இலாபங்களிலிருந்து வராக்கடன் காப்பிருப்புக்கு ஒதுக்குதல் செய்கிறது. கடன்களில் யாதொரு பகுதியும் வராக் கடன் களாகவும், சந்தேகக் கடன்களாகவும் இருக்கின்றனவென்று மதிப்பீடு செய்யப்பட்டாலும், அல்லது, அவ்வாறு செய்யப் படாவிட்டாலும், நிகர இலாபங்களில் ஒருசில சதவிகிதத்தை இந்தக் காப்பிருப்புக்குக் கொண்டுபோவதையுங்கூட, ஒரு மத்திய வங்கி வேண்டுமென்றால் செய்யலாம். சங்கங்களிடமிருந்து வசூல்

செய்யமுடியாத கடன்களைத் தள்ளுபடி செய்வதற்கு இந்த நிதி பயன்படுத்தப்படுகிறது. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நாட்டில், மத்திய வங்கிகளின் வராக்கடன் காப்பிருப்பு ரூ.14.09 கோடியாகவிருந்தது. அது தமிழ்நாட்டில், ரூ.2.63 கோடியாக இருந்தது.

வராக்கடன் சிறப்புக் காப்பிருப்புகள், 'கூட்டுறவுக் கடன் பற்றிய' மேத்தா குழுவின் பரிவுரைகளையொட்டி, மத்திய வங்கிகளால் அமைக்கப்பட்டுள்ளன. மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும், விவசாயக் கடன் சங்கங்களாலும் பராமரிக்கப்படுகின்ற இந்த நிதிக்கு அரசால் உதவித்தொகை யளிக்கப்படுகிறது என்பதை முன்னரே விளக்கியுள்ளோம். உதவித்தொகை யளிப்பதற்கான இத் திட்டம், 1962—63ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டு மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு ஒரு சதவீதத்திலும், விவசாயக் கடன் சங்கங்களுக்கு 3 சதவீதத்திலும், விவசாயச் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினருக்கு, முன்பின் ஆலோசித்தலின்றிக் கடன்களளிப்பதை ஊக்குவிக்கும் பொருட்டு, உதவித்தொகை யளிக்கப்பட்டது. 1968—69ஆம் ஆண்டில், உதவித்தொகை யடிப் படையைக் குறித்த கொள்கையில், ஒரு மாற்ற மிருந்தது. 1968—69ஆம் ஆண்டிலிருந்து அது, விவசாயச் சமுதாயத்தின் பலம் குன்றிய பகுதியினர்களுக்கு வழங்கப்பட்ட கடன்களைக் குறித்து மட்டுந்தான், அதாவது தனிநபர் உச்சக் கடனளவு ரூ.200-க்கு மேற்படாமலுள்ள உறுப்பினர்களுக்கு வழங்கப் பட்ட கடன்களைக் குறித்து மட்டுமே, உதவித்தொகைத் திட்டம் செயற்பட வேண்டும். உதவித்தொகை விகிதத்திலுங்கூட ஒரு மாறுதல் செய்யப்பட்டது. மத்திய வங்கிகளுக்கும் பிரதம கடன் சங்கங்களுக்கும் வழங்கப்படும் அரசு உதவித்தொகைகள், ஓராண்டில் நிலுவையிலிருந்த அத்தகைய கடன்கள் முந்திய ஆண்டைக் காட்டிலும் அதிகரித்திருந்தால் அந்த அதிகரிப்பில் முறையே 4 சதவிகிதத்திலும், 12 சதவிகிதத்திலும் இருக்க வேண்டும். 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள் வசமிருந்த வராக் கடன் சிறப்புக் காப்பிருப்பு ரூ.2.38 கோடிக் கிருந்தது. அது தமிழ்நாட்டில் ரூ.0.27 கோடிக்கிருந்தது.

மேற்குறிப்பிடப்பட்ட மத்திய வங்கிகளின் சட்டப்படியான காப்புநிதியும், இதரக் காப்பிருப்புகளும் 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் ரூ.47.89 கோடிக்கிருந்தது; அது தமிழ்நாட்டில் ரூ.7.20 கோடிக்கிருந்தது.

**(iii) வைப்புகள்:** தனிநபர்களிடமிருந்தும், உள்ளாட்சி நிறுவனங்கள், அரசு நிறுவனங்களைப் போன்ற நிறுவனங்களிலிருந்தும் பெற்ற வைப்புகளிலிருந்து, மத்திய வங்கிகள் தங்கள் நடைமுறை மூலதனத்தைப் பெரும்பாலும் பெறுகின்றன. 1971–72ஆம் ஆண்டிற்கான எண்கள் அடிப்படையின் பேரில், நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் வைக்கப்பட்டிருந்த வைப்புகள், தங்கள் மொத்த நடைமுறை மூலதனத்தின் 42.7 சதவிகிதமாக அமைந்திருந்தன. தமிழ்நாட்டில் அந்தச் சதவிகிதம் 38.5ஆக இருந்தது. வைப்புகளைத் திரட்டுவதன் முக்கியத்துவம், குறிப்பாகக் கூட்டுறவு நிதிவழங்கும் வங்கிகளுக்காக அதிகமாக வலியுறுத்தப்பட முடியாததானதாகும். 1915ஆம் ஆண்டிலேயே மேக்லகன் குழுவினர், 'இயக்கம் முன்னேறி வரும்பொழுது, வைப்புகளில் ஒரு கணிசமான அதிகரிப்பு இருந்தாலொழிய, கூட்டுறவு தன் பிரதான நோக்கங்களி லொன்றில் தோல்வியடைந் துள்ளது என்பதை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது' என்று கூறியிருந்தனர். வைப்புகள் சேகரிப்பு முயற்சியில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் செயல்திறன் ஊக்கமளிக்கும் வகையி லிருந் திருக்கிறது. எல்லா மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் மொத்த வைப்புகள் ஆண்டிற்காண்டு அதிகரித்து வந்திருக்கிறது. 1968ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், ரூ.300.5 கோடி வைப்புகளும், 1970 சூன் இறுதியில் ரூ.381.7 கோடி வைப்புகளு மிருந்தன.

வைப்புகளின் ஆதாரங்களில் பிரதம சங்கங்களால் மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் முதலீடு செய்யப்பட்ட காப்புநிதியுங்கூட ஒன்றாக வுள்ளது. இந்த வைப்புகள் ஏறக்குறையப் பெரிதாக இருப்பதுடன், அவை ஸ்திரமாக அதிகரித்துக் கொண்டும் வருகின்றன. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், வைக்கப் பட்டிருந்த வைப்புகள் ரூ. 509.73 கோடிக்கிருந்தன. அவற்றில், சங்கங்களின் வைப்புகள் ரூ. 202.75 கோடிக்கும், தனிநபர்கள் வைப்புகளும், உள்ளாட்சி நிறுவனங்களுட்பட மற்றவர்களுடைய வைப்புகளும் ரூ.306.98 கோடிக்குமிருந்தன. தமிழ்நாட்டிலுங் கூட, வைப்புகள் 1968ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் ரூ.22.74 கோடியிலிருந்து, 1970ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் ரூ.28.15 கோடிக்கும், 1973ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் ரூ.40.14கோடிக் கும் அதிகரித்துக்கொண்டு வந்துள்ளன. 1973ஆம் ஆண்டுச் சூன் இறுதியிலிருந்த வைப்புத் தொகைகளுள், சங்கங்களின் வைப்புகள் ரூ.22.60 கோடிக்கும், தனிநபர் வைப்புகளும் உள்ளாட்சி நிறுவனங்களுட்பட மற்றவர்களுடைய வைப்புகளும் ரூ.17.54 கோடிக்குமிருந்தன. அதேசமயத்தில், அதிகமான வைப்புகளைத் திரட்டுவதன் அவசியம் பிரதானமானதாக வுள்ளது. நாட்டில்

ஏற்பட்டுவரும், பசுமைப் புரட்சியின் விளைவாக, கிராம வருவாய் அதிகரித்துக் கொண்டிருக்கின்றன. ஆகையால், அவற்றில் ஒரு பகுதி, சேமிப்புகள் வடிவத்தில் திரட்டப்படுவது அத்தியாவசியமாகவுள்ளது. கிராமப் பகுதிகளுடன் தொடர்பு கொண்டுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கிகள், வைப்புகளைத் திரட்டுவதற்கு மிகச் சிறந்த அமைப்புகளாக வுள்ளன. வைப்புகள், மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கான ஒரு முக்கிய நிதி ஆதாரமாக மட்டுமன்றி, அனைத் திந்தியக் கிராமக் கடன் மறு ஆய்வுக் குழுவினரின் (1969) கூற்றுகளின்படி, 'தங்கள் தவணை கடந்த பாக்கிகளுக்கு ஒரு திண்டாக அமைந்து, அதன்மூலம் உயர்நிலை நிதியமைப்புகளிலிருந்து இடையருத நிதிப்பாய்ச்சலைப் பராமரிப்பதற்கு, வங்கிகளுக்கு உடனடியான உதவி புரிகின்றன.'

வைப்புகளை அதிகப்படுத்துவதற்காக, அவ்வப்போது பல யோசனைகள் கூறப்பட்டு வந்துள்ளன. அவை பின்வருமாறு:

(i) கிளைகளைத் திறப்பதற்கான ஒரு முறையான செயல் திட்டம் மேற்கொள்ளப்பட வேண்டும். 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதிக்குள், நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள், தலைமை அலுவலகங்களுட்பட 4,317 அலுவலகங்களைத் திறந்திருக்கின்றன. தமிழ்நாட்டில், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் 286 கிளைகளை உடையன. கவனமான விசாரணைக்குப் பிறகு, கிளைகள் திறக்கப்பட்டால், மேற்கண்ட விரிவாக்கத்திற்கு உதவி செய்யக்கூடும்.

(ii) வழக்கமான வைப்புகள் வகைக ளன்றியும், வளரும் வைப்புகள் (Cumulative Deposits), சமுதாயப் பாதுகாப்பு வைப்புகள் (Social Security Deposits), பெரிய ரொக்கச் சான்றிதழ்கள் (Giant Cash Certificates), ஓய்வுப் பாதுகாப்பு வைப்புகள் (Retirement Security Deposits), குழந்தைகள் நலப் பாதுகாப்புப் பத்திரங்கள் (Childrens' Welfare Security Certificates), தொடர்வைப்புகள் (Recurring Deposits), மன்றங்கள் சேமிப்புகள் (Club Savings), விட்டு உண்டியல் வைப்புகள் (Home Safe Deposits) முதலியன போன்ற புதுவகை வைப்புகளையும் வங்கிகள் தொடங்க வேண்டும்.

(iii) உள்ளூர்க் காசோலைகளை (Cheques) வசூல் செய்தல், வங்கியின் ஓர் அலுவலகம் இருக்குமிடத்தில் புறப்பகுதிக் காசோலைகளை வசூலித்தல், கணக்குவைத்திருப்பவர்களின் இலாப ஈவு வழங்கும் ஆணைகளை (Dividend Warrants) வசூலித்தல், நிலையான வைப்புகள்மீதும், அரசாங்கப் பத்திரங்கள்

மீதுமான வட்டியை வசூலித்தல், சம்பளப் பட்டியல்களை மற்றும் ஓய்வூதியப் பட்டியல்களை வசூலித்தல் விஷயத்தில், இலவசச் சேவைகள் வழங்கப்பட வேண்டும்.

(vi) வங்கித் தொழிலில் சிப்பந்திகள் பயிற்சியளிக்கப்பட்டு, மக்கள் தொடர்பு அபிவிருத்தி செய்யப்பட வேண்டும்.

தமிழ்நாட்டில் வைப்புகளைத் திரட்டுவதற்காக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு உதவிபுரிய எடுக்கப்படும் நடவடிக்கைகள் பின்வருமாறு:- (i) 1964ஆம் ஆண்டிலிருந்து, 36 மாதங்கள் காலத் தவணை வைப்புகளைக் குறித்து, மாநிலக் கூட்டுறவு வங்கி பொறுத்தமட்டில் ரூ.125 இலட்சமளவிற்கும், ஒவ்வொரு மத்தியக் கூட்டுறவு வங்கி பொறுத்தமட்டில் ரூ.30 இலட்சமளவிற்கும், அசல் திருப்பிச் செலுத்தப்படுவதற்காகவும், வட்டி செலுத்தப் படுவதற்காகவும், அரசு உத்தரவாத மளித்திருக்கிறது. (ii) வைப்புகளைச் சேகரிப்பதற்காக, அதிகமான கிளைகளைத் திறப்பதற்கு மத்திய வங்கிகளை ஊக்குவிக்கும் பொருட்டு, 1966–67ஆம் ஆண்டிலிருந்து திறக்கப்பட்ட ஒவ்வொரு புதிய கிளைக்காகவும், 3 ஆண்டுகளுக்குப் பரவலாக்கப்பட்ட ரூ.10,000 மானியத் தொகையை அரசு கொடுத்து வருகின்றது. தொடக்கச் செலவுகளை ஆதரிப்பதற்கும், ஆரம்ப ஆண்டுகளில் ஏற்படக் கூடிய நட்டங்களை ஆதரிப்பதற்கும், இந்த மானியத் தொகை உத்தேசிக்கப்பட்டுள்ளது. (iii) மாநிலக் கூட்டுறவு வங்கியிலும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளிலும் சில ஒதுக்கப்பட்ட நிதிகளை (Earmarked Funds) முதலீடு செய்வதற்கு, உள்ளாட்சி நிறுவனங்களுக்கு அளிக்கப்பட்ட அனுமதி நீடிக்கப்பட்டுள்ளது. (iv) சமய சம்பந்தமான நிறுவனங்களிடமிருந்தும், கல்வி சம்பந்தமான நிறுவனங்களிடமிருந்தும் வைப்புகளைப் பெறுவதற்காக, 1967ஆம் ஆண்டிலிருந்து, மாநிலக் கூட்டுறவு வங்கியும் தொடர்ந்து மூன்று ஆண்டுகளுக்கு (அ) அல்லது (ஆ) தணிக்கைப் பாகுபாட்டைக் கொண்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளும், இந்தியத் தேச வங்கியுடனும் அதன் துணை வங்கிகளுடனும் சமனாக வைக்கப்பட்டுள்ளன. (v) சமய சம்பந்தமான நிறுவனங்கள், மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் முதலீடு செய்யும் ஒவ்வொரு சமயத்திலும், உயர் அதிகாரிகளின் அங்கீகாரத்தைப் பெற வேண்டிய ஒரு கட்டுப்பாட்டிலிருந்து விலக்கு அளிக்கப் பட்டுள்ளன.

சந்தானம் குழுவினர் (1969) மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் அதிகமாக வைப்புகள் திரட்டப்படுவதற்குக் கீழ்க்காணும் நடவடிக்கைகளைப் பரிவுரை செய்திருக்கின்றனர்.

(1) மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும் அதன் கிளைகளையும், நகராட்சிகளும் பஞ்சாயத்து நிறுவனங்களும் தங்களுடைய ஒரே வங்கியர்களாக (Sole Bankers) உபயோகித்து அவற்றில் தங்கள் நிதிகளை முதலீடு செய்ய வேண்டுமென்று அரசு கட்டளையிட வேண்டும்.

(2) கூட்டுறவு வங்கிகளின் வைப்புகளையும் 'வைப்புகள் காப்பீட்டுத் திட்டத்தில்' (Deposit Insurance Scheme) சேர்த்துக் கொள்ள அத் திட்டம் விரிவுபடுத்தப்படவேண்டும். அத்தகைய விரிவுபடுத்துதலை வசதி செய்யும் பொருட்டு, சென்னைக் கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தைத் தக்கவாறு மாநில அரசு திருத்தம் செய்யவேண்டும்.

**(iv) கடன்கள் வாங்குதல்:** தங்கள் இணைக்கப்பட்ட சங்கங்களின் வளர்ந்துவரும் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்காகச் சொந்த நிதிகளும், வைப்புகளும் போதாமலுள்ளன. இவ் வங்கிகள் தங்கள் உள்ளிட்ட நிதி ஆதாரங்களுக்கும், தேவைகளுக்கு மிடையேயுள்ள குறைவை நிறைவாக்குவதற்கு, நிதிகளைக் கடன் வாங்க வேண்டியிருக்கிறது. தற்போது, நிதிகளைக் கடன் வாங்குவதற்கான ஒரு பெரும் ஆதாரம் ரிசர்வ் வங்கியாகும்; இதர ஆதாரங்கள், மாநிலக் கூட்டுறவு வங்கியும், மாநில அரசும், தேச வங்கியும் அதன் துணை நிறுவனங்களு மாகும். கடன் வாங்குதல் நிலையாக அதிகரித்து வந்துள்ளது. நாடு முழுவதற்காகவும் இவ் வங்கிகளின் நடைமுறை முதலுக்குக் கடன் வாங்குதல் சதவிகிதம், 1968ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 38.2 சதவிகிதத்திலிருந்து 1970ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 40 சதவிகிதத்திற்கு உயர்ந்திருக்கிறது. எனினும், 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், இந்தச் சதவிகிதம் குறைந்திருந்தது; அதாவது 38.4 சதவிகிதத்திற்குக் குறைந்திருந்தது. தமிழ்நாட்டைப் பொறுத்தமட்டில், நடைமுறை முதலுக்குக் கடன் வாங்குதலின் சதவிகிதம், 1968ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 38.2 சதவிகிதமாகவும், 1970ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 40 சதவிகிதமாகவு மிருந்தது. எனினும், 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், அது 33.5 சதவிகிதமாக இருந்தது. கடன் வாங்குதல்மீது மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் சார்பு அதிகமாகவே தொடர்ந்திருக்கிறது.

**மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் உச்சக் கடனளவு:** மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் கடனளவை, அவ் வங்கிகளின் சொந்த நிதிகளில் பல மடங்குகளைக் கொண்ட ஓரளவுக்குத் தொடர்பு

வைப்பதும், நிருணயிப்பதும் வழக்கமாக வுள்ளது. செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தையும், சட்டப்படியான காப்பு நிதியையும் மட்டுமன்றி, விவசாய நிலைப்படுத்தும் நிதி, கட்டட நிதி முதலியன போன்று இலாபங்களிலிருந்து ஏற்படுத்தப்பட்ட நிரந்தரத் தன்மையுடைய இதர நிதிகளையுங்கூட உள்ளடைக்கும் வகையில் கடனளவுகளை நிருணயிக்கும் காரியத்திற்காகச் சொந்த நிதிகளின் விளக்கம் தாராளமாக்கப்படுத்தப்பட்டிருக்கிறது. பொதுவாக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் உச்சக் கடனளவு, சொந்த நிதிகளில் 12 மடங்குகளாக நிர்ணயிக்கப்படுகிறது. கூட்டுறவுக் கடன் பற்றிய மேத்தா குழுவினர், மையக் கூட்டுறவு வங்கிகளின் உச்சக் கடனளவு, அவ் வங்கிகளின் சொந்த நிதிகளில் 15 மடங்குகளாக நிர்ணயிக்கப்படவேண்டுமென்று பரிவுரை செய்தனர். இப் பரிவுரை, பொதுவாக அரசால் ஏற்கப்பட்டிருக்கிறது. விசேஷச் சந்தர்ப்பங்களில், கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் உணவுத் தானியங்கள், நூல், ஆலைத் துணி, கொள்முதல் விநியோகம் முதலியன போன்ற விசேஷத் திட்டங்களுக்கு நிதியுதவி யளிப்பதற்கு, மேற்கொண்ட அதிகரிப்பு அனுமதிக்கப்பட்டிருக்கிறது.

### (அ) ரிசர்வ் வங்கியிடமிருந்து கடன் பெறுதல்

மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு, மாநிலக் கூட்டுறவு வங்கியின் மூலம், முக்கியமாகக் கீழ்க்காணும் காரியங்களுக்காக ரிசர்வ் வங்கி நிதி வழங்குகிறது:

(i) பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்களின் விற்பனைக்காகவும் குறுகியகாலக் கடன்களை யளிப்பதற்காக,

(ii) மத்தியக் கால விவசாயக் கடன்களை யளிப்பதற்காக.

(i) பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்களை விற்பனை செய்வதற்காகவுமான நிதியுதவி, இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் 17 (2) (ஆ) பிரிவின்கீழ், ரிசர்வ் வங்கியால் வழங்கப்படுகிறது. விவசாய நடவடிக்கைகளுள் கால்நடை வளர்ப்பும், மற்றும், தொடர்புள்ள நடவடிக்கைகளும் உள்ளடங்கியுள்ளன. இந்தச் சட்டப்பிரிவின்கீழ், இந்தியாவில் எழுதப்பட்டதும், செலுத்தப்பட வேண்டியதும், மாநிலக் கூட்டுறவு வங்கியின் கையெழுத்தும் மற்றும், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட கையெழுத்துகளைத் தாங்கியும், பருவகால விவசாய நடவடிக்கைகளுக்கு நிதியளிக்கும் காரியத்திற்காக அல்லது 12 மாதங்களுக்குள் முதிர்வு பெறும் பயிர்களை விற்பனை

செய்யும் காரியத்திற்காக எழுதப்பட்டதும், அல்லது வழங்கப் பட்டதுமான, மாற்று உண்டியல்களையும், வெண் கடன் பத்திரங் களையும் ரிசர்வ் வங்கி வாங்குதல் அல்லது மறு கழிவு செய்கிறது. இந்தக் காரியங்களுக்கான கடன் வரம்புகள், ஒவ்வொரு மத்தியக் கூட்டுறவு வங்கியின் சார்பில், மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு ஒப்பளிக்கப்படுகின்றன.

1956ஆம் ஆண்டிற்கு முன்னர், ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கி ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறும் கடன்களுக்கான உச்சக் கடனளவு அது ஒரு (அ) வகுப்பு வங்கியாக இருந்தால் அதன் சொந்த நிதிகளில் மூன்று மடங்குகளாகவும், அது (ஆ) வகுப்பு வங்கியாக இருந்தால் அதன் சொந்த நிதிகளில் 2 மடங்குகளாகவும், அது ஒரு (இ) வகுப்பு வங்கியாக இருந்தால் அதன் சொந்த நிதிகளில் ஒரே மடங்காகவும் நிர்ணயிக்கப்பட்டது. நிலையான ஆலோசனைக் குழுவின் பரிவுரையின் பேரில், இந்த அளவுகள் 1956ஆம் ஆண்டில் (அ) வகுப்பு வங்கிகளுக்காகச் சொந்த நிதிகளில் 4 மடங்குகளாக வும் (ஆ) வகுப்பு வங்கிகளுக்காக 3 மடங்குகளாகவும் (இ) வகுப்பு வங்கிகளுக்காக 2 மடங்குகளாகவும் திருத்தப்பட்டது. கூட்டுறவுக் கடன் பற்றிய மேத்தா குழுவினரின் பரிவுரையை அனுசரித்து, ஒரு (அ) வகுப்பு வங்கியின் விஷயத்தில், சொந்த நிதிகளில் 2 மடங்கு வரைக்கும் ஒரு (ஆ) வகுப்பு வங்கியின் விஷயத்தில், சொந்த நிதிகளுக்குச் சமமான ஒரு தொகை வரைக்கும், கூடுதலான கடன் வரம்புகளை ஒப்பளிக்க ரிசர்வ் வங்கி இசைந்தது.

இந்த விகிதங்களுக்குட்பட்டு ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கிக்கான உண்மையான கடன் வரம்பு, அவ் வங்கியின் மொத்தக் கடன் செயல்திட்டத்தைக் குறித்தும், அதன் பகிர்ந் தளிக்கக்கூடிய சொந்த நிதி ஆதாரங்களைக் குறித்தும், நிர்ணயிக் கப்படுகிறது. குறுகிய கால விவசாயக் காரியங்களுக்கு நிதி வழங்குதலல்லாத இதர நடவடிக்கைகளுக்கான கடன் இசைவுகள், மத்தியக் கூட்டுறவு வங்கியின் சொந்தப் பகிர்ந்தளிக்கக்கூடிய நிதி ஆதாரங்களின்மீது, ஒரு முதலான ஈடாக எடுக்கப்படுகின்றன. தவணை தவறுதல் செய்கின்ற அபாயத்திற்குட்படாமல் மத்தியக் கூட்டுறவு வங்கி கடன் வாங்குதலைக் காப்பாற்றிக்கொள்ளும் பொருட்டு, கடந்த காலத்தில், கடன்வசூல் செயற்பாடுகூட கணக்கி லெடுக்கப்படுகிறது. முன்னாள்களில் மத்திய வங்கிகள், சங்கங்களிலிருந்து நிலுவைப் பாக்கியுள்ள பருவகால விவசாய நடவடிக்கைகள், பயிர் விற்பனைக்கான கடன்கள், இந்தக் காரியங் களுக்காக ரிசர்வ் வங்கியிடமிருந்து தாங்கள் வாங்கியுள்ள கடன்களின்கீ ழிருக்கும் நிலுவைப் பாக்கிகளைவிடக் குறைவாக

இருக்காமலிருப்பதைப் பார்த்துக்கொள்ள வேண்டுமென்று, தேவைப்படுகின்றன. இந்த நிலுவைப் பாக்கிகளில் தவணைகடந்த கடன் பாக்கிகள்கூட அடங்கியிருக்கலாம். பின்னர், 'தவணை கடந்த பாக்கியில்லாத உறை' (Non Overdue Cover) என்ற முறையை ரிசர்வ் வங்கி ஆரம்பித்தது. இதன் பொருள், ஒரு மத்திய வங்கி, தன்னுல் சங்கங்களுக்கு அளிக்கப்பட்ட நிலுவைக் கடன்களில் தவணை கடந்த பாக்கியல்லாத கடன்கள் அளவிற்கு மட்டுந்தான் ரிசர்வ் வங்கிக் கடனளவைப் பயன்படுத்திக் கொள்ள உரிமையுள்ளதாகும் என்பது. தற்போதுள்ள நடைமுறையின்படி, மத்தியக் கூட்டுறவு வங்கிகள், தம் சொந்த நிதியாதாரங்களிலிருந்து விவசாயக் கடன் சங்கங்களுக்குக் கடன்கள் வழங்கிய பின்னர், சங்கங்களால் கொடுக்கப்பட வேண்டிய நிலுவைக் கடன்களில் தவணை கடந்த கடன்களைக் கழித்து எஞ்சியுள்ள கடன்கள் வரைக்கும் ரிசர்வ் வங்கியிலிருந்து ஈடு செய்தலைக் கோரலாம். இது தவணை கடந்த பாக்கிகள் தடை செய்யப்படுவதை நிச்சயிக்கிறது. ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கி குறுகிய கால விவசாயக் கடன்களில் தன் சொந்த நிதியாதாரங்களிலிருந்து ஒரு குறைந்த பட்ச ஈடுபாட்டைக் கொண்டிருக்க வேண்டுமென்றுங்கூட, ரிசர்வ் வங்கி நிபந்தனை விதித்திருக்கிறது. பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்கள் விற்பனைக்காகவும், சலுகையான வட்டி விகிதத்தில் நிதியுதவும் பொருட்டு, ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப்பட்ட குறுகிய காலக் கடன் வரம்புகளையும், அக் கடன் வரம்புகளின்கீழ் கடன்கள் வாங்கினதையும், ஆண்டிறுதியில் நிலுவைக் கடன்கள் தொகையையும், கீழ்க்காணும் அட்டவணை காண்பிக்கின்றது.

**அட்டவணை**

**குறுகிய காலக் கடன்** (விவசாயம்)

(ரூபாய், இலட்சக் கணக்கில்)

| ஆண்டு | ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்பு | கடன் எடுப்புகள் | ஜூன் இறுதியில் கடன் நிலுவை |
|---|---|---|---|
| *1967–68* | *314,15* (3450.0) | *364,89* (5202.5) | *137,17* (1108.8) |
| *1968–69* | *337,52* (3345.0) | *411,15* (5495.5) | *183,09* (1532.7) |
| *1969–70* | *370,16* (3145.0) | *425,08* (5737.8) | *214,11* (1356.4) |

(அடைப்புக் குறியிலுள்ள எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை.)

பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்கள் விற்பனைக்காகவும், தலைமைக் கூட்டுறவு வங்கிகளுக்கு அளிக்கப்படும் தன் கடன்களின்மீது ரிசர்வ் வங்கியால் விதிக்கப்படும் வட்டி விகிதம், வங்கி வட்டி விகிதத்திற்கு (Bank Rate) 2 சதவிகிதம் குறைவாக வுள்ளது. இறுதியான கடன் வாங்குபவருக்கு விதிக்கப்படும் வட்டி விகிதத்தைக் குறைவாக வைப்பதே இதன் உத்தேசம். அண்மையில் வங்கி வட்டிவிகிதம் 7 சதவிகிதத்திலிருந்து 9 சதவிகிதத்திற்கு உயர்த்தப்பட்டிருக்கிறது. தற்போது, மாநிலக் கூட்டுறவு வங்கி 7 சதவிகிதத்தில் கடன் வாங்கி, தமிழ்நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குப் பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்கள் விற்பனைக்காகவும் 8.10 சதவிகிதத்தில் கடன் வழங்குகின்றது. மத்தியக் கூட்டுறவு வங்கிகள், விவசாயக் கடன் சங்கங்களுக்கு அல்லது விற்பனைச் சங்கங்களுக்கு 10.10 சதவிகிதத்தில் கடன் வழங்குகின்றன; விவசாயக் கடன் சங்கங்கள் இறுதியான கடன் வாங்குபவருக்கு 12.60 சதவிகிதத்தில் கடன் வழங்குகின்றன.

(ii) இரசாயன உரங்களை வாங்குவதற்கும், இருப்பு வைப்பதற்கும், விநியோகிப்பதற்கும் நிதியுதவும் காரியத்திற்காகவுங்கூட, வங்கி வட்டி விகிதத்தில், அரசு உத்தரவாதத்தின் பேரில் ரிசர்வ் வங்கி குறுகிய காலக் கடன்களை வழங்குகிறது. இக் காரியத்திற்காகத் தனிப்பட்ட கடன் வரம்புகள் நிர்ணயிக்கப்படுகின்றன. 1968 மற்றும் 1969 ஆண்டுகளுக்காக, ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகள், எடுப்புக் கடன் தொகைகள், நிலுவை கடன் தொகைகள் பின்வருமாறு:

(ரூபாய், இலட்சக் கணக்கில்)

| ஆண்டு | ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகள் | எடுப்புக் கடன் தொகைகள் | நிலுவைக் கடன் தொகைகள் |
|---|---|---|---|
| 1968 | 2750.00 | 3976.7 | 1542.1 |
| 1969 | 3100.00 | 4050.6 | 1405.6 |

**(iii) மத்தியக் காலக் கடன்கள்:** நிலம் மீட்டல், நிலத்திற்கு வரப்புக் கட்டுதல் மற்றும், இதர நிலச் சீர்திருத்தங்கள், பழத்தோட்டங்களுக்காகவும் இதரத் தோட்டங்களுக்காகவும் நிலங்களைப் பண்படுத்துதல், பாசன ஆதாரங்களைக் கட்டுதல்

மற்றும், பராமரித்தல், விவசாயத்திற்குச் சம்பந்தமான கால் நடைகளையும் கருவிகளையும் இயந்திரங்களையும் போக்கு வரத்துச் சாதனத் தளவாடங்களையும் வாங்குதல், நிலத்திற் கருகே குடியிருக்கும் வீடுகளையும், கால்நடைக் கொட்டகை களையும் கட்டுதலுட்பட அபிவிருத்திக் காரியங்களுக்காக, தேசிய விவசாயக் கடன் (நீண்டகால நடவடிக்கைகள்) நிதியிலிருந்து ரிசர்வ் வங்கி மத்தியக் காலக் கடன்களை வழங்குகிறது. சிறு கரும்புப் பயிரிடுபவர்களால் கூட்டுறவுச் சர்க்கரையாலைகளில் பங்குகள் வாங்குதலும், பிரதம கடன் சங்கங்களின் விவசாய உறுப் பினர்களால் கறவைக் கால்நடைகள் வாங்குதலுங்கூட, இக் காரியங்களில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஐந்தாண்டுகள் கால வரைக்குக் கடனளிப்பை இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டம் அனு மதித்தாலும், 1956ஆம் ஆண்டுவரை மூன்று ஆண்டுகளுக்காக மட்டுமே கடன்கள் கொடுக்கப்பட்டு வந்தன. அந்த ஆண்டில், மொத்த மத்தியக் காலக் கடன்களில், 25 சதவீதம் வரை ஐந்தாண்டுக் கடன்களை யளிக்க ரிசர்வ் வங்கி ஆரம்பித்துள்ளது. 1962–63ஆம் ஆண்டிலிருந்து ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறப் படும் மத்தியக் காலக் கடன்களின் அளவு, மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் அளிக்கப்பட்ட கடன்களுக்குத் தொடர்பு கொண்டது. குறுகிய காலக் கடனுக்குப் பொருந்தும் ஈடு செய்தல் கடன்முறை மத்தியக் காலக் கடன்களுக்கும்கூட நீடிக்கப் பட்டது. 1962ஆம் ஆண்டுச் சூன் இறுதியன்று, நிலுவையிலிருந்த மத்தியக் காலக் கடன் தொகை அடிப்படை மட்டமாக எடுக்கப் பட்டு, இந்த அடிப்படை மட்டத்திற்கு அதிகப்பட்ட நிலுவைக் கடன்களில் 80 சதவிகிதம் ரிசர்வ் வங்கியால் ஈடு செய்யப்படு கிறது. மீதியில், 15 சதவிகிதம் மாநிலக் கூட்டுறவு வங்கியாலும், 5 சதவிகிதம் மத்தியக் கூட்டுறவு வங்கியாலும் வழங்கப்பட வேண்டும். ரிசர்வ் வங்கியின் மத்தியக் காலக் கடன் வரம்புகளின் கீழுள்ள நிலுவைக் கடன்கள் விவசாயச் சங்கங்களிலிருந்து வரவேண்டிய அதேவகையான தவணைகடந்த பாக்கியில்லாத நிலுவைக் கடன்களால் தழுவப்படுவதை நிச்சயப்படுத்துவதற்கு, மத்தியக் கூட்டுறவு வங்கிகள் எதிர்பார்க்கப்படுகின்றன. ரிசர்வ் வங்கியால், அரசு உத்தரவாதத்தின்மீது, மத்தியக் காலக் கடன்கள் கொடுக்கப்படுகின்றன.

*1967–68, 1968–69, 1969–70* ஆண்டுகளில் விவசாயக் காரியங்களுக்காக ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப் பட்ட மத்தியக் காலக் கடன்வரம்புகள் அடுத்துத் தரப்பட்டுள்ளன:

(ரூபாய், இலட்சக் கணக்கில்)

| ஆண்டு | ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகள் | கடன் எடுப்புகள் | ஜூன் இறுதியில் கடன் நிலுவை | கலம் 1-க்கு கலம் 3 சதவிகிதம் |
|---|---|---|---|---|
| | (1) | (2) | (3) | (4) |
| 1967–68 | 1656.7 | 912.2 | 1646.8 | 55 |
| | (226.5) | (139.8) | (139.3) | |
| 1968–69 | 1899.9 | 901.8 | 1759.9 | 50 |
| | (187.3) | (98.2) | (190.3) | |
| 1969–70 | 1829.6 | 1147.5 | 2045.4 | 63 |
| | (207.0) | (117.0) | (202.6) | |

(அடைப்புக் குறியிலுள்ள எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர் பானவை.)

மத்தியக் காலக் கடன்கள்மீது ரிசர்வ் வங்கியால் விதிக்கப் படும் வட்டி விகிதங்கூட, 1960ஆம் ஆண்டுவரை வங்கி வட்டி விகிதத்திற்கு 2 சதவிகிதம் குறைவாக இருந்தது. அந்த ஆண்டில் வட்டி விகிதம், வங்கி வட்டி விகிதத்திற்கு $1\frac{1}{2}$ சத விகிதம் குறைவாகக் குறைக்கப்பட்டது. தற்போது, மாநிலக் கூட்டுறவு வங்கி ரிசர்வ் வங்கியிடமிருந்து $7\frac{1}{2}$ சதவிகிதத்தில் கடன் வாங்கி மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு 8.95 சதவிகிதத்தில் கடன் வழங்குகிறது. மத்தியக் கூட்டுறவு வங்கிகள் பிரதம சங்கங்களுக்கு 11.30 சதவிகிதத்தில் கடன் வழங்குகின்றன. பிரதம சங்கங்கள், கடன் வாங்குபவர்களுக்கு 13.80 சதவிகி தத்தில் வட்டி விதிக்கின்றன. நாட்டில் சில பகுதிகளில் பற்றுக்குறை நிலைமைகள் காரணமாக, ரிசர்வ் வங்கி 1968–69ஆம் ஆண்டில் 5 மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு ரூ.6.3 கோடி யளவிற்குத் தேசிய விவசாயக் கடன் (நிலைப்படுத்தும்) நிதியி லிருந்து குறுகிய காலக் கடன்களை மத்தியக் காலக் கடன்களாக மாற்றுவதற்கு, வங்கி வட்டி விகிதத்திற்கு $1\frac{1}{2}$ சதவிகிதம் குறை வாக, மத்தியக் காலக் கடன் வரம்புகளை ஒப்பளித்தது. 1967–68, 1968–69, 1969–70ஆம் ஆண்டுகளில் ஒப்பளிக்கப்பட்டு, வாங்கப்பட்ட மத்தியக் காலக் கடன் வரம்புகளின் விவரங்கள் அடுத்துத் தரப்பட்டுள்ளன:

(ரூபாய், இலட்சக் கணக்கில்)

| ஆண்டு | ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்பு | எடுப்புக்கடன் தொகை |
|---|---|---|
| 1967–68 | 53.5 | 11.0 |
| 1968–69 | 632.1 (29.8) | 248.6 (இல்லை) |
| 1969–70 | 1140.3 (211.3) | 301.2 (179.5) |

(அடைப்புக் குறியிலுள்ள எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை.)

**(iv) நெசவாளர் சங்கங்களுக்குக் கடனளிப்பு:** இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் 17(2) (ஆஆ) பிரிவின்கீழ் நெசவாளர் சங்கங்களுக்கு நடைமுறை முதலை வழங்குவதற்காக ஒரு தனிப்பட்ட கடன் வரம்பு ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப்படுகிறது. இந்த வரம்புங்கூட மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு ஒவ்வொரு மையக் கூட்டுறவு வங்கிக்காகவும் ஒப்பளிக்கப்படுகிறது. இந்தக் கடன், வங்கி வட்டி விகிதத்திற்கு $1\frac{1}{2}$ சதவிகிதம் குறைவாக ஒரு சலுகையான வட்டி விகிதத்தில் அளிக்கப்படுகிறது. பாதுகாப்புஆதாரத்தில் 10 சதவிகிதம் விளிம்பு, உற்பத்தி மட்டம், விற்பனைகள் மட்டம், விற்பனைத் தொகைகளை இருசால் செய்தல் முதலியவை போன்ற ரிசர்வ் வங்கியால் விதிக்கப்பட்ட பல்வேறு விகிதங்களை நிறைவேற்றுகின்ற நெசவாளர் சங்கங்கள் மட்டும் ஈடு செய்தலுக்காகத் தகுதி பெற்றுள்ளன. ஒவ்வொரு கடன் வாங்கலுக்கும், திருப்பிச் செலுத்தப்படுவதற்காக 12 மாதக் காலம் அனுமதிக்கப்படுகிறது. தற்போது ரிசர்வ் வங்கியால் விதிக்கப்படும் வட்டிவிகிதம் $7\frac{1}{2}$ சதவிகிதமாகும். மாநிலக் கூட்டுறவு வங்கி, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு 8.95 சதவிகிதத்தில் கடன் வழங்குகிறது. மத்தியக் கூட்டுறவு வங்கிகள், பிரதம நெசவாளர் சங்கங்களுக்கு 8.20 சதவிகிதத்தில் கடனளிக்கின்றன. 1967–68, 1968–69, 1969–70ஆம் ஆண்டுகளில், கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கங்களில் உற்பத்தி விற்பனை நடவடிக்கைகளுக்கு நிதியளிப்பதற்காகவும், நூல் வர்த்தகத்திற்காக மாநிலக் கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கத்திற்கு நிதியளிப்பதற்காகவும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகளின் விவரங்களை அடுத்தபக்க விவரப்பட்டியல் தருகின்றது.

**விவரப் பட்டியல்**

(ரூபாய், இலட்சக் கணக்கில்)

| ஆண்டு | நெசவாளர் சங்கங்களின் உற்பத்தி, விற்பனை நடவடிக்கைகளுக்காக | | | மாநிலக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்திற்கு நூல் வர்த்தகத்திற்காக | | |
|---|---|---|---|---|---|---|
| | ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகள் | கடன் எடுப்புகள் | ஜூன் இறுதியில் கடன் நிலுவை | ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகள் | கடன் எடுப்புகள் | ஜூன் இறுதியில் கடன் நிலுவை |
| 1967-68 | 759.5 | 854.4 | 543.6 | 105.0 | 173.3 | 74.0 |
| 1968-69 | 736.5<br>(381.70) | 812.4<br>(503.50) | 543.6<br>(256.41) | 102.0 | 73.1 | 31.6 |
| 1969-70 | 818.4<br>(384.20) | 948.8<br>(583.90) | 641.8<br>(300.23) | 69.0 | 11.3 | 5.8 |

(அடைப்புக் குறி எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை.)

1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் ரிசர்வ் வங்கியிடமிருந்தும், தலைமைக் கூட்டுறவு வங்கியிடமிருந்தும், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் பெற்ற கடன்களைக் குறித்து, ரூ.353.32 கோடி நிலுவையிலிருந்தன. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், இந்த நிலுவைக் கடன்கள் ரூ.358.21 கோடியாக இருந்தன. ரிசர்வ் வங்கியிடமிருந்தும், தலைமைக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்தும், 1971–72ஆம் ஆண்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் வாங்கப் பட்ட கடன்களின் விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன:

**அட்டவணை**

(ரூபாய், இலட்சக் கணக்கில்)

| கடன் எடுப்புத்தொகை | திருப்பிச் செலுத்தப் பட்ட தொகை | கடன் நிலுவைத் தொகை |
|---|---|---|
| ரூ. 522.65 கோடி | ரூ. 520.16 கோடி. | ரூ. 358.21 கோடி. |
| (68.47 கோடி) | (59.30 கோடி) | (35.28 கோடி) |

(அடைப்புக் குறி எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை.)

**மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்தும், தேச வங்கியிடமிருந்தும் கடன் பெறுதல்:** முந்தைய பத்திகளில் விவரித்தபடி மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் சார்பில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு ரிசர்வ் வங்கியால் அளிக்கப்படும் நிதிக ளன்றியும், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்து தேவைப்படும்போதெல்லாம் கடன் வாங்கு கின்றன. எனினும், மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கு நிதி வழங்குதலைக் குறித்து, 1967ஆம் ஆண்டிலிருந்து ஒரு தனி ஏற்பாடுள்ளது. இவ் வேற்பாட்டின்கீழ்த் தேசிய வங்கியும், அதன் துணை வங்கிகளும் மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கு மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மூலம், இந்திய அரசின் உத்தரவாதத்துடன் ரொக்கக் கடன்களை வழங்குகின்றது.

பொது வங்கித் தொழில் காரியங்களுக்காக மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்தும் தேசிய வங்கியிடமிருந்துங்கூடக் கடன் பத்திரங்கள் ஈட்டின் பேரில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள் ரொக்கக் கடன்களைப் பெறுகின்றன.

## 7. கடன்களும், முன் பணங்களும்

மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நிதிகள், இணைக்கப்பட்ட பிரதம சங்கங்களுக்குக் கடன்கள் அளிப்பதற்காகப் பிரதானமாக உபயோகப்படுத்தப்படுகின்றன. இக் கடன்களுக்கான ஆதாரம், சங்கங்களால் எழுதிக் கொடுக்கப்பட்ட வெண்கடன் பத்திரங்களாகும். மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்களிக்கப்படும் முன்பணங்களுக்குத் துணைப் பிணையங்களாக, இவ் வெண்கடன் பத்திரங்கள் மாநிலக் கூட்டுறவு வங்கியால் ஏற்கப்படுகின்றன.

மத்தியக் கூட்டுறவு வங்கியால் வழங்கப்படும் கடன் கனஅளவு ஆண்டுக்காண்டு அதிகரித்துக்கொண்டு வந்துள்ளது. சாகுபடியில் அதிகமான முதலீடுகளை ஈடுபடுத்தச் செய்யும் உயர் விளைச்சல் வகைகள் செயல் திட்டங்களின் பரப்பளவு, கலப்புவிதைச் செயல் திட்டம் ஆகியவைபோன்ற விவசாய வளர்ச்சி பற்றிய பல்வேறு திட்டங்கள், குறுகிய காலக் கடன்கள் விஸ்தரிப்புக்கு, பிரதானமான காரணங்களாகும். 1968–1972ஆம் ஆண்டுகளில் வழங்கப்பட்ட கடன்களையும், நிலுவையிலிருந்த கடன்களையும் கீழ்க்காணும் அட்டவணை காண்பிக்கும்.

**அட்டவணை**

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| கீழ்க்கண்ட ஆண்டுகளில் அளிக்கப்பட்ட கடன்கள் | ஜூன் இறுதியிலிருந்த நிலுவைக் கடன்கள் |
|---|---|
| 1968 — 726.9 (65.5) | 549.8 (50.9) |
| 1969 — 820.6 (71.0) | 641.0 (59.7) |
| 1970 — 872.5 (96.3) | 739.8 (64.5) |
| 1972 — 1055.83 (101.40) | 888.86 (83.57) |

(அடைப்புக் குறி எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை.)

மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் வழங்கப்படும் கடன்களின் பெரும்பகுதி, விவசாயக் கடன் சங்கங்களுக்காக வழங்கப்படுகின்றன. மற்றும், அதிகரித்துவரும் விற்பனைச் சங்கங்களுக்கும் கடன்கள் வழங்கப்படுகின்றன. நுகர்வோர் நிறுவனங்களுக்கும், மொத்த விற்பனைச் சங்கங்களுக்கும், பிரதம சங்கங்களுக்கும், கடனும், ரொக்கக் கடனும் வழங்கப்படுகின்றன. தொழில்

துறையில் வழங்கப்படும் கடன்களில் பெரும்பகுதி நெசவாளர் சங்கங்களுக்காக வழங்கப்படுகிறது. கடன்களும், ரொக்கக் கடன்களும் வழங்கப்படும் இதர வகைச் சங்கங்கள் நகர வங்கிகள், ஊழியர்கள் சங்கங்கள் முதலியன போன்ற விவசாய மல்லாத கடன் சங்கங்களாகும். இவ் வகைச் சங்கங்களுக் களிக் கப்படும் கடன்களின் ஒரு பெரிய பகுதி, ரொக்கக் கடன் வடிவத்தில் அளிக்கப்படுகிறது. சுருங்கக் கூறின், ஒரு மாவட்டத் தில் மத்தியக் கூட்டுறவு வங்கியானது அம் மாவட்டத்தில் செயற் படும் பல்வேறு வகையான சங்கங்களுக்காக, பிரதானமான கூட்டுறவு நிதியமைப்பாக வுள்ளது.

**காரியத்திற்கேற்ப வகைப்படுத்தப்பட்ட கடன்கள்:** *1970-71*ஆம் ஆண்டிலும், *1971–72*ஆம் ஆண்டிலும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் வழங்கப்பட்ட கடன்களின்—குறுகிய காலக் கடன்களும், மத்தியக் காலக் கடன்களும்—காரிய ரீதியான பாகுபாடு.

**அட்டவணை**

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| ஆண்டு | குறுகியகாலக் கடன்கள் மொத்தம் | விதைகளும், உரங்களும் உட்படப் பருவ கால விவசாய நடவடிக்கைகள் | விவசாயக் கருவிகள் வாங்குதல் | கொள்முதல் உட்படப் பயிர்கள் விற்பனை |
|---|---|---|---|---|
| *1970–71* | *830.12* | *487.29* | *2.98* | *84.79* |
| *1971–72* | *961.34* | *540.11* | *3.15* | *122.61* |
| | *(91.88)* | *(55.97)* | *(.0026)* | *(3.04)* |

| ஆண்டு | விவசாய விளைபொருள் களைப் பதனப் படுத்துதல் | சாகுபடியில் ஈடுபடுத்தப் படும் பொருள் கள், விநியோகம் உட்பட இதர விவசாயக் காரியங்கள் | தொழில்துறைக் காரியங்கள் | வாழ்க்கைச் செலவுக் கடன்கள் |
|---|---|---|---|---|
| *1970–71* | *38.21* | *11.92* | *19.68* | *25.71* |
| *1971–72* | *40.02* | *15.83* | *21.32* | *27.59* |
| | *(3.27)* | *(1.59)* | *(8.03)* | *(.13)* |

**நுகர் பொருள்கள் வழங்குதல் உட்பட இதரக் காரியங்களுக்காக**

| | |
|---|---|
| 1970–71 | 155.21 |
| 1971–72 | 184.81 (19.81) |

(அடைப்பிலுள்ள எண் 1971–72ஆம் ஆண்டிற்கு மட்டும் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானது.)

**மத்தியக் காலக் கடன்கள்:**

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| ஆண்டு | மொத்தம் | கிணறு வெட்டுதலும், பழுது பார்த்தலும் | இயந்திரங்கள் வாங்குதல் | கால்நடைகள் வாங்குதல் |
|---|---|---|---|---|
| 1970–71 | 64.30 | 6.32 | 10.07 | 7.33 |
| 1971–72 | 94.49<br>(9.52) | 4.83<br>(0.39) | 10.24<br>(1.00) | 8.06<br>(0.71) |

| ஆண்டு | நிலத்திற்குச் சிறு சீர்திருத்தங்கள் | இதர விவசாயக் காரியங்கள் | தொழிற் காரியங்கள் | இதர வகை |
|---|---|---|---|---|
| 1970–71 | 1.93 | 19.76 | .81 | 18.02 |
| 1971–72 | 2.18<br>(.0099) | 39.37<br>(1.51) | 2.07<br>(.014) | 27.72<br>(5.87) |

(அடைப்புக் குறியினுள் உள்ள எண்கள் 71–72ஆம் ஆண்டிற்கு மட்டும், தமிழ் நாட்டிற்குத் தொடர்பானவை.)

**கடன்களை வசூலித்தல்:** மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் வசூல் நடவடிக்கையை அடுத்த பக்க அட்டவணையிலிருந்து அறியலாம்.

அட்டவணை

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| ஆண்டு | தவணை கடந்த பாக்கிகள் | நிலுவைக் கடன்களுக்குச் சதவிகிதம் |
|---|---|---|
| 30–6–68 | 135.8 (5.4) | 24.7% (11%) |
| 30–6–69 | 173.00 (6.7) | 27.0% (11.1%) |
| 30–6–70 | 215.2 (9.9) | 29.1% (15.4%) |
| 30–6–72 | 319.4 (7.28) | 35.9% ( 8.3%) |

(அடைப்புக் குறியினுள் உள்ள எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை.)

மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குத் தவணை கடந்த பாக்கிகளில் ஒரு ஸ்திரமான அதிகரிப்பு இருந்திருக்கிறது. தவணை கடந்த பாக்கிகளுக்கான காரணங்கள், அவைகளைத் துரிதமாக வசூல் செய்வதற்காக அவசியப்படும் நடவடிக்கைகள், தவணை கடந்த பாக்கிச் சங்கங்களோடு மத்தியக் கூட்டுறவு வங்கிகளைக் குறித்த நிலைமை, ஆகியவை விவசாயக் கடன் சங்கங்களைக் குறித்த பத்தியில் விவாதிக்கப்பட்டுள்ளன.

## 8. மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நிகர இலாபங்கள்

தமிழ்நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள் தங்கள் நிகர இலாபங்களில் 20 சதவிகிதத்திற்குக் குறையாமலும் 30 சதவிகிதத்திற்கு மேற்படாமலும், காப்பு நிதிக்கு ஒதுக்கவேண்டியிருக்கிறது. நிகர இலாபங்களில் 15 சதவிகிதம் அவைகளின் விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதிக்குக் கொண்டுபோகப்பட வேண்டும். நிகர இலாபங்களில் 5 சதவிகிதம் கூட்டுறவு வளர்ச்சி நிதிக்குக் கொண்டுபோகப்பட வேண்டும். எஞ்சியுள்ள நிகர இலாபம் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தின்மீதான இலாப ஈவாகவும், உறுப்பினர்களுக்கும், சிப்பந்திகளுக்கும் போனஸாகவும், கூட்டுறவுக் கல்வி நிதியாகவும், பொதுநல நிதியாகவும் விநியோகிக்கப்படுகின்றது. பங்குதாரர்களுக்குக் கொடுக்கப்படவேண்டிய இலாப ஈவு, பங்கு ஒவ்வொன்றின் செலுத்தப்பட்ட மதிப்பின் மீது ஆண்டொன்றுக்கு 6 சதவிகிதத்திற்கு மேற்படக்கூடாது. தமிழ்நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள், தங்கள் மொத்தக் காப்புநிதியின் ½ பாகம் வரைக்கும் மாநில நிலவள வங்கியின்

கடனீட்டுப் பத்திரங்களில் தங்கள் காப்பு நிதியை முதலீடு செய்ய அனுமதிக்கப்பட்டிருக்கின்றன. காப்பு நிதிகளிலிருந்து வாங்கப்பட்ட இக் கடனீட்டுப் பத்திரங்கள் எந்தவிதக் கடனுக் காகவும் அல்லது அதிகப்பற்றுக்காகவும் ஓர் உறையாகப் பயன் படுத்தப்படக் கூடாது; அல்லது, வேறு எந்த வகையிலும் வில்லங்கப்படுத்தப்படக் கூடாது. அத்தகைய கடனீட்டுப் பத்திரங்கள் சேமக் காப்பிற்காகத் தமிழ்நாட்டு மாநிலக் கூட்டுறவு வங்கியின் வசம் வைக்கப்படவேண்டும்.

## 9. கிளை வங்கித் தொழில்

அதிக எண்ணிக்கையில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் கிளைகள் அமைப்பு ஒப்பிடும் வகையில் மத்தியக் கூட்டுறவு வங்கி களின் நடவடிக்கையில் ஓர் அண்மையான வளர்ச்சியாகும். வங்கிக் கிளைகள் ஒரு மிகப் பயனுள்ள தொண்டைப் புரிவதுடன், கிராமப் பகுதிகளில், அதிகமான கடன்வழங்கும் ஒரு சந்தர்ப்பத்தில் ஓர் அவசியமாகவும் ஏற்பட்டுள்ளன. அவை, மத்தியக் கூட்டுறவு வங்கிக்கும் சங்கங்களுக்குமிடையே ஒரு நெருங்கிய தொடர்பை நிறுவ உதவுகின்றன. கடனளிப்பவரைக் கடன் வாங்குபவருக்கு மிக அண்மையில் கொண்டுவரச் செயல்படுகின்றன. இரண்டாவ தாக, கடன்களைத் துரிதமாகப் பட்டுவாடாச் செய்வதற்கு மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு வசதி செய்து, கடன் ஒப்பளிப் பிற்காகவும், அல்லது கடன்களைப் பெற்றுக்கொள்வதற் காகவும் மத்திய வங்கியின் மத்திய அலுவலகத்தைத் தொடர்பு கொள்ளுவதில் சில சமயங்களில் சங்கங்கள் படும் பாட்டினைக் குறைக்கின்றன. மூன்றாவதாக, அவை, குறிப்பாக ஒவ்வொரு வங்கிக் கிளையும், அறிவுரை வழங்கக்கூடிய உள்ளூர் மக்களைக் கொண்ட ஓர் ஆலோசனைக் குழுவை உடைத்தாயிருந்தது. சங்கங்கள் செயற்பாட்டின் மேற்பார்வையை நிச்சயப் படுத்தினால், சங்கங்களின் மேற்பார்வையும் அவைகளுக்குப் பயனுறுதியுள்ள உதவியையும் நிச்சயப்படுத்தலாம். இறுதியாக, வங்கிக் கிளைகள் கிராமப் பகுதிகளில் உபரியான நிதியாதாரங் களைத் திரட்டுவதற்கு உதவிபுரிவதனால், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் வைப்புகள் அதிகரிக்க நேரிடும். விவசாய நிதித் துறையில் வணிக வங்கிகளின் பிரவேசத்தின் காரணமாக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் வணிகக் கூட்டுறவு வங்கி களுக்குமிடையே நடவடிக்கை ஒருமைப்படுத்தலை நிச்சயப் படுத்தும் பொருட்டு, மையக் கூட்டுறவு வங்கிகள் மாவட்டத்தின் பல்வேறு இடங்களில் தங்கள் அலுவலகங்களை விஸ்தரிக்க வேண்டுவது மிக அவசியமாக இருக்கிறது.

1970ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நாட்டில், 4,317 மத்திய அலுவலகங்களும், கிளைகளுமிருந்தன. தமிழ்நாட்டில் 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், அத்தகைய 286 அலுவலகங்களும் கிளைகளுமிருந்தன. கிராமப்பகுதிகளுக்கும், சிறுநகர்ப் பகுதிகளுக்கும் வங்கித் தொழில் வசதிகள் நீடித்துக்கொண்டு வருகின்றன. வங்கிக் கிளை விரிவாக்கத்தை ஊக்குவிப்பதற்கு, அரசு, சிப்பந்தி மானியத்தை வழங்கி வந்துள்ளது. சந்தானம் குழுவினர் மத்தியக் கூட்டுறவு வங்கியின் ஒவ்வொரு கிளையும், மத்திய வங்கி தன்னுடன் இணைக்கப்பட்ட சங்கங்கள்மீது மேற்பார்வையையும், கண்காணிப்பையும் செலுத்துவதற்கான ஒரு நிலையமாக இயங்க வேண்டுமென்று பரிவுரை செய்தனர். அதனுடன் இணைக்கப்பட்ட சங்கங்களின் பிரதிநிதிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட 5 உறுப்பினர்களைக் கொண்ட ஓர் ஆலோசனைக் குழுவால் ஒவ்வொரு கிளையும் உதவப்படவேண்டும்; அக் கிளையின் மேலாளர் இந்த ஆலோசனைக் குழுவின் அலுவலால் செயலராக இருக்க வேண்டும்; விவசாயக் கடன் சங்கங்களின் கடன் வரம்பு விண்ணப்பங்கள் ஆலோசனைக் குழுவால் சிபாரிசு செய்யப்பட்டு ஒப்பளிப்பிற்காக மத்தியக் கூட்டுறவு வங்கிக்கு அனுப்பப்பட வேண்டுமென்றும், அக் குழுவினர் மேலும் பரிவுரை செய்தனர். கடன் வரம்புகள் ஒப்பளிக்கப்படுகின்றபோது, சங்கங்கள் அவைகள்மீது கிளைகளில் நடைமுறை செய்ய அனுமதிக்கப்பட வேண்டும்; எல்லாப் புதிய கிளைகளுக்கும் அரசு மானியம் நீடிக்கப்படவேண்டுமென்றும் அக் குழுவினர் பரிவுரை செய்தனர்.

## 10. மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் சங்கங்களின் மேற்பார்வை

பிரதம சங்கங்களுக்கு நிதிவழங்குவதுடன், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் சங்கங்களின் ஆய்வையும், மேற்பார்வையையுங் கூட மேற்கொண்டுள்ளன. தமிழ்நாடு உட்படப் பெரும்பாலான மாநிலங்களில் நிதி மேற்பார்வையுட்படப் பிரதம விவசாயக் கடன் சங்கங்களின் மேற்பார்வையானது மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் பொறுப்பாக வுள்ளது. தமிழ்நாட்டில் ஒவ்வொரு கூட்டுறவு வங்கியும், 8-லிருந்து 10 விவசாயச் சங்கங்களுக்காக, ஒரு மேற்பார்வையாளரை வைத்திருக்கிறது. மேற்பார்வையாளர்கள், விவசாயக் கடன் சங்கங்கள் இணைக்கப்பட்ட தொடர்பான மேற்பார்வை ஒன்றியங்களின் உடனடியான கண்காணிப்பின்கீழ்ப் பணிபுரிகின்றனர். கடன் மனுக்களைப் பரிசீலனை செய்தலும், சிபாரிசு செய்தலும், சங்கங்களை ஆய்வு செய்தலும், கடன்களைச் சரிபார்த்தலும், பாக்கிகளை வசூல்

செய்வதிலும் கணக்குகளைச் சரியாகப் பராமரிப்பதிலும் சங்கங்களுக்கு உதவி செய்தலும் ஒரு மேற்பார்வையாளரின் பிரதானக் கடமைகளாகும்.

ஒரு மேற்பார்வையாளர் பொறுப்பிலுள்ள சங்கங்களின் எண்ணிக்கையைக் குறைக்கும்பொருட்டு, பல்வேறு திட்டங்களின் கீழ்க் கூடுதலான மேற்பார்வையாளர்களை அமர்த்துவதற்காக மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு அரசு, சிப்பந்தி மானிய வடிவத்தில் உதவுகிறது. மேற்பார்வை ஒன்றியங்களுக்குதவுவதற்கும் அவற்றின் வேலையை ஒருமைப்படுத்துவதற்காகவும், மேற்பார்வையாளர்களைக் கண்காணிப்பதற்காகவும், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் நிருவாகப் பிரிவுகளை அமைத்துள்ளன.

## 11. மத்தியக் கூட்டுறவு வங்கிகள் வணிக நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல்

வைப்புகளை ஏற்றுக்கொள்ளுதல், உண்டியல்களை (Bills) வசூலித்தல், காசோலைகள் மூலமும், பணவிடைகள் (Drafts) மூலமும் நிதிகளை யனுப்புதல் போன்ற, வங்கித் தொழில் பொது வாணிகத்தையும் மத்தியக் கூட்டுறவு வங்கிகள் செய்கின்றன. இந்த நடவடிக்கைகள், யாதொரு வங்கியின் செயற்பாட்டிற்கும் இடை நிகழ்ச்சியாகவுள்ள இயல்பான பணிகளாகும். மத்தியக் கூட்டுறவுவங்கிகள், இப் பணிகளைத் தங்கள் வாடிக்கையாளர்களுக்காக, நல்ல முறையில் புரிய வேண்டும். உறுப்பினரல்லாத வைப்பாளர்களுக்குக்கூட, அவர்கள் வைப்புகள் ஆதாரத்தின்மீது மத்தியக் கூட்டுறவு வங்கிகள் கடன்கள் வழங்குகின்றன. வைப்புகளை ஈர்ப்பதற்கு இந்த வசதி அவசியமாகவுள்ளது. தமிழ்நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள், மாநில நிலவள வங்கியின் கடனீட்டுப் பத்திரங்களின் ஆதாரத்தின்மீது தனிநபர்களுக்கும், கூட்டுறவுச் சங்கங்களல்லாத நிறுவனங்களுக்கும் கடன்கள் வழங்க அனுமதிக்கப்பட்டுள்ளன. அரசு கடன் பத்திரங்களின் ஆதாரத்தின்மீதும், உறுப்பினர்களாகவும், வங்கியுடன் கணக்குகளை வைத்திருப்பவர்களாகவுமுள்ள தனிநபர்களுக்குக் கடன்கள் வழங்கப்படலாம். தமிழ்நாட்டில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள், மராட்டியம்போன்ற இதரச் சில மாநிலங்களிலுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கிகள் போலல்லாது பண்டங்கள், தங்கக் கட்டிகள் முதலிய ஆதாரத்தின்மீது தனிநபர்களுக்குக் கடனளிப்பதில்லை. மற்றும், அவை உண்டியல்களையும் அல்லது காசோலைகளையும் மாற்றல் செய்வதில்லை. எனினும், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் தனி நபர்களுக்கு வணிக வங்கிகள் அளிக்கும் இதரச் சில வசதிகளையும் வழங்க வேண்டும். சந்தானம் குழுவினர், மத்தியக் கூட்டுறவு வங்கிகளும்

அவற்றின் கிளைகளும், அதிகப்பற்றுகளை (Overdrafts) ஒப்பளித்தும், நீடித்துள்ளவர்களும் நம்பிக்கையானவர்களுமான வாடிக்கையாளர்கள் விஷயத்தில், உண்டியல்களையும், காசோலைகளையும் மாற்றல் செய்யலாமென்று பரிவுரை செய்தனர். ஆனால், அவ்வாறு பணிபுரிவதற்கு ஒரு நிபந்தனையானது, கிளையால் அல்லது தலைமை அலுவலகத்தால் வைக்கப்பட்டிருக்கும் மொத்த வைப்புகளில் 5 சதவிகிதத்திற்கு, இக் காரியங்களுக்காக அளிக்கப்பட்ட மொத்தத்தொகையானது மேற்படக்கூடாது என்பதாகும்.

# 12. மாநிலக் கூட்டுறவு வங்கிகள்
(State Co-operative Banks)

## 1. பொது:

தலைமை வங்கிகளாகவுங்கூட வழங்கப்படும் மாநிலக் கூட்டுறவு வங்கிகள் மாநில மட்டத்துக் கூட்டுறவு நிதி அமைப்புகளாகும். அவை ஒரு மாநிலத்திலுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் கூட்டமைப்புகளாகும். கூட்டுறவுக் கடனமைப்பின் மூன்றடுக்கு முறையில் ஒரு முக்கிய இடத்தை அவை வகிக்கின்றன. கடன் கொள்கைகளை வகுத்தலும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் செயற்பாட்டினை ஒருமைப்படுத்துதலும் அவற்றிற்கு வழிகாட்டுதலும், அவ் வங்கிகளுக்கு நிதியுதவி ஏற்பாடு செய்தலும், அவைகளின் நிதியாதாரங்களின் தீர்வகமாகவும், தகவல் தீர்வகமாகவும் பணிபுரிதலே மாநில வங்கிகளின் பிரதானக் கடமைகளாக வுள்ளன. ஒவ்வொரு மாநிலத்திலும் ஒரேயொரு மாநிலக் கூட்டுறவு வங்கி இருப்பதே அங்கீகரிக்கப்பட்ட கொள்கையாக வுள்ளது. தொடக்கத்தில் தலைமை வங்கிகள் தங்கள் உறுப்பினர்களாக மையக் கூட்டுறவு வங்கிகளை மட்டுமன்றிப் பிரதம சங்கங்களையும், தனிநபர்களையுங்கூடச் சேர்த்துக்கொண்டன. அத்தகைய எல்லா உறுப்பினர்களும் இவ் வங்கிகளிடமிருந்து கடன்கள் பெறுவதற்குத் தகுதி பெற்றிருந்தனர். இன்றைய கொள்கையானது, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு ஒருபிரதானக்குரலைக் அளிப்பதே. தனிநபர் அங்கத்துவமும், சங்க அங்கத்துவமும் பெரும்பாலும் நிறுத்தப் பட்டன. கடன் நடவடிக்கைகளும்கூட மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குக் கட்டுப்படுத்தப்பட்டு வருகின்றன.

## 2. தற்போதைய பொது நிலவரம்

1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் நாட்டில் 26 மாநிலக் கூட்டுறவு வங்கிகள், தலைமை அலுவலகம் உட்பட 203 அலுவலகங்களைக் கொண்டிருந்தன. யூனியன் பிரதேசங்களுட்பட எல்லா மாநிலங்களிலும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளுள்ளன. அவை 12,229 கூட்டுறவு வங்கிகளையும், இதரச் சங்கங்களையும், மாநில அரசுகளுட்பட 6,904

தனிநபர்களையும், கூட்டுறவுச் சங்கங்களல்லாத இதர நிறுவனங் களையும் உறுப்பினர்களாகக் கொண்டிருந்தன. அவற்றின் பங்கு மூலதனம் ரூ.35.69 கோடிக்கிருந்தது. அதில், கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனம் ரூ.30.31 கோடியாகவும், தனி நபர்கள், மற்ற நிறுவனங்களின் பங்கு மூலதனம் ரூ.0.28 கோடியாகவும், மாநில அரசுகளின் பங்கு மூலதனம் 15.09 கோடியாகவு மிருந்தன. அவற்றின் காப்பிருப்புகள் ரூ.57.14 கோடிக் கிருந்தன. அதில், சட்டப்படியான காப்பிருப்பு நிதி ரூ.11.48 கோடியாகவும், விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதி ரூ.29.82 கோடியாகவும், வராக்கடன் காப்பிருப்பு ரூ.4.090 கோடியாகவும், வராக்கடன் சிறப்புக் காப்பிருப்பு ரூ.0.04 கோடியாகவும், இதரக் காப்பிருப்புகள் ரூ.11.79 கோடியாகவு மிருந்தன. இவ் வங்கிகளின் மொத்த வைப்புகள் ரூ.330.45 கோடியாக விருந்தன. அதில் கூட்டுறவுச் சங்கங்களின் வைப்புகள் ரூ.244.08 கோடியாகவும், உள்ளாட்சி நிறுவனங் களுட்பட இதர நிறுவனங்கள், தனிநபர்கள் ஆகியவர்களின் வைப்புகள் ரூ.86.36 கோடியாகவு மிருந்தன. இவ் வங்கிகள் வாங்கிய கடன்களில் மொத்த நிலுவை, ஆண்டிறுதியில், ரூ.270.09 கோடியாக விருந்தது. அதில், ரிசர்வ் வங்கிக்குப் பாக்கியான தொகை ரூ.211.07 கோடியாக விருந்தது. வணிக வங்கிகளிடமிருந்து வாங்கின கடன்களின் நிலுவைத் தொகை ரூ.4.56 கோடியாகவும், அரசிடமிருந்து வாங்கிய கடன்களின் நிலுவைத்தொகை ரூ.26.67 கோடியாகவும், மற்றவர்களிட மிருந்து வாங்கிய கடன்களின் நிலுவைத் தொகை ரூ.13.40 கோடியாகவு மிருந்தன. மாநிலக் கூட்டுறவு வங்கிகளால் வாங் கப்பட்ட ரொக்கக் கடன்களிலும் அதிகப்பற்றுக் கணக்கிலும் நிலுவைத்தொகை ரூ.13.37 கோடியாக விருந்தது. இவ் வங்கி களின் நடைமுறை மூலதனம், ஆண்டிறுதியில், ரூ.731.05 கோடியாகவிருந்தது. அரசாங்கக் கடன் பத்திரங்களிலும், நிலவள வங்கிகளின் கடனீட்டுப் பத்திரங்களிலும், இதரப் பொறுப்பாளர் கடன் பத்திரங்களிலும் (Trustee Securities) செய்யப் பட்ட மொத்த முதலீடுகள் ரூ.107.33 கோடிக்கிருந்தன. 1971–72ஆம் ஆண்டின்போது அளிக்கப்பட்ட, மொத்தக் கடன்கள் குறுகிய காலக் கடன்களின்கீழ் ரூ.860.95 கோடித் தொகையாகவும், மத்தியக் காலக் கடன்களின்கீழ் ரூ.63.27 கோடித் தொகையாகவுமிருந்தன. ஆண்டிறுதியில் கடன்கள் நிலுவை குறுகிய காலக் கடன்களின்கீழ் ரூ.430.40 கோடி யாகவும், மத்தியக் காலக் கடன்களின்கீழ் ரூ. 122.33 கோடி யாகவும், ஆக மொத்தம் ரூ.552.73 கோடியாக விருந்தன. ஆண்டிறுதியில், இந்த வங்கிகளுக்குக் கொடுக்கப்படவேண்டிய

தவணை கடந்த கடன்பாக்கிகள் ரூ.38.35 கோடித் தொகைக்கிருந்தன. அது, கடன் வாங்கியவர்கள் கொடுக்கவேண்டிய, கடன்கள் நிலுவைக்கு 9.4 சதவிகிதமாக விருந்தது. மணிப்பூரிலுள்ள மாநிலக் கூட்டுறவு வங்கி நீங்கலாக, இதர எல்லா மாநிலக் கூட்டுறவு வங்கிகளும் இலாபத்தில் செயற்பட்டன. அவைகளால் ஈட்டப்பட்ட இலாபங்கள் ரூ.4.50 கோடிக்கு இருந்தன. இவ் வங்கிகள் $3\frac{1}{2}$ சதவிகிதத்திலிருந்து 6 சதவிகிதம் வரை பரவியிருக்கும் இலாப ஈவுகளைத் தெரிவித்தன.

## தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் நிலவரம்

தலைமை அலுவலகமுட்பட 19 அலுவலகங்களுடன், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி, 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 16 மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும், 86 தனிநபர்களையும், மாநில அரசு உட்பட இதர நிறுவனங்களையும் உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது. அதன் செலுத்தப்பட்ட பங்குமூலதனம் ரூ.3.74 கோடியாக விருந்தது. அதில், கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனம் ரூ.2.48 கோடியாகவும் தனிநபர்கள், மற்றவர்கள் பங்கு மூலதனம் ரூ. .0009 கோடியாகவு மிருந்தன. அதன் மொத்த வைப்புகள் ரூ.18.95 கோடியாக விருந்தன. அதில், கூட்டுறவுச் சங்கங்களின் வைப்புகள் ரூ.11.01 கோடியாகவும், தனிநபர்கள், உள்ளாட்சி நிறுவனங்களுட்பட மற்றவர்களின் வைப்புகள் ரூ.7.94 கோடியாகவு மிருந்தன. ஆண்டிறுதியில், வாங்கிய கடன்களில் மொத்த நிலுவை ரூ.24.38 கோடியாக விருந்தது. அதில், ரூ.21.76 கோடி ரிசர்வ் வங்கிக்குக் கொடுக்கப்பட வேண்டியிருந்தது. அரசிடமிருந்து வாங்கிய கடன்களில் நிலுவை ரூ.1.43 கோடியாகவும், மற்றவர்களிடமிருந்து வாங்கிய கடன்களில் நிலுவை ரூ.1.18 கோடியாகவு.மிருந்தன. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், வங்கியின் நடைமுறை மூலதனம் ரூ.54.00 கோடியாக விருந்தது. அரசாங்கக் கடன் பத்திரங்களிலும் நிலவள வங்கிகளின் கடனீட்டுப் பத்திரங்களிலும் இதரப் பொறுப்பாளர் கடன் பத்திரங்களிலும் செய்யப்பட்டிருந்த மொத்த முதலீடுகள் ரூ.7.29 கோடியாக விருந்தன. 1971-72ஆம் ஆண்டின்போது வழங்கப்பட்ட மொத்தக் கடன்கள் ரூ.108.66 கோடி ரூபாயாக விருந்தன. (குறுகிய காலக் கடன்களின்கீழ் ரூ.105.10 கோடியாகவும் மத்தியக் காலக் கடன்களின்கீழ் ரூ.3.56 கோடியாகவும்.) ஆண்டிறுதியில் கடன்களின் நிலுவை குறுகிய காலக் கடன்களின்கீழ் ரூ. 34.85 கோடியாகவும் மத்தியக் காலக் கடன்களின்கீழ் ரூ.8.65 கோடியாகவும், ஆக மொத்தம் ரூ.43.50 கோடியாக இருந்தது.

ஆண்டிறுதியில் வங்கிக்குக் கொடுக்கப்படவேண்டிய தவணை கடந்த பாக்கிகள் ரூ.0.15 கோடியாக இருந்தன. அது கடன் நிலுவையில் 0.4 சதவிகிதமாக விருந்தது. 1971–72ஆம் ஆண்டின்போது, வங்கி ரூ.32 கோடி இலாபத்தில் செயற் பட்டது. அது சலுகைப் பங்குகள்மீது 9 சதவிகிதத்திலும், சாதாரணப் பங்குகள்மீது 5 சதவிகிதத்திலும் இலாப ஈவு அறிவித்தது.

நாட்டில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் பொது முன்னேற்றத்தைக் காண்பிக்கும் ஒரு விவரப்பட்டியல் இந்த அத்தியாயத்திற்குப் பிற்சேர்க்கை 1 ஆகத் தரப்பட்டுள்ளது.

## 3. மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் குறிப்பாகத் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் நடவடிக்கைகளின் முதன்மை யான கூறுகள்

### (i) அலுவல் எல்லை

முன்னர்க் கூறியபடி, மாநில முழுமைக்கும் நீடிக்கும் அலுவல் எல்லையைக் கொண்ட ஒரு தலைமைக் கூட்டுறவு வங்கி ஒவ்வொரு மாநிலத்திற்காகவு மிருப்பது ஏற்றுக் கொள்ளப்பட்ட நடைமுறையாக வுள்ளது. இந்த வங்கிகள் அவை பதிவு செய்யப்பட்ட இடத்திலுள்ள மாநகர்க் கேந்திரங்களில் மட்டுமே கிளைகளைத் திறப்பதற்கு எதிர் பார்க்கப்படுகின்றன. விலக்கப்பட்ட சந்தர்ப்பங்களில் மட்டுமே மாவட்டங்களிலுள்ள இதரக் கேந்திரங்களில் அவை கிளைகளைத் திறக்கின்றன. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் மாநிலக் கூட்டுறவு வங்கிகள் மொத்தத்தில் தலைமை அலுவலகமுட்பட 203 அலுவலகங்களைக் கொண்டிருந்தன. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி தலைமை அலுவலகமுட்பட 19 அலுவலகங்களைக் கொண்டுள்ளது. அது நகரத்தில் கிளைகளைத் திறப்பதன் நோக்கம் பிரதானமாகத் தன் நிதியாதாரங்களைப் பெருக்கிக் கொள்வதாகும்.

### (ii) அமைப்பும், நிருவாகமும்

(அ) **அமைப்பு**: 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், மாநிலக் கூட்டுறவு வங்கிகள் 12,229 கூட்டுறவு வங்கிகளையும், சங்கங் களையும் மற்றும் 6,904 தனிநபர்களையும், மாநில அரசுகள் உட்படக் கூட்டுறவுச் சங்கங்களல்லாத இதர நிறுவனங்களையும் உறுப்பினர்களாகக் கொண்டிருந்தன.

ஒரு மாநிலத்திலுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் ஒரு கூட்டமைப்பானதால், தலைமை வங்கி, பொதுவாக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும், அரசு பங்காளித்துவத் திட்டத்தின்கீழ்த் தலைமை வங்கியின் பங்குதாரராகவுள்ள அரசையும் மட்டுந்தான் தன் உறுப்பினர்களாகப் பெற்றிருக்க வேண்டும். இத் தொடர்பில் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் தற்போதைய அமைப்பு எப்படி உருவாயிற்று என்பதைக் குறிப்பது மகிழ்ச்சி தருவதாக இருக்கும்.

தொடக்கத்தில், 'சென்னை மத்திய நகர வங்கி' என்றும் பின்பு, 'சென்னை மாகாணக் கூட்டுறவு வங்கி' என்றும் அதன் பின்னர்ச் 'சென்னை மாநிலக் கூட்டுறவு வங்கி' என்றும் வழங்கப்பட்டுவந்த தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் நோக்கம் சென்னை இராஜதானியிலுள்ள கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதியளிப்பதாக விருந்தாலுங்கூட, 1906ஆம் ஆண்டில் தனி நபர்களை மட்டுமே தன் உறுப்பினர்களாகக் கொண்டு செயற்படத் தொடங்கியது. 1912ஆம் வருடத்திய இந்தியச் சட்டம் (ii) நிறைவேறிய பிறகு வங்கியின் அங்கத்துவம் கூட்டுறவுச் சங்கங்களுக்குக்கூடத் திறக்கப்பட்டு, இவ் வங்கியின் நிருவாகக் குழுவில் அவைகளுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப் பட்டது. 1919ஆம் ஆண்டில் அன்று கூட்டுறவுப் பதிவாளராக விருந்த திருவாளர் ஹெமிங்வே (Mr. Hemingway) அவர்கள் எல்லா மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும் தங்களுக்கே யுரிய ஒரு உயர்நிலை மத்திய நிறுவனமாகக் கூட்டமைப்பதற்கான ஒரு திட்டத்தை வகுத்தார். அதன் விளைவாகச் சென்னை மத்திய நகர வங்கி இணைக்கப்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குச் சொந்தமானதும், அவைகளால் கண்காணிக்கப்பட்டதுமான ஓர் உண்மையான மாகாணக் கூட்டுறவுத் தலைமை வங்கியாக வெளிப்பட்டது. 1920–1930ஆம் ஆண்டுகளிலிருந்து புதிய அங்கத்துவம் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு அடைக்கப்பட்டு, பிரதம சங்கங்கள் அதன் அங்கத்துவத்திலிருந்து முழுமையாகக் கழிக்கப்பட்டன. பிரதம சங்கங்களால் வைக்கப்பட்டிருந்த பங்குகள், சம்பந்தப்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு மாற்றப்பட்டன. மற்றும், தனி நபர்களால் வைக்கப்பட்டிருந்த பங்குகள் 9 சதவிகித இலாப ஈவுக்கும் வங்கிக் கலைப்பின்போது மூலதனத்திற்கும் முன்னுரிமையைப் பெறும் சலுகைப் பங்குகளாக (Preference shares) மாற்றப்பட்டன. முன்னுரிமை பெறும் ஒவ்வொருவரும் ஒரு சலுகைப் பங்கு மட்டும் கொண்ட ஒருசில தனிநபர்கள் மட்டுந்தான் விட்டுவிடப்பட்டனர். 1957ஆம் ஆண்டில் தலைமை வங்கிகளில் அரசு பங்காளித்துவம், அரசு பங்கு

கொள்ளுதல் திட்டத்தை அனுசரித்து மாநில அரசு இந்த வங்கியின் ஒரு சாதாரணப் பங்குதாரராக ஆயிற்று.

1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியில் மாநிலத்திலுள்ள 16 மத்தியக் கூட்டுறவு வங்கிகளும், 86 தனிநபர்களும், மாநில அரசும் உறுப்பினர்களாக விருந்தனர். மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும், மாநில அரசுக்கும் சாதாரணப் பங்குகள் ஒதுக்கப்படுகின்றன. தனிநபர்கள் சலுகைப் பங்குகளை வைத்திருக்கின்றனர். சலுகைப் பங்குகள் 9 சதவிகித இலாப ஈவு பெறுகின்றன. ஆனால், சாதாரணப் பங்குகள் விஷயத்தில் இலாப ஈவின் உச்சவிகிதம் 6 ஆகும். சலுகைப் பங்கு தாரருடைய பங்குகளை மீட்பதே வங்கியின் தற்போதைய கொள்கையாக வுள்ளது.

**(ஆ) நிருவாகம்:** 1970ஆம் ஆண்டுவரை வங்கியின் அலுவல்கள் 16 மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் ஒவ்வொரு வங்கியின் நிருவாகக் குழுவால் தேர்ந்தெடுக்கப்படும் ஒரு பிரதி நிதியும், வங்கியின் பேரவையால் தேர்ந்தெடுக்கப்படும் 2 தனி நபர்ப் பங்குதாரர்கள் பிரதிநிதிகளும், மாநில அரசின் மூன்று நியமிகளும் அடங்கிய ஓர் இயக்குநர் குழுவால் நிருவாகம் செய்யப்பட்டுவந்தன. அற்பமான பங்கு மூலதனத்தையுடைத் தாயிருந்தும், தனி நபர்ப் பங்குதாரர்களுடைய எண்ணிக்கை அபரிமிதமாக விருந்த காரணத்தால் பேரவை உறுப்பினர் களுக்குப் பன்மை வாக்குகளை (Plurality of votes) (பங்குகள் எண்ணிக்கையின்மீது அடிப்படையாகக் கொண்டது) அரசு அனுமதித்துள்ளது. பேரவையில் மாநில அரசு தன் எல்லா மூன்று நியமிகள் மூலம் பிரதிநிதித்துவம் பெறுகின்றது. அரசால் வைக்கப்பட்டிருக்கும் பங்கு மூலதனத் தொகை எவ்வளவாயிருந் தாலும், அரசு நியமிகள் ஒவ்வொருவருக்கும் ஒரு வாக்கு மட்டுமே உண்டு. அரசு நியமிகள் பேரவைக் கூட்டத்திலோ, அல்லது நிருவாகக் குழுக் கூட்டத்திலோ நடைபெறும் தேர்தலில் தங்கள் வாக்குகளை அளிக்கவுங்கூட முடியாது. எனினும், இயக்குநர் குழுவில் 'ஒரு மனிதனுக்கு ஒரு வாக்கு' என்ற கொள்கை பின்பற்றப்பட்டு வருகிறது. தலைவர் அல்லது துணைத் தலைவர், இயக்குநர் குழுவால் தேர்ந்தெடுக்கப்பட்ட இயக்குநர்களிடையேயிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார். செயலர் என்று அழைக்கப்படும் தலைமை நிருவாக அதிகாரி வங்கியின் ஒரு சம்பளம் பெறும் அதிகாரியாக இருந்தார்.

1970ஆம் ஆண்டு இறுதியில், சந்தானம் குழுவினரின் பரிவுரைகளை யனுசரித்து, மாநிலக் கூட்டுறவு வங்கியின் அமைப்

மைக் குறித்தும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் அமைப்பைக்
குறித்தும், தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்திற்கும்,
அச் சட்டத்தின்கீழ் வகுக்கப்பட்ட விதிகளுக்கும், சில திருத்தங்கள்
செய்யப்பட்டன. அத் திருத்தங்களின் நோக்கம், சிறு குடியான
வர்களுக்கும், சமுதாயத்தில் பலம்குன்றிய பகுதியினருக்கும்,
கடனளிப்பிலும், கடன் நிருவாகத்திலும் அவர்களுக்குள்ள பங்கை
யளிப்பதும், கிராமக் கடன் அமைப்பின் ஒருங்கிணைப்பை
ஏற்படுத்துவது மாகும். திருத்தப்பட்ட விதிகளின்கீழ், மாநிலக்
கூட்டுறவு வங்கியின் நிருவாகம் ஓர் இயக்குநர்கள் குழு வச
முள்ளது. அவ் வியக்குநர் குழுவின் உறுப்பினர்கள் பின்
வருமாறு:

(அ) எல்லா 16 மத்தியக் கூட்டுறவு வங்கிகளின்
தலைவர்கள்,

(ஆ) தமிழ்நாடு மாநில நிலவள வங்கி, தமிழ்நாடு
கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கம், தமிழ்நாடு மாநில
நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்பு, சென்னை மாநிலக் கூட்
டுறவுச் சர்க்கரைக் கூட்டமைப்பு, தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக்
கூட்டமைப்பு, தமிழ்நாடு மாநில எண்ணெய் மற்றும், தொடர்
புள்ள பண்டங்கள் கூட்டுறவுக் கூட்டமைப்பு, சென்னை மத்திய
வீட்டு அடைமான வங்கி ஆகிய தலைமைச் சங்கங்களின் தலைவர்
களால் தங்களுக்கிடையே யிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட மூன்று
உறுப்பினர்கள்,

(இ) மேற்கூறப்பட்ட எந்தத் தலைமைச் சங்கத்திற்கும்
இணைக்கப்படாத சங்கங்களின் உறுப்பினர்களிடையே யிருந்து, பதி
வாளரால் நியமிக்கப்பட்ட மூன்று உறுப்பினர்கள்,

(ஈ) கூடுதல் பதிவாளர் (கடன்), அலுவலால் இயக்குநர்.

கூட்டுறவுச் சங்கங்கள் சட்டம் 1973ஆம் ஆண்டுச் சூலை
மாதத்தில் மேற்கொண்டும் திருத்தப்பட்டது. இத் திருத்தத்தின்
படி, தமிழ்நாடு அரசு, இவ் வங்கிக்காக ஒரு மேலாண்மை இயக்
குநரை அமர்த்தும். இவர் வங்கியின் தலைமை நிருவாக அதிகாரி
யாகவும், இயக்குநர்குழுவின் ஓர் உறுப்பினராகவுங்கூட இருப்பார்.
1–7–1973-லிருந்து செயலர் பதவி கலைக்கப்பட்டது. இயக்
குநர்கள்குழு, பேரவையின் கண்காணிப்பிற்குட்பட்டு இயங்குகிறது.
இயக்குநர் குழுவின் தலைவரும், துணைத்தலைவரும் இயக்குநர்
குழுவால் தன் உறுப்பினர்களிடையே யிருந்து தேர்ந்தெடுக்கப்
படுகின்றனர்.

### (iii) மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் நிதியாதாரங்கள்

மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் நிதியாதாரங்களாவன: (i) சொந்த நிதிகள், (ii) வைப்புகள், மற்றும் (iii) இதர வாங்கிய கடன்கள். சொந்த நிதிகள் (அ) பங்கு மூலதனத்தையும், (ஆ) சட்டப்படியான கையிருப்புகளையும், (இ) விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதியையும், (ஈ) இதரக் காப்பிருப்புகளையும் கொண்டிருக்கின்றன.

**(i) சொந்த நிதிகள்:** கீழ்க்காணும் அட்டவணை, 1967—68, 1969—70, 1971—72 ஆகிய மூன்று ஆண்டுகளின் போது சொந்த நிதிகளின் முன்னேற்றத்தை எடுத்துக்காட்டுகிறது.

| | சொந்த நிதிகள் | 1967-68 | 1969-70 | 1971-72 |
|---|---|---|---|---|
| | | (ரூபாய், கோடிக் கணக்கில்) | | |
| 1. | பங்கு மூலதனம் (இதில் அரசு பங்கு மூலதனம்) | 35.1 (11.4) | 39.6 (11.8) | 45.69 (15.09) |
| 2. | சட்டப்படியான காப்பிருப்புகள் | 7.4 | 9.4 | 11.48 |
| 3. | விவசாயக் கடன் நிலைபேறுக்க நிதி | 12.1 | 22.3 | 29.82 |
| 4. | இதரக் காப்பிருப்புகள் | 10.4 | 11.5 | 15.84 |
| | | 65.0 | 82.8 | 102.83 |

**(அ) பங்கு மூலதனம்:** 1972ஆம் ஆண்டிறுதியில், இந்த வங்கிகளால் வைக்கப்பட்டிருந்த பங்கு மூலதனம் ரூ. 45.69 கோடியில், ரூ. 15.09 கோடி அரசால் வைக்கப்பட்டிருந்த பங்கு மூலதனமாகவும், ரூ. 30·31 கோடி மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும், இதரக் கூட்டுறவுச் சங்கங்களாலும் வைக்கப்பட்டிருந்த பங்கு மூலதனமாகவும், ரூ. 0.28 கோடி, கூட்டுறவுச் சங்கங்களல்லாத நிறுவனங்களாலும் மற்றவர்களாலும் வைக்கப்பட்டிருந்த பங்கு மூலதனமாகவு மிருந்தன. மத்தியக் கூட்டுறவு வங்கிகள் விஷயத்தில் போன்று, தலைமை வங்கிகளுக்காகவும் பங்கு மூலதனமானது நிதிகளின் ஒரு முக்கிய ஆதாரமாக வுள்ளது. மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் வாங்கப்படும் கடன்களும்கூட,

தலைமை வங்கியில் அவைகளின் பங்குமூலதன வைப்பிற்கு இணைக்கப்பட்டுள்ளன. தமிழ்நாட்டில், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்து தாங்கள் பெறும் கடன்களில் 4 சதவிகிதமுள்ள ஒரு குறுமத்திற்குத் தலைமை வங்கியில் பங்கு மூலதனமாக முதலீடு செய்யவேண்டும். அவை ரூ. 20 இலட்சம் பெருமத்திற்குப் பங்குகள் வைத்துக்கொள்ளக் கூடும். ஒரு பங்கின் மதிப்பு ரூ. 100 ஆகும். 30-6-1972ஆம் நாளன்று, வங்கியில் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ. 3.74 கோடியாக விருந்தது. இதில், அரசு பங்குமூலதனம் ரூ. 1.26 கோடியாகவும், மத்திய வங்கிகளின் பங்குமூலதனம் ரூ. 2.48 கோடியாகவும், தனி நபர்கள் பங்கு மூலதனம் ரூ. 9,000 ஆகவு மிருந்தன.

**(ஆ) காப்பிருப்புகள்:** சட்டப்படியான காப்புநிதியானது வங்கிகளின் நிகர இலாபங்களிலிருந்து அமைக்கப்படுகிறது. தமிழ் நாட்டில், நிகர இலாபத்தில், 20 சதவிகிதத்திற்குக் குறையாமலும், 30 சதவிகிதத்திற்கு அதிகப்படாமலும், காப்பு நிதிக்குக் கொண்டு போகப்படவேண்டும். நாட்டிலுள்ள மாநிலக் கூட்டுறவு வங்கி களின் காப்புநிதி, 30-6-1972ஆம் நாளன்று, ரூ.11.48 கோடித் தொகைக் கிருந்தது. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் காப்புநிதி ரூ. 1.14 கோடிக் கிருந்தது.

கிராமக் கடன் விசாரணைக் குழுவின் பரிவுரைகளுக் கிணங்க, விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதிகள் ஏற்படுத்தப்பட்டு. தேசிய மட்டத்தில் ரிசர்வ் வங்கியாலும், மாநில மட்டத்தில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளாலும், மாவட்ட மட்டத்தில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும், கிராம மட்டத்தில் விவசாயக் கடன் சங்கங்களாலும் பராமரிக்கப்பட்டு வருகின்றன. 30-6-1972ஆம் நாளன்று, மாநிலக் கூட்டுறவு வங்கிகளிலிருந்த இந்த நிதியில் ரூ.29.82 கோடி யிருந்தது. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் நிதியில், 30-6-1972ஆம் நாளன்று, ரூ. 1.96 கோடி யிருந்தது. இந் நிதியைத் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி, 1957—58ஆம் ஆண்டில், பருவமழை யில்லாமை முதலிய காரணங் களால் பயிர் சாவியாதல் காரணத்திற்காகக் குறுகிய கால விவசாயக் கடன்களை மத்தியக் காலக் கடன்களாக மாற்றும் நோக்கத்துடன் ஏற்படுத்தியது. தற்போது, இந்த வங்கி ஒவ்வோர் ஆண்டும், தன் நிகர இலாபங்களில் 15 சதவிகிதத்தை இந் நிதிக்கு ஒதுக்கி வைக்கிறது. ரிசர்வ் வங்கியால் வகுக்கப்பட்ட ஒரு திட்டத்தின்கீழ், மாநில அரசு 1966—67ஆம் ஆண்டிலிருந்து மாநிலக் கூட்டுறவு வங்கியின் மட்டத்தில், விவசாயக் கடன்

நிலைப்படுத்தும் நிதிக்கு உதவித்தொகைகள் அளித்து வந்துள்ளது. இக் காரியத்திற்காக, இந்திய அரசால் உதவியளிக்கப்படுகிறது. அரசு உதவித்தொகை மானியங்கள் வடிவிலும், கடன்கள் வடிவிலும் கொடுக்கப்படுகின்றன. கடன்கள் 25 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும். மானியம், கடன் விகிதம் தற்போது 75 : 25 ஆக வுள்ளது. 1964ஆம் ஆண்டு மார்ச் வரை, மாநில அரசு, மாநிலக் கூட்டுறவு வங்கியின் விவசாயக் கடன் நிலைபெருக்க நிதிக்கு ரூ. 177.75 இலட்சம் உதவித்தொகை யளித்திருக்கிறது. இது அன்றியும், மாநில அரசால் செலுத்தப் பட்ட பங்கு மூலதனத்தின்மீது அறிவிக்கப்பட்ட 3 சதவிகிதத் திற்கு மேற்பட்ட இலாபஈவுங்கூட இந் நிதிக்கு வரவு வைக்கப் படுகிறது. இந் நிதியிலுள்ள தொகையின்மீது 3 சதவிகிதத்தில் வட்டி ஒவ்வோர் ஆண்டும் இந்த நிதிக்குச் சேர்க்கப்படுகிறது. குறுகிய காலக் கடன்களை, மத்தியக் காலக் கடன்களாக மாற்று வதற்கு இந் நிதியிலிருந்து உபயோகப்படுத்தப்பட்ட தொகையின் மீது ஈட்டப்பட்ட வட்டி வங்கியின் இலாபங்களுக்கு எடுத்துச் செல்லப்படுகிறது.

1973–74ஆம் ஆண்டின்போது, ரிசர்வ் வங்கி ரூ. 60.16 இலட்சம் மொத்தக் கடன் வரம்புகளைக் கோவை, இராமநாத புரம், தஞ்சை ஆகிய இடங்களிலுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கி களிடமிருந்து வரவேண்டிய குறுகிய கால விவசாயக் கடன்களை மாற்றும் காரியத்திற்காக ஒப்பளித்தது. இத் தொகையிலிருந்து வங்கி ரூ. 29.19 இலட்சம் வாங்கி, அதனோடு தன் சொந்த நிதிகளைச் சேர்த்து ரூ. 56.20 இலட்சமளவிற்கு மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குக் கடன் மாற்றுதல் வசதிகளை வழங்கியது. விவசாயி களுக்கு நிவாரணம் வழங்கும்பொருட்டு, மத்தியக் காலக் கடன் களாக மாற்றப்பட்ட மொத்தக் குறுகிய காலக் கடன்கள், 1973 டிசம்பர் இறுதிவரை, ரூ. 19.58 கோடியாக விருந்தன. வராக் கடன் காப்பிருப்பு, வராக்கடன் சிறப்புக் காப்பிருப்பு முதலியன போன்று, இதரக் காப்பிருப்புக ளுள்ளன. எல்லா மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் சட்டப்படியான விவசாயக் கடன் நிலை பெருக்க நிதியும், இதரக் காப்பிருப்புகளும் ரூ. 57. 14 இலட்சத் திற் கிருந்தன. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் வச மிருந்த காப்பிருப்புகள் ரூ.3.91 கோடிக் கிருந்தன.

**(ii) வைப்புகள்:** மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் வைப்பு கள் ஒரு மேல்நோக்கிய போக்கைக் காண்பித்துவருகின்றன. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், வங்கிகளின் மொத்தவைப்புகள் ரூ. 330.45 கோடிக் கிருந்தன. இது, அவற்றின் நடைமுறை

மூலதனத்தில் 45.2 சதவிகிதத்திற்கு வருகிறது. மொத்த வைப்புகளில், கூட்டுறவுச் சங்கங்களின் வைப்புகள் ரூ. 244.08 கோடிக்கும், தனிநபர்கள், உள்ளாட்சி நிறுவனங்களுள்பட இதர நிறுவனங்களின் வைப்புகள் ரூ.86.36 கோடிக்கு மிருந்தன. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் மொத்த வைப்புகள் ரூ. 18.95 கோடிக் கிருந்தன. இது, அதன் நடைமுறை மூல தனத்தில் 35 சதவிகிதத்திற் கிருந்தது. அண்மை ஆண்டுகளில், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி, நகரத்தில் கிளைகளைத் திறப்பதன்மூலமும், வைப்புகளின்மீது போட்டியான வட்டி விகிதங்களை வழங்குவதன் மூலமும், தன் வைப்புகளை அபிவிருத்தி செய்ய நடவடிக்கை எடுத்துள்ளது.

(iii) **இதரக் கடன் பெறுதல்:** மாநிலக் கூட்டுறவு வங்கியின் இயல்பான உச்சக்கட னளவு, பொதுவாக, அதன் சொந்த நிதிகளில் 15 மடங்குகளாக வுள்ளது. கூட்டுறவுக் கடன் பற்றிய மேத்தா குழுவினர், இக் கடனளவு சாதாரணமாகப் போதுமான தாக விருந்தாலும், ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் இது தளர்த்தப் பட்டு, மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் கடனளவு தங்கள் சொந்த நிதிகளில் 15-லிருந்து 20 மடங்குகள் வரை இருக்கலாம் என்று கருதினர். தமிழ்நாடு மாநில வங்கி விஷயத்தில், ஆரம்பத்தில் உச்சக் கடனளவு 12 மடங்குகள் மட்டுமே இருந்தது. ஆனால், ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவுச் சங்கங்களுக்கு ஒதுக்கப் பட்ட திட்டங்களின்கீழ், இணைக்கப்பட்ட மையக் கூட்டுறவு வங்கிகளின் வளர்ந்துவரும் கடன் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்வதற்குப் போதுமான கடன்வாங்கும் சக்தியைப் பெற உதவும்பொருட்டு, 15 மடங்குகளுக்கு அது உயர்த்தப்பட்டது. இந்த 15 மடங்குகள், தாற்காலிக அவசரத் தேவையைப் பூர்த்தி செய்வதற்குப் போதாததாகக் காணப்பட்டபோதெல்லாம், மாநில அரசு, அவ்வப்போது, கூட்டுறவுப் பதிவாளரின் பரிவுரையின்மீது, குறிப்பிட்ட காலங்களுக்காக இக் கடன்வரம்பைத் தளர்த்தி வந்துள்ளது. எனினும், வங்கி தன் கடன் வாங்குதலை 15 மடங்குகள் வரம்பிற்குள் பராமரித்து வருகிறது. பங்கு மூலதன மும், இதரக் காப்புநிதிகளும், கூட்டுறவுப் பதிவாளர் அனுமதி பெற்றுத்தான் உபயோகிக்கப்பட முடியும்.

மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் வாங்கிய மொத்தக் கடன்கள், 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், ரூ. 270.39 கோடியாக விருந்தன. இவற்றுள், ரிசர்வ் வங்கியிடமிருந்து வாங்கிய கடன்கள் பெரும்பகுதியாக அமைந்திருந்தது. ரிசர்வ் வங்கி யிடமிருந்து பெற்ற கடன்கள் ரூ. 211.07 கோடியாகவும்,

வணிக வங்கிகளிடமிருந்து பெற்ற கடன்கள் ரூ. 4.56 கோடியாகவும், அரசிடமிருந்து பெற்ற கடன்கள் ரூ. 26.67 கோடியாகவும், மற்றவர்களிடமிருந்து பெற்ற கடன்கள் ரூ. 13.40 கோடியாகவு மிருந்தன. ரொக்கக் கடன் கீழும், அதிகப்பற்றின் கீழும், நிலுவைப்பாக்கி ரூ. 13.37 கோடியாக விருந்தது. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியைப் பொறுத்தமட்டில், வாங்கிய கடன்கள் மொத்தம் ரூ.24.38 கோடியாக விருந்தது. இதில், ரூ. 21.76 கோடி ரிசர்வ் வங்கிக்கும், ரூ. 1.43 கோடி அரசுக்கும், ரூ. 1.11 கோடி மற்றவர்களுக்கும் கொடுக்கவேண்டியிருந்தது.

மாநிலக் கூட்டுறவு வங்கிகள் கடன் வாங்குதலுக்காக ரிசர்வ் வங்கி ஒரு பிரதான ஆதாரமாக விருந்துவருவதோடு, ரிசர்வ் வங்கி அளிக்கும் கடனுதவி, மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் மொத்தக் கடன் வாங்குதலில் சுமார் 80 சதவிகிதமாகவுமுள்ளது. மாநிலக் கூட்டுறவு வங்கிகள் தேசிய வங்கியிடமிருந்தும், மாநில அரசுகளிடமிருந்தும், மற்றும், இதர ஆதாரங்களிலிருந்தும் கடன் வாங்குகின்றன. ரிசர்வ் வங்கியிடமிருந்து வாங்கும் கடன்கள், பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், விளைபொருள்களின் விற்பனைக்காகவும், நிதி வழங்கவும், மத்தியக் காலக் கடன்கள் வழங்கவும் பிரதானமாகப் பயன்படுத்தப்படுவது போன்று, தேசிய வங்கியிடமிருந்து பெறும் கடன்கள், கொள்முதல் நடவடிக்கை, விற்பனை நடவடிக்கை, உரவகைகள் விநியோகம், நுகர்வோர் வாணிகம் ஆகியவற்றிற்கு நிதி வழங்குவதற்காகவும், பொது வங்கித்தொழில் காரியங்களுக்காகவும் பயன்படுத்தப்படுகின்றன. மாநில அரசுகளிடமிருந்து வாங்கும் கடன்கள், பிரதானமாக விவசாயக் காரியங்களுக்காகவும் (அதாவது கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் வாய்க்கால் படுத்தப்படும் தக்காவிக் கடன்கள்), தொழிற் கூட்டுறவுச்சங்கங்கள், நுகர்வோர் பண்டசாலைகள் முதலியவற்றிற்கு நிதி வழங்குவதற்காகவும் பயன்படுத்தப்படுகின்றன. கடன் வாங்குவதற்கான இதர ஆதாரங்கள் இந்தியத் தொழில்வளர்ச்சி வங்கியும், விவசாய மறுநிதி வசதிக் கழகமும் ஆகும். தொழில்வளர்ச்சி வங்கியிலிருந்து வாங்கும் கடன்கள், கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள், நூல் நூற்பு ஆலைகள் ஆகியவற்றின் நிலைப் பங்கு மூலதனத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவும், விவசாய மறுநிதி வசதிக் கழகத்திடமிருந்து வாங்கும் கடன்கள் மீன்வள வளர்ச்சி, கோழி வளர்ப்பு, தொழிற்பேட்டை முதலியவற்றிற்காகவும் பிரதானமாகப் பயன்படுத்தப்படுகின்றன.

பல்வேறு காரியங்களுக்காக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்காக மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு ரிசர்வ் வங்கி கடன் வரம்புகளை ஒப்பளிக்கிறது. பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்கள் விற்பனைக்காகவும், குறுகிய காலக் கடன் வழங்குவதற்காக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு ஒரு குறைந்தபட்ச அளவுக்குத் தன் சொந்த நிதி ஆதாரங்களிலிருந்து மாநிலக் கூட்டுறவு வங்கி கடனளிக்க வேண்டும் என்றுங்கூட ரிசர்வ் வங்கி வற்புறுத்துகிறது. அது, அரசாங்கக் கடன் பத்திரங்கள் ஈட்டின்மீது, சலுகையான வட்டிவிகிதத்தில், இந்த அளவிற்கு ஒரு கடன் வரம்பை ஒப்பளிக்கிறது. மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு விவசாயக் காரியங்களுக்காக இக் கடன் வரம்பிலிருந்து அளிக்கப்படும் முன்கடன்கள், மாநிலக் கூட்டுறவு வங்கியின் எதிர்பார்க்கப்பட்ட குறைந்தபட்சக் கடனளிப்பு ஈடுபாட்டிற்குச் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. 1973–74ஆம் ஆண்டின்போது, தமிழ்நாட்டின் மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் சார்பாக, தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு, பருவகால விவசாய நடவடிக்கைகளுக்கும் பயிர்கள் விற்பனைக்கும் கடன் வழங்குவதற்காக, ரூ. 39.15 கோடி மொத்தத் தொகைக்குக் கடன் வரம்புகளை ரிசர்வ் வங்கி ஒப்பளித்தது. இக் கடன் வரம்புகளன்றியும், இவ் வங்கி, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குத் தன் சொந்த நிதியாதாரங்களிலிருந்து ரூ. 7.27 கோடி மொத்தமுள்ள ஒரு கடன் வரம்பையும் ஒப்பளித்தது.

ரிசர்வ் வங்கி 1974 ஜூன் இறுதியோடு முடியும் ஆண்டிற்காக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் சார்பாகத் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு (அ) கைத்தறி நெசவுத் தொழிலுக்குக் கடன் வழங்குவதற்காக (1973–74ஆம் ஆண்டிற்காக) — ரூ. 4.15 கோடியும், (ஆ) மத்தியக் கால விவசாயக் காரியங்களுக்காக ரூ. 5.95 கோடியும் இதரக் கடன் வரம்புகளையும் ஒப்பளித்திருக்கிறது.

தங்களுக்கு ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகளிலிருந்து மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் நிதிகளை எடுப்பதற்கான நடைமுறை, 1964ஆம் ஆண்டில், 'சுழல் ரொக்கக் கடன் முறை' (Revolving Credit System) தொடக்கத்தின்மூலம் எளிதாக்கப்பட்டது. இந்த முறையின்கீழ், மிகவும் விரிவான கடன் விண்ணப்பங்கள் எடுத்துவிடப்பட்டு, ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கியின் செயலர், கூட்டுறவுச் சங்கங்கள்மீதிருக்கும் மொத்தக் கடன் நிலுவைகள், தவணை கடந்த பாக்கிகள் முதலியவற்றைக் குறித்த தகவலை அனுப்பிக் கடன் வரம்பிலிருந்து பணம் எடுக்கலாம்.

மத்தியக் கால விவசாயக் கடனைப் பொறுத்தமட்டில் ரிசர்வ் வங்கி தேசிய விவசாயக்கடன் (நீண்டகால நடவடிக்கைகள்) நிதியிலிருந்து மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு நிதிகள் வழங்குகிறது. அடிப்படை மட்டத்திற்கு அப்பாலும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் அளிக்கப்பட்ட மத்தியக் காலக் கடன்களில் 15 சத விகிதம் மாநிலக் கூட்டுறவு வங்கி தன் சொந்த நிதியாதாரங்களிலிருந்து நிதி வழங்குகிறது. அடிப்படை மட்டம் என்பது 1962ஆம் ஆண்டுச் சூன் இறுதியிலிருந்த மத்தியக் காலக் கடன் நிலுவைத் தொகையாகும்.

இந்திய ஸ்டேட் வங்கியிடமிருந்துங்கூடக் கடன்கள் வாங்கப்பட்டு வந்தன. 1961–62ஆம் ஆண்டில், உரவகைகள் வாணிகத்திற்காகவும் கொள்முதல் வாணிகத்திற்காகவும், பிரதம விற்பனைச் சங்கங்களுக்கும் மாவட்ட விற்பனைச் சங்கங்களுக்கும் நிதி வழங்குவதற்காக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு ஏராளமான நிதிகள் தேவைப்பட்டபோது, தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி இந்திய ஸ்டேட் வங்கியிடமிருந்து அரசாங்க உத்தரவாதத்தின்மீது ரூ. 3 கோடி கடன் வரம்பைப் பெற்றது. இவ் வரம்பு, பின்னர் ரூ. 5 கோடிக்கும், அதன் பின்னர் 1963–64ஆம் ஆண்டில் ரூ. 10 கோடிக்கும் உயர்த்தப்பட்டது. 1967ஆம் ஆண்டிலிருந்து மாநிலக் கூட்டுறவு வங்கி இந்தக் காரியங்களுக்காகத் தன் சொந்த நிதியாதாரங்களிலிருந்து நிதியுதவி வழங்கி வந்துள்ளது.

**(iv) கடன் வழங்குதல்:** நாட்டிலுள்ள மாநிலக் கூட்டுறவு வங்கிகளால் 1971–72ஆம் ஆண்டின்போதளிக்கப்பட்ட எல்லாக் கடன்களின் மொத்தம் குறுகிய காலக் கடன்களின்கீழ் ரூ. 860.95 கோடியாகவும், மத்தியக் காலக் கடன்களின்கீழ் ரூ. 63.27 கோடியாகவு மிருந்தது. மற்றும், 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு வரவேண்டிய கடன் நிலுவை ரூ. 552.73 கோடியாக விருந்தது. இதில் எல்லாக் காரியங்களுக்காகவும் அளிக்கப்பட்ட குறுகிய காலக் கடன்கள் ரூ. 430.40 கோடியாகவும், மத்தியக் காலக் கடன்கள் ரூ.122.73 கோடியாகவு மிருந்தன. தமிழ்நாடு, மாநிலக் கூட்டுறவு வங்கியைப் பொறுத்தமட்டில், 1971–72ஆம் ஆண்டின்போது அளிக்கப்பட்ட கடன்கள் குறுகிய காலக் கடன்களின்கீழ் ரூ. 105.51 ஆகவும், மத்தியக் காலக் கடன்களின்கீழ் ரூ. 3.56 ஆகவும் இருந்தன. 30–6–1972ஆம் நாளன்று, இவ் வங்கிக்கு வரவேண்டிய கடன்கள் நிலுவை குறுகிய காலக் கடன்களின்கீழ் ரூ. 34.85 ஆகவும், மத்தியக் காலக் கடன்களின்கீழ் ரூ. 8.65 ஆகவும் மொத்தத்தில் ரூ. 43.50 ஆக இருந்தது.

தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியால் முன்கடன்கள், முக்கியமாகக் கீழ்க்காணும் விவரப்படி அளிக்கப்பட்டிருந்தது.

(i) பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பயிர்கள் விற்பனைக்காகவும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குக் குறுகிய காலக் கடன்கள் அளித்தல். இது குறித்து ஒரு முந்திய பத்தியில் விரிவாகக் கூறியுள்ளோம்.

(ii) நெசவாளர் சங்கங்களுக்குக் கடனுதவியளித்தல். மாநிலக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கம், மாநிலக் கூட்டுறவு வங்கியால், தனக்கு ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப்பட்ட ரொக்கக்கடன் வரம்புகளிலிருந்து நேர்முகமாகக் கடனுதவி யளிக்கப்படுகிறது; பிரதம நெசவாளர் சங்கங்கள் மையக் கூட்டுறவு வங்கிகள் மூலம் நிதியுதவி யளிக்கப்படுகின்றன. தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கம் (தலைமை நெசவாளர் கூட்டுறவுச் சங்கம்), கைத்தறித் துணிகள் உற்பத்திக்கும், விற்பனைக்கும் நிதி வழங்குவதற்காக, ரிசர்வ் வங்கியிடமிருந்து மறுநிதி வசதிகளின்கீழ், மாநிலக் கூட்டுறவு வங்கியால் கடன் வரம்புகள் வழங்கப்படுகின்றன. மற்றும், அது, நூல் வர்த்தகத்திற்காக ரிசர்வ் வங்கிக் கடன்வரம்பின்கீழ் அல்லது தன் சொந்த நிதியாதாரங்களிலிருந்து மாநிலக் கூட்டுறவு வங்கியால் நிதி வழங்கப்படுகிறது. மாநிலக் கூட்டுறவு வங்கி வங்காளதேஷ் முதலிய நாடுகளுக்குத் துணி ஏற்றுமதிக்காகவுங்கூடக் கடனுதவி யளித்திருக்கிறது. துணி உற்பத்திக்காகவும், விற்பனைக்காகவுமான கடன் வரம்பு, வங்கி வட்டிவிகிதத்திற்கு 1.5 சதவிகிதத்திற்குக் குறைவான வட்டிவிகிதத்தில் அளிக்கப்படுகிறது. சங்கம், துணி, சாயப்பொருள்கள், இரசாயனப் பொருள்கள் முதலிய பொருள்கள் வாயிலாக, இருப்புச் சரக்குக் காப்பை (Stock cover) 10 சதவிகிதம் விளிம்புடன் காண்பிக்கவேண்டும். தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தின்மீது 1974ஆம் ஆண்டுச் ஜூன் இறுதியிலிருந்த கடன் நிலுவை ரூ. 4.20 கோடியாக விருந்தது.

(iii) மாநில வங்கி தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புக்கு, உரவகைகள் வாணிகம், அத்தியாவசியப் பண்டங்கள் விநியோகம், விவசாயப்பொருள்கள் விற்பனை, பொது வாணிகம் ஆகியவற்றிற்காக ரொக்கக் கடன் வரம்புகளை வழங்குகிறது. இந்தக் கூட்டமைப்பிலிருந்து பல்வேறு கணக்குகளின்கீழ் வரவேண்டிய கடன்நிலுவை 30-6-1974 அன்று ரூ. 2.10 கோடியாக விருந்தது. இக் கூட்டமைப்பு இரசாயன உரவகைகள், நடைமுறை மூலதனம் ஆகிய காரியங்களுக்காக, வாங்கிய கடன்களுக்காகப் பண்டங்கள் கையிருப்பு உறையை 10 சதவிகிதம் விளிம்புடன் பராமரிக்க வேண்டும்.

(iv) தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்பு, மத்திய அரசால் ஆதரிக்கப்பட்ட வங்கிகளுக்கு உத்தரவாதத் திட்டத்தின்கீழ், ரொக்கக்கடன் நிதியுதவி அளிக்கப்படுகிறது. 1974ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், இக் கூட்டமைப்பிலிருந்து வரவேண்டிய கடன் நிலுவை ரூ. 2.18 கோடியாக விருந்தது. இக் கூட்டமைப்பு, பண்டங்கள் கையிருப்பு உறையை 10 சதவிகித ஒரு விளிம்புடன் பராமரிக்க வேண்டும்.

(v) மத்தியக் கூட்டுறவு வங்கிகள், இரசாயன உரங்கள் கொள்முதல் விநியோகத்திற்காகவும், கொள்முதல் நடவடிக்கை களுக்காகவும், பொது விற்பனை வாணிகத்திற்காகவும், கூட்டுறவு நூற்பாலைகள், சர்க்கரை ஆலைகள், ஊழியர்கள் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் ஆகியவற்றிற்கு வழங்கப்பட்ட நடைமுறை மூலதனத் திற்காகவும், தங்களால் அளிக்கப்பட்ட முன்கடன்களைக் குறித்து, ஈடுசெய்தல் ரொக்கக் கடன்கள் ஒப்பளிக்கப்படுகின்றன.

(vi) மாநில வங்கி, மீனவர் கூட்டுறவுக் கூட்டமைப்புக்கும், சென்னை, செங்கை, திருநெல்வேலி மாவட்டங்களில் மீன்வள வளர்ச்சிக்காக, சம்பந்தப்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மூலம், விவசாய மறுநிதிவசதிக் கழகத்திடமிருந்து பெற்ற மறுநிதி வசதியின்கீழ் நிதியுதவி யளித்துள்ளது. 1971–72ஆம் ஆண்டில், அது மறுநிதிவசதி ஏற்பாட்டின்கீழ் ரூ. 5.07 இலட்சம் தொகையை ஒப்பளித்தது.

(vii) மாநிலக் கூட்டுறவு வங்கி, இதரச் சில கூட்டுறவுச் சங்கங்களுக்குக்கூட, அவை தன் உறுப்பினர்களாக இல்லாதிருந் தும் நிதியுதவி வழங்குகிறது. இக் காரியத்திற்காகப் பதிவாளரின் அனுமதி, சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின் 58 (1)ஆவது பிரிவின்கீழ்ப் பெறப்படுகிறது. மாநில வங்கி, தமிழ்நாடு நிலவள வங்கிக்குக் கடனீட்டுப் பத்திரங்கள் வெளியிடுவதற்கு முன்பு, கடன் களை வழங்கி அடைமானங்களை ஏற்படுத்துவதற்கு வகைசெய்யும் பொருட்டுத் தன் சொந்த நிதியாதாரங்களிலிருந்து 1974–75ஆம் ஆண்டின்போது இடைக்கால ரொக்கக்கடன் ரூ. 3 கோடி ஒப்பளித்திருக்கிறது.

(viii) மாநிலக் கூட்டுறவு வங்கி, கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளுக்குத் தங்கள் நிலைமுதலுக்காகக் (Block Capital) கட னுதவி யளித்து, தொழில்வளர்ச்சி வங்கியிடமிருந்து ஈடுசெய்தல் கடனுதவியைப் பெற்றுள்ளது. அது, கூட்டுறவு நூற்பாலைகளுக் குங்கூடத், தொழில் வளர்ச்சி வங்கியுடனுவது அல்லது சென்னை அரசுடனுவது, மறுநிதி வசதி ஏற்பாட்டின்கீழ்க் காலக்கடன்களை வழங்கியுள்ளது. சர்க்கரை ஆலைகளுக்கும், நூற்பாலைகளுக்கும்

அளிக்கப்பட்ட காலக்கடன்களைக் குறித்து, அசலைத் திருப்பிச் செலுத்துவதற்காகவும்,வட்டியைச் செலுத்துவதற்காகவும் மாநில வங்கி அரசு உத்தரவாதத்தைப் பெற்றிருக்கிறது. மறுநிதி வசதிகள் தொழில் வளர்ச்சி வங்கியிலிருந்து பெற்றிருந்தால், வங்கி அசலைத் திருப்பிச் செலுத்துவதற்காகவும், வட்டியைச் செலுத்துவதற்காகவும் தமிழ்நாடு அரசு உத்தரவாதம் அளித்துள்ளது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளுக்கும், நூற்பாலைகளுக்கும், அவைகளின் நடைமுறை மூலதனத் தேவைகளுக்காகவும், நிலையான ஆஸ்திகளைக் கொள்முதல் செய்வதற்காகவும் அளிக்கப்பட்ட கடன்கள், 30-6-1972ஆம் நாளன்று, முறையே ரூ. 80.99 இலட்சமாகவும், ரூ. 175.30 இலட்சமாகவு மிருந்தது.

**(v) தவணை கடந்த பாக்கிகள்:** நாட்டிலுள்ள மாநிலக் கூட்டுறவு வங்கிகளில் தவணை கடந்த பாக்கிகள், ஒரு சிறிது மேல்நோக்கிய போக்கைக் காண்பித்து வந்துள்ளன. கடன் நிலுவைக்குத் தவணை கடந்த பாக்கிகளின் சதவிகிதம் 1968ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 5 ஆக விருந்து 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 6.9-க்கு உயர்ந்தது. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியி லிருந்த தவணைகடந்த பாக்கித் தொகை ரூ. 38.33 கோடியாக விருந்தது. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு வரவேண்டிய தவணைகடந்த பாக்கிகள் ரூ .0.15 கோடிக் கிருந்தன. இது கடன் நிலுவைக்கு 0.4 சதவிகிதமாக இருந்தது. அண்மையில், ரிசர்வ் வங்கியால் அமைக்கப்பட்ட தவணைகடந்த கடன்கள் பற்றிய ஆராய்ச்சிக் குழு தன் அறிக்கையில் எந்த மையக் கூட்டுறவு வங்கியும் தன் சொந்த நிதிகளுக்கு மேற்பட்டுத் தவணை கடந்த பாக்கிகளில்லாத மாநிலம் தமிழ்நாடு மட்டுமேதான் என்று கூறியுள்ளது. இவ் வறிக்கையின்படி, 30-6-1972ஆம் நாளன்று, பல்வேறு மட்டங்களில் தவணைகடந்த பாக்கிகளின் நிலைமையானது பின்வருமாறு இருந்தது:

| கடன்கள் நிலுவைக்குத் தவணை கடந்த பாக்கிகளின் சதவிகிதம் —மட்டத்தில் | இந்தியா முழுமையும் | தமிழ் நாட்டில் |
|---|---|---|
| மாநிலக் கூட்டுறவு வங்கிகள் | 6.09 | 0.03 |
| மத்தியக் கூட்டுறவு வங்கிகள் | 36.00 | 9.00 |
| பிரதம விவசாயக் கடன் சங்கங்கள் | 44.00 | 28.00 |

**(vi) தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் கடன் வட்டிவிகிதம் :** விடுதலைக்குப் பிறகு, இந்தியாவில் வங்கி வட்டி விகிதம், அதாவது ரிசர்வ் வங்கி வட்டிவிகிதம், பலமுறை மாற்றப்பட்டு வந்துள்ளது. 1968ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில், அது 5 சதவிகிதமாக விருந்தது; பின்னர், அது 6 சதவிகிதத்திற்கு உயர்த்தப்பட்டது. எனினும், கூட்டுறவு வங்கிகளுக்கு அளிக்கப் படும் கடன்களின்மீது ரிசர்வ் வங்கி ஒரு சலுகையான வட்டி விகிதத்தை விதிக்கிறது. பருவகால விவசாய நடவடிக்கை களுக்காகவும், பயிர்கள் விற்பனைக்காகவும், குறுகிய காலக் கடன் கள், ரிசர்வ் வங்கியால், வங்கி வட்டிவிகிதத்திற்கு 2 சதவிகிதம் குறைவான வட்டிவிகிதத்தில் வழங்கப்படுகின்றன. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளில் பங்குகளை வாங்குவதற்கான மத்தியக் காலக் கடன்கள், வங்கி வட்டிவிகிதத்திற்கு 1 சதவிகிதம் குறைவான வட்டிவிகிதத்தில் அளிக்கப்படுகின்றன. விவசாயக் காரியங்களுக் கான மத்தியக் காலக் கடன்கள் வங்கி வட்டிவிகிதத்திற்கு 1.5 சதவிகிதம் குறைவான வட்டிவிகிதத்தில் அளிக்கப்படுகின்றன. கைத்தறி நெசவாளர்கள் சங்கத்தின் உற்பத்தி நடவடிக்கை களுக்காகவும், விற்பனை நடவடிக்கைகளுக்காகவும் அளிக்கப்படும் குறுகிய காலக் கடன்கள், வங்கி வட்டிவிகிதத்திற்கு 1.5 சத விகிதம் குறைவான வட்டிவிகிதத்தில் வழங்கப்படுகின்றன. இதரக் கடன்கள், வங்கி வட்டிவிகிதத்தில் வட்டி விதிக்கப்படுகின்றன. அண்மையில், வங்கி வட்டிவிகிதம் முதலில் 7 சதவிகிதத்திற்கும், பிறகு 9 சதவிகிதத்திற்கும் உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆகையால், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி, தன் கடன் வட்டிவிகிதத்தை மாற்றி, மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் பிரதம கூட்டுறவுச் சங்கங்களும் அவைகள் வழங்கும் கடன்கள்மீது தான் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுடன் கலந்தாலோசித்துத் தன்னால் கூறப்படும் வட்டிவிகிதங்களில் வட்டி விதிக்கவேண்டு மென்று அறிவுரை வழங்கியுள்ளது. தமிழ்நாட்டில் பல்வேறு மட்டங்களிலும், பல்வேறு காரியங்களுக்காகவும் தற்போது நடைமுறையிலுள்ள வட்டிவிகிதங்கள், இந்த அத்தியாயத்திற்குப் பிற்சேர்க்கை II ஆகத் தரப்பட்டுள்ளன.

**(vii) நிகர இலாபங்கள்:** மணிப்பூரிலுள்ள மாநிலக் கூட் டுறவு வங்கி நீங்கலாக, எல்லா மாநிலக் கூட்டுறவு வங்கிகளும், 1971–72ஆம் ஆண்டின்போது இலாபத்தில் செயற்பட்டன. அவைகளால் ஈட்டப்பட்ட இலாபங்கள் ரூ. 4.50 கோடித் தொகையாக இருந்தன. இவ் வங்கிகள் 3.5 சதவிகிதத்திலிருந்து 6.5 சதவிகிதத்திற்குப் பரவியிருக்கும் இலாப ஈவுகளைத் தெரி வித்தன. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி 1971–72ஆம்

ஆண்டில் ரூ. 32.18 இலட்சம் நிகர இலாபத்தை ஈட்டியது. அது சாதாரணப் பங்குதாரர்களுக்கு 6 சதவிகிதத்திலும், தனிநபர்ச் சலுகைப் பங்குதாரர்களுக்கு 9 சதவிகிதத்திலும் இலாப ஈவு தெரிவித்தது. 1973–74ஆம் ஆண்டின்போது, அது ரூ. 56.41 இலட்சம் இலாபத்தை ஈட்டியது. காப்புநிதிக்குச் சட்டப்படியான உதவித்தொகை யளிப்பிற்குப் பிறகும், விவசாயக் கடன் நிலை பேருக்க நிதிக்கு ஒதுக்கீட்டிற்குப் பிறகும், தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் வசமிருக்கும் கூட்டுறவுக் கல்வி நிதிக்கும், கூட்டுறவு வளர்ச்சி நிதிக்கும் உதவித்தொகைகள் அளிக்கப்பட்டன.

**(viii) வாணிக நடவடிக்கைகள் மேற்கொள்ளுதல் :** மாநிலக் கூட்டுறவு வங்கி, மாவட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்காக இருப்புக் கட்டல் நிலையமாகவும், நிதிவழங்கும் வங்கியாகவும் பிரதானமாக உத்தேசிக்கப்படுகிறது. அது, ஒருபுறத்தில் ரிசர்வ் வங்கிக்கும், பெருநகர்ப் பணச் சந்தைக்கும், மற்றொரு புறம் கூட்டுறவு இயக்கத்திற்குமிடையே சம்பந்தப்படுத்தும் ஓர் இணைப்பாகவுங்கூட இருக்கிறது. ஆனால், இடைநிகழ்ச்சியாக அது வைப்புகளை ஏற்றுக்கொள்ளுதல், உண்டியல்களை வசூலித்தல், காசோலைகள்மூலமும், பணவிடைகள்மூலமும் நிதிகளை அனுப்பி வைத்தல் போன்ற பொது வங்கித் தொழில் வாணிகத்தையுங்கூட மேற்கொள்ளுகிறது. அது, அரசாங்கப் பத்திரங்கள், கடனீட்டுப் பத்திரங்கள் முதலியவற்றின் ஆதாரத்தின்பேரில் உறுப்பினர்களுக்கும், உறுப்பினரல்லாதவர்களுக்கும் கடன்களுங்கூட அளிக்கிறது. சந்தானம் குழுவினர், மாநிலக் கூட்டுறவு வங்கி நீண்டநாள் நம்பிக்கையுள்ள வாடிக்கையாளர்களைப் பொறுத்த மட்டில் அதிகப்பற்றுகளை ஒப்பளித்தும், உண்டியல்களையும், காசோலைகளையும் மாற்றவும் செய்யலாமென்றும், அவ்வாறு அளிக்கப்பட்ட மொத்தத்தொகை, சந்தர்ப்பம்போல், வங்கியின் கிளையாலும் தலைமை அலுவலகத்தாலும் வைக்கப்பட்டிருந்த மொத்த வைப்புகளில் 5 சதவிகிதத்திற்கு மேற்படக்கூடாதென்றும் பரிவுரை செய்தது.

## 4. மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் தேசியக் கூட்டமைப்பு

1964ஆம் ஆண்டுச் சூலை மாதத்தில், மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் கூட்டமைப்பு அமைக்கப்பட்டது. இந்தக் கூட்டமைப்பின் முதன்மையான நோக்கம், தலைமை வங்கிகளுக்குத் தொடர்பான தொழில்நுட்பப் பிரச்சினைகளையும், நடைமுறைப் பிரச்சினைகளையும் விவாதிப்பதற்காகவும், அப் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான வழிமுறைகளை வகுப்பதற்காகவும் ஒரு பொதுவான அரங்கத்தை ஏற்படுத்துவதே யாகும். இக் கூட்டமைப்பு மத்திய அரசுடனும்,

மாநில அரசுகளுடனும், ரிசர்வ் வங்கியுடனும், ஸ்டேட் வங்கியுடனும், தொழில் நிதிக் கழகங்களுடனும், விவசாயக் கடன் கழகங்களுடனும், கூட்டுறவு வங்கிகளின் நலனுக்காகத் தொடர்புகளை நிறுவும். அனைத்திந்திய மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் கூட்டமைப்பின் ஓர் உறுப்பினராகத் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி 1965ஆம் ஆண்டில் இந்தக் கூட்டமைப்பால் தொடங்கப்பட்ட அனைத்திந்திய பரஸ்பர ஏற்பாட்டுத் திட்டத்தில் சேர்ந்துள்ளது. இத் திட்டத்தின்கீழ், வங்கியும் அதன் கிளைகளும், மையக் கூட்டுறவு வங்கிகளும் இந்தியா முழுமையிலும் தங்கள் வாடிக்கையாளர்கள் சார்பில், பதிலாண்மைக் கமிஷன் செலுத்தாமல் பணவிடைகளை வழங்கியும், காசோலைகளையும், உண்டியல்களையும் வசூலித்தும் வருகின்றன.

## 5. கூட்டுறவு வங்கிகளுக்கும் வணிக வங்கிகளுக்குமிடையே நடவடிக்கைகளை ஒருமைப்படுத்துவதற்கான ஆலோசனைக் குழு

மிக அண்மையிலிருந்து, இந்திய அரசு விவசாயக் கடனளிப்பில் வணிக வங்கிகள் திடமான பங்குகொள்ள வேண்டுமென்று வற்புறுத்தி வந்துள்ளது. அவைகளுக்கும், கூட்டுறவு வங்கிகளுக்குமிடையே சுகமில்லாத போட்டியைத் தவிர்க்கும் பொருட்டுத் தேசிய மட்டத்து ஆலோசனைக் குழு ஒன்று விவசாய நிதிக் கழகத்தால் அமைக்கப்பட்டுள்ளது. விவசாய நிதி தொடர்பான இவ் வங்கிகளின் நடவடிக்கைகளை ஒருமைப்படுத்துவதற்காக அக் குழுவின் ஆலோசனையின் பேரில், தமிழ்நாட்டிற்காக, வணிக வங்கிகள், மாநில நிலவள வங்கி, மாநில விற்பனைக் கூட்டமைப்பு, மாநில அரசு ஆகியவற்றின் பிரதிநிதிகளைக் கொண்ட, ஒரு மாநில மட்டத்துக் குழுவும்கூட அமைக்கப்பட்டுள்ளது. 1971–72ஆம் ஆண்டின்போது, 8 மாநில மட்டத்து ஒருமைப்பாட்டுக் குழுக் கூட்டங்கள், தமிழ்நாடு மாநில வங்கியின் ஆதரவின்கீழ், விவசாயக் கடன் துறையில் கூட்டுறவு வங்கிகளின் நடவடிக்கைகளையும், வணிக வங்கிகளின் நடவடிக்கைகளையும் ஒருமைப்படுத்துவதற்காக நடைபெற்றன. சந்தானம் குழுவினர், இக் குழு, மாநிலக் கூட்டுறவு வங்கியுடன் கலந்தாலோசித்து, வணிக வங்கிகளின் நடவடிக்கைகள் கூட்டுறவு வங்கிகளின் நடவடிக்கைகளுக்குப் பயனுறுதியாகத் துணைபுரிந்து போட்டியைத் தவிர்க்கும் வண்ணம் நலம்தரும் மரபுகளை உருவாக்க வேண்டுமென்று ஆலோசனை கூறியுள்ளது. மேலும் சந்தானம் குழுவினர், அத்தகைய ஒருமைப்பாட்டுக் குழுக்களும், ஆலோசித்தலும், மாவட்ட மட்டத்திலுங்கூடப் பயனுள்ளவையாக இருக்கலாமென்றுங்கூட ஆலோசனை கூறினர்.

## 6. வங்கித் தொழில் ஒழுங்குமுறைச் சட்டம் (1965) (Banking Regulation Act)

1965ஆம் வருடத்திய வங்கித் தொழில் சட்டங்களின் சட்டம் (கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பொருத்தமுள்ள) (Banking Laws -Applicable To Co-operative Societies- Act) நிறைவேற்றப்பட்ட பிறகு, கூட்டுறவு வங்கிகள் நாட்டின் பொதுவான வங்கித்தொழில் சட்டத்திற்குள் கொண்டு வரப்பட்டுள்ளன. இச் சட்டம் 1966ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் அமலுக்கு வந்தது. வங்கிகளுக்கு உரிமம் வழங்குதல், ரொக்கக் காப்பிருப்புகளையும் எளிதில் பணமாக்கக்கூடிய ஆஸ்திகளையும் பராமரித்தல், கடனளிப்பை ஒழுங்குமுறைப்படுத்துதல், கட்டளைகளை வெளியிடுதல் முதலியனவற்றிற்குத் தொடர்பான 1949ஆம் வருடத்திய வங்கித் தொழில் ஒழுங்குமுறைச் சட்டத்தின் சில சரத்துகள் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்குப் பொருத்தமுள்ளவையாகச் செய்யப்பட்டன.

மாநிலக் கூட்டுறவு வங்கி, 16-7-1966ஆம் ஆண்டிலிருந்து, 2ஆவது அட்டவணையில் சேர்க்கப்பட்டுள்ளதன் காரணமாக, ஓர் அட்டவணை வங்கியின் அந்தஸ்தையுங்கூட அடைந்திருக்கிறது. இது ஊராட்சி நிறுவனங்களிடமிருந்தும், அறநிலை நிறுவனங்களிடமிருந்தும், கல்வி நிறுவனங்கள் முதலியனவற்றினிடமிருந்தும், வைப்புகளை ஏற்றுக்கொள்வதற்கு வகை செய்கிறது.

## 7. தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் இதர வளர்ச்சி நடவடிக்கைகள்

(i) தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தின் வசமுள்ள கூட்டுறவுக் கல்வி நிதிக்காகவும், கூட்டுறவு வளர்ச்சி நிதிக்காகவும், தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் சரத்துகளின்படி செய்யப்படும் உதவித்தொகைகள் அன்றியும், மாநிலக் கூட்டுறவு வங்கி மாநிலத்திலுள்ள மண்டலக் கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரிக்கு வருடாந்தர உதவித்தொகைகளை அளிக்கிறது. 1973–74ஆம் ஆண்டின்போது ஒப்பளிக்கப்பட்டுப் பட்டுவாடாச் செய்யப்பட்ட அத்தகைய உதவித்தொகைகள் ரூ. 32,000-க்குத் தொகைபட்டன.

(ii) கிளை வங்கித் தொழிலை ஊக்குவிக்கும் நோக்கத்துடன், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கி, 1969–70ஆம்ஆண்டிலிருந்து மூன்றாண்டுகள் காலத்திற்குக் கிளைகளைத் திறப்பதற்காக மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு வழங்கப்பட்ட ரூ. 10,000 மானியத்தில்

25 சதவிகிதத்தைப் பங்கேற்றுக்கொள்ள இசைந்துள்ளது. 1973—74ஆம் ஆண்டின்போது, மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு, அவைகளால் 1971—72ஆம் ஆண்டிலிருந்து, 1973—74ஆம் ஆண்டு வரையுள்ள மூன்றாண்டுகளின்போது திறக்கப்பட்ட 109 கிளைகளுக்காக, ரூ. 94,250 மொத்தமுள்ள ஒரு மானியத்தை வழங்கியது.

(iii) மாநிலக் கூட்டுறவு வங்கி, மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் அலுவலர்கள் தலைமை வங்கியில் பயிற்சி பெறுவதற் கான வசதிகளை அளித்துவந்துள்ளது. 125 பயிற்சிப் பாடப் படிப்புகளில், 478 தேர்வு பெறுபவர்களுக்காக அது பயிற்சி யளித்தது. எனினும், பொதுவாக, பயிற்சியாளர்கள் எண்ணிக்கை இல்லாமை காரணமாகப் பயிற்சி நிறுத்தப்பட்டது. மற்றும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் முதுநிலை அலுவலர்களுக்காகத் தேசிய வங்கியின் உள்ளூர்த் தலைமை அலுவலகத்தில், பயிற்சித் திட்டங்கூட ஆதரிக்கப்பட்டது.

(iv) மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் மேற்கொள்ளப் படும் கொள்கைகளில் ஒருபடித்தான தன்மையை ஏற்படுத்தும் காரியத்திற்காகவும், அவ் வங்கிகள் எதிர்நோக்கும் பிரச்சினைகளை விவாதிப்பதற்காகவும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் வரு டாந்தர மாநாடுகள், மாநிலக் கூட்டுறவு வங்கியால் அமைக்கப் பட்டு வருகின்றன. இம் மாநாடுகளில் மத்தியக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்தும், மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்தும், மாநில அரசின் கூட்டுறவுத் துறையிலிருந்தும், பிரதிநிதிகள் பங்கு கொள்கின்றனர். தற்போது, பிரச்சினைகள் கூட்டுறவுப் பதி வாளரால் காலமுறையாகக் கூட்டப்படும் கூட்டங்களில் விவா திக்கப்படுகின்றன.

(v) மாநில வங்கி, மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் செயலர் களுக்காகவும், கிளைகள் மேலாண்மையாளர்களுக்காகவும், அவர் களுக்கு மிகவும் நூதனமான வளர்ச்சிகளை அறிமுகப்படுத்து வதற்காகக் காலமுறையான புதுமுகப் பயிற்சி வகுப்புகளைக்கூட நடத்துகிறது. சிறு தொழில்களுக்கும், கூட்டுறவுத் துறையி லுள்ள தொழிலதிபர்களுக்கும், நிதிவழங்குதலைக் குறித்த தொழில் நுட்பத்தைப் பற்றியும், நடைமுறையைப் பற்றியும் விவாதிப் பதற்கு நகரக் கூட்டுறவு வங்கிகளின் செயலர்கள் நன்மைக்காகப் புத்தொளிப் பயிற்சி வகுப்புகளும், கருத்தரங்குகளுங்கூட நடத்தப் படுகின்றன.

## பிற்சேர்க்கை—I

### மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் மற்றும் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் முன்னேற்றம்

| | 1968 | | 1970 | | 1972 |
|---|---|---|---|---|---|
| 1. மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் எண்ணிக்கை | 25(1) | | 25(11) | | 26(1) |
| 2. தலைமை அலுவலகம் உட்பட அலுவலகங்களின் எண்ணிக்கை— | — | | 169 | | 203(19) |
| 3. உறுப்பினர் எண்ணிக்கை | | | | | |
| (i) கூட்டுறவுச் சங்கங்கள்– | — | | 11,905(16) | | 12,229(16) |
| (ii) தனிநபர்களும், மாநில அரசுகள் உட்பட மற்றவர்களும் | — | | 6,955 | | 6,904(86) |
| 4. பங்கு மூலதனம் | 35.1 | | 39.6 | | 45.69(3.74) |
| இதில் அரசு பங்கு மூலதனம் | 11.4 | அரசு | 11.8 | அரசு | 15.09(1.26) |
| | | | | கூட்டுறவுச் சங்கம் | 30.31(2.48) |
| | | | | தனிநபர்களும் மற்றவர்களும் | 0.28(.0009) |
| 5. காப்பிருப்புகள் | | | | | |
| (i) சட்டப்படியான காப்பிருப்புகள் | 7.4 | | 9.4 | | 11.48(1.14) |
| (ii) விவசாயக்கடன் நிலைபேருக்க நிதி | 12.1 | | 22.3 | | 29.82(1.96) |
| (iii) இதரக் காப்பிருப்புகள் | 10.4 | | 11.5 | வராக்கடன் காப்பிருப்பு<br>வராக்கடன் சிறப்பு ,,<br>இதரக் காப்பிருப்புகள் | 4.09.(.0177)<br>.04(  )<br>— |
| 6. வைப்புகள் | 180 | | 234 | | 330.45(18.95) |
| (i) கூட்டுறவுச் சங்கங்கள் | 121.91 | கூட்டுறவு சங்கங்கள் | 165.32 | கூட்டுறவுச் சங்கங்கள் | 244.08(11.01) |
| (ii) தனிநபர்களும், உள்ளாட்சி நிறுவனங்கள் உட்பட மற்றவர்களும் | 57.61 | தனிநபர்களும் மற்றவர்களும் | 86.97 | தனிநபர்கள், மற்றவர்கள் | 86.36(7.94) |

7. இதரக் கடன்கள் (ரூபாய், கோடிக் கணக்கில்)

| | ஒப்பளிக்கப்பட்ட உச்சக் கடனளவு | | கடன் நிலுவை | | | வாங்கப் பட்டவை | திருப்பிக் கொடுக்கப் பட்டவை | நிலுவை யிலிருப் பவை |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 68—69 | 69—70 | 68—69 | 69—70 | | | | |
| (அ) ரிசர்வ் வங்கி | | | | | | 512.38 | 538.68 | 211.07 |
| குறுகியகால விவசாயக் கடன் | 375.3 | 390.0 | 198.7 | 218.5 | வணிக வங்கிகள் | 40.48 | 46.89 | 4.56 |
| குறுகியகால விவசாய மல்லாத கடன் | 8.4 | 8.9 | 4.9 | 5.0 | மாநில அரசுகள் | 13.45 | 5,31 | 27.67 |
| மத்தியக்கால விவசாயக் கடன் | 25.3 | 29.7 | 22.8 | 24.8 | மற்றவர்கள் | 6.30 | 2.88 | 13.40 |
| (ஆ) ஸ்டேட் வங்கி | 46·4 | 66.6 | 27.2 | 32.5 | ரொக்கக் கடன்களும் அதிகப் பற்றுகளும் | 88.62 | 85.46 | 13.37 |
| மாநில அரசுகளுக்குக் கடன்கள் (விவசாயக் கடன் நிலைபேறுக்க நிதி நீங்கலாக) | | | | | | | | |
| விவசாயக் காரியங்களுக்காக | — | — | 8.6 | 6.8 | | | | |
| விவசாயமல்லாத காரியங்களுக்காக | — | — | 8.6 | 9.4 | | | | |
| விவசாய மறுநிதி வசதிக் கழகத்திற்கு | 4.8 | 3.3 | 1.4 | 2.8 | | | | |

1971—1972

| மொத்தம் (24.38 கோடி) | வாங்கப் பட்டவை | திருப்பிக் கொடுக்கப் பட்டவை | நிலுவை யிலிருப் பவை |
|---|---|---|---|
| ரிசர்வ் வங்கியிடமிருந்து கடன்கள் | (97.00) | (91.04) | (21.76) |
| வணிக வங்கிகள் | | | |
| அரசுகள் | (.0075) | (.0152) | (1.43) |
| மற்றவர்கள் | — | (.4635) | (1.18) |
| ரொக்கக் கடன்களும் அதிகப் பற்றுகளும் | — | — | — |

| 7-ன் தொடர்ச்சி | 1968 | | 1970 | | 1972 |
|---|---|---|---|---|---|
| | ஒப்பளிக்கப்பட்ட கடன் உச்ச அளவு | | நிலுவையிலுள்ளவை | | |
| | 1968–69 | 1969–70 | 1968–69 | 1969–70 | |
| தொழில் வளர்ச்சி வங்கி | 0.4 | — | 2.8 | 2.2 | — |
| மற்றவைகள் | — | — | 0.4 | 0.3 | — |
| மொத்தம் | | | 275.4 | 302.3 | 270.09(24.38) |

[ பிற்சேர்க்கை I-ன் தொடர்ச்சி ]

| | 1968 | | 1970 | | | 1972 |
|---|---|---|---|---|---|---|
| 8. நடைமுறை மூலதனம் | 443.6 | | 619.4 | | | 731.05(54.00) |
| | | | | | வைப்புகள் | 18.45 |
| | | | | | கடன் வாங்குதல் | 24.38 |
| | மொத்தத் தொகை | நடைமுறை மூலதனத்திற்குச் சதவிகிதம் | மொத்தத் தொகை | நடைமுறை மூலதனத்திற்குச் சதவிகிதம் | மொத்தத் தொகை | நடைமுறை மூலதனத்திற்குச் சதவிகிதம் |
| சொந்த நிதிகள் | 65 | 15 | 75.5 | 13 | 102.83 | 13.5 |
| வைப்புகள் | 179.6 | 40 | 215.6 | 38 | 330.45 | 45.0 |
| வாங்கிய கடன்கள் | 199.0 | 45 | 274.4 | 49 | 270.01 | 36.5 |
| 9. முதலீடுகள் | 58.4 | | 80.4 | | | 107.33(7.29) |
| அரசாங்கக் கடன் பத்திரங்கள் | 32.1 | | 45.8 | | அரசாங்கக் கடன் பத்திரங்கள் | 60.47(3.51) |
| இதரப் பொறுப்பாளர் கடன் பத்திரங்கள் | 20.8 | | 32.0 | | நிலவள வங்கிகளின் கடனீட்டுப் பத்திரங்கள் | 33.5(2.28) |
| தவணை வைப்புகள் | 5.00 | | 1.9 | | இதரப் பொறுப்பாளர் கடன் பத்திரங்கள் | 12.80(1.44) |
| மற்றவைகள் | 0.5 | | 0.7 | | நிலையான வைப்புகள் | — — |
| | | | | | மற்றவைகள் | 0.88 (.046) |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 10. | வழங்கப்பட்ட கடன்களும் முன்பணங்களும் | 1967-68 | 1968-69 | 1969-70 | 1970-71 | | | 1971-72 | |
| | குறுகிய காலம் | 22.3 (அ) | 631.0 | 673.0 | 702.74 | | | 860.95 | (105.51) |
| | மத்தியக் காலம் | — | 36.02 | 33.98 | 46.29 | | | 63.27 | (3.56) |
| 11. | நிலுவையிலிருக்கும் கடன்கள் | 1968 | 1970 | 1970-71 | 1972 | | | | |
| | குறுகிய காலம் | 295.9 | 431.4 | 438.66 | 430.40 | (34.85) | | | |
| | விவசாயமல்லாத காரியங்களுக்காக | — | 54.3 | — | — | — | | | |
| | மத்தியக் காலம் | 62.2 | 78.4 | 95.60 | 122.33 | (8.65) | | | |
| | விவசாயமல்லாத காரியங்களுக்காக | — | 23.0 | — | — | — | | | |
| | மொத்தம் | 358.1 | 509.8 | 534.26 | 552.73 | (43.53) | | | |
| 12. | | 1967-68 | 1968-69 | 1969-70 | 1970-71 | 1971-72 | | | |
| | தவணை கடந்த கடன்கள் | 18.1 | 23.1 | 27.6 | 35.85 | 38.33 | (.15) | | |
| | நிலுவையிலிருக்கும் கடன்களுக்குச் சதவிகிதம் | 5% | 5% | 5.5% | 6.5% | 6.9% | (0.4) | | |

(அடைப்புக் குறியிலுள்ள எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை)

**பிற்சேர்க்கை—II**

**தமிழ்நாட்டில், மாநிலக்கூட்டுறவு வங்கியாலும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும், பிரதம கூட்டுறவுச் சங்கங்களாலும் விதிக்கப்படும் கடன் வட்டி விகிதங்கள்**

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| காரியம் | தலைமை வங்கி | மத்தியக் கூட்டுறவு வங்கி | பிரதம சங்கம் |
|---|---|---|---|
| 1. குறுகிய காலம், விவசாய நடவடிக்கைகள்: | | | |
| (i) வட்டிச் சலுகைக்காகத் தகுதியுள்ள பகுதிக்காக | 8.10 | 10.10 | 12.60 |
| (ii) வட்டிச் சலுகைக்காகத் தகுதியில்லாத பகுதிக்காக | 9.70 | 10.10 | 12.60 |
| 2. குறுகிய காலம்: நெசவாளர்கள் | 8.95 | 8.20 | — |
| 3. மத்தியக் காலம்: விவசாயக் காரியங்கள் | 8.95 | 11.30 | 13.80 |
| 4. உரவகைகள் வாணிகம் | 12.40 | 13.20 | — |
| 5. கொள்முதல் | 11.90 | 12.50 | — |
| 6. பொது வாணிகம் (நுகர்வோர்): | | | |
| (அ) விவசாயக் கடன் சங்கங்கள் | 11.90 | 12.50 | — |
| (ஆ) மாவட்ட விற்பனை விநியோகச் சங்கங்களும், மொத்த விற்பனைப் பண்டசாலைகளும், பிரதம பண்டசாலைகளும் | 12.40 | 13.00 | — |

| | | | | |
|---|---|---|---|---|
| 7. | நூற்பு ஆலைகள் | 15.60 | 16.10 | — |
| 8. | சர்க்கரை ஆலைகள் | 13.00 | 14.00 | — |
| 9. | ஊழியர்கள் சங்கங்களும் நகர வங்கிகளும் (நகையீட்டுக் கடன்கள் உள்பட) | 13.00 | 13.50 | 16 |
| 10. | மைய வங்கிக் கிளைகளால் தனிநபர்களுக்கு நகையீட்டுக் கடன்கள் | — | 16.00 | — |
| 11. | நடப்புக் கணக்குக்கு அதிகப் பற்றுகள் (ஆதாரமுள்ளவை): | | | |
| | (அ) மையக் கூட்டுறவு வங்கிகள் | 12.00 | — | — |
| | (ஆ) சங்கங்கள் | 13.00 | 13.00 | — |
| 12. | தாற்காலிக அதிகப் பற்றுகள் (ஆதாரமற்றவை): | | | |
| | (அ) சங்கங்கள் | 14.00 | 14.00 | — |
| | (ஆ) தனி நபர்கள் | 17.50 | 17.50 | — |
| 13. | கறவை மாடுகள் | | | |
| | குறுகிய காலம் | — | 12.00 | 13.80 |
| | மத்தியக் காலம் | — | 12.00 | 13.80 |

**தலைமைக் கூட்டுறவு நிறுவனங்களுக்குத்**
**தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியால் விதிக்கப்படும் கடன் வட்டி விகிதங்கள்**

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| | |
|---|---|
| தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு நிலவள வங்கி (இடைக்காலக் கடனுதவி) | 12.40 |
| தமிழ்நாடு கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கம் | 12.40 |
| ,, கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு | 13.00 |
| ,, நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்பு | 13.00 |
| ,, கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கம்: | |
| நூல் வியாபாரம் | 14.60 |
| துணி வியாபாரம் | 8.00 |
| தாற்காலிக அதிகப் பற்றுகள் | 14.00 |

# 13. கூட்டுறவு வளர்ச்சியை முன்னேறச் செய்வதில் இந்திய ரிசர்வ் வங்கியின் பணி

## (Role of the Reserve Bank of India in Promoting co-operative Development)

## I. ரிசர்வ் வங்கிப் பணியின் பரிணமம்

### 1. விவசாயக் கடனைக் குறித்து ரிசர்வ் வங்கியின் குறிக்கோள்

இந்திய ரிசர்வ் வங்கியானது, நாட்டின் மைய வங்கியாக இயங்கி, 'வங்கிகளின் வங்கியாக' (A Bankers' Bank) பலப்பல பணிகளைப் புரிகிறது. அது 1935ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. 1927ஆம் ஆண்டு ஃபிப்ரவரி மாதம் 10ஆம் நாளன்று, இந்தியச் சட்டமன்றத்தில் முதல் ரிசர்வ் வங்கியின் மசோதாவின்மீது உரையாற்றுகையில், அன்றைய நிதியமைச்சராகவிருந்த சர் பேசில்பிளாக்கட் (Sir Basil Blackete) அவர்கள் 'அது (ரிசர்வ் வங்கி) இந்தியா முழுமைக்காகவும் தனி ஒரு கூட்டுறவு வங்கியைக் காட்டிலும் அதிகப் பயனுள்ள நிறுவனமாக இருக்கும்..........அது அமைக்கப்படும்போது, கூட்டுறவு வங்கிகள்மூலம் விவசாயம், விளைபொருள்கள் விற்பனை, பொதுவாக விவசாயக் கடன்களுக்கான வசதிகள் ஆகியவற்றின் நலன்களை முன்னேற்றுவதற்கு ஒரு பெரிய பணியைப் புரியும் என்று நான் நம்புகிறேன்' என்று உரைத்தார். அதன் தொடக்கத்திலிருந்து, விவசாயக்கடனைக் குறித்துச் சில தனிப் பொறுப்புகள் ரிசர்வ் வங்கிக்கு விதிக்கப்பட்டிருந்தன. சில காலத்திற்குப் பிறகு, குறிப்பாக, விடுதலைக்குப் பிறகு, ரிசர்வ் வங்கி விவசாயக் கடன் துறையில் மிகவும் அதிகமான பொறுப்புகளை முன்னேறும் வகையில் மேற்கொண்டு, கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள் விஷயத்தில் உறுதியான கொள்கைகளை ஏற்றிருக்கிறது.

கிராமக் கடன் துறையில் ரிசர்வ் வங்கியின் விரிவான பணிகள், 1934ஆம் வருடத்திய இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் 54ஆவது பிரிவில், பின்வருமாறு நிருணயிக்கப்பட்டுள்ளன.

அவ் வங்கி, கீழ்க்காணும் பணிகளையுடைய ஒரு 'தனி விவசாயக் கடன் இலாகா'வை ஏற்படுத்தவேண்டும்.

(அ) விவசாயக் கடன் பற்றிய எல்லாப் பிரச்சினைகளையும் ஆராய்வதற்கு ஒரு நிபுணத்துவப் பணியாளர் தொகுதியைப் பராமரித்து மைய அரசாலும், மாநில அரசுகளாலும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளாலும், மற்றும், இதர வங்கித் தொழில் நிறுவனங்களாலும், வேண்டப்படும் ஆலோசனைக்காகப் பயன் படுதல்; மற்றும்,

(ஆ) விவசாயக் கடன் சம்பந்தமாக வங்கியின் நடவடிக்கை களையும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளுடனும், விவசாயக் கடன் வாணிகத்தில் ஈடுபட்டிருக்கும் வேறு எந்த வங்கிகளுடனும், நிறுவனங்களுடனும், அதன் உறவுகளையும் ஒருமைப்படுத்துதல்.

'விவசாயக் கடன் இலாகா', 1935ஆம் ஆண்டில் அமைக்கப் பட்டது. தொடக்க ஆண்டுகளில், கிராமக் கடன் துறையில் அதன் நடவடிக்கைகள் தயக்கமானதாக விருந்தாலும், பிந்திய காலத்தில், குறிப்பாக விடுதலையடைந்த பின்னரும், அனைத்திந் தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை வெளியிடப் பட்டு ஐந்தாண்டுத் திட்டங்களில் கூட்டுறவு வளர்ச்சித் திட்டங்கள் வகுக்கப்பட்ட பின்னரும், அது ஒரு தீவிரப் பணியைப் புரியத் தொடங்கிற்று. வங்கியின் பணி, உள்ளடக்கத்திலும் முக்கியத் துவத்திலும் விரிவடைந்து மைய, மாநில அரசுகளும், கூட்டுறவு நிறுவனங்களும், ரிசர்வ் வங்கியும் கூட்டுப் பங்கு பெறும் பலதரப் பட்டதும், நாடு முழுமையும் பரவியதுமான, முயற்சியின் ஒரு பாகமாக அது ஆயிற்று.

## 2. ரிசர்வ் வங்கிப் பணியின் வளர்ச்சி

**(அ) விடுதலைக்கு முந்திய காலம்:** விவசாயக் கடன் துறையில் ரிசர்வ் வங்கியின் நடவடிக்கையின் பதிவுக் குறிப்பு, மூன்று பரந்த காலவரையில் அடங்கியுள்ளது. (i) 1936ஆம் ஆண்டில் வங்கியின் தொடக்கத்திலிருந்து, 1947ஆம் ஆண்டு வரை. இதனை விடுதலைக்கு முந்திய கால மென்று குறிப்பிடலாம், (ii) 1948ஆம் ஆண்டிலிருந்து 1954ஆம் ஆண்டுவரை — அதாவது விடுதலைக்குப் பிந்திய காலங்கள், (iii) 1955ஆம் ஆண்டிலிருந்து, இன்றுவரையுள்ள விடுதலைக்குப் பிந்திய காலங்கள்.

விடுதலைக்கு முந்திய காலத்தின்போது, வங்கி, தன் விவசாயக் கடன் இலாகாவின்மூலம், கூட்டுறவு இயக்கம் சீரமைக்கப்பட

வேண்டிய வழிமுறைகளைப் பரிசீலனை செய்தலில் ஈடுபட்டிருந்தது. மேலும், வங்கி ஒரு கடைசிச் சாதனமான கடனளிப்பவராக, அதாவது, மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குக் குறுகிய கால வரைகளுக்காகத் தாற்காலிக நிதிப் பற்றுக்குறையைச் சமாளிப்ப தற்குக் கடனளிப்பவராகத் தன்னைப் பாவித்தது. அது கூட்டுறவு இயக்கத்திற்காகவோ அல்லது கூட்டுறவு வங்கித் தொழில்முறைக் காகவோ தனிக் கவனிப்பைக் காட்டவில்லை. எனவே, மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கும், மையக் கூட்டுறவு வங்கிகளுக்கும் இக் காலவரையில் அளிக்கப்பட்ட கடன், இற்றைய நாள் கடனள வுடன் ஒப்பிடும் வகையில் இருந்ததில்லை. எனினும், படிப்படியாக ரிசர்வ் வங்கி மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குச் சாதகமான நிபந்தனைகளின்மீது, கிராம மட்டத்தில் விவசாயிகள், குறைந்த வட்டி விகிதங்களில் கடனளிப்பின்மூலம் நலம்பெறும் வண்ணம், நிதியுதவி வழங்குவதன் அவசியத்தை ஏற்றது. 1942ஆம் ஆண்டுச் சனவரியில் பயிர்கள் விற்பனைக்காகச் சலுகையான வட்டிவிகிதத் தில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குக் கடனளிப்பதற்கான ஒரு திட்டத்தை வகுப்பதற்கு இது வழி செலுத்தியது. 1944ஆம் ஆண்டில், பருவகால விவசாய நடவடிக்கைகளுக்குங்கூட மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குக் கடனளிப்பதை இத் திட்டத்தில் சேர்த் துக்கொள்ளப்பட்டது. இச் சலுகை அப்போதிலிருந்து நீடிக்கப் பட்டிருக்கிறது. மேற் குறிக்கப்பட்ட காரியங்களுக்காக மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு அளிக்கப்படும் கடன்கள்மீது, பயனுறுதி யான வட்டிவிகிதம் 1946ஆம் ஆண்டிலிருந்து 1957ஆம் ஆண்டு வரை 1.5 சதவிகிதமாகவிருந்து, 1957ஆம் ஆண்டில் அது 2 சதவிகிதத்திற்கு உயர்த்தப்பட்டது.

**(ஆ) விடுதலைக்குப் பிந்திய காலம் (1948-1954):** விடுதலைக்குப் பிந்திய காலத்தின்போது, கிராமக் கடன் துறை யில் தன் பணியைப் பற்றிய வங்கியின் கருத்தமைப்பிலும், அதன் பிரத்தியட்சக் கொள்கைகளிலும், நடைமுறைகளிலும் ஒரு குறிப்பிடத்தக்க மாறுதல் நிகழ்ந்தது. பொதுவாகக் கிராம நிதி யமைப்பு விஷயத்திலும், குறிப்பாகக் கூட்டுறவுக் கடன் விஷயத்திலும், வங்கியின் நோக்கத்தில் ஏற்பட்ட மாறுதல், விடுதலைக்குப் பிறகு மையத்தில் மக்களரசால் பதவியேற்புக்கும், அதன்பின்னர் 1949ஆம் ஆண்டுச் சனவரியில் வங்கி நாட்டுடைமை யாக்கப்பட்டமைக்கும் காரணம் என்று கூறலாம். மேலும், பல்வேறு குழுக்களும், மாநில அரசுகளும், மையஅரசும், ரிசர்வ் வங்கியைத் திருப்திகரமான ஒரு விவசாயக் கடன்முறையை, குறிப்பாக, வளர்ந்துவரும் உணவுப் பற்றுக்குறையைத் தீர்ப்ப தற்கு உணவுப் பெருக்கத்திற்கான அவசியத்தின் சந்தர்ப்பத்தில்,

அமைப்பதைக் குறித்து ஒரு வழிகாட்டலைக் கொடுக்கவேண்டிய மிகப் பொருத்தமான நிறுவனமாகக் கருதினர். ரிசர்வ் வங்கியின் ஆலோசனையின் பேரில், 1949ஆம் ஆண்டில் இந்திய அரசு, சர் புருஷோத்தமதாஸ் தாகூர்தாஸ் (Sir Purushotomadas Thakurdas) அவர்களைத் தலைவராகக் கொண்ட, 'கிராம வங்கித் தொழில் விசாரணைக் குழுவை' (Rural Banking Enquiry Committee) அமைத்தது. வங்கித் தொழில் வசதிகளை விரிவு படுத்துவதற்காகவும், கூட்டுறவு வங்கிகளுக்குப் பல்வேறு சலுகைகளை யளிப்பதற்காகவும், அரசால் ஆதரிக்கப்பட்ட வங்கியொன்றை அமைப்பதற்காகவும், பல்வேறு யோசனைகளை அக் குழுவினர் கூறினர். அதன் பின்னர், ரிசர்வ் வங்கியே 1951ஆம் ஆண்டில், உத்தியோகப்பற்றுள்ள கூட்டுறவாளர்களும், உத்தியோகப் பற்றற்ற கூட்டுறவாளர்களும் கொண்ட முறைப்படி யமையாத ஒரு மாநாட்டைக் கிராம நிதியளிப்பில் தன் பணியை விவாதிப் பதற்காகக் கூட்டினது. இம் மாநாடு ஒரு புறம் கூட்டுறவு நிறுவனங் களின் நடவடிக்கைகளுக்கும், மறுபுறம், ரிசர்வ் வங்கியின் கொள்கை களுக்கும் நடவடிக்கைகளுக்குமிடையே ஒரு நெருங்கிய ஒருமைப் பாடிருக்கும்பொருட்டு, 'விவசாயக் கடன் பற்றிய ஒரு நிலையான ஆலோசனைக்குழு' (Standing Advisory Committee on Agricultural Credit) அமைப்பை ஆலோசனை கூறியது. இக் குழு, 1951ஆம் ஆண்டுச் சூலை மாதத்தில் அமைக்கப்பட்டது. இம் மாநாடு, கிராம மக்களின் எல்லாத் தளத்தையும் சேர்த்துக் கொண்டும், கிராமப்புறங்களில் மூலதன அமைப்பைப் பற்றிய பிரச்சினைகளையும், வசதியுள்ள குடியானவர்கள், வசதியில்லாத குடியானவர்களாகிய இருவர்தம் கடன் தேவைகளையும், தழுவிக்கொண்டு முள்ள ஒரு கிராமக் கடன் விசாரணையை மேற் கொள்ளுமாறும்கூட, ரிசர்வ் வங்கிக்கு ஆலோசனை கூறியது. இவ் விசாரணை, கோர்வாலாக் குழுவின் (Gorwala Committee) கட்டளையின்கீழ், நடத்தப்பட்டு, அதன் அறிக்கை 1954ஆம் ஆண்டு டிசம்பரில் வெளியிடப்பட்டது.

அப்போதிலிருந்து, அக் குழுவினரால் பரிவுரை செய்யப் பட்ட கிராமக் கடன் பற்றிய ஒருங்கிணைக்கப்பட்ட திட்டத்தின் அடிப்படையின்பேரில், கூட்டுறவு வளர்ச்சித் திட்டங்கள் வகுக்கப் பட்டதன் விளைவாக, வங்கியின் நடவடிக்கைகள் பாராட்டப்படும் வகையில் விரிவடைந்துகொண்டு வந்தன. வங்கியின் பணி, அளவிலும் முக்கியத்துவத்திலும் பெருகிவந்து, மைய அரசும், மாநில அரசுகளும், கூட்டுறவு நிறுவனங்களும், கூட்டுப் பங்கு கொண்ட, பலதரப்பட்ட, நாடெங்கும் பரவிய முயற்சியின் ஒரு பாகமாக ஆயிற்று.

**1955ஆம் ஆண்டிலிருந்து இன்றுவரை:** 1955ஆம் ஆண்டில் இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்திற்கு இரண்டு புதிய பிரிவுகள் சேர்க்கப்பட்டன. இச் சட்டப் பிரிவுகள், இரண்டு நிதிகளை யமைப்பதற்கான ஏற்பாட்டைச் செய்தன. அதாவது, (i) 'தேசிய விவசாயக் கடன் (நீண்டகால நடவடிக்கைகள்) நிதி' (National Agricultural Credit (Long Term Operations) Fund), மற்றும், (ii) 'தேசிய விவசாயக் கடன் (நிலை பேறுக்க) நிதி' (National Agricultural Credit (Stablisation) Fund). நீண்டகால நடவடிக்கைகள் நிதியானது, இதரக் காரியங்களுக்கிடையில், மாநில அரசுகளுக்கு, அவை கூட்டுறவுக் கடன் நிறுவனங்களின் பங்கு மூலதனத்திற்கு நேர்முகமாகவும், மறைமுகமாகவும் நிதி போட்டு வைப்பதை வகைசெய்யும் காரியத்திற்காக, நீண்டகாலக் கடன்களை யளிப்ப தற்குப் பயன்படுத்தப்படவேண்டும். 1966ஆம் ஆண்டு ஃபிப்ரவரி யில், ரூ. 10 கோடியான ஓர் ஆரம்ப உதவித்தொகையுடன் இந் நிதி ஏற்படுத்தப்பட்டது. இந் நிதிக்கு ஒவ்வோர் ஆண்டும் ரூ. 5 கோடி சேர்க்கப்படவேண்டும். மைய நிலவள வங்கிகளுக்கு நீண்டகாலக் கடன்கள் அளிப்பதற்கும், அவைகளின் கடனீட்டுப் பத்திரங்களை வாங்குவதற்குங்கூட இந் நிதி உபயோகப்படுத்தப் படலாம். இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் 17 (4அ) பிரிவின் கீழ், மத்தியக் காலக் கடன்கள்கூட, இந் நிதியிலிருந்து வழங்கப்பட வேண்டும். தேசிய விவசாயக் கடன் (நிலைபேறுக்க) நிதி யானது, பஞ்சம், வறட்சி மற்றும், இதர இயற்கை விபத்துகள் காரணமாகக் கூட்டுறவுக் கூட்டமைப்புக்குக் கடுமையான நிலை குலைவு இல்லாமல், மாநிலக் கூட்டுறவு வங்கிகளிடமிருந்து வர வேண்டிய குறுகிய காலக் கடன்கள் திருப்பிச் செலுத்தப்பட முடியவில்லை என்று ரிசர்வ் வங்கி திருப்தியடைந்த சந்தர்ப்பங் களில், மாநில வங்கிகளுக்கு மத்தியக் காலக் கடன்களை வழங்கு வதற்காக உபயோகப்படுத்தப்படவேண்டும். இந் நிதி, 1956ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில், ரூ. 1 கோடியான ஓர் ஆரம்ப உதவித் தொகையுடன் ஏற்படுத்தப்பட்டது. இந் நிதிக்கு ஒவ்வோர் ஆண்டும் ரூ. 1 கோடி உதவித்தொகை யளிக்கப்படவேண்டும்.

## II. ரிசர்வ் வங்கியின் கடமைகள்

பரவலாக, ரிசர்வ் வங்கியின் பணிகள், கீழ்க்காணும் தலைப்பு களின்கீழ் அமைகின்றன:

(1) அபிவிருத்தி செய்யும் பணியும், ஒருமைப்படுத்தும் பணியும்,

(2) நிதி வழங்கும் பணி, மற்றும்,

(3) மைய அரசிடமும், சம்பந்தப்பட்ட மாநில அரசுகளுடனும் ஒத்துழைத்துச் செயற்பட்டு, ஒழுங்குமுறை செய்யும் பணி.

**1 அபிவிருத்தி செய்யும் பணியும், ஒருமைப்படுத்தும் பணியும்**

இப் பணிகளில் பின்வருபவை அடங்கியிருக்கும்.

(i) நிறுவனங்க ளில்லாத பகுதிகளில், புதிய நிறுவனங்களை யமைத்தலும், ஏற்கெனவே அமைக்கப்பட்டுப் பலவீனமானவை யாகவும், கிராமக் கடனளிப்புத் துறையில் தங்களுக்கிடப்பட்ட பணிகளுக்குத் தகுதியில்லாதவையாகவும் காணப்பட்ட நிறுவனங்களைச் சீரமைத்தலும்;

(ii) 'ஒரு மாநிலத்திற்கு ஒரு தலைமை வங்கி', 'ஒரு மாவட்டத்திற்கு ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கி' என்ற கொள்கையின் பேரில் தலைமை வங்கிகளையும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும் சீரமைத்தலும், ஒவ்வொரு மத்தியக் கூட்டுறவு வங்கியும் ஒரு தன்னிறைவு நிறுவனமாக இயங்குவதை நிச்சயப்படுத்துதலும்;

(iii) தவணைகடந்த பாக்கிகள் அதிகமாகக் குவிந்திருத்தல், ஏழ்மையான உள்ளிட்ட நிதியாதாரங்கள், பயிற்சி பெறாத சிப்பந்திகள், போதாததும் திறமையற்றதுமான நிருவாகம் போன்ற பல்வேறு காரணங்களுக்காக, நிதிநிலைமையிலும் நிருவாக நிலைமையிலும் பலவீனமாக விருக்கும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குப் புனர்வாழ்வளித்தல்;

(iv) விவசாயக் கடன் பற்றிய கிராம அடித்தளத்திலுள்ள அமைப்புகளின் நிதித் திறனையும், நடவடிக்கைத் திறனையும் நிச்சயப்படுத்தும் பொருட்டு, பிரதமக் கடன் சங்கங்களைச் சீரமைத்து அவைகளுக்குப் புத்துயிரளித்தல்;

(v) சம்பிரதாயமான ஆதாரத்தை அடிப்படையாகக் கொண்ட கூட்டுறவுக் கடன்முறைக்குப் பதிலாக 'பயிர்க்கடன் முறை' என்று பலராலும் வழங்கப்படும் குடியானவர்களின் உற்பத்தித் திட்டத்திற் கேற்பவும், அதில் ஈடுபட்டிருக்கும் முதலீட்டிற் கேற்பவும் ஒரு காரியத்தை அடிப்படையாகக் கொண்டதும் விவேகமானதுமான கடன் கொடுக்கும் முறையாகிய உற்பத்தி நோக்குக் கடன் முறையின் அத்தியாவசிய அம்சங்களை வகுத்து விவரிப்பதன் மூலம் கடன்கொடுக்கும் கொள்கைகளிலும் நடைமுறைகளிலும் சீர்திருத்தங்களையும், சீரமைப்புகளையும் தோற்றுவித்தல்;

(vi) மத்தியக் கூட்டுறவு வங்கிகள், நிலவள வங்கிகள் ஆகியவைகளின் காலக் கடனளிப்பு நடவடிக்கைகளை, உற்பத்தி நோக்கும், வளர்ச்சி நோக்கு முள்ளவையாகச் செய்யும்வண்ணம் சீரமைத்தலும், ஒருங்குபடுத்துதலும்.

(vii) கடனுக்கான அவசியத்தைக் குறித்துத் திருப்திப் படுத்திக்கொள்வதற்குக் கடன் விண்ணப்பங்களின் பூர்வாங்கப் பரிசோதனையை வசதிப்படுத்துவதற்கும், அளிக்கப்பட்ட கடன் சரிவர உபயோகப்படுத்துவதை நிச்சயப்படுத்துவதற்கும், மேற் பார்வைக்கான ஏற்பாட்டைப் பலப்படுத்துதல்.

(viii) கூட்டுறவு நிறுவனங்களின் பணியாளர் தொகுதிக் காகத் தக்க பயிற்சித் திட்டங்களை ஏற்பாடு செய்தல்.

1951ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட கிராமக்கடன், கூட்டுறவுக் கடன் பற்றிய நிலையான ஆலோசனைக்குழு,, 1970ஆம் ஆண்டு ஃபிப்ரவரியில் வங்கியின் 'விவசாயக் கடன் வசதி வாரியம்' என்று சீரமைக்கப்பட்டது. ரிசர்வ் வங்கியின் ஆளுநர் அதன் தலைவராக வும், கிராமக் கடன் பொறுப்பிலுள்ள துணை ஆளுநர் அதன் துணைத்தலைவராகவும் இருக்கின்றனர். அவ் வாரியத்தின் 14 இதர உறுப்பினர்களுள், வங்கியின் சில இயக்குநர்களும், இந்திய அரசின் பிரதிநிதிகளும், கூட்டுறவாளர் தலைவர்களும், விவ சாயிகள் தலைவர்களும், அதன் செயலராகப் பணியாற்றும் விவசாயக் கடன் இலாகாவின் தலைமை அதிகாரியும் இருக் கின்றனர். ரிசர்வ் வங்கியின் கொள்கைகளை வகுத்தல், மறு ஆய்வு செய்தல், திருத்தல் ஆகியவற்றைக் குறித்த விஷயங்கள், அறிவுரைக்காக விவசாயக்கடன் வாரியத்திற்கு அனுப்பப்படு கின்றன.

### அறிவுரை வழங்குதல்

நாட்டில் கூட்டுறவு இயக்கம் முழுவதன் நன்மைக்காக, ஆய்வுகளையும், அறிக்கைகளையும், செய்தித் தாள்களையும், சிறு புத்தகங்கள் வடிவத்தில் இந்தியாவில் கூட்டுறவுச் சங்கங்களுக்குத் தொடர்பான பல்வேறு புள்ளிவிவர அறிக்கைகளையும், தகவல் அறிக்கைகளையும் வெளியிடுவதன்மூலம் கூட்டுறவுத் துறையில் பயனுள்ள மற்றொரு சேவையையும் ரிசர்வ் வங்கி புரிகிறது.

### 2. நிதி வழங்கும் பணி

**(i) கடன் நிறுவனங்களுக்குப் பங்கு மூலதன உதவித் தொகை வழங்குதல்:** கூட்டுறவு நிதி நிறுவனங்களின் பங்கு

மூலதனத்திற்கு உதவித்தொகை யளிக்க மாநில அரசுகளுக்கு வகைசெய்ய ரிசர்வ் வங்கி தன் தேசிய விவசாயக் கடன் (நீண்ட கால நடவடிக்கைகள்) நிதியிலிருந்து மாநில அரசுகளுக்குக் கணிசமான நீண்டகால உதவியை யளித்துவந்துள்ளது. இவ்வுதவி, 1960–61ஆம் ஆண்டில் ரூ. 3 கோடியிலிருந்து, 1970–71ஆம் ஆண்டில் ரூ. 15.05 கோடிக்கு அதிகரித்தது. அதேபோன்று, நிலுவைகளிலும் 1960–61ஆம் ஆண்டிறுதியில் ரூ. 20 கோடியிலிருந்து, 1970–71ஆம் ஆண்டு இறுதியில் ரூ. 42 கோடிக்கு அதிகரித்தது. தமிழ்நாட்டில் கூட்டுறவு நிறுவனங்களின் மூலதன அமைப்பில், பெருமளவு ரிசர்வ் வங்கியின் நீண்ட கால நடவடிக்கைகள் நிதியிலிருந்து பெறப்பட்ட நிதியாதாரங்களைக்கொண்டு மாநில அரசால் செய்யப்பட்ட முதலீடுகள் 31–3–71ஆம் நாளன்று தலைமைக் கூட்டுறவு வங்கியில் ரூ. 126 இலட்சமாகவும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளில் ரூ. 232.85 இலட்சமாகவும், பிரதம விவசாயக் கடன் சங்கங்களில் ரூ. 167.61 இலட்சமாகவும், மாநில நிலவள வங்கியில் ரூ. 170.00 இலட்சமாகவும், பிரதம நிலவள வங்கிகளில் ரூ. 43.05 இலட்சமாகவும் இருந்தன.

### (ii) விவசாயத் துறைக்காகக் கடன் வசதிகளை வழங்குதல்

**(i) குறுகிய காலக் கடன் வசதி:** விவசாயக் காரியங்களுக்காகக் கூட்டுறவுக் கடனமைப்புக்கு ரிசர்வ் வங்கியிலிருந்து கடன்வசதிகள், மூன்று தலைப்புகளின்கீழ் அமைகின்றன. அதாவது, குறுகிய காலம், மத்தியக் காலம், நீண்ட காலம். குறுகிய காலக் கடன்வசதியும், மத்தியக் காலக் கடன் வசதியும், குறுகிய காலக் கடனமைப்பின்மூலம் வாய்க்கால் படுத்தப்படுகின்றன. நீண்ட காலக் கடன் வசதி, மாவட்ட மட்டத்திலும், கோட்டம் மட்டத்திலும், தாலுக்கா மட்டத்திலும், தமிழ்நாட்டில்போன்று வட்டார மட்டத்திலுங்கூட மைய நிலவள வங்கிகள்மூலம் கொடுக்கப்படுகிறது. பருவ கால விவசாய நடவடிக்கைகளுக்கும், பயிர்கள் விற்பனைக்கும் நிதியை உதவுவதற்காகக் குறுகிய காலக் கடன் வரம்புகள், ஒவ்வொரு மத்தியக் கூட்டுறவு வங்கியின் சார்பாக, மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு ஆண்டுதோறும் ஒப்பளிக்கப்படுகின்றன. நாட்டில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் ஒப்பளிக்கப்பட்ட கடனுதவி; 1955–56ஆம் ஆண்டில் ரூ. 39.64கோடியிலிருந்து 1960–61ஆம் ஆண்டில் ரூ. 111.79 கோடிக்கும் 1965–66ஆம் ஆண்டில் ரூ. 212.66 கோடிக்கும், 70–71ஆம் ஆண்டில் மேற்கொண்டும் ரூ. 400.76 கோடிக்கும் உயர்ந்தன. தமிழ் நாட்டில் மாநிலக்

கூட்டுறவு வங்கிக்கும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் 1970—71ஆம் ஆண்டிற்காக ஒப்பளிக்கப்பட்ட குறுகிய காலக் கடன் வரம்புகள், ரூ. 35.00 கோடியாக விருந்தன. இதில், 30—6—71ஆம் நாளன் றிருந்த நிலுவை ரூ. 11.20 கோடி யாகும். மாநிலக் கூட்டுறவு வங்கியாலும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும் அளிக்கப்பட்ட இரண்டு நல்ல கையொப்பங்களின் ஆதாரத்தின் பேரிலும், மையக் கூட்டுறவு வங்கிகளின் சார்பாக, தனித்தனியாக அல்லது மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நிலைமையும், கடனமைப்பின் நிலைமையும் ஒப்பிடும் வகையில் பலவீனமாக விருக்குமிடங்களில் மாநில அரசின் உத்தரவாதத்தின் பேரிலும், தலைமைக் கூட்டுறவு வங்கிக்கு அல்லது அதன் இணைக்கப்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குச் சொந்தமான அரசாங்கக் கடன் பத்திரங்கள், பொறுப்பாளர் கடன் பத்திரங்களின் ஆதாரத்தின் பேரிலும், தலைமைக் கூட்டுறவு வங்கிகளுக்குக் கடன் வரம்புகள் ஒப்பளிக்கப்படுகின்றன. 1971-72ஆம் ஆண்டிலிருந்து, பருவ கால விவசாய நடவடிக்கைகளுக்காகவும், பிரதம கடன் சங்கங்களின் உறுப்பினர்களுக்கு விளைபொருள்கள் ஈட்டுக் கடன்களை அளிப்பதற்காகத் தேவைப்படும் கடனுதவி உட்படப் பயிர்கள் விற்பனைக்குக் கட னளிப்பதற்காகவும், பிரத்தியேகமாகத் தனிப்பட்ட கடன்வரம்புகள் ஒப்பளிக்கப்படுகின்றன. 1951ஆம் ஆண்டிலிருந்து விவசாயக் காரியத்திற்காக மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு ஒப்பளிக்கப்படும் குறுகிய காலக் கடனுதவியின்மீது வங்கி வட்டிவிகிதத்திற்கு 2 சதவிகிதம் குறைவுள்ள சலுகையான ஒரு வட்டிவிகிதத்தை வங்கி விதித்து வந்துள்ளது. 1974ஆம் ஆண்டில் வங்கி வட்டிவிகிதம் 9 சதவிகிதமாகும். இச் சலுகை, இறுதிக் கடன் வாங்குபவருக்குக் கடன்வட்டிகளை நியாயமான முறையில் குறைந்தவையாக வைப்பதற்கு உதவுகிறது.

விவசாய மக்களின் பலங்குன்றிய சிறு பிரிவினர்களுக்கு உதவுவதற்குக் கூட்டுறவு நிறுவனங்களின் கடன் நடவடிக்கைகளில் ஓர் உறுதியான மாற்றத்தைக் கொண்டுவர ரிசர்வ் வங்கியால் எடுக்கப்பட்ட மற்றொரு முக்கியமான நடவடிக்கை, அவைகள் 1971—72ஆம் ஆண்டிறுதியில் தங்கள் உறுப்பினர்களிடமிருந்து வரவேண்டிய குறுகிய காலக் கடன்களில் குறைந்தது 20 சதவிகிதம் மேற்குறிக்கப்பட்ட வகையான உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்ட கடனாக விருந்தன என்று காண்பிக்க வேண்டுமென்று வற்புறுத்துதலாகும்.

**(ii) மத்தியக் காலக் கடனுதவி:** சம்பந்தப்பட்ட மாநில அரசுகளால் அளிக்கப்பட்ட உத்தரவாதத்தின்மீது, விவசாயத்

திற்காக மத்தியக்காலக் கடன்களைக் கொடுப்பதற்கு ரிசர்வ் வங்கிக்கு அதிகாரமளித்து இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் ஒரு திருத் தத்தை யொட்டி, ரிசர்வ் வங்கி மத்தியக் காலக் கடன்களை அளிப்ப தற்காக 1954ஆம் ஆண்டில் ஒரு திட்டத்தைத் தொடங்கியது. அத் திட்டம் அவ்வப்போது தளர்த்தப்பட்டது. 1968ஆம் ஆண்டிலிருந்து வங்கி 5 ஆண்டுகளுக்காக மத்தியக் காலக் கடன்கள் அளிப்பைத் தளர்த்தி, மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு ஒப்பளிக்கப் படும் மொத்த மத்தியக் காலக் கடன்களில் 25 சதவிகிதம் வரைக்கும் மட்டுந்தான் அத்தகைய கடன்கள் ஒப்பளிக்கப்பட வேண்டுமென்று அதுவரையி லிருந்த கட்டுப்பாட்டை யெடுத்து விட்டது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் பங்குகளை வாங்கு வதற்காக விவசாயிகளுக்குக் கட னளிப்பதற்காக, ரிசர்வ் வங்கி யிடமிருந்து மத்தியக் காலக் கடன்களைப் பெறுவதற்குக் கூட்டுறவு வங்கிகளுக்கு வகைசெய்ய 1956ஆம் ஆண்டு, ரிசர்வ் வங்கியிட மிருந்து பெறும் மத்தியக் காலக் கடன்களின் காரியங்கள் விரிவு படுத்தப்பட்டன. 1961ஆம் ஆண்டிலிருந்து, ரிசர்வ் வங்கியி லிருந்து பெறும் மத்தியக் காலக் கடனுதவியின் பரப்பும், பிரதம கடன் சங்கத்தின் விவசாய உறுப்பினர்களாலும், பால்வழங்கும் சங்கங்களின் உறுப்பினர்களாலும், கறவை மாடுகள் வாங்கு வதற்காகக் கடனளிப்பதற்குக்கூட நீடிக்கப்பட்டது. 1967ஆம் ஆண்டில், விவசாயிகளால் மேற்கொள்ளப்பட்ட கோழிவளர்ப்பு நடவடிக்கையுங்கூட ரிசர்வ் வங்கிக் கடனளிப்பின் பரப்பிற்குள் கொண்டுவரப்பட்டது. பருத்தி சுத்தப்படுத்துதல், பருத்தி பதனிடுதல், நிலக்கடலை எண்ணெய் ஆலைகள், அரிசி ஆலைகள் போன்ற கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகளில் பங்குகளை வாங்குவதற்காக விவசாயிகளுக்குக் கடன் அளிப்பதற்காக மத்தியக் காலக் கடன் களை யளிக்கும் வசதியை மேற்கொண்டும் நீட்டித் துள்ளது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளில் பங்குகளை வாங்கு வதற்கான கடன்கள்மீது தனிநபர் உச்சஅளவு, சர்க்கரை ஆலை களின் மூலதன முதலீட்டின் அதிகரிப்பின் காரணமாக, சில நிபந்தனைகளின் பேரில் ரூ. 1,125-லிருந்து ரூ. 2,250-க்கு உயர்த்தப்பட்டுள்ளது. தன்னிடமிருந்து பெற்ற நிதிகளிலிருந்து வழங்கப்பட்ட விவசாயக் காரியங்களுக்கான மத்தியக் காலக் கடன் களுக்கான ஆதாரத்தைக் குறித்துச் சில தளர்த்துதல்களைக்கூட வங்கி அனுமதித்துள்ளது. அதற்கிணங்க, எண்ணெய் இயந்திரங் களையும், மின்சாரப் பம்புசெட்டுகளையும் வாங்குவதற்காகவும், கிணறுகளை வெட்டுவதற்காகவும் நில அடைமானத்தை வற் புறுத்தாமல், ஆனால், கடனைக்கொண்டு பெறப்பட்ட ஆஸ்தி களை அடைமானம் வைத்தல், விளிம்புப் பணத்தை ஏற்படுத்துதல், முதலியனபோன்ற சில நிபந்தனைக்குட்பட்டு, ரூ. 1,501-க்கும்,

ரூ. 3,500-க்கு மிடையே மத்தியக் காலக் கடன்கள் வழங்கப்படலாம். ரிசர்வ் வங்கியால் விவசாயக் காரியங்களுக்காக ஒப்பளிக்கப்பட்ட மத்தியக் காலக் கடன்களின் தொகை 1954–55ஆம் ஆண்டில் ரூ. 1.22 கோடியாக இருந்தது. அது 1960–61ஆம் ஆண்டு ரூ. 4.68 கோடிக்கும், 1970–71ஆம் ஆண்டில் ரூ. 17.55 கோடிக்கும் உயர்ந்தது. 1970–71ஆம் ஆண்டிற்காக, தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு, 10 மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் சார்பில், ஒப்பளிக்கப்பட்ட மத்தியக் காலக் கடன் வரம்புகள் ரூ. 1.48 கோடிக்கு மொத்த மாயின. எனினும், ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகளுக் கெதிரே, வாங்கப்பட்ட கடன் தொகைகள் ரூ. 25.05 இலட்சத்திற்கு மட்டுந்தான் மொத்த மாயின. விவசாய அபிவிருத்திக்காகச் சரியான முதலீட்டுத் திட்டங்கள் அமல் செய்யப்படவேண்டிய காரியங்களையும், இடங்களையும் வங்கிகளால் அடையாளப்படுத்த முடியாததனால், ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்புகள் முழுமையும் பயன்படுத்த முடியவில்லை.

ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கியின் சார்பில், ஒரு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு ஒப்பளிக்கப்படும் மத்தியக் காலக் கடன்களின் தொகை, இயல்பாக, அம் மத்தியக் கூட்டுறவு வங்கியின் சொந்த நிதிகளுக்கு வரையறுக்கப்பட்டுள்ளது. சிறப்பான சூழ்நிலைகளில், தாங்கள் மத்தியக் கால நிதியாதாரங்களில், பாராட்டக்கூடிய அளவுக்கு, அதிகரிப்பைச் செய்திருக்கும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குக் கூடுதலான வரம்புகள்கூட ஒப்பளிக்கப்படுகின்றன. எனினும், ஒரு வங்கிக்கு ஒப்பளிக்கப்படும் மத்தியக் காலக் கடன் வரம்பளவு, பிரதம சங்கங்களுக் கெதிரே விவசாயக் காரியங்களுக்கான மத்தியக் காலக் கடன்களின் நிலுவைகளில்80 சதவிகிதத்திற்கு வரையறுக்கப்பட்டுள்ளது. இதன் நோக்கம், வங்கிகள் தங்கள் நிதியாதாரங்களில் ஒரு பகுதியை அத்தகைய கடன்களை வழங்கும் காரியத்திற்காக ஒதுக்கவேண்டும் என்பது. குறுகிய காலக் கடன்கள் விஷயத்தில் போன்று, வங்கிகள் பிரதம சங்கங்களுக் கெதிரே தவணைதவறுத மத்தியக் காலக் கடன்கள் நிலுவை வடிவத்தில், ஈடுகாட்டலாகப் பராமரிப்பதற்குத் தேவைப்படுகின்றன. 1954ஆம் ஆண்டில், ரிசர்வ் வங்கியின் மத்திய இயக்குநர் குழு, ஒரு மாநில வங்கியால் கோரப்படும் கடன் தொகைக்காக ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குச் சாதகமாக நிறைவேற்றப்பட்ட ஒரு வெண்கடன் பத்திரம், ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறும் மத்தியக் காலக் கடன்களுக்காக ஆதாரமாக வாங்கப்படவேண்டுமென்று நிருணயித்தது.

மத்தியக் காலக் கடன்கள் மீது ரிசர்வ் வங்கியால் விதிக்கப்பட்ட வட்டிவிகிதம், விவசாயக் காரியங்களுக்காகக் கொடுக்கப்படும் குறுகிய காலக் கடன்கள் விஷயத்தில் போன்று, முதலில் வங்கி வட்டிவிகிதத்திற்கு 2 சதவிகிதம் குறைவாக இருந்து, 1960ஆம் ஆண்டு நவம்பரில் வங்கி வட்டிவிகிதத்திற்கு 1.5 சதவிகிதம் குறைவாகக் குறைக்கப்பட்டது. கூட்டுறவு பதனப்படுத்தும் சங்கங்களின் பங்குகளை வாங்குவதற்காக விவசாயிகளுக்கு நிதி யுதவி யளிப்பதற்காக வழங்கப்படும் கடன்களின்மீது, வங்கி வட்டி விகிதத்தில் வட்டி விதிக்கப்படுகிறது. கண்டறியக்கூடியதும் உற்பத்திக்கானதுமான காரியங்களுக்காகக் கடன்களை வழங்கும் கொள்கைக்கு, ஓர் உறுதியான கொள்கை மாற்றத்தைக் கொண்டு வரும் நோக்கத்துடன், ரிசர்வ் வங்கி தன்னிடமிருந்து மத்தியக் காலக் கடனுதவி பெறுவதற்கு ஒரு நிபந்தனையாக, மத்தியக் காலக் கடன்களில் குறைந்தது 40 சதவிகிதம் பின்வரும் நான்கு காரியங் களில் ஏதாவதொரு அல்லது அதற்கு மேற்பட்ட காரியங்களுக்காக இருக்கவேண்டுமென்று விதித்துள்ளது. (i) கிணறுகளை வெட்டு தலும், மற்றும், இதரச் சிறு பாசனத் திட்டங்களை நிறைவேற்று தலும், (ii) கிணறுகளையும், மற்றும் இதரப் பாசன ஆதாரங் களையும் பழுதுபார்த்தல், (iii) பம்புச்செட்டுகள் போன்ற இயந் திரங்களை வாங்குதல், (iv) விவசாயக் கருவிகளை வாங்குதல்.

வறட்சி, வெள்ளம் அல்லது இதர இயற்கை விபத்துகளின் விளைவாக, பெருவாரியான பயிர் சாவியாதல் காரணமாகக் குறுகிய காலக் கடன்களை மத்தியக் காலக் கடன்களாக மாற்றுதல் அவசியப்படும்போது, அவ்வாறு செய்வதற்கு மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு மத்தியக் காலக் கடன்களைக்கூட ரிசர்வ் வங்கி வழங்கு கிறது. அத்தகைய கடன்கள், ரிசர்வ் வங்கியால் அமைக்கப் பட்ட தேசிய விவசாயக் கடன் (நிலைபேறுக்க) நிதியிலிருந்து, அளிக்கப்படுகின்றன. ரிசர்வ் வங்கியிடமிருந்து கிடைக்கும் இக் கடனுதவி, கூட்டுறவு வங்கிகள், கூட்டுறவுக் கடனமைப்பின் பல்வேறு மட்டங்களில், விவசாயக் கடன் நிலைபேறுக்க நிதிகள் வடிவத்தில் அமைப்பதற்கு எதிர்பார்க்கப்படும் நிதியாதாரங் களுக்குத் துணையாக உத்தேசிக்கப்படுகிறது. மாநிலக் கூட்டுறவு வங்கியாலும், ரிசர்வ் வங்கியாலும் பராமரிக்கப்பட்ட நிலை பேறுக்க நிதிகளிலிருந்து, மத்தியக் கூட்டுறவு வங்கிகள், மாற்றப் படவேண்டிய குறுகிய காலக் கடன்களில் 85 சதவிகித அளவுக்கு இயல்பாகக் கடனுதவி பெற அனுமதிக்கப்படுகின்றன. எஞ்சி யுள்ள 15 சதவிகிதம் மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் சொந்த நிலைபேறுக்க நிதிகளிலிருந்தும், இதர நிதியாதாரங்களிலிருந்தும் பூர்த்திசெய்யப் படவேண்டும். இயல்பான மத்தியக் காலக் கடன்

களைப் போன்று, ரிசர்வ் வங்கியிலிருந்து மாற்றுதல் கடன்களுங்கூட வங்கி வட்டிவிகிதத்திற்கு 1.5 சதவிகிதம் குறைவான சலுகை வட்டிவிகிதத்தில் ஒப்பளிக்கப்படுகின்றன.

**(iii) நீண்டகாலக் கடனளிப்பு:** நீண்டகால விவசாயக் கடன்தொகையில் ரிசர்வ் வங்கியின் உதவி மறைமுகமாக இருந்துள்ளது. அது, மாநில நிலவள வங்கிகளால் வெளியிடப்படும் கடனீட்டுப் பத்திரங்களை (சாதாரணக் கடனீட்டுப் பத்திரங்களும், கிராமக் கடனீட்டுப்பத்திரங்களும்) வாங்குதல் வடிவத்தை எடுக்கிறது. இந்த ஆதரவைக் கடனீட்டுப் பத்திரங்கள் ஒவ்வொரு வெளியீட்டிலும் 10 சதவிகிதம் வரை அல்லது பொதுமக்கள் கடனீட்டுப்பத்திரங்களை வாங்குதலில் பற்றுக்குறை வரை, இதில் குறைவாக உள்ளதை, வாங்குவதன்மூலம் 1948ஆம் ஆண்டில் ரிசர்வ் வங்கி அளிக்கத் தொடங்கியது. இந்த விகிதம் 1950ஆம் ஆண்டில் 20 சதவிகிதத்திற்கு உயர்த்தப்பட்டது. விவசாய அபிவிருத்திக்காக நீண்டகாலக் கடன்கள் வழங்கப்படுவதன் முக்கியத்துவத்தை ஏற்று, ஆயுள் ஈட்டுறுதிக் கழகம், இந்திய தேசிய வங்கி போன்ற இதரப் பொதுத்துறை நிறுவனங்களும், மைய அரசும், மாநில அரசுகளும், வாணிக வங்கிகளுங்கூடக் கடந்த சில ஆண்டுகளாகத் தங்கள் ஆதரவை அளித்து வருகின்றன. மாநில நிலவள வங்கிகளால் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியீட்டைக் குறித்த ஒரு வருடாந்தரச் செயல்திட்டம், ரிசர்வ் வங்கியால் கூட்டப்பட்ட காலமுறைக் கூட்டங்களில் தீட்டப்படுகிறது. நிறுவன அமைப்புகளிலிருந்து பேரளவு ஆதரவின் காரணமாக, வங்கிகள் தங்கள் சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியீடுகளை 1965–66ஆம் ஆண்டில் ரூ. 40.93 கோடியிலிருந்து, 1968–69ஆம் ஆண்டில் ரூ. 100.63 கோடிக்கும், 1970–71 ஆம் ஆண்டில் ரூ. 127 கோடிக்கும் உயர்த்த முடிந்தது. தமிழ்நாடு மாநில நிலவள வங்கி, மாநில அரசின் உத்தரவாதத்தால் ஆதரிக்கப்பட்ட சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்களின் 96 வரிசைகளை வெளியிட்டிருந்தது. இவற்றில், 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் நிலுவையிலிருந்த கடனீட்டுப்பத்திரங்கள் ரூ. 73.11 கோடித் தொகைக் கிருந்தன.

1957ஆம் ஆண்டிலிருந்து, மாநில நிலவள வங்கிகளால் கிராமக் கடனீட்டுப்பத்திரங்கள் (Rural Debentures) இரண்டு பாகங்களில் வெளியிடப்படுகின்றன. ஒரு பாகம், ஏழு ஆண்டுகள் போன்ற ஒரு குறுகிய காலத்திற்காக வெளியிடப்பட்டு, அவை தனி நபர்களால், முன்னுரிமையாகக் கிராமப் பகுதிகளிலிருந்து வாங்கப்படவேண்டும்; மற்றொரு பாகம், 15 ஆண்டுகள் போன்ற

ஒரு நீண்டகாலத்திற்காக வெளியிடப்பட்டு அவை முற்றிலும் ரிசர்வ் வங்கியால் வாங்கப்படுகின்றன. ரிசர்வ் வங்கியின் உதவி மொத்த வெளியீட்டின் 8/5-க்கு அடைக்கப்பட்டுள்ளது. தனி நபர்களுக்கு வெளியிடப்பட்ட கடனீட்டுப்பத்திரங்கள்மீது கவர்ச்சிகரமான வட்டிவிகிதங்களை வங்கிகள் வழங்குவதற்கு வகைசெய்யும்பொருட்டு, ரிசர்வ் வங்கி தனக்கு வழங்கப்பட்ட கடனீட்டுப் பத்திரங்கள்மீது இயல்பான வட்டிவிகிதத்தைவிடக் குறைந்த வட்டிவிகிதத்தை ஏற்றுக்கொண்டு வந்துள்ளது. தமிழ் நாட்டில், மாநில நிலவள வங்கி, ரிசர்வ் வங்கியால் ரூ. 149.12 இலட்சமளவிற்கு 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதிவரை வெளியிடப் பட்ட ரூ. 289-85 இலட்ச மொத்த மதிப்புள்ள கிராமக் கட னீட்டுப் பத்திரங்களின் 13 வரிசைகளுக்கு உதவுவதன்மூலம், உதவப்பட்டுள்ளது.

நிலவள வங்கிகள் உற்பத்திக் காரியங்களுக்கான கட னளிப்பின்மீது ஓர் அதிகமான வலியுறுத்தல் வைப்பதை நிச்சயப் படுத்தும் நோக்கத்துடன் தங்கள் கடனீட்டுப்பத்திரங்கள் வெளி யீடுகளுக்கு நிறுவன அமைப்பிலிருந்து ஆதரவு பெறுவதற்கு ஒரு நிபந்தனையாக அவைகளால் அளிக்கப்பட்ட கடன்களில் 90 சதவிகிதத்திற்குக் குறையாமல் உற்பத்திக் காரியத்திற்காக இருக்க வேண்டுமென்றும், அதில், குறைந்தது 70 சதவிகிதம் புதிய கிணறுகளை வெட்டுதல், பம்புச் செட்டுகளை அமைத்தல், இயந்திரக் கலப்பைகளை வாங்குதல் போன்ற எளிதாக அடையாளப்படுத்தப் படும் காரியங்களுக்காக இருக்க வேண்டுமென்றும் விதிக்கப் பட்டுள்ளது. மேலும், கடன்கள் தாமதமில்லாமல் வசூல் செய்யப்படுவதை நிச்சயப்படுத்துவதற்குத் தக்க நடவடிக்கைகளை எடுப்பதற்கு ஒரு பொறுப்புணர்ச்சியை வங்கிகளில் ஏற்படுத்தும் பொருட்டு, கேட்புக்கு 15 சதவிகிதம் மேற்படாமலுள்ள தவணை கடந்த பாக்கிகளையுடைய பிரதம நிலவள வங்கிகளுக்கு மட்டுந் தான், பிரதம நிலவள வங்கிகளின் திட்டங்களைப் பூர்த்தி செய்வதற்கு முழு நிதி வழங்கப்பட வேண்டுமென்று விதிக்கப் பட்டுள்ளது.

நிலவள வங்கிகளின் கடனீட்டுப்பத்திரங்களின் விற்பனைத் திறனை உயர்த்தும் நோக்கத்துடன், ரிசர்வ் வங்கி, இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் 17 (4) (அ) பிரிவின்கீழ், இக் கடனீட்டுப் பத்திரங்களைக் கடனளிப்பிற்காக அரசாங்கக் கடன்பத்திரங்க ளுடன் சமமாகப் பாவிக்கிறது. நிதியுதவி அன்றியும், ரிசர்வ் வங்கி, கடனீட்டுப்பத்திரங்களின் எந்தக் குறிப்பிட்ட வரிசையின் வெளி

யீட்டின் காலம், நிபந்தனைகள் ஆகியவற்றைக் குறித்து, மாநில நிலவள வங்கிகளுக்கு அறிவுரையும் வழங்குகிறது.

(iv) **விவசாயமல்லாத துறைக்காகக் கடன் வசதிகள்:** கூட்டுறவமைப்பின்மூலம், கைத்தறி, நெசவுத் தொழிலின் வளர்ச்சியுடனும், அபிவிருத்தியுடனுங்கூட ரிசர்வ் வங்கி நெருங்கிய ஒரு தொடர்புகொண்டு வந்துள்ளது. குடிசை, சிறு அளவுத் தொழில்களின் உற்பத்தி நடவடிக்கைகளுக்கும், விற்பனை நடவடிக்கைகளுக்கும் வங்கி நிதி வழங்குவதை வகை செய்வதற்கு 1953ஆம் ஆண்டில், இந்திய ரிசர்வ் வங்கிச் சட்டம் திருத்தப் பட்டது. 1956ஆம் ஆண்டில் கைத்தறி நெசவுத் தொழில், ரிசர்வ் வங்கியால் கடனுதவிக் காரியத்திற்காக அங்கீகரிக்கப் பட்டது. மத்தியக் கூட்டுறவு வங்கிகள் சார்பாக, அவை உற்பத்தி, விற்பனை அடிப்படையின்பேரில் அமைக்கப்பட்ட பிரதம நெசவாளர் சங்கங்களுக்குக் கடனுதவி செய்ய வகைசெய்யும் பொருட்டு, மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு ஒரு வருடாந்தர அடிப்படையில் குறுகிய காலக் கடன் வரம்புகள் ஒப்பளிக்கப்படுகின்றன. ஆரம்ப ஆண்டுகளில், அத்தகைய கடனுதவி, ஒவ்வொரு செயல்படும் கைத்தறிக்காகவும் ஒருசில குறிப்பிட்ட தொகையில், நிருண யிக்கப்பட்டிருந்தாலும், 1965—66ஆம் ஆண்டிலிருந்து கடன் வரம்புகளை நிருணயிக்கும் அடிப்படை, ஓர் உற்பத்தி நோக்கு முறைக்குச் சாதகமாக மாற்றப்பட்டது. இம் முறையின்கீழ், சங்கத்தால் முந்திய ஆண்டில் செய்யப்பட்ட உண்மையான உற் பத்தியும், விற்பனையும் கணக்கில் எடுக்கப்படுகின்றன. பட்டு, மற்றும் கம்பளி நெசவாளர் சங்கங்கள், விசைத்தறிச் சங்கங்கள் ஆகியவற்றின் உற்பத்தியையும் விற்பனையையும் தழுவுவதற்கு 1968—69ஆம் ஆண்டில், ரிசர்வ் வங்கியிடமிருந்து பெறும் இக் கடனுதவியின் பரப்பு விரிவுபடுத்தப்பட்டது. 'தொழில் நிதி வழங்குதல் பற்றிய நடைமுறைக் குழுவின்' (Working Group on Industrial Financing) (1968) பரிவுரையின் பேரில், ரிசர்வ் வங்கி 1968—69ஆம் ஆண்டில், இதர 22 குடிசை, சிறு அளவுத் தொழில் பரந்த வகுப்புகளை, அவை ரிசர்வ் வங்கியிலிருந்து வங்கி வட்டிவிகிதத்தில் தங்கள் உற்பத்தி, விற்பனை நடவடிக்கைகளுக்குக் கடனுதவிக்காகத் தகுதியானவை யென்று ஏற்றுக்கொண்டது. தனியார் துறையில் சிறு அளவுத் தொழிலமைப்புகளுக்கும், குடி சைத் தொழிலமைப்புகளுக்கும் நிதியுதவும் ஓர் உறுதியான திட் டத்தையுடைய பிரதம நகர வங்கிகளின் பங்கு மூலதனத்தில் அரசு பங்குகொள்முதலைத் தழுவுவதற்கு, ரிசர்வ் வங்கியின் நீண்டகால (நடவடிக்கைகள்) நிதியிலிருந்து அளிக்கப்படும் உதவியும் பரப்பும் கூட விரிவுபடுத்தப்பட்டுள்ளது. ரிசர்வ் வங்கியிடமிருந்து கிடைக்

கும் வசதிகள், வருகின்ற ஆண்டுகளில் பெருகிவரும் ஓர் அளவில் உபயோகப்படுத்தப்படும் பொருட்டு, எல்லா நிறுவனங்களும் அவசியமான நடவடிக்கையைத் தொடங்கும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

**(v) கூட்டுறவு விற்பனை, பதனப்படுத்துதல் ஆகிய நட வடிக்கைகளின் வளர்ச்சிக்குக் கடனுதவி:** கூட்டுறவு விற்பனை, பதனப்படுத்துதல் நடவடிக்கைகளின் வளர்ச்சிக்கான பல்வேறு செயல்திட்டங்களின் அமலில், ரிசர்வ் வங்கி, நிறுவப்பட்ட கூட்டுறவுக் கடன்முறையின்மூலம், கடனுதரவைக் கூட்டுறவு விற்பனை மற்றும், பதனப்படுத்தும் நிறுவனங்களின் வர்த்தக நடவடிக்கைகளுக்கு நிதியுதவுவதற்காகத் தேவைப்படுமளவிற்கு வழங்குகிறது. இக் கடனுதவியானது, இந்திய தேச வங்கி மற்றும், இதர வாணிக வங்கிகள் போன்ற இதர நிதிவழங்கும் அமைப்புகளோடும் வழங்கப்படுகிறது.

**(vi) பணம் அனுப்புகை, மாற்றம், ஆகியவற்றிற்கான வசதிகள்:** நிதிகளை யனுப்புதல், வங்கித் தொழிலின் மிக முக்கிய ஓர் அம்சமாகும். ரிசர்வ் வங்கி, நாட்டின் மத்திய வங்கியாதலால் அதன் தொடக்கத்திலிருந்தே கூட்டுறவு வங்கிகள் மற்றும் அக்கறையான வங்கிகள் நலனுக்காகவும், அவைகளின்மூலம் பொதுமக்களின் நன்மைக்காகவும், நிதியனுப்பும் வசதிகளை மேம் படுத்துவதற்கும், மலிவுபடுத்துவதற்கும் அது முயற்சி செய்து வந்துள்ளது. ஓர் இடத்திலிருந்து, அவசரமாக நிதி தேவைப்படும் மற்றோர் இடத்திற்குத் தங்கள் நிதிகளை எளிமையாகவும், மலி வாகவும் அனுப்புவதற்கான அத்தகைய வசதிகள் இருப்பதன் மீது, தாங்கள் வெற்றிகரமாகப் பணியாற்றுவதற்கு வங்கிகள் எப்பொழுதுமே சார்ந்துள்ளன. 1950ஆம் ஆண்டில் கிராம வங்கித்தொழில் விசாரணைக் குழுவால் இந்த அம்சத்தின்மீது அதிகமான வலியுறுத்தல் விதிக்கப்பட்டது. அக் குழு, நிதிகளை அனுப்புதலுக்கான நடப்பிலுள்ள வசதிகள் தாராளப்படுத்தப் படவேண்டுமென்று பரிவுரை செய்தது. இந்த ஆலோசனை கிராமக் கடன் விசாரணைக் குழுவால் மேலும் வலியுறுத்தப் பட்டது. இப் பரிவுரைகளின் விளைவாக, நிலைமை பின்வருமாறு உள்ளது: (i) ரிசர்வ் வங்கியுடன் வைக்கப்பட்டிருக்கும் தலைமைக் கூட்டுறவு வங்கியின் கணக்கில் இலவசமாக நிதியனுப்புதல் ஏற்படுத்தப்பகிகிறது; (ii) தலைமை வங்கிகளால் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கு இலவசமாக நிதியனுப்புதல் ஏற்பாடு செய்யப்படுகிறது; (iii) எல்லாவகைக் கூட்டுறவு நிறுவனங் களுக்கிடையே சலுகையான கட்டண விகிதத்தில் நிதிகள் அனுப்

பப்படுகின்றன. இவ் வசதிகள் சில வரம்புகளுக்கும், நிபந்தனை களுக்கும் உட்பட்டுள்ளன.

## 3. ஒழுங்குபடுத்துதல் மற்றும் அபிவிருத்தி செய்தல் பணி (Regulatory & Development Functions)

வங்கித்தொழில் ஒழுங்குபடுத்துதல் சட்டத்தின் சில பிரிவு களும், 1966ஆம் ஆண்டில் வங்கித் தொழில் சட்டங்களின் (கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பொருத்தமுள்ளவை) சட்டத்தால் (1965) இந்திய ரிசர்வ் வங்கியின் சட்டமும், கூட்டுறவு வங்கி களுக்கு நீடித்ததன் விளைவாக, கூட்டுறவு வங்கிகளைக் குறித்து ரிசர்வ் வங்கி ஒழுங்குபடுத்துதல் பணிகளையும் ஏற்றுள்ளது. வங்கித்தொழில் ஒழுங்குபடுத்துதல் சட்டத்தின் (1949) கீழ், வாணிக வங்கிகள்மீது தான் செலுத்தும் கண்காணிப்பின் ஏறக் குறைய அதே அளவில், கூட்டுறவு வங்கிகளின் வங்கித்தொழில் மீதும் கண்காணிப்புச் செலுத்துவதற்குச் சட்டம் ரிசர்வ் வங்கிக்கு அதிகாரமளித்துள்ளது. இவ் வேற்பாட்டிற்குப் பிரதான காரணம், கூட்டுறவு வங்கிகளின் நடவடிக்கைகள் அளவில் அதி கரித்துள்ளதால் அவற்றின் வளர்ச்சியை நல்ல முறைகளில் அமைத்துப் பேணுவது அவசியமாக இருந்தது என்பது. மேலும், கூட்டுறவு வங்கிகளின் நடவடிக்கைகள் மிகப் பெரிதாக வளர்ந்து, அதன் காரணமாக, அவை நாட்டில் செலாவணி மற்றும், கடன் நிலவரத்தின்மீது ஒரு முக்கிய சம்பந்தம் கொண்டிருந்தன வென்றும், ஆகையால், இத் துறையை ரிசர்வ் வங்கியின் கண் காணிப்பிற்கு வெளியே விட்டுவிடுவது தவறாக இருக்குமென்றும் கருதப்பட்டது.

மேலும், ரிசர்வ் வங்கி தன் காலமுறையான ஆய்வுகளின் மூலமும், இதர முயற்சிகளின் மூலமும், பல்வேறு நடைமுறைப் பிரச்சினைகள்மீது அறிவுரைகளை வழங்கி, கூட்டுறவு நிறுவனங்களை உதவி செய்தும், அவ் வங்கிகளின் கடனளிப்புக் கொள்கைகளிலும் நடைமுறைகளிலும் மிகத் தேவைப்படும் வங்கித்தொழில் ஒழுங்கு முறையைப் புகுத்துவதிலும் நிறைவேற்றுவதிலும் அவைகளுக்கு உதவிசெய்தும் வந்துள்ளது. கூட்டுறவு வங்கிகளின், சிறப்பாகத் தன்னிடமிருந்து கடன் வாங்கின அல்லது கடன் வாங்குவதற்கு முயற்சிக்கிற கூட்டுறவு வங்கிகளின் ஆய்வையும் ரிசர்வ் வங்கி மேற்கொள்கிறது. இந்த ஆய்வுத் திட்டம் உருப்படியானதும், கூட்டுறவுப் பதிவாளரால் நடத்தப்படும் ஆய்வுக்கு இரட்டிப்பாக இல்லாமல், அதற்கு உபசாரமானதுமான வகையில் தயாரிக் கப்பட்டுள்ளது.

ரிசர்வ் வங்கி ஏற்றுக்கொண்டுள்ள அபிவிருத்தி செய்தல், ஒருமைப்படுத்துதல், நிதி வழங்குதல், ஒழுங்குபடுத்துதல் ஆகிய பணிகள், விவசாய உற்பத்திக்காகவும், விவசாய அபிவிருத்திக் காகவும் போதுமான அளவில் கடன்கள் அளிப்பதையும், அதே சமயத்தில், அத்தகைய கடன்கள் காலத்தில் பட்டுவாடாச் செய்யப்பட்டும் சரிவரப் பயன்படுத்தப்பட்டும் கால தாமத மில்லாமல் வசூல் செய்யப்படுவதையும் நிச்சயப்படுத்தி, நிதி ரீதியிலும், பொருளாதார ரீதியிலும் ஒரு தன்னிறைவுள்ள கூட்டுற வுக் கடனமைப்பை நாடு முழுவதிலும் அமைப்பதிலும், வளர்ச்சி செய்வதிலும்உதவுவதற்கு உருவாக்கப்பட்டுள்ளன. அனைத்திந்தியக் கிராமக்கடன் மறு ஆய்வுக் குழுவுங்கூட, தன் அறிக்கையில் (1969), 'ரிசர்வ் வங்கி தற்போது விவசாயக் கடன் துறையில் மேற்கொள்கின்ற பணிகளை அது தொடர்ந்து புரிவதற்காக ஒவ்வொரு நியாயமுமிருக்கிறது' என்று மொழிந்துள்ளனர்.

## III கூட்டுறவுப் பணியாளர்களுக்குப் பயிற்சியளித்தல்

கூட்டுறவு நிறுவனங்களிலும், கூட்டுறவு இலாக்காக்களிலும் பணியாற்றும் பெருவாரியான எண்ணிக்கையுடைய பணியாளர் களுக்காக (தற்போதுள்ளவர்களும், புதியவர்களும்) எல்லா மட்டங்களிலும், ஒரு மேலான அளவில் திறமையான பயிற்சி ஏற்பாடுகளை அமைக்காமல், கூட்டுறவு வளர்ச்சி சாத்தியப்படாது என்று ஆரம்பக்கட்டத்திலேயே உணர்ந்து, ரிசர்வ் வங்கி அத்தகைய பயிற்சியை அமைப்பதற்கான நிதியையும் முன்முயற்சியையும் வழங்கி, பம்பாய் மாகாணக் கூட்டுறவு நிலையத்துடன் (தற்போது பம்பாய் மாநிலக் கூட்டுறவு ஒன்றியம்) ஒத்துழைத்து, 1952ஆம் ஆண்டில், கூட்டுறவுப் பணியாளர்களின் பயிற்சிக்காகப் பூனாவில் ஓர் அனைத்திந்தியப் பயிற்சிக் கல்லூரியை அமைத்தது. 1953ஆம் ஆண்டு நவம்பரில் ரிசர்வ் வங்கியும், இந்திய அரசும் கூட்டாக, கூட்டுறவுப் பயிற்சிக்கான ஒரு மையக் குழுவை, உயர்நிலை, இடை நிலைப் பணியாளர் தொகுதிக்குப் பயிற்சியளிப்பதைக் குறித்த திட்டங்களை வகுப்பதற்காகவும், ஏற்பாடுகளைச் செய்து இயக்கு வதற்காகவும் அமைத்தது. இந்திய அரசு, வட்டார மட்டத்துக் கூட்டுறவு அதிகாரிகளின் பயிற்சிக்கான பொறுப்பை ஏற்றது. கீழ்நிலைப் பணியாளர் தொகுதியின் பயிற்சிக்கான பொறுப்பை இந்திய அரசும், மாநில அரசுகளும் ஏற்றுள்ளன. கூட்டுறவுப் பயிற்சிக்கான குழு, ஒரு பாகம் ரிசர்வ் வங்கியிடமிருந்தும், ஒரு பாகம் இந்திய அரசிடமிருந்தும் நிதிகளைப் பெற்றது. ஆக, ரிசர்வ் வங்கி, நாடெங்கும் பரவிய கூட்டுறவுப் பயிற்சியை யளிப்ப தற்கான முன்முயற்சியையும், நிதியையும் வழங்கியது. இக் குழு,

சுமார் எட்டாண்டுகளாக அதாவது, 1953ஆம் ஆண்டிலிருந்து 1962ஆம் ஆண்டுச் சூன் வரை செயற்பட்டது. 1962ஆம் ஆண்டில், இலாகா ஊழியர்களின் மற்றும், நிறுவன ஊழியர் களின் கூட்டுறவுப் பயிற்சிக்கான திட்டம், தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தால் எடுத்துக்கொள்ளப்பட்டது. எனினும், ரிசர்வ் வங்கி, கூட்டுறவு வங்கிகளின் உயர்நிலை மட்டத்துப் பணியாளர் தொகுதியின் பயிற்சிக்காகக் கூட்டுறவு வங்கியர் பயிற்சிக் கல்லூரியை (Co-operative Bankers' Training College) நடத்தி வருகிறது.

## (iv) கூட்டுறவுக் கடனளிப்பிலும், வளர்ச்சிலும் ரிசர்வ் வங்கி ஆற்றும் பணியின் மதிப்பீடு

கிராமக் கடன் துறையில், ரிசர்வ் வங்கி எடுக்கும் நடவடிக் கைகளின் அளவு முற்றிலும் குறிப்பிடத்தக்கவையாக விருந்து வந்துள்ளன. அது, நாட்டில் கூட்டுறவு நிறுவனங்களின் கடன் பட்டுவாடாவில் சுமார் 50 சதவிகிதத்தை ஏற்று வந்துள்ளது. இவ் விகிதம் 1955–56ஆம் ஆண்டில் 22.41 சதவிகிதத்திலிருந்து 1957–58ஆம் ஆண்டில் 39.55 சதவிகிதத்திற்கு நிலையாக அதி கரித்து வந்துள்ளது. மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் மொத்த நடைமுறை மூலதனத்திற்கு ரிசர்வ் வங்கியின் கடனளிப்பின் விகிதம்கூட 1955–56ஆம் ஆண்டில் 22.06 சதவிகிதத்திலிருந்து 1957–58ஆம் ஆண்டில் 40.21 சதவிகிதத்திற்கும், 71–72ஆம் ஆண்டில் 35.3 சதவிகிதத்திற்கும், நிலையாக அதிகரித்து வந்தது. கூட்டுறவு நிலவள வங்கிகள் விஷயத்தில் அது, 30–6–1972ஆம் நாளன்று, ஏறக்குறைய 38.4 சதவிகிதமாக விருந்தது. இவ்வாறு மிகப் பெரிய நிதியளிப்புப் பொறுப்புடன், ரிசர்வ் வங்கியின் ஒழுங்குபடுத்துதல், ஆய்வு செய்தல் பணிகளுங்கூட அண்மை ஆண்டுகளில் விரிவுபடுத்தப்பட்டன.

கூட்டுறவு நிறுவனங்கள், மொத்த லேவாதேவிகளிலும், நடவடிக்கைத் திறனிலும், பலத்திலும் வளர்ந்து வருங்கால், அவை அதிகரித்து வருமளவு தற்சார்புள்ளவையாக ஆகவேண்டும். மற்றும், அவை நாளடைவில், தாங்கள் ரிசர்வ் வங்கியின் மறுநிதி வசதிகளுக்குச் செல்வதைக் கட்டுப்படுத்துகின்ற ஒரு நிலைமையி லிருக்கவேண்டும். அப்போதுதான் ரிசர்வ் வங்கி, கூட்டுறவு நிறுவனங்களுக்காக இறுதிச் சாதனமான ஒரு கடனளிப்பு நிறுவனமாக மட்டும் இயங்கமுடியும். ஆனல், இந் நிலைமை எதிர்பார்க்கக்கூடிய காலவரையில், சாதிப்பதற்குக் கடினமாக விருக்குமென்பதைக் கூறுமலிருக்க முடியாது.

தன்னுதவியும், தன்தற்சார்பும் உண்மையாகவே கூட்டுறவின் வழிகாட்டும் கொள்கைகளாகும். ஆனால், தற்சார்பை யடைவது, ஒரு தாமதமான காரியமாக விருக்கும். ரிசர்வ் வங்கி நாடு முழுவதிலும் அமைப்பு ரீதியில் பலமானதும், நிர்வாக ரீதியில் திறமையானதும், நிதி ரீதியில் பலமானதும், பொருளாதார ரீதியில் தன்னிறைவானதுமான கூட்டுறவுக் கடனமைப்பை அமைத்துப் பேணும் துறையில், இன்னும் பல ஆண்டுகளுக்கு மேன்மேலும் மிக முக்கியப் பணியைப் புரியவேண்டி யிருக்கும்.

# 14. கூட்டுறவு இயக்கத்தில் இந்திய ஸ்டேட் வங்கியின் பணி

(Role of the State Bank of India in Co-operative Movements)

## 1. இந்திய ஸ்டேட் வங்கியும், கூட்டுறவு வளர்ச்சியும் (State Bank of India and Co-operative Development)

ரிசர்வ் வங்கிக்கு அடுத்தபடியாகக் கூட்டுறவுக் கடனளிப்பிற்குதவும் மற்ற முக்கிய நிறுவனம் இந்திய ஸ்டேட் வங்கியாகும். கிராமக் கடன் விசாரணைக் குழுவின் பரிவுரைகளுக் கிணங்க, இந்திய இம்பீரியல் வங்கியும், நாட்டிலுள்ள அரசு தொடர்பு கொண்ட இதர வங்கிகளும் நாட்டுடைமையாக்கப்பட்டு, இந்திய ஸ்டேட் வங்கியாக (State Bank of India) இணைக்கப்பட்டன. இவ்வாறாக, இந்தியத் தேச வங்கி, 1955ஆம் ஆண்டுச் சூலையில் தோன்றிற்று. மைய அரசு, மாநில அரசுகளின் பண நடவடிக்கைகளை வசதி செய்வதற்கு, அது மாநில மட்டத்திற்கும், மாவட்ட மட்டத்திற்கும், உட்கோட்ட மட்டத்திற்கும் நீடிக்கின்ற தன் கிளைகளுடன், பிரதானமாக ஓர் அரசு வங்கியாகப் பணிபுரிகின்றது. தன் பணிகளைப் புரிவதில் அது பொதுநலத்திற்குக் கவனம் செலுத்தி, வாணிகக் கொள்கைகள்மீது இயங்க வேண்டுமென்று, இந்திய தேசிய வங்கிச் சட்டம் அந்த வங்கிக்குக் கட்டளையிட்டிருக்கின்றது. அதற்கிணங்க, இந்தியப் பொருளாதாரத்தில் அந்த வங்கி ஓர் இரட்டையான பணியை ஆற்றி வந்துள்ளது. ஒருபுறத்தில், ஒரு வாணிக வங்கியாக அது, தொழிலுக்கும், வர்த்தகத்திற்கும் நிதி வழங்கிக்கொண்டும், மற்றொரு புறத்தில் ஒரு நாட்டுடைமையாக்கப்பட்ட நிறுவனமாக, கிளைகள் விரிவாக்கம், சிற்றளவுத் தொழில்களுக்கு நிதியளிப்பு, கூட்டுறவுச் சங்கங்களுக்கு உதவி போன்ற துறைகளில் பல்வேறு அபிவிருத்தி நடவடிக்கைகளையும், வளர்ச்சி நடவடிக்கைகளையும் மேற்கொண்டும் வந்துள்ளது.

கூட்டுறவு நிறுவனங்களின் தேவைகளின் தொடர்பாகவும், அந் நிறுவனங்களின்மூலம் கிராமக் கடன் துறையிலும், வங்கியின்

நடவடிக்கைகள், தனிப்பட்ட ஆனால் நெருங்கி ஒன்றுக்கொன்று தொடர்புள்ள நான்கு துறைகளைச் சார்ந்துள்ளன.

(1) நிதிகளை அனுப்புவதற்குக் குறுகிய காலக் கடனுதவிக்காகவும், நிலவள வங்கிகளின் கடனீட்டுப்பத்திரங்களை வாங்குவதற்காகவும், அவை போன்ற இதரக் காரியங்களுக்காகவும், கூட்டுறவுச் சங்கங்களுக்கு வசதிகளை வழங்குவதன்மூலம் கிராமக் கடன் வளர்ச்சிக்கு வழிசெலுத்தும் பொது உதவி யளித்தல்.

(2) கூட்டுறவு விற்பனை, பதனப்படுத்தும் நடவடிக்கைகளுக்குத் தொடர்பாக நிதியுதவி யளித்தல்.

(3) நாட்டில் தானியச் சேமிப்புக் கிடங்குத் (Ware-Housing) திட்டத்திற்கு உதவுதல்.

(4) கூட்டுறவு வங்கித்தொழில் நிறுவனங்களின் கொள்கைகளுடனும் நடவடிக்கைகளுடனும் தன் கொள்கைகளையும் நடவடிக்கைகளையும் ஒருமைப்படுத்துதல்.

## 2. இந்திய ஸ்டேட் வங்கியால் வழங்கப்படும் உதவி

### (i) மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும் நிலவள வங்கிகளுக்கும் கடனுதவி

**குறுகிய காலக் கடன்கள் :** மத்தியக் கூட்டுறவு வங்கிகள் போன்ற கூட்டுறவுக் கடன் நிறுவனங்களுக் குதவும் நோக்கத்துடன், இந்தியத் தேச வங்கி ஒரு சலுகையான வட்டிவிகிதத்தில், அரசாங்கக் கடன் பத்திரங்களின் பேரில், கடன்களையும் அதிகப் பற்று வசதிகளையும் வழங்குகிறது. சலுகையான வட்டிவிகிதமென்பது, கடன்தொகை அல்லது கடன் அளிக்கப்படும் இடம் எதுவாயிருந்தாலும், ஒரு மூன்று சதவிகிதக் குறுமத்திற் குட்பட்டு, இந்திய ஸ்டேட் வங்கியின் கடன் வட்டிவிகிதத்திற்கு (State Bank of India Advance Rate) 0.5 சதவிகிதம் குறைவானதாகும். ஈட்டுக் கடன்களுக்கு வங்கியால் விதிக்கப்படும் வழக்கமான நிபந்தனைக் குட்பட்டுக் கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள், பொருள்களின் மறு ஈட்டின்பேரில் முன்கடன்கள் அளிக்கப்படுகின்றன. வட்டிவிகிதமானது, அத்தகைய முன்கடன்களுக்கான வழக்கமான வட்டிக்கு 0.5 சதவிகிதம் குறைவாகவோ அல்லது இந்திய ஸ்டேட் வங்கியின் முன்கடன் வட்டிவிகிதத்திற்கு மேற்கொண்டு 1 சதவிகிதமாகவோ இதில் எது குறைவோ அதுவேயாகும். தனிப்பட்ட சந்தர்ப்பங்களில் அது, அரசு உத்தரவாதத்தின்பேரில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்கு, அவை தம் இணைக்கப்பட்ட சங்கங்களுக்குக் கடனளிப்பதற்கு வகைசெய்ய முன்கடன்கள் வழங்குகின்றது.

மற்றும், கூட்டுறவு வங்கிகளின் சொந்தக் காசோலைகள், சலுகை யான விகிதங்களில் வாங்கப்பட்டு வசூலிக்கப்படுகின்றன. அம் மாதிரியே, நிதிகளை மீண்டும் நிறைவாக்கும் காரியத்திற்காக, மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் தலைமை வங்கிகளின்மீது எழுதப் பட்ட பண்விடைகளும், காசோலைகளுங்கூடச்சலுகையான விகிதங் களில் ஸ்டேட் வங்கியால் மாற்றப்படுகின்றன. இவ்விதம் செய்யப்பட்ட வாணிகம், 1960–61ஆம் ஆண்டிறுதியில், ரூ. 2.58 கோடிக்கு மொத்தமாயின.

**நீண்டகாலக் கடன்கள் :** நீண்டகால விவசாயக் கடன் துறையில், இந்திய ஸ்டேட் வங்கி, கீழ்க்காணும் வகையில் மத்திய மாநிலக் கூட்டுறவு நிலவள வங்கிகளுக்குக் கடன் உதவுகிறது.

*(அ)* இந் நிறுவனங்களால் அவ்வப்போது வெளியிடப்படும் கடனீட்டுப்பத்திரங்களைத் தக்க மொத்தங்களில் தேச வங்கி வாங்கி, நில அபிவிருத்தி முதலியவற்றிற்கு நிதியுதவ அவைகளுக்கு உதவி புரிகிறது.

*(ஆ)* பணச் சந்தையில் நில அடைமான வங்கிகளின் கடனீட்டுப்பத்திரங்களின் விற்பனைத் தகுதியையும், பிரீதியையும் அபிவிருத்தி செய்வதற்கு அத்தகைய கடனீட்டுப்பத்திரங்களின் ஆதாரத்தின்பேரில் முன்கடன்களை வழங்குவதன்மூலம் தேச வங்கி உதவுகிறது.

*(இ)* தக்க சந்தர்ப்பங்களில் அரசு உத்தரவாதத்தின் பேரில், மாநில நிலவள வங்கிகளுக்கு, அவை கடனீட்டுப்பத்தி ரங்கள் வெளியீட்டின்மூலம் நிதிகளைத் திரட்டும் வரை தங்கள் இயல்பான கடன் நடவடிக்கையை நடத்துவதற்கு உதவ, தேச வங்கி சிறிய அளவுக்குத் தாற்காலிக நிதியுதவியை அளிக்கிறது.

இச் சந்தர்ப்பத்தில், இந்திய ஸ்டேட் வங்கியின் பணி யானது மிக முக்கியமானதாக இருந்துள்ளது. தேச வங்கியால் வாங்கப்பட்டிருக்கும் நிலவள வங்கிகளின் கடனீட்டுப்பத்திரங் களின் மொத்தத் தொகை, 1954ஆம் ஆண்டில் ரூ. 5 இலட்சத் திலிருந்து 1959ஆம் ஆண்டில் 76.7 இலட்சத்திற்கும், 1961ஆம் ஆண்டு ஜூன் மாத இறுதியில் ரூ. 134 இலட்சத்திற்கும் உயர்ந்தது. அதே கால இறுதியில், அது, நில அடைமான வங்கிகளின் கட னீட்டுப்பத்திரங்களின்பேரில் ரூ. 56.3 இலட்சத்திற்குக் கடன் வழங்குதலை ஒப்பளித்தும், இடைக்காலக் கடனுதவி வழியாக நில அடைமான வங்கிகளுக்கு ரூ. [illegible] இலட்சத்திற்கு ஒரு கடன் வரம்பை ஒப்பளித்துமிருந்தது. இதன் விளைவாக,

இந்திய ஸ்டேட் வங்கியால் பின்பற்றப்படும் கொள்கையானது, நிலவள வங்கிகளுக்குத் தங்கள் நீண்டகாலக் கடனளிப்புத் திட்டத்தைத் தடையில்லாமல் அமல்செய்வதற்கு ஊக்கமளித்திடும் வகையில் இருந்துவந்தது. தமிழ்நாட்டில், மாநில நிலவள வங்கிக்கு, அவ் வங்கியால் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியிடப்படுவதற்கு முன்பாக, அரசு உத்திரவாதத்தின்பேரில் அது இடைக்கால நிதி வழங்குகிறது. 1971–72ஆம் ஆண்டிறுதியில் ரொக்கக் கடன் நிலுவை ரூ. 26.77 இலட்சமாக இருந்தது. தமிழ்நாடு மாநில நிலவள வங்கியால் வெளியிடப்படும் சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்களையுங்கூட ஸ்டேட் வங்கி வாங்குகிறது. 1971–72ஆம் ஆண்டில், ஸ்டேட் வங்கி ரூ. 65.10 இலட்சத்திற்கு அப் பத்திரங்களை வாங்கிற்று.

**(ii) விற்பனைச் சங்கங்களுக்கும், பதனப்படுத்தும் சங்கங்களுக்கும் நிதியளிப்பு:** குடியானவர்களின் காத்திருக்கும் சக்தியை மேம்படுத்துவதற்காகவும், அவர்கள் விளைபொருள்களைச் சாதகமான விலைகளில் விற்பதற்காகவும், விளைபொருள்களின் ஈட்டின் பேரில் விற்பனைச் சங்கங்கள் முன்கடன்கள் அளிக்கப்படுகின்றன. தக்க சந்தர்ப்பங்களில், தங்கள் இயக்குநர்கள் உத்தரவாதத்தின் பேரில், அல்லது இயங்காச் சொத்தின் துணைப் பிணையத்தின் பேரில், அல்லது எல்லையிலுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கியின் இரண்டாவது கையொப்பத்தின்பேரில், சங்கங்களுக்கு ஸ்டேட் வங்கியால் சிறு தொகைகளுக்குச் சுத்தக் கடனுதவி யளிக்கப்படுகிறது. வழக்கமாக, அத்தகைய கடனுதவியின் வரம்பு, சங்கத்தால் கையாளப்பட்ட பொருள்கள் அளவைக் குறித்து நிருணயிக்கப்பட்டுச் சாதாரணமாக அது சங்கத்தின் சொந்த நிதிகளுக்கு மேற்பட்டிராது. ஈட்டுக்கடன்கள் துறையில், சங்கங்களுக்குச் சொந்தமான பொருள்களும், மற்றவர்களால் தங்கள் பொறுப்பில் ஈடு வைப்பதற்கு அதிகாரத்துடன் வைக்கப்பட்ட பொருள்களும் ஸ்டேட் வங்கிக்கு ஈடு வைக்கப்படலாம். தங்களால் அளிக்கப்பட்ட ஈட்டுக் கடன்களைக் குறித்த காலமுறை விவரப் பட்டியல்களைச் சங்கங்கள் அனுப்பவேண்டும். ஈட்டுக் கடன்களுக்குத் தொடர்பான நிபந்தனைகளில் முக்கியமானவை: ஸ்டேட் வங்கியின் முன் அனுமதியின்றி விற்பனைச் சங்கங்கள் தங்கள் ஆஸ்திகளின்மீது மேற்கொண்ட ஓர் ஈட்டை ஏற்படுத்தாமலிருப்பதற்கும், மற்றும் அவை சரியான கணக்குகளை வைப்பதற்கும், கிராமக் கடனிணைப்புத் திட்டத்தை அனுசரித்து விவசாயக்கடன் சங்கங்களால் அளிக்கப்பட்ட உற்பத்திக் கடன்களைத் தங்களாலளிக்கப்பட்ட கடன்களிலிருந்து அல்லது விளைபொருள்களின் விற்பனைத்தொகையிலிருந்து வசூல் செய்வதற்கும் கட்டியா

டுடையன. ஈட்டுக் கடன்களின்மீது, ஸ்டேட் வங்கி தன் வட்டி விகிதத்திற்கு மேல் 0.5 சதவிகிதத்திற்கு மேற்படாமலிருக்கின்ற விகிதங்களில் வட்டி விதிக்கின்றது. இதன் நோக்கம், கடன் வாங்குபவர்மீது வட்டிவிகிதம், வரட்டை, ஈட்டுறுதி, இதரப் பொதுச் செலவுகள் ஆகியவைகளின் நிலைப்பாடு, சாத்தியப்படு மளவுக்கு மிகக் குறைவாக வைக்கப்பட வேண்டுமென்பது. உதாரணமாக, 5 இலட்சத்திற்கு மேற்பட்ட கடன்கள் பொறுத்த மட்டில் தற்போதுள்ள கிடங்குக் கட்டணங்கள் கிடங்கு வேலை களைக் கவனிப்பதற்குப் போதுமானதாக இல்லாமல் கூடுதலான சிப்பந்திகள் வைக்கப்படவேண்டிய சந்தர்ப்பங்களைத் தவிர, தனிப்பட்ட கிடங்குக் கட்டணங்கள் எதுவும் வசூலிக்கப்படுகிற தில்லை.

**(iii) பதனப்படுத்தும் கூட்டுறவுச் சங்கங்கள்:** சர்க்கரை ஆலைகள், பருத்திக்கொட்டை நீக்குதல், பதனப்படுத்துதல் சங்கங்கள், சணல் மூட்டை கட்டும் சங்கங்கள் முதலியவை போன்ற கூட்டுறவுப் பதனப்படுத்தும் சங்கங்களுங்கூட ஸ்டேட் வங்கியிடமிருந்து கடனுதவி பெறலாம். கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் பொறுத்தமட்டில், உதவி முறைகள் பின்வருமாறு:

(அ) அரசு உத்தரவாதத்தின் பேரில், தொழில் நிதிக் கழகத்தால் சர்க்கரை யாலைகளுக்கு வழங்கப்பட்ட கடன்கள் பட்டுவாடாச் செய்வதற்கு முன்பு, சுத்தக் கடன்கள் வாயிலாக இடைக்காலக் கடனுதவி யளித்தல்.

(ஆ) சரக்கு இருப்புகள் ஈட்டின்பேரில் கடன்களளித்தல்.

(இ) கரும்பு விலைகளையும், கூலிகளையும் செலுத்துதல் போன்ற நடைமுறை மூலதனத்திற்காகக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் பொது ஆஸ்திகள் ஆதாரத்தின்பேரில் சிறு தொகை களுக்குக் கடன்கள் வழங்குதல்.

(ஈ) சில சந்தர்ப்பங்களில், சுத்தக் கடன் வசதியை வழங் குதல்.

(உ) கடன்கள் திருமுகங்களை (Letter of Credit) நிறுவு வதற்காகவும், அவசியப்படும்போது, ஆலைகளின் பொதுஆஸ்திகள் ஆதாரத்தின்பேரில் அல்லது மாநில அரசுகள் உத்தரவாதத்தின் பேரில் இயந்திரங்களையும், மூதற்கருவிப் பொறிகளையும், இறக்கு மதி செய்வதற்காகத் 'தள்ளிப்போட்ட செலுத்து உத்தர வாதங்களை' (Deferred Payment Guarantees) அளிப்பதற்காகவும் ஏற்பாடு செய்தல். இவ்வகையில், 1966ஆம் ஆண்டுச் ஜுன்

இறுதியில் நிலுவையிலிருந்த மொத்தத் தொகை ரூ. 10.4 கோடியாக இருந்தது. தமிழ்நாட்டில் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளுக்கு, நடைமுறை மூலதன நிதிகளின் ஒரு பகுதி, இந்திய ஸ்டேட் வங்கியால் வழங்கப்படுகிறது.

விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும், பதனப்படுத்தும் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் கடனளிக்கும் திட்டம், ஸ்டேட் வங்கியால் 1958ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. இக் கணக்கில், 1969ஆம் ஆண்டுச் சூன் இறுதியிலிருந்த நிலுவைகள், ரூ. 52.4 கோடியாக விருந்தன. கூட்டுறவு நிறுவனங்களுக்கு நடைமுறை மூலதனம் வழங்குவதற்காகக் குறிப்பாகத் தங்கள் விற்பனை நடவடிக்கைகளுக்கு நிதியுதவுவதற்காக உபயோகப்படுத்தப்படுவதற்கு ஒரு சில தலைமை வங்கிகளுக்குப் பெருந்தொகைகளை ஸ்டேட் வங்கி வழங்கியுள்ளது. இந்திய ஸ்டேட் வங்கியால், நேர்முகமாகவோ, அல்லது மத்தியக் கூட்டுறவு வங்கிகள், மாநிலக் கூட்டுறவு வங்கிகள் மூலமாகவோ அளிக்கப்படும் நிதியிலிருந்து விற்பனைச் சங்கங்களின் தேவைகள் பூர்த்தி செய்யப்படுகின்ற அளவுக்கு மத்திய, மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் நிதிகள், உற்பத்திக் கடன்களை வழங்குவதற்காக உபயோகப்படுத்தமுடியும். தஞ்சை மாவட்டத்தில், தஞ்சைக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு, மாநில அரசின் உத்தரவாதத்தின்பேரில் ரூ. 201 இலட்சமளவுக்கு ஸ்டேட் வங்கியிடமிருந்து ரொக்கக் கடனுதவி பெற்றுள்ளது. இதில், 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நிலுவையிலிருந்த தொகை ரூ. 102.66 இலட்சமாக இருந்தது.

(iv) **தானியச் சேமிப்புக் கிடங்குகளுக்கு உதவி**: தானியச் சேமிப்புக் கிடங்கு அமைப்பு, பண்டங்களை விஞ்ஞான ரீதியில் சேமித்துவைக்க வசதிகள் ஏற்பாடு செய்வதை நோக்கமாகக் கொண்டதால், அது விவசாய விற்பனையின் வளர்ச்சிக்கு அத்தியாவசியமான ஓர் உறுதுணையாக உள்ளது. 'விவசாய விளைபொருள்கள் (அபிவிருத்தியும், சேமித்து வைத்தலும்) கழகங்கள்' சட்டத்தின் கீழ் (Agricultural Produce (Development and Warehousing) Corporation Act-1956) அமைக்கப்பட்ட மையத் தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகத்தின்மூலமும், மாநிலத் தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகங்கள்மூலமும், நாட்டில் தானியச் சேமிப்புக் கிடங்கு அபிவிருத்திக்காக ஒரு முழுமைக்குமான திட்டம் எதிர்நோக்கப்பட்டது. ஆனால், தானியச் சேமிப்புக் கிடங்கு அமைப்பின் வெற்றியும், கூட்டுறவு விற்பனையின் வெற்றியும், நாட்டின் வங்கித் தொழில் நிறுவனங்களால் தானியச்சேமிப்புக் கிடங்குகளின் ரசீதுகளைக் (Ware-house Receipts)

கடன்களுக்கான ஆதாரமாக ஒரு பொதுஏற்பின்மீது பெருமளவு சார்ந்துள்ளது. இந்திய ஸ்டேட் வங்கி, மையத் தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகத்திற்கு, அதன் பங்கு மூலதனத்திற்கு 'விளைபொருள்கள் (அபிவிருத்தியும், தானியச் சேமிப்புக் கிடங்கு வசதியும்) கழகங்கள்' சட்டத்தில் (1956) சுட்டிக்காட்டப்பட்டிருக்கும் முழு அளவுக்கு நிதிவழங்கும் வாயிலாகவும், தன் அதிகாரிகளை, மையத் தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகத்தின் இயக்குநர் குழுவிலும், பல்வேறு மாநிலத் தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகங்களின் இயக்குநர் குழுவிலும் பணிபுரிவதற்கு நியமனம் செய்வதன்மூலமும், தன் முழு ஆதரவை யளித்துள்ளது. ஏனென்றால், அத்தகைய ஆதரவு, கிராமப் பகுதிகளில் பயிரிடுபவர்களுக்குக் கடனளிப்பதை வகை செய்வதால், தன்னுடைய உபயோகத்தின் பரப்பையும், சேவையின் பரப்பையும் அதிகரிக்கச் செய்கிறது. அது மையத் தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகத்துடன் கலந்தாலோசித்து, தன் அதிகாரிகளைத் தானியச் சேமிப்புக் கிடங்குகளின் ஆலோசனைக் குழுக்களில் பணிபுரிய அனுமதித்துள்ளது. தானியச் சேமிப்புக் கிடங்கு ரசீதுகளின் ஆதாரத்தின் பேரிலும், உரிமம் வழங்கப்பட்ட தானியச் சேமிப்புக் கிடங்குகளில் வைக்கப்பட்டிருக்கும் பொருள்களின்பேரிலும், முன்கடனளிப்பதற்கான தக்க விதிமுறைகளை இந்திய ஸ்டேட் வங்கி உருவாக்கி யுள்ளது. மையத் தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகத்தின் அல்லது மாநிலத் தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகங்களின் தானியச் சேமிப்புக் கிடங்குகள் அமைக்கப்படுகின்ற இடங்களில், சாத்தியப்படும் வகையில் அது புதிய கிளைகளை அமைப்பதற்கு முயன்று வந்திருக்கிறது. தானியச் சேமிப்புக் கிடங்கு ரசீது (Ware-house Receipts) ஆதாரத்தின் பேரில் ஸ்டேட் வங்கியிலிருந்து கடன் வாங்குவதற்குத் தற்போது சாதாரணமாகக் கடன் வாங்குபவர்கள், பொருள்களின் முதல் வைப்பாளராக அல்லது தானியச் சேமிப்புக் கிடங்கு ரசீதின் முதலாவது மாற்றப்பட்டவராகப் பொருள்களுக்கு முழு உரிமை பெற்றவராக இருக்க வேண்டும். மற்றும், ரசீதுகள் ஸ்டேட் வங்கிக்குப் புறங்குறிக்கப்பட்டிருக்கும்வரை, அவர் எவ்வழியிலும் பொருள்களைப் பெற்றுக் கொள்ளாமலிருக்கவும் வேண்டும். தானியச் சேமிப்புக் கிடங்கு ரசீதுகளின் பேரில் ஸ்டேட் வங்கியால் அளிக்கப்படும் முன்கடன்களிப்பானது, இவ் வகையான கடனளிப்பில் இதர வங்கிகளுக்கு ஒரு வழிகாட்டலைக் கொடுத்துள்ளது. ரசீதுகளின் பேரில் கொடுக்கப்படும் எல்லா முன்கடன்களின்மீதும், பொதுவாக, ஸ்டேட் வங்கி, இந்திய ஸ்டேட் வங்கியின் கடன் வட்டி விகிதத்திற்கு (State Bank of India Advance Rate) மேற்கொண்டு $1\frac{1}{2}$ சதவீதம் வட்டியை விதிக்கிறது. எனினும், கூட்டுறவு

வங்கிகள்/சங்கங்கள் பொறுத்தமட்டில், இந்த வட்டி விகிதம் ஒரு சிறிது குறைவாகவும், ஆனால் வங்கியின் கடன் வட்டிவிகிதத்திற்குக் குறையாமலும் உள்ளது. தானியச் சேமிப்புக் கிடங்கு ரசீதுகளின் ஆதாரத்தின் பேரில் சிறு தொகைக் கடன் வாங்குபவர்களுக்குச் சில சலுகைகளையுங்கூட அது அளித்துள்ளது. தானியச் சேமிப்புக் கிடங்குகளின் ரசீதுகளின் பேரில் கடன் வாங்க விரும்புபவர்களைப் பற்றிய ஒரு கருத்தைப் பெறுவதற்கான விதிமுறையையும் அது மிகவும் எளிதாக்கியுள்ளது. மற்றும், அது உலர்ந்த மஞ்சள், ஷெல்லாக் போன்ற இதரப் பொருள்களையும் சேர்த்துக் கொள்ளும் வகையில், தன் ஈட்டுக் கடன்களின் பரப்பை விரிவுபடுத்தியுள்ளது. தானியச் சேமிப்புக் கிடங்குத் திட்டத்தை வளர்க்கும் பொருட்டும், அதைப் பிரசித்திசெய்யும் பொருட்டும் தன் விதிமுறைகளையும், நிபந்தனைகளையும் சரிக் கட்டுவதற்கு ஸ்டேட் வங்கி முயன்று வந்துள்ளது. 1961ஆம் ஆண்டு மார்ச்சு மாதமிறுதியில், மைய தானியச் சேமிப்புக்கிடங்குக் கழகம், நாடெங்கும் 40தானியச் சேமிப்புக்கிடங்குகளையும், மாநில தானியச்சேமிப்புக் கிடங்குகள், 266 தானியச்சேமிப்புக்கிடங்குகளையும், முறையே 77,020டன்கள் மொத்தச்சேமிப்புக் கொள்ளளவுடனும் 2,77,877 டன்கள் மொத்தச் சேமிப்புக் கொள்ளளவுடனும் பெற்றிருந்தன. 1960–61ஆம் ஆண்டின்போது, 64 வெவ்வேறு விதமான பண்டங்கள் இந்தத் தானியச் சேமிப்புக் கிடங்குகளில் காணப்பட்டன. இதே காலவரையின்போது, 40 தானியச் சேமிப்புக் கிடங்குகளில் 35 சேமிப்புக்கிடங்குகளின் மொத்தக் கொள்ளளவு 38,847 டன்களாக இருந்தது.

இவ்வாறாக, இந்திய ஸ்டேட் வங்கி, தானியச் சேமிப்புக் கிடங்குத் திட்ட வளர்ச்சியுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, தானியச் சேமிப்புக் கிடங்குகளில் வைக்கப்பட்டிருக்கும் விவசாய விளைபொருள்களைத் தழுவும் தானியச் சேமிப்புக் கிடங்கு ரசீதுகளின் பேரில் முன்கட னளிப்பதில், ஒரு தலைமையை ஏற்றுள்ளது. இந்திய ஸ்டேட் வங்கி, 1961ஆம் ஆண்டு மே இறுதியில், தானியச் சேமிப்புக் கிடங்குகள் ரசீதுகளின் பேரில் 3,973 முன்கடன்களை யளித்துள்ளது. இதன் தொடர்பான கடன் வரம்புகளும், கடன் நிலுவைகளும், முறையே ரூ.4.5 கோடியாகவும், ரூ.2.4 கோடியாகவும் இருந்தன. தானியச் சேமிப்புக் கிடங்குகள், தனிநபர் வர்த்தகர்களுக்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் வசதிகளை வழங்குவதால், அவ் விருதரத்தினரும் வங்கியாலளிக்கப்பட்ட வசதிகளைப் பயன் படுத்தியுள்ளனர். தானியச் சேமிப்புக்கிடங்கு வசதிகளின்பேரில்,

வாணிக வங்கிகளாலும், கூட்டுறவு வங்கிகளாலும் அளிக்கப் படும் முன்பணங்களுக்கான விதிமுறைகளை உருவாக்குவதற்குங் கூட் வங்கி முன்முயற்சி எடுத்துள்ளது.

(v) **தொழிற் கூட்டுறவுச் சங்கங்களுக்கு உதவி :-** கச்சாப்பொருள்கள், அல்லது முடிவு செய்யப்பட்ட உற்பத்திப் பொருள்கள் அல்லது வரவுடைய உண்டியல்கள் ஆகியவை களின் ஆதாரத்தின் பேரில், ஸ்டேட் வங்கி தொழிற் கூட்டுற வுச் சங்கங்களுக்குக் கடன்க ளளிக்கின்றது. அரசு உத்தரவாதத் தின் பேரில், அல்லது தலைமை வங்கிகள், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் உத்தரவாதத்தின் பேரில் அந்தக் கடன்கள் அளிக்கப் படுகின்றன. இயந்திரங்களையும், இதர முதல் ஆஸ்திகளையும், வாங்குவதற்காக மத்தியக் காலக் கடன்கள் வழங்கப்படுகின்றன. 1969ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில், இந்தக் கணக்கில் நிலுவையிலிருந்த தொகை ரூ.72 இலட்சமாக இருந்தது.

(vi) **நுகர்வோர் சங்கங்களுக்கு உதவி :** பொருள்கள் மற்றும் ஏட்டுக் கடன்கள் ஈட்டின் பேரிலும், அடைமானத் தின் பேரிலும், நுகர்வோர் சங்கங்களுக்கு வங்கியால் முன் கடன்க ளளிக்கப்படுகின்றன. மாநில அரசுகளின் உத்தரவாதத் தின் பேரிலும், அல்லது தலைமை வங்கிகள், மத்தியக் கூட் டுறவு வங்கிகள் உத்தரவாதத்தின் பேரிலும், சுத்தக் கடன்க ளளிக்கப்படுகின்றன. 1969ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நுகர்வோர் சங்கங்களுக்கு ஸ்டேட் வங்கியால் அளிக்கப்பட்ட முன்கடன்கள் ரூ. 3 கோடிகளாக இருந்தன.

## 3. பணம் அனுப்பிவைக்கும் வசதிகளை வழங்குதல் (Provision of Remittance Facilities)

எந்த நாட்டிலும், அதிகமாக இந்தியாவில், வாணிகத் துறையிலும், கூட்டுறவுத் துறையிலும், பலம் பொருந்திய வங்கித் தொழிலின் வளர்ச்சிக்கான ஒரு முக்கிய காரணியாக இருப்பது, போதுமானதும் மலிவானதுமான பணம் அனுப்பி வைக்கும் வசதிகள் கிடைப்பதானது. இந்திய தேசிய வங்கி, முதலாவதாக, பெருவாரியான பணம் அனுப்பும் வசதிகளை வழங்குவதன் மூலமும், இரண்டாவதாக, சிறிய பட்டினங் களிலும், சிறிது நகரமாயுள்ள பகுதிகளிலும், அப் பகுதிகளில் கூட்டுறவு வங்கிகளுக்கும், இதர வங்கிகளுக்கும் பணம் அனுப்பி வைக்கும் வசதிகளைக் கிடைக்கச் செய்யும் நோக்கத்துடன் தன் கிளைகளைத் திறப்பதன் மூலமும், நாட்டில் வங்கித் தொழில்

வளர்ச்சிக்குப் பேருதவி புரிகின்றது. சிறப்பாகக் கிராமப் பகுதிகளில் பணம் அனுப்பிவைக்கும் வசதிகளை நீடித்து வழங்கு வதற்கு, இந்திய ஸ்டேட் வங்கி, ரிசர்வ் வங்கியின் பிரதிநிதி யாக (ரிசர்வ் வங்கியின் பணம் அனுப்பிவைக்கும் வசதி களின் திட்டத்தின்கீழ்) மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குப் பணமனுப்பும் வசதிகளைத் தளர்த்தியுள்ளது. இப்போது, முன்பிருந்தபடி வார மொருமுறை மட்டும் என்பதற்குப் பதிலாக, வாரம் மும்முறை இலவசமான பணமனுப்பும் வசதிகளை அனுமதிக்கின்றது. மாநிலக் கூட்டுறவு வங்கிகளும், அவற்றுடன் இணைக்கப்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளும், தனிப்பட்ட கூட்டுறவு வங்கிகளும், இத் திட்டத்தின்கீழ் ஒவ் வொரு சமயத்திலும் ரூ.5000— ஒரு தொகையை அல்லது அதன் பெருக்கத்தை ஒரு வாரத்திற்கு மும்முறை தேசிய வங்கியின் ஓர் அலுவலக மிருக்கும் எந்த இடத்திலிருந்தும் ரிசர்வ் வங்கியுடன் தான் வைத்திருக்கும் பிரதானக் கணக்குக்கு அனுப்பி வைக்கலாம். (ii) மாநிலக் கூட்டுறவு வங்கிகளாலும் அவற்றுடன் இணைக்கப்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும், தேசிய வங்கியின் அலுவலகங்களுடன் வைக்கப்பட்டிருக்கும் தங்கள் தலைமை அலுவலகக் கணக்குகளுக்குப் பணம் அனுப்பு தலையும் ஏற்றுக்கொள்ளும் பொருட்டு, இந்த வசதிகள் மேலும் நீடிக்கப்பட்டுள்ளன. (iii) மத்தியக் கூட்டுறவு நிதியமைப்புகள் தங்கள் தலைமை வங்கிகள் உட்பட நாட்டுப் புறங்களிலுள்ள குறிப்பாகக் கிராமப் பகுதிகளிலுள்ள, தங்கள் கிளைகளுக்கு நிதிகளை யனுப்புவதற்காக வாரமிருமுறை இலவசமான பண மனுப்பும் வசதிக ளளிக்கப்படுகின்றன. இவ்வாறு, தலைமை இடத்திலிருந்து வெளியூர்களுக்கு நிதி அனுப்புவதற்குக் கூட் டுறவு வங்கிகள் உதவப்படுகின்றன.

கிளைகள் விரிவாக்கத் திட்டம், முன்னேறுகின்ற வகையில் அமல் செய்யப்படுகின்ற காரணமாக, தேசிய வங்கி, 1963ஆம் ஆண்டு டிசம்பர் இறுதியில், 1,076 அலுவலகங்களையும், 568 துணை அலுவலகங்களையும் நாடெங்கும் பெற்றிருந்தது. நிலையான ஒரு பெருகிவரும் அளவில் மலிவான பணமனுப்பும் வசதிகளை வழங்குவதன் மூலம், கூட்டுறவு வங்கிகளுக்குப் பயனுறுதி யான உதவி புரிவதற்குரிய ஒரு நிலைமையில் வங்கி உள்ளது. ரிசர்வ் வங்கி பணம் அனுப்புதல் வசதிகள் திட்டத்தின்கீழ், கூட்டுறவு நிறுவனங்களின் சார்பில் வங்கியால் வழங்கப்பட்ட மொத்தப் பணமனுப்புதல் வசதிகள், 1959–60ஆம் ஆண்டு, ரூ.94 கோடிக்குத் தொகைப்பட்டன. தன் சொந்தத் திட்டத்தின்

கீழ் அதேயாண்டில், ஏறக்குறைய ரூ.130 கோடிக்கு மொத்தத் தொகை யிருந்தது.

**4. இந்திய ஸ்டேட் வங்கியின் கொள்கைகளையும், கூட்டுறவுக் கடனமைப்பின் கொள்கைகளையும் ஒருமைப்படுத்துதல்**
(Co-ordination of the policies of the S.B.I. and Co-operative Credit Structure)

ஸ்டேட் வங்கியின் உதவியானது தேவையுள்ள கூட்டுறவு விற்பனைச் சங்கங்களுக்கும், கூட்டுறவு பதனப்படுத்தும் சங்கங்களுக்கும் சென்றடையுங்கால் அது கூட்டுறவு இயக்கத்தின் உள்ளிட்ட கட்டுப்பாட்டிற்கும், மெல்லிய விசுவாசப் பந்தங்களுக்கும் எந்தவிதத்திலும் தீங்கு செய்யாம லிருக்கின்றதை நிச்சயப்படுத்த முடியவேண்டும் வகையில் ஸ்டேட் வங்கி தன் கொள்கைகளை ஒழுங்குமுறைப்படுத்த எதிர்பார்க்கப்படுகிறது. இந்தத் திசையில் அதன் பணி, அத்தியாவசியமாக ஒரு துணைத் தன்மையைக் கொண்டது. கூட்டுறவுத் துறையில் முன்னணியி லிருக்கும் மாநிலங்களிலும், கூட்டுறவு விற்பனை/பதனப்படுத்தும் துறைகளில் தேசிய வங்கியால் அளிக்கப்பட்ட நேர்முக முன்கடன்கள் பெருமளவு வரையறுக்கப்படுத்தப் பட்டுள்ளன. கூட்டுறவுத் துறையில் பின்தங்கியிருக்கும் மாநிலங்களில் அக் கடன்கள் முக்கியமானவையாக மட்டுமுள்ளன. கூட்டுறவு விற்பனைச் சங்கங்களுக்கு நிதி வழங்கும் விஷயத்தில், தேசிய வங்கியின் நோக்கமும், அணுகுமுறையும் கூட்டுறவுச் சங்கங்களுக்கு முற்றிலும் பரிவானதும், உதவிமிக்கதுமாக இருந்துவந்துள்ளது. கூட்டுறவு இயக்கத்தின் விற்பனைத்துறை, மேலும் வளர்ச்சியடைகின்றபோது தேசிய வங்கியால் வழங்கப்படும் வசதிகள் கூட்டுறவுச் சங்கங்களால் மேலும் அதிகமான அளவில் பயன்படுத்தப்படுமென்று எதிர்பார்க்கப்படுகின்றது. மத்தியக் கூட்டுறவு நிதிவழங்கும் அமைப்புகளுங்கூட, தேசிய வங்கியிடமிருந்து இன்னும் அதிகமான நிதியைக் கோரலாம். எனவே, கூட்டுறவு விற்பனை/பதனப்படுத்தும் நிதியுதவுவதில் ஸ்டேட் வங்கியின் பணி, இதரக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதியுதவி யளிப்பதன்றியும், வரப்போகும் ஆண்டுகளில் மேலும் முக்கியமானதாக இருக்கக்கூடும்.

# 15. கூட்டுறவு வளர்ச்சியில் நாட்டுடைமை ஆக்கப்பட்ட வாணிக வங்கிகளின் பணி

## (Role of Nationalised Commercial Banks in Co-operative Development)

### 1. வாணிக வங்கிகளை நாட்டுடைமையாக்கல்

1969ஆம் ஆண்டுச் சூலை 19ஆம் நாளன்று, முதலில் அறிவிக்கப்பட்ட, நாட்டின் 14 பெரிய வாணிக வங்கிகளை நாட்டுடைமையாக்கல், 1969ஆம் ஆண்டு ஆகச்டு 9ஆம் நாளன்று சட்டமாயிற்று. விடுதலைக்குப் பின்னர், நாம் நம்முன் ஏற்படுத்தியிருந்த பொருளாதார, சமுதாய இலட்சியத்தை அடைவதற்கு எடுக்கப்பட்ட மிக முக்கியமான நடவடிக்கைகளுள் இதுவும் ஒன்றாகும். ரூ.50 கோடிக்கு மதிகப்பட்ட வைப்புகளையுடைய எல்லா வாணிக வங்கிகளையும் ஏற்றுக் கொள்வதற்கான முடிவு, சாமான்ய மக்களிடையே ஒரு புதிய ஆர்வத்தைத் தோற்றுவித்ததுடன், வறுமையை ஒழிப்பதற்கும், நாட்டின் பல்வேறு பாகத்திலும் சமுதாயத்தின் பல்வேறு பிரிவுகளிலும் இருந்துவந்த பொருளாதார நிலைமையில் சமமற்ற இருப்பு நிலையைத் திருத்துவதற்கும், எடுக்கப்பட்ட மற்றொரு முக்கிய நடவடிக்கையாகும்.

### 2. விவசாயக் கடன்துறையில் வாணிக வங்கிகளின் இடம்

விவசாயக் கடன்துறையில் வாணிக வங்கிகளின் பிரவேசம், பல ஆண்டுகளுக்கு முன்னரே வரவேற்கப்பட்டிருந்தது. 1945ஆம் ஆண்டில், விவசாய நிதிபற்றிய உதவிக்குழு 'வாணிக வங்கிகள் கிராமக்கடன் அமைப்பில் ஒரு முக்கியத் தொண்டைப் புரிவதற்கு வகைசெய்ய, கூட்டுறவுக் கடன்முறையின் வளர்ச்சியை எந்த வழியிலும் தடை செய்யாத எல்லா நியாயமான வசதிகளும் வாணிக வங்கிகளுக்கு வழங்கப்பட வேண்டும்' என்று உரைத்தது. 1949ஆம் ஆண்டில், கிராம வங்கித் தொழில் விசாரணை ஆணைக்குழுவும் (Rural Banking Enquiry Commission) கூட, 'சிறு பட்டினங்களுக்கும் தங்கள் கிளைகளை விரிவாக்கம் செய்து வாணிக வங்கிகள் நாளடைவில் கிராமப்பகுதிகளுக்கு-

விளைபொருள்களின்மீது முன்கடன்களையும், விலை அதிமாகவுள்ள தள்வாடங்களை வாங்குவதற்காகக் கடன்களையும், தங்கம் ஆதாரத்தின் பேரில் கடன்களையும், கூட்டுறவு வங்கிகளுடன் சமானமாக வழங்குவதில் ஓர் அதிகமான பங்கை ஏன் எடுக்கக் கூடாது என்பதற்குக் காரணம் இல்லையென்று' கூறி இப் பிரச்சினையை எழுப்பியிருந்தனர்.

1967ஆம் ஆண்டில், வாணிக வங்கிகளின்மீது சமுதாயக் கட்டுப்பாட்டு முறை (Social Control) ஆரம்பிக்கப்பட்ட பிறகும், அதன்பின்னர், 1969ஆம் ஆண்டில் முன்னணியிலிருந்த 14 வாணிக வங்கிகளின் நாட்டுடைமையாக்கலுக்குப் பிறகும், வாணிக வங்கிகள் தங்கள் கடன் கொள்கைகளை மறுதிருப்பம் செய்து, விவசாயம், சிறு அளவுத் தொழில்கள், ஏற்றுமதி ஆகிய முன்னுரிமைத் துறைகளுக்கு, ஐந்தாண்டுத் திட்டங்களில் நிர்ணயிக்கப்பட்டபடி நாட்டின் பொருளாதாரக் கொள்கைகளின் குறிக்கோள்களை நிறைவேற்றும் பொருட்டு, நிதியளிப்பதற்கு ஒரு தீர்மானமான முயற்சியை எடுக்கவேண்டுமென்று எதிர்பார்க்கப்பட்டன. மக்களின் உணவுத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக, உணவு உற்பத்திப் பெருக்கத்திற்காகவும், தொழில் துறைக்குக் கச்சாப் பொருள்களை வழங்குவதற்காகவுமான தேவையின் சந்தர்ப்பத்திலும், விவசாயக் கடன் பிரச்சினைகளின் பருமத்தை நோக்கியும், விவசாயக் கடனின் கோரிக்கைகளைப் பூர்த்தி செய்வதற்குத் துணையானதும், நிலைமாறும் வகையானதுமான ஏற்பாடுகளின் தேவையும், அதே சமயத்தில் கூட்டுறவுக் கடன்முறையைச் சீரமைத்துப் பலப்படுத்துவதன் அவசியமும், 1969ஆம் ஆண்டு அனைத்திந்தியக் கிராமக்கடன் மறு ஆய்வுக் குழுவினரால் வலியுறுத்தப்பட்டது. இந்த அணுகுமுறை 'பல்முகவமைப்பு அணுகுமுறை' (Multi Agency Approach) என்று வழங்கப்பட்டு வருகிறது. விவசாயம், தங்கள் முதலீட்டுக்கான ஒரு முன்னுரிமைத் துறையாக, நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளால் இப்பொழுது கருதப்படுகிறது. 'விவசாயத்திற்கு நிதியளிப்பதற்கான வாய்ப்பின் பரப்பு மிகப் பெரியதாகவும், குறைவற்றதாகவும் இருப்பதால், விவசாயத்திற்கு நிதியளிக்கும் பல்வேறு அமைப்புகளிடையே எவ்விதப் போட்டிப் பயமிருப்பதற்கு அவசியமில்லை. உண்மையாகவே, அவைகளின் முறையான பணிகள் ஒன்றுக்கொன்று நிறைவு செய்யும் தன்மையாக உள்ளதுடன் விவசாயிகளுக்கும் நிதியளிக்கும் நிறுவனங்களுக்கும் மிக்க உதவியாகவு மிருக்கும்' என்று தென்னிந்தியாவிலுள்ள நாட்டுடைமையாக்கப்பட்ட ஒரு

வங்கியின் தலைவர் கூறியுள்ளார். நாட்டுடைமையாக்கப்பட்ட 14 வங்கிகளின் விரைவான கிளைகள் விரிவாக்கமானது (1972 ஆம் ஆண்டு டிசம்பரில் இவை ஏறக்குறைய 2,230 கிளை களைத் திறந்திருந்தன) இவ் வங்கிகளைக் கிராமங்களுக்கு மிக அண்மையில் கொண்டுவந்து, ஒரு பரந்த அளவில் குடியான வர்களுக்குக் கடனளிப்பை வசதிப்படுத்தும். தங்கள் ஏராளமான நிதியாதாரங்களுடனும் பயிற்சி பெற்ற நல்ல சம்பளம் வாங் கும் சிப்பந்திகளுடனும், வங்கித் தொழில் நுட்ப அறிவு ஆற்றலுடனும் இவ் வங்கிகள், வரப்போகும் ஆண்டுகளில், விவசாயக் கடனளிப்பில் ஒரு முக்கியமான பணியைப் புரியும் என்று எதிர்பார்க்கப்படுகின்றன.

### 3. வாணிக வங்கிகளால் விவசாயக் கடனளிப்பு (Financing of Agriculture by Commercial Banks)

வாணிக வங்கிகளால் அளிக்கப்படும் விவசாயத்திற் கான கடன் குடியானவர்களுக்கு நேர்முகக் கடனளிப்பாகவோ அல்லது கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் மறைமுகக் கடனளிப் பாகவோ இருக்கலாம்.

**(அ) நேர்முகக் கடனளிப்பு** (Direct Financing): விவசாயி களுக் குதவும் பொருட்டு, நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள் பல்வேறு திட்டங்களைத் தொடங்கியுள்ளன.

**(i) கிராமங்கள் ஏற்புத் திட்டம்** (Village Adoption Scheme): இத் திட்டத்தின் மூலம், விவசாயிகளுக்காக நேர் முக நிதி வழங்கப்படுகிறது. கிராமங்களைத் தெரிந்தெடுத்தல், வளர்ச்சியின் வெற்றி வாய்ப்புகளைக் குறித்த ஒரு விசாரணைக் குப் பிறகு செய்யப்படுகிறது. வழிசெலுத்தும் வங்கிகளும் (Lead Banks) மாநில அரசின் விவசாயத் துறையும், இந்தக் கிராமங்களைத் தெரிந்தெடுப்பதற்கு உதவுகின்றன. இத் திட்டத்தின் அடிப்படைக் கொள்கையானது, இப் பகுதியி லுள்ள வறுமையான எல்லாக் குடியானவர்களின் பருவகாலத் தேவைகளையும் பூர்த்தி செய்வதற்காகவும், மூலதன முதலீட் டுத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவுமான செலவு களுட்படச் சாத்தியப்படும் வகையில் முழு அளவுக்கு, முன் கட னளிக்கப்படுகிறது. குடியானவர் — கடன் வாங்குபவர் கோஷ்டியின் உத்தரவாதத்தின் பேரிலும், கடன் வாங்கு பவரால் கொடுக்கப்படும் பயிர் மற்றும் இதர ஆதாரங் களின் அடைமானத்தின் பேரிலும், தனிநபர் சிறுகுடியான வர்களுக்குக் கடன்கள் வழங்கப்படுகின்றன.

(ii) **சிறு குடியானவர்களுக்கு உதவி** (Assistance to Small Formers): சிறுகுடியானவர்கள் வளர்ச்சியமைப்பு (Small Farmers Development Agency) என்று வழங்கப்படும் ஒரு தனித் திட்டம், நாடெங்குமுள்ள 46 தெரிந்தெடுக்கப்பட்ட மாவட்டங்களில் தொடங்கப்பட்டுள்ளது. வாணிக வங்கிகள் கூட, இந்த அமைப்புகளுக்குச் சேவை புரிகின்றன. அபாயத்தைத் தவிர்க்கும் பொருட்டு, மாநில வங்கிகள் ஒவ்வொரு கடன் வாங்குபவரும் மற்றவர்களுக்கு ஒரு ஜாமீனாக இருக்கின்ற ஒரு குழுமக் கடன்களைப் (Group loans) பிரபல்யப்படுத்தியுள்ளன.

(iii) **இந்திய ஸ்டேட் வங்கித் திட்டம்** (State Bank of India Scheme): வழியுண்டாக்கும் ஒரு வங்கியாகிய இந்திய ஸ்டேட் வங்கி நாடெங்கும் தனி விவசாய வளர்ச்சிக் கிளைகளைத் (Special Agricultural Development Branches) திறந்து கொண்டிருக்கிறது. அத்தகைய கிளைகளின் திறப்பை ரிசர்வ் வங்கி அங்கீகரித்திருந்தது. இக் கிளைகளில் ஒவ்வொன்றும் 100 கிராமங்கள்வரை உள்ளடக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. தழுவப்பட்ட எல்லையானது முதன்மையாகச் சிறு குடியானவர்கள், இடைநிலைக் குடியானவர்கள், விவசாயத் தொழிலாளர்கள், மற்றும், பலம் குன்றிய இதரப் பகுதியினர்கள் ஆகியவர்களுக்கான செயல்திட்டங்கள் அமலிலிருக்கும் இடங்களாக உள்ளன. குடியானவர்களுக்கு நீர் வழங்குவதும், புன்செய் நிலங்களைப் பாசன நிலங்களாக மாற்றுவதும், ஒரு பயிர் நிலங்களைப் பலபயிர் நிலங்களாக மாற்றுவதும் இத் திட்டத்தின் முக்கிய நோக்கமாகும். மேம்படுத்தப்பட்ட முறைகளில் குடியானவர்களுக்கு உதவியளிக்க ஒரு தொழில் நுட்பக் களம் (Cell) ஆரம்பிக்கப்படும். இத் தொழில்நுட்பக் களத்தில் மண்வள ஆய்வுக்கான ஆய்வகமும் நீர்வள ஆய்வுக்கான ஆய்வகமும் இருக்கும். கிடங்கு வசதியும், குளிர் பதனச் சேமிப்பு வசதியும், போக்குவரத்து வசதியுங்கூட வழங்கப்படும்.

நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளால் குடியானவர்களுக்கு வழங்கப்படும் நேர்முக நிதியுதவி ஆண்டுதோறும் வளர்ந்து வந்துள்ளது. 1969ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் கடன்நிலுவைகள் ரூ.40.21 கோடியாக இருந்தன. இது அவ் வங்கிகளால் அளிக்கப்பட்ட மொத்தக் கடன் தொகையில் 1.4 சதவிகிதமாக அமைந்திருந்தது. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் இக் கடன் நிலுவைகள் ரூ. 231.5 கோடியாக

மொத்தக் கடன் தொகையில் 5 சதவிகிதமாக அமைந்திருந்தது.

**(ஆ) கூட்டுறவுக் கடன் சங்கங்களின் மூலம் வாணிக வங்கிகளால் மறைமுக நிதியுதவி** (Indirect Financing)

நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள் குடியானவர்களுக்குக் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் புரிகின்ற உதவி வகையினைக் குறித்து நாம் மேலும் அதிகமான நேர்முக அக்கறை கொண்டுள்ளோம். சில காரணங்களுக்காக மாவட்டத்திலுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கி, பிரதம விவசாயக் கடன் சங்கங்களுக்கு அவசியமான நிதியாதரவு அளிக்க முடியாமலுள்ள பகுதிகளில், பிரதம விவசாயக் கடன் சங்கங்களுக்கு அவற்றின் உறுப்பினர்கள் சார்பில், வாணிக வங்கிகள் நிதியுதவி புரியலாம் என்று கருதப்பட்டது. இத் திட்டம் பேராசிரியர் டி.ஆர். காட்கில் (**Prof. D. R. Gadgil**) அவர்களைத் தலைவராகக் கொண்ட தேசியக் கடன் அவையின் ஓர் ஆய்வுக் குழுவால், 1969ஆம் ஆண்டில் ஆலோசிக்கப்பட்டும், அங்கீகரிக்கப்பட்டும், ரிசர்வ் வங்கியின் ஆளுநரால் அமைக்கப்பட்ட நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளின் நடைமுறைக் குழுவாலுங்கூட 1969ஆம் ஆண்டு அங்கீகரிக்கப்பட்டது. இத் திட்டத்தின் பரந்த குறிக்கோள்களாவன: (i) மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மிகவும் பலவீனமாகவுள்ள பகுதிகளில் விவசாயத்தில் உற்பத்திக் கடன், மற்றும் மத்தியக் கால முதலீட்டுக் கடன் குறைவுகளைப் பூர்த்தி செய்தல். (ii) கூட்டுறவுச் சங்கங்கள், கிராம மட்டத்தில் செயற்படுகின்ற திறமையான வாணிக நிறுவனங்களாகும் பொருட்டு, அவைகளின் செயற்பாட்டிற்குப் புத்துயிரளித்தல். (iii) சில கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதி உதவ முடியாமல் தாற்காலிகமாகக் கடன் வழங்குவதை நிறுத்திவிட்ட பலவீனமான மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்குப் புனர்வாழ்வுக்கான ஓர் உறுதியான செயல் திட்டத்தைத் தீட்டி அதை உடனே அமல்செய்தல்.

**திட்டம் செயற்படுகின்ற பகுதிகள் :** சம்பந்தப்பட்ட மாநில அரசுகளுடனும், மத்தியக் கூட்டுறவு வங்கியுடனும், வாணிக வங்கிகளுடனும், வாதித்த பின்னர் ஆந்திரப் பிரதேசம், மைசூர், மத்தியப் பிரதேசம், உத்தரப்பிரதேசம், அரியானா ஆகிய ஐந்து மாநிலங்களில், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் நிதி ரீதியாகவும் நிர்வாக ரீதியாகவும் பலவீனமாக விருந்த இடங்களில், சில மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் அலுவல்

எல்லையைத் தழுவும் 49 மாவட்டங்களில் இத் திட்டத்தைத் தொடங்கச் சம்மதிக்கப்பட்டது. இத் திட்டம் இந்த மாநிலங்களில் 1970—71ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. அது ஒரிசா மாநிலத்தில் 1971 ஆம் ஆண்டில் இரண்டு மாவட்டங்களுக்கு நீடிக்கப்பட்டது. இத் திட்டத்தைப் பீகார் மாநிலத்தில் எஸ்.எஃப்.டி.ஏ.-எம்.எஃப்.ஏ.எல். (SFDA / MFAL) பகுதிகளுக்கு விஸ்தரிக்க 1972ஆம் ஆண்டு ஆகஸ்டில் முடிவு செய்யப்பட்டது. 1972ஆம் ஆண்டிலிருந்து மேற்கு வங்கத்திலும் மராட்டியத்திலும் ஒரு சில மாவட்டங்களுக்குத் திட்டம் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றது. இத் திட்டத்தை ஜம்மு, காஷ்மீர் மாநிலங்களில் தொடங்குவதற்கு ஏற்பாடுகள்கூடச் செய்யப்பட்டன.

### திட்டத்தின் செயற்பாட்டுக் கூறுகள்

(i) தெரிந்தெடுக்கப்பட்ட மாவட்டங்களில், மாநில வங்கிகளின் எல்லாக் கிளைகளும், ஒவ்வொன்றும், முடிந்தவரை ஒவ்வொரு கிளையிலிருந்து 10-லிருந்து 15 மைல்கள் பரப்புக்குள் உள்ள 10 கூட்டுறவுச் சங்கங்களை, அவற்றின் செயற்பாட்டினைச் சரிவர மேற்பார்வை செய்வதற்கு அநுகூலமாக இருக்கும் வகையில் ஏற்றுக்கொள்ள வேண்டும். சங்கங்களைத் தெரிந்தெடுத்தல், மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும், சம்பந்தப்பட்ட வாணிக வங்கிகளுக்கும், மாவட்டக் கூட்டுறவுத் துறை அதிகாரிகளுக்கு மிடையே கலந்தாலோசித்தல் மூலம் செய்யப்படவேண்டும்.

(ii) ஏற்றுக்கொள்ளப்பட்ட சங்கங்களைப் பொறுத்த மட்டில் வாணிக வங்கிகள், மத்தியக் கூட்டுறவு வங்கிக்கு அச் சங்கங்கள் கொடுக்க வேண்டிய நடப்புக் கடன்களைக் குறித்த பொறுப்புகளைத் தீர்த்து வைக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றன. தவணை கடந்த கடன்களைப் பற்றிய பொறுப்புகளைத் தீர்த்துவைத்தல், ஒவ்வொரு கடன் விஷயத்தின் தன்மையின் அடிப்படையில் செய்யப்பட வேண்டும்.

(iii) சங்கங்களுக்குக் குறுகியகால விவசாயக் காரியங்களுக்காக நிதியுதவுவதற்காக, வாணிக வங்கிகள் பயிர்க்கடன் முறையைப் பின்பற்ற வேண்டும். எனவே, அவை, பயிர்க்கடன் முறையின்கீழ் அவசியப்படும்வண்ணம், பயிர் ரீதியான நிதியுதவி முறைகளைத் தழுவும். மேலும், அவை உரவகைகள் முதலியன போன்ற விவசாயத்தில் ஈடுபடுத்தப்படும் பொருள்களை வாங்குவதற்காகவுங்கூடக் கடன்கள் அளிக்கின்றன.

(iv) வாணிக வங்கிகள் பயிரிடுபவர்களின் எல்லாத் தேவைகளையும் பூர்த்தி செய்ய வேண்டுமென்று எதிர்பார்க் கப்படுகின்றன.

(v) மாநில வங்கிகள் 7½ சத வட்டி விகிதத்தில் கடனளிக்க வேண்டும்.

(vi) குறுகிய காலக் கடனைத் தவிர, வாணிக வங்கிகள், கூட்டுறவுக் கடனமைப்பால் 3-லிருந்து 5 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய மத்தியக் காலக் கடன்க ளளிக்கப்படும் எல்லாக் காரியங்களுக்காகவும், தனி நபர்களுக்குச் சங்கங்கள் மூலம் கடனளிப்பை மேற்கொள்ள வேண்டும். நீண்ட காலக் கடன்கள் நேர்முகமாக அளிக்கப்படலாம்.

**அடைந்த முன்னேற்றம்**

1972ஆம் ஆண்டு டிசம்பர் இறுதியில், 25 வாணிக வங்கிகள் 6 மாநிலங்களில் தங்கள் 318 கிளைகள் மூலம் திட்டத்தில் பங்கு கொண்டன. அவற்றிற்கு ஒதுக்கப்பட்ட 2,253 சங்கங்களுள் 1,509 சங்கங்கள் அதாவது, சுமார் 2/3 மட்டும் ரூ.9.17 கோடி அளவிற்கு நிதியளிக்கப் பட்டன. (ரூ.8.72 கோடி குறுகிய காலக் கடன்களும், ரூ.0.45 கோடி மத்தியக் காலக் கடன்களும்.) நிலுவையிலிருந்த கடன்கள் ரூ. 12.14 கோடிக் கிருந்தன. கடன் வாங்கிய உறுப்பினர்கள் மொத்த உறுப்பினர் எண்ணிக்கையில் 46 சதவிகிதமாக இருந்தனர். ஒவ்வொரு கிளையின் சங்கங்களின் சராசரி எண்ணிக்கையும், ஒவ்வொரு சங்கத்தில் வழங்கப் பட்ட சராசரிக் கடன் தொகையும், முறையே 7 ஆகவும், 0.61 இலட்சமாகவு மிருந்தன. வாணிக வங்கிகளால் ஏற்றுக் கொள்ளப்பட்ட பிறகு, சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 25 சதவிகிதத்திற்கு அதிகரித்தன. விவசாயத்திற்காகக் குறுகிய காலக் கடன்களும் மத்தியக் காலக் கடன்களும் தவிர, வாணிக வங்கிகள் சில சங்கங்களுக்கு இரசாயன உரங்கள், அத்தியா வசிய நுகர்வோர் பொருள்கள் முதலியவற்றை விநியோகிப்ப தற்கான கடனுதவியைக் கூட ஒப்பளித்தன.

வாணிக வங்கிகளுக்கு ஒதுக்கப்பட்ட பிரதம கடன் சங்கங்களால் தழுவப்பட்ட பகுதிகளில், அவ் வாணிக வங்கி களோ அல்லது வேறு எந்த வாணிக வங்கியோ, தெரிந் தெடுக்கப்பட்ட சங்கங்களால் தழுவப்பட்ட பகுதியில் தனி நபர்களுக்குக் குறுகிய காலக் கடன்களும், மத்தியக் காலக்

கடன்களும் நேர்முகமாக அளிக்கா என்பது இத் திட்டத்தின் ஒரு சிறப்பியல்பானது. இதன் நோக்கம், கிராமச் சங்கங்கள் நிறுவனக் கடனளிப்பிற்காகத் தகுதியுள்ள எல்லாப் பயிரிடு பவர்களின் எல்லாக் குறுகியகால, மத்தியக் காலத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு வசதியளிக்கப்பட்டு அவை விரைவாக ஒரு தன்னிறைவுள்ள அமைப்பாக ஆகவேண்டும் என்பதே.

கூட்டுறவு இலாக்காவின் நடவடிக்கைகளையும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நடவடிக்கைகளையும், வாணிக வங்கி களின் நடவடிக்கைகளையும் ஒருமைப்படுத்தும் காரியத்திற்காக மாநில மட்டத்தில் ஒரு நிலையான குழு (Standing Committee) அமைக்கப்பட்டிருக்கிறது. இக் குழுவிற்கு விவசாய உற்பத்தி ஆணையாளர் (Agricultural Production Commissioner) தலைவராகவும், கூட்டுறவுப் பதிவாளர் உறுப்பினர்-செயலராக வும் (Member-Secretary) இருக்கின்றனர். சம்பந்தப் பட்ட கூட்டுறவு வங்கிகளுக்கும் வாணிக வங்கிகளுக்கும் மற்றும், மாநிலக் கூட்டுறவு வங்கிக்கும் இக் குழுவில் பிரதி நிதித்துவம் அளிக்கப்பட்டுள்ளது. இக் குழு, திட்டத்திற்காகச் சங்கங்களைத் தெரிந்தெடுக்கும் பொறுப்பைக் கொண்டது. திட்டத்தின் அமலின்போது, எழும் ஒருமைப்படுத்துதல் பிரச்சினைகளையுங்கூட இக் குழு கவனிக்கும். மற்றும், பலவீன மான மத்தியக் கூட்டுறவு வங்கிகளைப் பலப்படுத்துவதற்குத் தொடங்கப்படும் புனர்வாழ்வுச் செயல்திட்டங்களை ஆய்வு செய்ய வேண்டுமென்றுங்கூட இக் குழு எதிர்பார்க்கப்படுகிறது. திட்டப்பகுதிகளில் செயற்படும் வாணிக வங்கிகளின் கிளை மட்டத்தில், கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகளையும், வாணிக வங்கிகளின் நடவடிக்கைகளையும் ஒருமைப்படுத்து வதற்கு ஒரு 'கிளை ஆலோசனைக் குழுவை' (Branch Advisory Committee) அமைத்தல் அவசியமாகவுள்ளது. தெரிந்தெடுக்கப் பட்ட சங்கங்களுக்கும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும், கூட்டுறவு இலாகாவிற்கும் இக் குழுவில் பிரதிநிதித்துவம் அளிக் கப்படவேண்டுமென்று யோசனை கூறப்பட்டிருக்கிறது. எல்லா வற்றையும்விட மேலாக ரிசர்வ் வங்கியால் தேசிய மட்டத்தில், அமைக்கப்பட்ட 'விவசாயக்கடன் வாரியம்' (Agricultural Credit-Board) திட்டத்தின் அமலின்போது ஒரு காவல்புரியும்.

இத் திட்டம் ஒரு வெறும் நிலைமாறுகால நடவடிக்கை யாகத் தொடங்கப்பட்டிருக்கிறது. இதன் ஒரு முக்கிய நோக்க மானது கடனளிப்புக் குறைகளை நிறைவாக்குவதாகும். கூட் டுறவுக் கடனமைப்பு, போதுமான அளவு புனர்வாழ்வு எய்திய

வுடன் துணையானதும், நிலைமாறுகாலமானதுமான இவ் வேற்பாடுகள், படிப்படியாக வாபஸ் பெறப்படும். வாணிக வங்கிகளால் தெரிந்தெடுக்கப்பட்ட சங்கங்கள், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் நிதி ரீதியாகவும், நிருவாக ரீதியாகவும் தங்களைப் பலப்படுத்திக் கொண்ட பின்னர், அவைகளிடமே மீண்டும் திரும்ப வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றன. இக் குறிக்கோளை யடைவதற்குச் சம்பந்தப்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கியும் பிரதம கடன் சங்கங்களும் புனர்வாழ்வு பெற்றுச் சீரமைக்கப்படுவதற்கான ஒரேசமயமான ஒரு செயல்திட்டம் இத் திட்டத்தில் எதிர்நோக்கப்பட்டுள்ளது. இச் செயல்திட்டத்தில் கீழ்க்கண்ட அம்சங்கள் பிரதானமாக அடங்கியுள்ளன:— தவணை கடந்த பாக்கிகளை வசூல் செய்வதற்காக ஒரு தீவிர முயற்சியில் கவனம் செலுத்துவதற்கு மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் மேற்பார்வை. மற்றும், நிருவாக ஏற்பாட்டைப் பலப்படுத்துதலும், ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கியின் சொந்த நிதியமைப்புப் பலவீனமாகக் கருதப்படுகின்ற இடங்களில் மாநில அரசால் போதுமான பங்கு மூலதன உதவித்தொகை பெறுதலும், அவசியப்படும் சந்தர்ப்பங்களில் கடனளிப்புக் கொள்கைகளையும் நடைமுறைகளையும் சீரமைத்தலும், வைப்பு ஆதாரங்களைத் திரட்டுவதற்கு நடவடிக்கையெடுத்தலுமே.

இத் திட்டத்தால் அடையப்பெற்ற முன்னேற்றமானது மிதமானதாக வுள்ளது. எனினும், இத் திட்டத்தின் விளைவுகளைத் தீர்மானிப்பதற்கு இது மிகக் குறுகிய காலமாகும். வாணிக வங்கிகளாலும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளாலும் தேவைப்படும் செல்வாக்குடனும், நிதி ரீதியாகவும், நிருவாக ரீதியாகவுமான ஆதரவுடனும், இத் திட்டம் வெற்றி பெறுவது நிச்சயம். மற்றும், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் பலவீனமாக இருக்கும் பகுதிகளில், விவசாயத் துறையிலுள்ள கடனளிப்புக் குறைவுகளை நிறைவு படுத்துவதிலும், இப் பகுதிகளில் கூட்டுறவுக் கடன் இயக்கத்தைப் புத்துயிர் பெறச் செய்வதிலும், பயனுள்ள ஒரு பணியை வாணிக வங்கிகள் உண்மையாகவே புரிந்திருக்கும் என்பதில் ஐயப்பாடில்லை.

### (ii) குடியானவர்களின் சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள்

பொதுத்துறை வங்கிகளால் தொடங்கப்பட்டுவரும் முக்கியத் திட்டங்களுள் இதுவும் ஒன்றாகும். இச் சங்கங்களின் நோக்கமாவது: சிறு குடியானவர்களுக்குக் கடன் உட்படத் தேவைகள் மொத்தத்தையும் ஒரு சிப்பமாக வழங்குதலாகும். மாநில

அரசின் உதவியுடன், 36 சங்கங்களை முன்னோடித் திட்டங்களாகத் தொடங்குவதற்கு முடிவு செய்யப்பட்டது. நாட்டுடைமையாக்கப்பட்ட ஒவ்வொரு வங்கியும், 3-லிருந்து 4 சங்கங்களை அமைக்கும். இச் சங்கங்கள், விவசாய உற்பத்திக்காகக் குறுகிய கால, மத்தியக் கால, நீண்ட காலக் கடன்களையும், மற்றும் தொடர்பான சேவைகளையும், நடைமுறை மூலதனத்தையும் கிராமக் கைவினைஞர்களுக்காக நிலைமுதலையும் வழங்கும். அவற்றின் நோக்கங்களிலொன்று, மாதிரி விவசாயப் பண்ணைகளை நடத்தித் தன் உறுப்பினர்களுக்குப் பருவகால வேலைவாய்ப்பை வழங்குவது. 10-லிருந்து 12 கிராமங்களையும், 10,000 மக்கள் தொகையையும் ஒரு சங்கம் தழுவும். ஒரு சங்கத்தின் பங்கு மூலதனம் ரூ.50,000 ஆக இருக்கும். அது மாநில அரசுகளால் தரப்படும் ஒப்பு உதவித்தொகை யளிப்பதன்மூலம் வாணிக வங்கிகள் சங்கங்களின் பெயரளவு உறுப்பினர்களாக இருக்கும். தற்போது இத் திட்டம், சிறு குடியானவர்கள் வளர்ச்சியமைப்பு அல்லது இறுதிநிலைக் குடியானவர்கள் அமைப்புத் திட்டங்களின்கீழுள்ள பகுதிகளுக்கு அடைக்கப்பட்டுள்ளது.

**வேறுபாட்டு வட்டி விகிதங்கள் திட்டம்** (Scheme of The Differential Rate of Interest)

வங்கித் தொழிலில், 1972ஆம் ஆண்டின்போது, ஏற்பட்ட ஒரு குறிப்பிடத்தக்க வளர்ச்சியானது, அட்டவணைச் சாதியினர்கள், அட்டவணை மலைவாசிகள் மற்றும், விவசாயத்திலும் அல்லது தொடர்புள்ள நடவடிக்கையிலும் ஓர் அடக்கமான அளவில் ஈடுபட்டுள்ள மற்றவர்களும் போன்ற தெரிந்தெடுக்கப்பட்ட குறைந்த வருவாய்ப் பிரிவினர்களுக்கும், விற்பனைப் பொருள்கள் செய்யப்படும் ஊனமுற்றோர்கள், அனாதையில்லங்கள், மகளிர் இல்லங்களுக்கும், பொதுத்துறை வங்கிகளால் அளிக்கப்படும் கடன்களுக்கான வேறுபாட்டு வட்டி விகிதங்கள் திட்டத்தை அமல் செய்தல் இந்திய அரசால் எடுக்கப்பட்ட முடிவு. இத் திட்டத்தின்கீழ், கிராமப் பகுதிகளில் ஆண்டுக்கு ரூ. 1200-க்கு மேற்படாத குடும்ப வருவா யுள்ளவர்களும் நகரப் பகுதிகளில் ரூ. 2000 குடும்ப வருவாயுள்ளவர்களும் மட்டும்தான் சலுகையான வட்டி விகிதங்களில் கடன் வழங்குவதற்குத் தகுதியுள்ளவராவர். வேறுபட்ட வட்டி விகிதம் ஒருபடித்தாக 4 சதவிகிதத்தில் நிருணயிக்கப்பட்டுள்ளது. ரூ.10 லக்ஷத்திற்கு அதிகமான தொகைக்குக் கடன்கள் சுமார் 26,000 கடன் வாங்குபவர்களுக்கு ஏற்கெனவே ஒப்புவிக்கப்பட்டுள்ளன.

பொதுத்துறை வங்கிகள், விவசாயத்திற்கான கடனளிப்பில் அடைந்த முன்னேற்றத்தைக் கீழ்க் காணும் அட்டவணை காண்பிக்கும்.

**இறுதியிலிருந்த நிலுவைகள்:**

(ரூபாய் இலட்சத்தில்)

| ஜுன் 1969 | | ஜுன் 1970 | | ஜுன் 1971 | | ஜுன் 1972 | |
|---|---|---|---|---|---|---|---|
| தொகை | மொத்தக் கடன் | தொகை | மொத்தக் கடன் | தொகை | மொத்தக் கடன் | தொகை | மொத்தக் கடன் |
| நேர்முகக் கடனளிப்பு: | | | | | | | |
| 4021 | 1.4 | 15344 | 4.3 | 19740 | 4.8 | 23150 | 5.0 |
| மறைமுகக் கடனளிப்பு | | | | | | | |
| 12212 | 4.1 | 13908 | 3.9 | 13271 | 3.3 | 15675 | 3.4 |
| மொத்தம் | | | | | | | |
| 16233 | 5.5 | 29252 | 8.2 | 33011 | 8.1 | 38825 | 8.4 |

1972ஆம் ஆண்டுச் சூன் மாதத்தின் போது, நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளால் வழங்கப்பட்ட மொத்தக் கடன்களில் விவசாயத்தின் பங்கு 8.4 சதவிகிதமாக மட்டுமே இருந்தது; ஆனால், அது 1969ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் 5.5. சதவிகிதத்திலிருந்து உயர்ந்துள்ளது.

வாணிக வங்கிகள் குடியானவர்களின் கடன் வாங்குதலில் 0.9 சதவிகிதம் மட்டுமே வழங்கியிருந்தன என்று அனைத்திந்தியக் கிராமக்கடன் விசாரணைக்குழு கூறியிருந்தது. வெறும் 0.9 சதவிகிதத்திலிருந்து, அது இப்பொழுது 8.4 சதவிகிதத்திற்கு உயர்ந்துள்ளது. வாணிக வங்கிகளால் அளிக்கப்பட்ட விவசாயக் கடன்களின் மொத்த நிலுவைகள், 1968ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் ரூ. 45 கோடியிலிருந்து, 1972ஆம் ஆண்டுச் சூனில் ரூ.440 கோடிக்கு உயர்ந்தது. அத்தகைய வங்கிகளால் அளிக்கப்பட்ட கடன் மொத்த நிலுவைகளில் ஒரு விகிதம் 1968ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் 1.4 சதவிகிதத்திலிருந்து 1972ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் 8 சதவிகிதத்திற்கு உயர்வு பெற்றுள்ளதாகக் கணக்கிடப்படுகிறது.

## 4. கூட்டுறவு வங்கிகளின் நடவடிக்கைகளுக்கும் வாணிக வங்கிகளின் நடவடிக்கைகளுக்குமிடையே ஒருமைப்பாடு

கூட்டுறவுக் கடன்துறையும், நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள் பொதுத் துறையும், ஒன்றேடொன்று போட்டியிடாமலிருக்க வேண்டியது முக்கிய அக்கறையைக் கொண்ட ஒரு விஷயமாகும். அவைகளின் நடவடிக்கைகள் ஒன்றுக்கொன்று பூர்த்தி செய்யும் தன்மையுள்ளவையாக இருக்க வேண்டும். இல்லாவிடில், விவசாயிகளுக்கு அமிதமான கடனளிப்பையுங்கூட விளைவிக்கும் ஆரோக்கியமற்ற போட்டி ஏற்படும். கூட்டுறவுக் கடன் நிறுவனங்களுக்கும், நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளுக்குமிடையேயுள்ள நடவடிக்கைகளில் ஒரு நெருங்கிய ஒருமைப்பாடு அவசியமாக உள்ளது. கடன் விண்ணப்பங்கள், கடன்கள் ஒப்பளிப்பு, பட்டுவாடா, வசூல், தவணை கடந்த பாக்கிகள் முதலியனவற்றைக் குறித்த தகவல்கள் தொடர்ச்சியானதும் சரியானதுமான பரிவர்த்தனையானது மிகப் பயனுள்ளதாக இருக்கும். இவ்விரண்டு துறைகளும் செயல்பட வேண்டிய பகுதிகளை நிர்ணயிப்பது அவசியப்படலாம். ஒரே பகுதியில் இவ்விரண்டு துறைகளும் செயற்பட்டாலுங்கூடக் குடியானவன் இரண்டு துறைகளிலிருந்தும் கடன் வாங்காமலிருப்பதை நிச்சயப்படுத்துவதும் அவசியப்

படலாம். இரண்டு அமைப்புகளிலிருந்தும், ஒன்றுக்கொன்று தெரியாமல், ஒரு குடியானவன், கடன் வாங்காமலிருப்பதற்கு உரிய, மரபு அல்லது சட்டத்தின் மூலம், ஒரு முறையை உருவாக்க வேண்டும். தேசிய மட்டத்தில் ரிசர்வ் வங்கி, விவசாயக் கடன் துறையிலுள்ள பல்வேறு அமைப்புகளின் நடவடிக்கைகளைக் குறிப்பாக, கூட்டுறவுக் கடனமைப்பின் நலன்களையும், விவசாய உற்பத்திப் பெருக்கத்திற்கு நிதியா தாரங்களை உயர்ந்தபட்சம் பயன்படுத்தப்படுவதையும் கருத்தில் வைத்து ஒருமைப்படுத்துகிறது. ஒருமைப்பாட்டுக் குழுக்கள் தேசிய மட்டத்திலும், மாநில மட்டத்திலும், சில சந்தர்ப் பங்களில் மாவட்ட மட்டத்திலும் கூட நிறுவப்பட்டுள்ளன. அதற்கும் கீழ்மட்டங்களிலுங்கூட, இரண்டு அமைப்புகளும் நெருங்கிய ஒருமைப்பாட்டுடன் பணிபுரியும் பொருட்டு அமைக்கப்படலாம். பல்வேறு மட்டங்களிலுள்ள கூட்டுறவுத் துறை அதிகாரிகளும், நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளின் அதிகாரிகளும், இக் குழுக்களில் சேவை செய்ய வேண்டும். கூட்டுறவுப் பதிவாளர்களும், அல்லது கூட்டுறவுக் கடன் இயக்கத் துடன் தீவிரமான தொடர்பு கொண்ட தலைசிறந்த கூட்டுற வாளர்களும், நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளின் நிருவாகக் குழுவின் அலுவலால் உறுப்பினர்களாக இருக்கலாம். தலைமைக் கூட்டுறவு வங்கிகள் தங்கள் நிருவாகக் குழுக்களில் நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளின் உயர் அதிகாரிகளைப் பெற்றிருக்கலாம். இரண்டு அமைப்புகளுக்குமிடையே வீணை மேற்படிவைத் தவிர்ப்பதற்கும், ஒருமைப்படுத்தலை நிச்சயப் படுத்துவதற்கும் இடைவிடாத முயற்சி இருக்க வேண்டும். இவ் வமைப்புகளில் ஒவ்வொன்றும், மற்றதன் முயற்சிகளைப் பலப்படுத்துவதை நிச்சயப்படுத்த வேண்டும்.

## 5. கூட்டுறவுக் கடன் வளர்ச்சியில் நாட்டுடைமையாக்கப்பட்ட வாணிக வங்கிகள் பணியின் மதிப்பீடு (Assessment of The Role of Nationalised Commercial Banks in Co-operative Credit Development)

நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகள் கூட்டுறவுச் சங்கங்களின் முயற்சிகளுக்குத் துணை புரிவதற்குப் பதிலாகக் கூட்டுறவுக் கடனமைப்புகளுடன் போட்டியிடுவதில் இறங்கலாம் என்ற அதிகரித்துவரும் ஓர் அச்சம் சில வட்டாரங்களில் நிலவுகின்றது. இப் போட்டியானது இரண்டு அமைப்புகளுக்கும் நீண்ட காலக் கெடுதியை விளைவிக்கலாம் என்றும் அஞ்சப்படுகிறது. கூட் டுறவுச் சங்கங்களே இல்லாமலும் அல்லது அவை நன்கு அமைக்

கப்படாமலும், அல்லது விவசாயக் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கு நன்கு சித்தப்படுத்திக் கொள்ளாமலும் உள்ள பகுதிகளில் மட்டுந்தான் பூர்த்திக்காகச் சேர்க்கப்பட்ட ஓர் அனுபந்தத்தின் தேவை எழும் என்றும் வாதிக்கப்படுகிறது. ஆனுல், அண்மை ஆண்டுகளில் வாணிக வங்கிகளின் பிரத்தியக்ஷ நடவடிக்கையானது வேறு விதமாக இருந்துள்ளது என்று கூறப்படுகிறது. விவசாயத்துறையில் வாணிக வங்கிகளின் முயற்சிகள், கூட்டுறவு அமைப்பு ஒப்பிடும் வகையில் நன்கு வளர்ச்சியடைந்துள்ள மாநிலங்களில், அதிகமாக வெளிப்படையாகத் தோன்றுகின்றன. எனவே, 1968ஆம் ஆண்டிலிருந்து 1972 ஆம் ஆண்டுவரை இந்தியா முழுமையிலும் வாணிக வங்கிகளா லளிக்கப்பட்ட விவசாயக் கடன் நிலுவைகளின் மொத்த அதிகரிப்பு 51 சதவிகிதம் கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள் தாங்களே பலமாக இயங்குகின்ற தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், குசராத்து, மராட்டியம் என்ற நான்கு மாநிலங்களில் ஒருமுகப்படுத்தப்பட்டிருந்தன. மொத்தக் கிராமக் மக்கள்தொகையில் 28 சதவிகிதத்தையும், மொத்த நிகரப் பயிரிடப்பட்ட பகுதியில் 28 சதவிகிதத்தையும் உடைய அசாம், பீகார், ஒரிசா, இராஜஸ்தான், மேற்குவங்கம் ஆகிய 5 மாநிலங்கள் அதே காலவரையில் வாணிக வங்கிகளால் அளிக்கப்பட்ட விவசாயக் கடனின் மொத்த அதிகரிப்பு 9 சதவிகிதத்தை மட்டும் பதிவு செய்தன. இம் மாநிலங்கள், கூட்டுறவுக் கடனமைப்பு, ஒப்பிடும் வகையில் பலவீனமாகவுள்ள மாநிலங்களாகவுங்கூட உள்ளன என்பதை வெளிப்படுத்துகிறதாக வுள்ளது. கூட்டுறவுச் சங்கங்களுடன் வாணிக வங்கிகள் போட்டியிடுவது எங்கு நடைபெற்றுலும் அது ஆரோக்கியமானது என்று கருத முடியாது. உண்மையிலேயே கிராமக் கடன் வழங்குவதற்கான அமைப்புகளில் கூட்டுறவுச் சங்கங்கள் தலைசிறந்தவை என்பது தேசியக் கொள்கையாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. அவ்வாறிருக்க, கூட்டுறவுச் சங்கங்களுடன் போட்டியிடாமல் வாணிக வங்கிகள் கூட்டுறவுக் கடன் துறையில் கூட்டுறவுச் சங்கங்களின் முயற்சிகளைத் தட்டி வீழ்த்தாமல் துணைபுரியும் வகையில் உண்மையாகவே செயற்படும் பொருட்டு, தக்க ஏற்பாடுகள் முடிவு செய்யப்பட வேண்டும். ஏனென்றுல், கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள், எல்லாவிதமான கடன் நிறுவனங்களுள் விவசாய நிதி வழங்குவதற்கான மிகச் சிறந்த அமைப்புகளாக உள்ளன. கூட்டுறவு நிறுவனங்களும், நாட்டுடைமையாக்கப்பட்ட வாணிக வங்கிகளும், ஒரு பொதுவான சமுதாய மற்றும் பொருளாதாரக் கொள்கையைப் பெற்றிருந்தாலும், கூட்டுறவுச் சங்கங்களில்

மக்களின் ஈடுபாடு அதிகமாக வுள்ளது. இந்த முக்கியக் காரணி அரசாலும் அல்லது மக்களாலும் புறக்கணிக்கப்படமுடியாது. ஆகையால், குடியானவர்களால் தேவைப்படும் பெரும்பாலான கடனை வழங்குவது இறுதியாகக் கூட்டுறவுச் சங்கங்களின் பொறுப்பாக இருக்க வேண்டுமென்பதே நம்முடைய இலட்சிய மாக இருக்கவேண்டும்.

## 6. 'விவசாயக் கடன் வசதிக் கழகம்' (Agricultural Credit Corporation)

காலஞ்சென்ற பேராசிரியர் டி.ஆர். காட்கில் அவர்களைத் தலைவராகக் கொண்ட விவசாய நிதித் துணைக் குழு, (Agricultural Finance Sub-Committee) விவசாயக் கடனளிப் பதற்காக, ஒரு நிறுவன நிதியமைப்பாக, சுயஆட்சித் தன்மை யுள்ள விவசாயக் கடன் வசதிக் கழகத்தை நிறுவ வேண்டு மென்று பரிவுரை செய்துள்ளது. அக் கழகம் மாநில அரசால் நிறுவப்பெற்று, அதன் பொது மேற்பார்வையின்கீழும் கட்டளையின்கீழும் இயங்கவேண்டும். அத்தகைய கழகம் கூட்டுறவு நிதிவழங்கும் அமைப்புகள் பலமாக உள்ளன என்றும், அவை கடன் பெறுவதற்குத் தகுதி பெற்றவர்களுக் கெல்லாம் கடனுதவி கிடைக்க செய்யக் கூடிய அளவுக்கு ஒரு பெரிய நடவடிக்கைத் துறையைப் பெற்றுள்ளன என்றும் அரசினர் கருதுகின்ற மாநிலங்கள் நீங்கலாக, எல்லா மாகா ணங்களிலும் அமைக்கப்பட வேண்டும். எனவே, விவசாயக் கடன்வசதிக் கழகங்கள் அரசினரால், சம்பந்தப்பட்ட மா நிலங்களில், கடனளிப்புக் குறைவை நிறைவாக்கும் நோக்கத்து டன், ஆதரிக்கப்பட்டு, நிதி வழங்கப்பட வேண்டும். இக் கழகத்தின் பிரதானப் பணிகளாவன: விவசாய நடவடிக்கை களுக்காகவும் அதன் தொடர்பான நடவடிக்கைகளுக்காகவும் கடன் வழங்குதலும், குறுகியகால, மத்தியக்கால உற்பத்திக் கடனை போதுமான அளவு வழங்குவதை நிச்சயப்படுத்துதலு மாகும். விற்பனையும், பதனப்படுத்துதலும் நெருங்கிய சம் பந்தமுள்ளவையாக இருப்பதால், இக் கழகம் விவசாய விளை பொருள்களை விற்பனை செய்வதற்கும் அவற்றைப் பதனப் படுத்துவதற்கும் விவசாயத்தில் ஈடுபடுத்தப்படும் பொருள்களை வழங்குவதற்குங்கூட நிதி வழங்கலாம். இக் காரியங்களுக்காகக் குடியானவர்களுக்கு நேர்முகமாக, அல்லது எல்லையிலுள்ள நன்கு இயங்கும் பிரதம விவசாயக் கடன் சங்கங்கள் மூலமாகக் கடன் வழங்கப்படும். அத்தகைய எல்லையில், தக்க கூட் டுறவு வங்கித் தொழில் நிறுவனங்கள் அமைக்கப்படாமலோ

அல்லது அவை போதிய நிதியாதாரங்களைப் பெற்றில்லா மலோ இருக்க வேண்டும். பிந்திய சந்தர்ப்பத்தில் நடப்பி லுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மூலம், அல்லது தலைமை வங்கிகள் மூலம் மட்டுந்தான் நிதியுதவி யளிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு கழகமும் கொள்முதல், விற்பனை, அல்லது உண்டி யல்களையும், வெண்கடன் பத்திரங்களையும் மாற்றல் செய்தல், காசோலைகளையும், உண்டியல்களையும் வசூலித்தல், பணவிடை களை வழங்குதல் முதலியன போன்ற இயல்பான எல்லா வங் கித் தொழில் நடவடிக்கைகளையும் நடத்தும். எனினும், கழகம், வைப்புகளை ஏற்பதற்கு முன்னர், ரிசர்வ் வங்கியின் முன் அனுமதியைப் பெறத் தேவைப்படுகிறது. இதன் நோக்கம், வைப்புகளின் வடிவத்தில் சேமிப்புகளைச் சேகரிப்ப தற்குக் கழகம் வகை செய்யப்பட வேண்டுமென்றாலும், வைப்புகளை அது ஏற்றுக்கொள்ளும் நிபந்தனைகள் கூட்டுறவு வங்கிகளின் நிதியாதாரங்கள், அவைகளுடன் நியாயமற்ற போட்டியின் விளைவாகப் பாதிக்கப்படாதவகையி லிருக்கவேண் டுமென்பதே. ஒரு கழகம் ரிசர்வ் வங்கியிடமிருந்தும் மைய அரசிடமிருந்தும் கடன் பெறலாம்.

ஒரு கழகம், ஒரு மாநிலம் முழுவதிலுமாவது அல்லது மாநிலத்தின் ஒரு சில மாவட்டங்களிலாவது செயற்படலாம். நடப்பிலுள்ள மாநில/மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும், கழகத்திற்குமிடையே பகுதிகளை எல்லை வரையறுத்தலுக்கான சில மீக்கோள் தரங்களைத் திட்டம் எதிர்நோக்குகிறது. இத் தரங்களுக் கிணங்க, ஒரு கழகம், ரூ. 25 இலட்சத்திற்குக் குறைவான நிலுவைக் கடன்களையுடைய ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கியின் எல்லை முழுவதிலும் செயற்பட எதிர்பார்க்கப்படு கிறது. ரூ. 25 இலட்சத்திற்கும், அதற்கு மேலும் ஆனால், ரூ. 1 கோடிக்குக் குறைவாகவுள்ள நிலுவைக் கடன்களுள்ள ஒரு மத்தியக் கூட்டுறவு வங்கியின் எல்லைகள், மத்தியக் கூட்டுறவு வங்கிக்கும், கழகத்திற்குமிடையே, கூட்டுறவுக் கடனமைப்புப் பலவீனமாக அல்லது அநேக செயற்படாததும் அல்லது தன்னிறைவற்றதுமான சங்கங்களுள்ளதாய்ச் சேர்ந்திருக்கும் பகுதி கள், கழகத்தால் சேவை செய்யப்படும் வகையில் எல்லை வரையறுக்கப்படும். எனினும், ஒவ்வொரு கழகமும், கூட் டுறவுக் கடனமைப்பானது சீரமைப்பிலும் வளர்ச்சியிலும் போதிய முன்னேற்றத்தை அடைந்து விவசாயிகளின் கடன் தேவைகளைப் பூர்த்தி செய்யும் ஒரு நிலைமையிலுள்ள இடங் களிலிருந்து வாபஸ்பெறும்.

அசாம், பீகார், ஒரிசா, இராஜஸ்தான், மேற்குவங்கம் ஆகிய கூட்டுறவுத் துறையில் பலவீனமான மாநிலங்களிலும் மணிப்பூர், திரிபுரா ஆகிய யூனியன் பிரதேசங்களிலும், விவசாய உற்பத்திக்கும் வளர்ச்சிக்கும் கடன் பாய்ச்சலை நிச்சயப்படுத்துவதற்காக ஒரு நிலைமாறுகால நடவடிக்கையாக, அரசு விவசாயக் கடன் வசதிக் கழகச் சட்டத்தின்கீழ் (State Agricultural Credit Corporation Act, 1968) விவசாயக் கடன் கழகங்களை அமைப்பதற்குத் திட்டமிடப் பட்டது. 1969ஆம் ஆண்டுச் சூலையில் 14 முக்கிய வாணிக வங்கிகள் நாட்டுடைமையாக்கப்பட்ட சந்தர்ப்பத்திலும், இவ் வங்கிகளுக்கும் இந்திய தேசிய வங்கிக்கும் அதன் துணை நிறுவனங்களுக்கும் விதிக்கப்பட்ட விவசாயக் கடனுக்கு அதிக மான கவனிப்பைச் செலுத்த வேண்டும் என்ற கட்டளை யின் சந்தர்ப்பத்திலும், விவசாயக் கடன் வசதிக் கழகங் களின் அவசியத்தைப்பற்றிச் சில மறு கருத்துகள் இருந்துள்ளன. ஆகையால், இக் கழகங்களை அமைப்பதற்கான நடவடிக்கைகள் இன்னும் மேற்கொள்ளப்படவில்லை.

# 16. பிரதம நிலவள வங்கிகளும், மாநில நிலவள வங்கிகளும்-விவசாய மறுநிதி வசதிக் கழகம்

## (Primary Land Development Banks And State Development Banks-Agricultural Refinance Corporation)

### 1. நீண்டகாலக் கடனுக்கான அவசியம்

தங்கள் நடப்புச் சாகுபடிச் செலவுகளையும், விவசாயத்தில் இயல்பான மூலதன முதலீட்டையும் செய்வதற்கு விவசாயி களுக்குக் குறுகிய காலக் கடனும், மத்தியக் காலக் கடனும் மட்டு மன்றி, பெருமளவில் நிலச்சீர்திருத்தம், புதுக் கிணறுகளை வெட்டு தல், அடைமானக் கடன்களை மீட்டல், நிலத்தையும், விவசாய இயந்திரங்களையும் வாங்குதல் முதலியவற்றிற்குச் சம்பந்தப் பட்ட செலவுகளைச் செய்வதற்கு நீண்ட காலக் கடனுங்கூடத் தேவைப்படுகிறது. கடனைத் திருப்பிச் செலுத்துதல், சிறப் பாகக் குடியானவர்கள், சிறு குடியானவர்கள் வகுப்பைச் சேர்ந்தவர்களாக விருந்தால், 5 ஆண்டுகளுக்கு மேற்பட்டதும் 15 ஆண்டுகள் வரை நீடிக்கக் கூடியதுமான காலவரை களுக்குப் பரவியிருக்க வேண்டும். இக் காரியங்களுக்கான நிதியின் தேவை, இப்பொழுது, நாட்டில் நில அபிவிருத்திக் காகவும், விவசாய நவீனப்படுத்துதலுக்காகவும் ஏற்பட்டிருக் கும் அவசியத்தின் காரணமாக முன்னணியில் வந்துள்ளது.

### 2. நில அடைமான வங்கிகளின் தோற்றம்

கூட்டுறவு இயக்கத்தின் தொடக்க ஆண்டுகளில், விவசாயக் கடன் சங்கங்களே, நீண்ட காலக் கடனையுங்கூட வழங்க முயற் சித்தன. ஆனால், அவைகளுக்குக் கிடைத்த நிதியாதாரங்கள் அத்தியாவசியமாகக் குறுகிய காலமானவையாகவும், மத்தியக் காலமானவையாகவும் இருந்தமையால், நீண்டகாலக் கடனை வழங்குவதற்காகத் தனிப்பட்ட கடன் நிறுவனங்கள் அவசிய மாகக் கருதப்பட்டன. சாதாரண விவசாயக் கடன் சங்கங் கள் நீண்ட காலக் கடன்களை வழங்க முடியாது; வழங்கவுங் கூடாது. ஏனென்றால், (i) பிரதமக் கடன் சங்கங்களின் குறுகிய

அறிவிப்புப் பொறுப்புகளைக் கொண்டு நீண்ட காலக் கடன்களை வழங்குவது ஒரு சரியான வங்கித்தொழில் நடைமுறையாகாது. (ii) நீண்ட காலக் கடன்கள், நில ஆதாரத்தின்மீது அளிக்கப் படுகின்றன. இதற்குப் பிரதம கடன் சங்கங்களின் சிப்பந்தி களுடைய அறிவிற்கும், நிருவாகக் குழு அலுவலர்களின் அறி விற்கும் அப்பாற்பட்ட சிக்கலான சட்டச் சரத்துக்களுடைய அறிவு தேவைப்படுகிறது. ஆகையால், நீண்ட காலக் கடன் களை யளிப்பதற்காகத் தனிப்பட்ட நிறுவனங்களை யமைப்பதே, நாட்டில் ஒரு பொதுவான நடைமுறையாக உள்ளது. நீண்ட காலக் கடன் நிறுவனங்களை யமைப்பதற்கான முதன்முதலான முயற்சிகள், பஞ்சாப் மாநிலத்தில் எடுக்கப் பட்டன. முதற் கூட்டுறவு நில அடைமான வங்கி பஞ்சாபில் ஜங் (Jhang) என்ற இடத்தில் 1920ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது. அதன் பின்னர், சென்னையில் 1925ஆம் ஆண்டில், இவ்வித வங்கிகள் இரண்டு அமைக்கப் பட்டன. பின்னர், அத்தகைய மூன்று வங்கிகள் பம்பாய் மாகாணத்திலுங்கூட அமைக்கப்பட்டன.

தனிப்பட்ட நில அடைமான வங்கிகள், வில்லங்கமில் லாத நிலச்சொத்தின்மீது கடன் கொடுக்கும் நிறுவனங் களானதால், நீண்ட கால நிதியை ஈர்ப்பதற்கு உதவி புரியும் என்று எதிர்பார்க்கப்பட்டது. தமிழ்நாட்டில் 1927ஆம் ஆண்டில் நில அடைமான வங்கிகளின் எண்ணிக்கை 10-க்கு அதிகரித்தது. இவ் வங்கிகள், அரசு உத்தரவாதத்தின் பேரில் 20 ஆண்டுகள் காலத்திற்காக, கடனீட்டுப்பத்திரங்களை வெளியிட்டு, தங்கள் உறுப்பினர்களுக்கு 17 ஆண்டுகளுக்கான நீண்ட காலக் கடன் களை வழங்கின. 1926ஆம் ஆண்டில் நடைபெற்ற பதிவாளர் கள் மாநாடு, நாட்டில் நில அடைமான வங்கிகளின் தோற் றத்தைக் குறிப்புச் செய்தது. 1928ஆம் ஆண்டில் விவசாயத் தைப் பற்றிய இராயல் ஆணைக்குழுவும், 1931 ஆம் ஆண்டில் மைய வங்கித்தொழில் விசாரணைக்குழுவும், நில அடைமான வங்கிகளின் வளர்ச்சி பற்றிய பிரச்சினையை ஆலோசித்தன. இக் குழுக்கள், கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவதன் மூலம் நிதியைத் திரட்டுவதற்காக, மாகாண நில அடைமான வங்கிகள் நிறுவப்பட வேண்டுமென்று பரிவுரை செய்தன. 1927–28ஆம் ஆண்டில், சென்னையின் கூட்டுறவு பற்றிய டவுன்சன்டு குழு, ஒரு மத்திய நில அடைமான வங்கி நிறு வப்பட வேண்டுமென்று பரிவுரை செய்தது. ஏனென்றால், பல சிறு வங்கிகளால் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியிடப் படும் முறையானது, பணச்சந்தையில் கடனீட்டுப்பத்திரங்

களின் கவுரவத்தையும், பிரபல்லியத்தையும் நிச்சயப்படுத்துவதற்கு உகந்ததாக இல்லாமலிருந்தது என்று அக் குழு கருதியது. இப் பரிவுரையை அனுசரித்து, சென்னை மாநிலத்திற்காக, 1929ஆம் ஆண்டில் ஒரு மத்திய நில அடைமான வங்கி தொடங்கப்பட்டது. பிரதம வங்கிகளால் தேவைப்படும் நிதிகளை, நீண்டகாலக் கடனீட்டுப்பத்திரங்களை வெளியிடுவதன் மூலம் திரட்டி, அவ் வங்கிகள் தங்கள் உறுப்பினர்களுக்கு நீண்டகாலக் கடன்களை வழங்கும் காரியத்திற்காக, அவைகளுக்கு நிதியுதவி அளிப்பதற்கு அவ் வங்கி நிறுவப்பட்டது. 1934ஆம் ஆண்டில், 'சென்னைக் கூட்டுறவு நில அடைமான வங்கிகளின் சட்டம்' என்ற ஒரு தனிப்பட்ட சட்டம் நிறைவேற்றப்பட்டது. கடனீட்டுப்பத்திரங்களை வெளியிடுவதற்கு, மத்திய நில அடைமான வங்கிக்கு அதிகாரமளித்தும், கடனீட்டுப்பத்திரங்களைப் பெற்றிருப்பவர்களுக்கு அசலையும், வட்டியையும் திருப்பிச் செலுத்துவதற்கு அரசு உத்தரவாதத்தை யளிப்பதற்கு வகை செய்தும், கடனீட்டுப்பத்திரங்களைப் பெற்றிருப்பவர்களின் நலன்களைப் பாதுகாப்பதற்கு ஒரு பொறுப்பாளரை (Trustee) அமர்த்துவதற்காக ஏற்பாடு செய்தும், உறுப்பினர்களால் கொடுக்கப்பட வேண்டிய பாக்கிகளை, சிவில் நீதிமன்றங்களின் தலையீடு இல்லாமல் அடைமானம் வைக்கப்பட்ட சொத்தின் விற்பனைமூலமும், அடைமானம் வைக்கப்பட்ட நிலத்தின்மீதுள்ள விளைபொருள்களை ஜப்தி செய்வதன்மூலமும் ஒரே முறையில் வசூல் செய்வதற்கான ஏற்பாடுகளையும் இச் சட்டம் செய்தது. மத்திய நில அடைமான வங்கி, தமிழ் நாட்டிலுள்ள பிரதம நில அடைமான வங்கிகளின் ஒரு தலைமை நிறுவனமாகச் செயற்படுகிறது.

## 3. நிலவள வங்கிகளின் அமைப்பு

நிலவள வங்கிகளின் அமைப்புவகையானது, மாநிலத்திற்கு மாநிலம் வேறுபடுகிறது. பெரும்பாலான மாநிலங்களில், நீண்ட காலக் கூட்டுறவமைப்பு, கூட்டாட்சி முறைகளின் பேரில் கட்டப்பட்டுள்ளது. பிரதம நிலவள வங்கிகள், தாசில் அல்லது தாலுகா மட்டத்தில் நிறுவப்பட்டுள்ளன. இப் பிரதம வங்கிகள், மாநில மட்டத்தில் மத்திய நிலவள வங்கியாகக் கூட்டிணைக்கப்படுகின்றன. இந்த அமைப்பில் மாவட்ட மட்டத்தில், இடைநிலை நிறுவனங்கள் கிடையா. சில மாநிலங்களில், அதாவது பீகார், குசராத்து, உத்தரப்பிரதேசம், ஜம்மு, காஷ்மீர், இமாசலப்பிரதேசம் ஆகிய மாநிலங்களிலும், புதுவை, திரிப்புரா ஆகிய யூனியன் பிரதேசங்களிலும் தலைமை

வங்கியே, மாவட்டங்களிலுள்ள தன் கிளைகளின்மூலம், தனி நபர்களுக்கு நேர்முகமாகக் கடன் வழங்கும் ஒருமையான ஓர் அமைப்பு அமைக்கப்பட்டுள்ளது.

தமிழ்நாட்டில், நிலவள வங்கிகளின் அமைப்பு இரண்டு அடுக்குகளைக் கொண்டது. தலைமை மட்டத்தில், மாநில முழுவதையும் அலுவலெல்லையாகக் கொண்ட தமிழ்நாடு மாநில நிலவள வங்கியும், அடிமட்டத்தில் பிரதம நிலவள வங்கிகளும் உள்ளன. மராட்டியத்தில், பிரதம வங்கிகள் மாவட்ட மட்டத்திலுள்ளன. தமிழ்நாட்டில், நீண்டகாலமாக, ஒரு தாலுக்காவிற்கு ஒரு வங்கி இருப்பதே மரபாக இருந்தது. விவசாயிகளுக்கு நீண்டகாலக் கடனளிப்பில் முன்னேற்றத்தைத் துரிதப்படுத்தி, அவர்களுக்கு மிக அண்மையில் நீண்டகாலக் கடனைக் கொண்டுபோகும் நோக்கத்துடன், 1969—1970ஆம் ஆண்டுகளில், 117 புதிய வட்டாரமட்டத்து வங்கிகள் தொடங்கப்பட்டு, 30-6-73ஆம் நாளன்று, மாநிலத்திலுள்ள பிரதம நிலவள வங்கிகளின் மொத்த எண்ணிக்கை 223ஆக உயர்ந்தது. ஒரு பிரதம நிலவள வங்கியின் அலுவலெல்லை இப்பொழுது 1 அல்லது 2 சமுதாய வளர்ச்சி வட்டாரங்களுக்கு நீடிக்கின்றது. மேலும், வட்டாரமட்டத்து வங்கிகளை அமைக்கும் பிரச்சினை தற்போது நிறுத்தி வைக்கப்பட்டுள்ளது. அவற்றிற்கு மாறாக, தாலுகா மட்டத்து வங்கிகள், வங்கிகளில்லாத பகுதிகளில் கிளைகளை இப்பொழுது திறக்கின்றன. மாநில அரசால் அங்கீகரிக்கப்பட்ட திட்டத்திற்கிணங்க, வங்கிகளில்லாத 150 வட்டாரங்களில் 134-ல் பிரதம நிலவள வங்கிகள் கிளைகளைத் திறக்க வேண்டியுள்ளன.

## 4. நில அடைமான வங்கிகளின் பெயர் மாற்றம்

பிரதம நீண்டகாலக் கடன் நிறுவனங்கள், முதன்முதலாக நில அடைமான வங்கிகளென்று வழங்கப்பட்டன. அடைமானங்களை மீட்பதைவிட, அண்மையில் அபிவிருத்திக் காரியங்களுக்காகக் கடன் வழங்கும் போக்கின் காரணமாக, இவ் வங்கிகளின் பெயர் நிலவள வங்கிகள் என்று மாற்றப்பட்டு வருகின்றன. தமிழ்நாட்டிலுங்கூட, நில அபிவிருத்தியில் இவ் வங்கிகள் புரியும் பணியின் முக்கியத்துவத்தைக் கோடிடும் பொருட்டு, 1970ஆம் ஆண்டில் நில அடைமான வங்கிகளின் சட்டத்தை அரசு திருத்தம் செய்தது. சட்டத்தின் தலைப்பு, 'தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கிகளின் சட்டம், 1934' என்று மாற்றம் செய்யப்பட்டது. சென்னை மையக் கூட்டுறவு நில அடைமான வங்கியானது, தமிழ்நாடு கூட்டுறவு மாநில

நிலவள வங்கியாகவும், பிரதம நில அடைமான வங்கிகள் பிரதம நிலவள வங்கிகளாகவும் பெயரிடப்பட்டன. இது, சென்னையில் சந்தானம் குழுவினரால் (1969) செய்யப்பட்ட பரிவுரைகளுள் ஒன்றுகவுங்கூட இருந்தது.

## 5. நிலவள வங்கிகளின் பொது முன்னேற்றம்—மைய நிலவள வங்கிகள் — அனைத்திந்திய நிலவரம்

1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், 19 மைய நிலவள வங்கிகள் இருந்தன. அவற்றின் அங்கத்துவம், 869 பிரதம நிலவள வங்கிகளையும், 145 இதரச் சங்கங்களையும், மாநில அரசுகளையும், 17 இலட்சம் தனி நபர்களையும் (6 இலட்சம் பெயரளவு உறுப்பினர்களுட்பட) கொண்டிருந்தது. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், இவ் வங்கிகளின் பங்குமூலதனம் 57.0 கோடியாக விருந்தது. இதில், பிரதம நிலவள வங்கிகளால் வைக்கப்பட்டிருந்த பங்குமூலதனம் ரூ. 26.63 கோடியாகவும் அரசினரால் வைக்கப்பட்டிருந்த பங்குமூலதனம் ரூ.13.84 கோடியாகவும், தனிநபர்களால் வைக்கப்பட்டிருந்த பங்கு மூலதனம் ரூ.17.11 கோடியாகவு மிருந்தன. இவ் வங்கிகளின் காப்பிருப்புகள் ரூ.12.36 கோடிக்குத் தொகைப்பட்டன. 30—6—72ஆம் நாளன்று, நிலுவையிலிருந்த கடனீட்டுப் பத்திரங்களின் மதிப்பு ரூ.879.82 கோடியாக இருந்தது: ரூ.15.65 கோடியாக இருந்த தங்கள் இதரக் கடன்களுடன் 30—6—72ஆம் நாளன்று கடன் வாங்குதலின்கீழ் நிலுவையி லிருந்த மொத்தத்தொகை ரூ.895.5 கோடியாக இருந்தது. இவ் வங்கிகளின் மொத்த நடைமுறை மூலதனம் ரூ.1,016.49 கோடியாக இருந்தது. இவ் வங்கிகளால் செய்யப்பட்ட முதலீடு கள் ரூ.222.27 கோடியாக இருந்தன. இதில், கடன் கழிவு நிதியில் (Sinking Fund) ரூ.204.49 கோடியும், இதரப் பொது முதலீடுகளிலும் காப்புநிதியிலும், ரூ.16.78 கோடி யும் முதலீடு செய்யப்பட்டிருந்தன.

1971—72ஆம் ஆண்டின்போது, இவ் வங்கிகள் ரூ.145.8 கோடியளவுக்குக் கடன்களை வழங்கியும், ரூ.52.73 கோடி யளவுக்குக் கடன்களை வசூல் செய்து மிருந்தன. கடன்களில் ரூ.728.82 கோடி நிலுவையி லிருந்தது. இதில், ரூ.12.54 கோடி தவணை கடந்த பாக்கிகளாக இருந்தன. இவை கேட்பிற்கு 19.2 சதவிகிதமாக அமைந்திருந்தன. அசாம், மேற்குவங்கம், திரிபுரா ஆகிய மாநிலங்களைத் தவிர, 1971—72ஆம் ஆண்டின்போது எல்லா மைய நிலவள வங்கிகளும் இலாபத்தில் இயங்கி, ரூ.7.44 கோடி மொத்த இலாபத்தை

ஈட்டின. அவை 3½ சதவிகிதத்திலிருந்து 6¼ சதவிகிதம் வரை பொதுவாக மாறிக்கொண்டிருக்கும் ஓர் இலாப ஈவை அறிவித்தன.

தமிழ்நாடு கூட்டுறவு மாநில நிலவள வங்கி 30—6—72ஆம் நாளன்று, 223 பிரதம நிலவள வங்கிகளையும், மாநில அரசையும், 172 தனி நபர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது. அதன் செலுத்தப்பட்ட பங்குமூலதனம் ரூ.5.79 கோடியாக விருந்தது. இதில், பிரதம நிலவள வங்கியால் வைக்கப்பட்டிருந்த பங்குமூலதனம் ரூ.4.09 கோடியாகவும், அரசால் வைக்கப்பட்டிருந்த பங்குமூலதனம் ரூ.1.7 கோடியாகவு மிருந்தன. அதன் காப்பிருப்புகள் ரூ.1.68 கோடிக்கிருந்தன. இதில், சட்டப்படியான காப்பிருப்புகள் ரூ.0.89 கோடியாகவும், இதரக் காப்பிருப்புகள் ரூ.0.79 கோடியாகவு மிருந்தன. 30—6—72ஆம் நாளன்று, நிலுவையிலிருந்த கடன்பத்திரங்களின் மதிப்பு ரூ.107.03 கோடியாக இருந்தது. இதில், சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்களின் மதிப்பு ரூ.90.14 கோடியாகவும், கிராமக் கடனீட்டுப்பத்திரங்களின் மதிப்பு ரூ.2.31 கோடியாகவும், சிறப்புக் கடனீட்டுப்பத்திரங்களின் மதிப்பு ரூ.14.26 கோடியாகவு மிருந்தன. அதன் இதரக் கடன்கள் ரூ.0.31 கோடிக்கு இருந்தன. மொத்தக் கடன் வாங்குதல் ரூ.107.34 கோடியாக இருந்தன. வங்கியின் மொத்த நடைமுறை மூலதனம் ரூ.119.23 கோடியாக இருந்தது. வங்கியால் செய்யப்பட்டிருந்த முதலீடுகள், கடன் கழிவுநிதியில் ரூ.22.37 கோடியாகவும், பொது முதலீடுகளிலும் காப்பு நிதியிலும் ரூ.2.34 கோடியாகவு மிருந்தன. 1971—72ஆம் ஆண்டின்போது, வங்கி 24.24 கோடி யளவுக்குக் கடன்கள் வழங்கி ரூ.6.51 கோடிக்குக் கடன் வசூலைச் செய்தது. வங்கிக்கு வரவேண்டிய கடன்களின் நிலுவை ரூ.89.40 கோடியாக இருந்தது. இதில், ரூ.0.14 கோடி தவணைகடந்த பாக்கிகளாக இருந்தன. கேட்பிற்குத் தவணை கடந்த பாக்கிகளின் சதவிகிதம் 2.1 சதவிகிதமாக விருந்தது. வங்கி ரூ.0.93 கோடித் தொகைக்கு நிகர இலாபத்தை ஈட்டி, 6 சதவிகிதம் ஓர் இலாப ஈவை அறிவித்தது.

**பிரதம நிலவள வங்கிகள் — அனைத்திந்திய நிலவரம்:** 30—6—72ஆம் நாளன்று, பிரதம நிலவள வங்கிகளின் எண்ணிக்கை (மைய வங்கிகளின் மூன்று நில அடைமானப் பிரிவுகள் உட்பட) 869ஆக விருந்தது. இவற்றுள், 577 பிரதம வங்கிகள் ஆந்திரப் பிரதேசம், மைசூர், தமிழ்நாடு

ஆகிய மாநிலங்களில் இயங்கி வந்தன. பிரதம நிலவள வங்கிகளின் உறுப்பினர் எண்ணிக்கை 39 இலட்சமாக இருந்தது. (முறையான உறுப்பினர்கள் 25 இலட்சமாகவும், பெயரளவு உறுப்பினர்கள் 14 இலட்சமாகவு மிருந்தனர்.) வங்கிகளின் செலுத்தப்பட்ட பங்குமூலதனம் 48.12 கோடியாக விருந்தது. அவற்றின் காப்பிருப்புகள் ரூ.6.71 கோடியாக விருந்தன. அதில், சட்டப்படியான காப்பிருப்புகள் 3.09 கோடியாகவும், இதரக் காப்பிருப்புகள் ரூ.3.62 கோடியாகவு மிருந்தன. அவை வாங்கிய கடன்கள் ரூ.552.82 கோடியாகவும், வைப்புகள் ரூ.2.80 கோடியாகவு மிருந்தன. இவ் வங்கிகள் ரூ.30.81 கோடிக்குப் பொதுவான முதலீடுகளைச் செய்திருந்தன. அவற்றின் நடைமுறை மூலதனம் ரூ.673.52 கோடியாக விருந்தது. இவ் வங்கிகள் 71—72ஆம் ஆண்டின்போது, ரூ.104.48 கோடியளவுக்குக் கடன்கள் வழங்கி, ரூ.48.04 கோடிக்குக் கடன் வசூல் செய்தன. உறுப்பினர்களால் கொடுக்கப்பட வேண்டிய நிலுவைக்கடன்கள் ரூ.563.36 கோடிக்குத் தொகைப் பட்டன. 1972ஆம் ஆண்டிறுதியில் தவணை கடந்த பாக்கிகள் ரூ.17.60 கோடியாக விருந்தன. இது, கேட்புக்கு 26.8 சதவிகிதமாக விருந்தது. 576 பிரதம நிலவள வங்கிகள் ரூ.2.35 கோடி இலாபத்தில் இயங்கின. 280 வங்கிகள் ரூ.5.10 கோடி நட்டமடைந்தன. 13 வங்கிகள் இலாபமும், நட்டமுமில்லாமல் இயங்கின.

**தமிழ்நாட்டில் பிரதம நிலவள வங்கிகள்:** 30—6—72ஆம் நாளன்று, தமிழ்நாட்டில் 223 நிலவள வங்கிகள் 4,26,482 முறையான உறுப்பினர்களையும் 5,05,411 பெயரளவு உறுப்பினர்களையும் கொண்டிருந்தன. அவற்றின் செலுத்தப்பட்ட பங்குமூலதனம் ரூ.6.59 கோடியாகவும், மொத்தக் கையிருப்புகள் ரூ.0.69 கோடியாகவு மிருந்தன. சட்டப்படியான காப்புநிதி மட்டும் ரூ.0.5 கோடியாக விருந்தது. அவை வாங்கிய கடன்கள் ரூ.89.39 கோடியாகவும், வைப்புகள் ரூ.0.31 கோடியாகவு மிருந்தன. அவற்றின் நடைமுறை மூலதனம், 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் 5.27 கோடியாக இருந்தது. மொத்த முதலீடுகள் ரூ.69 கோடியாக விருந்தன. 71—72ஆம் ஆண்டின்போது, ரூ.22.33 கோடியளவுக்குக் கடன்களை வழங்கி, ரூ.5.73 கோடியளவுக்குக் கடன் வசூல் செய்தன. நிலுவையிலிருந்த கடன் தொகை ரூ. 92.35 கோடியாக இருந்தது. ஆண்டிறுதியில், தவணை கடந்த பாக்கிகள் ரூ.1.33 கோடியாக இருந்து, கேட்புக்கு

18.5 சதவிகிதமாக அமைந் திருந்தன. இவ் வங்கிகள் 71—72 ஆம் ஆண்டின்போது ரூ.0.34 கோடி இலாபத்தில் இயங்கின.

நாடு முழுவதிலும் மற்றும் தமிழ்நாட்டிலும் மைய நிலவள வங்கிகளும், பிரதம நிலவள வங்கிகளும் அடைந்த பொது முன்னேற்றத்தைக் காண்பிக்கும் விவரப்பட்டியல், இப் பிரிவுக்குப் பிற்சேர்க்கை 1ஆகக் கொடுக்கப்பட்டுள்ளது. பிற்சேர்க்கையில், அடைப்புக் குறியிலுள்ள எண்கள் தமிழ் நாட்டிற்குத் தொடர்பானவை.

## 6. தமிழ்நாட்டில், நிலவள வங்கிகளின் அமைப்பும் நிருவாகமும்

**பிரதம நிலவள வங்கி**: தமிழ்நாட்டில் ஒரு பிரதம நிலவள வங்கியின் அலுவலெல்லை 1 அல்லது 2 சமுதாய வளர்ச்சி வட்டாரங்களுக்கு நீடிக்கின்றது. பிரதம நிலவள வங்கிகளின் அலுவலெல்லையில் மேற்படிவு எதுவுங் கிடையாது. வங்கியின் அலுவலெல்லையில் நிலத்தையுடைய விவசாயிகளும் அல்லது நிலத்தைப் பயிரிடும் விவசாயிகளும் நிலவள வங்கியின் உறுப்பினர்க ளாவதற்குத் தகுதி பெற்றவர்களாவர். 30—6—72ஆம் நாளன்று, 223 எண்ணிக்கையுள்ள பிரதம நிலவள வங்கிகள் 4,26,482 முறையான உறுப்பினர்களையும், 50,544 பெயரளவு உறுப்பினர்களையுங் கொண்டிருந்தன. ஒரு நிலவள வங்கியின் நிர்வாகக்குழு, பொதுவாக 9 இயக்குநர்களைக் கொண்டுள்ளது. அவர்களில், நிருவாகக்குழுவை வங்கி எல்லை முழுவதற்கும் பிரதிநிதித்துவங் கொண்டதாகச் செய்யும் பொருட்டு, ஒவ்வொரு நிலத் தொகுதிக்கு ஒருவர் வீதம் எல்லா உறுப்பினர்களாலும் எழுவரும், நிலத்தொகுதிக்குத் தொடர்பில்லாமல் கடன் வாங்காத உறுப்பினர்களிடமிருந்து இருவரும் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். வங்கியின் நிர்வாகம் வங்கியின் இயக்குநர்கள் வச முள்ளது.

**தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு நிலவள வங்கி**: பிரதம நிலவள வங்கிகள் மாநில நிலவள வங்கியின் உறுப்பினர்களாக வுள்ளனர். ஒரு சில தனி நபர்களுங்கூட வங்கியின் உறுப்பினர்களாக வுள்ளனர். 1953ஆம் ஆண்டிலிருந்து தனி நபர்கள் உறுப்பினர்களாகச் சேர்தல் நிறுத்தப்பட்டது. இப்பொழுது மாநில நிலவள வங்கியின் அங்கத்துவம், பிரதம நிலவள வங்கிகளுக்கு மட்டுமே உரியது. 30—6—73ஆம் நாளன்று மாநில வங்கியில் 223 பிரதம நிலவள வங்கிகளும் 769 தனி நபர்களும் மாநில அரசும் உறுப்பினர்களாக விருந்தனர். 1970ஆம் ஆண்டு வரை, வங்கியின் நிருவாகம் பிரதம

நிலவள வங்கிகளின் 18 பிரதிநிதிகளும், தனிநபர் உறுப்பினர்களின் ஒரு பிரதிநிதியும், கடனீட்டுப்பத்திரங்கள் வாங்கியவர்களுக்குப் பிரதிநிதியாகக் கூட்டுறவுப் பதிவாளரின் 2 நியமிகளும், அலுவலால்—இயக்குநராகப் பதிவாளரும் அடங்கிய 22 இயக்குநர்களைக்கொண்ட ஒரு குழுவச மிருந்தது. 1970ஆம் ஆண்டுச் சூனில், தமிழ்நாட்டரசு, தமிழ்நாட்டுக் கூட்டுறவு நிலவள வங்கிகளின் சட்டத்தின்கீழ் (1934) மாநில நிலவள வங்கியின் நிர்வாகத்தைக் குறித்த விதிகளை நிருணயித்தது. வங்கியின் தற்போதைய நிருவாகம் இவ் விதிகளுக்கிணங்க அமைக்கப்பட்டுள்ளது. இப்பொழுது நிர்வாகக் குழு 57 இயக்குநர்களைக் கொண்டுள்ளது. அதாவது, பிரதம நிலவள வங்கிகளால் மாவட்டங்களிலிருந்து தங்களுக்கிடையேயிருந்து மாவட்டத்திலுள்ள பிரதம நிலவள வங்கிகளின் தலைவர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட 45 பிரதிநிதிகளும், பதிவாளரால் நியமிக்கப்பட்ட 10 இயக்குநர்களும், அரசின் நியமியாகக் கூடுதலான பதிவாளரும் (கடன்) தமிழ்நாடு அரசால் அமர்த்தப்பட்ட வங்கியின் ஒரு மேலாண்மை இயக்குநரும், பதிவாளரால் நியமிக்கப்பட்ட 10 இயக்குநர்களுள், மூவர் கடனீட்டுப்பத்திரங்கள் வாங்கியவர்களுக்குப் பிரதிநிதிகளாகவும், மூவர் சிறு குடியானவர்களுக்குப் பிரதிநிதிகளாகவும், மூவர் அட்டவணைச் சாதியினரைச் சேர்ந்தவராகவும், ஒருவர் அட்டவணை மலைச்சாதியினரைச் சேர்ந்தவராகவும் இருப்பர். வங்கியின் தலைவரும் துணைத் தலைவரும் வங்கியின் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். அரசு நியமி அதாவது கூடுதலான பதிவாளர் (கடன்) உட்பட 11 இயக்குநர்களைக்கொண்ட ஒரு செயற்குழுவுங் கூட வுள்ளது. செய்ற்குழுவிற்கு நிருவாகக்குழுவின் சில அதிகாரங்கள் ஒப்படைக்கப்பட்டுள்ளன. அரசால் அமர்த்தப்பட்ட வங்கியின் தலைமை நிருவாக அதிகாரியுங்கூட அதன் இயக்குநர்களுள் ஒருவராகவுள்ளார்.

## 7. எவ்வாறு நிலவள வங்கிகள் நிதிகளைத் திரட்டுகின்றன?

பிரதம நிலவள வங்கிகள் (1) பங்கு மூலதனம் வாயிலாகவும், (2) நுழைவுக் கட்டணம், இதரக் கட்டணங்கள் மூலமும், (3) மைய நிலவள வங்கியிடமிருந்து கடன்கள் வாயிலாகவும், (4) ஏதாவது உதவித்தொகைகள், மானியங்கள் மூலமாகவும், (5) தங்கள் சொந்தநிதிகள் மூலமாகவும் நிதிகளைத் திரட்டுகின்றன. மைய நிலவள வங்கி பின்வருமாறு நிதிகளைத் திரட்டுகின்றது. (1) பங்கு மூலதனம், (2) நுழைவுக் கட்டணங்களும், இதரக் கட்டணங்களும், (3) கடனீட்டுப்

பத்திரங்கள் வெளியிடுதல் வழிக் கடனைப் பெறுதல், (4) இந்திய தேசிய வங்கியிடமிருந்தும் அல்லது மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்தும் அல்லது ஏதாவதொரு வாணிக வங்கியிடமிருந்தும் கடனீட்டுப்பத்திரங்களை வெளியிடுவதற்கு முன்பு தாற்காலிக முன்கடன்களைப் பெறுதல், (5) ஏதாவது உதவித் தொகைகளையும், மானியங்களையும் பெறுதல், (6) தங்கள் சொந்தக் காப்பு நிதிகள், (7) தங்களால் ஏற்கப்பட்ட நிலையான வைப்புகள், நீண்டகாலக் கடனை வழங்குவதற்காகக் கடனீட்டுப் பத்திரங்களை வழங்குவதன்மூலமும் வேறுவிதமாகவும் நிதிகளைத் திரட்டும் பணி பிரதானமாக மைய நிலவள வங்கியின்பாற் பட்டதாகும்.

**பிரதம நிலவள வங்கிகள் (பங்கு மூலதனம்) :** தமிழ் நாட்டில் பிரதம நிலவள வங்கிகள் 30–6–72ஆம் நாளன்று ரூ.6.59 கோடித் தொகைக்குச் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தைப் பெற்றிருந்தன. இதில், அரசினரின் பங்கு மூலதனம் ரூ.60.30 இலட்சமாக இருந்தது. பிரதம நிலவள வங்கி உறுப்பினர்களிட மிருந்து அவர்கள் வாங்கும் கடன்களின் 5 சதவிகிதத்தைப் பங்கு மூலதனமாக வசூலிக்கிறது. இதில், 3 சதவிகிதத்தைப் பிரதம நிலவள வங்கி மாநில நிலவள வங்கியில் பங்குகளாக முதலீடு செய்து எஞ்சிய 2 சதவிகிதத்தைத் தன் பங்கு மூலதனமாக வைத்துக்கொள்கிறது. பிரதம நிலவள வங்கிகள் தங்களால் தேவைப்படும் நிதியை மைய நிலவள வங்கியிடமிருந்து பெறுகின்றன. ஒரு வங்கி ஒரு சமயத்தில் வாங்கக்கூடிய கடன் உச்ச அளவு, அதன் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்திலும், காப்பு இருப்புகளிலும் 20 மடங்குகளுக்கு வரையறுக்கப்பட்டுள்ளது.

## 8. தமிழ்நாடு கூட்டுறவு மாநில நிலவள வங்கியால் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியிடுதல்

**(i) பங்குமூலதனம்:** 1973ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், தமிழ்நாடு மாநில நிலவள வங்கி ரூ.6.36 கோடிக்குப் பங்கு மூலதனத்தைப் பெற்றிருந்தது. இதில், 223 பிரதம நிலவள வங்கிகளா லளிக்கப்பட்ட ரூ.4.66 கோடியும், அரசினரால் அளிக்கப்பட்ட ரூ.1.70 கோடியும் 172 தனி நபர் உறுப்பினர்களா லளிக்கப்பட்ட ரூ.28,5000-ம் அடங்கி யிருந்தன. ஒரு பங்கின் மதிப்பு ரூ.100 ஆகும். பிரதம நிலவள வங்கிகள், தங்களால் வாங்கப்பட்ட கடன்களில் 3 சதவிகிதம் பங்கு மூலதனத்திற்கு அளிக்கவேண்டும். வங்கியின் கடன் வாங்குமளவு, செலுத்தப்

பட்ட பங்கு மூலதனத்திலும், காப்பிருப்புகளிலும் 25 மடங்குகளாகும்.

(ii) **கடனீட்டுப்பத்திரங்கள்:** மைய நிலவள வங்கி நிதிகளைத் திரட்டுவதற்காக அனுசரிக்கப்படும் முக்கிய ஏற்பாடு கடனீட்டுப்பத்திரங்கள் (Debentures) வெளியிடுவதன் மூலமாக அமைந்துள்ளது.

தமிழ்நாடு மாநில நிலவள வங்கியால் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவதற்கான நடைமுறை பின்வருமாறு: ரிசர்வ் வங்கியின் ஆலோசனையின்மீது, ஆண்டுக் கொருமுறை அல்லது இருமுறை, ஏறக்குறைய ஒரு பெரிய தொகைக்குச் சாதகமான காலங்களின்போது, ஒரு சரியான அளவுள்ள தொகைக்கான அடைமானங்கள் சேர்ந்தவுடன், கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவதற்கு வங்கி முடிவு செய்கிறது. கடன் வாங்குபவர்களால் பிரதம நிலவள வங்கிகளுக்குச் சாதகமாக நிறைவேற்றப்பட்டு, மாநில நிலவள வங்கிக்கு ஒப்பளிக்கப்பட்ட அடைமானங்களின் ஆதாரத்தின்மீதும், வங்கியின் இதர ஆஸ்திகளின்மீதும், கடனீட்டுப்பத்திரங்களை வங்கி வெளியிடுகிறது. கடனீட்டுப்பத்திரங்கள், அவை முதல் அடைமானங்களால் தழுவப்பட்ட அளவுக்கு மட்டுமே வெளியிடப்பட முடியும். எந்தச் சமயத்திலும் சுழற்சியிலிருக்கும் கடனீட்டுப்பத்திரங்களின் மொத்த மதிப்பானது, அடைமானங்களின்மீது வரவேண்டிய மொத்தத் தொகைகளுக்கும் பொறுப்பாளர் (Trustee) கையில் எஞ்சியுள்ள தொகைக்கும், வங்கியின் இதர ஆஸ்திகளின் மதிப்பிற்கும் மேற்படக் கூடாது. எனவே, மைய நிலவள வங்கி, முதலில் போதிய ஆஸ்திகளை ஏற்படுத்திக்கொண்டு, பிறகு அவ் வாஸ்திகளின் ஆதாரத்தின்மீது கடனீட்டுப்பத்திரங்களை வெளியிடுவது அவசியமாக வுள்ளது.

அத்தகைய ஆஸ்திகளைப் பெறுதல் பொருட்டு மைய நிலவள வங்கிகள், தாற்காலிக முன்கடன் (temporary advance) என்று வழங்கப்படும், கடனைப் பெறுகின்றன. பல்வேறு மாகாணங்களில் பல்வேறு ஆதாரங்களிலிருந்து இந்த இடைக்கால நிதியை வங்கிகள் ஏற்பாடு செய்கின்றன. தமிழ்நாட்டில், 1960ஆம் ஆண்டுவரை, அரசு இடைக்கால நிதியை வழங்கியது. நாடு முன்னேற்றத்திற்கான பல நடவடிக்கைகள் காரணமாக அரசுக்கு அதிகரித்துவரும் பொறுப்பினாலும், பிரதம நிலவள வங்கிகளின் தேவைகளைப் பூர்த்தி செய்

வதற்கு மைய நிலவள வங்கியின்மீது அதிகரித்துவரும் கேட்பினுலும் அரசு உத்தரவாதத்தின் பேரில் ரொக்கக் கடன் வாயிலாக, இந்திய ஸ்டேட் வங்கியிடமிருந்து தனக்குத் தேவைப்படும் இடைக்கால நிதியை வங்கி பெறுவதற்கு, ஒரு மாற்று ஏற்பாடு செய்யப்பட்டது.

இப்பொழுது எல்லா மாநிலங்களிலும், மைய நிலவள வங்கிகள் இந்த இடைக்கால நிதியை, இந்திய ஸ்டேட் வங்கி யிடமிருந்து, கிரமமான மாநில அரசுகளின் உத்தரவாதத் தின்பேரில், கீழ்க்காணும் நிபந்தனைகள்மீது பெறுகின்றன.

(i) இடைக்கால நிதித்தொகை, வெளியிடப்பட்ட கடனீட்டுப்பத்திரங்கள் மூலம் கிடைத்த பணத்திலிருந்து, கடனீட்டுப்பத்திரங்கள் வாங்கப்பட்ட உடனே திருப்பிச் செலுத்தப்பட வேண்டும்.

(ii) இடைக்கால நிதித்தொகையும், நடப்பிலுள்ள கடனீட்டுப்பத்திரங்களின் தொகையும், அரசா லளிக்கப்பட்ட உயர்ந்தபட்ச உத்தரவாதத்திற்கு மேற்படக்கூடாது.

(iii) இடைக்கால நிதியுதவியிலிருந்து ஏற்படுத்தப்பட்ட அடைமானங்களின்மீது இந்திய தேசிய வங்கி முதலீடு பெற்றுள்ளது.

ஒருசில சூழ்நிலைகளில், மைய நிலவள வங்கிகள், இந் திய ஸ்டேட் வங்கியிடமிருந்து பெறும் இடைக்கால நிதிக்குக் கூடுதலாக, தலைமைக் கூட்டுறவு வங்கியிடமிருந்து தாற்காலிக முன்கடன்களைப் பெறுகின்றன. அத்தகைய மைய நிலவள வங்கிகளுள், தமிழ்நாடு மாநில நிலவள வங்கியு மொன்று. 1972—73ஆம் ஆண்டின்போது, தமிழ்நாடு மாநில நிலவள வங்கி, இடைக்கால நிதிவாயிலாக இந்திய ஸ்டேட் வங்கியிட மிருந்தும், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்தும், முறையே ரூ. 120 இலட்சத்திற்கும், ரூ. 200 இலட்சத்திற் கும் ரொக்கக் கடன் வரம்புகளைப் பெற்றிருந்தது. இவை யன்றியும், கானரா வங்கி, தமிழ்நாடு மாநில நிலவள வங்கிக்கு ரூ. 100 இலட்சத்திற்குச் சுத்த ரொக்கக்கடன் வரம்பை வழங்கியது. மைய நிலவள வங்கி, ரூ. 20 இலட்சத்திற்கு மாவட்டக் கூட்டுறவு மைய வங்கிகளிட மிருந்துங்கூட, ரொக்கக் கடன் வசதிகளைப் பெற்றிருந்தது.

### பொறுப்பாளர் நியமனமும், அவருடைய அதிகாரங்களும்

கடனீட்டுப்பத்திரங்களை வெளியிடுவதற்கு முன்பு, மைய நிலவள வங்கி, கடனீட்டுப்பத்திரங்களை வாங்கியவர்

களின் நலன்களைப் பாதுகாப்பதற்காக, ஒரு பொறுப்பாளரை (Trustee) நியமிக்கின்ற அரசிடமிருந்து, தேவைப்படும் உத்தரவாதத்தைப் பெறவேண்டும். கிட்டத்தட்ட எல்லா மாநிலங்களிலும், கூட்டுறவுப் பதிவாளரே பொறுப்பாளராக நியமிக்கப்பட்டிருக்கின்றனர். தமிழ்நாட்டில், நிலவள வங்கிகள், சட்டத்தின் 5—வது பிரிவின்கீழ், அரசு, கூடுதலான கூட்டுறவுப் பதிவாளரைப் (கடன்) (Additional Registrar (Credit) பொறுப்பாளராக நியமித்துள்ளது. கடனீட்டுப்பத்திரங்கள் வாங்கியவர்களுக்கு, மாநில நிலவள வங்கி அதன் கடமைகளை நிறைவேற்றுவதற்காக, அவர் கண்காணிப்பார். இச் சட்டப் பிரிவின் காரணமாக, நிலவள வங்கிகளின் சட்டப்பிரிவு (23அ-வின்) சரத்துகளின்படி, மாநில நிலவள வங்கிக்கு மாற்றப்பட்ட அல்லது மாற்றப்பட்டதாகக் கருதப்பட்ட எல்லா அடைமானங்களும், எல்லா ஆஸ்திகளும் மாற்றப்படும் நாளிலிருந்து, பொறுப்பாளர் வசம் சுவாதீனம் செய்யப்பட்டிருக்கும். ஒரு நம்பிக்கைப் பத்திரம் (trust deed) ஒரு புறம் மாநில வங்கியாலும், மறுபுறம் பொறுப்பாளராலும், நிறைவேற்றப்படுகிறது. இந்த நம்பிக்கைப் பத்திரத்தின் சரத்துகளுக் கிணங்க, முதல் அடைமானங்களும் இதர ஆஸ்திகளுமடங்கிய வங்கியின் ஆஸ்திகள் பொறுப்பாளர் சுவாதீனத்தில் இருக்கும். அதன் பின்னர், பொறுப்பாளர், கடனீட்டுப் பத்திரங்கள் வாங்கியவர்களுக்காக வங்கியின் கடமைகளை விரைவில் நிறைவேற்றி வைப்பதற்குப் பொறுப்பாளியாகிறார். நிலவள வங்கிகள் சட்டத்தின் 4ஆவது பிரிவின்கீழ், பொறுப்பாளரின் முன்அனுமதியைப் பெற்றுத்தான், வங்கியால் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியிடப்படலாம். கடனீட்டுப்பத்திரங்கள் வெளியீட்டின் நிபந்தனைகளையும், கடனீட்டுப்பத்திரங்களை யுடையவர்களுக்குச் செலுத்தப்பட வேண்டிய வட்டி விகிதம் முதலியவற்றையும் நிருணயிப்பதற்கு, இறுதி அதிகாரியாக ரிசர்வ் வங்கியின் அங்கீகாரமும்கூட, கடனீட்டுப் பத்திரங்கள் வெளியிடப்படுவதற்கு முன்பு பெறப்படுகிறது. நிலவள வங்கிச் சட்டத்தின் 25ஆவது பிரிவின்கீழ், பொறுப்பாளர், ஒரு பிரதம நிலவள வங்கியின் நிர்வாகக் குழுவைத் தவணை தவறிய ஒரு பாக்கிதாரர்மீது அவர் கொடுக்க வேண்டிய கடனை வசூல் செய்வதற்கு நடவடிக்கையெடுக்க வேண்டுமென்று கட்டளையிடலாம். அக் குழு நடவடிக்கை யெடுக்கத் தவறினால், பொறுப்பாளரே கடன்பாக்கியை வசூல் செய்வதற்காகப் பாக்கிதாரர்மீது நடவடிக்கையைத் தொடங்கலாம்.

**கடனீட்டுப்பத்திரங்களின் காலவரையும், கடனீட்டுப்பத்திரங்கள் வெளியீட்டின் நிபந்தனைகளும்**

**சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்கள் :** தமிழ்நாடு மாநில நிலவள வங்கி, சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்களை, ரிசர்வ் வங்கியின் இசைவுடனும், பொறுப்பாளராக நியமிக்கப் பட்ட கூடுதலான பதிவாளரின் இசைவுடனும் அவ்வப்போது வெளியிடுகிறது. வட்டி 6 மாதத்திற்கொருமுறை செலுத்தப் பட வேண்டும். கடனீட்டுப்பத்திரங்களுக்காகத் தான் எந்த வரம்பு வரைக்கும் உத்தரவாதம் இருக்கவேண்டுமென்பதை, மாநில அரசு நிருணயிக்கிறது. இந்த வரம்பு, கடனீட்டுப் பத்திரங்களின் வெளியீட்டிற்கான அவசியத்தைக் குறித்துக் காலமுறையாக உயர்த்தப்பட்டுள்ளது. 1968ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில், இந்த வரம்பு ரூ. 45 கோடிக்கு உயர்த் தப்பட்டது. 1972ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் இந்த வரம்பு ரூ. 125 கோடியாக விருந்தது. இந்த வரம்பிற் கெதிரே, சுழற்சியிலிருக்கும் கடனீட்டுப்பத்திரங்களின் மதிப்பு, 30–6–72ஆம் நாளன்று, ரூ.106.72 கோடியாக விருந்தது. தற்போது, அரசு உத்தரவாதம் ரூ. 175 கோடி வரம்பு வரைக்கு முள்ளது. இக் கடனீட்டுப்பத்திரங்களின் காலவரை, 1955ஆம் ஆண்டு வரை 20 ஆண்டுகளாக இருப்பது வழக்கம். இவ் வாண்டில், 15 ஆண்டுகளுக்காகவுங்கூடக் கடனீட்டுப்பத் திரங்கள் வெளியிடப்பட்டன. 20 ஆண்டுகளுக்கான கடனீட்டுப் பத்திரங்களின் வெளியீடு, 1964ஆம் ஆண்டில் முற்றிலும் நிறுத்தப்பட்டது. ஏனென்றால், 12 அல்லது 15 அல்லது 10 ஆண்டுகள் குறுகிய காலத்திற்காக வெளியிடப்படுகின்ற கட னீட்டுப்பத்திரங்கள் பொதுமக்களால் அதிகமாக வரவேற் கப்பட்டு, ஓர் அதிகமான மொத்த மூலதனத்தை யளித்தன. 30–6–73ஆம் நாளன்று, சுழற்சியிலிருந்த சாதாரணக் கடனீட் டுப்பத்திரங்களின் மதிப்பு 98.53 கோடியாக விருந்தது. ஆயுள் காப்பீட்டுக் கழகமும், இதர நிலவள வங்கிகளும், வாணிக வங்கிகளும், இந்திய ஸ்டேட் வங்கியும், தமிழ்நாடு அரசும், இந்திய அரசும், ரிசர்வ் வங்கியும், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியும், மாநிலத்திலுள்ள மத்தியக் கூட்டுறவு வங்கிகளும் பொதுவாக இக் கடனீட்டுப்பத்திரங்களை வாங்கு கின்றன.

**கிராமக் கடனீட்டுப்பத்திரங்கள்** (Rural Debentures) : 1957ஆம் ஆண்டிலிருந்து, கிராமக் கடனீட்டுப்பத்திரங்கள் என்று வழங்கப்பட்ட ஒரு புதுவகையான கடனீட்டுப்பத்திரங்கள்,

ரிசர்வ் வங்கியின் முன்முயற்சியின் பேரிலும், சிறப்புதவியைக் கொண்டும் வெளியிடப்பட்டு வந்தன. கிராமச் சேமிப்புகளைத் திரட்டும் பொருட்டு, அனைத்திந்தியக் கிராமக்கடன் விசாரணைக் குழுவால் செய்யப்பட்ட ஆலோசனையைப் பின்பற்றி, இவை வெளியிடப்பட்டன. கிராமக் கடனீட்டுப்பத்திரங்கள் தனி நபர்களால் மட்டும் வாங்கப்பட வேண்டுமென்றுள்ளது. தனிநபர்களால் வாங்கப்பட்ட ஒவ்வொரு ரூபாய் 7-க்கும் ரிசர்வ் வங்கி ரூ. 8 உதவியது. அதாவது, இத் திட்டத்தின் கீழ் வெளியிடப்பட்ட மொத்தக் கடனீட்டுப்பத்திரங்களின் 8/15 பாகம் ரிசர்வ் வங்கியால் வாங்கப்பட்டது. எஞ்சியுள்ள 7/15 பாகம், தனிநபர்களால் வாங்கப்பட வேண்டும். ஒவ்வொரு வெளியீடும், இரண்டு பாகங்களில் வெளியிடப்படுகின்றன. ஒரு பாகம், 15 ஆண்டுகளுக்காக வெளியிடப்பட்டு, அவை முற்றிலும், ரிசர்வ் வங்கியால் எடுத்துக்கொள்ளப்படுகின்றன. மற்றொரு பாகம், 7 ஆண்டுகளுக்காக வெளியிடப்பட்டு, தனிநபர்களால் மட்டும் வாங்கப்படுவதற்கு விடப்படுகின்றது. ரிசர்வ் வங்கிக்கு அளிக்கப்படுகின்ற வட்டி $5\frac{1}{2}$ சதவிகிதமாகவும், தனிநபர்களுக்கு அளிக்கப்படும் கிராமக் கடனீட்டுப் பத்திரங்கள்மீது, அதைவிடக் கவர்ச்சிகரமான வட்டி விகிதத்தில் அதாவது, $6\frac{1}{2}$ சதவிகிதத்தில் வட்டி வழங்கப்படுகின்றது. தனி நபர்களுக்கான கடனீட்டுப்பத்திரங்களின் காலவரை 7 ஆண்டுகளாகவும், ரிசர்வ் வங்கிக்கான கடனீட்டுப்பத்திரங்களின் காலவரை 15 ஆண்டுகளுக்காகவுமுள்ளன. மைய நிலவள வங்கிகள் கிராமச் சேமிப்புகளைத் திரட்டுவதில் அவைகளுக்கு உதவிபுரிவதற்காக இச் சலுகைகள் ரிசர்வ் வங்கியால் அளிக்கப்படுகின்றன. 1973ஆம் ஆண்டுச் ஜூன் மாத இறுதியில் தமிழ்நாடு மாநில நிலவள வங்கியால் வெளியிடப்பட்ட கிராமக் கடனீட்டுப்பத்திரங்களின் மதிப்பு ரூ. 2.30 கோடியாக விருந்தது.

நாட்டிலுள்ள மாநில நிலவள வங்கிகள், கிராமக் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியீட்டின்மூலம், கிராமச் சேமிப்புகளைத் திரட்டுவதில் சங்கடங்களை அனுபவித்ததால், 2 ஆண்டுகள் காலவரைக்காக, நிலையான வைப்புகளை ஏற்றுக்கொள்வதற்கு, அவைகளுக்கு நிலையான வைப்புகளை ரிசர்வ் வங்கி அனுமதியளித்தது. இந்த நிலையான வைப்புகளின்மீது வட்டி, வாணிக வங்கிகளா லளிக்கப்படுகின்ற விகிதங்களில் அளிக்கப்படுகின்றது. 72—73ஆம் ஆண்டின்போது, தமிழ்நாடு மாநில நிலவள வங்கியால் செய்யப்பட்ட வசூல் தொகை ரூ. 23.50 இலட்சமாக விருந்தது. இது, முந்திய ஆண்டிலிருந்து கொண்டு

வரப்பட்ட வைப்புகளுடன் சேர்ந்து, ரூ. 34.56 இலட்சமாக விருந்தது.

**கிராமச் சேமிப்புகள் திரட்டுதலைச் சாதாரணக் கடனீட்டுப் பத்திரங்கள் திட்டத்துடன் இணைத்தல் :** மாநில நிலவள வங்கிகள், ரிசர்வ் வங்கியின் அறிவுரைக்கு இணங்கக் கிராமக் கடனீட்டுப்பத்திரங்கள் / சான்றுகள் வெளியீட்டின்மூலமும், நிலையான வைப்புகளை ஏற்பதன் மூலமும், தங்கள் வருடாந்தரக் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியீட்டுத் திட்டத்தில் குறைந்த பட்சம் 5 சதவிகித அளவிற்குக் கிராமச் சேமிப்புகளைத் திரட்டுவதற்குத் தேவைப்படுகின்றன. கிராமச் சேமிப்புகளைத் திரட்டுவதில், பற்றுக்குறை ஏற்பட்டால், கடனீட்டுப்பத்திரங்கள் வெளியீட்டுத் திட்டத்ிற் களிக்கப்பட்ட ஆதரவில் ஒரு குறைப்புச் செய்யப்படுகிறது. இக் குறைப்பு, பற்றுக்குறைத் தொகையில் 10 மடங்குகள் அளவிற்கு இருக்கிறது.

**சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்கள்** (Special Development Debentures) **:** சிறப்புத் திட்டங்களுக்கான நிதியைத் திரட்டும் காரியங்களுக்காக, இக் கடனீட்டுப் பத்திரங்கள்கூட வங்கியால் வெளியிடப்பட்டுள்ளன. தன் இயல்பான செயல்திட்டங்களின்கீழ் மாநில நிலவள வங்கியால் அளிக்கப்படும் கடன்கள், மாநிலம் முழுவதிலும் சிதறியிருக்கின்றமையால், பெரிய நிலப்பரப்புகளை மீட்டல், பெருமளவில் கிணறுகளை வெட்டுதல், தேயிலை, ரப்பர், பாக்கு ஆகியவைகளுக்கான தனிப் பகுதிகளுக்காகத் தோட்டத் திட்டங்கள் போன்ற சிறப்புத் திட்டங்கள், தொழில் நுட்ப வல்லுநர்களால் பரிசீலிக்கப்பட்டு, விவசாய மறுநிதி வசதிக் கழகத்தாலும், மாநில அரசாலும் ஒப்பளிக்கப்படுகின்றன. 1963ஆம் ஆண்டில் தொடங்கப்பட்ட, விவசாய மறுநிதி வசதிக் கழகமும் இந்தக் கடனீட்டுப்பத்திரங்களை வாங்குகின்றன. இக் கழகம், கால்நடை வளர்ப்பு, பால்பண்ணை, செயற்கை மீன் வளர்ப்பு, கோழிப்பண்ணை உட்பட, விவசாய அபிவிருத்தியை வளர்க்கும் நோக்கத்துடன் தொடங்கப்பட்டது. கடனீட்டுப்பத்திரங்கள் வெளியீட்டிற்கு முன்பு, இத் திட்டங்களின்கீழ், குடியானவர்களுக்குக் கடன்கள் வழங்கப்படுகின்றன. இது, இந்திய ஸ்டேட் வங்கியாலும் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியாலும் அளிக்கப்படும் ரொக்கக் கடனுதவியைக் கொண்டு வழங்கப்படுகிறது. அடைமானங்கள் சேகரிக்கப்பட்டவுடன், சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்களின் தனி வரிசை, ஒவ்வொரு திட்டத்திற்காகவும், தமிழ்நாடு மாநில நிலவள

வங்கியால் வெளியிடப்படுகின்றது. விவசாய மறுநிதி வசதிக் கழகமும், மாநில அரசும், சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப் பத்திரங்களை வாங்குகின்றன. திட்டங்கள் சிறு பாசனத்திற்குத் தொடர்புள்ளவையாக இருந்தால், விவசாய மறுநிதி வசதிக் கழகத்தால் 90 சதவிகிதமும், மாநில அரசால் 10 சதவிகிதமும் கடனீட்டுப்பத்திரங்கள் வாங்கப்படுகின்றன. இதரத் திட்டங்கள் விஷயத்தில், விகிதம் 3:1 ஆக இருந்தது. 30–11–73ஆம் நாள்வரை, மறுநிதி வசதிக் கழகத் திட்டத்தின் கீழ், தமிழ்நாடு மாநில நிலவள வங்கியால் ரூ.19.14 கோடிக்கு வெளியிடப்பட்ட சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்களில், தமிழ்நாடு அரசும், விவசாய மறுநிதி வசதிக் கழகமும் முறையே ரூ.2.88 கோடிக்கும், ரூ.16.26 கோடிக்கும் கடனீட்டுப்பத்திரங்களை வாங்கின. 31–12–73ஆம் நாளன்று, சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்களின் மதிப்பு ரூ.28.71 கோடியாக இருந்தது.

எல்லாவகையான கடனீட்டுப்பத்திரங்கள் வாயிலாக, தமிழ்நாடு மாநில நிலவள வங்கியால் பெற்ற கடன்கள், 1973ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், ரூ. 128.17 கோடியாக இருந்தன. விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன:

| | (ரூபாய் கோடிக் கணக்கில்) |
|---|---|
| (அ) சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்கள் | 98.53 |
| (ஆ) சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்கள் | |
| (i) விவசாய மறுநிதி வசதிக் கழகத் திட்டங்களின் கீழ் | 18.52 |
| (ii) சர்வதேச அபிவிருத்திக் கழகத்துத் திட்டத்தின் கீழ் (I. D. A. Projects) | 8.82 |
| (இ) கிராமக் கடனீட்டுப் பத்திரங்கள் | 2.30 |
| மொத்தம் | 128.17 |

(I. D. A. International Development Association)

**கடனீட்டுப்பத்திரங்கள் மீட்பு நிதி** (Debenture Redemption Fund) **அல்லது கடன் கழிவு நிதி** (Sinking Fund): எல்லாவிதமான கடனீட்டுப்பத்திரங்களைத் தவணை முதிர்வுக் காலத்தில், கடனீட்டுப்பத்திரங்களை யுடையவர்களுக்குத் திருப்பிச் செலுத்துவதற்காக, மாநில நிலவள வங்கி, ''மாறாத் தவணைப் பண முறை'' (Fixed Instalment System) என்று வழங்கப்படும் ஒரு முறையின்கீழ், கடனீட்டுப்பத்திரங்கள் மீட்பு

நிதி ஒன்றைப் பராமரிக்கிறது. இந் நிதிக்கு, ஒவ்வோர் ஆண்டும் வசூலிலிருந்து கடனீட்டுப்பத்திரங்கள் வரிசையின் தொகையை அக் கடனீட்டுப்பத்திரங்கள் வெளியிடப்பட்ட ஆண்டுகள் எண்ணிக்கையால் வகுத்துப் பெற்ற தொகைக்குச் சமமான ஒரு தொகையானது செலுத்தப்படுகிறது. ரிசர்வ் வங்கியின் கட்டளைக் படி, கடனீட்டுப்பத்திரங்கள் மீட்பு நிதி, அரசாங்கக் கடன்பத் திரங்களிலும், பொறுப்பாளர் கடன்பத்திரங்களிலும், தமிழ் நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியில் நிலையான வைப்புகளிலும், இதர மைய நிலவள வங்கிகளின் கடனீட்டுப்பத்திரங்களிலும், 20 : 20 : 60 விகிதத்தில் முதலீடு செய்யப்படவேண்டும். 30—6—73ஆம் நாளன்று, இந் நிதியில் ரூ.30.26 கோடி இருந்தது.

**கடனீட்டுப்பத்திரங்களுக்கு வாங்குவதற் குண்டான ஆதாரங்கள்:** மைய நிலவள வங்கிகளால் வெளியிடப்படுகின்ற சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்கள், ரிசர்வ் வங்கி, ஆயுள் ஈட்டுறுதிக் கழகம், இந்திய ஸ்டேட் வங்கி, அரசு, வாணிக வங்கிகள், கூட்டுறவு வங்கிகள் குறிப்பாக, மையக் கூட்டுறவு வங்கிகள் போன்ற பல்வேறு நிறுவனங்களால் வாங்கப்படு கின்றன. ரிசர்வ் வங்கி, அவ்வப்போது பல்வேறு விகிதங் களில் கடனீட்டுப்பத்திரங்களை வாங்கி வந்துள்ளது. 1965ஆம் ஆண்டில் அது வாங்கியவை ஒவ்வொரு வரிசையில் 10 சத விகித அளவிற் கிருந்தது. பிந்திய ஆண்டுகளில், அது இன் னும் குறைவாக இருந்துள்ளது. ரிசர்வ் வங்கியால் அளிக்கப் படவேண்டிய ஆதரவின் அளவு, அப்போதைக்கப்போது தீர்மானிக்கப்படுகின்றது. ஆயுள் காப்பீட்டுக் கழகமும், இந்திய ஸ்டேட் வங்கியுங்கூடக் கடனீட்டுப்பத்திரங்களை, அதி கரித்து வரும் ஓர் அளவில் வாங்குகின்றன. மைய அரசும், மாநில அரசும் இக் கடனீட்டுப்பத்திரங்களில் முதலீடு செய் கின்றன. வாணிக வங்கிகளுங்கூட இக் கடனீட்டுப்பத்திரங் களுக்கு ஆதரவு அளிக்கின்றன. இவ் வங்கிகள் நாட்டுடைமை யாக்கப்பட்டதிலிருந்து, இவ் விஷயத்தில் இத் துறையில் அதிக மான பணியைப் புரியவேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றன. மைய நிலவள வங்கிகள், இதர மாநிலங்களிலுள்ள கடனீட் டுப்பத்திரங்கள் திட்டங்களுக்குத் தங்கள் கடன் கழிவுநிதியில் 60 சதவிகிதத்தைத் தங்கள் சகோதர நிலவள வங்கிகளின் கடனீட்டுப்பத்திரங்களில் முதலீடு செய்வதன் மூலம், ஆதர வளிப்பதற்கு, ரிசர்வ் வங்கியால் அனுமதிக்கப்பட்டுள்ளன. அவ்வாறு மாநிலக் கூட்டுறவு வங்கிகளும், மையக் கூட்டுறவு வங்கிகளுங்கூட மைய நிலவள வங்கிகளின் கடனீட்டுப்பத்தி

ரங்களில் முதலீடு செய்யலாம். தமிழ்நாடு மாநில நிலவள வங்கியின் கடனீட்டுப்பத்திரங்கள் கீழ்க்காணும் வகையில் வாங்கப்பட்டிருத்தல், 72—73ஆம் ஆண்டின்போது பல்வேறு நிறுவனங்களால் அளிக்கப்பட்ட ஆதரவைப் பற்றிய ஒரு கருத்தை அளிக்கும். 1972—73ஆம் ஆண்டின்போது, தமிழ் நாடு மாநில நிலவள வங்கியால் வெளியிடப்பட்ட கடனீட் டுப்பத்திரங்களின் மூன்று வரிசைகள் ரூ. 11.34 கோடி மதிப் புள்ளவையாக இருந்தன. இக் கடனீட்டுப்பத்திரங்களை வாங் கிய நிறுவனங்களின் விவரங்கள் கீழே தரப்பட்டுள்ளன.

(ரூபாய், இலட்சக் கணக்கில்)

| | |
|---|---|
| இந்திய அரசு | 173.93 |
| தமிழ்நாடு அரசு | 208.01 |
| வாணிக வங்கிகள் | 273.01 |
| இந்திய ரிசர்வ் வங்கி | . . |
| ஆயுள் ஈட்டுறுதிக் கழகம் | 174.00 |
| இந்திய ஸ்டேட் வங்கி | 35.74 |
| மாநில நிலவள வங்கிகள் | 140.50 |
| கூட்டுறவு நிறுவனங்கள் | 97.95 |
| வருங்காலச் சேமிப்புநிதி மத்திய ஆணையாளர் | 20.00 |
| இதர வகை | 10.96 |
| | 1,134.10 |

முன்னர்க் கூறியபடி, கிராமக் கடனீட்டுப்பத்திரங்கள் ரிசர்வ் வங்கியாலும், தனிநபர்களாலும், சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்கள் விவசாய மறுநிதி வசதிக் கழகத் தாலும், மாநில அரசுகளாலும் வாங்கப்படுகின்றன.

**சிக்கனத்தை ஊக்குவித்தலும், தமிழ்நாடு மாநில நிலவள வங்கிக்காக நிதியாதாரங்களைப் பெருக்குதலும்:** 1968ஆம் ஆண்டிலிருந்து, உறுப்பினர்களுக்கு அளிக்கப்படும் கடன்களில் 5 சதவிகிதத்தைக் கிராமக் கடனீட்டுப்பத்திரங் களுக்குச் சந்தாவாக, பட்டுவாடாச் சமயத்தில் வசூலிப்பது நடைமுறையாக இருந்துவந்தது. சென்னையில் கூட்டுறவு பற்றிய சந்தானம் குழுவினர், இந்த நடைமுறை கைவிடப் பட வேண்டுமென்றும், அதற்குப் பதிலாக வருடாந்தரத்

கடன் தவணையில் 5 சதவிகிதம் சிக்கன வைப்பாக வசூலிக்கப் பட வேண்டுமென்றும், இத் தொகை அவ்வப்போது கிராமக் கடனீட்டுப்பத்திரங்களாக மாற்றப்படலா மென்றும் பரி வுரை செய்தனர். இச் செயல்முறையை வசதிசெய்யும் பொருட்டு, ரூ. 50 இனத்திலுங்கூட, கிராமக் கடனீட்டுப் பத்திரங்கள் வழங்கப்படலாமென்றும் அக் குழுவினர் மேலும் யோசனை கூறியுள்ளனர்.

9. **கடன்கள் வழங்குதல்** : கடனீட்டுப்பத்திரங்கள் வெளி யிடுவதன்மூலம், மைய நிலவள வங்கிகளால் திரட்டப்படு கின்ற நிதிகள், பிரதம நிலவள வங்கிகள்மூலம் விவசாயி களுக்கு நீண்டகாலக் கடன்களாக வழங்கப்படுகின்றன. தொடக்கத்தில், மைய நிலவள வங்கிகள், பெரும்பாலும், அடைமானங்களை மீட்பதற்காகவும், அல்லது முன்கடன்களைத் தீர்ப்பதற்காகவும் நீண்டகாலக் கடன்கள் வழங்கிவந்தன. ஒரு சில ஆண்டுகள் முன்பு வரை, இப்படித்தா னிருந்தது. 1963ஆம் ஆண்டில், அபிவிருத்திக்கு வலியுறுத்தல் செய்யப் பட்டு, மொத்தக் கடன்களின் 70 சதவிகிதம் அதற்காக ஒதுக்கப்பட்டது. நிலச் சீர்திருத்தமும், கிணறுகளை வெட்டு தலும், ஆழப்படுத்துதலும், பம்புச் செட்டுகளை அமைத்தலும், இயந்திரக் கலப்பைகளையும் இதர விவசாயக் கருவிகளையும் வாங்குதலும், தோட்டங்களை அபிவிருத்தி செய்தலும் போன்ற காரியங்களுக்காக, 1964ஆம் ஆண்டிலிருந்து இச் சதவிகிதம் 80-க்கு உயர்த்தப்பட்டிருந்தது. தற்போது, ஏறக்குறைய 90 சதவிகிதம், விவசாய அபிவிருத்திக் காரியங் களுக்காக, நிலவள வங்கிகளால் கடன்கள் அளிக்கப்படுகின் றன. மாநில நிலவள வங்கிகளில் கடனளிப்புக் கொள்கையும் நடைமுறைகளும் விவசாய உற்பத்தித் தேவைகளுக்காகத் திருப்பம் செய்யப்பட்டன. இப்பொழுது பெரும்பாலான கடன்கள் சிறு பாசனத்திற்காகவும், ரிசர்வ் வங்கியின் ஆய் வுரைக் கிணங்க இதர உற்பத்தித் தேவைகளுக்காகவும் வழங் கப்படுகின்றன.

நிலவள வங்கிகளால் அளிக்கப்படும் கடன்கள், இரண்டு வகைகளின்கீழ்ப் பிரிக்கப்படலாம். அதாவது: (1) முந்திய பத்தியில் குறிப்பிடப்பட்ட காரியங்களுக்காக இயல்பான திட் டங்களின்கீழ்க் கடன்கள், (2) விவசாய மறுநிதி வசதித் திட்டங் களின்கீழ் அளிக்கப்படும் கடன்கள். இயல்பான திட்டங் களின்கீழ்க் கடன் வழங்குவதற்கான நிதியாதாரங்கள், மாநில நிலவள வங்கியால், சாதாரணக் கடனீட்டுப்பத்திரங்களைக்

காலமுறையாக வெளியிடுவதன்மூலம் திரட்டப்படுகின்றன. விவசாய மறுநிதி வசதிக் கழகம், அநேக சிறு பாசனத் திட்டங்களையும் சிறுபாசனமல்லாத திட்டங்களையும், மாநிலத்தில் அமல் செய்யப்படுவதற்காக ஒப்பளித்துள்ளது. இத் திட்டங்களுக்கான நிதியானது, மாநில நிலவள வங்கியால், அடைமானங்களைச் சேகரித்தவுடன் சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடுவதன்மூலம் திரட்டப்படுகின்றது. சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்கள், விவசாய மறுநிதி வசதிக் கழகத்தாலும், மாநில அரசாலும் வாங்கப்படுகின்றன.

**இயல்பான திட்டங்களின்கீழ் அளிக்கப்படும் கடன்கள்—அனைத்திந்திய நிலவரம் :—** 1967–68ஆம் ஆண்டிலிருந்து, பிரதம நிலவள வங்கிகளின் கடனளிப்பில், ஓர் ஆச்சரியகரமான முன்னேற்றம் இருந்திருக்கிறது. 1967–68ஆம் ஆண்டில், மாநில நிலவள வங்கிகள், ரூ. 635.72 இலட்சமளவிற்குக் கடன்கள் அளித்தன. 1969–70, 70–71, 71–72, 72–73ஆம் ஆண்டுகளின்போது இயல்பான திட்டங்களின் கீழ் வழங்கப்பட்ட கடன்கள், முறையே ரூ. 1,494.71 இலட்சமாகவும், ரூ. 1,907.5 இலட்சமாகவும், ரூ. 1,964.11 இலட்சமாகவும், ரூ. 1,165.44 இலட்சமாகவு மிருந்தன.

**நிலங்களை மதிப்பிடுதல் :—** விண்ணப்பதாரர்கள், தங்களின் உரிமை மாற்றமுடியாத உரிமைகளைக் கொண்ட நிலங்களின் அடைமானத்தின்மீது கடன்கள் வழங்கப்படுகின்றனர். கடன்தொகை அடைமானத்திற்காக அளிக்கப்படும் நிலத்தின் மதிப்பிற்குத் தொடர்பு கொண்டுள்ளது. நிலங்களின் இரண்டாம் உலகப் போருக்கு முற்பட்ட மதிப்பு, போருக்குப் பிற்பட்ட மதிப்பு ஆகியவற்றின் சராசரிக்குட்பட்டு, போருக்கு முற்பட்ட மதிப்பின்மீது 40 சதவிகிதம், நில மதிப்பீட்டின் அடிப்படையாக ஏற்கப்பட்டு வந்தது. 1960ஆம் ஆண்டிலிருந்து, விண்ணப்ப நாளுக்கு முந்திய ஐந்து ஆண்டுகள் காலத்தின் போது செய்யப்பட்ட விற்பனைகளின் சராசரியானது அடிப்படையாக ஏற்கப்படுகிறது. இவ்வாறு கணக்கிடப்பட்ட மதிப்பின் 40 சதவிகிதம் முன்கடன் தீர்ப்பதற்காகக் கடனாகக் கொடுக்கப்பட்டு வந்தது. நேரடியான நிலச் சீர்திருத்த விஷயத்தில், கடன்கள் அத்தகைய மதிப்பில் 50 சதவிகிதம் வரை கொடுக்கப்பட்டன. 1968ஆம் ஆண்டிலிருந்து, மதிப்பீட்டின் அடிப்படையானது முன்னிருந்தபடியே வைத்துக் கொள்ளப்பட்டிருந்தாலும், கடனுக்குள்ள அதன் தொடர்பு

திருத்தப்பட்டது. கிணறு வெட்டுதல், பழங்கிணறுகளை ஆழப் படுத்துதல், எண்ணெய் இயந்திரங்கள், மின்சார மோட்டார் கள், பம்புச்செட்டுகள் ஆகியவைகளை அமைத்தல், இயந்திரக் கலப்பைகளை வாங்குதல் போன்ற நிலச் சீர்திருத்தக் காரியங் களுக்கான கடன்கள், நிலமதிப்பில் 75 சதவிகிதம் கொடுக் கப்படுகின்றன. இதரக் காரியங்களுக்காக 50 சதவிகிதம் வரை கடன்க ளளிக்கப்படுகின்றன. எனினும், விவசாய மறுநிதி வசதிக் கழகத்தால் நிதி உதவப்படும் திட்டங்கள் விஷயத்தில், கடன் தொகை நிலமதிப்பில் 50 சதவிகிதமும், அபிவிருத்திச் செலவும் சேர்ந்த அளவுக்கு உள்ளது. பின்னர், 1971ஆம் ஆண்டில், நிலவள வங்கிக்கு அடைமானமாக அளிக்கப்படும் நிலங்கள் மாதிரி யான நிலங்களின் விற்பனைப் புள்ளி விவரங்களைக் கடந்த மூன் றுண்டுகளுக்கு வாங்குவதன்மூலம் நிலங்கள் மதிப்பீடு செய் யப்பட்டு, அவ் விற்பனை மதிப்பின் சராசரியானது நிலத்தின் மதிப்பாக எடுக்கப்பட்டது. பின்னர், சீர்திருத்தத்திற்குப் பிறகு நிலத்தின் நிகர வருமானத்தின் மதிப்பில் எட்டு அல்லது பத்து மடங்குகளுக்கு நிலங்கள் மதிப்பிடப்படலாமென்று அரசு உத்தரவிட்டது. அத்தகைய வருமானம், முதலீட்டுக்கு 12½ சதவிகிதம் அல்லது 10 சதவிகிதமென்று பாவிக்கப்பட்டு, நிலமதிப்பின் 50 சதவிகிதம் கடனுக அளிக்கப்படலாமென்றும் அரசு உத்தரவிட்டது. முந்திய முறையின்கீழ் உறுப்பினர் களின் திருப்பிச் செலுத்தும் சக்தி, நிலத்திலிருந்து கிடைக் கும் வருமானத்தைக் கொண்டும், நிலத்தைச் சாராத இதர வருமானத்தைக் கொண்டுங்கூடக் கணக்கிடப்பட்டது. இந்த முறை இப்பொழுது மாற்றப்பட்டு, தற்போது சீர்திருத்தத் திற்குப் பிறகு கிடைக்கின்ற கூடுதல் வருமானத்தில் 90 சத விகிதம், திருப்பிச் செலுத்தும் சக்தியை நிருணயிப்பதற்காக, ஆலோசனைக் கெடுக்கப்படுகிறது. சீர்திருத்தத்திற்கு முன்பு கிடைத்த வருமானத்திற்கும், சீர்திருத்தத்திற்குப் பின்பு கிடைக் கின்ற வருமானத்திற்கு மிடையேயுள்ள வேற்றுமையே, கூடுதலான வருமானமாக வுள்ளது.

அபிவிருத்திக்காகத் தேவைப்படும் கடன்களுக்காகப் போதிய ஆதாரத்தை வழங்க முடியாத சிறு குடியானவர் களுக் குதவும்பொருட்டு, 1963ஆம் ஆண்டில், 'எதிர்பார்க் கப்பட்ட மதிப்பை' ஏற்பதற்கும், வங்கிக்கு ஏற்படக்கூடிய நட்டத்திற்கு உத்தரவாதமளிப்பதற்கும், ஒரு திட்டம் தொடங் கப்பட்டது. பின்னர்த் திருத்தப்பட்டபடி, இத் திட்டத்திற் கிணங்க, அபிவிருத்திக் கடன் தொகை, நில மதிப்பின் 75 சதவிகிதமும் அபிவிருத்திச் செலவும் சேர்ந்த ஒரு தொகை

வரை, அல்லது அண்மையில் அபிவிருத்தியடைந்த நிலையிலிருக்கும் அதேமாதிரியான நிலங்களின் மதிப்பில் 50 சதவிகிதம், இவற்றுள் எது குறைவோ அந்தத் தொகைவரை இருக்கலாம். அபிவிருத்தி வேலை எதிர்பார்க்கப்பட்ட சீர்திருத்தத்தை விளைவிக்காத காரணத்தால் ஏதாவது நட்டமேற்பட்டால், அது அரசாலும் மைய நிலவள வங்கியாலும், பிரதம நிலவள வங்கியாலும், 4: 1: 1 விகிதத்தில் ஏற்கப்பட வேண்டும். இத்தகைய கடனளிப்பில், எவ்விதமான பாராட்டக்கூடிய முன்னேற்றமும் ஏற்படவில்லை.

## தனிநபர் உச்சக் கடனளவும், கடனளிப்பு நடைமுறையும்

1966ஆம் ஆண்டுவரை, தனிநபர் ஒருவர் ஒரு பிரதம நிலவள வங்கியிடமிருந்து எல்லாக் காரியங்களுக்காகவும் வாங்கக்கூடிய கடன் உச்ச அளவு, ரூ.10,000 ஆக இருந்தது. அந்த ஆண்டில், இயந்திரக் கலப்பைகள் வாங்குவதற்காகவும், கிணறுகள் வெட்டுவதற்காகவும், பம்புச் செட்டுகளை அமைப்பதற்காகவும் உச்சக் கடனளவு ரூ.10,000 ஆகவே இருந்து வந்தது. பல்வேறு காரியங்களுக்காகக் கொடுக்கப்படும் கடன் தொகைகளின் உச்ச அளவும், பல்வேறு காரியங்களுக்கான கடன்கள் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய உச்சக் கால வரைகளும், இவ் வத்தியாயத்திற்கு ஒரு பிற்சேர்க்கையாகக் (பிற்சேர்க்கை II) கொடுக்கப்பட்டுள்ளன.

ஓர் உறுப்பினரால் அனுப்பப்படும் கடன் விண்ணப்பம், பிரதம நிலவள வங்கி மட்டத்தில் பரிசீலிக்கப்படுகிறது. விண்ணப்பதாரர் தம் விண்ணப்பத்தில் கடன் காரியத்தைக் குறிப்பிட்டு, தம் கடன்கள், சொத்துகள், வருமானம் ஆகிய வற்றைப்பற்றிய விவரங்களையும், மற்றும், இதர நிதி சம்பந்தமான புள்ளிவிவரங்களையும் கொடுக்கவேண்டும். அடைமானத்திற்காக வழங்கப்படும் சொத்துகளுக்குத் தொடர்பான உரிமைப் பத்திரங்கள் அவரால் தாக்கல் செய்யப்பட வேண்டும். விண்ணப்பம் செய்யும்போது, அவர் ரூ.10 மதிப்புள்ள ஒரு பெயரளவுப் பங்கை எடுத்துக்கொள்ளலாம். வங்கியின் மேற்பார்வையாளர், அடைமானத்திற்காக வழங்கப்படும் நிலங்களை ஆய்வு செய்து, அவசியமான விவரங்களையும், ஆவணங்களையும் சேகரித்துத் தம் அறிக்கையைச் சமர்ப்பிக்கிறார். வில்லங்கச் சான்றிதழ் வாங்கப்பட்டு, உரிமைப்பத்திரம் மாநில நிலவள வங்கியின் சட்ட உதவியாளரால் பரிசீலிக்கப்பட்டு, அவர் தம் சட்டக் கருத்தை வழங்குகிறார். கடனளிப்பு நாளுக்கு முந்திய 13 ஆண்டுகள் காலத்திற்காக, பிரதம நிலவள வங்கி, வில்லங்கங்களைச்

சரிபார்த்தால் போதுமானது. பின்னர், நிலமதிப்பீடு அதிகாரியான கூட்டுறவுச் சார்பதிவாளருக்குக் கடன் விண்ணப்பம் அனுப்பப்படுகிறது. நில மதிப்பீடு முடிந்த பிறகு, அது மாவட்டத்திலுள்ள மாநில நிலவள வங்கியின் கிளைக்கு அனுப்பப்பட்டு, மாநில நிலவள வங்கியின் துணை மேலாளரால் (Deputy Manager) ஒப்பளிக்கப்படுகிறது. சிறு பாசனக் காரியங்களுக்காக ரூ. 10,000 வரை பிரதம நிலவள வங்கியே கடன்களை ஒப்பளிக்கலாம். இதர எல்லாக் கடன்களும், மாநில நிலவள வங்கியின் கிளையால் மட்டுந்தான் ஒப்பளிக்கப்பட வேண்டும். எனினும், கடன்தொகை ரூ. 15,000-க்கு மேற்பட்டால், கடன்கள் மாநில நிலவள வங்கியால் (தலைமை அலுவலகத்தால்) ஒப்பளிக்கப்பட வேண்டும். ஒரு கடன் விண்ணப்பம் ஒப்பளிக்கப்பட வேண்டிய உயர்ந்த பட்சக் காலவரை, ரூ.10,000 வரையுள்ள கடன் விண்ணப்பங்களுக்காக 45 நாள்களாகவும், ரூ. 10,000-க்கு மேற்பட்ட கடன்விண்ணப்பங்களுக்காக 45 நாள்களாகவும் நிருணயிக்கப்பட்டிருக்கிறது. ரூ.10,000-க்கு மேற்பட்டுக் கடன் தொகை விண்ணப்பிக்கப்பட்டு, அவ் விண்ணப்பம் நிலவள வங்கிகளின் துணைப்பதிவாளரால் ஆய்வு செய்யப்பட வேண்டியிருந்தால், அத்தகைய கடன் விண்ணப்பங்கள் 45 நாள்களுள் ஒப்பளிக்கப்பட வேண்டுமென்று நிருணயிக்கப்பட்டிருக்கின்றது. கடன் ஒப்பளிக்கப்பட்ட பிறகு, உறுப்பினர் ஓர் அடைமானப் பத்திரத்தை எழுதிக் கொடுத்து, எஞ்சியுள்ள பங்கு மூலதனத்தை உபவிதிகளின்படி செலுத்தி, கடன்தொகை, தவணைகளில் பட்டுவாடாச் செய்யப்படுகிறது. அடைமானப் பத்திரம் பிரதம நிலவள வங்கியால் மாநில நிலவள வங்கிக்கு அனுப்பப்படுகிறது. மாநில நிலவள வங்கி அதைப் பெற்றவுடன், பிரதம நிலவள வங்கிக்குக் கடன் தொகையை அனுப்பி வைக்கிறது.

**விவசாய மறுநிதி வசதிக் கழகத் திட்டங்களின்கீழ்க் கடன்கள்:** 1963ஆம் ஆண்டிலமைக்கப்பட்ட விவசாய மறுநிதி வசதிக் கழகம், மைய நிலவள வங்கிக்குப் பெருமளவில் உதவியளிக்கிறது. நீண்டகாலக் கடன் வசதிக்காக நடப்பிலுள்ள ஏற்பாடுகளை மாற்றாமல், இக் கழகம் மைய நிலவள வங்கியால், வெளியிடப்படும் சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்களை வாங்குவதன் மூலம் நிதி வழங்குகிறது. விவசாய அபிவிருத்திச் சிறப்புத் திட்டங்களைத் தயாரிப்பதிலும், அதற்குத் துணை புரிவதிலும் அது ஒரு தீவிரப் பணியைப் புரிகிறது. கடன் முதல் தவணையைத் திருப்பிச் செலுத்துவதற்கு முன்பு

ஒரு நியாயமான இடைவெளியையும் அனுமதிக்கிறது. அபி விருத்திப் பணியானது பலன் அளிக்கும் வரை, கடன் வாங்கு பவர்மீது சுமையைப் போடக்கூடாது என்பதே இதன் நோக்கம். 1968—69, 69—70ஆம் ஆண்டுகளின் இறுதிவரை, ஒப்பளிக் கப்பட்ட விவசாய மறுநிதி வசதிக் கழகத் திட்டங்களின் மொத்த எண்ணிக்கையானது 233-ம், 271-ம் ஆகும். இவற்றில் செய் யப்பட்ட நிதி முதலீடு முறையே ரூ.182.0 கோடியும், ரூ.259.5 கோடியு மாகும். அவற்றில் கழகத்தின் ஈடுபாடு முறையே ரூ.156.5 கோடியாகவும், ரூ.214.9 கோடியாகவு மிருந்தன. 261 திட்டங்கள், திட்டங்களின் மொத்த எண்ணிக்கையில் சுமார் 70 சதவிகிதமாக உள்ளன. இவற்றில் செய்யப்பட்ட மொத்த நிதி முதலீடு, எல்லாத் திட்டங்களுள் செய்யப்பட்ட மொத்த முதலீட்டில், சுமார் 86.5 சதவீதமாக அமையும் வகையில் ரூ.224.6 கோடியாக இருந்து, அவை கூட்டுறவு நிலவள வங்கிகள் மூலம் அமல் செய்யப்பட்டன.

விவசாய மறுநிதி வசதிக் கழகம் பற்பல சிறு பாசனத் திட்டங்களையும், சிறு பாசன மல்லாத திட்டங்களையும் அமல் செய்வதில் ஏராளமான உதவியை அளித்து வந்திருக்கிறது. பொதுவாக, சிறு பாசனத் திட்டங்கள், ஒன்று அல்லது இரண்டு தாலுக்காக்களுக்காக ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள புதிய கிணறுகளை வெட்டுதல் அல்லது கிணறுகளை ஆழப்படுத்து தல், மற்றும், பம்புச் செட்டுகளை அமைத்தல் ஆகிய ஒரு செயல் திட்டத்தைக் கொண்டுள்ளன. அமலி லிருக்கும் சிறு பாசனமல்லாத திட்டங்களாவன: கன்னியாகுமரி மாவட்டத் தில் ஓர் இரப்பர்த் தோட்டத் திட்டம், தஞ்சை மாவட்டத்தில் ஒரு தென்னை மரத் தோட்டத் திட்டம், மதுரை, சேலம் மாவட்டங்களில் காஃபித் தோட்டத் திட்டங்கள், நீலகிரி மாவட்டத்தில் தேயிலைத் தோட்டத் திட்டம், கோவை மாவட் டத்தில் நிலமீட்புத் திட்டம் ஆகியன.

1973ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், 23 சிறு பாசனத் திட்டங்களுள் 6 சிறு பாசன மல்லாத திட்டங்களும் ரூ. 24.85 கோடி மொத்த முதலீட்டுடன் விவசாய மறுநிதி வசதிக் கழகத்தால் உதவப்பட்டு, மாநிலத்தில் பல்வேறு திட்டங் களில் அமலி லிருந்தன. 1971—72ஆம் ஆண்டு இறுதிவரை, சிறு பாசனத் திட்டங்களின்கீழ் ரூ.847.85 இலட்ச மளவிற்கு 10,936 புதுக் கிணறுகளை வெட்டுவதற்காகவும், 4,600 நடப் பிலுள்ள கிணறுகளை ஆழப்படுத்துவதற்காகவும், 11,435 பம்புச் செட்டுகளை அமைப்பதற்காகவும் கடன்க ளளிக்கப்

பட்டன. சிறு பாசன மல்லாத திட்டங்களின்கீழ், திட்டத் தொடக்கத்திலிருந்து ரூ.621 இலட்சமளவிற்கு, 1,03,172 ஏக்கர் நிலங்களை மீட்பதற்காகவும் 2,043 ஏக்கர் நிலங்களில் தென்னை மரத் தோட்ட அபிவிருத்திக்காகவும், 1,000 ஏக்கர்களில் தேயிலைத் தோட்ட அபிவிருத்திக்காகவும், 1,628 ஏக்கர்களில் இரப்பர்த் தோட்டத்திற்காகவும், 2,578 ஏக்கர்களில் காஃபித் தோட்டத்திற்காகவும் கடன்கள் வழங்கப்பட்டன. 1972—73ஆம் ஆண்டின்போது, மேலும் 9 சிறு பாசனத் திட்டங்கள் ரூ.7.65 கோடி மொத்த நிதி முதலீட்டுடன் விவசாய மறுநிதி வசதிக் கழகத்தால் ஒப்பளிக்கப்பட்டன. ஆக, விவசாய மறுநிதி வசதிக் கழகத்தால் மறுநிதி வசதியளிக்கப்பட்ட 38 திட்டங்கள் 30—6—73ஆம் நாளன்று அமலிலிருந்தன. இவற்றுள் 32 சிறுபாசனக் காரியங்களுக்காகவும், 6 சிறுபாசன மல்லாத காரியங்களுக்காகவு மிருந்தன. விவசாய மறுநிதி வசதிக் கழகம் சிறுபாசனத் திட்டங்கள் தொடர்பாக 90 சதவிகிதத்திலும், சிறுபாசன மல்லாத திட்டங்களின் தொடர்பாக 75 சதவிகிதத்திலும் தொடர்ந்து மறுநிதி வசதியளித்து வந்தது.

**ஐ.டி.ஏ. (I.D.A.) சர்வதேச வளர்ச்சிக் கழகத்தின் திட்டங்களின்கீழ்க் கடன்கள்:** விவசாய மறுநிதி வசதிக் கழக மன்றியும், உலக வங்கி நிதியும் (World Bank Finance) கூட, நிலவள வங்கி இயக்கத்திற்குக் கிடைக்கின்றது. விவசாய மறுநிதி வசதிக் கழகச் செயற்பாட்டின் ஒரு குறிப்பிடத்தக்க அம்சமானது, விவசாயத்தில் மூலதன முதலீட்டை வளர்ப்பதற்கு நிதியுதவியைப் பெறுவதற்கான 'சீரமைப்பிற்காகவும் அபிவிருத்திக்காகவுமான சர்வதேச வங்கி'யுடன் (International Bank for Reconstruction and Development) அதன் துணைநிறுவனம் ஐ.டி.ஏ-வின் (I. D. A.) மூலம், அதன் தீவிர இணைப்பாகும். தமிழ்நாட்டில் உலக வங்கி (ஐ.டி.ஏ.) ரூ.46.76 கோடிச் செலவில் விவசாயத் திட்டங்களுக்கு நிதியளிக்க முன்வந்தது. ஐ.டி.ஏ. திட்டத்தின்கீழ் ஐ.டி.ஏ-வின் உதவி ரூ.26.25 கோடிக்கு இருக்கும். 1971ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 2ஆம் நாளிலிருந்து தமிழ்நாட்டில் அமலிலிருக்கும் இத் திட்டம், செங்கை, வடார்க்காடு, தருமபுரி, சேலம் மாவட்டங்களில் வெட்டப்பட்ட கிணறுகள் அபிவிருத்திக்காகவும், தஞ்சை மாவட்டத்தில் வடிகட்டிகள், குழாய்க் கிணறுகள் அபிவிருத்திக்காகவும், தென்னார்க்காடு, திருச்சி மாவட்டங்களில் குழாய்க் கிணறு அபிவிருத்திக்காகவும், தஞ்சை மாவட்டத்தில் நில வடிகால் திட்டத்திற்காகவும்,

கோவை மாவட்டத்தில் நிலமீட்புக்காகவும், தமிழ்நாடு முழுவதிலும் பண்ணை இயந்திர மயமாக்குதலுக்காகவும், (இயந்திரக் கலப்பைகளை வாங்குதல்) அமல்படுத்தப்பட்டு வருகிறது. ஐ.டி.ஏ-வின் நிதியுதவி, விவசாய மறுநிதி வசதிக் கழகத்தின் மூலம் அளிக்கப்படுகிறது, பின்னர், அது தமிழ்நாடு மைய நிலவள வங்கியின் மூலமும், பிரதம நிலவள வங்கிகள் மூலமும் வாய்க்கால் படுத்தப்படுகிறது.

1968ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் நாளிலிருந்து, புதிய கிணறுகள் மானியத் திட்டத்தின்கீழும், எண்ணெய் இயந்திரங்கள், மோட்டார்ப் பம்புச் செட்டுகள் ஆகியவைகளைத் தவணைக் கொள்முதல் திட்டங்களின்கீழும், நேர்முகக் கடனளிப்பைத் தமிழ்நாட்டரசு நிறுத்திவிட்டது. கிணறுகளை வெட்டுவதற்காகவும், பம்புச் செட்டுகளை அமைப்பதற்காகவும், புதிய கடன்கள் முழுமையும், நிலவள வங்கிகள் மூலம் கொடுக்கப்பட வேண்டுமென்றும் அரசு விரும்பியது. நிலவள வங்கிகளில், அத்தகைய கடன்களுக்கான அதிகரிக்கப்பட்ட விண்ணப்பங்களைச் சமாளிப்பதற்காகத் தனிச் சிப்பந்திகளை அரசு அமைத்தது. 1967ஆம் ஆண்டிலிருந்து, பிரதம நிலவள வங்கிகளிலிருந்து பெற்ற கடன்களைக் கொண்டு, கிணறுகளை வெட்டும் விவசாயிகளுக்கு, அரசு மானியத் திட்டத்தையுங்கூட விரிவு செய்தது. மானியத் தொகையானது ரூ.5,000 உச்ச அளவிற்குட்பட்டு, வேலையின் மதிப்பில் 25 சதவீத மளவிற்கு இருக்க வேண்டும். அது, கிணற்று வேலை திருப்திகரமாக முடிவடைந்ததும், உறுப்பினரின் கடன் கணக்குக்கு ஈடுசெய்தல் மூலம் செலுத்தப்பட்டது. மற்றும், 1972ம் ஆண்டிலிருந்து, பதில் வைப்புத் திட்டத்தின்கீழ்ப் பலனடைபவர்களுக்கு வழங்கப்படும். டீசல் செட்டுகளுக்காகவுங்கூட, மானியம் அனுமதிக்கப்படுகிறது. இதன் நோக்கம், மின்சக்தி கிடைக்கும்போது, மின்சாரப் பம்புச் செட்டுகள் அமைக்கப்பட்டு வழங்கப்பட்ட டீசல் செட்டுகள் (Diesel) வாபஸ் பெறவேண்டு மென்பது. இத் திட்டத்தின்கீழ்ப் பயன்பெறும் ஒவ்வொருவருக்கும் ரூ.1,000 மானியத் தொகை கொடுக்கப்படுகிறது.

**விவசாய மறுநிதி வசதிக் கழகத் திட்டங்களின்கீழ் அரசுதவி:** விவசாய மறுநிதி வசதிக் கழகத் திட்டங்களைப் பயனுறுதியாகத் தயாரிப்பதற்காகவும், அமல் செய்வதற்காகவும், மாநில நிலவள வங்கியில், வேளாண்மைப் பொறியியல் வல்லுநர் ஒருவரையும், வேளாண்மைப் பொறியாளர் ஒரு

வரையும் கொண்ட 'தொழில் நுட்பக் குழு' ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. கிணற்றுப் பாசனம், நிலமீட்புத் தோட்டப் பயிர்கள் அபிவிருத்தி முதலியவற்றிற்குத் தொடர்பான சிறப்புத் திட்டங்களைச் சரியான மதிப்பீடு செய்வதற்கு வங்கிக்கு வேண்டிய வசதிகளை இக் குழு ஏற்படுத்துகிறது. மற்றும், கூட்டுறவுத் துணைப்பதிவாளர் அந்தஸ்தில் திட்ட அதிகாரிகள் (Project Officers), மாவட்ட ஆட்சியாளர்கள் கண்காணிப்பில், மாநிலத்தில் 13 மாவட்டங்களில் திட்டத்தைப் பயனுறுதியாக அமல்படுத்துவதற்குப் பணிபுரிவர். மாநிலத்தில், 12 மாவட்டங்கள் ஒவ்வொன்றிலும் (சென்னை, புதுக்கோட்டை, நீலகிரி மாவட்டங்கள் நீங்கலாக) உதவிப் புவியமைப்பு இயலர் (Assistant Geologist) ஒருவரையும், உதவி வேளாண்மைப் பொறியாளர் ஒருவரையும் கொண்ட 'தொழில் நுட்பக் குழு' ஒன்று, திட்டங்களைத் தயார் செய்வதிலும், திட்டங்களை அமல் செய்வதில் சரியான தொழில்நுட்ப வழிகாட்டுதலை யளிப்பதிலும், மாவட்ட ஆட்சியாளருக்கு உதவியளிக்கும் வகையில் பணியாற்றுகிறது. மற்றும், மேற்பார்வைப் பொறியாளர் அந்தஸ்தில் தனி அலுவலர் ஒருவர், புவியமைப்பு இயல்துறை உதவியாளர்களைக் கொண்ட அவசியமான சிப்பந்திகளுடன், முன்னுரிமை அடிப்படையின் பேரில் சிறு பாசனத் திட்டங்களை ஒப்பளிப்பதற்காகச் சேகரிக்கப்பட்ட புள்ளிவிவரங்கள் அடிப்படையில், புதிய திட்டங்களைத் தயாரிக்கும் பணியைக் கவனிக்கின்றார். மற்றும், ஐ.டி.ஏ. திட்டத்தின்கீழ், வெட்டப்பட்ட கிணற்று அபிவிருத்தி வேலை முடிவடைந்துள்ள, செங்கை, வடார்க்காடு, தருமபுரி, சேலம் மாவட்டங்களில், நீர்வாய்ப்பு வசதியின்மீது பரிவுரை வழங்குவதற்காகவுங்கூட, அவர் எதிர்பார்க்கப்படுகிறார்.

## 10. ஏற்றுப் பாசனச் சங்கங்களுக்கு நிதியுதவி (Financing of Lift Irrigation Societies)

ஐ.டி.ஏ. ஒப்பந்தங்களில் நிருணயிக்கப்பட்ட தரைத் தண்ணீர்க் கட்டுப்பாடு (Ground Water Discipline) ஒழுங்கின்படி, தரைத் தண்ணீர் வசதி மிகையாக உறிஞ்சப்படுவதைத் தவிர்ப்பதற்கு அவசிய மேற்பட்டது. அதே சமயத்தில், பற்றுக்குறை ஆதாரங்கள் உயர்ந்த பட்சத்தில் பயன்படுத்தப்படுவதையும் நிச்சயப்படுத்துதலுக்கு அவசியமேற்பட்டது. இந்த இலட்சியத்தை யடைவதற்கும், ஒன்று அல்லது இரண்டு ஹெக்டேர் நிலங்களை வைத்திருக்கும் விவசாய சமுதாயத்தின் பலங்குன்றிய பிரிவினர்களாக அமைந்திருக்கும் குடியானவர்கள் சிறுபாச

னத் திட்டங்களின் பலனை முழுமையாக அடைவதற்கும், கிணறுகளை வெட்டிப் பம்புச் செட்டுகளை யமைப்பதற்குப் போதிய மூலதனத்தைக் கடன் வாங்குவதற்கு வசதி செய்யவும், ஏற்றுப்பாசனச் சங்கங்களின் அமைப்பு மேற்கொள்ளப்பட்டன. இச் சங்கங்கள், தங்கள் தனி நபர் நலன்களைத் தங்கள் வசமே வைத்துக்கொண்டு, குடியானவர் - உறுப்பினர்களால் நீர் பகிர்ந்து கொள்ளும் கொள்கை அடிப்படையின் பேரில் நிறுவப்படுகின்றன. இச் சங்கங்கள்மூலம், விவசாயிகள் அரசாலும் நிலவள வங்கிகளாலும் மற்றும், இதர நிதி வழங்கும் அமைப்புகளாலும் அளிக்கப்படும் கடன்வசதிகளைப் பெற்று, பொதுவான கிணறுகள் வெட்டுதலையும், பம்புச் செட்டுகள் அமைத்தலையும் மேற்கொள்ளுகின்றன. 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், 2,033 அத்தகைய சங்கங்கள் ரூ.5.20 இலட்சம் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்துடன் இருந்தன. 1973ஆம் ஆண்டு டிசம்பர் இறுதியில், 502 ஏற்றுப்பாசனச் சங்கங்கள் ஆற்றுநீர் இறைக்கும் இயந்திரங்கள், குழாய்க் கிணறுகள், வெட்டப்பட்டதும், துளைக்கப்பட்டதுமான கிணறுகள் திட்டங்கள் போன்ற திட்டங்களை, ரூ.17.23 கோடி மொத்த முதலீட்டுடன் அமல்படுத்தியிருந்தன. 1973ஆம் ஆண்டுச் சூன் இறுதி வரை, மாநில நிலவள வங்கி ஏற்றுப் பாசனச் சங்கங்களுக்கு ரூ.319 இலட்ச மளவிற்குக் கடன்களை ஒப்பளித்திருந்தது. இதில் ரூ.35.53 இலட்சம் பிரதம நிலவள வங்கிகள்மூலம் பட்டுவாடாச் செய்யப்பட்டிருந்தது. ஏற்றுப் பாசனச் சங்கங்களின் நடவடிக்கைகளை ஒருமைப்படுத்துவதற்கும், உதவுவதற்கும், ஏற்றுப்பாசனச் சங்கங்களின் சம்மேளனம் ஒன்றுகூட, 1972ஆம் ஆண்டுச் சனவரியில் தொடங்கப்பட்டது. 30—6—72ஆம் நாளன்று, இச் சம்மேளனத்தில் 204 உறுப்பினர்கள் ரூ.32.270 செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்துடன் இருந்தனர். 26 ஏற்றுப்பாசனச் சங்கங்களுக்கு ஒவ்வொரு சங்கத்திற்கும் ரூ.20,000 விகிதத்தில் இத் திட்டத்தை அமல் படுத்துவதில் உண்டான ஆரம்பச் செலவை ஏற்பதற்காகக் குறுகிய காலக் கடன்களைச் சம்மேளனம் வழங்கியிருந்தது. இச் சம்மேளனம் அண்மையில்தான் இயங்கத் தொடங்கியது.

இச் சங்கங்களுக்குத் தொடர்பான வேலை, வேளாண்மைப் பொறியியல் சேவைக் கூட்டுறவுச் சங்கத்தால் செய்யப்படுகிறது. 40 ஏற்றுப்பாசனச் சங்கங்களுக்கு, ஒவ்வொரு சங்கத்திற்கும் ரூ. 25,000 விகிதத்தில், கிடங்கு—அலுவலக—பணிமனை கட்டுவதற்காக ரூ.10 இலட்சம் அரசு அளித்துள்ளது. (50 சதவிகிதம் கடனாகவும், 50 சதவிகிதம் மானியமாகவும்).

இக் கடன் 15 வருடாந்தரத் தவணைகளில் செலுத்தப்பட வேண்டும்.

## 11. கடன்களை வசூல் செய்தல்

**தமிழ்நாட்டில் தலைமை மட்டத்தில்** :— 1971—72ஆம் ஆண்டின் போது, ரூ.6.65 கோடிக் கேட்பிற்கு எதிராக, தமிழ் நாடு மாநில நிலவள வங்கி ரூ.6.51 கோடியை வசூல் செய்தது. ரூ.0.14 கோடி தவணைகடந்த பாக்கியாக நின்றது. தவணைகடந்த பாக்கிகளின் சதவிகிதம் 2ஆகக் கணக்கிடப் பட்டது. 72—73ஆம் ஆண்டில், மாநில நிலவள வங்கிக்கு வரவேண்டிய தவணை கடந்த பர்க்கிகளில், ஒரு சிறு அதிகரிப்பு இருந்தது. 72—73ஆம் ஆண்டிற்கான கேட்பு ரூ.13.05 கோடியாகவும், வசூல் தொகை ரூ.12.53 கோடியாகவும், மாநில நிலவள வங்கிக்குத் தவணைகடந்த பாக்கி ரூ.0.5 கோடியாகவும் இருந்தது. கேட்பிற்குத் தவணை கடந்த பாக்கியின் சதவிகிதம் ரூ.3.94 ஆக இருந்தது.

**பிரதம நிலவள வங்கி மட்டத்தில்:** 1971—72 ஆம் ஆண்டின்போது, ரூ.7.06 கோடிக் கேட்புக்கெதிரே, பிரதம நிலவள வங்கிகள் ரூ.5.73 கோடியை வசூல் செய்தன. வசூலாகாத பாக்கி ரூ.1.33 கோடியாக இருந்தது. பிரதம நிலவள வங்கிகளுக்குத் தவணைகடந்த பாக்கிகளின் சதவிகிதம் 18.5 ஆக இருந்தது. 1972—73ஆம் ஆண்டில், தவணைகடந்த பாக்கியில் ஒரு சிறிய அதிகரிப்பு இருந்தது. அந்த ஆண்டிற்கான கேட்பு ரூ.17.99 கோடியாக இருந்து, வசூல் தொகை ரூ.14.55 கோடியாகவும், பிரதம நிலவள வங்கிகளுக்கு உறுப்பினர்களிடமிருந்து வரவேண்டிய பாக்கி ரூ.3.448 ஆகவுமிருந்தன. பிரதம நிலவள வங்கிகள்மட்டத்தில், கேட்புக்குத் தவணைகடந்த பாக்கிகளின் சதவிகிதம் 19.13 ஆக இருந்தது. பெரும்பாலான பிரதம நிலவள வங்கிகள், 15 சதவிகிதமான சம்மதிக்கப்பட்ட அளவிற்குள், 'தவணை கடந்த பாக்கிகளை வைத்திருந்தன. வங்கிகள் 85 சதவிகித வசூலைக் காண்பிக்கத் தவறினுல், ரிசர்வ் வங்கியால் நிருணயித்துள்ளபடி அவைகளின் கடன் வழங்கும் திட்டத்தில், வழுக்கு விகிதத்தில் ஒரு வெட்டு விழும்.

1934ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவு நிலவள வங்கிச் சட்டத்தின் பிரிவுகள் 9-ஆம் 13-ஆம் அடங்கியுள்ள கடன்பாக்கிகளை வசூலிப்பதற்கான சரத்துக ளன்றியும், அண்மையில் கடன் வசூல்களை மேலும் உதவி புரியும் நோக்கத்

துடன், வருவாய் வசூல் சட்டத்தின் (Revenue Recovery Act) சரத்துகள், நிலவள வங்கிகளின் உபயோகத்திற்காகக் கிடைக்கும்படி செய்யப்பட்டன. பிரிவு 22 (அ)-வின்கீழ், ஒரு பிரதம நிலவள வங்கிக்கு அல்லது மாநில நிலவள வங்கிக்கு வரவேண்டிய தொகைகள், நில வருவாய்ப் பாக்கியாக வசூல் செய்யப்படலாம். அத்தகைய வசூல் காரியத்திற்காக, சென்னை வருவாய் வசூல் சட்டத்தின் (1864)கீழ், ஒரு மாவட்ட ஆட்சியாளரின் அதிகாரங்கள் கூட்டுறவுப் பதிவாளருக்குண்டு. அசையும் சொத்து விற்பனைக்காகவும், அசையாச் சொத்து விற்பனைக்காகவும், வருவாய் வசூல் சட்டம் ஏற்பாடு செய்துள்ளது.

## 12. கடனளிப்பு வட்டி விகிதம்

கடனீட்டுப்பத்திரங்களின் சராசரி வட்டியானது 6-லிருந்து $6\frac{1}{2}$ சதவிகிதம் வரை யுள்ளது. பிரதம நிலவள வங்கிகளுக்கு மாநில நிலவள வங்கியின் தற்போதைய கடன் வட்டி விகிதம் 9 சதவிகிதமாகும். $2\frac{1}{2}$ சதவிகிதத்திலிருந்து $3\frac{1}{2}$ சதவிகிதமுள்ள ஒரு விளிம்பை அது வைத்துக்கொள்கிறது. இதில் இயல்பான செலவுகளை ஏற்பதற்காக $1\frac{1}{2}$ சதவிகிதம் பயன்படுத்தப்படுகிறது. எச்சம், திட்டப் பணிக்குச் சம்பந்தமான செலவுகளை ஏற்பதற்கு நிதியாக ஒதுக்கப்படுகிறது. பிரதம நிலவள வங்கிகள் 11 சதவிகிதத்தில் தம் உறுப்பினர்களுக்குக் கடன் வழங்குகின்றன.

## 13. இலாபப் பிரிவினை

**மாநில நிலவள வங்கி**: 1972–73ஆம் ஆண்டின்போது, தமிழ்நாடு மாநில நிலவள வங்கி ரூ.109.39 இலட்ச நிகர இலாபத்தை ஈட்டியது. இதில், 20 சதவிகிதம் காப்பு நிதிக்கும், 5 சதவிகிதம் கூட்டுறவு வளர்ச்சி நிதிக்கும், 15 சதவிகிதம் விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதிக்கும், 10 சதவிகிதம் நீர் கிடைக்காக் கிணறுகள் நிதிக்கும் (Failed wells' fund) எடுத்துச் செல்லப்பட்டு, 6 சதவிகிதத்தில் இலாப ஈவு அறிவிக்கப்பட்டது. கூட்டுறவுக் கல்வி நிதி, வராக்கடன் காப்பிருப்பு, இலாப ஈவு சமப்படுத்தும் நிதி, கட்டட நிதி, பொது நல நிதி ஆகிய நிதிகளுக்குங்கூட ஒதுக்குதல் செய்யப்படுகின்றன. விவசாயக் கடன் நிலைப்படுத்தும் நிதி, நிலவள வங்கிகளில் கடன் வாங்கினவர்கள், பஞ்சம்—வறட்சி அல்லது அத்தகைய இதர எதிர்பார்க்க முடியாத விபத்துகள் காரணமாக வருடாந்தரக் கடன் தவணைகளைத் திருப்பிச் செலுத்துவதைத் தள்ளிவைப்பதற்கு வசதி செய்யும்பொருட்டு

மாநில நிலவள வங்கி மட்டத்திலும், பிரதம நிலவள வங்கி மட்டங்களிலும் அமைக்கப்பட்டுள்ளது. இந்த நிதிக்கு, வங்கிகள் தங்கள் வருடாந்தர நிகர இலாபங்களில் 15 சதவிகிதத்தை அளிக்கத் தேவைப்படுகின்றன. மாநில அரசுங்கூட, தங்களால் வைக்கப்பட்டிருக்கும் வங்கிப் பங்குகளின்மீது கொடுக்கப்பட வேண்டிய 3 சதவிகிதத்திற்கு மேற்பட்ட இலாப ஈவில் 50 சதவிகிதத்தை யளிப்பதற்கு ஒத்துக்கொண் டுள்ளது. மற்றும், மாநில வங்கி, நிலவள வங்கிகள்மூலம், நிதியுதவியைக்கொண்டு வெட்டப்பட்ட கிணறுகள் பயனளிக்காமல் போகும் சந்தர்ப்பங்களில், விவசாயிகளுக்கு உதவி செய்ய 'நீர் கிடைக்காக் கிணறுகள் நிதி' என்ற நிதியை ஏற்படுத்தியுள்ளது. இந் நிதிக்கு வங்கியின் நிகர இலாபத்தின் 10 சதவிகிதத்தில் உதவித்தொகை யளிக்கப்படுகிறது. மாநில அரசு, தனக்குச் சேர வேண்டிய இலாப ஈவின் 3 சதவிகிதத்திற்கு மேற்பட்ட தொகையில், 50 சதவிகிதத்தை இந் நிதிக்கு உதவச் சம்மதித்துள்ளது.

**பிரதம நிலவள வங்கிகள்:** 1972–73ஆம் ஆண்டின் போது, தமிழ்நாட்டிலிருந்த 223 பிரதம நிலவள வங்கிகளுள், 146 வங்கிகள் ரூ.34.01 இலட்ச இலாபத்திலும் 76 நிலவள வங்கிகள் 22.52 இலட்ச நட்டத்திலும் இயங்கின. இரண்டு வங்கிகள் இலாபமும் நட்டமுமில்லாமல் இயங்கின. அவற்றின் இலாப விநியோகம் மாநில நிலவள வங்கியின் இலாப விநியோகத்தைப் போன்ற முறைகளி லுள்ளது.

## 14. தமிழ்நாடு நிலவள வங்கியின் கிளைகளும், பிரதம நிலவள வங்கிகளின் கிளைகளும்

தமிழ்நாடு மாநில நிலவள வங்கி, ஒவ்வொரு மாவட்டத்திலும் ஏறக்குறைய ஒன்று வீதம், மாநிலத்தில் 11 கிளைகளைக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு கிளையும், 2-லிருந்து 5 சட்ட உதவியாளர்களின் உதவியைப் பெற்ற, ஒரு துணைமேலாளரின் பொறுப்பிலுள்ளது. பிரதம நிலவள வங்கிகளுக்கு மிக விரைவான சேவையை வழங்கும் நோக்கத்துடன், இக் கிளைகள் அமைக்கப்பட்டுள்ளன. வங்கியின் சார்பில் கடன் விண்ணப்பங்களின் சட்டப் பரிசீலனை, கிளை அலுவலகத்தில் செய்யப்பட்டுக் கடன்கள் துணைமேலாளரால் ஒப்பளிக்கப்பட்டுப் பட்டுவாடாச் செய்யப்படுகின்றன.

தற்போதைய விஸ்தரிப்புத் திட்டத்திற் கொத்தவாறு, பிரதம நிலவள வங்கிகள் இயங்குவதற்கு வசதிசெய்யும் பொருட்டும், இயக்கத்தை விவசாயிகளுக்கு மிக அருகில் கொண்டுவர

உதவுவதற்கும், பிரதம நிலவள வங்கிகளின் கிளைகள் வங்கி களில்லாத வட்டாரங்களில் திறக்கப்பட்டு வருகின்றன. வங்கி களில்லாத வட்டாரங்களில் தாலுக்கா மட்டத்தில், பிரதம நிலவள வங்கிகள் கிளைகளைத் திறப்பதற்கான ஒரு திட்டத்தை அரசு அங்கீகரித்துள்ளது. இத் திட்டத்திற்கிணங்க 137 கிளைகள் திறக்கப்பட வேண்டியுள்ளது—77 தற்சார்புள்ள கிளைகளாகவும், 29 மாநில அரசின் பங்கு மூலதன ஈடுபாட்டுடனும், 28 மாநில அரசின் சிப்பந்தி மானிய உதவியுடனும்—கிளைகளைத் திறப்பதற்கான மானியம் அரசாலும், மாநில நிலவள வங்கி யாலும் ஏற்கப்படுகின்றது. 30—6—72ஆம் நாளன்று, பிரதம நிலவள வங்கிகளின் 32 கிளைகள், வங்கிகளில்லாத வட்டாரங் களில் திறக்கப்பட்டன. இவற்றுள், 3 கிளைகள் ஒவ்வொன்றிற் காகவும் ரூ. 3,000 மானியத் தொகை அரசாலும், ரூ.1,500 மாநில நிலவள வங்கியாலும் கொடுக்கப்பட்டன.

## 15. நிலவள வங்கிகளின் சிப்பந்திப் பயிற்சி

மாநில நிலவள வங்கி, சிப்பந்திகளின் பணியிடைப் பயிற்சிக்கு முக்கியத்துவ மளிக்கிறது. சிப்பந்திகள், பூனா நகரில் ரிசர்வ் வங்கியால் நடத்தப்படும் கூட்டுறவு வங்கித் தொழிலா ளர்கள் பயிற்சிக் கல்லூரியிலும், ஐதராபாத்திலும், சென்னை யிலும் இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தால் நடத்தப்படும் கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியிலும், பயிற்சிக்காக அனுப்பப்படு கின்றனர். துணை மேலாளர்களும், சட்ட உதவியாளர்களும், ஆய்வாளர்களும், ரிசர்வ் வங்கியால் அமைக்கப்படும் திட்டத் தயா ரிப்பு மதிப்பீட்டுப் பாடப்படிப்பில் (Project planning and appraisal course) பயிற்சி பெறுகின்றனர். சட்ட உதவியாளர்களில் சிலர், பூனா விலுள்ள கூட்டுறவு வங்கியர் பயிற்சிக் கல்லூரியால், நிலவள வங்கிகளில் வாணிக வங்கிகளின் நடுநிலைத் தேர்வுகளுக்காக அமைக்கப்பட்ட மேலாளர் பாடப்படிப்புகளில் பயிற்சி பெறு கின்றனர். வங்கி அலுவலர்கள், கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரி களால் அமைக்கப்பட்ட நிலவள வங்கித் தொழில் விசேஷப் பாடப்படிப்பிலுங்கூடப் பயிற்சி பெறுகின்றனர்.

## 16. நிலவள வங்கிகளின் ஆய்வு

ஒவ்வொரு பிரதம நிலவள வங்கியும், நிலவள வங்கி களின் சார் பதிவாளரால் ஒவ்வொரு காலாண்டிலும், துணைப் பதிவாளரால் 6 மாதங்களுக்கு ஒரு முறையும் ஆய்வு செய் யப்பட வேண்டியுள்ளது. கூட்டுறவுப் பதிவாளர், மாநில நில வள வங்கியின் தலைமைச் செயலகத்தை, ஆண்டிற்கொரு முறை ஆய்வு செய்கிறார். மாநில நிலவள வங்கியுங்கூட,

பிரதம நிலவள வங்கிகளின் ஆய்வைக் காலமுறையாக நடத்துகிறது. இக் காரியத்திற்காக, மாநில நிலவள வங்கியால் ஆய்வுக் குழு ஒன்றும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. தன்னிடம் கடன் பெற்றுள்ள அமைப்புகளின் செயற்பாட்டுடனும் நிதி நிலைமையுடனும் மாநில நிலவள வங்கி நெருங்கிய தொடர்பு வைத்துக்கொள்ளும் நோக்கத்துடனும், அதனுடன் இணைக் கப்பட்ட நிறுவனங்களின் செயற்பாட்டைச் சீர்திருத்தும் நோக்கத்துடனும் இவ் வாய்வுகள் மேற்கொள்ளப்படுகின்றன.

## 17. விவசாய உற்பத்தியில் மாநில நிலவள வங்கியின் பணி

இதரச் சில மாநிலங்களைப் போன்று, தமிழ்நாட்டில், மாநில நிலவள வங்கி 'பசுமைப்புரட்சி' திட்டத்தின் அமலில் ஒரு முக்கியப் பங்கை ஏற்றுள்ளது. உணவுத் தானியங்களில் பற்றுக்குறையான ஒரு மாநிலம், ஒரு உபரியான மாநிலமாக மாற்றப்பட முயற்சிக்கப்படுகிறது. பயிரிடப்பட்ட நிலங்களின் பரப்பும், பாசனம் செய்யப்பட்ட வயல்களும் அதிகரித்து வருவதால் தமிழ்நாட்டில் தேசக் காட்சியின்மீது ஒரு மாறுதல் ஏற்பட்டு வருகிறது. வறண்ட பகுதிகள், நிச்சயம் செய் யப்பட்ட பாசன வசதிகள் உதவியைக்கொண்டு, சாகுபடி யின்கீழ்க் கொண்டுவரப்படுகின்றன. பசுமைப் புரட்சியின் வெற்றியானது, மேலான விதைகளை உபயோகிப்பதி லிருந்தும் உரவகைகளைச் சரிவர விஞ்ஞான முறையில் சாகுபடியில் ஈடுபடுத்துவதி லிருந்துமன்றி, பெருமளவு பாசன வசதிகள் ஏற்பாட்டின்மீது சார்ந்துள்ளது. இங்குத்தான் நிலவள வங்கி இயக்கம் முக்கியமாக இறங்கி, விவசாயத்தின் பல்வேறு உற்பத்தி நடவடிக்கைகளுக்கு—பிரதானமாகச் சிறு பாசனத் திட்டங்களுக்கு—நிதியுதவி யளிக்கிறது. அது புதிய கிணறு களை வெட்டுவதற்காகவும், நடப்பிலுள்ள கிணறுகளை ஆழப் படுத்துவதற்காகவும், கிணறுகளைத் தீவிரப்படுத்துவதற்காகவும், இயந்திரக் கலப்பைகளைக் கொள்முதல் செய்வதற்காகவும், நிலங் களை மீட்பதற்காகவும், நீண்டகாலக் கடன்களை வழங்குகிறது. மாநில நிலவள வங்கி, தன் கிளைகளுடனும் இணைக்கப்பட்ட 223 பிரதம நிலவள வங்கிகளுடனும் விவசாய உற்பத்தியை நிலை நிறுத்தி வளர்ச்சி பெறச் செய்யும் இந்த முக்கியக் கூட்டுறவு நடவடிக்கையில் மகத்தான முன்னேற்றத்தை அடைந்து கொண்டு வருகிறது.

## 18. நிலவள வங்கிகளுக்கு அரசுதவி

கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசால் அளிக்கப்படும் உதவி மட்டுமன்றி, அபிவிருத்தித் திட்டங்களை அமல்படுத்துவதில்

நிலவள வங்கிகள் விசேஷ உதவியளிக்கப்படுகின்றன. அவை பின்வருமாறு:

(1) நிலவள வங்கி இயக்கத்திற்கு அரசு கொடுக்கும் முக்கியத்துவத்தைக் கோடிடும் பொருட்டு, 1932ஆம் வருடத்திய சென்னைக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தையொட்டி, ஒரு தனிச் சட்டம் அரசால் நிறைவேற்றப்பட்டது. இச் சட்டம், 1934ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்டுப் பல மாறுதல்களை அடைந்துள்ளது.

(2) நிலவள வங்கிச் சட்டத்தின் பிரிவு 6-ன்கீழ், கடனீட்டுப்பத்திரங்களின்மீது அசலையும், வட்டியையும் ரூ .125 கோடியளவிற்கு அரசு உத்தரவாதமளித்துள்ளது.

(3) சட்டத்தின் பிரிவு 9-ன்கீழ், ஒரு பிரதம நிலவள வங்கிக்குச் சாதகமாக நிறைவேற்றப்பட்ட ஒரு அடைமானத்தின்கீழ்த் தவணை ஏதாவது கொடுக்கப்பட வேண்டியதாக இருந்தாலும், அல்லது ஒரு தவணைப் பாக்கியான தேதியிலிருந்து ஒரு மாதத்திற்கு மேலாகச் செலுத்தப்படாமல் அத்தகைய தவணையில் எந்தப் பாகமிருந்தாலும், அத்தகைய தவணையை வசூல் செய்வதற்காகப் பிரதம வங்கி, பதிவாளருக்கு அல்லது மாநில அரசால் நியமிக்கப்பட்ட யாதொரு நபருக்கும் விண்ணப்பம் செய்யலாம்.

(4) சட்டத்தின் 13ஆவது பிரிவின்கீழ், 1882ஆம் வருடத்திய சொத்து மாறுதல் சட்டத்திலும் (Transfer of Property Act), அல்லது 1886ஆம் வருடத்திய பொறுப்பாளர்களின் அடைமானம் பெற்றுக் கொள்பவர்களின் அதிகாரங்கள் சட்டத்திலும் (Trustees and Mortgages Powers Act), எந்தச் சரத்துகள் அடங்கியிருந்த போதிலும், நீதிமன்றத்தின் தலையீடின்றி விற்பனை செய்யும் ஓர் அதிகாரம், பிரதம நிலவள வங்கியின்மீது வெளிப்படையாக அளிக்கப்பட்டிருந்தால், அத்தகைய வங்கியின் நிருவாகக் குழு, அடைமானப் பாக்கிப் பணம் அல்லது அதன் பகுதி செலுத்தத் தவறிய சந்தர்ப்பத்தில் நீதிமன்றத்தின் தலையீடின்றி அடைமானம் செய்யப்பட்ட சொத்தை விற்பனைக்குக் கொண்டுவர அதிகாரம் பெற்றிருக்கும்.

(5) 1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்கள் சட்டத்தின் 43ஆவது பிரிவின்கீழ், அரசினர், எந்தக் கூட்டுறவுச் சங்கத்தாலும், (ஒரு நிலவள வங்கி உட்பட)

அல்லது ஓர் அலுவலராலும், அல்லது உறுப்பினராலும் நிறை வேற்றப்பட்ட அத்தகைய சங்கத்தின் அலுவல்களுக்குத் தொடர் பான பத்திரங்களுக்கு, முத்திரை வரியிலிருந்து விலக்கு அளித்துள்ளனர்.

(6) நிலவள வங்கிகளின் இலாபங்கள்கூட வருமானவரி யிலிருந்து விலக்களிக்கப்பட்டுள்ளன.

(7) தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 43ஆவது பிரிவின்கீழ், ரூ.5,000-க்கு மேற்படாத மதிப்புள்ளதும், நிலவள வங்கியால் நிறைவேற்றப்பட்டதுமான எந்தப் பத்திரத் திற்காகவும் பதிவுச் சட்டத்தின்கீழ்ச் செலுத்தப்பட வேண்டிய பதிவுக் கட்டணங்களின் பாதியை அரசினர் வஜாச் செய்துள் ளனர்.

(8) ரூ.2,000-க்கு அதிகப்படாத கடன்களுக்காக நிலவள வங்கிகளாலும் அவற்றின் உறுப்பினர்களாலும் சமர்ப்பிக்கப் படும் வில்லங்கத்திற்கான மனுக்களைக் குறித்துக் கட்டணம் எதுவும் செலுத்தப்பட வேண்டியதில்லை. கடன் தொகை ரூ.2,000-க்கு அதிகப்பட்டும், ரூ.5,000-க்கு அதிகப்படாமலு மிருந்தால், அரைக் கட்டணங்கள் செலுத்தப்பட வேண்டும்.

(9) அட்டவணைச் சாதிகளைச் சேர்ந்த பிரதம நிலவள வங்கிகளின் உறுப்பினர்களால் வில்லங்கச் சான்றிதழுக்காகச் சமர்ப்பிக்கப்படும் விண்ணப்பங்களைக் குறித்துக் கட்டணங் களிலிருந்தும், பதிவுக் கட்டணங்கள் செலுத்துவதிலிருந்தும், அவர்கள் முழுமையாக விலக்கு அளிக்கப்பட்டுள்ளனர்.

(10) நிலவள வங்கிகள் சட்டத்தில் 28(1)ஆவது பிரிவின் கீழ் ஒரு நிலவள வங்கிக்குச் சாதகமாக நிறைவேற்றப்பட்ட ஓர் அடைமானம், சட்டத் தொடக்கத்திற்குப் பிறகு, அந்த அடைமானம் நிறைவேற்றுதலுக்குப் பிறகு அளிக்கப்பட்ட 1883ஆம் வருடத்திய நில அபிவிருத்திக் கடன்கள் சட்டத் தின்கீழ்க் கொடுக்கப்பட்ட ஒரு கடனிலிருந்து எழும் அரசு உரிமைக் கோரிக்கையின்மீது முன்னுரிமை கொண்டுள்ளது.

(11) நிலவள வங்கிகள் சட்டத்தின்கீழ் 28(2)ஆவது பிரிவின்கீழ், 1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திலும் அல்லது தற்காலம் அமலில் இருந்து வரும் வேறு எந்தச் சட்டத்திலுமுள்ள சரத்துகளுக்குப் பட்ச பாதமின்றி 1968ஆம் ஆண்டுச் ஜூலை மாதம் 4ஆவது நாளுக்குப் பிறகு ஒரு பிரதம நிலவள வங்கிக்குச் சாதகமாக நிறைவேற்

றப்பட்ட ஓர் அடைமானம், நில வரியைக் குறித்து அரசு உரிமைக் கோரிக்கைக் குட்பட்டு, அடைமானச் சொத்திற்கு எதிராக இதர எல்லா உரிமைக் கோரிக்கைகளின்மீது முன்னுரிமை கொண்டுள்ளது.

(12) கடன் விண்ணப்பங்களைப் பரிசீலிப்பதற்காகவும், பிரதம நிலவள வங்கிகளின் உறுப்பினர்களால் மேற்கொள்ளப்படவிருக்கும் திட்டங்களின் தொழில்நுட்ப மதிப்பீடுகளைத் தயாரிப்பதற்காகவும் அமர்த்தப்பட்ட அரசு சிப்பந்திகளின் செலவைப் பகிர்ந்து கொள்வதன்மூலம், நிலவள வங்கிகளுக்கு அரசினர் உதவியளித்திருக்கின்றனர்.

(13) 1968ஆம் ஆண்டில் நில அபிவிருத்திக் காரியங்களுக்காகத் தக்காவிக் கடன்க ளளிப்பை நிறுத்துவதற்கு அரசு முடிவு எடுத்து, அத்தகைய கடன்களை யளிப்பதற்காக நிலவள வங்கிகளைத் தக்கதோர் அமைப்பாக அரசு ஏற்றுள்ளது.

(14) முதல் முறையாக, சிறுகுடியானவர்களுக்கும், அட்டவணைச் சாதியினர்களுக்கும், அட்டவணை மலைச் சாதியினர்களுக்கும் மாநிலக் கூட்டுறவு நிலவள வங்கியின் நிருவாகக் குழுவில் பிரதிநிதித்துவம் அளிக்கப்பட்டது.

(15) தமிழ்நாடு அரசு, மாநில நிலவள வங்கியின் பங்கு மூலதனத்திற்கு ரூ.1.70 கோடியளவிற்கும், பிரதம நிலவள வங்கிகளின் பங்கு மூலதனத்திற்கு ரூ. 60.30 இலட்சமளவிற்கும், உதவித்தொகை யளித்துள்ளனர்.

(16) இயல்பான செயல் திட்டத்தின்கீழ் வெளியிடப்பட்ட கடனீட்டுப்பத்திரங்களுக்கும், சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்களுக்குங்கூட அரசு உதவியுள்ளது. 1968—69ஆம் ஆண்டிலிருந்து 1971—72ஆம் ஆண்டுவரை, இயல்பான செயல்திட்டத்தின்கீழ் ரூ.10.74 கோடிக்குக் கடனீட்டுப்பத்திரங்களை அரசு வாங்கியுள்ளது. 1968—69ஆம் ஆண்டிலிருந்து 71—72ஆம் ஆண்டு வரை, சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப்பத்திரங்களை 1.87 கோடியளவிற்கு அரசு வாங்கி உதவியுள்ளது.

(17) விவசாய மறுநிதி உதவி வசதிக் கழகத் திட்டங்களை அமல் செய்வதற்காக அமர்த்தப்பட்ட தொழில் நுட்பச் சிப்பந்திச் செலவிற்கான திட்டங்களின் அமல்காலம் முழுமைக்கும் மானியத் தொகை யளிக்க அரசு இசைந்துள்ளது. கூட்டுறவு சார் பதிவாளரின் (விவசாய மறுநிதி வசதிக் கழகத் திட்டங்

களின்) முழுச் செலவும் நிலவள வங்கி மேற்பார்வையாளர்களின் முழுச் செலவும், முதலாண்டில் அரசால் ஏற்கப்படுகின்றது. 2ஆவது ஆண்டிலிருந்து இச் செலவு 50:50 விகிதத்தில் அரசாலும் மாநில நிலவள வங்கியாலும் கூட்டுறவுச் சார் பதிவாளர் களின் தொடர்பான செலவு பகிர்ந்து கொள்ளப்படுகிறது. நிலவள வங்கியின் மேற்பார்வையாளர்கள் தொடர்பான செலவு 50: 50 விகிதத்தில் அரசாலும் பிரதம நிலவள வங்கிகளாலும் பகிர்ந்து கொள்ளப்படுகிறது. கூட்டுறவு முதுநிலை ஆய்வாளர்களை வட்டாரமட்டத்து பிரதம நிலவள வங்கி களின் மேலாளர்களாகவுங்கூட அரசு அமர்த்தியுள்ளது. வட்டார மட்டத்து வங்கிகளுக்கு அமர்த்தப்பட்ட கூட்டுறவு முதுநிலை ஆய்வாளர்களின் செலவைச் சில விகிதங்களில், அரசாலும், மாநில நிலவள வங்கியாலும், பிரதம நிலவள வங்கியாலும், 5 ஆண்டுகள் காலத்திற்கு, ஓர் இறங்கு விகிதத்தில், ஏற் கப்பட்டு 5ஆவது ஆண்டு இறுதியில் முழுச் செலவும் பிரதம நிலவள வங்கிகளால் ஏற்கப்படும்.

(18) சில தாலுக்கா மட்டத்து பிரதம நிலவள வங்கி களுக்கும் — சுமார் 28 வங்கிகளுக்குங்கூட — தாலுக்கா மட்டத்து பிரதம நிலவள வங்கிகளின் அலுவல் எல்லையிலுள்ள வங்கியில் லாத பகுதிகளில் கிளைகளைத் திறப்பதற்கு வசதி செய்யும் பொருட்டு, மானியத் தொகையை அரசு அளித்துள்ளது.

பிரதம நிலவள வங்கிகளின் கடனளிப்புச் செயல் திட் டத்தில் காணப்படும் பாராட்டக்கூடிய முன்னேற்றமானது, அவைகளுக்குப் பெருமளவு அரசால் நீடிக்கப்பட்ட தாராள ஆதரவின் காரணமாக ஏற்பட்டுள்ளது.

## 19. விவசாய மறுநிதி வசதிக் கழகம் (Agricultural refinance corporation)

**1. விவசாய மறுநிதி வசதிக் கழகம் அமைக்கப்படு வதற்கான அவசியம்:** நிலவள வங்கிகள் வசமுள்ள நீண்ட கால நிதியாதாரங்கள் ஒப்பிடும் வகையில் வரையறுக்கப்பட்ட தாக இருந்தமையால், நீண்டகால விவசாய அபிவிருத்தித் திட்டங்களுக்குப் போதிய அளவு நிதியுதவ முடியாம லிருந்தது. மைய நிலவள வங்கி மாநிலம் முழுவதிலும் செயற்படுகின்றது. எனவே, நாட்டின் பல்வேறு பாகங்களில் கடன்களின் நிபந்தனை களிலும், வரையறைகளிலும் ஒருபடித்தான தன்மை இருக்க முடியாது. மேலும், அவ் வங்கிகளின் கடனளிப்பு, ஆதார நோக்குக் கொண்டிருந்ததாலும், நிலச் சீர்திருத்தங்களின் அமலில்

தாமதமான போக்கிருந்ததாலும், குத்தகைச் சாகுபடியாளர்களும், சிறு குடியானவர்களுள் பலரும், தங்கள் நிலங்களில் மூலதன முதலீட்டுக்காகக் கூட்டுறவு நிலவள வங்கிகளிலிருந்து கடன் வாங்க ஊக்கமும், உற்சாகமுமின்றி யிருந்தனர். இந்தியாவில், தீவிர விவசாயத்திற்கான வாய்ப்பு வசதிகளை முழு அளவு பயன்படுத்திக் கொள்வதிலிருக்கும் பெரிய தடைகளுள், ஆண்டு முழுவதிலும் நிச்சயமானதும், நம்பத் தகுந்ததுமான நீர் வழங்குதலின்மையும் ஒன்றாகும். தற்போது, நாட்டிலுள்ள சாகுபடி நிலங்களில் 4/5-க்கு அதிகமான நிலங்கள், வருடத்தில் ஒரு குறுகிய காலத்திற்கு மட்டுமே கிடைக்கும் மழையின் மீது, பிரத்தியேகமாக நம்பியுள்ளன. பொதுவாகப் 'பலவகைப் பயிரிடுதலை' (Multiple cropping) ஆதரிக்கும் வகையில், பருவ மழையின் பகிர்மானம் அதிகமாக அமைவதில்லை. பயிரிடப்படும் நிலங்களில் சுமார் 70 சதவீத நிலங்களில், மழை குறைவாகவும், பிரதானப் பயிரிடும் பருவத்தின்போதுங்கூட, தீவிரச்சாகுபடியை ஆதரிப்பதற்கு மழை நம்பமுடியாமலுமுள்ளது. குறிப்பாகத் தமிழ்நாட்டின் தென்மாவட்டங்களில், மேற்குத் தொடர்ச்சி மலைகளுக்கும் இலங்கை மலைகளுக்கு மிடையில் மழைச் சாயையிலுள்ள, சாகுபடிக்காகக் குறைந்த மழையை மட்டும் பெறும் பெரும் பகுதிகளில், இந் நிலைமை இருந்துவருகிறது. இம் மாநிலத்திலுள்ள நதிகளும், இம் மாநில நிலங்களின் 1/10-க்குக்கூட நீர்ப்பாசனம் செய்வதற்குப் போதிய அளவு நீரைக் கொண்டுள்ளவையாக இல்லை.

கூட்டுறவு நிலவள வங்கிகளும் வாணிக வங்கிகளும், தங்கள் சொந்த நிதி யாதாரங்களிலிருந்து, பாசனம், நில அபிவிருத்தி ஆகிய சிறப்புத் தேவைகளில் ஒரு பகுதியை மட்டுந்தான் பூர்த்தி செய்ய முடியும். கடந்த பத்தாண்டுக் காலத் தொடக்கத்தில், நீண்டகாலக் கடன் வழங்கும் நிறுவனங்களை ஒருமைப்படுத்தி, அவைகளுக்கு வழிகாட்டி, உதவி செய்வதற்குப் போதிய பண ஆதாரங்களையும், தொழில் நுட்ப அறிவையும் பெற்றுள்ளதும் அந் நிறுவனங்களின் விவசாயக் கடன்களில் முழு அளவுக்கு அல்லது ஒரு பகுதிக்கு மறுநிதி வசதி வழங்கக் கூடியதுமான ஒரு மறுநிதி வசதி யமைப்பு, நாட்டில் தேவைப்படுகிறதென்பது ஏற்றுக்கொள்ளப்பட்டது. இந் நோக்கங்களுடன், 'விவசாய மறுநிதி வசதிக் கழகம்', 1963ஆம் வருடத்திய விவசாய மறுநிதி வசதிக் கழகச் சட்டத்தின்கீழ் அமைக்கப்பட்டது.

**2. விவசாய மறுநிதி வசதிக் கழகத்தின் அமைப்பும் நோக்கங்களும்:** இக் கழகத்தின் அனுமதித்த மூலதனம்

ரூ. 25 கோடியாகும். அதன் ஒவ்வொரு பங்கும் ரூ. 10,000 பெறுமானமுள்ள ரூ. 25,000 பங்குகளாகப் பிரிக்கப் பட்டிருந்தது. வெளியிட்டதும், ஒப்பியதுமான பங்கு மூலதனம் ரூ. 5 கோடியாகும். ஒவ்வொரு பங்கும் ரூ.10,000 பெறுமானமுள்ளதும், முழுவதும் செலுத்தப்பட்டதுமான இந்த 5,000 பங்குகள் (i) ரிசர்வ் வங்கியாலும், (ii) மைய நிலவள வங்கிகளாலும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளாலும், மற்றும், (iii) அட்டவணை வங்கிகளாலும், ஆயுள் ஈட்டுறுதிக் கழகத்தாலும், ஈட்டுறுதி மற்றும் முதலீட்டுக் கம்பெனிகளாலும், கூட்டுறவு ஈட்டுறுதிச் சங்கங்களாலும் வாங்கப்பட்டுள்ளன. இக் கழகம் அமைக்கப்பட்டவுடன், இந்திய அரசு அதற்கு ரூ. 5 கோடிக்கு வட்டியில்லாக் கடனை யளித்தது. இக் கடனைத் திருப்பிச் செலுத்துதல், 15 ஆண்டுகளுக்குப் பிறகு தொடங்க வேண்டும். அண்மையில், அது, இந்திய அரசிடமிருந்து ரூ. 3 கோடிக்கு மற்றொரு கடனை வாங்கியுள்ளது. இக் கடன்மீது வட்டி செலுத்தப்பட வேண்டும். 12 மாதங்களுக்கும் அதிகப்பட்ட காலங்களுக்காக வைப்புகளைப் பெறவும், கடன்பத்திரங்களையும், கடனீட்டுப்பத்திரங்களையும் வெளியிடவுங்கூட, அது அனுமதிக்கப்பட்டுள்ளது. இக் கழகத்தின் கடன்வாங்கும் உச்ச அளவு, அதன் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்திலும், காப்பு நிதியிலும் 20 மடங்குகளுக்கு வரையறுக்கப்பட்டுள்ளது.

இக் கழகத்தின் நிருவாகம், மேலாண்மை இயக்குநர் உட்பட 9 இயக்குநர்களைக் கொண்ட, ஓர் இயக்குநர் குழுவின் வச முள்ளது. ரிசர்வ் வங்கியின் துணை ஆளுநர், தலைவராக, விவசாயக்கடனின் பொறுப்பி லுள்ளார். இதர இயக்குநர்களுள், இந்திய அரசின் 3 பிரதிநிதிகளும், ரிசர்வ் வங்கியின் பிரதிநிதியும் (i) மைய நிலவள வங்கிகள், (ii) மாநிலக் கூட்டுறவு வங்கிகள், (iii) அட்டவணை வாணிக வங்கிகள், ஆயுள் காப்பீட்டுக் கழகம், காப்பீடு மற்றும் முதலீட்டுக் கம்பெனிகளாகிய ஒவ்வொன்றுக்கும் 1 பிரதிநிதியும் அடங்கி யுள்ளனர். இக் கழகத்திலிருந்து நிதியுதவி, கீழ்க்காணும் காரியங்களுக்காகக் கிடைக்கின்றது: (i) குறிப்பாகப் பாசனத்திற்கான வசதிகள் முழுமையாகப் பயன்படுத்தப்படும் பொருட்டு, நிலத்தை மீட்டலும் தயாரித்தலும். (ii) பாக்கு, தென்னை, முந்திரி, ஏலக்காய், காஃபி, தேயிலை, இரப்பர் முதலியன போன்ற சிறப்புப் பயிர்களின் அபிவிருத்தி. (iii) இயந்திரமய மாக்கப்பட்ட விவசாயப் பண்ணை அபிவிருத்தியும், குழாய்க் கிணறுகளுக்கும், பம்புச் செட்டுகள் முதலியவற்றிற்கும் மின்சாரத்தை உபயோகித்தலும். (iv) கால்நடை அபிவிருத்தியும், பால்

பண்ணை, செயற்கை மீன் வளர்ப்பு (கூட்டுறவு மீன் பண்ணைகள் உட்பட) மற்றும் கோழி யின வளர்ப்பும்.

இக் கழகத்தின் பங்குதாரர்களான மையக் கூட்டுறவு நிலவள வங்கிகளும், அட்டவணை வங்கிகளும், கழகத்திலிருந்து மறுநிதி வசதிகளைப் பெறுவதற்குத் தகுதி பெற்றுள்ளன.

மத்தியக் காலக் கடன்களுக்காகவும், நீண்டகாலக் கடன்களுக்காகவும், மறுநிதி வசதிகள் கிடைக்கின்றன. மத்தியக் கால நிதியுதவி, 3-லிருந்து 5 ஆண்டுகள் காலத்திற்காகக் கிடைக்கின்றன. நீண்டகாலக் கடனுதவி, அதாவது 5 ஆண்டுகளுக்கு மதிகப்பட்ட காலங்களுக்கான கடன்களுக்கு மறுநிதி வசதி, 15 ஆண்டுகளைக் கொண்ட உச்சக்காலத்திற்கு வரையறுக்கப்பட்டு, சிறப்பான சில சூழ்நிலைகளில், விதிவிலக்காக, தகுதியின் பேரில் 20 ஆண்டுகள் வரை மறுநிதி வசதியளிக்கப்படுகிறது.

சட்டத்தின் 22(4)ஆவது பிரிவின்கீழ், இக் கழகத்தால் அளிக்கப்படும் கடன்களின்மீது, அசல் திருப்பிச் செலுத்தலும், வட்டி செலுத்தலும், முழுமையாகவும் நிபந்தனையின்றியும் அரசால் உத்தரவாத மளிக்கப்பட்டுள்ளது. எனினும், கழகத்தின் நிருவாகக் குழு திருப்தி பெறும் வகையில் இதர ஆதாரங்கள் அளிக்கப்படும் சந்தர்ப்பங்களில், அரசு உத்தரவாத அவசியத்தைக் கழகம் விட்டுவிடலாம்.

**3. விவசாய மறுநிதி வசதிக் கழகத்தின் கடனளிப்பு நடைமுறைகள்:** தொடக்க ஆண்டுகளில், தோட்டப் பயிர்கள் அபிவிருத்தியின்மீதும், மிக நீண்டகால நில மீட்புத் திட்டங்களின்மீதும், கழகம் வற்புறுத்தலைச் செலுத்தியது. எனினும், 1967ஆம் ஆண்டளவில், விவசாயத்தில் தோற்றுவிக்கப்பட்ட தொழில் நுட்ப மேம்பாடுகள் காரணத்தினல், அபிவிருத்திக் கடனுக்காக ஒரு பெரிய கேட்பு இருந்தது. அத்தகைய மேம்பாடுகளுக்குப் பாசன வாய்ப்பு வசதிகளின் விரைவான அபிவிருத்தியானது அவசியமாக இருந்தது. எனவே, கழகம், சிறுபாசன அபிவிருத்திக்கும், குறிப்பாகக் கிணறுகளை வெட்டுவதற்கு மிக அதிகமான வலியுறுத்தலைக் கொடுப்பதற்கும் ஒரு நிலைமை யேற்பட்டது. அதே சமயத்தில், கடல்மீன் வளர்ச்சிக்கும், கோழிப்பண்ணைகளுக்கும், பால்பண்ணைகளுக்கும் கடனுதவி யளிப்பதில், கழகம் புதிய ஒரு வாணிகத்தை வளர்ச்சி செய்தது.

விவசாயத்தில் மூலதன முதலீட்டிற்குக் கடனுதவும் துறையில் கழகம் நடப்பிலுள்ள மாதிரியிலிருந்தும், தரத்திலிருந்தும் மூன்று பெரிய வேறுவழி போதல்களைச் செய்துள்ளது. அதாவது (அ) அதன் உதவியைக் கொண்டு நிறைவேற்றப்படும் தனிநபர் விவசாயப் பண்ணை வளர்ச்சியானது, 'எல்லை அணுகல்' (Area approach) என்று வழங்கப்படும் ஓர் அடக்கமான எல்லை வளர்ச்சியின் ஒருங்கிணைந்த பாகமாக இருக்கு மென்பதை, அது உறுதிப்படுத்த முயற்சிக்கிறது. (ஆ) அதன் ஆதரவின்கீழ் நிறைவேற்றப்பட்ட அபிவிருத்தியானது, சரியான தொழில்நுட்பச் சீர்தூக்கலுக் கிணங்கவு மிருந்தது என்பதை அது உறுதிப்படுத்த முயற்சிக்கிறது. (இ) அபிவிருத்தியின் பொருளாதார நியாயப்படுத்தல்கள் ஆதார நோக்குள்ளவையாக இருப்பதற்குப் பதிலாக, திருப்பிச் செலுத்தும் திறனின்மீது பொருந்தி யிருந்தது. ஒரு முதலீடானது இறுதியாக அது அளிக்கும் இலாபம் காரணங்களால், நியாயப்படுத்தப்பட வேண்டியுள்ளது.

**4. விவசாய மறுநிதி வசதிக் கழக மடைந்துள்ள முன்னேற்றம்:** அதன் தொடக்கத்திலிருந்து, 8 ஆண்டுகளின்போது, 1963–64ஆம் ஆண்டிலிருந்து 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதி வரை, கழகம் ரூ.293 கோடிக்கு மொத்த நிதி முதலீடு கொண்டுள்ள 458 அபிவிருத்தித் திட்டங்களை ஒப்பளித்திருந்தது. ரூ.293 கோடி முதலீட்டில், ரூ.248 கோடியளவுக்குக் கழகம் மறுநிதி அளிக்க ஒப்புக்கொண்டுள்ளது. ஒப்பளிக்கப்பட்ட திட்டங்களில், ரூ.174.71 கோடி முதலீட்டைக் கொண்ட (மொத்த முதலீட்டில் 60 சதவீதம்) 210 திட்டங்கள் சிறு பாசன அபிவிருத்திக்காகவும், ரூ.58.01 கோடி முதலீட்டைக் கொண்ட (மொத்த முதலீட்டில் 21 சதவீதம்) 43 திட்டங்கள் நில அபிவிருத்திக் காரியங்களுக்காகவும் ஒப்பளிக்கப்பட்டிருந்தன.

காரியத்திற்கேற்பத் திட்டங்களின் பகிர்மான விதமானது, சிறு பாசனத் திட்டங்கள் மொத்த முதலீட்டில் 3/5-க்குச் சிறிது குறைவாகத் தொடர்ந்து வருகின்றன வென்பதையும், நிலமீட்புத் திட்டங்கள் முக்கியத்துவத்தில் குறைந்து, கழகத்தால் ஒப்பளிக்கப்பட்ட திட்டங்களின்கீழ் மொத்த முதலீட்டின் 1/4-க்கு ஒப்பிடும்போது, முதலீட்டில் 1/5-க்கும் குறைவாக வுள்ளன வென்பதையும் காட்டுகின்றது. எனினும், கழகத்தால் ஒப்பளிக்கப்பட்ட திட்டங்களின்கீழ் மொத்த முதலீட்டில் சுமார் 2 சதவீதம் மட்டும் என்பதற்கு ஒப்பிடும்போது, இயந்திரக் கலப்பைகளும், மின்சார டிரில்லர்களும்,

முடிவாகத் திட்டங்களின்கீழ் முதலீட்டில் 1/4 பாகத்தைப் பெறுகின்றன. ஒரு அர்த்தத்தில் இது, இந்திய விவசாயத்தில் ஏற்பட்டிருக்கும் தொழில் நுட்பப் புரட்சியைப் பிரதிபலிக்கிறது. கழக உதவித் திட்டத்தின் பாராட்டுதலுக்குரிய ஒரு அம்சமானது, 'சர்வதேசச் சீரமைப்பு மற்றும் வளர்ச்சி வங்கி, யின் (International Bank for Reconstruction and Development) ஓர் இணைப்பு நிறுவனமான 'சர்வதேச அபிவிருத்தி சங்கத்' துடன் (International Development Association) விவசாயத்தின் உற்பத்தித் திறனை நவீனமாக்குவதற்காகவும், பெருக்குவதற்காகவும், மூலதன முதலீட்டிற்கு நிதியுதவி யளிப்பதில், அது வைத்திருந்த தீவிரத் தொடர்பாகும்.

**தமிழ்நாட்டில் விவசாய மறுநிதி வசதிக் கழகத்தால் வழங்கப்படும் உதவி**: தமிழ்நாட்டில் பல சிறுபாசனத் திட்டங்களையும், சிறுபாசன மல்லாத திட்டங்களையும் அமல்படுத்துவதில் தமிழ்நாடு மாநில நிலவள வங்கிக்கு, விவசாய மறுநிதி வசதிக்கழகம், அதன் தொடக்கத்திலிருந்தே ஏராளமான உதவியை வழங்கி வந்துள்ளது. பெரும்பாலான சிறுபாசனத் திட்டங்கள், கிணறு வெட்டுதலையும், கிணறு ஆழப்படுத்துதலையும், பம்புச் செட்டுகள் அமைத்தலையும் எதிர் நோக்குகின்றன. சிறுபாசன மல்லாத திட்டங்களின்கீழ், தமிழ்நாட்டில், நீலகிரி மாவட்டத்தில் ரூ. 25 இட்ச நிதி முதலீட்டுடன் 1,000 ஏக்கர்களைத் தழுவும் ஒரு தேயிலைத் தோட்டத் திட்டமும், தஞ்சாவூர் மாவட்டத்தில் ரூ.29.56 இலட்ச நிதி முதலீட்டுடன் 2,000 ஏக்கர்களைத் தழுவும் ஒரு தென்னைத் தோட்டத் திட்டமும், கன்னியாகுமரி மாவட்டத்தில் ரூ. 24 இலட்ச நிதி முதலீட்டுடன், 1,500 ஏக்கர்களைத் தழுவும் இரண்டு காஃபித் தோட்டத் திட்டங்களும், கோவை மாவட்டத்தில் ரூ. 109 இலட்சம் மதிப்பீடு செய்யப்பட்ட செலவில், 32,000 ஏக்கர் நிலத்தை மீட்பதற்காக ஒரு நிலமீட்புத் திட்டமும் அமலி லுள்ளன. ஆலியாறு திட்டத்தின் முதற்கட்டம் முடிவடைந்தது. கோவை மாவட்டத்தில் பரம்பிக்குளம், ஆலியாறு திட்டத்தில், 83,493 ஏக்கர் நிலங்கள் மீட்கப்பட்டு அத் திட்டத்திற்காக ரூ.443.43 இலட்சம் செலவிடப்பட்டது.

ரூ. 40.40 கோடி நிதி முதலீட்டைக் கொண்ட 22 நீர்ப்பாசனத் திட்டங்கள், தமிழ்நாட்டில், பல்வேறு கட்டங்களில் அமலி லுள்ளன. ரூ. 56.57 கோடி மொத்த நிதி முதலீட்டுடன் 32 சிறு பாசனத் திட்டங்களும் ஒரு சிறுபாசன மல்லாத திட்டமும், விவ்சாய மறுநிதி வசதிக் கழகத்தின்

ஆலோசனையில் இருந்து வந்துள்ளன. இத் திட்டங்கள், மாநில நிலவள வங்கியின் மூலம், அமல் செய்யப்பட்டு வருகின்றன. இத் திட்டங்களுக்கு நிதியுதவும் காரியத்திற்காக, மாநில நில வள வங்கியால் சிறப்பு அபிவிருத்திக் கடனீட்டுப் பத்திரங்கள் (Special Development Debentures) வெளியிடப்படுகின்றன. அவ்வாறு வெளியிடப்பட்ட சிறப்புக் கடனீட்டுப் பத்திரங் களின் தொகை, 1971–72 ஆம் ஆண்டின்போது ரூ. 380.15 இலட்சமாக இருந்தது. அதில், ரூ. 336.00 இலட்சத்திற்கு விவசாய மறுநிதிவசதிக் கழகத்தால் வாங்கப்பட்டு, எச்சம், மாநில அரசால் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

30–6–72ஆம் நாளிறுதிவரை, சிறுபாசனத் திட்டங்களின் கீழ், 10,936 புதிய கிணறுகள் வெட்டுவதற்காகவும், 4,600 நடப்பிலுள்ள கிணறுகளை ஆழப்படுத்துவதற்காகவும், 11,435 பம்புச் செட்டுகளை அமைப்பதற்காகவும், ரூ. 847.85 இலட்சமள விற்குக் கடன்க ளளிக்கப்பட்டன. சிறுபாசனமல்லாத திட்டங் களின்கீழ், 1,03,172 ஏக்கர் நிலங்களை மீட்பதற்காகவும், 2,043 ஏக்கர்களில் தென்னைத் தோட்ட வளர்ச்சிக்காகவும், 1,000 ஏக்கர்களில் தேயிலைத் தோட்ட வளர்ச்சிக்காகவும், 1,628 ஏக்கர் களில் இரப்பர்த் தோட்ட வளர்ச்சிக்காகவும், 2,578 ஏக்கர்களில் காப்பித் தோட்ட வளர்ச்சிக்காகவும், அத் திட்டங்களின் தொடக் கத்திலிருந்து ரூ. 621 இலட்சமளவிற்குக் கடன்க ளளிக்கப்பட்டன.

மாவட்ட ஆட்சியாளர்கள், சிறுபாசனத் திட்டங்களின் அமலுக்குப் பொறுப்பாக வுள்ளனர். இதர வகைத் திட்டங் களைத் தயாரித்தலும், அமல் செய்தலும், சம்பந்தப்பட்ட அரசு இலாகாத் தலைவர்கள் வசமுள்ளன. கூட்டுறவுப் பதி வாளரும் மாநில நிலவள வங்கியும், நிலமீட்புக்கும் தோட் டப் பயிர்கள் அபிவிருத்திக்கும் தொடர்பான திட்டங்களை அமல் செய்வதற்குப் பொறுப்பாக வுள்ளனர். மாவட்டங்களில் திட்டங்களைத் தயாரிப்பதிலும், அமல் செய்வதிலும் ஆட்சி யாளர்களுக்கு உதவியளிப்பதற்காகவும் மாநில மட்டத்தில் இத் திட்டங்களின் செயற்பாட்டைச் சரியாக மதிப்பீடு செய்ய மாநில நிலவள வங்கிக்கு உதவி செய்வதற்காகவும், 'தொழில் நுட்பக் குழுமங்கள்' அமைக்கப்பட்டுள்ளன. மாநிலக் கூட்டுறவுத் துறை அமைச்சரின் தலைமையின்கீழ் மாநில மட்டத்து ஆய்வுக் குழுவாலும் (State Level Review Committee) மாவட்ட மட்டத்தில் ஆட்சியாளரைத் தலைவராகக் கொண்ட மாவட்ட ஆய்வுக் குழுக்களாலும், திட்டங்களின் முன்னேற்றம் கால முறையாக ஆய்வு செய்யப்படுகின்றது.

உலக வங்கித் திட்டம் (I. D. A. Project) தமிழ்நாட்டில், 2–11–1971ஆம் நாளிலிருந்து அமலுக்கு வந்தது. திட்டத்தின் மொத்தச் செலவு ரூ.46.70 கோடியாகும். அதில் உலக வங்கியின் (I.D.A.) உதவி ரூ. 26.25 கோடியாக இருக்கும். மொத்தத் திட்டச் செலவில், நிலவள வங்கிகளால் அமல் செய்யப்பட வேண்டிய திட்டத்திற்காக ரூ.41.94 கோடி உத்தேசிக்கப்பட்டுள்ளது. பயனடைபவர்களால் செய்யப்பட வேண்டிய செலுத்தல் தொகை நீங்கலாக, நிலவள வங்கிகளுக்கு வழங்கப்பட வேண்டிய கடனுதவி ரூ.39.35 கோடியாக இருக்கும். உலக வங்கித் திட்டம், கீழ்க்காணும் முறையில், அபிவிருத்தியை எதிர்நோக்குகின்றது. செங்கை, வடார்க்காடு, சேலம் மாவட்டங்களில் கிணறுகளை வெட்டுதல், தஞ்சை, திருச்சி, தென்னார்க்காடு மாவட்டங்களில் குழாய்க் கிணறு அபிவிருத்தி, கோவை மாவட்டத்தில் நிலத்தைச் சமன் செய்தல், தஞ்சை மாவட்டத்தில் நிலவடிகால் ஏற்படுத்துதல், தமிழ்நாடு முழுவதையும் இயந்திரக் கலப்பை மயமாக்குதல் முதலிய திட்டங்கள் தயாரித்தல், அமல் செய்தல் என்ற பல்வேறு கட்டங்களி லுள்ளன.

**சிறு குடியானவர்களுக்கு உதவி**: சிறு விவசாயி–குடியானவர்களின் பிரச்சினைகளுக்கும், தேவைகளுக்கும், பொருளாதாரத்தில் பின்தங்கிய பகுதிகளின் பிரச்சினைகளுக்கும், தேவைகளுக்கும், கழகம் தன் தனிக் கவனத்தைச் செலுத்துகிறது. ஓர் இயந்திரக் கலப்பையை அல்லது குழாய்க் கிணற்றை உச்சஅளவிற்கு உபயோகிப்பதற்காகத் தேவைப்படும் நிலத்தைவிடக் குறைவான நிலத்தை ஒரு குடியானவர் வைத்திருந்தாலுங்கூட, இயந்திரக் கலப்பை வாங்குவதற்கான அல்லது குழாய்க் கிணற்றை அமைப்பதற்கான ஒரு கடனைப் பெறுவதற்காக, விளைவிக்கப்பட்ட கூடுதலான வருவாயிலிருந்தும், முதலீட்டிலிருந்தும் ஒரு நியாயமான காலத்திற்குள் அக் கடன் அவரால் திருப்பிச் செலுத்த முடியுமானல், அக் குடியானவர் தகுதியுள்ளவராகக் கருதப்படுவார். கடன் வாங்கும் குடியானவர், தன் சொந்தப் பண்ணையின்மீது இயந்திரக் கலப்பை உபரி நேரங்களையும் அல்லது உபரி நீரையும் வாடகைக்கு விடும் நிலைமையில் இருப்பார் என்று நிதிவங்கி திருப்தியடைந்தால், அது இக் காரியங்களுக்காக, ஒப்பிடும் வகையில் சிறு பண்ணைகளின்மீதுங்கூட, மூலதன முதலீட்டிற்கு நிதியுதவக் கூடும்.

**5. விவசாய மறுநிதி வசதிக் கழகத்தால் வழங்கப்படும் சேவைகளைப்பற்றிய மதிப்பீடு** : இக் கழகத்தின் மறுநிதி வழங்கு

கின்ற நடவடிக்கையானது, அதனுல் நிதி யுதவப்படும் சிறப்பு அபிவிருத்தித் திட்டங்களால் தழுவப்படும் தொழிற் பகுதிகளின் இயற்கைவளங்களின் உச்ச அபிவிருத்திக்காக மத்தியக் காலக் கடனளிப்பிற்காகவும், நீண்ட காலக் கடனளிப்பிற்காகவும், கிடைக்கும் நிதிகளின் உச்சமான உபயோகத்தை உறுதிப்படுத்துவதற்கு உதவியுள்ளது. இவ் வுதவியானது, திட்டங்களின் தொழில் நுட்பச் சாத்தியக் கூறும், பொருளாதாரத் தன்னிறைவும், கவனத்துடன் பரிசீலிக்கப்படுவதை நிச்சயப்படுத்துவதன்மூலம் செய்யப்படுகிறது. மற்றும், கழகத்தின் நோக்கங்களில் முக்கியமானது அறிவு புகட்டலாகும். சிறு பாசனம், நிலமீட்பு, தோட்டப் பயிர்கள் வளர்ச்சி முதலியவற்றிற்குச் சம்பந்தமான திட்டங்களுக்காக நிதிகளை வழங்குவதுடன் கழகம், 'திட்டக் கருத்தமைப்பு' (Project concept) 'எல்லை அணுகல்' (Area approach) ஆகியவற்றைப் பற்றிய அறிவைப் பரப்பவும் உதவியுள்ளது. இவ் விரண்டும் ஓர் அடக்கமான எல்லையின் வளர்ச்சியை ஆதரிப்பதற்கும், ஒருமைப்படுத்துவதற்கும், மேற்பார்வையிடுவதற்கும், சேவைகளை எளிதாக வழங்குவதன் மூலம் சாத்தியப்படுமளவில் சிக்கனத்தையும் அதனுடன் வரும் நன்மைகளையும் ஏற்படுத்துகின்றன. தன்னுடைய முயற்சிகளால் நிலவள வங்கிகளால் மேற்கொள்ளப்படுகின்ற முதலீட்டுத் திட்டங்களுக்கு நிதியளிப்புப் பாணியில் ஒரு மறுதிருப்பத்தைக் கொண்டுவருவதற்கு முயற்சித்துக் கொண்டுள்ளது. சிறப்பாகப் பொருளாதாரக் கண்ணோட்டத்திலிருந்தும் கடன் வாங்குபவரின் திருப்பிச் செலுத்தும் சக்தியுயர்வையும் திட்டங்களின் அமலிலுள்ள நிறுவன அம்சங்களையும் விசேஷமாகக் குறித்தும், திட்டங்களை மதிப்பீடு செய்யும் விஷயத்திலும், ஒவ்வொரு கட்டத்திலும் அவசியமான பின்செயலையும், மேற் பார்வையையும் மேற்கொள்ளுதல் விஷயத்திலும் ஒரு மறுதிருப்பத்தைக் கொண்டுவர அது முயற்சித்துக் கொண்டுள்ளது.

## பிற்சேர்க்கை I

### நாட்டில் மைய நிலவள வங்கிகளின் முன்னேற்றமும், தமிழ்நாடு கூட்டுறவு மாநில நிலவள வங்கியின் முன்னேற்றமும்

| | | 1967—68 | 1969—70 | 1971—72 |
|---|---|---|---|---|
| | | | (ரூபாய், கோடிக் கணக்கில்) | |
| | மைய நிலவள வங்கிகளின் எண்ணிக்கை | 19 | 19 | 19 |
| 1. | உறுப்பினர் எண்ணிக்கை | | | |
| | (அ) பிரதம நிலவள வங்கிகள் | 709 | 799 | 869 (223) |
| | (ஆ) இதரக் கூட்டுறவு வங்கிகளும், சங்கங்களும் | 196 | 193 | 145(—) |
| | (இ) தனிநபர்கள் | 9.15,342 | 11.70,420 | 16,91,653(172) |
| 2. | செலுத்தப்பட்ட மூலதனம் | 24.1 | 38.9 | 57.62 (5.79)[1] |
| 3. | காப்பிருப்புகள் | 4.2 | 6.7 | 12.36(1.68) |
| 4. | நிலுவையிலுள்ள கடனீட்டுப்பத்திரங்கள் | 299.6 | 570.8 | 879.82(107.03) |
| | | | | சாதாரணம் 735.85(90.7) |
| | | | | கிராமம் 20.08 (2.31) |
| | | | | சிறப்பு 123.88(14.26) |

[1] அரசு 13.84, பிரதம நிலவள வங்கிகள் 26.83, இதரக் கூட்டுறவு வங்கிகளும் சங்கங்களும், .02 தனிநபர்கள் 17.11. (அரசு 1.70, பிரதம நிலவள வங்கிகள் 4.09, தனி நபர்கள். 0030.)

(பிற்சேர்க்கை I-ன் தொடர்ச்சி)

| | 1967–68 | 1969–70 | 1971–72 |
|---|---|---|---|
| 5. வாங்கிய இதரக் கடன்கள் | 15.6 | 12.5 | 15.65(0.31) |
| 6. நடைமுறை மூலதனம் | 346.7 | 638.3 | 1,016.49(119.23) |
| 7. முதலீடுகள்: | | | |
| (அ) கடன் கழிவு நிதி | 63.3 | 118.0 | 205.49(22.37) |
| (ஆ) இதர முதலீடுகள் | 7.4 | 7.8 | 16.78(2.34) |
| 8. கடன்கள் | | | |
| (அ) வழங்கப்பட்டவை | 92.4 | 153.3 | 145.75(21.24) |
| (ஆ) வசூல் செய்யப்பட்டவை | 22.1 | 35.4 | 52.73(6.51) |
| (இ) நிலுவையிலிருப்பவை | 278.3 | 509.7 | 728.82(89.40) |
| (ஈ) தவணை கடந்தவை | 2.3 | 5.4 | 12.54(0.14) |
| (உ) தவணை கடந்தவையின் சதவிகிதம் | — | — | 19.2% (2.0%) |
| முறையான உறுப்பினர்கள் | 5.38,091 | 7,94,888 | 10.56,117 |
| பெயரளவு உறுப்பினர்கள் | 3,77,251 | 4,35,453 | 6,35,536 |

**நாடு முழுவதிலும், தமிழ் நாட்டிலுமுள்ள பிரதம நிலவள வங்கிகளின் முன்னேற்றம்**

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| | | 1968 | 1970 | 1972 |
|---|---|---|---|---|
| 1. | பிரதம நிலவள வங்கிகளின் எண்ணிக்கை | 731 | 809 | 869(223) |
| 2. | உறுப்பினர் எண்ணிக்கை | 14,52,428 | 19,79,563 | முறையானவை 24,83,413 (4,26,482) பெயரளவு 14,22,600 (5,05,411) |
| 3. | பங்கு மூலதனம் | .. | .. | 48.12(6.59) |
| 4. | காப்பிருப்புகள் | .. | .. | 6.71(0.69) |
| 5. | வாங்கிய கடன்கள் | .. | .. | 552.82(89.39) |
| 6. | வைப்புகள் | .. | .. | 2.80(0.21) |
| 7. | முதலீடுகள் | .. | .. | 30.81(3.98) |
| 8. | நடைமுறை மூலதனம் | .. | .. | 673.52(105.27) |
| 9. | வழங்கப்பட்ட கடன்கள் | 64.9 | 113.2 | 104.48(22.33) |
| 10. | வசூலிக்கப்பட்ட கடன்கள் | .. | .. | 48.04(5.73) |
| 11. | நிலுவையிலுள்ள கடன்கள் | .. | 366.9 | 563.36(92.35) |
| 12. | தவணை கடந்த கடன்கள் | 5.9 | 9.8 | 17.60(1.33) |
| 13. | தவணை கடந்த கடன்களின் சதவீதம் | .. | .. | 26.8%(18.5) |

(அடைப்புக்குறியிலுள்ள எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை)

## பிற்சேர்க்கை II

| | காரியம் | திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய உச்சக் காலவரை | |
|---|---|---|---|
| | | சிறு குடியானவர்கள் | மற்றவர்கள் |
| 1. | கிணறுகளை வெட்டுதல் | முதலீட்டுச் செலவு (பம்புச் செட்டுகளுக்கான கடன்களுட்பட ரூ. 10,000-க்குக் குறைவாக இருந்தால் வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் ஓர் ஆண்டு உட்பட 15 ஆண்டுகள் | 9 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 1 ஆண்டுக் கால வரை உட்பட) |
| 2. | குழாய்க் கிணறுகளை வெட்டுதல் | 750 | 150 |
| 3. | வடிகட்டிகளை (filter points) அமைத்தல் | 7 ஆண்டுகள் | 7 ஆண்டுகள் |
| 4. | மின்சார மோட்டார்கள், பம்புசெட்டுகள், எண்ணெய் இயந்திரங்கள் ஆகியவைகளை அமைத்தல். | 7 ஆண்டுகள் | 7 ஆண்டுகள் |
| 5. | நிலத்தினை மட்டம் செய்தல் | 15 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 2 ஆண்டுகள் உட்பட) | 10 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 2 ஆண்டுகள் உட்பட) |
| | **பண்ணைகளைப் பொறிமயமாக்குதல்:** (Farm mechinisation) | | |
| 6. | இயந்திரக் கலப்பைகள் | .. | 7 ஆண்டுகள் |

| | | | |
|---|---|---|---|
| 7. | நிலத்தை வடிகால் செய்தல் | 12 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 2 ஆண்டுகள் உட்பட) | 10 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 2 ஆண்டுகள் உட்பட) |
| 8. | குளம், பாசனவாய்க்கால் ஆகியவைகளை வெட்டுதல், அல்லது நீர்சேமித்து வைத்தல், வழங்குதல் அல்லது விநியோகம் செய்தல் ஆகியவைகளைப் பற்றிய இதர வேலைகள் | .. | 10 ஆண்டுகள் |
| 9. | கிணறுகளையும், குழாய்க்கிணறுகளையும், ஆழப்படுத்துதலும், அல்லது குளங்கள் அல்லது பாசன வாய்க்கால் முதலியவைகளைச் சீரமைத்தலும் | 9 ஆண்டுகள் | 7 ஆண்டுகள் |
| 10. | கால்நடைக் கொட்டகை | 10 ஆண்டுகள் | 10 ஆண்டுகள் |
| 11. | கிணறுகளை வெட்டுதலும், பம்புச் செட்டுகளை அமைத்தலும் சேர்ந்து | 15 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 1 ஆண்டுக் காலவரை) | 9 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 1 ஆண்டுக் காலவரை) |
| 12. | கிணறுகளை ஆழப்படுத்துதலும், பம்புச் செட்டுகளை அமைத்தலும் சேர்ந்து | 15 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 1 ஆண்டுக் காலவரை) | 9 ஆண்டுகள் (வாய்தாவுக்கு மேல் கொடுக்கப்படும் 1 ஆண்டுக் காலவரை) |
| 13. | தோட்டக்கலை | 15 ஆண்டுகள் | 10 ஆண்டுகள் |
| 14. | பண்ணை வீடுகளையும், விவசாய உற்பத்திப் பொருள்களைப் பதனப்படுத்துதலுக்குமான கட்டடங்களையும் கட்டுதல் | 10 ஆண்டுகள் | 10 ஆண்டுகள் |
| 15. | முன் கடன்களைத் தீர்த்தல், நிலங்களை வாங்குதல் முதலியன | 15 ஆண்டுகள் | 7 ஆண்டுகள் |

**கடன்களின் உச்சத் தொகையும், மற்றும் காரியங்களும்**

| காரியம் | உச்சக் கடனளவு ரூபாய் |
|---|---|
| 1. ஒரு கிணறு வெட்டுவதற்காக | 35,000 |
| 2. ஒரு மின்சார மோட்டாரையும், எண்ணெய் இயந்திரத்தையும் அமைத்தலுக்காகவும், பம்புச் செட்டைக் கட்டுதலுக்காகவும் | 5,000 |
| 3. ஒரு சப் மார்சிபிள் பம்புச் செட்டை வாங்குவதற்காக | 20,000 |
| 4. ஒரு கிணற்றை ஆழப்படுத்துவதற்காக | 10,000 |
| 5. ஒரு ஏக்கரா நிலத்தை மீட்பதற்காக | 10,000 |
| 6. ஒரு இயந்திரக் கலப்பையை வாங்குவதற்காக | 50,000 |
| 7. நஞ்சைச் சாகுபடிக்காக நீரைப் பத்திரம் செய்வதற்கு 10 ஏக்கர்கள் நிலப்பகுதியை உச்சமாகக் கொண்ட குளங்களை வெட்டுவதற்காக | 20,000 |
| 8. குழாய்களைக்கொண்ட உயர்நீர்த்தொட்டியைக் (Overhead-tank) கட்டுவதற்காக | 10,000 |
| 9. தெளிப்புகளையும் (Sprayers) கரும்பு நசுக்கிகளையும், இதர இயந்திரங்களையும் வாங்குவதற்காக | 15,000 |
| 10. கிடங்குகளையும், கால்நடைக் கொட்டகைகளையும், பண்ணை வீடுகளையும், எருக் கொட்டகைகளையும் தேயிலைக் களஞ்சியங்களையும் கட்டுவதற்காக | 10,000 |
| 11. சிமெண்டுக் குழாய்களையும், வடிகால் வாய்க்கால்களையும் போடுவதற்காக | 2,000 |

| | | |
|---|---|---|
| 12. | கிணறுகளுக்குப் பழுது பார்த்தலுக்காக | 3,000 |
| 13. | பழத் தோட்டங்களை அமைப்பதற்காகவும், பழைய மரங்களுக்குப் பதிலாகப் புதிய மரங்களை நடுவதற்காகவும் | 500 |
| 14. | இரப்பர்ச் சாகுபடிக்காகவும், பதனப்படுத்துவதற்காகவும், புகை போடும் வீடுகளைக் (Smoke houses) கட்டுவதற்காகவும், உருளைகளை (Rolers) வாங்குவதற்காகவும், (பத்து ஏக்கர்களையுடைய ஒரு குறுமமான வயலுக்காக) | 5,000 |
| 15. | முன்கடன்களைத் தீர்ப்பதற்காகக் கடன் விண்ணப்பம் பிரத்தியேகமாக இருந்தால், முன்கடன்களைத் தீர்ப்பதற்காக | 5,000 |
| 16. | நிலம் வாங்குவதற்காக (நிலம் வாங்குவதற்காகக் கடன் விண்ணப்பம் பிரத்தியேகமாக இருந்தால், குத்தகைப் பயிரிடுபவர்களால் உடைமை உரிமையை வாங்குதல் உட்பட) | 5,000 |

# 17. கூட்டுறவு நகர வங்கிகளும், ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்களும், இதர விவசாயம் அல்லாத கடன் வசதிச் சங்கங்களும்

(Co-operative Urban Banks Employees Credit Societies and other Non-agricultural Primary Credit Societies)

## I விவசாயமல்லாத கடன் வசதிச் சங்கங்கள்

(Non-Agricultural Credit Societies)

### 1. பொது

விவசாயமல்லாத கடன்வசதிச் சங்கங்கள், எண்ணிக்கையிலும், நடவடிக்கைகளிலும் முக்கியத்துவத்தில் விவசாய நாணயச் சங்கங்களுக்கு அடுத்து வருகின்றன. இந்த இரண்டு வகைச் சங்கங்களும் ஒரே மாதிரியான முறைகளில் அமைக்கப்படுகின்றன. மற்றும், அவற்றின் ஆதாரமான கொள்கைகளும் ஒரேமாதிரி யானவையே. ஆனால், ஓரளவு நகர்ப்புறங்களில் தீர்க்கப்பட வேண்டிய பிரச்சினையின் தன்மையிலுள்ள வேறுபாட்டின் காரணமாகவும், ஓரளவு சூழ்நிலை வேறுபாடுகள், அவைகள் சேவை செய்ய வேண்டிய மக்கள் வர்க்க வேறுபாடுகள் காரணமாகவும், விவசாயமல்லாத நாணயச் சங்கங்களின் செயற்பாட்டில் சில சிறப்பு அம்சங்களும், நடைமுறையில் சில வேறுபாடுகளும் உள்ளன.

விவசாயமல்லாத கடன்வசதிச் சங்கங்களுள், கூட்டுறவு நகர வங்கிகளும், ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்களும் (சம்பளம் பெறும் ஊழியர்களுக்காகவும், கூலி பெறும் ஊழியர்களுக்காகவும்) மற்றவைகளும் அடங்கியுள்ளன. விவசாயமல்லாத நாணயச் சங்கங்களுள், நகர வங்கிகளும், ஊழியர்கள் நாணயச் சங்கங்களும், அதிகமானவையாக அமைந்துள்ளன. இந்தச் சங்கங்கள், சிறு தொழில் செய்பவர்கள், வர்த்தகர்கள், கடைக்காரர்கள், சம்பளம் வாங்குபவர்கள்,

தொழில்துறைத் தொழிலாளர்கள், உத்தியோகம் செய்பவர்கள், சுயவேலையில் ஈடுபட்டிருப்பவர்கள் போன்ற, விவசாயமல்லாத மக்களின் பல்வேறு பிரிவினர்களின் கடன் தேவைகளை வழங்குகின்றன. கூட்டுறவு இயக்கத்தின் இந்தத் துறையானது, சுயேச்சையாகவும், அரசினரிடமிருந்து அதிக ஊக்குவித்தலின்றியும் வளர்ந்துள்ளது. எந்தக் கூட்டுறவு நாணயச் சங்கத்தின் அடிப்படை நோக்கமும் இரண்டு வகைப்படும். அதாவது (i) சிக்கனத்தை வளர்த்தலும் (ii) கடன் வழங்குதலும். இந் நோக்கங்களைச் சாதிப்பதில், விவசாயமல்லாத நாணயச் சங்கங்கள் குறிப்பிடத்தக்க முக்கியமான வெற்றியை அடைந்திருக்கின்றன.

## 2. தற்போதைய நிலைமை

இந்தியாவில், 1972 ஜூன் இறுதியில், விவசாயமல்லாத நாணயச் சங்கங்களின் எண்ணிக்கை 16,091 ஆக இருந்தது. அவற்றுள், 1,213 கூட்டுறவு நகர வங்கிகளாகவும், 11,404 ஊழியர்கள் நாணயச் சங்கங்களாகவும், 3,474 இதரச் சங்கங்களாகவு மிருந்தன. 30-6-72ஆம் தேதியன்று, எல்லா விவசாயமல்லாத நாணயச் சங்கங்களின் உறுப்பினர்களின் எண்ணிக்கை 89 லட்சமாக விருந்தது. அவற்றின் நடைமுறை முதல் 600 கோடி ரூபாயாக இருந்தது. அவற்றின் வைப்புத் தொகைகள் 352.1 கோடி ரூபாயாக இருந்தன. அத் தொகைகள் அவற்றின் நடைமுறை முதலில் 58.7 சதவீதமாக அமைந்திருந்தன. 1971–72ஆம் ஆண்டில், அவை 568.1 கோடி ரூபாய்த் தொகைக்குக் கடன்களையும், முன்பணங்களையும் வழங்கின. 24 கோடி ரூபாய்க்குத் தவணை தவறிய பாக்கி யிருந்தன; 393.1 கோடி ரூபாய்த் தொகை மொத்தக் கடன் நிலுவைகளுக்கு அவை 6.1 சதவீதமாக அமைந்திருந்தன. விவசாயமல்லாத நாணயத்துறை, குறிப்பாக, மகாராஷ்டிரம், குஜராத், தமிழ்நாடு, மேற்கு வங்காளம் போன்ற சில மாநிலங்களில் வலுவுற்றிருக்கிறது. இந் நான்கு மாநிலங்களிலுள்ள சங்கங்கள் மட்டும், நாட்டிலுள்ள எல்லா விவசாயமல்லாத நாணயச் சங்கங்களின் மொத்த நடைமுறை முதலில் சுமார் 4/5-க்குப் பொறுப்பாக இருந்தன.

தமிழ்நாட்டில், 30–6–72 தேதியன்று, விவசாயமல்லாத நாணயச் சங்கங்களின் மொத்த எண்ணிக்கை 1,204ஆக இருந்தது. அவற்றுள், 136 கூட்டுறவு நகர வங்கிகளாகவும், 956 ஊழியர்கள் நாணயச் சங்கங்களாகவும், 112 இதரச் சங்கங்களாகவுமிருந்தன. 30–6–72ஆம் தேதியன்று, எல்லா விவசாயமல்லாத நாணயச் சங்கங்களின் எண்ணிக்கை 1.56

மில்லியனாக இருந்தது. அவற்றின் மொத்த நடைமுறை முதல் ரூபாய் 72.5 கோடிகளாக இருந்தது; மொத்த வைப்புத் தொகைகள் 44.6 கோடிகளாக இருந்தன; அத் தொகைகள் அவற்றின் நடைமுறை முதலில் சுமார் 61 சத வீதமாக அமைந்திருந்தன. 30–6–72ஆம் தேதியன்று நிலுவையிலிருந்த கடன்களும் முன்பணங்களும் ரூபாய். 56.70 கோடியாக விருந்தன. தவணை தவறிய பாக்கிகள், ரூ. 2.5 கோடியாக விருந்தன; இத் தொகை மொத்தக் கடன் நிலுவைகளில் 5 சதவீதமாக அமைந்திருந்தது.

இச் சங்கங்கள், தமிழ்நாட்டின் கூட்டுறவு நிறுவனங்களுள், மிக அதிகத் தற்சார்பு வகைக் கூட்டுறவுச் சங்கங்களாக அமைந்திருக்கின்றன. அவற்றின் அகப் பொருள்வளங்கள், அவற்றின் நடைமுறை முதலில் ஏறக்குறைய 90 சதவீதத்திற் கிருந்தன; வைப்புத் தொகைகள் நீங்கலாக, அவற்றின் கடன் பெற்ற முதல் அவற்றின் நடைமுறை முதலில் சுமார் 8 சதவீதத்திற்கு மட்டுந்தான் இருந்தது. எனவே, இச் சங்கங்கள் பெயரளவில் மட்டுந்தான் நிதிவழங்கும் வங்கிகள்மீது சார்பு கொண்டிருந்தன.

## II கூட்டுறவு நகர வங்கிகள்

### 1. நகரக் கடன் வசதியின் முக்கியத்துவம் (Importance of Urban Credit)

முக்கியத்துவத்தில் விவசாயக் கடனுக்கு அடுத்தது, நகர எல்லைகளிலும், அரையளவு நகர எல்லைகளிலும் வசிக்கும், விவசாயமல்லாத இதரத் தொழில்களில் ஈடுபட்டிருக்கின்ற பெருவாரியான மக்கள் வகுப்பினர்களுக்குக் குறிப்பாக, மிதமான, சிறிய வருவாயுள்ளவர்களுக்குக் கடன் வசதியும், அதற்குத் தொடர்பான சேவைகளையும் வழங்குதலாகும். அத்தகைய மக்களுள் சிறு தொழிலதிபர்களும், கைவினைஞர்களும், வர்த்தகர்களும், கடைக்காரர்களும், அரசு பணியாளர்களும், நகராட்சி ஊழியர்களும் போன்ற சம்பளம் பெறுபவர்களும், உத்தியோகஸ்தர்களும், சுயவேலையி லமர்ந்திருக்கும் இதர நபர்களும், தொழில்துறைத் தொழிலாளிகளும், ஆலைத் தொழிலாளர்களும், பலவகை ஆதாரங்களின் மூலம் வருவாய் பெறும் இதர நபர்களும் அடங்கியுள்ளனர். இந்த நபர்கள், சிறு கடன்களுக்காக, வட்டிக்குக் கடன் கொடுப்பவரிடமும் (Money Lenders) வட்டித் தொழில் புரியும் அமைப்புகளிடமும் சென்று உயர்ந்த வட்டி விகிதத்தில் கடன் வாங்குகின்றனர். கூட்டுறவுத் திட்டக்குழு (1946) (Co-operative

Planning Committee) கூறியதுபோல், கூட்டுறவு நகர வங்கிகள், இவ் வகையான மக்கள் வகுப்பினருடன் நேர்முக, நெருங்கிய உறவை அமைத்துக் கொள்ளுகிறதன் மூலம், அவர்களின் கடன் தேவைகளை வழங்குவதற்கான மிகப் பொருத்தமான அமைப்புகளாக இருக்கத் தகுதி பெறுகின்றன. பொதுவாக நகர வங்கிகளில், சம்பளம் பெறும் நபர்கள், ஊழியர்கள், ஆலைத் தொழிலாளர்கள், தொழிலாளர்கள் ஆகியவர்களின் ஒரு பகுதி இருந்தாலும், இவர்களுக்காகத் தனிப்பட்ட சங்கங்கள் அடிக்கடி அமைக்கப்படுகிறதால், நகர வங்கிகள் அமைப்பதன் பிரதானக் குறிக்கோளானது, தொழிலுக்கும், வர்த்தகத்திற்கும் நிதியுதவி வழங்குவதே. விவசாய நாணயச் சங்கம், சிறு குடியானவர்களின் கடன் தேவைகளை வழங்குவதற் கிருப்பது போலவே, நகர வங்கி ஆற்ற வேண்டிய கடமை சிறு தொழில்களுக்கும், வர்த்தகத்திற்கும் நிதியுதவி வழங்குவதே. ஒருசில விலக்குகளைத் தவிர்த்து, 'நகரக் கூட்டுறவு வங்கிகளால் வழங்கப்படும் வங்கித் தொழில் சேவைகள் மிகவும் வரையறுக்கப்பட்டவையாக இருக்கின்றன; மேலும், ஒரு சிறிய சதவிகித நிதி மட்டுந்தான் சிற்றளவுத் தொழில்களுக்கு வழங்கப்படுகின்றது' என்பது பொதுவாக உண்மையே.

வங்கித் தொழில் ஆணைக்குழுவின் (Banking Commission) தலைவரும், மராட்டிய மாநிலத்து மிகச் சிறந்த ஒரு கூட்டுறவாளருமான, திரு. ஆர்.ஜி. சராய்யா (Thiru R.G. Saraiya) வங்கிகளுக்காக, 'வங்கித் தொழிலின் புதிய திசை திருப்புமுணர்வு' (New Orientation of Banking) சந்தர்ப்பத்தில், நகரக் கூட்டுறவு வங்கிகளுக்காகப் புதிய பணிகளை எதிர்நோக்கி யிருக்கிறார். அவர் கருத்தின்படி, இவ் வங்கிகள், தங்கள் வங்கித் தொழில் வாணிகத்தை வளர்த்துத் தங்கள் வாடிக்கைக்காரர்களுக்குத் துரிதமானதும் உறுதிப்பயனுள்ளதுமான வங்கித் தொழில் சேவைகளைப் புரிந்து, திறமை வாய்ந்த வணிக வங்கி நிறுவனங்களாகச் செயல்பட வேண்டியது மட்டுமன்றி, தொழிலிலும், வர்த்தகத்திலும் ஈடுபட்ட சமுதாயத்தின் மிகப்பெரிய நலன்களுக்குப் பணியாற்றியும் அவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிப்பதற்குத் தேவைப்படும் வசதிகளை அளித்தும், அவர்களுள் குறிப்பாக வலிவற்ற பகுதியினரிடையே உற்பத்தியையும் வர்த்தகத்தையும் வளர்த்தும், ஒரு சமதர்மவகைச் சமுதாயத்தை அமைப்பதற்குத் தங்களால் இயன்றவரை உதவி செய்ய வேண்டும். 'உற்பத்திக் காரியங்களுக்காக மட்டுமல்லாமல், வீடு பழுதுபார்த்தல், அவசர நிலை நெருக்கடிகளில் ஆபத்து நிவாரணம் (Distress

Loans), கைவினைஞர்களால் தொழிற் கருவிகள் வாங்குதல் ஆகிய காரியங்களுக்காகவுங்கூடத் தங்கள் உறுப்பினர்களின் நியாயமான மொத்தத் தேவைகளை வழங்குவதற்கு' அவை முயற்சி செய்யலாம். இவ் வங்கிகள், 'சிற்றளவுத் தொழில்களை மட்டுமன்றிக் குடிசைத் தொழில்களுக்குங்கூட உதவி செய்து தங்கள் உறுப்பினர்களுக்குத் தேவையான விதைகள், பூச்சிக் கொல்லிகள் போன்ற விவசாயத்தில் ஈடுபடுத்தப்படும் பொருள் முதலியவற்றிற்காக நிதி வழங்குவதிலும், ஒரு முக்கியப் பணியைப் புரிகின்ற' துணிவுள்ள திட்டங்களை அமல்படுத்த முனைய வேண்டும். பெரிய எண்ணிக்கையிலுள்ள சிறிய, ஆனால் தகுதி படைத்த தொழில் முயல்வோர்களும் இவ் வங்கிகளால் ஆதரிக்கப்பட்டு, ஊக்குவிக்கப்பட வேண்டும். தொழிற்பொருள்கள் உற்பத்தியையும், நுகர்வோர் பொருள்கள் உற்பத்தியையும் அதிகரிக்கச் செய்து, குறிப்பாகச் சமுதாயத்தின் வலிவற்ற பகுதியினருக்கு வேலை வாய்ப்பை வழங்கி அவர்களின் பொருளாதாரச் சமுதாய நிலையை உயர்த்த வேண்டிய தற்போதைய சந்தர்ப்பத்தில் இவ் வங்கிகளுக்குச் சிற்றளவுத் தொழில் துறையில் பணியாற்றுவதற்கு ஒரு பரந்த புலம் உள்ளது.'

## 2. நகர வங்கிகளின் வளர்ச்சி

ஜெர்மானிய நாட்டின் ஷூல்சு–டெலிட்சு (Sheulze-Delitzch) வங்கிகளின் மாதிரியாகவும், இத்தாலிய நாட்டு லுசாட்டி (Luzatti) வங்கிகளின் மாதிரியாகவும் உறுப்பினர்களின் பொறுப்பு அவர்களால் வைக்கப்பட்டிருக்கும் பங்குத் தொகைகளுக்கு வரையறுக்கப்பட்டு நகர வங்கிகள் நிறுவப்பட்டன. இந்தியாவில் முதல் கூட்டுறவு நகர வங்கியை 1904-ல் காஞ்சிபுரத்தில் நிறுவிய பெருமை தமிழ்நாட்டைச் சாரும். இவ் வாண்டில்தான் 1904ஆம் வருடத்திய 'கூட்டுறவு நாணயச் சங்கங்களின் சட்டம்' நிறைவேற்றப்பட்டது. அக்காலத்திலிருந்து, நாட்டில் வேறு இடங்களைப் போன்று தமிழ்நாட்டிலும், அரசினரின் ஊக்குவித்தல் அல்லது முன்முயற்சி அதிகமின்றி நகர வங்கிகளின் ஒரு நிலையான வளர்ச்சி யிருந்திருக்கிறது. இந்தியாவின் மக்கள்தொகையில் பெரும்பாலோரான விவசாயிகளின் கடன் சுமையை விடுவித்தல், இந்தியாவில் இயக்கத்தைத் தொடங்கி வைப்பதன் பிரதம நோக்கமாக விருந்ததால், இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் ஆரம்பிக்கப்பட்டபோது, விவசாயக் கடன் வழங்குதல்மீது அரசினர் தங்கள் முழுக் கவனத்தைச் செலுத்தினது இயல்பானதே அப்பொழுதுங்கூட, விவசாயமல்லாத நாணயச் சங்கங்களின் வளர்ச்சி இருந்துள்ளது. மாக்லெகன் குழுவினர் (1925)

பின்வரும் வாக்கியங்களில், விவசாயமல்லாத வகுப்பினர்க ளிடையே கூட்டுறவு இயக்கத்தின் விரிவாக்கத்திற்காக வாதாடினர். 'இந்திய அரசாங்கத்தால் நிர்ணயிக்கப்பட்ட கொள்கை, ஆரம்பக் கட்டத்தில், புத்திசாலித்தனமாகவும், விளைவுகளினால் முழுதும் நியாயப்படுத்தப்பட்டதாகவும் இருந்தாலும், இப் பொழுது அது அனுகூலத்துடன் தளர்த்தப்பட்டு விவசாயச் சங்கங்களுடன் சமநிலையாக விவசாயமல்லாத சங்கங்களின் வளர்ச்சி ஊக்குவிக்கப்படலாம் என்று எங்களுக்குத் தோன்று கிறது. பட்டினங்களில் தொழில்துறை வகுப்பினர்களால் கடன்கள்மீது செலுத்தப்பட்ட வட்டியானது விவசாயி களுக்கு விதிக்கப்பட்ட வட்டியைவிட குறைந்ததாக இல்லை. விலையேற்றமும், பற்றாக்குறையுமான சுகாதாரமற்ற வீட்டு இட வசதியும், அடிக்கடி நேரிடும் பாக்கியாக வைக்கப்பட்ட கூலி யும், கல்வி பரவியதன் விளைவாக உயர்வான வாழ்க்கைத் தரத்திற்கான ஒரு விருப்பமும், ஏற்பட்டிருக்கும் இந்த நிலை மையில் ஆரம்பக் கஷ்டங்கள் அதிகரிக்கத்தான் செய்யும்; மற்றும், இச் சங்கடங்களைக் குறைக்கும் போக்குடைய கூட் டுறவுச் சங்கத்தைப் போன்ற எந்தவித நிறுவனமும் ஆதரவிற் குரியதாகும் என்று நாங்கள் கருத்துக் கொண்டிருக்கிறோம்'. அக் குழுவினர், சாதாரணக் கூட்டுப்பங்கு வங்கித் தொழிலை (Joint Stock Banking) உறுப்பினர்கள் புரிந்து கொள்வதற்கு நல்ல பயிற்சிதரும் ஒரு தளத்தையுங்கூடக் கூட்டுறவு நகர வங்கிகளில் கண்டனர். 1963–ல் இந்திய அரசால் வி. பி. வார்தே (V. P. Varde-Bombay) அவர்கள் தலைமையில், அமைக்கப்பட்ட விவசாயமல்லாத நாணயச் சங் கங்களைப் பற்றிய நடைமுறைக் குழுவினரும் (Working Group on Non-Agricultural Credit Societies) தமிழ்நாட்டில் கூட் டுறவு பற்றிய சந்தானம் குழுவினரும் (1969), பின்னால் வந்த பல்வேறு குழுக்களும், ஆணைக் குழுக்களும் உட்பட நம் நாட்டுப் பொருளாதார அமைப்பில் நகரக் கூட்டுறவு வங்கிகள் (1) சேமிப்புக் கருவிகளாகவும், (2) நடுத்தர வகுப்பினர்களிடையேயும் கடைநிலை வகுப்பினர்களிடையேயும் சாதாரண வங்கித் தொழில் நடைமுறைகளைப் பரவச் செய்பவைகளாகவும், (3) தொழில் துறை நடவடிக்கைகளை வளர்ச்சி செய்பவைகளாகவும், (4) நகரப் பகுதிகளில் மக்கள், குறிப்பாக, நடுத்தரக் கீழ்த்தர வகுப் பினரின் வாழ்க்கைத் தரத்தையும், நகர மக்களுள் வலிவற்ற பகுதியினரின் வாழ்க்கைத்தரத்தையும் உயர்த்துபவையாகவும், புரியக்கூடும் முக்கியப் பணியை ஏற்றுக்கொண்டுள்ளனர். இப் பணியை நிறைவேற்றுவதற்கான பரிந்துரைகளையும் அக் குழுவினர் செய்தனர்.

### 3. நகர வங்கிகளின் தற்போதைய நிலைமை

சட்டத்தின்கீழ்க் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்கப்படும் பொதுவான சலுகைகளைத் தவிர, அரசினரின் உதவி நகர வங்கிகளுக்கு அதிகமாகக் கிடைக்காமலிருந்தது. இவ்வுண்மையானது, மிகஅண்மையான காலம் வரைக்கும் கூட்டுறவு நகர வங்கி இயக்கத்தின் வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதற்காக, தொடர்ந்துவந்த ஐந்தாண்டுத் திட்டங்களில் தனித் திட்டங்கள் எப்பொழுதுமே அடங்கியிருந்ததில்லை என்பதிலிருந்து தெளிவாகும். எனினும், இவ் வங்கிகள், பின்வரும் விவரப் பட்டியலிலிருந்து காணப்படுவது போன்று பாராட்டுதலுக்குரிய முன்னேற்றத்தை அடைந்து வந்திருக்கின்றன. அவைகள், குறிப்பாக, மராட்டியத்திலும், மைசூரிலும், தமிழ்நாட்டிலும், குஜராத்திலும், ஆந்திரத்திலும், மேற்கு வங்காளத்திலும் பெருமளவு முன்னேற்றம் அடைந்திருக்கின்றன. குறிப்பாக மராட்டியம், கர்நாடகம், தமிழ்நாடு, குஜராத், ஆந்திரப்பிரதேசம், மேற்குவங்கம் ஆகிய மாநிலங்களில் அவை மிகவும் முன்னேறியுள்ளன.

**நகரக் கூட்டுறவு வங்கிகள்**

**அனைத்திந்திய நிலைமை**

ரூ. இலட்சக் கணக்கில் ஜூன் இறுதியில்

| | விவரம் | 1970 | 1972 |
|---|---|---|---|
| 1. | எண்ணிக்கை | 1129 | 1213 |
| 2. | உறுப்பினர்கள் (ஆயிரக்கணக்கில்) | 2925 | 3275 |
| 3. | பங்கு மூலதனம் | 1986 | 2864 |
| 4. | காப்பு இருப்புகள் | 1402 | 1805 |
| 5. | வைப்புத் தொகைகள் | 14063 | 21315 |
| 6. | வாங்கப்பட்ட இதரக் கடன்கள் | 958 | 1383 |
| 7. | மொத்த நடைமுறை மூலதனம் | 18409 | 27367[1] |
| 8. | வழங்கப்பட்ட கடன்கள் (1969–70) | 23339 | (71–72) 24203 |
| 9. | கடன்கள் நிலுவை | 11486 | 17461 |
| 10 | தவணை தவறிக் கடன்கள் | 1155 | 1410 |

[1] 29687 (இந்திய ரிசர்வ் வங்கியின் புள்ளி விவரப்படி).

## தமிழ்நாட்டு நிலைமை

ரூபாய் இலட்சக் கணக்கில்

| | விவரம் | 1970–71 | 1971–72 |
|---|---|---|---|
| 1. | எண்ணிக்கை | 136 | 136 |
| 2. | உறுப்பினர்கள் (லட்சக்கணக்கில்) | 9.88 | 9.90 |
| 3. | பங்கு மூலதனம் | | |
| 4. | காப்பு இருப்புகள் | 170.08 | 235.05 |
| 5. | வைப்புத் தொகைகள் | 1562.33 | 1720.50 |
| 6. | வாங்கப்பட்ட இதரக் கடன்கள் | 55.16 | 71.87 |
| 7. | மொத்த நடைமுறை மூல தனம் (30–6–69 தேதி யன்று) | 1733.22 | 2517.38 |
| 8. | வழங்கப்பட்ட கடன்கள் | 1694.77 | 2017.56 |
| 9. | கடன்கள் நிலுவை | 1460.46 | 1665.24 |
| 10. | தவணை தவறிய கடன்கள் | 144.46 | 158.50 |

## தமிழ்நாட்டில் கூட்டுறவு நகர வங்கிகளின் பொது நிலைமை

கூட்டுறவு முறையில் நகர வங்கித் தொழில் தமிழ்நாட்டில் நல்ல முன்னேற்றமடைந்துள்ளது. 1972 ஜூன் 30ஆம் தேதியன்று, 136 நகர வங்கிகள், 9.90 இலட்ச உறுப்பினர்களுடனும், 276.17 இலட்சம் பங்கு மூலதனத்துடனும் இருந்தன. பெரும்பாலான நகர வங்கிகள், மாவட்டக் கூட்டுறவு மத்திய வங்கிகளின்மீது மிகச் சிறிய அளவுக்குத்தான் சார்பு கொண்டு, பிரதானமாகத் தன் சொந்தச் செல்வ ஆதாரங்களைக் கொண்டு தங்கள் தொழிலை நடத்தின. அவைகளால் வாங்கப்பட்ட கடன்கள் (வைப்புத் தொகைகள் அல்லாமல்) ரூ. 71.84 இலட்சமாக இருந்தன. அவை பெற்றிருந்த வைப்புகள் ரூ. 1,720.50 இலட்சமாக இருந்தன. அவைகளின் நடைமுறை மூலதனம் ரூ. 25.17 கோடியாக இருந்தது. வைப்புகள், அவைகளின் நடைமுறை மூலதனத்தில் ஏறக்குறைய 68 சதவீதமாக அமைந்திருந்தன. 1971–72ஆம் ஆண்டில் அவை ரூ. 2,017.56 இலட்சத்திற்குக் கடன்கள் வழங்கின. அந்த ஆண்டு இறுதியில், கடன்களின் நிலுவை ரூ. 1,665.25 லட்சமாக இருந்தன. அந்த ஆண்டு இறுதியில் தவணை தவறிய கடன் பாக்கிகள் ரூ.158.50 இலட்சமாகும். 1971–72ஆம் வருடத்தில், 105 வங்கிகள், 45.35 இலட்ச ரூபாய்

இலாபத்தில் வேலை செய்தன. 29 வங்கிகள் 5.80 இலட்ச ரூபாய் நட்டத்தில் வேலை செய்தன.

அவைகளின் கடன் வழங்குதல் நடவடிக்கைகள் சுவை யுள்ள ஒரு படிப்பினையை வெளிப்படுத்துகின்றன. வழங்கப்பட்ட மொத்தக் கடன்களில் ரூபாய் 1,436.40 இலட்சம் குறுகிய காலக் கடன்களாகவும், ரூபாய் 581.16 இலட்சம் மத்தியக் காலக் கடன்களாகவும் இருந்தன. குறுகிய காலக் கடன்கள், 50 சதவீதம் நுகர்தல் காரியங்களுக்காகவும், 7 சதவீதம் விவசாயக் காரியங்களுக்காகவும், சுமார் 5 சதவீதம் தொழிற் காரியங்களுக்காகவும், எஞ்சியவை இதரப் பல்வகைக் கார ணங்களுக்காகவும் அளிக்கப்பட்டன. மத்தியக் காலக் கடன்கள், கிணறு வெட்டுதலும், கால்நடைகள் வாங்குதலும், விவசாய இயந்திரங்களை வாங்குதலும் போன்ற விவசாயக் காரியங் களுக்காக, 270 இலட்சம் ரூபாய் அளவுக்கும், எஞ்சியவை இதரப் பல்வகைக் காரியங்களுக்காகவும் அளிக்கப்பட்டன. தொழிற் காரியங்களுக்காக அளிக்கப்பட்ட கடன்கள் மிகக் குறைவானவையாக உள்ளன. நிலுவையிலிருந்த கடன்களில் சுமார் 40 சதவீதம், அசைமான ஆதாரத்தின் பேரிலும், 78 சதவீதம் பொன், வெள்ளி ஆகியவற்றின் பேரிலும், 18 சதவீதம் தவணை வைப்புகள் பேரிலும், எஞ்சியவை ஜாமீன் பேரிலும் இருந்தன.

நகரக் கூட்டுறவுக் கடன் வசதித் துறையில் முக்கிய மானதும் அண்மையானதுமான ஒரு வளர்ச்சி 1965ஆம் வருடத் திய 'வங்கியச் சட்டங்களின் (கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பொருந்தும்) திருத்தச் சட்டம்' (Banking Laws (Application to Co-operative Societies) Amendment Act, 1965) என்ற சட்டம் தொடங்கி வைக்கப்பட்டதாகும். இந்தச் சட்டத் திருத்தத்தினால் நகர வங்கிகளும் நகரக் கடன் வசதிச் சங் கங்களும், கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தால் தொடர்ந்து பரிபாலிக்கப்படும் பதிவு, நிருவாகம், கலைப்பு ஆகியவற்றைக் குறித்துத் தவிர, வங்கித் தொழில் ஒழுங்காற்றுச் சட்டத்தின், (Banking Regulation Act) சரத்துகள் அதிகாரத்தின் கீழ்க் கொண்டுவரப்பட்டன. 1966 மார்ச்சு முதல் தேதியிலிருந்து அமலுக்கு வந்த இச் சட்டம் ரூபாய் ஒரு இலட்சத் திற்கும் அதற்கு மேற்பட்டும் பங்கு மூலதனத்தையும், காப்பு நிதிகளையும் வைத்துக்கொண்டும், உறுப்பினர்களல்லாதவர் களிடமிருந்து வைப்புத் தொகைகளைப் பெற்றும் வருகிற நகரக் கடன் வசதிச் சங்கங்கள்மீது நேரடியான கண்காணிப் பைச் செலுத்த, இந்திய ரிசர்வ் வங்கிக்கு அதிகாரமளிக்கிறது.

அத்தகைய சங்கங்கள் இப்பொழுது தங்கள் கேட்புப் பொறுப்புகளிலும், (Demand Liabilities), கால வரம்புப் பொறுப்புகளிலும் (Time Liabilities) 25 சதவீதம் அளவுக்கு ரொக்கக் காப்பு நிதியை (Cash Reserve) வைத்துக் கொள்வதற்குக் கடமைப்பட்டிருக்கின்றன. அவை வர்த்தக நடவடிக்கைகளில் தங்களை ஈடுபடுத்திக் கொள்ளக் கூடாது. இப் பொது விதிக்கு ஒரு விலக்காக, அவை தங்கள் துணைவிதிகளுக் கிணங்க நபர் ஜாமீனின் பேரில் தங்கள் இயக்குநர்களுக்குக் கடன்கள் வழங்க அனுமதிக்கப்படுகின்றது. அவை தணிக்கை செய்யப்பட்ட தங்கள் இருப்பு நிலைக் குறிப்புகளையும் (Balance Sheets) இலாப நட்டக் கணக்குகளையும் வெளியிட வேண்டும். மற்றும், அவற்றின் நகல்களைக் கூட்டுறவு ஆண்டு முடிவடைந்து ஆறு மாதங்களுக்குள் இந்திய ரிசர்வ் வங்கிக்குச் சமர்ப்பிக்க வேண்டும். இச் சங்கங்களைச் சட்டப்படியான ஆய்வு செய்யும் அதிகாரம், ரிசர்வ் வங்கிவசம் அளிக்கப்பட்டுள்ளது. இந்த அதிகாரத்தை ரிசர்வ் வங்கி நேரடியாகவாவது மாநிலக் கூட்டுறவு வங்கியின் மூலமாகவாவது கையாளலாம்.

சிற்றளவுத் தொழில்களுக்கும், குடிசைத் தொழில்களுக்கும், நிதி வழங்குவதற்காக நகர வங்கிகளுக்கு வசதியளிக்கும்பொருட்டு, நகர வங்கிகளின் பங்கு மூலதனத்தில் அரசு பங்குகொள்ளுதல் திட்டத்தை (Scheme of State Participation) அரசு நீடித்திருக்கின்றது. 1971–72ஆம் ஆண்டில், கூட்டுறவு நகர வங்கிகளின் பங்கு மூலதனத்தில் அரசு ரூ.4.55 இலட்சத்தை முதலீடு செய்திருக்கின்றது. சிற்றளவுத் தொழில்களுக்காகவும், குடிசைத் தொழில்களுக்காகவும் நிதி வழங்குகின்ற வங்கிகள் ரிசர்வ் வங்கியிலிருந்து மறுநிதி வசதிகளைக்கூட (Refinance Facilities) பெறுகின்றன.

136 நகர வங்கிகளுள் 102 நகர வங்கிகள், வங்கித் தொழில் ஒழுங்குமுறைச் சட்டத்தின் (1965) கீழ் வருகின்றன; எஞ்சியவை, அந்தச் சட்டத்து அதிகாரத்தின் புறம்பாகச் செயற்பட்டன.

## 4. நகர வங்கிகளின் செயற்பாடு

### (i) ஒரு நகர வங்கியின் அலுவல் எல்லை

நகர வங்கிகள், நகரப் பகுதிகளிலும், புறநகரப் பகுதிகளிலும் நிறுவப்படுகின்றன. ஒரு நகர வங்கி பொதுவாக ஒரு பட்டணம் முழுவதிலும் தொண்டாற்றுகிறது. பெரிய நகரங்

களில் ஒன்றுக்கு மேற்பட்ட நகர வங்கிகள் இருக்கின்றன. இது அவற்றின் அலுவல் எல்லேயில் மேற்படிவையும் (Overiapping) வைப்புத் தொகைகள் அல்லது வியாபாரத் தைப் பெறுவதற்காக ஒரு கெட்ட போட்டா போட்டியையும் விளேவிக்கின்றது. ஒரு முக்கிய நகரத்தில் அல்லது நகரப் பகுதியில் ஒரே நகர வங்கியிருப்பதில் சில நன்மைகள் உள்ளன. நிதி தொடர்பான தன்னிறைவுக்கும் வலுவுக்கும் நிலே பேருக்கத்திற்கும், அது ஏதுவாக இருக்கும். ஒரே நகர வங்கிக்குச் சாதகமான குறிப்புகளாவன: — அதிகமான நடவடிக்கைகள், மலிவான பணத்தைச் சேகரித்தல், தகுதி வாய்ந்த ஊதியம் பெறும் சிப்பந்திகளே அமைத்தல், நவீன வங்கி வசதிகளேப் போதிய அளவு ஏற்படுத்துதல், பலமான காப்பு இருப்புகளே அமைத்து வளர்ப்பதற்காகப் போதிய மிச்சத்தை யீட்டுதல், ஒரு நிதி அந்தஸ்து, பண அங்காடியில் கீர்த்தியும் ஆகியவை யாகும். சந்தானம் குழுவினர் (1969), ஒரு பட்டினத்திற்காகச் சாதாரணமாக, ஒரு நகர வங்கிதான் இருக்க வேண்டுமென்றும், ஒன்றுக்கு மேற்பட்ட நகர வங்கி ஏற்கெனவே இருந்து நன்ருகச் செயற்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு பட்டினத்தில் அவற்றைக் கலேக்கத் தேவையில்லே என்றும் பரிந்துரை வழங்கினர். ஆனல், ஒரு பட்டினத்தில் ஏற்கெனவே உறுதிப்பயனுள்ள நகர வங்கி ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்டு இருந்து வந்தால், புதிய நகர வங்கி எதுவும் பதிவு செய்யப்படக்கூடாது. சென்னே போன்ற பெரிய நகரங்களில் ஒன்றுக்கு மேற்பட்ட நகர வங்கிகளுக்குத் தேவை இருக்கலாம். ஒரு நகர வங்கிக்காக, அதன் பங்கு மூலதனம், சொந்த மூலதனம் முதலியவைகளேக் குறித்துச் சில குறைந்த பட்சத் தரங்கள் (Standards) நிர்ணயிக்கப்பட வேண்டும் என்றும், இக் குறைந்தபட்சத் தரங்களுக்கும் குறைந்த தரத்தில் இருக்கின்ற எந்த நகர வங்கியும், அக்கம்பக்கத்திலுள்ள வங்கியுடன் இணேக்கப்பட வேண்டும் அல்லது அதன் நடவடிக்கைகள் ஒரு குறிப்பிட்ட காலவறைக்குள் ஒரு செட்டானதும் தன்னிறைவானதுமான மட்டத்திற்குக் கொண்டு வருமளவு அது அபிவிருத்தி செய்யப்பட வேண்டுமென்றும், ஆலோசனே கூறலாம். நாம் முன்னமே குறித்துள்ளபடி, அத்தகைய தரங்கள் விவசாயக் கடன் வசதிச் சங்கங்கள் விஷயத்தில் நடைமுறையி லிருக்கின்றன.

### (ii) நோக்கங்கள்

ஒரு நகர வங்கியின் பிரதான நோக்கங்களாவன: உறுப்பினர்களிடையே சிக்கனத்தையும், தன்னுதவியையும், பரஸ்பர-

உதவியையும் வளர்ப்பதும், உறுப்பினர்களுக்குக் கடன் வழங்கு வதற்கு உறுப்பினர்களிடமிருந்தும், உறுப்பினரல்லாதவர்க ளிடமிருந்தும் நிதி திரட்டுதலுமாகும். இடை நிகழ்ச்சியாக, அவை உறுப்பினர்களுக்கும், மற்றவர்களுக்கும், சில வங்கிப் பணிகளை வழங்குவதன்மூலம் மக்களிடையே வங்கித் தொழிற் பழக்கத்தை வளர்க்கவும் முயற்சிக்கின்றன. எல்லாவற்றையும் விட, சிறு தொழில் அதிபர்கள், கைவினைஞர்கள், சிறு வர்த்தகர்கள், நடுத்தர மக்கள் ஆகியவர்களின் தேவைக்குப் பணி செய்ய அவை எதிர்பார்க்கப்படுகின்றன. வணிக வங்கி களும், குறிப்பாக, அவை நாட்டுடைமையாக்கப்படுவதற்கு முன்பு, இதரக் கூட்டுப் பங்கு வங்கிகளும், இவ் வகையான வாடிக்கைக் காரர்களிடத்தில் அக்கறை கொண்டது கிடையாது. நகரப் பொருளாதார அமைப்பில் நகர வங்கிகள் ஒரு சுழியாணி போன்ற நிலைமையை (Pivotal Position) வகித்துவர ஏற்பட்டது.

### (iii) உறுப்பினர்கள்

விவசாயமல்லாத ஆதாரங்களிலிருந்து வருவாய் பெறும் பெரும்பாலான மக்களே ஒரு நகர வங்கியில் உறுப்பினர்களா யிருக்கின்றனர். அவர்கள் நகரப் பகுதியிலுள்ள பல்வேறு சமுதாய வகுப்புகளிலிருந்து, பெரும்பாலும் மிதமானதும் குறைவானதுமான வருவாயுடைய நபர்களிலிருந்து வருகின்றனர். எனினும், ஒரு கிராமக் கடன் வசதிச் சங்க விஷயத்தில் போன்று உறுப்பினர்கள் ஒரே இனமான வகுப்பைச் சார்ந்தவர்கள் அல்லர். ஒரு கிராமக் கடன் வசதிச் சங்கத்தில் உறுப்பினர்கள் எல்லாரும் ஒரு கிராமத்திலிருக்கும் அல்லது கிராமங் கள் தொகுதியிலிருக்கும் விவசாயிகள். ஆகவே, நகர வங்கி களில், உறுப்பினர்கள் ஒருவருக்கொருவர்பற்றிய ஒரு நெருங் கிய பரஸ்பர அறிவையும், கிராமச் சங்கங்கள் விஷயத்தில் போன்று அதே அளவில் பரஸ்பர நம்பிக்கையையும், பெற்றி ருப்பதற்கு எதிர்பார்க்க முடியாது.

### (iv) பொறுப்பு

நகர வங்கிகள், வரையறுக்கப்பட்ட பொறுப்பை அடிப் படையாகக் கொண்டிருக்கின்றன; அதாவது, உறுப்பினர்க ளுடைய பொறுப்பு அவர்களால் ஒப்பிய பங்கு மூலதனத் தொகைக்கு வரையறுக்கப்பட்டிருக்கிறது. நகர வங்கிகள், அவற்றின் உறுப்பினர்கள் அடக்கமான ஒரே இனமானவர் களாக இல்லாத காரணத்தாலும், உறுப்பினர்களிடையே பரஸ்பர மேற்பார்வை சாத்தியப்படாம லிருக்கிறதாலும்,

ஆரம்பத்திலிருந்தே வரையறுக்கப்பட்ட பொறுப்பை ஏற்றிருந்தன. மேலும், நகரப் பகுதிகளிலுள்ள மக்கள் பலமான பங்கு மூலதனத்தைச் சித்தமாய்த் திரட்டுகிறார்கள். வங்கிகளும், வைப்புத் தொகை போடுகிறவர்களும் தங்கள் பாதுகாப்பிற்காக இதை எதிர்பார்க்கிறார்கள். வரையறுக்கப்படாத பொறுப்புடனுள்ள நகரச் சங்கங்கள் ஒரு விலக்கு. உதாரணமாக, ஒரு பட்டினத்தில் போதிய பங்கு மூலதனமில்லாத காரணத்தாலும், அல்லது பரஸ்பர அறிவும் நம்பிக்கையும் உறுப்பினர்களிடையே இருக்கிற காரணத்தினாலும், அல்லது உறுப்பினர்கள் வரையறுக்கப்படாத பொறுப்பை விரும்பினாலும், வரையறுக்கப்படாத பொறுப்புள்ள சங்கம் இருக்கலாம். ஆனால், அத்தகைய சங்கங்கள் மிக அரிதாக உள்ளன.

### (v) ஒரு நகர வங்கியின் தொழில்

வேறு எந்த வங்கியைப் போன்றும், ஒரு நகர வங்கியின் பிரதானத் தொழில், கடன் வழங்கும்பொருட்டு, வைப்புத் தொகைகளை எழுப்புதலாகும். அவ்வாறு செயற்படுங்கால், உறுப்பினர்களிடையே சிக்கனத்தை வளர்க்கவும் பொதுவாக அவர்களின் பொருளாதார நிலைமையை மேம்படுத்தவும் அது முயற்சிக்கிறது. இடை நிகழ்ச்சியாக அது நடுத்தர வகுப்புகளிடையேயும் கடைநிலை வகுப்புகளிடையேயும் வங்கிப் பழக்கத்தை ஊக்குவிக்க முயற்சிக்கிறது. அதன் பிரதானத் தொழில், சிறுதொழில் அதிபர்களுக்கு நிதி வழங்குவதாகவும், மற்றும், பொதுவாகத் தன் விவகார எல்லையில் தொழில் நடவடிக்கைகளை வளர்ப்பதாகவும் இருக்க வேண்டும்.

### (vi) நிதிகள் எப்படித் திரட்டப்படுகின்றன

#### (அ) பங்கு மூலதனம்

பொறுப்பு வரையறுக்கப்பட்டிருப்பதனால், நகர வங்கிகள் தாங்கள் வெளிக் கடன் ஆதாரத்தைத் திரட்டுவதற்காக ஓர் அடிப்படையாக உதவுவதற்கு, ஒரு பலமான சொந்த மூலதனம் அமைப்பதை அவசியமாகக் கருதுகின்றன. இந்த மூலதனமில்லாமல் வைப்புத்தொகை போடுகிறவர்கள் இவ் வங்கிகளில் தங்கள் பணங்களைத் தாராளமாகப் போட்டு வைக்கமாட்டார்கள். மத்திய வங்கிகளும், தேவைப்படுமளவுக்கு நகர வங்கிகளும் நிதியுதவி யளிக்கா. உறுப்பினர்களுக்குப் பங்குகளை ஒதுக்குவதன்மூலம் பங்கு மூலதனம் திரட்டப்படுகிறது. வழக்கமாக ரூபாய் ஐந்து அல்லது பத்து வீதம் ஒரு குறைந்த தொகைக்கு ஒவ்வொரு பங்கின் மதிப்பும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு பங்கின் மதிப்பைப் பல மாதங்களில் தவணை களாகச் செலுத்துவதற்கு உறுப்பினர்கள் அனுமதிக்கப்படு கிறார்கள். பங்கு மூலதனமும் சேகரிக்கப்பட்ட காப்பு நிதியும், நடைமுறை மூலதனத்தின் 1/4 அல்லது 1/5-க்குத் தொகை இருக்க லாம். ஒரு செழிப்பான நகர வங்கி, அதன் துணை விதிகள் அதிகமாக அனுமதித்தாலுங்கூட, அதன் செலுத்தப்பட்ட பங்கு மூலதனமும் காப்பு நிதியும் சேர்ந்து அவற்றின் நான்கு மடங்குகளுக்கு மேற்பட்டுக் கடன் வாங்குவதற்குத் தேவை யிருக்காது. சாதாரணமாகப், பங்கு மூலதனம், காப்பு நிதி யோடும் சேர்ந்து கடன் கொடுப்பவர்களுக்குத் தலையான ஆதாரத்தை யளிப்பதால், பங்கு மூலதனம் வாபஸ் இருக்கக் கூடாது. ஆகையால், பங்குகளை வாபஸ் பெறுவதில் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டிருக்கின்றன. எந்த உறுப்பினரும் தன் பங்குகளை வங்கியால் அனுமதிக்கப்பட்டாலொழிய வேறொரு வருக்கு மாற்றக்கூடாது. மற்றும், பங்கு மாற்றப்பட்டவர், வங்கியின் ஓர் உறுப்பினராகச் சேர்க்கப்பட்டாலொழிய, பங்கு களை மாற்றக்கூடாது.

## (ஆ) வைப்புகளும், கடன் வாங்குதல்களும்

பங்கு மூலதனமும், காப்புநிதியும் இதரக் காப்பு இருப்புகளுமன்றி ஒரு நகர வங்கியின் நிதியம் பிரதானமாக, உறுப்பினர்களிடமிருந்தும், உறுப்பினரல்லாதவர்களிடமிருந்தும் பெறுகின்ற, வைப்புத் தொகைக ளடங்கியது. அவை, சேமிப்பு வைப்பு, நடப்புவைப்பு, நிலையானவைப்பு, தொடர்வைப்பு முதலியன போன்ற பல்வேறு வித வைப்புகளைப் பெறுகின்றன. எப்பொழுதாவது இவ் வங்கிகள் மத்திய வங்கியிடமிருந்து கடன் வாங்குகின்றன. ஆனால், மொத்த நடைமுறை முதலுக்கு அத்தகைய கடன் பெற்ற முதலின் வீதாச்சாரம், நாம் முன்னமே கண்டபடி சிறியதாக உள்ளது. பாராட்டக்கூடிய ஓர் அளவில், பெருமளவு வைப்புகளை ஈர்ப்பதில் நகர வங்கி கள் வெற்றியடைந்திருக்கின்றன. வேறு வகையில் இதரத் துறைகளில் முதலீடு செய்யப்பட்டும், அல்லது பயன்படுத்தப் படாமலே சும்மா கிடக்கும், இவ் வைப்புகள், கூட்டுறவு இயக் கத்திற்குச் செல்வ ஆதாரங்களைக் கொண்டுவருகின்றன. இவ் வைப்புகளின்மீது நகர வங்கிகள் போட்டி வட்டி விகிதங் களை வழங்குகின்றன. உறுப்பினரல்லாதவரிடமிருந்து பெறு கின்ற வைப்புகள் ஒரு பெரிய வீதாச்சாரத்திற்கு உள்ளன. தமிழ்நாட்டில் அவை மொத்த வைப்புத் தொகைகளில் சுமார் 60 சதவீதமாக உள்ளன. சென்னையில், பெருமளவு வங்கித் தொழிலைச் செய்யும் நகர வங்கிகளுக்கு, தனிச் சந்தர்ப்பங்

களில் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியும்கூட ரொக்கக் கடன் வசதி வழங்குகிறது. நகர வங்கிகள் மாநிலக் கூட்டுறவு வங்கியுடன் தாங்கள் வைத்திருக்கும் நடப்பு வைப்பில் அதிக நிதிகளை வைக்க முடியாமலிருக்கும் சந்தர்ப்பங்களில் தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின்மீது பணவிடைகளையும் (Drafts) காசோலைகளையும் (Cheques) விடுத்துப், பெரிய தொகை களைப் பட்டுவாடாச் செய்ய, இவ் வசதி நகர வங்கிகளுக்கு வகை செய்கிறது.

### (vii) நகர வங்கிகளின் கடன் வாங்கும் சக்தி

ஒரு நகர வங்கியின் கடன் வாங்கும் வரம்பு அதன் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்திற்கும், காப்பு நிதிக்கும் தொடர்பாக நிர்ணயிக்கப்படுகிறது. இவ் வரம்பு, வழக்கமாகச் செலுத்தப்பட்ட பங்கு மூலதனமும், காப்பு நிதியும் சேர்ந்து எட்டு மடங்குகளாக விருக்கிறது இவ் வரம்பிற்குள், நகர வங்கி கள் உறுப்பினர்களிடமிருந்தும் உறுப்பின ரல்லாதவர்களிட மிருந்தும் வைப்புக்களைப் பெறமுடியும். கூட்டுறவு நிதி வழங்கும் அமைப்புகளிடமிருந்தும் அல்லது இதர வங்கிகளிடமிருந்தும்கூட நிதிகளை இவ் வரம்பிற்குள் அவை திரட்ட முடியும்.

### (viii) எளிதில் ரொக்கமாக்கக் கூடிய ஆதாரங்களை நிறுவுதல் (Maintenance of Fluid Resources)

உறுப்பினர்க ளிடமிருந்தும், பொதுமக்க ளிடமிருந்தும் வைப்புத்தொகைகளைப் பெறுதலானது, அதே சமயத்தில் அவ் வைப்புத் தொகையாளர்களால் தேவைப்படும்போது, வைப் புத் தொகைகளைக் காலத்தில் திருப்பிக் கொடுப்பதற்கு ஒரு பொறுப்பையும் விதிக்கிறது. வைப்புகள் கேட்கப்படும்போது, காலத்தில் திருப்பிக் கொடுக்கும் ஒருநிலையி லிருக்கும் வகை யில், முதலீடுகள் வாயிலாகவும், கடன்கள் வாயிலாகவும், வங்கி களின் நிதிகள் விவேகமாக உபயோகப்படுத்தப்பட வேண்டும்; இல்லாவிடில், வங்கியின் செல்வாக்குப் பாதகமடைந்து, வங்கி யின் செயல்பாடு ஓர் ஆபத்தான தட்டுப்பாட்டைப் பெறும். ஆகையால், வங்கிகள் தங்கள் நிதிகளின் ஒரு சில பகுதியை, வைப்புத் தொகையாளர்களுக்கு எளிதாகவும், குறித்த காலத் திலும், தாமதமில்லாமலும் திருப்பிக் கொடுப்பதற்காக, ரொக்கப் பணமாக எளிதில் மாற்றக் கூடிய வடிவத்தில் வைத் திருக்க வேண்டும். இந்த ரொக்கமாகக் கூடிய சொத்துகள் (Liquid Assets) அல்லது எளிதில் பணமாக்கக்கூடிய ஆதாரங்கள் (Fluid Resources) ஒரு வங்கியின்

வசமிருக்கும் வைப்புகளுக்கு ஒரு வீதாச்சாரத்தில் வைக்கப்பட வேண்டும். தமிழ்நாட்டில், மத்திய வங்கிகளிடமிருந்து பெற்ற கடனகளல்லாது, ரூபாய் 20,000-க்கு மேற்பட்ட வைப்புத் தொகைகளையும், கடன்களையும் பெறும் வரையறுக்கப்பட்ட பொறுப்புக் கடன் வசதிச் சங்கங்கள் அனைத்தும், அரசினரால் விதிக்கப்பட்ட வடிவத்திலும், தரத்திற்கிணங்கவும். எளிதில் பணமாக்கக்கூடிய ஆதாரங்களை நிறுவவேண்டும் என்று சட்டத்தில் நிருணயிக்கப்பட்டுள்ளது.

## (ix) எப்படி நிதிகள் பயன்படுத்தப்படுகின்றன

### (அ) முன்பணங்கள் (கடன்கள்)

ஒரு நகர வங்கியின் பெரும்பாலான நிதிகள் உறுப்பினர்களுக்குக் கொடுக்கப்படும் கடன்களில் பயன்படுத்தப்படுகின்றன. உறுப்பினரல்லாதவர்களாக இருக்கும் வைப்புத் தொகையாளருங்கூட அவர்கள் வைப்புத் தொகைகளின் ஆதாரத்தின் பேரில் கடன்கள் அளிக்கப்படுகின்றனர்: நபர் ஜாமீன் பேரிலும், வைப்புத் தொகைகள், நகைகள், அசையாச் சொத்துகள் ஆகியவற்றின் ஆதாரத்தின்பேரிலும் குறுகிய காலக் கடன்களையும், மத்தியக் காலக் கடன்களையும் நகர வங்கி வழங்குகிறது. வாணிகச் சரக்குகள், அரசினர் கடன்பத்திரங்கள், ஆயுள் ஈட்டுறுதிப் பத்திரங்கள், வீடு சொத்துகள் விவசாய விளைபொருள்கள் ஆகியவற்றின் ஆதாரத்தின் பேரிலுங்கூடக் கடன்கள் வழங்கப்படுகின்றன. தங்க நகைகள், தங்கக் கட்டிகள், வெள்ளிச் சாமான்கள் ஆகியவற்றின் பிணயத்தின் பேரில் கடன் கேட்கும் நபர்கள் பெயரளவு உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டுக் கடன்கள் வழங்கப்படுகின்றனர். அவர்களால் பெறப்படும் கடன்களைத் தவிர, உறுப்பினரின் இதர உரிமைகளுக்கு அவர்கள் தகுதியில்லாதவர்கள். நகைக் கடன்களுக்காக, உச்ச நபர்க் கடன் அளவு, வழக்கமாக ரூ. 500-லிருந்து ரூ. 1000 வரை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்த வரம்பிற்குட்பட்டு, ஆதாரத்தின் மதிப்பில் 70 சத வீதத்திற்குக் கடன்கள் கொடுக்கப்படுகின்றன. நகர வங்கிகளில் கடன்கள், பொதுவாக, மூன்று வருடங்கள் பெருமமான காலவரைக்கு வழங்கப்படுகின்றன. சில வரம்புகளுக் குட்பட்டு, இந்தக் காலவரை சில சந்தர்ப்பங்களில், மூன்று வருடங்களுக்கு மேற்பட்டும், ஆனால் ஐந்து வருடங்களுக்கு மேற்படாமலும் இருக்கலாம். நகர வங்கிகளில் குறுகிய காலக் கடன்களுக்கும், மத்தியக் காலக் கடன்களுக்கும், வட்டி விகிதங்கள் 8.4 சதவீதத்திலிருந்து 16 சதவீதம் வரை விதிக்கப்

படுகின்றன. இவ் வட்டி விகிதங்கள் வணிக வங்கிகளின் வட்டி வீதங்களுடன் போட்டியிடும் தன்மையை யுடையதாக வுள்ளன. நகர வங்கிகளின் துணைவிதிகள், வழக்கமாக, ஓர் உறுப்பினர் தம் வங்கிக்கு எந்தப் பெரும மளவிற்குக் கடன் பட்டிருக்கலாம் என்ற ஒரு சரத்தைக் கொண்டுள்ளன. பொதுவாக, இவ் வங்கிகளால் ஒரு நபருக்கு ரூ.5,000 பெரும மளவிற்குக் கடன்கள் கொடுக்கப்படுகின்றன. ஒரு சிறிய அளவுக்கு ரூ.5000-க்கு மேற்பட்டும் கொடுக்கப்படுகின்றன. நகர வங்கிகள் தங்கள் வாடிக்கையாளர்களுக்கு வழங்கும் இன்னொருவிதமான பணவசதி, ரொக்கக் கடன் வசதிக் கடன்களாகும். (Cash Credit Loans). நகர வங்கிகளின் உறுப்பினர்களுக்குக், குறிப்பாக, சிறிய வியாபாரிகள், வர்த்தகர்கள், தொழில் அதிபர்கள் அல்லது வணிகர்கள் ஆகியவர்களுக்கு, இவ்விதமான கடன்களால் ஏற்படும் அனுகூலங்கள் வெளிப்படை. அவர்கள் ஓர் அறிவிப்பும் இல்லாமலே ரொக்கக் கடன் கணக்குகளிலிருந்து பணம் வாங்கவும், அந்தக் கணக்குகளுக்குள் பணம் செலுத்தவுங் கூடும். கடன்களைத் திருப்பிச் செலுத்துவதில் ஒழுங்காகவும் காலந் தவறாமலும் இருக்கும் உறுப்பினர்களுக்குத்தான் ரொக்கக் கடன் வசதி கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. ஓர் உறுப்பினருடைய வாழ்க்கை அந்தஸ்து, அவர் அளிக்கும் ஆதாரங்கள், கொடுக்கல் வாங்கலில் அவருடைய நடத்தை ஆகியவற்றைக் குறித்து, ஓர் உறுப்பினருக்கு, ஒரு வரம்பு வரைக்கும் ரொக்கக் கடன் ஒப்பளிக்கப்படுகிறது.

### (ஆ) முதலீடு

வங்கித் தொழிலுக்காகத் தேவைப்படாத நிதிகளை, அதாவது உபரி நிதிகளை, வங்கிகள் வைத்திருந்தால் அவை, அரசினர் பத்திரங்களிலும், பொறுப்பு நிறுவனங்களின் கடன் பத்திரங்களிலும் அல்லது பொதுவாக இதரக் கூட்டுறவு வங்கிகளில் நடப்பு வைப்புகளிலும் (Current Deposits) தவணை வைப்புகளிலும் (Fixed Deposits) முதலீடு செய்யப்படுகின்றன.

### (x) நிருவாகம்

வங்கியின் நிருவாகம் அதன் உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஓர் இயக்குநர் குழுவுக்கு ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. அங்கத்துவத்திலும், அலுவல் எல்லையிலும், ஒரு நகர வங்கியின் அளவு பெரியதாக இருக்கும்போது, ஒரு நிலப்பகுதி அடிப்படையின்பேரில் (Territorial Basis) அதாவது,

வங்கியின் அலுவல் எல்லை தக்க தொகுதிகளாகப் (Wards) பிரிக்கப்படுவதன் மூலம், இயக்குநர்கள் தேர்ந்தெடுக்கப் படுகின்றனர். பெரிய நகர வங்கிகள், வங்கியின் நிருவாகம் கொஞ்சம் பொருளாதாரப் பொறுப்புள்ள நபர்கள் வசம் இருப்பதை நிச்சயப்படுத்தும் நோக்கத்துடன் சில பங்குகளை வைத்திருத்தல் அல்லது வைப்புகளை முதலீடு செய்தல் என்ற தகுதிகளைக்கூட, இயக்குநர்களுக்காக விதித்திருக்கின்றன. பொதுவாக, இயக்குநர்கள் ஒரு மூன்று வருட கால வரைக்குத் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். இயக்குநர்கள் ஒருவர் பின் ஒருவர் முறைப்படி (Rotation) இயக்குநர் பதவியை விட்டுப் போகும் ஒருமுறைகூட அண்மைக் காலம் வரை வழக்கத்திலிருந்தது. இடைக்கால வெற்றிடங்களில், இயக்குநர் குழுவுக்கு நபர்களைச் சேர்த்துக்கொள்கை (Co-option) என்ற முறைகூட அண்மைக் காலம் வரை வழக்கத்தி லிருந்தது.

சங்கத்தின் இறுதியான அதிகாரம் உறுப்பினர்களின் பேரவையுடன் உள்ளது. தமிழ்நாட்டில், பெரிய அங்கத்துவ மும் பரந்த எல்லையும் கொண்ட ஒருசில நகர வங்கிகள், தங்கள் முழுப் பேரவை யன்றியும் ஒரு பிரதிநிதித்துவப் பேரவையை அமைப்பதற்காகத் தங்கள் துணைவிதிகளில் சரத்துச் செய்திருக்கின்றன. துணைவிதிகளில் நிருணயிக்கப்படுகிறபடி, ஒவ்வொரு 50 அல்லது 100 உறுப்பினர்களுக்கு ஒருவர் என்ற வீதாச்சாரத்தில், பல்வேறுபட்ட தொகுதிகளால் பிரதிநிதித்துவப் பேரவையின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். பொறுப்பை மாற்றுதல், சங்கத்தைப் பிரித்தல், அல்லது அதை வேறு ஏதாவது சங்கத்துடன் இணைத்தல், சங்கத்தின் அமைப்பு அல்லது இயக்குநர்களைத் தேர்ந்தெடுக்கும் முறை தொடர்பாகத் துணைவிதிகளைத் திருத்தம் செய்தல் போன்ற முக்கிய விஷயங்களைக் குறித்த அதிகாரங்களை, முழுப்பேரவை தனக்கே ஒதுக்கிவைத்துக் கொள்கிறது. ஆண்டு அறிக்கை, ஆண்டு வரவுசெலவுத் திட்டம், துணைவிதித்திருத்தம், சான்றிதழ் ஆகியவற்றை ஆலோசித்தல், இயக்குநர் குழுவைத் தேர்ந் தெடுத்தல், முழுப் பேரவைக்காக வெளிப்படையாய் ஒதுக் கப்படாத துணை விதித் திருத்தங்களை ஆலோசித்தல் போன்ற அதிகாரங்கள் பிரதிநிதித்துவப் பேரவைக்கு ஒப்படைக்கப்பட் டுள்ளன.

இயக்குநர்களும், இயக்குநர் குழு அலுவலர்களு மன்றி, தகுதிவாய்ந்த ஊதியம் பெறும் சிப்பந்திகளையும் நகர வங்கி கள் உடையன. தமிழ்நாட்டில், சட்டத்தின்கீழ் வகுக்கப்

பட்ட விதிகளின்கீழ் ஓர் இலட்ச ரூபாய்க்கு மேற்பட்ட நடைமுறை மூலதனத்தையுடைய நகர வங்கிகள் ஊதியம் பெறும் செயலாளர்களை அமைத்துக்கொள்ள வேண்டும். தமிழ் நாட்டில் எல்லா 136 நகர வங்கிகளும் முழுநேர ஊதியம் பெறும் செயலாளர்களை உடையன.

## 5. நகர வங்கிகளால் ஆற்றப்படும் சேவைகள்

சிக்கனத்தை வளர்த்தலும் கடன் வழங்குதலு மன்றி நகர வங்கிகள் பல்வேறுவிதச் சேவைகளைப் புரிகின்றன.

(i) தமிழ்நாட்டில் தெரிந்தெடுக்கப்பட்ட நகர வங்கிகள், குறைந்தபக்ஷம் சுமார் 40 வங்கிகள், தக்க பாதுகாப்பின்கீழ்க் காசோலைகளையும், உண்டியல்களையும் மாற்றல் செய்வதை (Discounting of Cheques and Bills) மேற்கொள்கின்றன. பொதுவாக, வங்கித்தொழில் ஒழுங்காற்றுச் சட்டத்தின்கீழ் வருட முழுவதும் தேவைப்படுகின்ற தரங்களைப் பராமரித்து, தகுதி பெற்ற ஊதியம் பெறும் செயலாளர்களையுடைய வங்கிகள் இவ் வேலையினத்தை மேற்கொள்கின்றன. இவ் வசதி, இயக்குநர் குழுவால் அங்கீகரிக்கப்பட்ட உறுப்பினர்களுக்கும் அதனுல் அங்கீகரிக்கப்பட்ட வங்கிகள்மீது விடுக்கப்பட்ட உண்டியல்களுக்கும், காசோலைகளுக்கும் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. ஓர் ஒற்றையான உறுப்பினரின் உண்டியல்களும், காசோலைகளும், மாற்றல் செய்யப்படக்கூடிய உச்ச வரம்புங் கூட நிருணயிக்கப்படுகிறது.

(ii) நகர வங்கிகளில் சில, சீட்டு நிதிகளையும், (Chit Funds) நடத்துகின்றன. அவை 1961ஆம் வருடத்திய சென்னைச் சீட்டு நிதிகளின் சட்டத்தின் (Madras Chit Funds Act, 1961) செயற்பாட்டிலிருந்து விலக்கப்பட்டிருக்கின்றன. ஆனுல், அவை சம்பந்தமான துணை விதிகளை, அந்தச் சட்டத்தின்கீழ் அமர்த்தப்பட்ட பதிவாளர் வசம் பதிவுக்காகத் தாக்கல் செய்ய வேண்டும். பொதுவாக, சீட்டு நிதியின் உச்ச அளவுத் தொகை, காலவரை, சீட்டு நிதியை இயக்குவதற்குத் தேவைப்படும் உறுப்பினர்களின் குறைந்த பட்ச எண்ணிக்கை, ஆகியவை முறையாக 2400, 24 மாதங்கள், 10 நபர்களாக நிர்ணயிக்கப்பட்டுள்ளன.

(iii) ஒரு சில வங்கிகள் தங்கள் வாடிக்கையாளர்களின் விலையுயர்ந்த சாமான்களைப் பாதுகாப்பாக வைப்பதற்கு ஒரு பெயரளவுக் கட்டணத்தில் பெட்டகங்களை (Lockers) ஏற்படுத்தியுள்ளன.

(iv) உண்டியல்களையும் காசோலைகளையும் பணவிடைகளையும் ரயில்வே ரசீதுகளையும் வசூலித்தல், காசோலைகள் விடுவிப்பதன் மூலம் நிதிகளை மாற்றுதல், காப்பீட்டுக் கட்டணங்களை வசூலித்தல் முதலிய வசதிகளை வாடிக்கையாளர்களுக்கு நியாயமான நிபந்தனைகளின் பேரில், நகர வங்கிகள் ஏற்பாடு செய்கின்றன.

(v) நகர வங்கிகள், பல்வேறுவித வைப்புகளைக் குறிப்பாக, சேமிப்பு வைப்புகளையும், நடப்பு வைப்புகளையும் ஏற்றுக் கொள்வதன் மூலம் உறுப்பினர்க ளிடையேயும், பொது மக்க ளிடையேயும் வங்கித் தொழிற் பழக்கத்தை வளர்ச்சி செய்கின்றன.

## 6. நகரப் பொருளாதார அமைப்பில் கூட்டுறவு நகர வங்கிகளின் இடம் (The Place of Co-operative Urban Banks in The Urban Economy)

சமுதாயத்திற்கு நகர வங்கிகளின் உபயோகத்தை அதிகரிப்பதற்காகவும், நகரப் பகுதிகளி லுள்ள சாமான்ய மக்களின் நல்வாழ்வுக்கு அவற்றின் உதவியாற்றலைப் பெருக்குவதற்காகவும் சில நடவடிக்கைகளை விவரிப்போம்.

**(i) சிற்றளவுத் தொழிலமைப்புகளுக்கு நிதியளித்தல் :** முதன் முதலாக, நகர வங்கிகள் ஆரம்பிக்கப்பட்டதன் பிரதான நோக்கத்தை இடைவிடாமல் கருத்தில் வைக்க வேண்டுவது அவசியமாகும். பல்வேறு குழுவினர்களால் வலியுறுத்தப் பட்டபடி, நகர வங்கிகளின் பிரதானப் பணியானது, சிறு தொழில் அதிபர்களுக்கும் கைவினைஞர்களுக்கும் தொழில் நுட்பப் பணியாளர்களுக்கும் உதவி யளிப்பதாகும். நன்கு அமைக்கப் பட்ட இவ் வங்கிகளின் சேவைகளை அவற்றின் எல்லைகளில் தொழில் நடவடிக்கைகள் வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்ள, யாதொரு நிலையான அல்லது முறையான முயற்சிகள் எடுக்கப் படாதது வருந்தற் குரியது. கூட்டுறவு வங்கிகளின் மூலம் தொழில் நிதியளித்தல் பற்றிய, ரிசர்வ் வங்கியின், நடைமுறைக் குழுவினர் (1969) Working Group on Industrial Financing through Co-operative Banks) கீழ்க்கண்ட பரிந்துரைகளைச் செய்திருந்தனர்.

(a) மேற்பார்வையை அதிகச் செலவுள்ளதாகவும் கடினமானதாகவும் செய்கிற அளவுக்குத் தங்கள் அலுவலகத்திற்கு வெகு தூரத்திலில்லாத கூட்டுறவு நகர வங்கிகள், தொழி

லமைப்புகளுடன் வாணிகம் செய்வதற்குச் சாத்தியப்படுமாறு, தங்கள் அலுவல் எல்லையை விரிவாக்கம் செய்ய அனுமதிக்கப்பட வேண்டும்.

(b) அவை கடன் வாங்கும் தொழில் அதிபர்களுக்குப் போதுமான அளவில் அவர்களுடைய தொழிலமைப்புகளுக்கு நிதியளிக்கும் காரியத்திற்காக, கடன்கள் வழங்குவதற்கு வகை செய்யும் பொருட்டும், சிற்றளவுத் தொழில் அமைப்புகளுக்கு, அவ் வமைப்புகள் தனி நபர்களாகவும் அல்லது கூட்டு வணிகக் கழகங்களாகவும் அல்லது கூட்டுப் பங்குக் கழகங்களாகவும் இருப்பினும் பொருட்படுத்தாமல் நிதியளிப்பதற்கு அனுமதிக்கும் பொருட்டும், நகர வங்கிகளின் துணை விதிகள் அவசியமான இடங்களில் திருத்தப்பட வேண்டும். இப் பரிந்துரைகளை அனுசரித்து, ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் 17(2) (ஆஆ) பிரிவின் கீழ், சிற்றளவுத் தொழில்களுக்கு நிதியளித்தலை மேற்கொள்கின்ற நகர வங்கிகளுக்கு மறு நிதி வசதிகளை (Refinance Facilities) நீடிப்பதற்கு ரிசர்வ் வங்கி இசைந்தது. இவ் வகையில் அது கடனுதவி செய்வதற்காக, அது 22 விரிவான வகுப்புச் சிற்றளவுத் தொழில்களையும், குடிசைத் தொழில்களையும் அங்கீகரித்திருக்கின்றது. சிற்றளவுத் தொழில்களுக்கு நிதி வழங்குவதன் மூலம் உற்பத்தி நடவடிக்கைகளில் ஈடுபட்டிருக்கும் அல்லது அக்கறை கொண்டிருக்கும் நகர வங்கிகளுடைய பங்கு மூலதனத்தில் மிகவும் தெரிந்தெடுப்பு அடிப்படையில் பங்கு கொள்வதற்கு வகைசெய்யும் பொருட்டு ரிசர்வ் வங்கி மாநில அரசுகளுக்குத் தன் தேசிய நீண்டகால(செயற்பாடு) நிதியிலிருந்து (National Long-Term (Operation) Fund) கடனுதவியளிப்பதற்குக்கூட உறுதியளித்திருக்கிறது. தமிழ் நாட்டில் நகர வங்கிகள் இவ் வசதிகளைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. தொழிற் காரியங்களுக்காக நிதியுதவி யளிப்பதில் முழுக் கவனத்தைச் செலுத்துவதற்கும், தற்போதையத் தேவைகளைப் பூர்த்திசெய்வதற்கும் நகர வங்கிகள் இவ் வசதிகளைப் பயன்படுத்திக்கொள்ள இனித் தாமதிக்கக் கூடாது. இல்லாவிடில், நகர வங்கிகளைப் பொருளாதார, சமுதாய முன்னேற்ற நிறுவனங்களாக அரசினரோ, மக்களோ நாடமாட்டார்கள்.

அண்மையில், சுய வேலையில் ஈடுபட்டிருக்கும் சிறிய வர்த்தகர்களுக்கு உதவி செய்வதற்காக, தமிழ் நாட்டு அரசு ஒரு திட்டத்தைத் தயார் செய்தது. இத் திட்டத்தின் கீழ், கூட்டுறவு வங்கிகளால் சிறிய உற்பத்தி நோக்கு அமைப்புகளுக்கு அளிக்கப்படும் முன்கடன்களுக்கு மாநில

அரசினரால் மறுநிதி யுதவி யளிக்கப்படும். இத் திட்டமானது திருச்சிக் கூட்டுறவு நகர வங்கியாலும், சென்னை ஜார்ஜ் டவுன் கூட்டுறவு வங்கியாலும் அமல் நடத்தப்பட்டு வருகிறது. ஆகையால், ரிசர்வ் வங்கியிலிருந்தும், மாநில அரசுகளிட மிருந்தும், சிற்றளவுத் தொழில்களுக்கு நிதியுதவி யளிப்பதற்காக நிதிகள் கிடைக்கின்றன. எனவே, இவ் வங்கிகளால் செய்யப்பட வேண்டியவை, வங்கிகளின் எல்லையிலுள்ள தொழில்களைப் பற்றிய ஒரு விசாரணை (Survey) மேற்கொள்ளப்பட வேண்டும்; சிறு தொழில்கள் அடையாளப்படுத்தப்பட வேண்டும்; அத் தொழில்களுக்குக் கிடைக்கக் கூடிய உதவியின் தன்மையும், அளவும் விளக்கப்பட்டு அவைகளுக்குத் தேவைப்படும் நிதி யுதவியை அளிப்பதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டும். வங்கிகள் தாங்கள் நிதியளிப்பதற்கு உத்தேசிக்கும் தொழில் திட்டங்களின் தொழில் நுட்பச் சாத்தியக் கூற்றையும் (Technical Feasibility), பொருளாதாரத் தன்னிறைவையும் (Economic Viability) நிச்சயப்படுத்திக் கொண்ட பிறகு சரியான வங்கித் தொழில் கொள்கைகளுக் கிணங்கத் தொழில் நிதி வழங்கும் பணிகளைப் பயனுறுதியாக மேற்கொள்ளும் பொருட்டு, அவை தகுதி வாய்ந்த தொழில் நுட்பச் சிப்பந்திகளை அமர்த்த வேண்டும். இவ் வங்கிகளின் நிருவாகக் குழுவில், நியமனம் அல்லது தேர்தல் வாயிலாக, தொழில் நுண்ணறி வுள்ள நபர்கள் இருக்க வேண்டியதுங்கூட அவசியமாகும்,

நிதி வழங்கும் திட்டத்தை அமல்படுத்தாமைக்கு நகர வங்கிகள் சார்பில் கூறப்படும் காரணங்களில் ஒன்று, தொழில் சம்பந்தமான வணிகத்தில் (Industrial Business) பொதிந்துள்ள நட்ட வச்சமாகும். சிற்றளவுச் தொழில்துறைக்குத் தேவைப்படும் உதவியை நிறுத்தி வைப்பதற்கு இது போதுமான காரணமாகாது. கவனிப்புள்ள நிதியளித்தலும், வழங்கப்பட்ட நிதிகள் சரிவர உபயோகப்படுத்தப்படுவதை மேற்பார்வை செய்ய விவேகமுள்ள தொடர் நடவடிக்கை எடுத்தலும், தொழில் துணிவுகளின் செயற் பாட்டை அவ்வப்போது ஒரு கவனிப்புள்ள மதிப்பீடு செய்தலும் தவிர, இந்திய அரசின் சார்பில், ரிசர்வ் வங்கியால் பரிபாலனம் செய்யப்படும் 'கடன் உத்தரவாதத் திட்ட'மானது (Credit Guarantee Scheme) தொழிலமைப்புகளுக்கு நகர வங்கிகள் கடன் ஆதரவு வழங்குவதற்கு வகைசெய்ய அவைகளுக்குக் கிடைத் திருக்கும் ஒரு மதிப்புள்ள வசதியாகும். மேலும், அண்மையில் ரிசர்வ் வங்கியால் ஒரு 'கடன் உத்தரவாதக் கழகம்' (Credit Guarantee Corporation) அமைக்கப்பட்டு, அது 1971 ஏப்ரலி லிருந்து செயற்பட்டு வருகிறது. இக் கழகமானது, சிறிய குடி

யானவர்களுக்கு மட்டுமன்றி, அவர்களைப் போன்ற நிலையிலிருக்கும் இதரப் பொருளாதார நடவடிக்கைகளில் ஈடுபட்டுள்ள நபர்களுக்கும் கொடுக்கப்படும் கடன் வழங்குதலில் அடங்கியுள்ள நட்ட வச்சங்களைத் தழுவ உத்தேசிக்கப்பட் டிருக்கிறது. இக் கடன் உத்தரவாதத் திட்டம் கூட்டுறவு நகர வங்கிகளுக்குக்கூட நீடிக்கப் படக் கூடும்.

ஒரு புதிய திசையும், புதிய கொள்கைகள் வகுத்தலுமன்றியும் நுகர்வுக்காகப் பெருமளவு நிதி வழங்கும் தற்போதைய வழக்கத்திலிருந்து, தொழில் முயற்சித் திட்டங்களுக்கு நிதி வழங்குதலை மேற்கொள்ளும் பொருட்டு, நகர வங்கிகள்பால் எதிர்காலத் தோற்ற மாற்றமும், ஒரு புதிய மனேபார்வையும் ஏற்பட வேண்டும். இக் குறிக்கோளை யடைவதற்காக, வங்கிகள் தங்கள் நிதிகளில் ஓர் உறுதியான சதவிகிதத்தைத் தொழில்துறைக்கு நிதி வழங்குவதற்காக ஒதுக்கிவைக்க வேண்டும். அத்தகைய கடன்களுக்கான வட்டி சதவிகிதங்களும், சாதாரணமாக நகர வங்கிகள் கடன்களுக்காக விதிக்கும் வட்டி விகிதங்களைவிட ஒரு சிறிது குறைந்திருக்கலாம். தங்களால் கடன்கள் அளிக்கப்பட்ட தொழில் திட்டங்களை மேற்பார்வை செய்வதற்காக, தக்க புறப் பணியாளர்களை (Field Staff) - நிருவாகத் துறையிலும், தொழில் துறையிலும் - இவ் வங்கிகள் அமர்த்த வேண்டும். எனவே, மத்திய வங்கிகளின் உதவியைக் கொண்டு நகர வங்கிகள் சிற்றளவுத் தொழில்களுக்காக ஒரு தக்க கடன் திட்டத்தை உருவாக்கி, இந்த அவசரமானதும் வளர்ச்சியடைந்து வருவதுமான நடவடிக்கையைக் கவனிப்பதற்கு ஒவ்வொரு மத்திய வங்கியிலும் பயிற்சி பெற்ற போதிய சிப்பந்திகளைக் கொண்டு ஒரு தொழிற் குழுமத்தை (Industrial Cell) அமைப்பதற்கு ஏற்பாடு செய்ய வேண்டும்.

## (ii) வைப்புகளை அதிகமாக்குதல்

கூலி வாங்குபவர்கள், கைவினைஞர்கள், சிறிய வர்த்தகர்கள்- தினசரி வருவாயுடைய மற்றவர்கள் ஆகியவர்களிடையே சேமிப்புப் பழக்கத்தை ஊக்குவிப்பதற்குப் பயனுறுதியான நடவடிக்கைகள் ஆரம்பிக்கப்பட வேண்டும். சில வங்கிகளில் நடைமுறையிலிருக்கும் தினசரி வைப்புத் திட்டம் (Day Deposit Scheme) என்ற ஒரு முறை எல்லா வங்கிகளிலும் தொடங்கப்பட வேண்டும். இத் திட்டத்தின்கீழ் ஒவ்வொரு நபரும் 50 பைசா அல்லது 1 ரூபாய் அல்லது அதன் ஒரு பெருக்கம் போன்ற ஒரு தொகையை ஒவ்வொரு நாளும் வைப்புச் செய்ய எதிர்பார்க்கப் படுகிறார். இவ் வைப்புகள், தவணை முதிர்வு பெற்றவுடன், வைப்பாளருக்குத்

திருப்பிக் கொடுக்கப்படுகின்றன; அல்லது அவருடைய கடன் பாக்கி ஏதாவதிருந்தால் அதற்குச் சரிக்கட்டப்படுகிறது. அத்தகைய ஒரு திட்டம், தேவைப்படும் திருத்தங்கள் அல்லது வேறுபாடு களுடன், எல்லா நகர வங்கிகளாலும் தொடங்கப்படலாம். உதாரணமாக, மக்களில் ஏதாவதொரு குறிப்பிட்ட பிரிவினர் விஷயத்தில், தினசரி வைப்புத் திட்டம் தகுதியுள்ளதாக இல்லாம லிருந்தால், வார வைப்புத் திட்டம் அல்லது இருவார வைப்புத் திட்டம் தொடங்கப்படலாம். இவ் விதமான வைப்புகள், வங்கிக ளால் இதுவரை ஈர்க்கப்படாத மக்கள் பிரிவினரிடையே, வங்கித் தொழில் பழக்கத்தைத் தொடங்கி வைக்கும்.

*வைப்பு ஈட்டுறுதிச் சட்டம்* (1962) (Deposit Insurance Act) வணிக வங்கிகளுக்கு மட்டும்தான் பொருந்துகிறது; இச் சட்டம் கூட்டுறவு வங்கிகளுக் கில்லாத ஓர் அனுகூலத்தை வணிக வங்கி களுக் களிக்கிறது. 10,000 ரூபாய் வரம்பு வரைக்கும் வைப்புகள் ஈட்டுறுதி செய்யப்படுகின்றன. இவ் வரம்பு ஒரு வைப்பாளர் ஒரு குறிப்பிட்ட வங்கியுடன் தான் வைத்திருக்கும் எல்லாக் கணக்கு களிலு முள்ள ஒரு மொத்தத் தொகையைக் குறித்ததாகும். ஈட் டுறுதிக் கட்டணத்தின் விகிதம் ரூபாய் 100-க்கு, 4 பைசாவாகும். இக் கட்டணம் ஈட்டுறுதி செய்யப்பட்ட வங்கிகளால் வைப்பு ஈட்டுறுதிக் கழகத்திற்கு (Deposit Insurance Corporation) செலுத் தப்படவேண்டும். அண்மையில், வைப்புக் காப்பீட்டுச் சட்ட மானது, கூட்டுறவு வங்கிகளுக்கும் அதை நீடிக்கச் செய்யும் வண்ணம் திருத்தப்பட்டுள்ளது. கூட்டுறவு வங்கிகளுக்கு இச் சட்டத்தை நீடிப்பதற்கான ஒரு நிபந்தனை, வைப்புக் காப்பீட்டுக் கழகத்தை நட்டவச்சங்களிலிருந்து பாதுகாப்பதில் உதவி செய்யும் பொருட்டுக் கூட்டுறவு வங்கிகளின் நிருவாகத்தைக் குறித்த விஷயங்களில் ரிசர்வ் வங்கிக்கு ஓர் அதிகார மிருக்கவேண்டும் என்பதாகும். எனவே, ஒரு கூட்டுறவு வங்கியைக் கலைத்தல், அல்லது அதன் நிருவாகக் குழுவை நீக்கிவைத்தல், அல்லது ஓர் இணைப்புத் திட்டத்தை அல்லது சீரமைப்புத் திட்டத்தை ஒப்பளித் தல் போன்ற விஷயங்களைக் குறித்து ஓர் இறுதியான முடிவை யெடுக்கும் அதிகாரத்தை ரிசர்வ் வங்கிக்கு அளிப்பதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டம் திருத்தப்பட வேண்டியிருக்கிறது. வைப்புக் காப்பீட்டுத் திட்டம் ஏற்கெனவே மகாராஷ்டிரத்திலும், ஆந்திரப்பிரதேசத்திலும், மத்தியப் பிரதேசத்திலும் செயற்பாட்டி லிருக்கிறது. தமிழ் நாட்டில் சந்தானம் குழுவினர், வைப்புக் காப்பீட்டுத் திட்டத்தின் அனுகூலங்கள் ஒரு கூட்டுறவு வங்கியின் வைப்பாளர்களுக்குக்கூடக் கிடைக்க வேண்டு மென்ற நோக்கத் துடன், கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தை அரசு விரைவில்

திருத்தம் செய்யவேண்டு மென்று பரிந்துரை வழங்கியுள்ளனர். வைப்புகளுக்கான காப்பீட்டுப் பாதுகாப்பு ஏற்பாடு வைப்புகளின் வளர்ச்சியை நகர வங்கிகளிலுங்கூட அதிகப்படுத்தி உற்பத்திப் பெருக்க நடவடிக்கைகளுக்காக இவ் வங்கிகளுக்கு மிகப் பெருமளவு நிதிகளை ஏற்பாடு செய்யக்கூடு மாதலால், இவ் விஷயத்தில் அரசின் கவனமும், அரசு பணியாளரல்லாத கூட்டுறவாளர்களின் கவனமும் தேவைப்படுகிறது.

வைப்புகளை ஈர்ப்பதற்கான ஒரு நடவடிக்கையாக, பெரிய வங்கிகளில் சில, கிளைகளைத் திறக்கும் பிரச்சினையை ஆலோசனை செய்யலாம். திருச்சி, அம்பாசமுத்திரம் (திருநெல்வேலி மாவட்டம்) வங்கிகள் போன்றவை கிளைகளைத் திறந்திருக்கின்றன. வைப்புகளைத் திரட்டி, சமுதாயத்தின் ஒரு பெரும் பகுதியினருக்கு, வங்கி வசதிகளையும் பணிகளையும் வழங்கவேண்டிய சந்தர்ப்பத்தை முன்னிட்டு. இதர வங்கிகளும் தகுதியான பகுதிகளில் கிளைகளைத் திறப்பது பயன் தரும்.

### (iii) அதிகப்படியான வங்கித் தொழில் சேவைகளை வழங்குதல் (Provision of Increased Banking Services)

வைப்புகளைத் திரட்டுவதில் வங்கிகள் ஒரு நல்ல முன்னேற்றத்தை அடைய வேண்டுமானால், நவீன வங்கித் தொழில் நுட்ப இயலைப் பின்பற்றி, பல்வேறு வகையான வங்கித் தொழில் சேவைகளையும் பணிகளையும் விரிவாக்கம் செய்தல் மிகவும் அவசியமாகும். எனினும், அத்தகைய சேவைகள் இப்பொழுது, பண விடைகளையும் காசோலைகளையும் விடுப்பதற்கும், உண்டியல்களையும் காசோலைகளையும் வசூல் செய்வதற்குமே அடைத்து வைக்கப்பட்டுள்ளன. மிகச் சில வங்கிகளே அங்கீகரிக்கப்பட்ட வாடிக்கையாளர்களின் காசோலைகளை அல்லது உண்டியல்களை மாற்றல் செய்வதற்கான (Discounting) வசதிகளை இப்போது வழங்குகின்றன. வாடிக்கையை ஈர்த்தல், உண்மையான வாணிகத் தேவைகளுக்காக அதிகப்பற்றுகளை (Overdrafts) வழங்குதல், இயல்பான நிர்ணயிக்கப்பட்ட பாதுகாப்புகளுக்குட்பட்டு உண்மையான வாணிக நடவடிக்கைகளிலிருந்து எழுகின்ற உண்டியல்களை மாற்றல் செய்தல், சேமக் காப்பு (Safe Custody) வசதிகளைத் தொடக்கி வைத்தல், வாடிக்கையாளர் சார்பில் வாடகைகளை வசூலித்தல், வரிகளையும் மின்சாரப் பட்டியல்களையும் காப்பீட்டுக் கட்டணங்களையும் செலுத்துதல் ஆகியவற்றிற்காக, ஏறக்குறைய நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளைப் போன்று, இவ் வங்கிகள் பலவகைச் சேவைகளை மேற்கொள்ள வேண்டும். இவ்

வங்கிகள் 1949ஆம் வருடத்திய வங்கித் தொழில் நடைமுறைச் சட்டத்தின் அதிகாரத்திற்குள்ளும்கூட வர வேண்டும். ஏனென்றால், அது வங்கிகளின் கௌரவத்தை உயர்த்தி, வங்கித் தொழிலின் சரியான விதிகளுக் கிணங்க அவைகளின் செயற்பாட்டு நடைமுறைகளையும், கொள்கைகளையும் ஒழுங்குபடுத்தும்.

### (iv) உற்பத்தி நோக்குக் கடன் வசதியின் மீது வலியுறுத்தல் (Stress on Production Oriented Credit)

பெரும்பாலும், கடன்கள் உற்பத்தி நோக்கைவிட நுகர்வு நோக்காகத்தான் அதிகமாக உள்ளன. தற்போதுள்ளபடி வங்கிகள் பல்வேறு காரியங்களுக்காகக் கடன்கள் வழங்கி வரலாம். ஆனால், உற்பத்திக் காரியங்களுக்காகத் தொழிலதிபர்கள், தொழில் முயல்வோர்கள், கைவினைஞர்கள் முதலியவர்களாலும் மற்றும் சிறுவர்த்தகர்களாலும்கூடக் கோரப்படும் கடன்களுக்கும் சமமான முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும். ஆகையால், சம்பிரதாய முறைக் கடன் அளிப்பிலிருந்து ஒரு வழிமாறுதல் அவசியப்படுகிறது. நுகர்வுக் காரியங்களுக்கான நிதி உதவி தவிர்க்கப்பட முடியாவிடினும், இவ் வங்கிகள், ஊதாரித்தனமானதும் உற்பத்தி விளைவற்றதுமான செலவுகளை வளர்ப்பதற்காகவும் ஊக்குவிப்பதற்காகவும் செயல்படுகின்ற நிறுவனங்களாகிவிடக் கூடாது. சிற்றளவுத் தொழில்களுக்கும் தொழில் முயற்சிகளுக்கும் நிதி உதவிக்கான ரிசர்வ் வங்கியின் திட்டம் அமுலிலிருந்து வருவதாலும், மாநில அரசுகளால் மறுநிதி அளிக்கும் திட்டங்கள் உத்தேசிக்கப்பட்டிருப்பதாலும், நகர வங்கிகள் தங்கள் முதலீட்டு நடைமுறைகளைப் படிப்படியாகத் தொழில்துறைக்கு மாற்றிக் கொள்ளும் வகையில் முறையானதும் தீவிரமானதுமான ஒரு முயற்சியை எடுக்கக் கூடும்.

### (v) சலுகையான வட்டி விகிதங்கள் (Concessional Rates of Interest)

குறுகிய காலக் கடன்களுக்காகவும், மத்தியக் காலக் கடன்களுக்காகவும் நகர வங்கிகள் விதிக்கும் வட்டி விகிதங்கள் 8.4 சதவிகிதத்திலிருந்து 16 சதவீதத்திற்கிடையில் பரவியுள்ளன. இந்த வட்டி விகிதங்கள் வணிக வங்கிகள் விதிக்கும் வட்டிகளுடன் போட்டியிடும் தன்மை வாய்ந்தவை. தொழில் காரியங்களுக்காக வழங்கப்படும் கடன்களுக்கு ஒரு குறைவான வட்டி விகிதத்தை விதிக்கும் பிரச்சினை பரிசீலிக்கப்படலாம். அவ்வாறே நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளால் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினருக்கு விதிக்கப்படுகின்ற வேறுபட்ட வட்டி விகிதங்களை

அனுசரித்து, சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்களுக்கு வழங்கப்படும் கடன்களுக்காக ஒரு குறைவான வட்டி விகிதத்தை விதிக்கும் பிரச்சினையுங்கூடக் கூட்டுறவாளர்களின் கவனத்தைப் பெற வேண்டும்.

**(vi) தளவாடங்கள்** (Equipments)

இப் புதிய பணித் திட்டத்திற்கான போதிய தளவாடங்களை வங்கிகள் பெற்றிருக்க வேண்டும். வசீகரமான அலுவலகக் கட்டடம், கல்லாக்கள், வாடிக்கையாளர்களுக்குக் காவல் நிலவறை வசதிகள் (Safe Vaults) முதலியவை மட்டுமன்றி, அன்றாட நிருவாகத்தை நடத்துவதற்குக் கல்வித் தகுதியும் பயிற்சியும் பெற்ற தகுதி வாய்ந்த பணியாளர்களும் இவ் வங்கிகளுக்குத் தேவைப்படும். வங்கியின் பணியாளர்கள் பொதுவான மேலாண்மை வேலையிலும், செயலாளர் வேலையிலும் மட்டுமன்றி வங்கித் தொழில் வகைகளிலும் நடைமுறைகளிலும் பயிற்சியளிக்கப்பட வேண்டும். சிறிய தொழில் முன்முயற்சிகளை மேற்கொள்ளும் உறுப்பினர்களுக்கும் மற்றவர்களுக்கும் அவசியமான உதவியையும், வழிகாட்டலையும் வழங்கும் பொருட்டுத் தேவைப்படும்போதெல்லாம், நகர வங்கிகள் போதுமான தொழில் நுட்பப் பணியாளர்களை அகப் பணியாளர்களாகவும், புறப் பணியாளர்களாகவும் அமர்த்த வேண்டும். வங்கியின் செயலாளர் தக்க ஊதியம் பெறுபவரும் பயிற்சி பெற்றவராகவும் தகுதி வாய்ந்தவருமாக இருக்கவேண்டும்.

**(vii) நிருவாகக் குழுக்களைச் சீரமைத்தல்** (Reconstitution of Boards of Management)

தொழில் துறைக்கு நிதியளிப்பின் முக்கியத்துவத்தை முன்னிட்டு, வங்கிகளின் நிருவாகக் குழுக்கள் வர்த்தகப் பிரதிநிதிகளையும், தொழிற் பிரதிநிதிகளையுங் கொண்டிருக்க வேண்டும். தொழில் நுட்பத் தகுதி பெற்ற ஓரிரு நபர்கள் நியமனம் மூலம் வங்கிகளின் நிருவாகத்துடன் இணைக்கப்படலாம்.

**(viii) மேற்பார்வையும், வழிகாட்டலும்** (Supervision and Guidance)

தற்போது நகர வங்கிகளின் முறையான மேற்பார்வைக்காக ஒருவித ஏற்பாடும் இல்லை. தமிழ் நாட்டில் சந்தானம் குழுவினர், சரியான முறையில் நகர வங்கிகளின் வேலையை வழிகாட்டும் பொருட்டும், ஒழுங்குபடுத்தும் பொருட்டும், மாநிலக் கூட்டுறவு வங்கி மேற்பார்வைப் பணியை மேற்கொள்ள வேண்டுமென்று கருதினர். வைப்புக் காப்பீட்டுச் சட்டம் கூட்டுறவு வங்கிகளுக்கு

நீடிக்கப்படும்போது, இந்த ஏற்பாடும்கூட அவசியப்படும். அறிவுரை, கல்விப் பணியைப் புரிவதுமட்டு மன்றி, மாநிலக் கூட்டுறவு வங்கி, நாளடைவில், நகர வங்கிகளின் செயற்பாட்டின் மீது மேற்பார்வையையும், கண்காணிப்பையும் செலுத்துவதற்கான பொறுப்பை ஏற்றுக்கொள்ளலாம். கூட்டுறவு விவசாயக் கடன் வசதி நிறுவனங்களின் திறனை மேம்படுத்துவதற்காகத் தொடர்ந்து வந்த ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில் எடுக்கப்பட்ட நிலையான முயற்சிகள் காரணமாகத் தமிழ்நாட்டில் விவசாயக் கடன் வசதி அதிக முன்னேற்றத்தை அடைந்திருக்கிறது என்பதை மறுக்க முடியாது. அவ்வாறே, கூட்டுறவு நகரக் கடன் வசதி இயக்கத்திற்குப் புத்துயிர் அளிப்பதற்கும், இன்றையத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கும் அதைச் செம்மைப்படுத்துவதற்கும் நடவடிக்கைகள் அவசியமாகும்.

## III ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்கள்

### (i) பீடிகை

ஊழியர்கள் கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்கள் அரசாங்கத்திலும், உள்ளாட்சி மன்றங்களிலும், வாணிகக் கழகங்களிலும் அல்லது இதரப் பெரிய நிறுவனங்களிலும் பணிபுரியும் ஊழியர்களின் நலனுக்காக நிறுவப்படுகின்றன. அவை, (அ) ஓர் ஒற்றையான அரசு இலாகாவின் ஊழியர்களுக்கான தனிப்பட்ட சங்கங்களாகவும், (ஆ) அரசு இலாகாக்கள் பலவற்றின் ஊழியர்களுக்கான சங்கங்களாகவும், (இ) உள்ளாட்சி மன்றங்களின் ஊழியர்களுக்கான சங்கங்களாகவும், (ஈ) அரசு ஊழியர்களுக்கும், உள்ளாட்சி மன்ற ஊழியர்களுக்குமான சங்கங்களாகவும், (உ) தொழிற் கழகங்கள், வாணிகக் கழகங்கள், தொழிற்சாலைகள், ஆலைகள் முதலிய நிறுவனங்களின் ஊழியர்களுக்கான சங்கங்களாகவும் உள்ளன. ஊழியர்கள் கடன் வசதிச் சங்கம், சாதாரணமாக, ஒரு குறிப்பிட்ட நிறுவனத்தின் ஊழியர்களுக்காகச் சேவை புரிகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட நிறுவனங்களின் ஊழியர்களுக்காகவுங்கூட ஒரு சில சங்கங்கள் உள்ளன. நகரக் கூட்டுறவு வங்கிகளைப் போன்று, இச் சங்கங்களும் ஓர் இயல்பான வளர்ச்சியைப் பெற்று வந்துள்ளன.

### (ii) ஊழியர்கள் கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்களின் தற்போதைய நிலைமை

30—6—72 ஆம் தேதியன்று, இந்தியாவில், 50.19 லட்ச உறுப்பினர்களைக் கொண்ட, 11,404 ஊழியர்கள் கூட்டுறவுக் கடன்

வசதிச் சங்கங்க ளிருந்தன. இச் சங்கங்களின் எண்ணிக்கை, மராட்டியம், உத்தரப் பிரதேசம், குஜராத், மேற்கு வங்காளம், தமிழ்நாடு, ஆந்திரப் பிரதேசம், கர்னாடகம் ஆகிய மாநிலங்களில் பெரிதாக இருந்தது. இந்த 11,404 சங்கங்களின், செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் 30—6—72ஆம் தேதியன்று, ரூ. 79.3 கோடியாக இருந்தது. சங்கங்கள் வசமிருந்த வைப்புகள் ரூ. 133.50 கோடிக் கிருந்தன. அவைகளின் மொத்த நடைமுறை மூலதனம் ரூ. 279.83 கோடியாக இருந்தது. அவைகளின் காப்பிருப்புகள் ரூ. 21.8 கோடியாக இருந்தன. அவை ரூ. 212·15 கோடி அளவிற்கு உறுப்பினர்களுக்குக் கடன் வழங்கின. 30—6—72ஆம் தேதியன்று, அவற்றில் நிலுவையிலிருந்த பாக்கி ரூ. 204·73 கோடியாக விருந்தது. நிலுவைப் பாக்கிக் கடன்களில், ரூ. 6.64 கோடிக்குத் தவணை தவறிய பாக்கிகளிருந்தன. 1970ஆம் ஆண்டிலும், 1972ஆம் ஆண்டிலும், இச் சங்கங்களின் முன்னேற்றத்தைக் காண்பிக்கும் ஒரு விவரப் பட்டியல் கீழே தரப்பட்டிருக்கிறது.

**இந்தியாவில் ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்கள் விவரப் பட்டியல்**

ரூபாய், கோடிக் கணக்கில்

| | | 1970 | 1972 |
|---|---|---|---|
| 1. | எண்ணிக்கை | 10,264 | 11,404 |
| 2. | உறுப்பினர்கள் (ஆயிரக்கணக்கில்) | 44.67 | 50.19 |
| 3. | பங்கு மூலதனம் | 64.24 | 79.38 |
| 4. | காப்பிருப்புகள் | 17.49 | 21.82 |
| 5. | வைப்புகள் | 109.86 | 133.50 |
| 6. | வாங்கப்பட்ட இதரக் கடன்கள் | 12.97 | 17.55 |
| 7. | நடைமுறை மூலதனம் | 204.57 | 279.83 |
| 8. | வழங்கப்பட்ட கடன்கள் (69—70) | 166.81 | 212.15 (71—72) |
| 9. | கடன்கள் நிலுவை | 167.08 | 204.73 |
| 10. | தவணை தவறிய கடன்கள் | 4.66 | 6.64 |

கீழ்வரும் விவரப் பட்டியலில் தமிழ்நாட்டில் ஊழியர்கள் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சி குறிக்கப்பட்டிருக்கின்றது.

## விவரப் பட்டியல்

ரூபாய், இலட்சக் கணக்கில்

| | | 1969 ஜூன் இறுதியில் | 1972 ஜூன் இறுதியில் |
|---|---|---|---|
| 1. | சங்கங்களின் எண்ணிக்கை | 907* | 956 |
| 2. | உறுப்பினர்களின் எண்ணிக்கை | 44,12,48 | 5.26 |
| 3. | செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் | 529.89 | 772.29 |
| 4. | காப்பிருப்புகளும், இதர நிதிகளும் | 155.84 | 217.13 |
| 5. | வாங்கப்பட்ட கடன்கள் | 332.82 | |
| 6. | வைப்புகள் | 1854.32 | 2718.75 |
| 7. | நடைமுறை மூலதனம் | 2872.87 | 4535.56 |
| 8. | உறுப்பினர்களுக்கு வழங்கப்பட்ட கடன்கள் | 3613.16 | 5205.29 |
| 9. | கடன் நிலுவை | 2672.61 | 3907.19 |
| 10. | தவணை தவறிய கடன்கள் | 54.89 | 73.53 |

* 30—6—69ஆம் தேதியன்று இருந்த 907 சங்கங்களில், அரசாங்க ஊழியர்களுக்கான தனிப்பட்ட சங்கங்கள் 221-ம், உள்ளாட்சி மன்றங்கள், நகராட்சி மன்றங்கள் ஆகியவைகளின் ஊழியர்களுக்கான சங்கங்கள் 260-ம், வாணிகக் கழகங்கள், இதர வணிக நிறுவனங்கள் ஆகியவைகளின் ஊழியர்களுக்கான சங்கங்கள் 158-ம், துப்புரவுப் பணியாளர்களுக்கான சங்கங்கள் 14-ம், பல்வகை விதமான சங்கங்களின் ஊழியர்களுக்கான சங்கங்கள் 254-மிருந்தன.

வங்கித் தொழில் ஒழுங்காற்றுச் சட்ட (1965) நீடிப்பின் விளைவாக, ஓர் இலட்ச ரூபாய்க்கு மேற்பட்ட பங்கு மூலதனத்தையும், காப்பிருப்புகளையும் வைத்துக்கொண்டு, உறுப்பினரல்லாதவர்களிடமிருந்து வைப்புகளையுங்கூடப் பெறுகின்ற ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்கள், 1966ஆம் ஆண்டில், அச் சட்டத்தின் அதிகாரத்திற்குள் வந்தன. அத்தகைய சங்கங்கள், தங்களை வங்கிகளென்று, பெயரை வைத்துக்கொள்ள வேண்டியிருந்தது. ஆனால், அச் சட்டத்தில் நிருணயிக்கப்பட்ட ரொக்கத்தையும், காப்பிருப்பையும், ரொக்கமாக்கக் கூடிய சொத்துகளையும் பராமரிப்பதற்குச் சங்கடப்

பட்ட ஊழியர் சங்கங்களில் சில, அச் சட்டத்தின் அதிகாரத்திற்குப் புறம்பாகச் செயற்படும்பொருட்டு, உறுப்பினர்களல்லாதவர்களிடமிருந்து வைப்புகளைப் பெறுவதற்கான சரத்தை நீக்கித் தங்கள் துணைவிதிகளைத் திருத்தம் செய்தன. 1956 ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்களுள், 20 சங்கங்கள் 1972ஆம் ஆண்டுச் சூன் 30ஆம் தேதியன்று வங்கித் தொழில் ஒழுங்குமுறைச் சட்டத்தின் அதிகாரத்தின்கீழ் வந்தன.

### 3. ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்களின் பொதுவான செயற்பாடு (General Working of The Employees Credit Socities)

ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்கள், பொதுவாக, வரையறுக்கப்பட்ட பொறுப்பைத் தழுவுகின்றன. அமைப்பிலும், நிருவாகத்திலும், அவைகள் நகர வங்கிகளை ஒத்திருக்கின்றன. அரசாங்க இலாக்காக்கள், உள்ளாட்சி நிறுவனங்கள், வாணிகக் கழகங்கள் முதலியவை போன்ற நிறுவனங்களின் ஊழியர்கள், இவ் வகைச் சங்கங்களில் தங்கள் அங்கத்துவத்தின் பயனாகத் தங்கள் குடும்பச் செலவுகளுக்காகவும், இதரச் செலவுகளுக்காகவும் கடன் வசதிகளைப் பெறுகின்றனர். அவர்கள் தங்கள் பங்கு மூலதனத்தைப் பலமுறை தவணைகளில் செலுத்துவதற்கு அடிக்கடி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இச் சங்கங்களில் வெளிக் கடன் வாங்குதல், ஒப்பிடும் வகையில் குறைந்ததாக இருக்கின்றது. உறுப்பினர் கடன்களுக்கு நபர் ஜாமீன் ஆதாரம் அதிகமாக விரும்பப்படுகிறது. கடன்கள், சாதாரணமாக, 36 மாத உச்சக் காலவரைக்குள் திருப்பிச் செலுத்தப்பட வேண்டியவையாக இருக்கின்றன. அநேக சங்கங்கள், தங்கள் உறுப்பினர்களுக்கு வேலையளிப்பவர்களுக்கு (Employers), உறுப்பினர்கள் சம்பளத்திலிருந்து சங்கத்தின் பாக்கிகளைப் பிடித்துக் கொள்வதற்கு அதிகாரமளிக்கின்றன. அந்த ஏற்பாட்டின் மூலம், உறுப்பினர்கள் கடன் தவணைகளைச் செலுத்துவது உறுதிப்பாடு செய்யப்படுகின்றது. உறுப்பினர்கள், பொதுவாகத் தங்கள் கடன்களைக் காலம் தவறாமல் திருப்பிச் செலுத்துவதை உறுதிப்படுத்துவதற்கு உதவியாக இருக்கிறது என்று, இந்த ஏற்பாட்டை ஏற்றுக் கொள்கிறார்கள். கடன் வசதியளிப்பது மட்டுமன்றிச் சில சங்கங்கள் நுகர்பொருள்கள் விநியோகத்தையும் மேற்கொள்கின்றன.

### 4. ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்களில் சிக்கனத்தின் முக்கியத்துவம் (Importance of Thrift in Employees Credit Socities)

ஊழியர்கள் சங்கங்களின் மேலான நோக்கம், தங்கள் உறுப்பினர்களுக்கு எளிதானதும், மலிவானதுமான கடன்

வசதியை வழங்குவதைக் காட்டிலும், முக்கியமாக, சம்பளம் பெறும் உறுப்பினர்க ளிடையேயும், கூலி ஊதியம் பெறும் உறுப்பினர்க ளிடையேயும் அவர்கள் வருவாய்களிலிருந்து ஒரு பகுதியை ஒவ்வொரு மாதமும் ஒதுக்கி வைப்பதன் மூலம் சேமித்து வைக்கும் பழக்கங்களை அவர்களுக்குக் கற்பித்து அவர்களிடையே சிக்கனத்தை வளர்ப்பதாகும். சம்பளம் வாங்குபவர்க்குத் தேவைப்படுவது சிக்கனமே. ஆகையால், ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்கள், உறுப்பினர்கள் நலன்களை முன்னிட்டு, அவர்களுக்குக் கடன் வழங்குவதைக் கட்டுப்படுத்தி, சிக்கனத்தை வளர்த்து, இதர நடவடிக்கைகளை மேற்கொள்ளும் வகையில், தங்கள் வாணிகத்தை ஒழுங்குபடுத்துவதற்கு நடவடிக்கைகளைத் திட்டம் செய்ய வேண்டும். இல்லாவிடில், கடன் வாங்கும் வாய்ப்பானது மேலும் மேலும் கடன் வாங்குவதற்கு ஆசையைத் தூண்டுகிறது என்ற ஒரு துரதிஷ்டமான நிலை யேற்படுகிறது. ஆகையால், இச் சங்கங்களின் ஒரு சிறப்பு அம்சமானது, உறுப்பினர்களின் சம்பளத்திற்கேற்ற அளவில் கட்டாயச் சேமிப்புகள் மூலம் சிக்கன வைப்புகளை அமைத்து வளர்க்கும் முறையாகும்.

இச் சங்கங்கள் சிக்கன வைப்புகள் வடிவில் பெருந் தொகைகளைச் சேர்த்திருக்கின்றன.

## 5. ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்களின் செயற்பாட்டின் முக்கியக் கூறுகள் (Important Features in the working of Employee's Credit Societies)

### (அ) சிக்கன நடவடிக்கைகள்

சிக்கன வளர்ச்சி என்ற தங்கள் பிரதான நோக்கத்தை நிறைவேற்றுவதற்குத் தங்கள் உறுப்பினர்களிடமிருந்து, ஒவ்வொரு மாதமும் 50 பைசாவிலிருந்து 50 ரூபாய் வரைக்கும் பரவிக் கொண்டிருக்கும் விகிதங்களில், கட்டாயச் சந்தாக்களை வசூலிப்பதற்கான ஒரு சரத்துத் தங்கள் துணை விதிகளில் அடங்கியிருக்கிறது. இந்த முறையின்கீழ், உறுப்பினர்கள் ஒவ்வொரு மாதமும் 'சிக்கன வைப்புகள்' (Thrift Deposits) என்று வழங்கப்படும், ஒரு வாபஸ் பெற முடியாத நிதிக்குச் சந்தாக்கள் கொடுத்து வருகின்றனர். அவர்கள் கொடுக்கும் அத்தகைய சந்தாத் தொகை, அவர்கள் வாங்கும் சம்பளத்தை அல்லது கூலியை அனுசரித்துத் தரப்படுத்தப் படுகிறது. கடன் தவணைகள், பங்கு மூலதனத் தவணைகள் முதலியன போன்று, அதே மாதிரியான வகையில், இச் சந்தாக்கள் ஒவ்வொரு மாதமும் உறுப்பினர்களின் சம்பளத்திலிருந்து வசூலிக்கப்பட வேண்டும். தன்

காயமான சம்பளத்தில் 25 சதவிகிதம் உச்சத்திற் குட்பட்டு நிர்ணயிக்கப்பட்ட விகிதத்திற்கு அதிகமான விகிதத்தில் ஓர் உறுப்பினர் சந்தாச் செலுத்த உரிமையுள்ளவர். இச் சிக்கன நிதி, ஒருவர் தாம் சங்கத்தில் உறுப்பினராக இல்லாமல் நின்றுவிடும் வரைக்கும், ஈடு செய்தல் மூலமாகவோ ரொக்கமாகவோ அவருக்குத் திருப்பிச்செலுத்தப்படக் கூடாததாகும். இதர வைப்பு விஷயத்தில் போன்று, சிக்கன வைப்புகளின் ஆதாரத்தின்பேரில் கடன்கள் அளிக்கப்படுகிறதில்லை. மாதாந்தரச் சிக்கனச் சந்தாக்களின்பேரில் வட்டி அனுமதிக்கப்படுகிறது. இந்த வட்டியானது, ரொக்கத்திலாவது அல்லது உறுப்பினரின் கடன் பாக்கிகளுக்காக ஈடுசெய்தல் மூலமாவது செலுத்தப்படலாம். திருப்பிச் செலுத்தப்படக் கூடாத இந்தச் சிக்கன வைப்புகளுக்குக் கட்டாயச் சந்தா கொடுப்பதுமன்றி, கல்வி, மருத்துவச் செலவு முதலியன போன்ற குறிப்பிட்ட நோக்கங்களுக்காக வாபஸ் பெறக்கூடும் சிக்கன வைப்புகளுக்குச் சந்தா அளிக்கவும்கூட உறுப்பினர்கள் ஊக்குவிக்கப்படுகின்றனர். எனினும், சில சங்கங்கள், உறுப்பினர்கள் ஆயுள் காப்பீட்டுக் கட்டணங்களைச் செலுத்துவதற்காகவும், வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் வீட்டுமனைகளை வாங்குவதற்காகவும், சிக்கன நிதியிலிருந்து ஒரு பகுதியை உபயோகிப்பதற்கு உறுப்பினர்களை அனுமதிக்கின்றன.

ஊழியர்கள் கடன்வசதிச் சங்கங்களில் சிக்கன வளர்ச்சியின் முக்கியத்துவத்தை முன்னிட்டு, தமிழ்நாட்டில் சந்தானம் குழுவினர், சங்கங்களில் சிக்கனப் பழக்கத்தை வளர்த்து அதைப் புலப்படுத்தும் நோக்கத்துடன் சில பரிந்துரைகளை வழங்கியுள்ளனர். ஓர் உறுப்பினரின் சிக்கன வைப்பானது அவர் பணியிலிருந்து ஓய்வு எடுக்கும் சமயத்தில் அவருடைய உபயோகத்திற்காக உத்தேசிக்கப்பட்டுள்ளதாலும், அது வருங்காலச் சேமிப்பு நிதியின் தன்மையி லிருப்பதாலும், அது நீதிமன்றத்தின் எந்தத் தீர்ப்பாணை அல்லது உத்தரவின்கீழ் ஜப்திக்குட்படக் கூடாது என்று அக் குழுவினர் கருதினர். மேலும், வருமான வரிக் காரியங்களுக்காக, அது வருங்காலச் சேமிப்பு நிதித் தொகையளிப்புகள், ஆயுள் ஈட்டுறுதிக் கட்டணங்கள், அஞ்சலகக் குவியும் வைப்புகள் (Postal Cumulative Deposits) போன்று, அவை மாதிரியாகவே பாவிக்கப்பட வேண்டும் என்றும் அக் குழுவினர் கருதினர். வீட்டு மனை வாங்குவதற்காகவும் அல்லது வீடு கட்டுவதற்காகவும் அல்லது காப்பீட்டுக் கட்டணங்களைச் செலுத்துவதற்காகவும், தாங்கள் உறுப்பினராக இருக்கும் காலத்தில்கூடத் தங்கள் சிக்கன நிதியின் ஒரு பகுதியை உபயோகிப்பதற்கு ஊழியர்களின் கடன் வசதிச் சங்கங்களின் உறுப்பினர்கள் அனுமதிக்கப்பட வேண்டு

மென்று அக் குழுவினர் கருதினாலுங்கூட, சிக்கன நிதியிலிருந்து திரும்ப வாங்க அனுமதிக்கப்படும் தொகையானது எந்த ஒரு சமயத்திலும் சிக்கன நிதியில் சேர்ந்திருக்கும் தொகையில் 50 சதவிகிதத்திற்கு மேற்படக்கூடா தென்றும் அவர்கள் கருதினர். மேலும், வீட்டுமனை வாங்குதலுக்காகவும், வீடு கட்டுவதற்காகவும் அவ்வாறு திருப்பிப் பெறுதல் ஒரு தடவை மட்டுந்தான் அனுமதிக்கப்படலாம்.

## (ஆ) உறுப்பினர்களுக்குக் கடன் வழங்குதல் (Loans to Members)

இச் சங்கங்களில் வழங்கப்படும் கடன்கள் பெரிதும் நுகர்தல் காரியங்களுக்காகவே இருக்கின்றன. தேவைக்கு மேற்பட்டுக் கடன் வாங்கும் போக்கினைத் தடை செய்ய வேண்டும். எனவே, கடன் வழங்கும் விஷயத்தில் இச் சங்கங்களுக்குச் சில கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டுள்ளன. பொதுவாக, 2,000 ரூபாய் உச்ச வரம்பிற்குட்பட்டு, உறுப்பினர்களின் அடிப்படைச் சம்பளமும் அகவிலைப் படியும் சேர்ந்து அதற்கு 5 மடங்குகள் விகிதம் அல்லது அவர்களின் பங்கு மூலதனத்தின் 5 மடங்குகள் விகிதம், இதில் எது குறைவோ அந்த விகிதத்தில் உறுப்பினர்களுக்குக் கடன்கள் வழங்கப்படுகின்றன. இந்த உச்ச வரம்பு சில சங்கங்களில் மேலும் அதிகமாகவும் இருக்கிறது. கடன் தொகை, பங்கு மூலதனம் அல்லது சம்பளத்தின் 8 மடங்குகள் வரைக்கும் போகலாம். ஆனால், அக் கடன் தொகையின் கூடுதலான பகுதி, வீட்டு வசதிச் சங்கங்களில் உறுப்பினர்கள் பங்கு மூலதனம் செலுத்துவதற்காக உபயோகிக்கப்பட வேண்டும் என்ற நிபந்தனையுண்டு. ஒருசில சங்கங்கள், வீடு கட்டுவதற்காகவும், மனை அல்லது வீடு வாங்குவதற்காகவும், 5,000 ரூபாய் உயர்ந்த வரம்பிற்குக் கடன்கள் வழங்குகின்றன. அத்தகைய சந்தர்ப்பங்களில், கடன் தொகையில் பத்தில் ஒரு பகுதி, பங்கு மூலதனமாகச் செலுத்தப்பட வேண்டும். மற்றும், அந்த உறுப்பினர், 60 மாதங்களில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய இந்தச் சிறப்புக் கடன் முழுவதையும் திருப்பிச் செலுத்தும்வரை, அவருடைய மொத்தப் பங்குமூலதனம் வாபஸ் பெறக்கூடாது. ஓர் உறுப்பினர், ஏற்கெனவே வாங்கியுள்ள கடன் தொகையில் குறைந்த பட்சம் மூன்றில் ஒரு பகுதி திருப்பிச் செலுத்தும் வரை அல்லது அந்தக் கடன் வழங்கப்பட்ட தேதியிலிருந்து நான்கு மாதங்கள் கழிவதற்கு முன்பு, ஓர் இரண்டாவது கடன் அளிக்கப்பட மாட்டார். எந்த உறுப்பினருக்கும் இரண்டு கடன்களுக்கு மேற்பட்டு நிலுவைக் கடன்கள் இருக்கக் கூடாது. ஓர் உறுப்பினர் தம் சொந்தப் பொறுப்பின் பேரில் சம்பள அளவு வாங்கியுள்ள கடன்கள் இந்த வரம்பில் சேர்க்கப்படுகிறதில்லை. கடன்கள், 36 மாதங்கள்

வரைக்கும் பரவிக் கொண்டிருக்கும் காலவரைகளுக்குக் கொடுக்கப்படுகின்றன; பெரும்பாலும் அவை நபர் ஜாமீன் பேரில் கொடுக்கப்படுகின்றன.

இச் சங்கங்களில், உறுப்பினர்களிடமிருந்து கடன்களைத் திரும்பப் பெறுதல், ஒப்பிடும் ரீதியில் எளிதானதாகும். உறுப்பினரின் கடன்கள், அவருடைய சம்பளம் அல்லது கூலியிலிருந்து பிடித்தல் மூலம், அவர் வேலை செய்யும் இடத்தில் அவருக்குச் சம்பளம் அல்லது கூலிப் பட்டுவாடாச் செய்யும் அலுவலர்களால், பங்கு மூலதனம், சிக்கன வைப்புகள் முதலியன போன்ற அவருடைய பாக்கிகளுடன் சேர்த்து வசூலிக்கப்படுகின்றன. உறுப்பினர்கள் தங்களுடைய மாதாந்தரச் சம்பளம் அல்லது கூலியிலிருந்து பங்கு மூலதனம் அல்லது கடன் அல்லது இதரப் பாக்கிகளைப் பிடித்துக் கொள்வதற்கான ஓர் ஒப்பந்தத்தைச் சங்கத்திற்கும், தொடர்பான சம்பளப் பட்டுவாடா அலுவலர்க்கும் நிறைவேற்றிக் கொடுக்கின்றனர். 1961ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் பிரிவு 40-ன் கீழ், சம்பளப் பட்டுவாடா அலுவலர் சங்கத்தின் வேண்டுகோளின் பேரில் சம்பளத்திலிருந்து அவசியமான பிடிப்புகளைச் செய்து, அவ்வாறு வசூலிக்கப்பட்ட தொகைகளைச் சங்கத்திற்கு அனுப்பி வைக்கக் கடமைப்பட்டிருக்கின்றனர். சட்டத்திலுள்ள இச் சரத்து உறுப்பினர்களிடமிருந்து கடன் தொகைகள் வசூலித்தலைப் பெரிதும் வசதிப்படுத்தியுள்ளதன் விளைவாக, நிலுவைக் கடன்களுக்குத் தவணை தவறிய பாக்கிகளின் சதவிகிதம் குறைந்ததாக உள்ளது. 30—6—72-ஆம் நாளன்று, இச் சதவிகிதம் 6 ஆக இருந்தது. மற்றும், தேவைக்கு அதிகமான கடன் வாங்குதலைத் தவிர்க்கும்பொருட்டு, சட்டப் பிரிவு 40-ன் கீழ், உறுப்பினர்களின் ஊதியத்தில் 40 சதவிகித அளவுக்கு மட்டுந்தான் கடன் வசூல்கள் இருக்க வேண்டும். இல்லாவிடில் உறுப்பினர்கள் தங்கள் சம்பள தினத்தன்று, தங்கள் சம்பளம் அல்லது கூலியிலிருந்து தங்கள் பாக்கிகள் ஈடுசெய்யப்பட்ட பிறகு ஒரு சிறு பகுதிச் சம்பளம் அல்லது கூலியைத்தான் பெறுவார்கள். இது அவர்களின் திறமையிலும் எதிர்காலத் தோற்றத்திலும் ஒரு நெறிகேட்டை விளைவிக்கும்.

கடன் வசூல்களை மேலும் பயனுறுதியாகச் செய்யும் பொருட்டு, தமிழ் நாட்டில் சந்தானம் குழுவினர் சில பரிந்துரைகளைச் செய்துள்ளனர். தற்போது, ஓர் உறுப்பினரின் கடன் தவணையை வசூலித்தல் அவர் சம்பளத்திலிருந்துதான் செய்யப்பட்டு வருகிறது. ஓர் உறுப்பினர் தம் கடன் காலவரை

முடிவதற்கு முன்பு, பணியிலிருந்து ஓய்வுபெறும்போதும், அல்லது அவர் வேலையிலிருந்து அகற்றப்படும்போதும், அல்லது அவர் தாமே வேலையை விடும்போதும், அவரிடமிருந்து கடன் பாக்கி வசூலிக்கப்பட வேண்டியிருக்கிறது. பொதுவாக அவர் பணிக்கொடைக்கு உரிமையுள்ளவர். பணிக்கொடையிலிருந்து (Gratuity) பிடித்தலுக்கான ஏற்பாடு செய்யும்பொருட்டு, கடன்கள் ஒப்பளிக்கப்படும் சமயத்தில் உறுப்பினர்களால் நிறைவேற்றப்படும் ஒப்பந்தங்களில் அத்தகைய பிடித்தங்களைச் செய்தலையும் குறிப்பாகச் சேர்த்துக் கொள்வதற்குத் தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 40 ஆவது பிரிவு திருத்தப்பட வேண்டுமென்றும் அக் குழுவினர் பரிந்துரை செய்துள்ளனர். மற்றும், தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 40ஆவது பிரிவின்கீழ், ஓர் உறுப்பினர் ஊதியத்திலிருந்து ஒரு சங்கத்தின் பாக்கிகளை வசூலித்தல் உறுப்பினரின் வேலை கொடுப்பவருடைய கடமையாக இருந்தாலும், வெளி மாநிலங்களில் வசிக்கும் அல்லது வெளி மாநிலங்களுக்கு மாற்றப்படும் உறுப்பினர்கள் விஷயத்தில் இந்தச் சரத்துப் பயனுள்ளதாக இல்லை. ஆகையால், எந்த மாநிலத்தில் பதிவு செய்யப்பட்டாலும் சங்கத்தின் உறுப்பினர்களிடமிருந்து பாக்கியை வசூல் செய்வதற்கான ஒரு சரத்து ஒவ்வொரு மாநிலக் கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்திலும் இருக்க வேண்டியது அவசியப்படுகிறது. அத்தகைய சட்டச் சரத்தை நிறைவேற்றுமாறு இந்திய அரசுங்கூட எல்லா மாநிலங்களுக்கும் யோசனை கூறி யிருக்கின்றது. தமிழ்நாட்டில் சந்தானம் குழுவினரும், தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் சட்டத்தின் 40ஆவது பிரிவைத் திருத்தம் செய்வதன்மூலம் இந்தச் சரத்து ஏற்படுத்தப்பட வேண்டுமென்று பரிந்துரை செய்துள்ளனர்.

## (இ) நிருவாகம் (Management)

ஒரு நகர வங்கி விஷயமும் ஊழியர் கடன் வசதிச் சங்கத்தின் நிருவாகமும் ஒரே மாதிரியான தாகும். எனினும், இவ்வகைச் சங்கங்கள் விஷயத்தில், அலுவலகங்களின் முதல்வர்கள், நிறுவனங்களின் தலைவர்கள் முதலியவர்களைச் சங்கங்களின் அலுவலால்-தலைவர்களாக (Ex-Officio President), சங்கங்களின் நிருவாகத்துடன் இணைப்பது பழக்கமாக இருந்துவருகிறது. சங்கத்தின் நிருவாகக் குழுவில் அலுவலகத் தலைவர் இருப்பது, சங்கத்தின் செயற்பாட்டிற்கு ஒரு குற்றமற்ற பலத்தை யளிக்க எதிர்பார்க்கப்படுகிறது. ஆனல், நிருவாகக் குழுவில் அலுவலகத் தலைவர்க ளிருப்பது சங்கத்தின் சுதந்திரமான மக்களாட்சிச் செயற்பாட்டைத் தடை செய்யக் கூடும் என்ற ஒரு கருத்தும்

நிலவி வருகிறது. சங்கத்தின் பாக்கிகளை உறுப்பினர்களின் சம்பளம் அல்லது கூலியிலிருந்து பிடித்தம் செய்வது சம்பளப் பட்டுவாடா அலுவலர்களின் கடமையாகும் என்ற ஒரு சரத்துச் சட்டத்தில் சேர்க்கப்பட்ட பிறகு, அலுவலகத் தலைவர்கள் சங்கங்களின் அலுவலால் தலைவர்களாக இருக்கும் தேவை குறைந் திருக்கிறது. சில சந்தர்ப்பங்களில், வாணிக நிறுவனங்கள், ஆலைகள், அரசாங்க அலுவலகங்கள் ஆகியவைகளின் நிரு வாகங்கள், சங்கங்களின் அலுவல்களைச் சங்கங்களே நிருவாகம் செய்வதற்கு அவைகளிடத்திலேயே விட்டுவிடுவதற்கு அதிகமாக விரும்புகிறார்கள். இவ் விஷயத்தில் அதிக முக்கியமானது, தக்க சந்தர்ப்பங்களில், குறிப்பாக, புதியதாக நிறுவப்பட்ட ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்களில், வேலை கொடுக்கும் நிறுவனங்கள், வாடகையில்லாத அலுவலக இடவசதியையும், வட்டியில்லாத அல்லது ஒரு குறைந்த விகித வட்டியில் நடைமுறை மூலதனம் போன்ற நிதியுதவியையும் அச் சங்கங்களுக்கு அளிக்க வேண்டும். அவை சங்கங்களுக்கு வெளியேயிருந்துங்கூட அச் சங்கங்களுக்குப் பெருமளவு உதவக்கூடும்.

### (ஈ) உறுப்பாண்மை (Membership)

ஓர் ஊழியர் கடன் வசதிச் சங்கத்தில் ஒரு நிறுவனத்தின் எல்லா ஊழியர்களும், தங்கள் தொழிலாளர் சங்கம் அல்லது அரசியல் அல்லது இதரக் கட்டுப்படுத்தும் இணைப்புகள் ஆகியவைகளுக்கு எத்தவிதமான தொடர்பு மில்லாமல் உறுப் பினர்களாகச் சேரலாம். ஒரு நிறுவனத்தின் எல்லா ஊழியர் களுக்கும் சங்கத்தின் நன்மைகள் எந்தவிதப் புறம்பான கவனிப்பின் அடிப்படையிலுள்ள வேற்றுமைகள் எதுவுமில்லாமல் நீடிக்கப்பட வேண்டும். சங்கத்தின் அங்கத்துவத்தை அல்லது சேவைகளை, ஒரு குறிப்பிட்ட தொழிலாளர் சங்கத்தை அல்லது ஓர் அரசியல் கட்சியைச் சார்ந்த ஊழியர்களைக் கட்டுப் படுத்தும் எவ்விதப் போக்கும் மிகவும் விரும்பக்கூடாத ஒரு வளர்ச்சியாக இருக்குமாதலால், அதைப் பலமாகத் தடை செய்ய வேண்டும்.

### (உ) ஊழியர்கள் கடன் வசதிச் சங்கங்கள் புரியும் சேவைகள் (Services rendered by the Employee's Credit Societies)

சிக்கனத்தை வளர்ப்பதன் மூலமும், குடும்பச் செலவுகளுக் காகவும், இதரச் செலவுகளுக்காகவும் கடன் வழங்குதல் மூலமும், அதிகமான வட்டி விகிதங்களை விதிக்கின்ற வட்டிக்குக் கடன் கொடுப்பவர்களின் பிடியிலிருந்து ஊழியர்களைக் காப்பாற்றுவதன்

மூலமும், ஊழியர்கள் கடன்வசதிச் சங்கங்கள் உறுப்பினர்களுக்கு ஒரு மிகப் பயனுள்ள சேவையைப் புரிகின்றன. ஒரு மேலான வாழ்க்கையை நடத்தி, வருங்காலத்திற்காக ஒரு சேமிப்பு ஏற்பாட்டைச் செய்வதற்கும் அவை உறுப்பினர்களுக்கு உதவுகின்றன. இச் சங்கங்களில் சில, உறுப்பினர்களுக்குக் குடும்பத் தேவைப் பொருள்கள், இதரத் தேவைப் பொருள்கள் ஆகியவைகளின் விநியோகத்தை மேற்கொள்கின்றன. தமிழ்நாட்டில் 16 சங்கங்கள் நுகர்பொருள்கள் விநியோகத்தை மேற்கொண்டன. அவை 1971–72ஆம் ஆண்டில் சுமார் ரூ. 5·2 இலட்சம் மதிப்புள்ள நுகர்பொருள்களை விநியோகித்தன. நடுத்தர வகுப்பினருக்கும், குறைந்த வருவாய்பெறும் ஊழியர்களுக்கும், குறிப்பாக, தொழில் துறைத் தொழிலாளர்களுக்கும், அவர்களின் பொருளாதார, சமுதாய நிலைமையை மேம்படுத்துவதற்கும் இச் சங்கங்கள் பேருதவியாக இருந்து வருகின்றன.

## 6. இதர விவசாயமல்லாத கடன் வசதிச் சங்கங்கள் (Other Non-Agricultural Credit Societies)

விவசாயமல்லாத இதர கடன் வசதிச் சங்கங்கள் 30—6—72 ஆம் நாளன்று, 3,474 எண்ணிக்கையில் இருந்தன. இச் சங்கங்களின் மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை 5,67,000 ஆக இருந்தது. அவைகளின் பங்குமூலதனம் ரூ. 5·12 கோடியாக இருந்தது. அவைகள் வசம் ரூ. 5·47 கோடி அளவிற்கு வைப்புகளிருந்தன. அவைகளின் நடைமுறை மூலதனம் ரூ. 23·25 கோடியாக இருந்தது. இச் சங்கங்கள் ரூ. 10·34 கோடிக்குக் கடன்கள் வழங்கி யிருந்தன. அவற்றில் ரூ. 13·8 கோடிக்கு நிலுவைக் கடன்களும், ரூ. 3·2 கோடிக்குத் தவணை தவறிய பாக்கிகளுமிருந்தன. இந்தியாவில் 30—6—70ஆம் நாளன்றும், 30—6—72 ஆம் நாளன்றும், தமிழ்நாட்டில் 30—6—72ஆம் நாளன்றும் இச் சங்கங்களின் நிலைமையைப் பற்றிய விவரப் பட்டியல் அடுத்த பக்கத்தில் 'ஊழியர்களின் சங்கங்களைப்பற்றிய விவரப் பட்டியல்' எனும் தலைப்பிட்டுத் தரப்பட்டுள்ளது.

மீனவர்கள், விஸ்வகர்மர்கள், நெசவாளர்கள் முதலியவர்கள் போன்ற ஒரு குறிப்பிட்ட சமூகத்தைச் சார்ந்த கைவினைஞர்களுக்கான சங்கங்களும், அல்லது அரிசனங்களைப் போன்ற குறிப்பிட்ட சாதியினர்களுக்காக வீட்டுமனைகளை ஒதுக்கி, அவ் வீட்டுமனைகளின் மதிப்பைக் கடன்களாக ஒருசில வருடக் காலவரைக்குள் அவர்களிடமிருந்து வசூலிக்கும் சங்கங்களும், தஞ்சாவூர், மதுரை மாவட்டங்களிலுள்ள கள்ளர்கள்போன்ற சில பின்தங்கிய சமூகத்

தினர் நலன்களுக்காகக் கடன் வசதிச் சங்கங்களுமுள்ளன. இச் சங்கங்கள் பிரதமக் கடன் வசதிச் சங்கங்கள் பாணியில் வேளாண்மை யல்லாத வேறு பிழைப்புகளில் ஈடுபட்டிருக்கும் மக்களுக்காகச் செயற்படுகின்றன. அவை பொதுவாக உறுப்பினர் களின் பொருளாதார நிலைமைகளை மேம்படுத்துவதற்குச் சேவை புரிந்து வருகின்றன.

**ஊழியர்களின் சங்கங்களைப் பற்றிய விவரப் பட்டியல்**

| | | 30—6—70 இந்தியா முழுவதிலும் | 30—6—72 இந்தியா முழுவதிலும் | 30—6—72 தமிழ்நாடு முழுவதிலும் |
|---|---|---|---|---|
| 1. | எண்ணிக்கை | 3,423 | 3,974 | 112 |
| 2. | உறுப்பினர்கள் (ஆயிரக்கணக்கில்) | 550 | 567 | 48 |
| | | | (ரூபாய், இலட்சக் கணக்கில்) | |
| 3. | பங்கு மூலதனம் | 359 | 512 | 81.11 |
| 4. | காப்பிருப்புகள் | 175 | 215 | 10.47 |
| 5. | வைப்புகள் | 542 | 547 | 25.84 |
| 6. | வாங்கப்பட்ட இதரக் கடன்கள் | 513 | 532 | 47.62 |
| 7. | நடைமுறை மூலதனம் | 1,589 | 2325 | 195.86 |
| 8. | வழங்கப்பட்ட கடன்கள் (1969-70) | 9.72 | (71-72) 1034 | 74.32 |
| 9. | கடன்கள் நிலுவை | 1,182 | 1,377 | 98.34 |
| 10. | தவணை தவறிய கடன்கள் | 264 | 324 | 17.68 |

# 18. கூட்டுறவு விற்பனை வசதிச் சங்கங்கள்

## (Co-operative Marketing Societies)

### 1. விவசாய விற்பனை வசதியின் முக்கியத்துவம்

ஒழுங்கான மற்றும் திறமையான விற்பனை வசதியானது விவசாயநல முன்னேற்றத்திற்கு அத்தியாவசியமாக உள்ளது. 'விவசாயிகளின் தேவைகளைக் கொள்முதல் செய்தலும், அவர்களின் விளை பொருள்களை விற்பனை செய்தலும், விவசாயப் பண்ணைத் தொழிலில் அடிப்படையான நடவடிக்கைகளாகும். அவற்றின் முக்கியத்துவம், சம உடைமை முறையில் ஒழுங்குபடுத்தப்பட்ட ஒரு பொருளாதார அமைப்பில் இன்னும் மேலான முனைப்பானதாக இருக்க நேரிடும். இவ் விரண்டு கட்டங்களிலும், ஒரு நியாயமாக நடத்தப்படுதலைப் பெறுவதற்கு அவரால் முடியாமையின் காரணத்தால், சராசரியான விவசாயி தன் தொழிலின் முழுப் பலனையடைய மறுக்கப்படுகிறான்' (முதல் ஐந்தாண்டுத் திட்ட அறிக்கை). விற்பனை என்பது, மண்டியில் விளைபொருள்களின் விற்பனையைக் கூறுவது மட்டுமன்றி, விளைபொருள்கள் நுகர்வோரிடம் சேருவதற்காக அவை அடைய வேண்டிய எல்லாக் கட்டங்களையும், பத்ததிகளையும் கூட உள்ளடக்கியுள்ளது. பண்ணையிலிருந்து இறுதி நுகர்வோருக்கு விவசாய விளைபொருள்களைக் கொண்டு போவதற்குச் செய்யப்பட வேண்டிய எல்லா வாணிக நடவடிக்கைகளும் அதில் அடங்கியுள்ளன. பண்ணைகளிலிருந்து விற்பனை செய்யப்படக்கூடிய உபரியை வசூல் செய்தல், அவற்றை இடம் பெயர்த்தல், ஒன்றுசேர்த்தல், தரம் பிரித்தல், பதனப்படுத்துதல், சேமித்துவைத்தல், மற்றும் இறுதி நுகர்வோருக்கு விற்பனை செய்தல் போன்ற நடவடிக்கைகளை அது உள்ளடக்கியுள்ளது. வேளாண்மை பிரதானமானதாக உள்ள பொருளாதார அமைப்பையுடைய நம் நாட்டைப் போன்ற ஒரு நாட்டில், விவசாய விளைபொருள்களின் விற்பனைக்கான ஏற்பாடுகள் உயிர்ச்சக்தியான முக்கியத்துவத்தை வகித்துள்ளன.

### 2. கூட்டுறவு விற்பனைக்கான அவசியம்

விவசாய விளைபொருள்கள் பெரும்பாலும் வர்த்தகர்கள் மூலமாக விற்பனை செய்யப்படுகின்றன. பிரதமப் பயிரிடுபவர்

தம் விளைபொருள்களைப் பெருமளவு தம் கிராமத்திலேயே விற்று விடுகிறார். நகரங்களிலிருந்து வர்த்தகர்கள் விளைபொருள்களை வசூலிப்பதற்காகக் கிராமத்திற்கு வருகின்றனர், அல்லது தங்கள் பிரதிநிதிகள் மூலம் கிராமத்தில் கொள்முதல் செய்கின்றனர். இந்த விற்பனை முறையில், நகரங்களில் அமைந்துள்ள அங்காடிகளில் அவர்கள் தங்கள் விளைபொருள்களை விற்பனை செய்தால் தங்களுக்குக் கிடைக்கும் விலைகளைக் காட்டிலும் குறைந்த விலைகளை அவர்கள் பெற்றாலும், குடியானவர்களுக்குத் தங்கள் விளைபொருள்களைத் தூரத்துள்ள அங்காடிகளுக்குக் கொண்டுபோக வேண்டிய தொல்லை கிடையாது. ஒரு கிராமத் தொகுதியைத் தழுவும் மைய இடங்களில், வார அங்காடிகள் அல்லது வாரமிருமுறை அங்காடிகள் உள்ளன. இந்த அங்காடிகளுக்குக் குறிப்பிட்ட நாள்களில் குடியானவர்கள் தங்கள் விளைபொருள்களைக் கொண்டுவந்து, அங்குக் கொள்முதல் செய்வதற்காக வருகின்ற வர்த்தகர்களுக்கு விற்பனை செய்கின்றனர். பெருமளவில் பயிரிடுபவர்கள் தங்கள் விளைபொருள்களைப் பெரிய நகரங்களுக்கு விற்பனைக்காகக் கொண்டுவரலாம். இம் முறையானது, இடைத் தரகர்களைத் தவிர்த்துவிட்டுத் தங்கள் விளைபொருள்களுக்காக ஒரு மேலான விலையைப் பெறுவதற்கு அவர்களுக்கு வகைசெய்கிறது.

தனியார்துறை வர்த்தகத்திலுள்ள குறைபாடுகளிலிருந்தும் ஒழுங்கீனச் செயல்களிலிருந்தும் கூட்டுறவு விற்பனைக்கான அவசியம் எழுகின்றது. தனியார்துறை வர்த்தகர்கள் விற்பனை வாணிகத்தில் தங்களைப் பலப்படுத்திக் கொண்டும், தங்களுக்கே சொந்தமான வர்த்தக வழிகளை வைத்துக் கொண்டும், தங்களுக்கே சொந்தமான ஒருங்கிணைந்த ஓர் அமைப்பின் மூலமாக அங்காடியைக் கட்டுப்படுத்தியும், தெரியாமலிருக்கும் வண்ணம் விலைகளைத் திறமையாகக் கையாள்கின்றனர். பண்ணை விளைபொருள்களின்மீது ஒரு கட்டுப்பாட்டைப் பெறுவதற்கான கருவியாக வட்டித் தொழிலையுங்கூட அவர்கள் பயன்படுத்துகின்றனர். இவ் வர்த்தகர்களிடமிருந்து கடன் வாங்கியுள்ள குடியானவர்கள், எவ்விதமான பேரம் பேசும் சக்தியு மில்லாமல், தங்கள் விளைபொருள்களை, அவைகளுக்காக வர்த்தகர்கள் நிர்ணயிக்கும் எந்த விலைக்காகவும், வர்த்தகர்களுக்கு விற்றுவிடுவதற்குப் பெரும்பாலும் நிர்ப்பந்திக்கப்படுகின்றனர். அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவினர், இந்தியாவில் விற்பனை விஷயத்தில் தனியார்துறை வர்த்தகர்களின் வல்லமையுள்ள நிலைமையை விளக்கிப் பின்வருமாறு கூறியுள்ளனர்: 'அடிக்கடி பெரும்பாலும் பணத்தையும், செல்வாக்கையும், அங்காடியையும், போக்குவரத்தையும், தம் சுவாதீனத்தி லுடையராக இருக்கின்ற ஒருவருடன், தன்னால் முடியுமானால், பேரம் செய்து

கொள்ள வேண்டியதே குடியானவனின் நிலைமையாக வுள்ளது.' மற்றும்,அங்காடிகளில் கள்ள எடைகள், அளவுகள், மதத்திற்கும் தர்மத்திற்கும் தொடர்பான காரியங்களுள்ளிட்ட பல காரியங்களுக்காகத் தகாத முறையில் கழித்தல்கள், இடைத் தரகர்கள் மூலம் துணிமூடியின்கீழ்ப் பேரம் செய்யும் மொத்த விற்பனையாளர்களாலும், தரகர்களாலும் எடுக்கப்படும் மிகையான மாதிரிச் சரக்குகள் (Samples) ஆகிய ஏராளமான உதாரணங்களைக் காணலாம். இவையன்றியும், செயற்கைப் பற்றுக்குறையை உண்டுபண்ணுவதற்காகவும், விற்பனைக் காலத்தின்போது விலைகளை ஏற்றிக் காண்பிப்பதற்காகவும், ஊகவாணிகம், இருப்புச் சரக்குகளை நிறுத்தி வைத்தல் போன்ற பல்வேறு முறைகள் கையாளப்படுகின்றன. இவை யாவும், பயிரிடுபவன் தன் விளை பொருள்களுக்குரிய நியாயமான இலாபம் மறுக்கப்படுவதை விளைவித்துப் பயிரிடுபவருக்கும் நுகர்வோருக்குமிடையே ஏற்படும், ஏற்றப்படுத்தப்பட்ட விலைப் பரப்பின் காரணமாக நுகர்வோருங்கூட அவதிப்படுவதை விளைவிக்கின்றன. இந்த ஒழுங்கீனச் செயல்கள், ஒழுங்குமுறைப்படுத்தப்பட்ட அங்காடிகளுக்குத் (Regulated Markets) தொடர்பான சட்டங்களின் சரத்துகளால் பெருமளவு தடை செய்யப்பட்டுள்ளன. எனினும், 'நிறுவப்பட்டுள்ள ஒப்பிடும் வகையில் ஒருசில ஒழுங்குமுறைப்படுத்தப்பட்ட பெரும்பாலான அங்காடிகளில் விற்பனைத் தரங்கள் சீரடைந்திருந்தாலும், பணியாளர் தொகுதியும் நிறைவேற்றுதலும், எப்பொழுதுமே போதிய அளவுக்குக் கவனிக்கப்படாமலும் தீர்க்கப்படாமலுமிருந்த, இரண்டு பெரும் பிரச்சினைகளாக இருப்பதால், ஏராளமான ஒழுங்கீனச் செயல்கள் இன்னும் இவ் வங்காடிகளிலுங்கூட இருந்து வருகின்றன' என்பதை அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை வெளிப்படுத்தியது. 'மேலும், கிராம விற்பனையின்மீது யாதொரு கண்காணிப்பும் கட்டுப்பாடும் செலுத்தப்படுகிறதில்லை என்ற மிகப் பெரிய குறையுமுள்ளது'. அனைத்திந்தியக் கிராமக் கடன் ஆய்வுக் குழு (1969–All India Rural Credit Review Committee) விற்பனை வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள் பலப்படுத்தப்பட வேண்டுமென்றும், ஏனென்றால், அவை அரசின் விலை ஆதரவுக் கொள்கைகளை (Price support policies) நிறைவேற்றக் கூடிய முகமைகளாக அரசுக்குப் பயனுள்ளவையாக இருக்கக் கூடுமென்றும் பரிவுரை செய்தது. இச் சூழ்நிலைகளின் காரணமாகக் கூட்டுறவு விற்பனை, குடியானவரைத் தனியார் துறை வர்த்தகத்தின் கைப்பிடியிலிருந்து மீட்பதற்கு மிகச் சிறந்த ஒரு விடுவித்தல் மட்டுமன்றி அது ஒரே ஒரு விடுவித்தலாகவு முள்ளது. ஒரு சரியானதும் திறனுள்ளதுமான கூட்டுறவு விற்பனை

முறையின் அமைப்பு, பயிரிடுபவருக்கும் நுகர்வோருக்கு மிடையிலான விலைப் பரப்பைக் குறைப்பதன் மூலம் பயிரிடுபவர் தம் விளைபொருள்களுக்கு ஒரு நியாயமான விலையைப் பெறுவதற் குதவும்.

கூட்டுறவு விற்பனைக்குச் சாதகமாகவுள்ள இதரக் காரணங் களைப் பின்வருமாறு குறிப்பிடலாம்:

(i) அது, தனியார் வர்த்தகத்திற்கு ஒரு மாற்றமைப்பை வழங்குவது மட்டுமல்லாமல், தனியார் வர்த்தகத்தை ஒழுங்கு படுத்தவும் செய்கிறது.

(ii) குடியானவர்களுக்கு வர்த்தகத்தில் அறிவையும் பயிற்சியையும் அது அளிக்கிறது.

(iii) இடைத்தரகர்களை ஒழிப்பதன் மூலம், ஒப்பிடும் வகையில் குறைந்த விலைகள் வாயிலாக அது நுகர்வோருக் குதவுகிறது.

(iv) வேளாண்மையை ஓர் இலாபகரமான தொழிலாகச் செய்வதன் மூலம், அது விவசாய உற்பத்தித் திட்டத்தை மேலும் பயனுறுதியாகச் செய்வதற் குதவிபுரிந்து, அதிகமாக உற்பத்தி செய்வதற்குக் குடியானவரை ஊக்குவிக்கிறது.

## 3. கூட்டுறவு விற்பனையின் வளர்ச்சி

விடுதலைக்கு முந்திய காலத்தில், ஒரு மிக அலட்சியமான முயற்சி கூட்டுறவு விற்பனைக்காகச் செய்யப்பட்டது. விசாரணை செய்யப்பட்ட 75 மாவட்டங்களுள் 5-ல் மட்டுந்தான் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் விற்பனை செய்யப்பட்ட விளைபொருள்கள், எல்லா அமைப்புகளிலும் செய்யப்பட்ட மொத்த விற்பனையில் 1 சதவிகிதத்திற்கு மேற்பட்டிருந்ததென்பதை, அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை வெளிப்படுத்தியது. கிராமக் கடனின் ஒருங்கிணைந்த திட்டத்தின் பகுதியாக, விற்பனைச் சங்கங்களை அமைப்பதற்காக ஒரு வளர்வித அமைப்புத் திட்டம் அவ் வறிக்கையில் பரிவு செய்யப்பட்டிருந்தது. மற்றும், விற்பனைச் சங்கங்களின் பங்கு மூலதனத்திற்காக உதவித் தொகைகளையும், கிடங்குகளைக் கட்டுவதற்காகக் கடன்கள் மற்றும் உதவித் தொகைகளையும், ஆரம்பக் கட்டங்களில் சிப்பந்திச் செலவு களுக்காக மானியத் தொகைகளையும் அரசு அவைகளுக் குதவ வேண்டுமென்றும் அது பரிந்துரை செய்தது. எனவே, இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போதும், தொடர்ந்து வந்த திட்டக் காலங்களிலும்தான், விற்பனைச் சங்கங்களை அமைப்

பதற்குத் தீவிரமான கவனம் செலுத்தப்பட்டது. விவசாய விளைபொருள்களின் விற்பனையில் விற்பனைச் சங்கங்களால் சாதிக்கப்பட்ட முன்னேற்றத்தைக் கீழ்க்காணும் எண்கள் எடுத்துக் காட்டுகின்றன.

| ஆண்டு | கூட்டுறவு விற்பனைச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள்களின் பெறுமானம் (ரூபாய், கோடிக் கணக்கில்) |
|---|---|
| 1965-66 | 360·41 |
| 1967-68 | 525·00 |
| 1969-70 | 505·18 |
| 1970-71 | 560·92 |

## 4. கூட்டுறவு விற்பனை நிறுவன அமைப்பு-அனைத்திந்திய நிலைமை

1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், கூட்டுறவு விற்பனை நிறுவன அமைப்பானது தேசிய விவசாயக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பையும் (National Agricultural Co-operative Marketing Federation) 28 மாநில விற்பனைக் கூட்டமைப்புகளையும், மாவட்ட மட்டத்தில் அல்லது மண்டல மட்டத்தில் இயங்குகின்ற 363 மத்திய அல்லது மண்டல விற்பனைச் சங்கங்களையும், மற்றும், 3,222 பிரதம விற்பனைச் சங்கங்களையும் கொண்டிருந்தது. ஒரு பெரிய எண்ணிக்கையுள்ள விற்பனைச் சங்கங்கள், தங்கள் மூலதனத்தில் அரசு பங்காளித்துவத்தைப் பெற்றுள்ளன. சராசரியில் ஏறக்குறைய 78 சதவிகிதக் கிராமச் சங்கங்கள் நாட்டிலுள்ள விற்பனைச் சங்கங்களுடன் இணைக்கப்பட்டுள்ளன.

3,222 பிரதம விற்பனைச் சங்கங்களுள், பல்வேறு பொருள்களில் வர்த்தகம் செய்வதற்காக நிலப்பகுதி அடிப்படையின் பேரில் செயற்படும் 2,675 சங்கங்கள் பொதுநோக்குச் சங்கங்களாகவும் (General Purpose Societies), எஞ்சியவை ஒற்றையான பண்டத்தில் வர்த்தகம் செய்யும் சிறப்புச் சங்கங்களாகவு மிருந்தன—பருத்தி (88), பழவகைகளும் காய்கறிகளும் (222), பாக்கு (19), புகையிலை (19), தேங்காய் (65), கரும்பு வழங்குதல் (23), இதரச் சிறப்புத் தேர்ச்சிப் பண்டங்கள் (11). இச் சங்கங்களின் அங்கத்துவம் 1,42,869 சங்கங்களையும், 25,22,944 முறையான உறுப்பினர்களையும், 1,48,325 பெயரளவு உறுப்பினர்களையும் கொண்டிருந்தது. 30-6-71ஆம் நாளன்று அவற்றின் நடைமுறை மூல

தனம் ரூ. 179 கோடியாக இருந்தது. 1970-71ஆம் ஆண்டில், அவை விற்பனை செய்த விவசாய விளைபொருள்கள், விவசாயத் தேவைகள், நுகர்பொருள்கள் ஆகியவைகளின் பெறுமானம் ரூ. 507 கோடியாக இருந்தது. இத் தொகையில், ரூ. 236 கோடி மொத்த விற்பனையாகவும், எஞ்சியவை ஒரு பதிலாண்மை அடிப்படையின் பேரில் செய்யப்பட்ட விற்பனை யாகவு மிருந்தன. விவசாய விளைபொருள்கள் விற்பனையின் பெறுமானம் ரூ. 271 கோடியாகவும், விவசாயத் தேவைகள் வழங்குதலின் மதிப்பு ரூ. 150 கோடியாகவு மிருந்தன. இச் சங்கங்களுள் ஒரு பெரிய எண்ணிக்கையுள்ள சங்கங்கள்—1,079 சங்கங்கள்—உண்மையாகவே விவசாய விளைபொருள்களின் விற்பனையை மேற்கொள்ளவில்லை. விற்பனை செய்யப்பட்ட முக்கிய விவசாயப் பொருள்களாவன: கோதுமை, கரும்பு, நெல், இதர உணவு தானியங்கள், பாக்கு மற்றும் வெல்லம் ஆகியவை யாகும்.

363 மையச் சங்கங்களுள், 202 சங்கங்கள் கரும்பு வழங்குவதிலும், 2 பருத்தியிலும், 8 பழவகைகள் காய்கறிகளிலும், 1 தென்னை, பாக்கு, புகையிலை ஆகியவை ஒவ்வொன்றிலும், வர்த்தகம் செய்தன. எஞ்சியுள்ள 142 சங்கங்கள் பொதுநோக்குச் சங்கங்களாக இருந்தன. 1970-71ஆம் ஆண்டின்போது அவை ரூ. 138 கோடிப் பெறுமானமுள்ள விவசாய விளைபொருள்களை விற்பனை செய்தன. 1970-71ஆம் ஆண்டின்போது அவைகளால் விற்பனை செய்யப்பட்ட விவசாயத் தேவைகளும் நுகர் பொருள்களும் முறையே ரூ. 94 கோடிக்கும், ரூ. 36 கோடிக்கும் பெறுமானமுள்ளவையாக இருந்தன.

மாநில மட்டத்திலிருந்த 28 கூட்டமைப்புகள் (Federations) 22 பொதுநோக்கு விற்பனைச் சங்கங்களையும், 1 பருத்தி விற்பனைச் சங்கத்தையும், 1 கரும்பு வழங்கும் விற்பனைச் சங்கத்தையும் இதரத் தனிப்பட்ட விவசாயப் பொருள்களை வர்த்தகம் செய்யும் 2 சங்கங்களையும் கொண்டிருந்தன. தலைமைக் கூட்டமைப்புகள் 7,685 சங்கங்களையும், 560 பயிரிடுபவர்களையும், மற்றவர்களையும், முறையான அங்கத்தினர்களையும், 688 பெயரளவு உறுப்பினர்களையும் கொண்டிருந்தன. 1970-71ஆம் ஆண்டில் இந்த எல்லாத் தலைமைக் கூட்டமைப்புகளாலும் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளை பொருள்களின் பெறுமானம் ரூ. 140 கோடியாக இருந்தது. அதே ஆண்டின்போது. அவை ரூ. 142 கோடி மதிப்பிற்கு விவசாயத் தேவைகளையுங்கூட வழங்கின. விநியோகிக்கப்பட்ட மொத்த விவசாயத் தேவைகளுள், உர வகைகளும் ரூ. 131 கோடிக்கும் அதிகமாக விருந்தன.

தேசிய விவசாயக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு (புதுடில்லி) 22 சங்கங்களை உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது. 1970-71ஆம் ஆண்டில் அதனால் செய்யப்பட்ட விவசாய விளை பொருள்கள் விற்பனையின் பெறுமானம் ரூ. 10 கோடியாக இருந்தது.

தமிழ்நாட்டில் 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் 4.55 இலட்ச உறுப்பினர்களைக் கொண்ட 122 பிரதமக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் இருந்தன. 1970-71ஆம் ஆண்டில் அவை விற்பனை செய்த விவசாய விளைபொருள்களின் பெறுமானம் ரூ. 8·166 கோடியாகவும், வழங்கிய விவசாயத் தேவைகளின் பெறுமானம் ரூ. 19·87 கோடியாகவு மிருந்தன. 1959ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட 'மாநிலக் கூட்டுறவு விநியோக விற்பனைச் சங்கம்' பிரதம விற்பனைச் சங்கங்களுக்கு ஒரு தலைமை நிறுவனத்தைத் தந்தது. 1970–71ஆம் ஆண்டின்போது, அதனால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள்களின் பெறுமானம் ரூ. 10·67 இலட்சமாகவும், விநியோகிக்கப்பட்ட உரவகைகளின் பெறுமானம் ரூ. 685·19 இலட்சமாகவும் இருந்தன. 1956ஆம் ஆண்டில் மாவட்டக் கூட்டுறவு மொத்த விற்பனைப் பண்டசாலைகள், மாவட்ட விநியோக விற்பனைச் சங்கங்களுக்கு, விவசாயத் தேவைகள், சிறப்பாக இரசாயன உரவகைகள் விநியோகத்தில் உதவி புரிந்திருந்தாலும், விவசாய விளைபொருள்களின் விற்பனைத் துறையில் அவை அதிகமாகச் செயற்படவில்லை.

## 5. கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் நோக்கங்களும் கடமைகளும்

கூட்டுறவு விற்பனைச் சங்கத்தின் நோக்கங்களும் பணிகளும் கீழே தரப்பட்டுள்ளன.

1. உறுப்பினர்களின் விளைபொருள்களை மிகச் சிறந்த அனுகூலத்திற்கு விற்பனை செய்தல்.

2. உறுப்பினர்களுக்குத் தங்கள் விளைபொருள்களின் ஆதாரத்தின் பேரில் கடன் வசதிகளை வழங்குதல்.

3. உறுப்பினர்களின் விளைபொருள்களைச் சேமித்து வைப்பதற்காகக் கிடங்கு ஏற்பாடு செய்தல்.

4. மேலான தரமுள்ள பொருள்களுக்காக மேலான விலைகளைக் கொணரும், விளைபொருள்களைத் தரப்படுத்துவதற்கான வசதியை (Grading of produce) வழங்குதல்

5. உறுப்பினர்கள் மேலான பேரச் சத்தியைப் பெறும் பொருட்டும், அவர்களின் இலாபங்களைச் சமப்படுத்தும் பொருட்டும், அவர்கள் விளைபொருள்களைத் தொகுப்புச் செய்யும் முறையைத் (System of Pooling) தொடங்கி வைத்தல்.

6. இன்னும் மேலான இலாபங்களைப் பயிரிடுபவர்கள் பெறும் பொருட்டு, உறுப்பினர்களின் விளைபொருள்களை ஏற்றுமதி செய்தல்.

7. கொள்முதல் செய்வதற்காகவும், விலையாதரிப்புக் கொள்கையை (Price support policy) அமல்படுத்துவதற்காகவும், அரசு பிரதிநிதிகளாகச் செயற்படுதல்.

8. உற்பத்தியைப் பெருக்குவதற்காகவும், விளைபொருள்களின் தரத்தை மேம்படுத்துவதற்காகவுமான ஒரு நடவடிக்கையாகப் பண்ணைத் தேவைகளை வழங்குவதற்கு ஏற்பாடு செய்தல்.

9. விளைபொருள்களை இடம்பெயர்த்தல் முதலியவற்றிற்காக ஏற்பாடு செய்தல்.

### 6. அங்கத்துவம்

ஒரு பிரதம விற்பனைச் சங்கத்தின் அலுவல் எல்லையிலுள்ள பயிரிடுபவர்கள், அச் சங்கத்தின் உறுப்பினர்களாவதற்குத் தகுதி பெற்றுள்ளனர். ஒரு விற்பனைச் சங்கத்தின் அலுவலெல்லை, பொதுவாக, ஒரு தாலுக்காவிற்கு நீடித்துள்ளது. விவசாயக் கடன் சங்கங்களும், கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் போன்ற தொடர்பான இதரச் சங்கங்களும்கூட உறுப்பினர்களாகச் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர். வர்த்தகர்கள் பெயரளவு உறுப்பினர்களாக எடுத்துக்கொள்ளப்படுகின்றனர். ஆனால், அவர்களுக்கு ஓட்டுரிமையும், சங்க நிர்வாகத்தில் பங்கு கொள்ளும் உரிமையுங் கிடையா. விற்பனைச் சங்கங்களின் பங்கு மூலதனத்தில் அரசு பங்குகொள்ளுதல் ஏற்பட்டதிலிருந்து, அரசும்கூட அத்தகைய விற்பனைச் சங்கங்களின் ஓர் உறுப்பினராக இருக்கின்றது. தமிழ் நாட்டில் 2 அரசு பிரதிநிதிகள், அதாவது வட்டார வளர்ச்சிக் கூட்டுறவு அலுவலரும், வட்டார வளர்ச்சி விவசாய அலுவலரும் விற்பனைச் சங்கங்களின் இயக்குநர்களாக நியமிக்கப்படுகின்றனர்.

தமிழ்நாட்டில் விற்பனைச் சங்கங்கள், விவசாயக் கடன் சங்கங்களின் கூட்டமைப்புகளாகச் சீரமைக்கப்பட வேண்டுமென்றும், தனிநபர்கள் விற்பனைச் சங்கங்களின் உறுப்பினர்களாக இருப்பதற்கு அவசியமில்லையென்றும், விற்பனைச் சங்கத்தை நிருவாகம் செய்வதற்காகத் தேவைப்படும் அனுபவத்தையும், நிருவாகத்

திறனையும் விவசாயக் கடன் சங்கங்களின் பிரதிநிதிகளிடமிருந்தே பெறக்கூடுமென்றும் சந்தானம் குழுவினர் (1969) கருத்துக் கொண்டனர்.

## 7. நிதியாதாரங்கள்

**(i) பங்குகள் :** இதரக் கூட்டுறவுச் சங்கங்களைப் போன்று விற்பனைச் சங்கங்களுங்கூடத் தங்கள் நிதிகளைப் பிரதானமாகப் பங்குகளிலிருந்து திரட்டுகின்றன. கூட்டுறவு விற்பனையைப் பற்றிய டான்ட்வாலா குழு (Dantwala Comittee) (1966), ஒரு சராசரி யான பிரதம விற்பனைச் சங்கம் ஒரு நியாயமான விற்பனைப் புரள்வைப் (Business Turnover) பெறுவதற்கு வகைசெய்ய, ரூபாய் இரண்டு இலட்சமுடைய ஒரு மூலதன ஆதாரம் அதற்குத் தேவைப்படுமென்று பரிவுரை செய்தது. அத்தகைய சங்கத்தின் பங்கு மூலதனத்திற்கு அரசு உதவித் தொகையானது, சங்கம் ஒன்றுக்கு ரூ. 1 இலட்சம் குறுமமாக உயர்த்தப்பட வேண்டுமென் றுங்கூட அது பரிவுரை செய்துள்ளது. விற்பனைச் சங்கங்களின் நிதி நிலைமையைப் பலப்படுத்தும் நோக்கத்துடன், அவற்றின் பங்கு மூலதனத்தில், ஒரு தாராள அளவில், அரசு பங்கு கொண்டுள்ளது. 1964ஆம் ஆண்டில் விற்பனைச் சங்கம் ஒன்றிற்கு அரசு உதவித் தொகையின் உச்ச அளவு ரூ. 10,000/-லிருந்து ரூ. 1 இலட்சத்திற்கு உயர்த்தப்பட்டது. ஒவ்வொரு தவணையும், ரூ. 25,000/-முள்ள தவணைகளில் இந்த உதவித் தொகை அளிக்கப்பட்டு, அரசு உதவித் தொகையில் ஒரு தவணை யளிக்கப்பட்ட ஓராண்டிற்குள், சங்கம் உறுப்பினர்களிடமிருந்து ஒரு சமமான பங்கு மூலதனத் தொகையை வசூலிக்க வேண்டும். விற்பனைச் சங்கங்கள் பதனப் படுத்தும் அமைப்புகளை அமைப்பதற்கான உதவியையுங்கூட, அவற்றின் பங்கு மூலதனத்திற்கு அளிக்கப்படும் உதவித்தொகை வாயிலாகப் பெறுகின்றன. 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் பிரதம விற்பனைச் சங்கங்களின் மொத்தம் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ. 28·48 கோடியாக இருந்தது. இதில் அரசின் மூலதனம் ரூ. 18·94 இலட்சமாக இருந்தது. தமிழ் நாட்டில் பிரதம விற்பனைச் சங்கங்களின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ. 2·84 கோடியாக இருந்தது. இதில் பதனப்படுத்தும் அமைப்பு களை யமைப்பதில் செய்யப்பட்ட முதலீடுகளுட்பட அரசின் மூலதனம் ரூ. 2·09 கோடியாக இருந்தது.

**(ii) நிதி வழங்கும் வங்கிகளிலிருந்து கடன் வாங்குதல் :** ஒரு விற்பனைச் சங்கத்தில் பங்கு மூலதனமாவது, எந்தச் சந்தர்ப் பத்திலும் அதன் வாணிகத்திற்குப் போதுமானதாக இருக்க முடியாது. பங்கு மூலதனமானது உயர்ந்த அளவுக்கு நிதி

வழங்கும் நிறுவனங்களிலிருந்து கடன்கள் பெறுவதற்காக, ஒரு ஆதாரமாகத்தான் அமைய முடியும். மத்தியக் கூட்டுறவு வங்கிகளும், ரிசர்வ் வங்கியும், இந்திய தேச வங்கியும் விற்பனைச் சங்கங்களுக்கு அவற்றின் நடைமுறை மூலதனத் தேவைகளுக்காக நிதிகளைப் பெருமளவு வழங்குகின்றன. பயிர்களை விற்பனை செய்வதற்காக மத்திய வங்கிகளால் அளிக்கப்படும் கடன்கள், ரிசர்வ் வங்கியிலிருந்து மாநிலக் கூட்டுறவு வங்கிகள் மூலமாக, 2 சதவிகிதச் சலுகையான ஒரு வட்டி விகிதத்தில் ஈடு செய்யப்படக் கூடும். 1973-74ஆம் ஆண்டின்போது, பருத்தியும், கொட்டை நீக்காத பருத்தியும் நீங்கலாக, இதரப் பயிர்களை விற்பனை செய்வதற்காக ரிசர்வ் வங்கியிடமிருந்து வாங்கிய தொகைகள் ரூ. 12·09 கோடியளவுக் கிருந்தன. இதில், 1·94 கோடி, 1974ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், மாநிலக் கூட்டுறவு வங்கிகளால் கொடுக்கப்பட வேண்டியிருந்தது. 1969-70ஆம் ஆண்டில், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப்பட்ட கடன் வரம்பு ரூ. 31·45 கோடியாகவும், அது வாங்கிய தொகைகள் ரூ. 57·37 கோடியாகவும், 1970 ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் அதனுல் கொடுக்கப்பட வேண்டிய கடன்கள் 13·56 கோடியாகவுமிருந்தன. இது, பருவகால விவசாய நடவடிக்கைகளுக்காகவும் பயிர்களை விற்பனை செய்வதற்காகவும் அளிக்கப்பட்ட நிதியுதவியாகும்.

மத்தியக் கூட்டுறவு வங்கியால் விற்பனைச் சங்கங்களுக்குக் கடனளிப்பிற்காக ரிசர்வ் வங்கி சில வழிகாட்டல் விதிகளை நிருணயித்துள்ளது. இவ் விதிகளின்படி, ஒரு விற்பனைச் சங்கம் மூன்றுவிதக் கடன் வசதிகளைப் பெறத் தகுதி பெற்றுள்ளது. அதாவது (அ) சுத்தக் கடன் வசதி (Clean credit), (ஆ) அடைமானக் கடன் வசதி (Hypothecation credit), (இ) அடகு கடன் வசதி (Pledge credit). அடகு கடன் என்பது மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் பொறுப்பில் வைக்கப்பட்டுள்ள பொருள்களின்மீது அளிக்கப்பட்ட கடனாகும். அடைமானக் கடனென்பது, மத்தியக் கூட்டுறவு வங்கிகள் பொருள் பொறுப்பை யெடுத்துக் கொள்ளாமல் பொருள்களின் சொத்துரிமைகளைத் தங்களுக்கு அளிக்கின்ற வகையிலும் காலமுறைக் கையிருப்புப் பட்டியல்கள், ஆய்வுகள் முதலியவற்றிற்காக ஏற்பாடு செய்கின்ற வகையிலும் ஓர் ஒப்பந்தத்தைப் பெற்றுத் திருப்தி செய்துகொண்டும், பொருள்கள் மீது அளிக்கும் கடனாகும். இக் கடன்கள் அடகு பொருள்களின் மதிப்பில் 75 சதவிகிதம் வரையிலும் அடைமானப் பொருள்கள் மதிப்பில் 60 சதவிகிதம் வரையிலும், முறையே அளிக்கப்படுகின்றன. எனினும், தங்கள் கொள்முதல் வாணிகத்திற்கு நிதியுதவுவதற்காக விற்பனைச்

சங்கங்களுக்கு அளிக்கப்படும் மதிப்பில் 95 சதவிகிதம் வரையிலும், அடைமானப் பொருள்கள் மதிப்பில் 85 சதவிகிதம் வரையிலும், முறையே அளிக்கப்படலாம். ஆனால், கொள்முதல் முழுமையாக அரசு கணக்கில் செய்யப்பட்டு, கொள்முதலுக்காக அளிக்கப்பட்ட கடன் முழுவதும் அரசால் உத்தரவாத மளிக்கப்படவேண்டும். கொள்முதல், விதைபெருக்கல் (Seed Multiplication) போன்ற தனிக் காரியங்களுக்காகக் கடன் வாங்குதலை வசதிப்படுத்துவதற்காக அவசியப்படும் போதெல்லாம், அரசு இடைவெளிப் பணத்தையும் (Margin Money) உத்தரவாதத்தையும் வழங்குகின்றது. சுத்தக் கடன்கள், சங்கத்தில் சொந்த நிதிகள் வரை அளிக்கப்படலாம்; ஆனால், கடன் வரம்பு முழுவதும் அரசால் உத்தரவாதமளிக்கப்பட்டால், சுத்தக் கடன் சங்கத்தின் சொந்த நிதிகளில் 2 மடங்கு வரை அளிக்கப்படலாம்.

உரங்கள் வாணிகத்திற்கான கடன்கள், மத்தியக் கூட்டுறவு வங்கிகளாலும், மாநிலக் கூட்டுறவு வங்கிகளாலும், தங்கள் சொந்த நிதியாதாரங்களிலிருந்தும், அல்லது சில சமயங்களில் அரசு உத்தரவாதத்தின்மீது ரிசர்வ் வங்கியிடமிருந்தும், தேச வங்கியிடமிருந்தும் கடன் வாங்குதல் மூலம் வழங்கப்படுகின்றன. 1972 சனவரியில் தொடங்கிய ஆண்டில் (Calender year 1972) இரசாயன உரங்களின் கொள்முதலுக்காகவும், விநியோகத்திற்காகவும் ரிசர்வ் வங்கி ரூ. 14.75 கோடிக்கு ஒரு கடன் வரம்பை, வங்கி வட்டி விகிதத்திற்கு 2 சதவிகிதத்திற்கு அதிகமான வட்டி விகிதத்தில் வழங்கியிருந்தது. ஆனால், உரங்களின் கொள்முதல் செய்தல், இருப்பு வைத்தல், விநியோகித்தல் ஆகிய காரியங்களுக்காக வாணிக வங்கிகள் எவ்விதக் கடன் வரம்புகளை அல்லது போதிய கடன் வரம்புகளை ஒப்பளிக்காமலிருந்தால், அக் காரியங்களுக்காக வங்கி வட்டிக்கு 3 சதவிகித அதிகமான வட்டி விகிதத்தில் மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் கடன் வரம்புகளுக்கான விண்ணப்பங்களைக் கருதுவதற்கு ரிசர்வ் வங்கி இசைந்திருந்தாலும் 1973ஆம் ஆண்டில், கூட்டுறவு வங்கிகளுக்கு, ரிசர்வ் வங்கியிலிருந்து இவ் வசதிகளைப் பெற்றுப் பயனடைய வேண்டிய தேவையொன்று மில்லாம லிருந்தது.

தேச வங்கியுங்கூட, விவசாய விளைபொருள்கள் உர வகைகள் மற்றும், சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் இதரப் பொருள்கள் ஆகியவைகளை விற்பனை செய்தல், பதனப்படுத்துதல் போன்ற காரியங்களுக்காக நேர்முகமாகவோ அல்லது கூட்டுறவு வங்கிகள் மூலமாகவோ கடனுதவி வழங்கிற்று. விளைபொருள்களின் அடகின் பேரில், விற்பனைச் சங்கங்களுக்கும் பதனப்படுத்தும் சங்கங்களுக்கும்

அவற்றின் பெறுமானத்தில் 60 சதவிகிதத்திலிருந்து 75 சதவிகிதம் வரை அது கடனளிக்கிறது. தலைமை அல்லது மத்தியக் கூட்டுறவு வங்கிகள் அல்லது தலைமை விற்பனைச் சங்கங்கள் ஆகியவைகளின் உத்தரவாதத்தின் பேரில், விற்பனைச் சங்கங்களுக்குத் தேச வங்கி அவற்றின் சொந்த நிதிகள் வரை, சுத்தக் கடன்கள் வழங்கு கின்றது. சொந்த நிதிகளுக்கு அதிகப்பட்ட சுத்தக் கடன், அரசு உத்தரவாதத்தின் பேரில் அளிக்கப்படலாம். அத்தகைய கடன் களின் பேரில் வட்டி விகிதம், ஒரு சில உச்ச அளவுக்குட்பட்டு வழக்கமான வங்கிவட்டிக்கு ½ சதவிகிதம் அதிகமாக உள்ளது. ஆனால், கடன்கள் ரூ. 5 இலட்சத்திற்கு அதிகப்படுகின்ற சந்தர்ப்பம் நீங்கலாக, தனித்த கிடங்குக் காப்பாளர் கட்டணங்கள் எதுவும் வசூலிக்கப்படுகிறதில்லை. 1970ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நாட் டில் எல்லா விற்பனைச் சங்கங்களின் மற்றும் பதனப்படுத்தும் சங்கங் களின் மொத்தக் கடன் பெற்ற முதல் ரூ. 85.4 கோடியளவிற் கிருந்தது. இதில் வாணிக வங்கிகளிலிருந்து வாங்கிய கடன்களும் அடங்கியுள்ளன. தமிழ்நாட்டைப் பொறுத்தவரை, தேச வங்கி, 1964-65ஆம் ஆண்டில், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கிக்கு ரூ. 10 கோடிக்கு ஒரு கடன் வரம்பை ஒப்பளித்திருந்தது. இக் கடன் வரம்பு, பெருமளவு கொள்முதல் திட்டத்திற்காகவும், உரங்கள் விநியோகத்திற்காகவும், விற்பனைச் சங்கங்களுக்கும், நுகர்வோர் பண்டசாலைகளுக்கும், சம்பந்தப்பட்ட மத்தியக் கூட்டுறவு வங்கி கள் மூலம் நிதியுதவி செய்வதற்காக ஒப்பளிக்கப்பட்டது. மாநிலக் கூட்டுறவு வங்கிகளும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளும், 1967ஆம் ஆண்டில், விற்பனைச் சங்கங்களின் கடன் தேவைகளைத் தாங்களே பூர்த்தி செய்யக்கூடிய ஒரு நிலைமையி லிருந்திருந்தாலும், நுகர்வோர் பண்டசாலைகளுக்குக் கடனளிப்பதற்காக மாற்று ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தாலும், அவ் வாண்டில் தேச வங்கி யின் கடன் வசதி நிறுத்தப்பட்டது.

**(iii) அரசு நிதியுதவி:** அரசால் அளிக்கப்படும் பங்கு மூலதன உதவித்தொகை யன்றியும், விற்பனைச் சங்கங்கள், மேலாண்மைச் சிப்பந்திச் செலவிற்காக மாநில அரசிடமிருந்து மானியத் தொகை களைப் பெறுவதற்குத் தகுதியுடையன. இம் மானியத் தொகை 3 ஆண்டுகள் காலத்திற்காக, முதலாண்டின் போது 100 சதவிகிதம், 2ஆவது ஆண்டின்போது 66 சதவிகிதம், 3ஆவது ஆண்டின்போது 33 சதவிகிதம் என்ற வழுக்குவீத அடிப்படையில் அளிக்கப்படுகிறது. இச் சங்கங்கள் தரப்படுத்தும் தளவாடங்கள் செலவிற்கான மானி யத் தொகைகளைப் பெறுவதற்காகவுங்கூடத் தகுதி பெற்றுள்ளன. தெரிந்தெடுக்கப்பட்டுள்ள விற்பனைச் சங்கங்கள், மாநில அரசிட மிருந்து போக்குவரத்து ஊர்திகளை வாங்குவதற்காக, ஊர்தி

ஒன்றுக்கு ரூ. 40,000/- உச்ச அளவுக்குட்பட்டுக் கடன்கள் பெறுகின்றன. இக் கடன் தொகை, 7 சமமாக்கும் வருடாந்தரத் தவணைகளில் அளிக்கப்படவேண்டும். தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம், விற்பனைச் சங்கங்களின் பங்கு மூலதனத்திற்காகவும், மேலாண்மை மானியத் தொகையின் 50 சதவிகிதத்திற்காகவும், தரம்பிரிக்கும் தளவாடத்திற்காகவும், டிரக்கு வண்டிகளை (Trucks) வாங்குவதற்காக மாநில அரசால் அளிக்கப்படுகின்ற கடன்தொகைகளில் 75 சதவிகிதத்திற்காகவும், நிதியுதவியின் செலவை மாநில அரசுடன் பகிர்ந்து கொள்ளுகிறது. விற்பனைச் சங்கங்கள், கிடங்குகளைக் கட்டுவதற்காகக் கடன்களும், மானியங்களும் அளிக்கப்படுகின்றன. சங்கங்களின் 'விலைவாசி ஏற்ற இறக்கத் தனிநிதி'க்காகவுங் கூட (Special Price Fluctuation Fund) அரசால் உதவித்தொகையளிக்கப்படுகிறது.

## 8. விற்பனைச் சங்கங்களின் அலுவல்கள்

(i) **விற்பனை செய்தல் :-** ஒரு பிரதம விற்பனைச் சங்கத்தின் பிரதான நோக்கம் விற்பனை செய்தலாகும். எனினும், இரசாயன உரங்கள் மற்றும், இதர விவசாயத் தேவைகள் விநியோகம் போன்ற சில சேவைப்பணிகளையும் அது மேற்கொள்ளுகிறது. விற்பனை செய்வதில் மூன்று வகைகளுள்ளன.

(அ) பிரதிநிதியாக விற்பனை செய்தல் அல்லது கழிவுப் பதிலாண்மை முறை (Commission agency system).

(ஆ) மொத்தக் கொள்முதல் செய்தல். (Outright Purchase)

(இ) தொகுத்தல் செய்தலும் (Pooling), ஈராசரித் தொகுப்பு விலையைச் செலுத்துதலும்.

(அ) பகிரங்க ஏலமுறையின் மூலம் (Open auction system), விவசாயிகளின் விளைபொருள்கள் சந்தையில் வந்தவுடனே அவற்றை விற்றுமுதல் செய்வது மிகச் சாதாரணமான ஒரு விற்பனை முறையாகும். இம் முறையில், ஒரு பிரதிநிதியாக மட்டுமே சங்கம் செயற்பட்டு, விளைபொருள்கள், மிக உயர்ந்த அளவு ஏலம் கேட்பவரால் வாங்கப்படுகின்றன. விற்பனைச் சங்கத்தால் எடைபோடுதல், சந்தை நிலவரத்தைப் பற்றிய அறிவு (market intelligence), சேமித்துவைக்கும் கிடங்கு வசதிகள் முதலியன வழங்கப்படுகின்றன. அளிக்கப்படும் உச்ச விலைக்குப் பயிரிடுபவர் திருப்தியுள்ளவராக விருந்தால், அவர் தம் விளைபொருள்களை விற்கின்றூர். வாங்குபவரிடமிருந்து விற்பனைப் பணத்தைச் சங்கம் வசூல் செய்து, அதைப் பயிரிடுபவருக்குக் கொடுத்து விடுகிறது. வாங்குபவர் பணத்தைச் செலுத்துவதற்கு அவகாசம்

அனுமதிக்கப்படுகிறார்; சங்கம் முன்னதாகவே விற்பனையாளருக்குப் பணத்தைச் செலுத்திவிடுகின்றது. இந்தச் சேவை செய்ததற்காக ஒரு கழிவைச் (Commission) சங்கம் பெறுகின்றது. இம் முறையில் சங்கத்திற்கு ஒரு நட்டவச்சமும் (risk) இல்லை. மற்றும், ஒரு சிறு மூலதனம் சங்கத்திற்குப் போதும். தமிழ் நாட்டில் எல்லா விற்பனைச் சங்கங்களாலும் இம் முறை, அதாவது பிரதிநிதியாக விற்பனை செய்தல் முறை மேற்கொள்ளப்படுகிறது.

(ஆ) மொத்தக் கொள்முதல் செய்தல் (Outright purchase) கழிவு அடிப்படையின் பேரில் விற்பனை செய்தலில், பற்பல நன்மைகள் உள்ளன. அதில் நட்டவச்சம் இல்லை. அது விவசாயப் பொருள்களைக் கையாளும் அனுபவத்தை வளர்த்துக் கொள்வதற்குச் சங்கத்திற்கு வகைசெய்கிறது. எனினும், அதில் விவசாயிகளுக்கு, மிகவும் வரையறுக்கப்பட்ட பயனே யுள்ளது. சிறப்பாக, விற்பனையில் ஒழுங்கீனச் செயல்கள்மீது ஒரு சட்டப்படியான தடை அமலிலிருக்கும் ஒழுங்குமுறைச் சந்தைகளில் (regulated markets) விற்பனைச் சங்கம் செய்யும் அனுகூலமானது, கழிவு வடிவத்தின் மூலம் குடியானவருக்காக மிகவும் பெயரளவான ஒரு தொகையை மிச்சப் படுத்துவதற் கப்பால் போகிறதில்லை. கூட்டுறவு பற்றிய மேத்தா குழுவினர், பயிரிடுபவருக்குத் தம் விளைபொருள்களைச் சந்தைகளுக்குக் கொண்டு வருவதற்கான போதிய தூண்டுதலைக் கொடுத்து, அவருடைய விளைபொருளுக்காக நல்ல விலையையும் நிச்சயப்படுத்தும் பொருட்டு, விற்பனைச் சங்கங்கள் மொத்தக் கொள்முதலை மேற்கொள்ள வேண்டுவது அத்தியாவசியமென்று அறிவுரை வழங்கினர்.

(இ) திரட்டுதல் (pooling) மூலம் விற்பனை செய்தலுக்கு இது ஓர் அவசியமான நடவடிக்கையாகும். பெரும்பாலான உறுப்பினர்கள் தங்கள் விளைபொருள்களை ஒன்றுதிரட்டுவதற்கு விருப்பமுள்ளவர்களாக இருந்தால், மொத்தக் கொள்முதல், சிறப்பாக சிறிய பயிரிடுபவர்களிடமிருந்து செய்யப்படவேண்டியிருக்கும். எனினும், இம் முறையில் சில நட்டவச்சம் (risk) அடங்கியுள்ளது. மற்றும், அது கவனிப்புடன் அனுசரிக்கப்படவேண்டும். மொத்தக் கொள்முதலைச் செய்வதில் சங்கங்களுக்காகச் சில பாதுகாப்பு ஆலோசனைகள் கூறப்பட்டுள்ளன. அவை பின்வருவன போன்றவை: உயர்மட்டத்துக் கூட்டுறவுச் சங்கங்கள் சார்பாக அல்லது அவைகளுடன் கூட்டாக எடுத்துக் கூறப்பட்ட ஒரு விலைப்பரப்பிற்குள் கொள்முதல் செய்யப்படலாம்; சங்கத்தின் சொந்த நிதிகளில் இரண்டு மடங்குகளுக்குக் கொள்முதலை வரையறைப்படுத்தலாம்; யாதொரு தனிநபர் உறுப்பினரிட

மிருந்து செய்யப்படும் உச்சக் கொள்முதலின் அளவு ஒரு குறிப்பிட்ட தொகைக்கு அதாவது ரூ. 1,500/-க்கு வரையறுக்கப் படலாம்; எவ்வித ஊகவாணிகக் கொள்முதல்களும் செய்யப்படக் கூடாது, அதாவது செய்யப்பட்ட கொள்முதல்கள் ஒரு நீண்ட காலத்திற்கு நிறுத்தி வைத்திருக்கப்படக்கூடாது.

எனினும், எதிர்பார்க்கப்படாத விலையேற்ற இறக்கங்களில் உள்ளடங்கிய நட்டவச்சங்கள் இல்லையென்று கூறமுடியாது. மொத்தக் கொள்முதலிலும் மொத்த விற்றுமுதலிலும், விற்பனைச் சங்கத்திற்கு ஒரு பெருமளவான நடைமுறை மூலதனமும் நட்டவச்சமும் கூட அடங்கியுள்ளன. உணவுத் தானியங்களையும் அல்லது இதரப் பயிர்களையும், மாநில அரசின் பிரதிநிதிகளாகக் கொள்முதல் செய்தலில் நட்டவச்சம் அடங்கி யில்லாததனுல், அது ஒரு விலக்காக வுள்ளது. ஆகையால், 1966ஆம் ஆண்டில், விற்பனைச் சங்கங்கள் நம்பிக்கையோடு விளை பொருள்களை மொத்தக் கொள்முதல் செய்தல் மேற்கொள்வதை ஊக்குவிக்கும் பொருட்டு, விற்பனைச் சங்கங்களில் 'விலைவாசி யேற்ற இறக்க நிதிக்கு' (Price Fluctuation fund) அரசு உதவித் தொகை யளிக்கும் ஒரு திட்டத்தை இந்திய அரசு தொடக்கி வைத்தது. இத் திட்டத்தின்கீழ், தலைமை விற்பனைச் சங்கங்களும், பிரதம விற்பனைச் சங்கங்களும் தங்களால் பராமரிக்கப்பட வேண்டிய 'விலைவாசி ஏற்ற இறக்க நிதிக்குத்', தங்கள் நிகர இலாபத்தில் 10 சதவிகிதத்தை உதவவேண்டும். 'விலைவாசி ஏற்ற இறக்கத் தனி நிதி' (Special price fluctuation fund) என்று வழங்கப்படும் ஒரு நிதிக்குச் சங்கங்களால் தங்கள் உறுப் பினர்களிடமிருந்தும், அல்லது இணைக்கப்பட்ட விவசாயக் கடன் சங்கங்களின் உறுப்பினர்களிடமிருந்தும், முந்திய ஆண்டில் மேற்கொள்ளப்பட்ட விவசாய விளைபொருள்களின் மொத்தக் கொள்முதலின் பெறுமானத்தில் 2 சதவிகிதம், அரசு உதவித் தொகை யளிக்கும். ஓராண்டில் அளிக்கப்படும் உச்ச உதவித் தொகையளவு, ஒரு பிரதம விற்பனைச் சங்கத்திற்காக ரூ. 20,000-க்கும், மண்டல / தலைமை விற்பனைச் சங்கத்திற்காக ரூ. 1 இலட்சத்திற்கும், தேசிய விவசாயக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புக்காக ரூ. 2·5 இலட்சத்திற்கும் வரையறுக்கப்படும். பதனப்படுத்தப்பட்ட பிறகு சங்கங்களால் விற்கப்படும் பொருள் களுக்காகவும், ஏற்றுமதி செய்யப்படுகின்ற பொருள்களுக்காகவும், மாநில அரசு 5 சதவிகிதம் வரை உதவித்தொகை யளிக்கலாம். அரசின் உதவித்தொகையானது, தொழிலில் உபயோகப்படுத்தக் கூடாது என்றிருந்தாலும், அது சங்கங்களின் சொந்தநிதிகளின் ஒரு பகுதியாகவே அமைகின்றது. ஏதேனும் ஓர் ஆண்டில் நட்டம்

ஏற்பட்டால், அது விலைவாசி ஏற்ற இறக்கத் தனி நிதியிலிருந்து 50 சதவிகிதத்திற்கும், சாதாரண விலைவாசி ஏற்ற இறக்க நிதியிலிருந்து 50 சதவிகிதத்திற்கும் ஈடுசெய்யப்படும். இத் திட்டம்' தெரிந்தெடுக்கப்பட்ட சங்கங்களில் தொடங்கப்பட்டு, ஆண்டு தோறும் மேலும் அதிகமான சங்கங்களுக்கு நீடிக்கப்படுகிறது. 1968–69ஆம் ஆண்டுவரை, இத் திட்டத்திற்காகச் சுமார் 950 சங்கங்கள் தெரிந்தெடுக்கப்பட்டன. அவைகளால் செய்யப்பட்ட மொத்தக் கொள்முதலின் பெறுமானம் அதிகரித்துக்கொண்டு வந்து, 1967–68ஆம் ஆண்டில் ரூ. 9.78 கோடி யளவிற் கிருந்தது. மாநில அரசுகள், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் உதவியுடன், 1968–69ஆம் நிதியாண்டு இறுதியில், விலைவாசி ஏற்ற இறக்கத் தனிநிதிக்கு உதவித்தொகைகளாக, ரூ. 48.9 இலட்சம் தொகைக்கு மானியங்களைப் பல்வேறு மட்டங்களிலுள்ள விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு வழங்கின.

தமிழ்நாட்டில், இத் திட்டம் 1966ஆம் ஆண்டிலிருந்து அமலில் இருந்துள்ளது. யாதொரு உறுப்பினர்களிடமிருந்து செய்யப்படும் மொத்தக் கொள்முதலின் பெறுமானம் ஓராண்டில் ரூ. 1.500-க்கு மேற்படக்கூடாது. திட்டத்தின்கீழ்த் தெரிந்தெடுக்கப்பட்ட பயிர்களுள் நிலக்கடலை, மிளகாய், மஞ்சள், பருத்தி, எள் ஆகியவை இருந்தன. அரசின் சார்பாக, அல்லது அரசால் நியமிக்கப்பட்ட பிரதிநிதிகளின் சார்பாக, எந்த ஒரு கொள்முதல் திட்டத்தின்கீழும், கொள்முதல் செய்யப்பட்ட பயிர்களும், மற்றும் விரைவில் அழியும் பயிர்களுங்கூட, திட்டத்தின் நோக்கத்திலிருந்து விலக்கப்பட்டுள்ளன. இதுவரை விற்பனைச் சங்கங்களின் விலைவாசி ஏற்ற இறக்கத் தனி நிதிக்கு ரூ. 3.41 இலட்ச மொத்தத் தொகை, உதவித்தொகையாக அளிக்கப் பட்டிருக்கிறது. 1973–74ஆம் ஆண்டில் இந் நிதிக்கு ரூ. 1.48 இலட்சம் உதவித்தொகை யளிக்கப்படுமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## ஒன்றுதிரட்டலும் (Pooling) ஒன்றுதிரட்டப்பட்ட விளைபொருள்களின் சராசரி விலையைச் (Pooled price) செலுத்துதலும்

இம் முறை அதாவது ஒன்றுதிரட்டப்பட்ட விளைபொருள்களின் சராசரி விலையைக் கொடுத்தலானது, ஒரு பயிரிடுபவரால் கொண்டுவரப்படும் விளைபொருள்கள் தனிப்பட்ட தரங்களாகப் பிரிக்கப்பட வேண்டுமென்பதையும், முன் விலையாக (Advance Price) ஒரு சில தொகை, அவர் உடனே கொடுக்கப்பட வேண்டுமென்பதையும், எல்லா உறுப்பினர்களுடைய ஒவ்வொரு தரமான விளைபொருள்களும் ஒன்றுதிரட்டப்பட்டு, அவசியப்பட்டால்

பதனப்படுத்தவும் வேண்டுமென்பதையும், அவை இறுதியாக மிகச் சிறந்த சந்தையில் ஒரு காலவரைக்குள் விற்பனை செய்யப்பட வேண்டுமென்பதையும் எதிர்நோக்குகின்றது. இக் காலவரையின் இறுதியில், பயிரிடுபவருக்கு முன்பணம் கழிக்கப்பட்ட சராசரி விலை வழங்கப்படுகிறது. இம் முறையானது, பயிரிடுபவர்களுக்கு நாளடைவில் மிக உயர்ந்த இலாபங்களை நிச்சயப்படுத்துகின்ற மிகச்சிறந்ததும், பகுத்தறிவுள்ளதுமான ஒரு முறையாக வுள்ளது. எனினும், இம் முறையில் ஒரு பெரிய நடைமுறை மூலதனம் தேவைப்படுகிறது. அது குசராத்து மாநிலத்தில், பருத்திக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களால் வெற்றிகரமாக அனுசரிக்கப்படுகிறது. தமிழ் நாட்டில், நீலகிரிக் கூட்டுறவுவிற்பனைச் சங்கத்தால் உருளைக்கிழங்குக்காக ஒரு சில அளவுக்கு மட்டும் இம் முறை பின்பற்றப்படுகிறது. எனினும், பொதுவாக, இந்த முறையானது, சில பயிர்கள் விஷயத்தில், விற்பனைச் சங்கங்களால் தழுவப்படுவதற்குச் சாத்தியப்படாமலிருக்கலாம். மற்றும், தரப்படுத்துவதற்காகவும் ஒன்றுதிரட்டுவதற்காகவும் தேவையான தளவாடங்களும் அனுபவமும் சங்கங்களுக்குக் கிடைக்காமலிருக்கலாம். விளைபொருள்களின் விலைத் தொகை உடனே முழுமையாகச் செலுத்தப்பட்டபின்னரே விற்பனை செய்வதற்குப் பொதுவாக வழக்கப்பட்டிருக்கின்ற பயிரிடுபவர்கள், இம் முறையில் அறிவு புகட்டப்பட வேண்டும்.

### (ஈ) இருப்புச் சரக்குகளின்மீது அளிக்கப்படும் முன்கடன்கள்

அவசியமான நிறுத்திவைத்திருக்கும் சக்தியைப் பயிரிடுபவர்களுக்கு வழங்குவதற்கு, விற்பனைச் சங்கங்கள் தங்கள் கிடங்குகளில் அவர்களின் விளைபொருள்களைச் சேமித்துவைப்பதற்கு அனுமதித்து, இருப்புச் சரக்குகளின் ஆதாரத்தின் பேரில், பயிரிடுபவர்களுக்கு அவர்களின் அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக முன்கடன்களை அளிக்கின்றன. அத்தகைய முன்கடன்கள், அடகு செய்யப்பட்ட பொருள்களின் பெறுமானத்தில் 60-லிருந்து 75 சதவிகிதம் வரை அளிக்கப்படுகின்றன. விலைகள் ஏற்றமடையும் போது விளைபொருள்களை விற்பதற்குச் சங்கம் பயிரிடுபவருக்கு உதவிபுரிந்து, ஏற்கெனவே அளிக்கப்பட்ட முன்கடனைக் கழித்துக் கொண்டபிறகு எச்சத் தொகையை அவருக்குக் கொடுக்கிறது. இம் முறையானது, சங்கத்திற்கு நட்டவச்சத்தை விளைவிக்காமலும், சாகுபடியாளருக்கு அவசியமான நிறுத்திவைத்திருக்கும் சக்தியையளித்தும், பயிரிடுபவருக்கு மேலான விலைகளை நிச்சயப்படுத்தியும், ஆண்டுமுழுவதிலும் விலைவாசி நிலைபெருக்கத்தைச் செய்தும் உதவுகின்றது. தமிழ்நாட்டில், விற்பனைச் சங்கங்கள் தங்கள் உறுப்பினர்களுக்கு விளைபொருள்களின் அடகின் பேரில் கடன்களை யளித்து

வந்துள்ளன. கொள்முதல் கொள்கையின் காரணமாக, விளை பொருள்கள் அடகு கடன்களின் பருமம், 1960-61ஆம் ஆண்டில் ரூ. 2·21 கோடியாகவிருந்து, 1966-67ஆம் ஆண்டில், ரூ. 1.10 கோடியாக மட்டும் இருந்தது. 1971-72ஆம் ஆண்டில், பிரதமச் சங்கங்களால் அளிக்கப்பட்ட கடன்களும் முன்கடன்களும் ரூ. 3·03 கோடியளவுக் கிருந்தன.

### (உ) தரப்படுத்துதல் (Grading and standardisation)

விளைபொருள்களைத் தரப்படுத்துதல் (Grading) மிக அதிகமான விலைகளைக் கொண்டு வருவதற்கு உதவுகின்றது. கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள், அத்தகைய ஏற்பாடுகளைச் செய்து, தரமுள்ள பொருள்களை மேலான விலைகளுக்கு விற்பனை செய்வதற்குப் பயிரிடு பவர்களுக்கு உதவவேண்டும். தரப்படுத்தும் தளவாடங்களின் செலவுக்கான மானியத்தைப் பெறுவதற்காக விற்பனைச் சங்கங்கள் தகுதியுடையன. தமிழ்நாட்டில், நல்ல தரப்படுத்தும் நடவடிக்கைகளை ஊக்குவிப்பதற்காக விற்பனைச் சங்கம் ரூ. 7,500 அளவிற்கு (தரப்படுத்துதல் தளவாடங்களின் செலவுக்காக ரூ. 2,500/-ம் தரப்படுத்தும் சிப்பந்திகளின் செலவுக்காக, மூன்றாண்டு காலத்திற்குப் பரப்பப்பட்ட, ரூ. 5,000/-ம்) மானியமாக நிதியுதவி யளிக்கப் பட்டுள்ளது.

### (ஊ) ஏற்றுமதி வர்த்தகம் (Export Trade)

பல்வேறு மட்டங்களிலுள்ள கூட்டுறவு விற்பனைச் சங்கங்களும், மற்றும் சில பதனப்படுத்தும் சங்கங்களும்கூட, விவசாயப் பொருள்களை ஏற்றுமதி செய்து வந்துள்ளன. கூட்டுறவுச் சங்கங்களால் ஏற்றுமதி செய்யப்பட்ட பிரதானப் பொருள்களாவன: பருப்பு வகைகள், மிளகாய், வெங்காயம், மிளகு, பருத்தி, நிலக்கடலை, புகையிலை, வாழை, மாம்பழம் முதலியவையாகும். ஏற்றுமதி நடவடிக்கை, நாட்டிற்காகச் செலாவணியைக் கொண்டுவருவது மட்டுமல்லாமல், பயிரிடுபவருக்காகவும் நல்ல விலைகளையுங்கூடக் கொண்டுவருகிறது. கூட்டுறவுச் சங்கங்கள், தங்கள் உறுப்பினர்களின் விளைபொருள்களை ஏற்றுமதி செய்வதன் மூலம், நல்ல சேவையைப் புரியக்கூடும். தற்போது, இப் பணி, தேசிய விவசாயக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பாலும் மாநில மட்டத்துக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புகளாலும் மேற்கொள்ளப் படுகிறது. மற்றும், இக் கூட்டமைப்புகள், பிரதமக் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம், ஏற்றுமதி செய்யப்படவேண்டிய பொருள்களைக் கொள்முதல் செய்கின்றன. ஏற்றுமதி வர்த்தகத்தில் அவற்றின் நடவடிக்கைகள் 1967-68ஆம் ஆண்டில் ரூ. 1.6 கோடியிலிருந்து

1969-70ஆம் ஆண்டில் ரூ. 6·4. கோடிக்கு அதிகரித்தன. இந்த நேர்முக ஏற்றுமதிகளைச் செய்வதன்றியும், கூட்டுறவுச் சங்கங்கள், விவசாயப் பொருள்களின் ஏற்றுமதியில் பல்வேறு இதர அமைப்புகளுக்குங்கூட உதவி புரிந்தன. 1969-70ஆம் ஆண்டின் போது, காஃபி பதனப்படுத்தும் சங்கங்கள், ஏற்றுமதிக் காரியங்களுக்காக ஒன்று திரட்டும் பிரதிநிதிகளாகக் காஃபி வாரியத்திற்கு ரூ. 1·43 இலட்சம் பெறுமானமுள்ள காஃபியை ஒப்புவித்தது. 1969-70ஆம் ஆண்டின் போது கூட்டுறவுச் சர்க்கரைக் கூட்டமைப்புங்கூட 1·5 இலட்ச டன்கள் கச்சா சர்க்கரையை ஏற்றுமதிக்காகக் கொடுத்தது. நாட்டில் ஏற்றுமதிக்காகத் தயாரிக்கப்பட்ட மொத்தக் கச்சா சர்க்கரையில், இது 73 சதவிகிதமாக அமைந்திருந்தது.

### (எ) மாநிலங்களுக்கிடையிலான வர்த்தகம் (Inter state Trade)

இந்தியாவிற்குள் ஒரு மாநிலத்திலிருந்து மற்றொரு மாநிலத்திற்கு விவசாயப் பொருள்களின் வர்த்தகம், தற்போது மாநிலக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புகளாலும் தேசியக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பாலும் பெருமளவு கையாளப்பட்டு வருகின்றது. கையாளப்பட்ட பிரதான விவசாயப் பொருள்கள், உணவுத் தானியங்கள், தோட்டப் பயிர்கள், சணல், பருத்தி, எண்ணெய் வித்துகள், பிண்ணாக்குகள், பழவகைகள், காய்கறி வகைகளாக இருந்தன. மாநிலங்களுக்கிடையிலான வர்த்தகத்தில் மேற்கொள்ளப்பட்ட வாணிகம், 1967-68ஆம் ஆண்டில், ரூ. 57 கோடிக்கும், 69-70ஆம் ஆண்டில் ரூ. 66·6 கோடிக்கும் தொகைப் பட்டது. விவசாயப் பொருள்களின் மொத்தக் கொள்முதல் மீதான விலைவாசி ஏற்ற இறக்கத் தனிநிதித் திட்டம், மாநிலங்களுக்கு இடையிலான வர்த்தகத்தைப் பெருக்குவதற்குக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு உதவியது.

### (ஏ) உணவுத் தானியங்களைக் கொள்முதல் செய்தல் (Procurement of Foodgrains)

உணவுத் தானியங்களைக் கொள்முதல் செய்வதில் வேறுபடுகின்ற அளவுக்குக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் சேவைகளும், சில சமயங்களில் பிரதம விவசாயக் கடன் சங்கங்களின் சேவைகளும், பல்வேறு மாநில அரசுகளால் பயன்படுத்தப்பட்டன. மாநிலங்களில், கொள்முதல், இந்திய உணவுக் கழகத்தாலாவது அல்லது கூட்டுறவு விற்பனை நிறுவனங்களாலாவது அல்லது இவ்விரு நிறுவனங்களாலாவது செய்யப்பட்டு வருகின்றது. கொள்முதல் பணி கூட்டுறவுக் கூட்டமைப்புகளுக்கு ஒப்படைக்கப்பட்டிருந்த இடங்களிலெல்லாம், அவை பிரதம விற்பனைச் சங்கங்களின்

மூலம் கொள்முதல் செய்தன. கொள்முதல் செய்யப்பட்ட உணவுத் தானியங்களின் மொத்தப் பெறுமானம், 1967-68ஆம் ஆண்டில், ரூ. 72 கோடியாக விருந்தது. 1969-70ஆம் ஆண்டில் அது ரூ. 140·88 கோடியாக விருந்தது.

தமிழ்நாட்டில், உணவுக் கழகத்துடனும், தனியார் வர்த்தகர்களுடனும், கூட்டுறவு விற்பனைச் சங்கங்களுங்கூட, அரசு பிரதிநிதியாக நெல் கொள்முதலுக்காக அரசால் உபயோகப்படுத்தப்படுகின்றன. பொதுவாக, மாவட்ட விநியோக விற்பனைச் சங்கங்களுடன் சில மொத்த விற்பனைப் பண்டசாலைகளும், பிரதம விற்பனைச் சங்கங்களும், இக் காரியத்திற்காகப் பிரதிநிதிகளாக அமர்த்தப்படுகின்றன. இச் சங்கங்கள், பிரதம விற்பனைச் சங்கங்கள் மூலமாகவும், அவைகளின் உதவிப் பிரதிநிதிகளாகக் கடன் சங்கங்கள் மூலமாகவும் கொள்முதல் செய்கின்றன. நெல் கொள்முதல் ஒருமுகப்படுத்தப்பட்டிருக்கும் தஞ்சை மாவட்டத்தில், தஞ்சாவூர்க் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு ஏறக்குறையப்பெருமளவில் இவ் வேலையை அண்மையாண்டுகளில் மேற்கொண்டுள்ளது. 1966–67ஆம் ஆண்டில் சுமார் ரூ. 5 கோடி மதிப்புள்ள ஒரு இலட்ச டன்களுக்குச் சிறிது மேற்பட்ட நெல்லை அது கொள்முதல் செய்தது. 1969–70ஆம் ஆண்டில், கூட்டுறவுச் சங்கங்களால் மேற்கொள்ளப்பட்ட உணவுத்தானியங்களின் கொள்முதல் ரூ. 5·50 கோடிப் பெறுமானமுள்ள ஏறக்குறைய 1·1 இலட்ச டன்களுக் கிருந்தது,

### (ii) விவசாயத் தேவைகளின் விநியோகம்

**(அ) உரவகைகள் :** விற்பனைச் சங்கங்களின் விநியோக நடவடிக்கைகளுள், இதரச் சிறிய விவசாயத் தேவைகளைத் தவிரவும், இரசாயன உரங்களின் விநியோகம் முதலிடம் வகிக்கின்றது. எல்லா விற்பனைச் சங்கங்களின் விவசாயத் தேவைகள் மொத்த விற்பனைப் புரள்வு 1967–68ஆம் ஆண்டில் ரூ. 279·2 கோடியாகவும், 1968–69ஆம் ஆண்டில் 324.9 கோடியாகவும், 1969–70ஆம் ஆண்டில் ரூ. 369·2 கோடியாகவும் இருந்தது. இவற்றில், உரவகைகளின் விநியோகம், முறையே சுமார் ரூ. 246·1 கோடியாகவும், 275.4 கோடியாகவும், ரூ. 309·6 கோடியாகவுமிருந்தது, கூட்டுறவுச் சங்கங்களால் விநியோகிக்கப்பட்ட உரவகைகளின் பெறுமானம் 1970–71ஆம் ஆண்டில் ஏறக்குறைய ரூ. 250 கோடியாகவிருந்தது. 1973–74ஆம் ஆண்டில், கூட்டுறவு விநியோக முறையானது ரூ 450 கோடி மதிப்புள்ள உரவகைகளை விநியோகிக்கக் கூடிய நிலைமையில் இருக்குமென்று எதிர்நோக்கப்படுகிறது. உரவகைகள், வித்துகள், விவசாயக்

கருவிகள் ஆகிய விவசாயத் தேவைகள் தமிழ்நாட்டில் விற்பனைச் சங்கங்களால் ரூ. 19·25 கோடிப் பெறுமானத்திற்கு விநியோகிக்கப் பட்டன.

அண்மை வரையிலும், உற்பத்தி செய்யப்பட்டதும், இறக்கு மதி செய்யப்பட்டதுமான உரங்களனைத்தும், 1954ஆம் ஆண்டில் இந்திய அரசாலமைக்கப்பட்ட 'மத்திய உரவகைகள் தொகுப்' பின் கீழ் (Central Fertilizers Pool) கொண்டுவரப்பட்டு, அதிலிருந்து மாநில விற்பனைக் கூட்டமைப்புகளுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்டது. மாநில விற்பனைக் கூட்டமைப்புகள், இவ் வுரங்களை விற்பனைச் சங்கங்களின் மூலமும், சேவைக் கூட்டுறவுச்சங்கங்களின் மூலமும் விநியோகம் செய்தன. தமிழ்நாட்டில், மாநில மட்டத்தில் வரு வாய் வாரியமும் (Revenue Board) மாவட்ட மட்டத்தில் ஆட்சி யாளர்களும், மத்தியத் தொகுப்பு ஏற்பாட்டின்கீழ்ப் பெற்ற உரங் களின் விநியோகத்தைக் கண்காணிப்புச் செய்கின்றன. இந்த ஏற் பாட்டில் கூட்டுறவுச் சங்கங்களே, பிரதான விநியோகஸ்தர்களாக உள்ளன. 1964ஆம் ஆண்டு வரை கூட்டுறவுச் சங்கங்கள் ஏகபோக விநியோகத்தைப் பெற்றிருந்தன. அவ் வாண்டில் அவைகளின் முயற்சிகளுக்குத் துணைசெய்யும் நோக்கத்துடன், மாவட்ட ஆட்சியாளர்கள் யுக்தத்தில், தனியார்வர்த்தகத்தின் ஈடுபாட்டைக் கூட அரசு அனுமதித்தது. மாவட்ட விநியோக விற்பனைச்சங்கங் கள் (District Supply and Marketing Societies) இருப்புச் சரக்கு வைத்திருப்பவர்களாகவும் (Stockists), விற்பனைச் சங்கங்களும் பிரதமக் கடன் சங்கங்களும் மொத்த விற்பனையாளர்களாகவும் (Wholesalers) செயற்படுகின்றன. அவை, அனுப்பீடு அடிப் படையின் பேரில் (Consignment basis) சில்லறைப் பிரதிநிதிகளாகச் (Retail Agents) செயற்படும் விவசாயக் கடன் சங்கங்கள் மூலம் உரங்களை விநியோகம் செய்கின்றன. சில்லறை வர்த்தகத்தில் ஈடுபட்டிருக்கும் அத்தகைய சங்கங்கள் ஏறக்குறைய 3,700 ஆக இருக்கின்றன. அவை உறுப்பினருக்கும் உறுப்பினரல்லாதவருக் குங்கூட உரங்களை விற்பனை செய்கின்றன. சாகுபடிக் கடன்களைப் பெறும் விவசாயக் கடன் சங்கங்களின் உறுப்பினர்களுக்கு உரங்கள் கடன் பகுதியாக வழங்கப்படுகின்றன. மற்றவர் களுக்கு அவை ரொக்கத்திற்கு விற்கப்படுகின்றன. சில்லறை விலை (Retail Price) அரசால் நிர்ணயிக்கப்படுகிறது. 1966ஆம் ஆண்டு வரை, கிடைக்கின்ற உரங்க ளனைத்தையும் மத்தியத் தொகுப்பு ஏற்பாட்டின் மூலந்தான் இந்திய அரசு அனுப்பி வைத்தது. 1966ஆம் ஆண்டில் தடையிலா விற்பனை (Free Sale) நிலைமை களின்கீழ் விற்பதற்கு உள்நாட்டுத் தயாரிப்பாளர்களை இந்தியஅரசு படிப்படியாக அனுமதித்தது. இப்பொழுது, இறக்குமதி செய்யப்

பட்ட கலப்பற்ற உரங்களும், கலவை உரங்களும் மட்டுமே மத்தியத் தொகுப்பு ஏற்பாட்டின்மூலம் விநியோகம் செய்யப் படுகின்றன. சில விற்பனைச் சங்கங்கள், வேளாண்மைத்துறை இயக்குநரால் அங்கீகரிக்கப்பட்ட கலவை உரங்கள் தயாரிப்பிலும் விநியோகத்திலுங்கூட ஈடுபட்டுள்ளன. விற்பனைச் சங்கங்கள், தங்களால் தயாரிக்கப்பட்ட கலவைஉரங்களை அனுப்பீடு அடிப்படையில் விவசாயக் கடன் சங்கங்கள் மூலம், வேளாண்மைத்துறை இயக்குநரால் நிருணயிக்கப்பட்ட சில்லறை விற்பனை விலையில், விற்பனை செய்வதற்கு ஏற்பாடு செய்கின்றன, 1969ஆம் ஆண்டிலிருந்து, தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு, தஞ்சை மாவட்டம் நீங்கலாக, மாநிலம் முழுவதிலும் உரவிநியோகத்தை மேற்கொண்டுள்ளது. தஞ்சை மாவட்டத்தில், இந்த வேலை தஞ்சைக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பால் செய்யப்படுகிறது. தொடக்கத்தில், தலைமைக் கூட்டமைப்பானது, தொகுப்பில் சேராத உரங்களை (Non-Pool fertilizers) மட்டுமே விநியோகித்திருந்தது. பின்னர், தொகுப்பு உரங்களின் விநியோகத்தைக்கூடத் தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புக்கு அரசு ஒப்புவித்தது. குடியானவர்களுக்கு நேரடி விற்பனைக்காக இக் கூட்டமைப்பு சுமார் 3.500 பிரதமக் கடன் சங்கங்களுக்குத் தொகுப்பு உரங்களையும், தொகுப்பில் சேராத உரங்கள் சரக்கையும் ஒப்புவிக்கிறது. 1972–73ஆம் ஆண்டின்போது, அதனால் விற்கப்பட்ட உரங்களின் பெறுமானம் ரூ. 9·97 கோடிக்கு இருந்தது. 1–4–74ஆம் நாளிலிருந்து அது, தஞ்சை, நீலகிரி, கன்னியாகுமரி மாவட்டங்கள் நீங்கலாக எல்லா மாவட்டங்களிலும் அரசின் இருப்புச்சரக்கு வைத்திருப்பவராகச் செயற்பட்டு வந்துள்ளது. உரவகைகள் காலதாமதமில்லாமல் இயக்கப்படுவதற்காகக் கிடங்குகள் பல்வேறு இரயில் நிலையங்களில் வாடகைக்கு எடுக்கப்பட்டுள்ளன.

1967ஆம் ஆண்டில் கூட்டுறவுத்துறையில் அமைக்கப்பட்ட இந்தியக் குடியானவர்களின் உரவகைகள் கூட்டுறவு நிறுவனம் (Indian Farmers Fertilizers co-operative) அமெரிக்க உதவிக் கடனிலிருந்தும் (U. S. A. I. D) இங்கிலாந்து அரசு கடனிலிருந்தும் பெற்ற அன்னியச் செலாவணி உதவியைக் கொண்டு, அமோனியாவையும், என். பி. கே. (N. P. K)-யையும் தயாரிப்பதற்கு உரத் தயாரிப்பு அமைப்புகளை அமைக்க வேண்டும். மராட்டியத்தில் 1966ஆம் ஆண்டில் அமைக்க வேண்டியுள்ளது. 1966ஆம் ஆண்டில்மராட்டியத்தில்அமைக்கப்பட்ட 'கூட்டுறவு உரவகைகள், இரசாயனப் பொருள்கள் நிறுவனம்' (Co-operative Fertilizer & Chemicals Organisation) அமோனியம் குளோரைடைத் Ammonium Chloride) தயாரிப்பதற்காக ஒரு சப்பானிய நிறு

வனத்தின் ஒத்துழைப்புடன் ஒரு தொழிற்சாலையை அமைத்துள்ளது. தமிழ்நாட்டில், 'சிறு அணு உரவகைத் தொழிற்சாலை' யொன்று (Granule Fertilizer Factory) தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பால், தஞ்சை மாவட்டத்திலுள்ள மன்னார்குடியில், ரூ. 28 இலட்ச செலவில், ஒரு மணிநேரத்திற்கு 7·5 டன்கள் உற்பத்திச் சக்தியுடன் நிறுவப்பட்டுள்ளது. 1972–73ஆம் ஆண்டின்போது, அது ரூ. 178·91 இலட்ச மதிப்புள்ள 21,273 மெட்ரிக் டன்கள் அளவிற்குப் பல்வேறு தரங்கள் கலவை உரங்களை உற்பத்தி செய்தது.

(ஆ) **வித்துகள் :** கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள், மேம்படுத்தப்பட்ட வித்துகளின் விநியோகத்தில் அக்கறை எடுத்துள்ளன. உயர் விளைச்சல் தரும் வித்து வகைகளில் ஒரு பெரும் பகுதி கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் மூலம் விநியோகம் செய்யப்படுகின்றது. 1968-69ஆம் ஆண்டில் ரூ. 24 கோடிப் பெறுமானமுள்ள வித்துகளை அவை விநியோகித்தன. 1960–61ஆம் ஆண்டில் ரூ. 3 கோடிப் பெறுமானமுள்ள வித்துகளைத்தாம் அவை விநியோகித்தன. விவசாயக் கருவிகள் மற்றும் இதர உற்பத்தித் தேவைகளின் விநியோகத்தில் கூட்டுறவுச் சங்கங்களால் அடைந்த முன்னேற்றமுங்கூடக் குறிக்கப்படவேண்டிய வகையிலிருந்தது. கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் விநியோகிக்கப்பட்டிருந்த பொருள்களின் பெறுமானம் 1960–61ஆம் ஆண்டில் ரூ. 4·4. கோடியிலிருந்து 1968–69ஆம் ஆண்டில் ரூ. 22 கோடிக்கு உயர்ந்தது.

தமிழ்நாட்டில், தெரிந்தெடுக்கப்பட்ட விற்பனைச் சங்கங்கள், விவசாய இலாக்காவின் வழிகாட்டுதலின் கீழ், மேம்படுத்தப்பட்ட வித்துகளை வழங்கும் பணியை மேற்கொண்டுள்ளன. சுமார் 6,000 ஏக்கர்களில் எம். சி. யு. 2 பருத்தியைச் சாகுபடி செய்வதற்காக ஸ்ரீவில்லிபுத்தூர்க் கூட்டுறவு விற்பனைச் சங்கத்தால் வித்துப் பண்ணைக் குடியானவர்கள் (Seed farm Ryots) தெரிந்தெடுக்கப்பட்டு, அவர்களுக்குப் பருத்தி விதைகள், பெருக்கத்திற்காக விற்பனைச் சங்கத்தால் விநியோகிக்கப்பட்டன. தெரிந்தெடுக்கப்பட்ட குடியானவர்களால் விளைவிக்கப்பட்ட வித்துகள், விற்பனைச் சங்கத்தால் கொள்முதல் செய்யப்பட்டுப் பருத்தி விளைவிப்பவர்களுக்கு விநியோகிக்கப்படுகிறது. 1971-72ஆம் ஆண்டிலிருந்து, அது சுமார் 1·850 குவிண்டால்கள் அளவிற்கு விதைகளைக் கொள்முதல் செய்து விநியோகித்தது. இதே வகையான பணியானது நிலக்கடலை விஷயத்தில், 9 விற்பனைச் சங்கங்களால் மேற்கொள்ளப்பட்டது. 1971-72ஆம் ஆண்டின் போது, அவை, வித்துப்பண்ணைக் குடியானவர்களிடமிருந்து சுமார் 2,350 குவிண்டால்கள் விதையை,

விநியோகத்திற்காகக் கொள்முதல் செய்தன. தஞ்சைக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு, விதை பதனப்படுத்துதல் உலர்த்துதல் செயல் விளக்க அமைப்பு ஒன்றை அமைத்துள்ளது. ரூ. 3.7 இலட்சம் விலையுள்ள இந்தத் தளவாடம், ஃபோர்டு ஃபவுண்டேசனால் (Ford Foundation) வெகுமதியாகக் கொடுக்கப்பட்டது. இத் தளவாடத் தால் பதனப்படுத்தப்படுகின்ற நெல்வித்துகள் 90 சதவிகிதத் திற்கு மேற்பட்ட ஒரு மிக உயர்ந்த பெருக்கம் செய்யும் சதவிகி தத்தைப் பெற்றுள்ளன.

## 9. விற்பனையுடன் கடனளிப்பை இணைத்தல்

அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவினர் (1954) ஒருங்கிணைந்த கடன் திட்டத்தின் முக்கியமான ஓர் அம்சமாகக் கூட்டுறவுக் கடனளிப்பிற்கும் கூட்டுறவு விற்பனைக்குமிடையே ஓர் இணைப்பு நிறுவப்பட வேண்டுவதைப் பரிவுரை செய்தனர். அத்தகைய இணைப்பானது இரண்டு காரியங்களுக்காக உதவி புரியும். அதாவது, விளைபொருள்களின் விற்பனைத் தொகையி லிருந்து தாமதமின்றிக் கடன்கள் வசூல் செய்யப்படுதலும் கட் டமைந்த விற்பனையின் நன்மைகளைக் கடன் சங்கங்களின் உறுப் பினர்கள் பெறுதற்கு வகைசெய்யப்படுதலுமாம். அதனால், கூட் டுறவு விற்பனையின் முன்னேற்றத்திற்கான ஓர் ஆக்கமு மளிக்கப் படுகிறது. கீழ்க்காணும் வகையில், இந்த இணைப்பு ஏற்படுத்தப் படுகிறது.

விற்பனைச் சங்கத்தின் மூலம் தங்கள் விளைபொருள்களை விற் பனை செய்வதற்கு உடன்பட்டும், கடன் சங்கத்திற்குப் பாக்கியாக உள்ள தொகையை விற்பனைத் தொகையிலிருந்து கழித்துக் கொள் வதற்கு விற்பனைச் சங்கத்திற்கு அதிகாரமளித்தும் ஒப்பந்தங்கள் பிரதமக் கடன் சங்கங்களில் கடன் வாங்குபவர்களிடமிருந்து வாங் கப்பட வேண்டும். பயிர்கள் அறுவடைக்குச் சில காலத்திற்கு முன்பு, கடன் வாங்கினவர்களின் பெயர்களும் அவர்களிடமிருந்து வரவேண்டிய கடன் தொகைகளும் குறிக்கப்பட்ட ஒரு கேட்புப் பட்டியலைக் கடன் சங்கம் அனுப்பி வைக்க வேண்டும். விளைபொருள்கள் விற்பனை செய்யப்படுகின்றபோது, விற்பனைத் தொகையிலிருந்து கடன் சங்கத்திற்குக் கொடுக்கப்படவேண்டிய கடனைக் கழித்தல் செய்து, அதைக் கடன் சங்கத்திற்கு விற்பனைச் சங்கம் அனுப்பி வைக்கவேண்டும். அநேகமாக, 1956ஆம் ஆண்டில் மேற்கொள்ளப்பட்ட, இந்த இணைப்புத் திட்டம் சில முன்னேற் றத்தை அடைந்துள்ளது. 1969-70ஆம் ஆண்டின் போது, 1,160 விற்பனைச் சங்கங்கள் மட்டும், சுமார் 14,230 கடன் சங்கங்களால்

அளிக்கப்பட்ட கடன்களை, ரூ. 14·66 கோடியளவிற்கு வசூல் செய்தன. உறுப்பினர்களின் விளைபொருளின் விற்பனைத் தொகையிலிருந்து கூட்டுறவுச் சங்கங்களால் (விற்பனைச் சங்கங்களும் பதனப்படுத்தும் சங்கங்களும், பிரதம விவசாயக் கடன் சங்கங்களும்) செய்யப்பட்ட மொத்த வசூல்கள் ரூ. 83·7 கோடியாக இருந்தது. அவ் வாண்டில், விவசாயக் கடன் சங்கங்களால் செய்யப்பட்ட ரூ. 455·2 கோடி மொத்த வசூல்களில் அது சுமார் 1/5 ஆக இருந்தது. தமிழ்நாட்டில், 71-72ஆம் ஆண்டின் போது, விவசாயக் கடன் சங்கங்களால் அளிக்கப்பட்ட ரூ. 3·93 கோடிச் சாகுபடிக் கடன்களை, உறுப்பினர்களால் விற்பனைக்குக் கொண்டுவரப்பட்ட விளைபொருள்களின் மதிப்பிலிருந்து, கூட்டுறவுச் சங்கங்கள் வசூல் செய்தன. இவ் வகையான வசூல் தொகை 1970-71ஆம் ஆண்டில் ரூ. 33 கோடியாக இருந்தது. விவசாயக் கடன் சங்கங்களால் அளிக்கப்பட்ட மொத்தத் தொகைகள், 1970-71ஆம் ஆண்டின், போதும், 1971-72ஆம் ஆண்டின் போதும், முறையே ரூ. 47·45 கோடியாகவும், ரூ. 60·80 கோடியாகவும் இருந்தன.

இந்த இணைப்பு முறையானது போதிய அளவுக்கு வேரூன்றாமல் இருந்துள்ளது என்றுதான் கூறப்பட வேண்டும். இதற்கு முக்கியக் காரணம், பெரும்பாலான பிரதம விற்பனைச் சங்கங்களின் பல பயனுறுதியற்ற செயற்பாடும் அதன் விளைவாக, குடியானவர்களின் விளைபொருள்களை, அவர்களின் நன்மைக்காகக் கையாளும் விஷயத்தில், சங்கங்கள் குடியானவர்களின் நம்பிக்கையைப் பெறுவதற்கு முடியாமலிருப்பதுமாகும். இதன் தொடர்பாகத் தலைமை விற்பனைக் கூட்டமைப்புகளின் பணியும், நிதியளிப்பு வங்கிகளின் பணியுங்கூடக் குறிப்பிடத் தக்கதாக இருக்கவில்லை. இந் நிலையங்கள் தங்கள் சொந்த நலனுக்காகவுங்கூட, பிரதம மட்டத்தில் பயிரிடுபவர்கள் அதிகமாகத் தங்கள் விளைபொருள்களை விற்பனைச் சங்கங்கள் மூலமாகவும் பதனப்படுத்தும் சங்கங்கள் மூலமாகவும் விற்பனை செய்வதற்கான ஏற்பாடுகளைத் தொடங்குவதற்காகவும், வழிகாட்டுவதற்காகவும், மேற்பார்வை செய்வதற்காகவுமான அவசியத்தை அதிகமாக உணரவேண்டும். மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் உதவியானது, வெறும் கடனளிப்பிற்கு மட்டும் அடைக்கப்படாமல், இணைப்புத் திட்டம் முழுமைக்கும் அவ் வுதவி அளிக்கப்பட வேண்டும்: அவசியமான நிர்வாகக் கண்காணிப்பும் மேற்பார்வையும் திட்டத்திற்கு அவ் வங்கிகளால் வழங்கப்படவேண்டும். இவ் வேறுபாடுகளைப் பின்பற்றி வருவதற்கு உறுப்பினர்களுக்கு அறிவு புகட்டுதலுங்கூட அவசியமாகவுள்ளது.

**பொருட்சேமிப்பு வசதிகள்** (Storage facilities)

உணவுத் தானியங்கள் மற்றும் இதர விவசாய விளைபொருள்களின் விற்பனையைக் குறித்துத் தங்கள் பொறுப்புகளை ஆற்றுவதற்காகவும், விவசாய உற்பத்தித் தேவைகளை விநியோகம் செய்வதற்காகவும்கூட, விற்பனைச் சங்கங்கள் பொருட் சேமிப்புக்கான போதிய இடவசதியைப் பெற்றிருக்க வேண்டும். கிடங்குகளைக் கட்டுவதற்கான நிதிஉதவி இப்பொழுது விற்பனைச் சங்கங்களுக்குக் கிடைக்கின்றது. பல்வேறு மட்டங்களில் கூட்டுறவுச் சங்கங்களால், பொருட் சேமிப்பு வசதிகள் திட்டமிடுப்படுதலில், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம் தன்னைத் தீவிரமாக இணைத்துக் கொண்டுள்ளது. ஒவ்வொரு விற்பனைச் சங்கமும் ஏறக்குறைய 250 டன்கள் கொள்ளளவைக் கொண்ட, மண்டி மட்டத்துக் கிடங்கு ஒன்றை ரூ.50,000 செலவில் கட்டுவதற்கு ஊக்குவிக்கப்படுகிறது. கட்டடச் செலவில் 75 சதவிகிதம் கடனாகவும், எச்சம் மானியமாகவும், மாநில அரசாலும், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தாலும் அளிக்கப்படுகின்றது. இதில் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் பாகம் 12½ சதவிகிதமாக உள்ளது. 15 ஆண்டுகளில் கடன் திருப்பிச் செலுத்தப்படவேண்டும். இந்த மண்டிமட்டத்துக் கிடங்குகள், விவசாயக் கடன் சங்கங்களால் சுமார் ரூ. 12,500 செலவில் கட்டப்பட்ட கிராமக் கிடங்குகளால் ஆதரிக்கப்படுகின்றன. இவ்வாறு கட்டப்படுகின்ற கிடங்குகளுக்குங்கூட, கடனும் மானியமும் மேற்குறிக்கப்பட்ட விகிதாசாரத்தில் வழங்கப்படுகின்றன. மற்றும், சங்கங்கள், தங்கள் பொருட் சேமிப்பு இடத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குக் கிடங்குகளை வாடகைக்கு எடுக்கின்றன. 30–6–70 வரை, விவசாயக் கடன் சங்கங்களுக்குச் சொந்தமாக 17,908 கிடங்குகளும், விற்பனைச் சங்கங்களுக்குச் சொந்தமாக 5,578 கிடங்குகளும், முறையே 19.62 இலட்சம் டன்கள், 21.09 இலட்சம் டன்கள் பொருட் சேமிப்புக் கொள்ளளவுடன் இருந்தன.

தமிழ் நாட்டில், 30–6–72ஆம் நாள் வரை, விவசாயக் கடன் சங்கங்கள் 1,578 கிடங்குகளையும், விற்பனைச் சங்கங்கள் 167 கிடங்குகளையும், 2.13 இலட்ச மெட்ரிக் டன்கள் மொத்தப் பொருட் சேமிப்புக் கொள்ளளவுடன் சொந்தமாக வைத்திருந்தன. மற்றும், 106 கிடங்குகள், சுமார் 25,000 மெட்ரிக் டன்கள் பொருட் சேமிப்புக் கொள்ளளவுடன், கூட்டுறவுச் சங்கங்களால் பிரத்தியேகமாக இரசாயன உரங்களைச் சேமிப்பு வைப்பதற்காகக் கட்டப்பட்டிருந்தன.

## 10. உயர்நிலைக் கூட்டுறவு விற்பனை நிறுவனங்கள்

### (i) தேசிய விவசாயக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு (National Agricultural Co-operative Marketing Federation)

1958ஆம் ஆண்டில், மாநில மட்டத்துக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புகளால், முக்கியமாகப் பண்ணை விளைபொருள்களில் மாநிலங்களுக்கிடையிலான வர்த்தகத்தையும் ஏற்றுமதி வர்த்தகத்தையும் வளர்ப்பதற்காக இந் நிறுவனம் அமைக்கப்பட்டது. தொடக்கத்திலிருந்து அது நிலையான முன்னேற்றத்தையடைந்து வந்துள்ளது. 17 மாநில மட்டத்து விற்பனைக் கூட்டமைப்புகளும் யூனியன் பிரதேசக் கூட்டமைப்புகளும் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகமும், அதன் உறுப்பினர்களாக உள்ளன. 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், அதன் பங்கு மூலதனம் ரூ. 39·25 இலட்சமாகவும், காப்பு நிதி ரூ. 21.44 இலட்சமாகவும், இதர நிதிகள் ரூ. 31·82 இலட்சமாகவும், வைப்புகள் ரூ. 18·90 இலட்சமாகவும் இருந்தன. அதன் கடன் பெற்ற இதர மூலதனம் ரூ. 2.54 கோடியாக இருந்தது. அதன் நடைமுறை மூலதனம் ரூ. 4.29 கோடியாக இருந்தது. அதற்குச் சொந்தமான விவசாய விளைபொருள்களின் இறுதிக் கையிருப்புச் சரக்கு ரூ. 178 இலட்ச மதிப்புள்ளதாகவும், பிரதிநிதியாக வைக்கப்பட்டிருந்த நுகர் பொருள்களின் இறுதிக் கையிருப்புச் சரக்கு ரூ. 5.84 இலட்சமாகவுமிருந்தது. அது 30,000 குவிண்டால்கள் பொருட் சேமிப்புக் கொள்ளளவைக் கொண்ட கிடங்கு ஒன்றை வைத்துள்ளது. 1970-71ஆம் ஆண்டின்போது, 744.86 இலட்சம் பெறுமானமுள்ள விவசாய விளைபொருள்களைக் கொள்முதல் செய்து ரூ. 1,006·44 இலட்சம் பெறுமானமுள்ள சொந்தமான விவசாய விளைபொருள்களை விற்பனை செய்தது. அது 7·90 இலட்சம் இலாபத்தை ஈட்டியது. 1971–72ஆம் ஆண்டின்போது மாநிலங்களுக்கிடையிலான வர்த்தகத்தில் ரூ. 1·43 கோடிக்கு விற்பனைப் புரள்வைப் பெற்றிருந்தது. 1971ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் இறுதிவரை, பண்ணைப் பொருள்களின் ஏற்றுமதி வர்த்தகத்தில் அது ரூ. 3·68 கோடிக்கு விற்பனைப் புரள்வைப் பெற்றிருந்தது. ஏற்றுமதிகள், இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், ஆங்காங், சப்பான், பெல்சியம், பிஜித் தீவுகள், ஆஸ்த்ரேலியா, கானடா, அமெரிக்கா, மொரீசியஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளுக்கும், பல்வேறு ஆஃப்பிரிக்க, மேற்கு ஆசிய நாடுகளுக்கும் செய்யப்பட்டன. ஏற்றுமதி செய்யப்பட்ட பொருள்கள், முக்கியமாகப் பருப்பு வகைகள், வெங்காயம், மிளகாய், பூண்டு, அரிசி, மக்காச்சோளம், மசாலாச் சரக்குகள், எண்ணெய் வித்துகள், ஏலக்காய், கருப்பு

மிளகு, சுக்கு முதலியவையாகும். மாநிலங்களுக் கிடையிலான வர்த்தகம், பெரும்பாலும் பருப்பு வகைகள், தானிய வகைகள், சணல் ஆகிய பொருள்களி லிருந்தது. இறக்குமதிகள் குறிப் பிடத்தக்க அளவுள்ளதாக இல்லை. உரவகைகளும், உலர்ந்த பழ வகைகளும் (dry fruits), விவசாய இயந்திரங்களும் முக்கிய இறக்குமதிகளாக உள்ளன. தேசிய விவசாய விற்பனைக் கூட்டமைப்பு, டில்லி, கல்கத்தா, சென்னை, கொச்சி, நாசிக், சண்டிகார், தூத்துக்குடி, பம்பாய், ஐதராபாத்து ஆகிய இடங்களில் கிளைகளைப் பெற்றுள்ளது. கிளைகள், மாநிலங்களுக் கிடையிலான வர்த்தகத்தையும், ஏற்றுமதி வர்த்தகத்தையும், வளர்ச்சி செய்ய வேண்டும். மற்றும், அவை தங்கள் அலுவல் எல்லைகளிலுள்ள வாடிக்கையாளர்களுடன் நெருங்கிய தொடர்பை வைத்துக் கொள்வதுடன், மாநிலக் கூட்டமைப்புகளின் நடவடிக்கைகளை ஆதரித்து, அந்தந்த மண்டலங்களிலுள்ள விற்பனை யமைப்பைப் பலப்படுத்துவதில் உதவி செய்தது. 1969-70ஆம் ஆண்டின்போது, விவசாய இயந்திரங்களில் அதன் விற்பனை ரூ. 23·8 இலட்சமளவிற்கு இருந்தது. 1968–69ஆம் ஆண்டின்போது, அது டில்லியிலும், இமாசலப் பிரதேசத்திலுமுள்ள குடியானவர்களுக்கு, இறக்குமதி செய்யப் பட்ட இயந்திரக் கலப்பைகளை விநியோகிப்பதன்மூலம், விவசாய இயந்திரங்களின் விநியோகத்தையும் மேற்கொண்டது.

ஒரு கூட்டாட்சி யமைப்பின் உண்மையான உட்கருத்தில், தேசிய விவசாய விற்பனைக் கூட்டமைப்பானது, மாநில விற்பனைக் கூட்டமைப்புகளின்மூலம், மாநிலங்களில் செயல்படுகின்றது. மாநிலக் கூட்டமைப்புகளின் மூலம் ஏற்றுமதிக்காகத் தேவைப் படும் எல்லா விவசாயப்பொருள்களும், தேசியக் கூட்டமைப்பால் கொள்முதல் செய்யப்பட்டு, மாநிலங்களில் எல்லா விற்பனைகளும் விநியோகங்களும் மாநிலக் கூட்டமைப்புகளின்மூலம் செய்யப் படுகின்றன. மாநிலக் கூட்டமைப்புகள் அத்தகைய விற்பனைகளை மேற்கொள்வதற்கு இயலாமையைக் காண்பிக்கும்போதும், அல்லது விற்பனைகள் ஏலத்தின்மூலம் செய்யப்படும்போதும், அவ்வாறு செய்யப்படுகிறதில்லை. தேசியக் கூட்டமைப்பின் அலுவல், பிரதானமாக மாநிலங்களுக் கிடையிலான வர்த்தகமும், ஏற்றுமதியும், குடியானவர்கள் தேவைகளின் இறக்குமதியும், மற்றும், அபிவிருத்தி நடவடிக்கையுமாக உள்ளது. தேசிய விவசாய விற்பனைக் கூட்டமைப்புத் தொழில் நுட்ப அறிவுள்ள சிப்பந்திகளைப் பராமரிக்கிறது. இந்தச் சிப்பந்திகள் சந்தை ஆராய்ச்சிகளைச் செய்து, உபயோகமுள்ள புள்ளி விவரங்களைச்

சேகரித்து, அவற்றை வாடிக்கையாளர்களுக்குச் சுற்றறிக்கையாக அனுப்பி வைக்கின்றனர். விவசாயத்தில் ஈடுபடுத்தப்படும் பொருள்களைப் பற்றிய அதன் குழுமம் (Cell), தேசிய விதைகள் கழகம் (National Seeds Corporation), இந்திய உரவகைகள் கழகம் (Fertilizers Corporation of India), உர வகைகளைத் தயாரிக்கும் இதரக் கம்பெனிகளைப் போன்ற நிறுவனங்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டு, நாட்டில் விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்களுக்காக, அந் நிறுவனங்களிலிருந்து விநியோக வீதப் பங்குகளைப் (Quotas) பெறுவதில் உபயோகமுள்ள வகையில் பணிபுரிந்துள்ளது. பழவகைகளையும், காய்கறிவகைகளையும், பதனப்படுத்துதலைப் பற்றிய அதன் குழுமம், நாட்டிலுள்ள சங்கங்களுக்கு, அமைப்புப் பற்றிய மாதிரியினைத் தயாரிப்பதிலும், பழவகைகள், காய்கறிவகைகள் அமைப்புகளை நிறுவுவதிலும் உதவுகின்றது.

### (ii) தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு (Tamil Nadu Co-operative Marketing Federation)

தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு, 1959ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டு, 1966ஆம் ஆண்டில் பிரதம விற்பனைச் சங்கங்களின் ஒரு கூட்டமைப்பாகச் சீரமைக்கப்பட்டது. 122 பிரதமக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களும், தமிழ்நாடு தானியச் சேமிப்புக் கிடங்குக் கழகமும் (Tamil Nadu Warehousing Corporation), தமிழ்நாடு அரசும், அதன் உறுப்பினர்களாக வுள்ளனா. இம் மூன்று வகை உறுப்பினர்களின் பங்கு மூலதனம், முறையே ரூ. 8.10 இலட்சமாகவும் ரூ. 10,000/-ஆகவும் ரூ. 1.35 கோடியாகவு மிருந்தது. இக் கூட்டமைப்பின் பிரதான நோக்கங்களாவன: விவசாயத்தில் ஈடுபடுத்தப்படும் பொருள்களையும், தேவைகளையும் குடியானவர்களுக்கு வழங்குதலும், உறுப்பினர்களின் உபரி விளைபொருள்களை நியாயமான விலைகளில் விற்பனை செய்தலும், பதனப்படுத்தல் நடவடிக்கைகளை மேற்கொள்ளுதலும், பொருட் சேமிப்பு வசதிகளை வழங்குதலுமே. இக் கூட்டமைப்பின் பல்வேறு திட்டங்களுக்காக, ரூ. 28.59 இலட்சமளவிற்கு நீண்டகாலக் கடன்களை அரசு வழங்கியுள்ளது. இதில், 30-6-74ஆம் நாளன்று, ரூ. 26.42 இலட்சம் நிலுவையிலிருந்தது. உரவகைகள் வாணிகத்திற்காகவும், சிறு அனு உரங்கள் அமைப்பிற்காகவும், பொது வியாபாரத்திற்காகவும், 73-74ஆம் ஆண்டின்போது அது தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியிடமிருந்து ரூ. 325 இலட்சமளவிற்கு ரொக்கக்கடன் வசதிகளைப் பெற்றிருந்தது.

1968ஆம் ஆண்டின் ஆரம்ப காலம்வரை, கூட்டமைப்பின் நடவடிக்கைகள், அத்தியாவசிய நுகர்பொருள்களின், முக்கிய மாக உணவுத் தானியங்களின் விநியோகத்திற்கு மட்டும் அடைக் கப்பட்டிருந்தன சர்க்கரை,மண்ணெண்ணெய் விநியோகத்திற்காக, சென்னை மாநகரத்தின் ஒரு பகுதிக்கு மொத்த விற்பனையாளராக வும் அது செயற்படுகிறது. 1964–65ஆம் ஆண்டில், அது வட மாநிலங்களிலிருந்து சுமார் ரூ. 1 கோடி மதிப்பிற்குச் சுமார் 13,000 டன்கள் பருப்பு வகைகளைக் கொள்முதலும், மாவட்ட விநியோக விற்பனைச் சங்கங்களுக்கும் தனியார் வர்த்தகர்களுக் கும் அரியானு மாநிலத்திலிருந்து, ரூ. 3 இலட்சமளவிற்குக் கடலைப் பருப்பை இறக்குமதியும் செய்தது. ஆண்டு ஒவ்வொன்றி லும் அது சுமார் 7.5 இலட்சம் மதிப்புள்ள மண்ணெண்ணெயைக் கையாண்டது. 1967–68ஆம் ஆண்டில், விவசாய விளைபொருள் களின் ஏற்றுமதித் துறையில், அது ரூ. 1.80 இலட்சம் மதிப்புள்ள 1,500 டன்கள் வெங்காயத்தைத் தேசிய விவசாய விற்பனைக் கூட்டமைப்பின் ஒரு பிரதிநிதியாக இலங்கைக்கு ஏற்றுமதி செய்வ தன்மூலம், ஓர் ஆரம்பத்தைச் செய்தது.

1969ஆம் ஆண்டிலிருந்து, இக் கூட்டமைப்பு, பதனப்படுத் தல் நடவடிக்கையை யன்றியும் தஞ்சை மாவட்டம் நீங்கலாக, மாநிலம் முழுவதுமான உர விநியோகத்தையும் மேற்கொண் டிருந்தது. ஒன்றுதிரட்டப்பட்ட உரவகைகளிலும் ஒன்றுபடுத்தப் படாத உரவகைகளிலும் அது வர்த்தகம் செய்கிறது. மற்றும், அது அவற்றைச் சுமார் 3,500 கிராமக் கடன் சங்கங்களின் மூலம் விநியோகம் செய்வதற்கான ஏற்பாட்டைச் செய்கிறது. 1974ஆம் ஆண்டுச் சூன் மாதம்வரை, இக் கூட்டமைப்பு ரூ. 29.96 கோடி மதிப்புள்ள 2.55 இலட்ச மெட்ரிக் டன்கள் உரங்களை விநியோகம் செய்தது. ஒரு மணி நேரத்தில் 7.5 டன்கள் உற்பத் திச் சக்தியுடன் ரூ.28 இலட்சம் செலவில் மன்னார்குடியில் இக் கூட் டமைப்பால் அமைக்கப்பட்ட சிறு அணு உரங்கள் தொழிற்சாலை யானது, 1973-74ஆம் ஆண்டில், 26,205 மெட்ரிக் டன்கள் அளவிற்குப் பல்வேறு தரக் கலவை உரங்களைத் தயாரித்தது. நெல், மிளகாய், கம்பு, சோளம், மஞ்சள், கடலைப்பருப்பு, வெல்லம், தனியா முதலியன போன்ற விவசாயப் பொருள்களை அது விற்பனை செய்து வந்துள்ளது. இப் பொருள்கள், கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின்மூலமும், சில சந்தர்ப்பங்களில் ஒழுங்கு முறைப்படுத்தப்பட்ட அங்காடிகளின் சேவைகளைப் பயன்படுத்தி யும் கொள்முதல் செய்யப்பட்டன. 1973–74ஆம் ஆண்டின் போது, இக் கூட்டமைப்பால் விற்பனை செய்யப்பட்ட விவசாயப் பொருள்களின் பெறுமானம் ரூ. 57.60 இலட்சமாக இருந்தது.

தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம், ரூ. 42 இலட்சம் செலவில், சூரியகாந்திவிதை எண்ணெய் தயாரிக்கும் அமைப்பு (Sun flower seed oil extraction plant) ஒன்றைத் தென்னார்க்காடு மாவட்டத்திலுள்ள விருத்தாசலத்தில் அமைப்பதற்கான ஒரு திட்டத்தை ஒப்பளித்துள்ளது. இதன் தொடர்பான ஆரம்ப வேலை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. திருவண்ணாமலையில் ரூ. 107 இலட்சம் செலவில், நிலக்கடலை எண்ணெய் தயாரிக்கும் அமைப்பையும், சுத்திகரிக்கப்பட்ட எண்ணெய் தயாரிக்கும் அமைப்பையும் (Groundnut oil extraction plant & Refined oil plant) நிறுவுவதற்கான திட்டங்கள் பகுதியாகத் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தால் அங்கீகரிக்கப்பட்டு, அத் திட்டங்களை இக் கூட்டமைப்புத் தன் கைவசம் வைத்துள்ளது. பருத்தி விதை எண்ணெய் இயந்திரம் ஒன்றை அமைப்பதுகூட ஆலோசனையி லுள்ளது. மன்னார்குடியில் ரூ. 2.35 இலட்சம் செலவில், இயந்திரக் கலப்பைகளை வாடகைக்கு எடுப்பதற்காகவும், சரிப்படுத்துவதற்காகவும் (Custom hiring and servicing) ஓர் இயந்திரக் கலப்பைத் தொழிற்சாலை, 1972ஆம் ஆண்டு டிசம்பரிலிருந்து செயற்பட்டு வந்துள்ளது. தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்திடமிருந்து இக் கூட்டமைப்பு நிதியுதவி பெற்று, 1,250 மெட்ரிக் டன்கள் பொருட் சேமிப்புக் கொள்ளளவைக்கொண்ட ஒரு குளிர்பதனப் பொருட் சேமிப்பு இயந்திரத்தைச் சென்னையில் அமைத்துள்ளது. இந்த இயந்திரத்தின் விலை சுமார் ரூ. 10 இலட்சமாகும். அஃதோடு, நாளொன்றுக்கு 10 டன்கள் உற்பத்திச் சக்தியைக் கொண்ட ஒரு பனிக்கட்டி உற்பத்தி இயந்திர அமைப்புங்கூட அமைக்கப்பட்டுள்ளது. குளிர்பதன இயந்திரத்தில், ஆப்பிள்களையும், உருளைக்கிழங்குகளையும், காய்கறிகளையும், பாலையும் இருப்பு வைப்பதற்காக வாடிக்கையாளர்களுக்கு வாடகைக்கு இடம் விடப்படுகிறது. காஷ்மீர்ப் பழங்கள் விளைவிப்பவர்களின் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பின் (Kashmir fruit growers corporation marketing federation) ஒத்துழைப்பில் தமிழ்நாட்டில் காஷ்மீர் ஆப்பிள்கள் சேமித்து வைக்கப்பட்டு விற்பனையும் செய்யப்பட்டன. சென்னையிலும், செங்கையிலும், மன்னார்குடியிலும் அதற்கான கிடங்குகளைக் கட்டுவதற்காகத் திட்டங்கள் அமுல்படுத்தப்பட்டு வருகின்றன. 7 இதர இடங்களிலும் கிடங்குகளைக் கட்டுவதற்காகத் திட்டங்கள் கைவசமுள்ளன.

தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தால் ஒப்பளிக்கப்பட்ட 'தொழில் நுட்பம் மற்றும் அபிவிருத்திக் குழுமம்' (Technical and promotional cell) அமைப்பதற்கான திட்டத்தின்கீழ் இக் கூட்டமைப்பு, தலைமை உரங்கள் அலுவலர், தலைமை விற்பனை

அலுவலர், தலைமைக் கணக்கியல் அலுவலர், சிவில் பொறியாளர், தொழில்நுட்ப வல்லுநர், உதவி உரங்கள் அதிகாரி, உதவி விற்பனை அதிகாரி ஆகியவர்களை அமர்த்தியுள்ளது. இக் காரியத்திற்காகத் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்திடமிருந்து, ஒரு வழுக்கு விகிதத்தில், இக் கூட்டமைப்பு நிதியுதவி பெறுகிறது. தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் யோசனையின்படி, இக் கூட்டமைப்பு, பொதுவான பணிமுறைப் பிரிவுத் திட்டம் ஒன்றையுங்கூட (Common cadre scheme) நிறுவியுள்ளது. மேலாண்மைப் பொறுப்பில் இந்தப் பணியாளர் தொகுதியைக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களில் நியமித்தல் செய்யும் நோக்கத்துடன், இத் திட்டம் தொடங்கப்பட்டது. அத்தகைய 27 நபர்களுள், சங்கங்களில் மூவரும், எஞ்சியுள்ளவர்கள் தலைமைச் செயலகத்திலும் அல்லது அதன் 12 மண்டல அலுவலகங்களிலும் பணிபுரிகின்றனர்.

கூட்டமைப்பின் நிருவாகம் 18 இயக்குநர்களைக் கொண்ட ஓர் இயக்குநர் குழுவின் வசமுள்ளது. இவர்களுள் மூவர் அரசால் நியமிக்கப்பட்டவராவர்; ஒருவர் இணைப்பதிவாளர் (விற்பனை) அலுவலால் இயக்குநராவர்; மற்றொருவர், தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் ஒரு பிரதிநிதியாவார். இதர இயக்குநர்கள் ஒவ்வொரு மாவட்டத்திலுமுள்ள தாலுக்காக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் தலைவர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுகின்றனர். கூட்டமைப்பின் அன்றாட வேலையைக் கவனிப்பதற்கு, ஒரு பொது மேலாளர் உள்ளார். சுமார் 12 இலட்சம் செலவில் சென்னையில் கட்டப்பட்டுள்ள ஒரு புதிய கட்டடத்திற்கு இக் கூட்டமைப்புச் சென்றுள்ளது.

## 11. கூட்டுறவு விற்பனை வளர்ச்சிக்கான யோசனைகள்

தமிழ்நாட்டில் சந்தானம் குழுவினர் (1969), கூட்டுறவு விற்பனை அபிவிருத்திக்காகக் கீழ்க்காணும் யோசனைகளை வழங்கியிருந்தனர்.

(i) கடனளிப்பையும், விற்பனையையும் பெருமளவு ஒருங்கிணைத்தல் செய்வதற்கு, மத்தியக் கூட்டுறவு வங்கிகள் விற்பனைச் சங்கத்தின் நிருவாகத்துடன் தீவிரமான தொடர்பு வைத்துக் கொள்ள வேண்டும். விவசாயக்கடன் சங்கங்களா லளிக்கப்பட்ட உற்பத்திக் கடன்களின் வசூலும், உற்பத்திக் கடன்களில் பகுதியாக விவசாயத்தில் ஈடுபடுத்தப்படும் பொருள்களின் விநியோகமும், மத்தியக் கூட்டுறவு வங்கியின் மேற்பார்வைச் சிப்பந்தியின்

உதவியைக் கொண்டு கவனிக்கப்படவேண்டும். விற்பனைச் சங்கத்தின் இயக்குநர் குழுவில் மத்தியக் கூட்டுறவு வங்கியின் பிரதிநிதி ஒருவ ரிருத்தல் பலனுள்ளதாக விருக்கும். மத்தியக் கூட்டுறவு வங்கிக் கிளைகளின் மேலாளர்கள், தொடர்பான விற்பனைச் சங்கத்தின் அலுவலால்—இயக்குநர்களாக செய்யப் படலாம்.

(ii) விற்பனை முன்னேற்றத்திற்காக, மொத்தக் கொள் முதல் ஒரு சிறிய அளவிற்காகவாவது செய்தல் அத்தியாவசிய மாகும். ஓர் அடித்தள விலை (Floor price) இருக்கின்ற விடத்தில், விற்பனைச் சங்கம் அரசு உத்தரவாதமிருந்தால், கொடுக்கப் படும் விளைபொருள்க ளனைத்தையும் அந்த விலையில் கொள்முதல் செய்வதற்குத் தயாராக இருக்க வேண்டும். விற்பனை செய்யப் படுகின்ற இதர விளைபொருள்களின் ஒருசில சதவிகிதத்தையுங்கூட, சிறப்பாக, சிறிய பயிரிடுபவர்களிடமிருந்து, எச் சமயத்திலும் நடப்பு அங்காடி விலையில், தங்கள் சொந்த நிதிகளில் 2 மடங்குகள் வரை, விற்பனைச் சங்கங்கள் கொள்முதல் செய்ய வேண்டும். விற்பனைச் சங்கங்களின் 'விலைவாசி ஏற்ற இறக்க நிதிகளுக்கு' அரசு உதவித்தொகைத் திட்டம் தொடர்ந்திருக்க வேண்டும்.

(iii) அரசால் விதிக்கப்படுகின்ற விற்பனை வரியானது, விற்பனை வளர்ச்சியைப் பாதிக்கும் ஒரு காரணியாகக் கருதப்படுகிறது. தனியார் வியாபாரிகளுடன் ஒப்பிடும்போது விற்பனைச் சங்கங்களால் அனுபவிக்கப்படும் இந்த முட்டுக்கட்டையை நீக்கும் நோக்கத்துடன், இப் பிரச்சினை நிபுணர்களால் பரிசீலிக்கப் பட வேண்டியது அவசியமாகும். இதற்கிடையில், விற்பனைக்காகப் பல கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் செல்லும் ஒரே பொருளின் விஷயத்தில், ஏதாவதொரு கட்டத்தில் விதிக்கப்படவேண்டிய ஒரு முனை வரிக் கொள்கை பின்பற்றப்பட வேண்டும். இக் காரியத்திற்காக, சம்பந்தப்பட்ட எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களும் ஓர் ஒற்றையான அமைப்பின் கிளைகளாகப் பாவிக்கப்பட வேண்டும்.

(iv) தலைமை விற்பனைச் சங்கத்தையும் பிரதமக் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களையும் அரசு, தன் கொள்முதல் நடவடிக்கைகளின், பெருமமளவிற்கு உபயோகப்படுத்த வேண்டும்.

(v) இந்திய உணவுக் கழகம், உணவுத் தானியங்கள் கொள் முதலுக்காகக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புகளையும் சங்கங்களையும் உபயோகப்படுத்த வேண்டுமென்று ஆய்வுரை வழங்கப்

படவேண்டும். இரண்டு அமைப்புகளும் தனித்தனியாகச் சுயேச்சை யாகக் கொள்முதல் செய்வதற்குப் பதிலாக இந்த ஏற்பாடு அவசிய மாகும்.

(vi) தலைமை விற்பனைச் சங்கம் உர உற்பத்தி நிறுவனங் களுடன் பதிலாண்மைகளை (agencies) எடுத்து, பிரதம விற்பனைச் சங்கங்களுக்கும் விவசாயக் கடன் சங்கங்களுக்கும் உரங்கள் வழங்க வேண்டும். இவ் விஷயத்தில், மாநில அரசு அவசியமான உதவியை அளிக்க வேண்டும். உரங்கள் விநியோகத்தின் அதிகமான பாகம் கூட்டுறவுச் சங்கங்கள் வசம் இருந்தாலொழிய, அண்மை யாண்டு களில் நம்பிக்கை தரும் அபிவிருத்திகளி லொன்றாகிய, சாகுபடிக் கடன்களின் ஒரு பகுதியை இரசாயன உரங்கள் வடிவத்தில் அளிக்கும் முறையானது பாதிக்கப்படும்.

(vii) தங்களுக்கு இணைக்கப்பட்ட விவசாயக் கடன் சங்கங் களின்மூலம் விதைகள், மற்றும் பூச்சிகொல்லிகள் விநியோகத்திற் காக, அரசு விற்பனைச் சங்கங்களை ஏகப்பிரதிநிதிகளாக (Sole agents) உபயோகப்படுத்த வேண்டும். இப் பொருள்கள் விற்பனைச் சங்கங் களுக்கு, அனுப்பீடு அடிப்படையில் வழங்கப்பட்டுச் சங்கங்கள் விற்பனையின்மீது ஒரு நியாயமான தரகு (Commission) அனுமதிக் கப்பட வேண்டும்.

(viii) விற்பனைச் சங்கங்கள், விற்பனைத் தொழில் நுட்பங்களில் சிறப்பு அறிவையும், கூட்டுறவுத் தொழில்முறை அனுபவத்தையும் பெற்ற, தக்க நபர்களால் நிருவகிக்கப்படவேண்டும். விற்பனைச் சங்கங்களில் பணி செய்வதற்காக, அலுவலர்கள் தொகுப்பு (Pool of officers) ஒன்று ஏற்படுத்தும் திட்டத்தைத் தலைமை விற்பனைச் சங்கம் துரிதப்படுத்தவேண்டும். இந்தத் தொகுப்பு விரைவாகவும், முழுமையாகவும் அமைக்கப்பட வேண்டும். அது பணிவரிசை ரீதியாகவும் இருக்க வேண்டும்.

கூட்டுறவு விற்பனையை வளர்ச்சி செய்வதற்காகச் செய்யப் பட்ட இதர யோசனைகளாவன:

(i) விற்பனைச் சங்கங்களுக்கும் நுகர்வோர் சங்கங்களுக்கு மிடையே ஒரு பயனுறுதியான இணைப்பை ஏற்படுத்துதல். அத் தகைய ஓரிணைப்பு இரண்டுவகைச் சங்கங்களுக்கும் நன்மை பயக் கும். விற்பனைச் சங்கங்களுக்குத் தங்கள் விளைபொருள்களுக்காக ஒரு நிச்சயப்படுத்தப்பட்ட விற்பனை வழி கிடைக்கின்றது. மற்றும், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுடன் நேரடியாக வாணிகம் செய்வதன்மூலம், விற்பனைச் செலவில் ஒரு பெருங்குறைப்பையும் விற்பனைச் சங்கங்களால் ஏற்படுத்த முடியலாம்.

(ii) தரப்படுத்துதலுக்கு விற்பனைச் சங்கங்கள் போதிய கவனம் செலுத்த வேண்டும்.

(iii) தேசியமட்டத்துக் கூட்டுறவுக் கூட்டமைப்புகளும், மாநில மட்டத்துக் கூட்டுறவுக் கூட்டமைப்புகளும், தேவைப்படும் அங்காடி பற்றிய தகவல்களைச் (Market intelligence) சிறப்பாகத் தங்கள் அலுவல் எல்லைகளைக் குறித்த உபரிகளையும், தேவைகளையும் பற்றி வெளியீடு செய்ய வேண்டும்.

(iv) கூட்டுறவுச் சங்கங்கள் தங்கள் சொந்தப் பொருட் சேமிப்பு வசதிகளையும் போக்குவரத்து வசதிகளையும் முடிந்தவரை பெற்றிருக்க வேண்டும்.

(v) பதனப்படுத்துதல் நடவடிக்கை விவசாய விளைபொருள்களின் பெறுமானத்திற்குக் கூடுதல் செய்கிறது. பெரும்பாலான சந்தர்ப்பங்களில், இந்தக் கட்டத்தில், விற்பனை நடவடிக்கையில் அதிகமான செலவுகள் ஏற்படுகின்றன. விற்பனை நடவடிக்கைகளின்மீது கண்காணிப்பைச் செலுத்த விரும்பும் எந்த அமைப்பும், பதனப்படுத்தும் நடவடிக்கையின்மீதும் போதிய ஒரு கண்காணிப்பைப் பெற்றிருக்க வேண்டும். ஆகையால், விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள், பதனப்படுத்தும் அமைப்பைத் தங்க ளியல்பான விற்பனை நடவடிக்கைகளுக்குப் பின்சேர்ப்பாகப் பெற்றிருக்க வேண்டும். பதனப்படுத்தும் நடவடிக்கைகளை மேற்கொள்ளுதல், உதாரணமாக நெல் விஷயத்தில், விவசாயிகளுக்குத் தங்கள் விளைபொருளுக்காக அதிகமான ஒரு விளிம்பைப் பெறுவதில் உதவுவது மட்டுமன்றி, போக்குவரத்துச் செலவையும் சேமிப்புச் செலவையும் குறைப்பதற்குக்கூட உதவுகிறது.

## 12. கூட்டுறவு விற்பனையை இதர விற்பனையமைப்புகளுடன் ஒருங்கிணைத்தல்

அண்மையாண்டுகளில், பொதுத்துறை வாணிகக்கழகங்கள் பல, விவசாயத்துறையில் விற்பனைச் சங்கங்களால் நடத்தப்படுவதற்கு எதிர்பார்க்கப்படுகின்ற ஏறக்குறைய எல்லா நடவடிக்கைகளுக்காகவும் தோன்றியுள்ளன. இந்திய உணவுக் கழகமும், அரசு வர்த்தகக் கழகங்களும் (State Trading Corporations) இந்தியப் பருத்திக் கழகமும், முறையான பொருள்களைக் கையாள்வதற்காகச் செயற்படுகின்றன. உண்மையாக, கொள்கை ரீதியில், இந் நிறுவனங்கள் கூட்டுறவு விற்பனையமைப்புடன் ஓர் உபசார முறையிலும், துணையான முறையிலும் செயற்படவேண்டும். மிக விரைவில் இம் மாதிரியான கழகங்கள், சர்க்கரை, சணல் முதலியன

போன்ற இதரப் பொருள்களுக்காகவும் கூடத் தோன்றலாம். அம் மாதிரியே, விவசாய உற்பத்தித் தேவைகளைக் கையாளுவதற்காக, இந்திய உரங்கள் கழகமும், விதைகள் கழகமும், விவசாயத் தொடர்புள்ள தொழில்கள் கழகமும் அமைக்கப்பட்டுள்ளன. பொதுத்துறை நிறுவனங்களுக்கும், கூட்டுறவு விற்பனையமைப்பு களுக்குமிடையே, அவையிரண்டும் பெரும்பாலும் விவசாயத் துறையின் நலன்களை வளர்ச்சி செய்யும் நோக்கங்கொண்டுள்ள தால், ஒரு விரும்பத்தக்க ஒத்துழைப்பும், கூட்டுப் பங்காளித்துவ மும் இருக்க வேண்டும். இரண்டு அமைப்புகளுக்கிடையே போட்டி விரும்பத்தகாத விளைவுகளுக்கு வழி செலுத்தும். உதாரணமாக, ஒரு தனியார் வர்த்தகர் விற்பனைச் சங்கத்தோடும்கூட, இந்திய உணவுக் கழகத்தின் பிரதிநிதியாகவும் செயற்படுவதற்கு அனு மதிக்கப்படக்கூடாது. விவசாயத் தொடர்புள்ள தொழில்கள் கழகம், இயந்திரங்கள் வழங்குதல் விஷயத்தில், விற்பனைச் சங்கத் துடன் பாதகமாகப் போட்டியிடக் கூடாது. அவ்வாறே, விதைகள் வழங்குதல், பொருட் சேமிப்பு வசதி வழங்குதல் முதலியவற்றிற் குச் சம்பந்தப்பட்ட இதரப் பொதுத்துறைக் கழகங்களும் நடந்து கொள்ள வேண்டும். நாட்டின் பொருளாதார அமைப்பில், கூட்டுற வுச் சங்கங்கள், பொதுத்துறை நிறுவனங்கள் ஆகியவற்றின் இறுதி யான பங்கைக் குறித்து, ஒரு தெளிவான கொள்கைமுறை வேண்டும். குறிப்பாக, இவ் விரு நிறுவன அமைப்புகளும், அரசு துறை அமைப்புகளின் பிரதிநிதிகளாகச் செயல்படுவதற்காக எதிர் பார்க்கப்படுகின்ற சந்தர்ப்பங்களில், ஒரு தெளிவான கொள்கை முறை அவசியமாகும். இதர அமைப்புகளுடன் கூட்டுறவு விற்பனை யமைப்பின் சரியான ஓர் ஒருங்கிணைப்பானது இரு நிறுவனங்களின் நலன் முன்னேற்றத்திற்காகவும் அவசியமாகும். தங்கள் சொந்த உறுப்பினர்களின் நலத்திற்காக மேற்கொள்வதற்கு எதிர்பார்க்கப் படுகிற வர்த்தக நடவடிக்கைகளில், கூட்டுறவுச் சங்கங்களும் ஒரு மெய்ப்பாடான அணுகுதலைச் செய்ய வேண்டும். கூட்டுறவு விற் பனை வளர்ச்சிக்காக ஒரு பெரிய வாய்ப்பு இருப்பதாகத் தோன்று கிறது என்பதில் ஐயப்பாடில்லை. ஆள்பலம், பணபலம், பொருள் பலம் ஆகிய ஆதாரங்களைப் போதிய அளவிற்குத் திரட்டுவதும், சமுதாய மக்களின் நலத்திற்காக மிகத் திறமையான முறைகளில் வாணிகத்தை வளர்ப்பதற்காக அவற்றைப் பயனுள்ள வகையில் உபயோகப்படுத்துவதுமே அவசியப்படுகிறது.

# 19. கூட்டுறவுப் பதனப்படுத்தும் சங்கங்கள்
## (Co-operative Processing Societies)

### 1. கூட்டுறவுப் பதனப்படுத்துதலின் முக்கியத்துவம் (Importance of Co-operative Processing)

பொதுவாக, கிராம அபிவிருத்திக்கான, குறிப்பாகக் கூட்டுறவு வளர்ச்சிக்கான, ஒரு பயனுள்ள பணியில் கூட்டுறவு அடிப் படையின் பேரில் விவசாயப் பதனப்படுத்துதலானது ஒரு மைய இடத்தை வகித்துள்ளது. 'கிராம வருவாயினைப் பெருக்கி உற்பத்திக்கான கடனளிப்பை வசதி செய்வதற்காக மட்டுமன்றி, ஒரு கூட்டுறவுக் கிராமப் பொருளாதார அமைப்பைப் பேணி வளர்ப்பதற்காகவுங் கூட, கூட்டுறவுப் பதனப்படுத்துதலின் வளர்ச்சி அத்தியாவசியமாகவுள்ளது. கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகள் வெற்றிகரமாக நிறுவப்பட்ட இடங்களிலெல்லாம், அவை பல்வேறு தொடர்பான துறைகளில் அரும்பெரும் அபிவிருத்திக் கருவிகளாக மதிக்கத்தக்கனவென்று நிரூபித் துள்ளன' என்ற கருத்தை 3ஆவது ஐந்தாண்டுத் திட்டம் தெரிவித் துள்ளது.

பொதுவாகப் பதனப்படுத்துதலானது ஒருவிவசாயப் பொருளை அங்காடிக்காகத் தயாரிப்பதில் ஒரு முக்கியக் கட்டமாக வுள்ளது. பெரும்பான்மையான விவசாயப் பண்டங்கள், நுகர்வோர்களை யடைவதற்கு முன்னர், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட பதனப்படுத்துதல் கட்டங்களின் மூலம் செல்லவேண்டி யுள்ளன. உதாரணமாக, நெல், நுகர்வோர்களால் வாங்கப்படுவதற்கு முன்னர், அரைவை செய்யப்படவேண்டியுள்ளது. அம் மாதிரியே, பருத்தி, துணி உற்பத்தி ஆலைக்குப் போவதற்கு முன்னர், கொட்டை நீக்கப்படவும், அழுத்தப்படவும் வேண்டியிருக்கிறது. கரும்பைப் பொறுத்தமட்டிலுங்கூட,அது கச்சாக் கட்டத்தில் மிகச் சிறிய அளவே உபயோகிக்கப்படுகிறது ; சர்க்கரையாகவும் அல்லது வெல்லமாகவும் கரும்பு பதனப்படுத்தப்படவேண்டியிருக்கிறது. அதன் விளைவாக, விளைவிப்பவர், நுகர்வோரால் செலுத்தப்படும் இறுதி விலையில்,தனக்கு வரவேண்டிய பாகத்தைப் பெறுகிறதில்லை. பதனப்படுத்தும் நடவடிக்கையானது, விளைவிப்பவர்களால் ஒரு கூட்டுறவு அடிப்படையில் நிறுவப்பட்டால், அது அவர்களின்

விளைபொருள்களுக்காக ஒரு மேலான இலாபத்தை அவர்கள் பெறுவதற்கு வகை செய்யும்.

பொருளாதார வளர்ச்சியிலும், கூட்டுறவு வளர்ச்சியிலும், கூட்டுறவுப் பதனப்படுத்துதலின் முக்கியத்துவத்தைப் பற்றிப் பெருகிவரும் ஓர் உணர்வு இப்பொழுது காணப்படுகிறது. கூட்டுறவுப் பதனப்படுத்துதலானது, கூட்டுறவு விற்பனை வளர்ச்சிக்காகவும், கூட்டுறவுக் கடன் வசதி வளர்ச்சிக்காகவும், மற்றும் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்காகவுங்கூட அத்தியாவசியமாக வுள்ளது. ரொக்கப் பயிர்களின் கூட்டுறவு விற்பனையும், அவற்றின் பதனப்படுத்துதலுங்கூட, கூட்டுறவு நிறுவனங்களால் மேற்கொள்ளப்பட்டால் மட்டுந்தான், பயனுறுதியாக இருக்கக்கூடும். நன்கு நிறுவப்பட்ட கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகள், விவசாய உற்பத்திக்காகக் கூட்டுறவு நிறுவனங்களால் அளிக்கப்படும் கடன்களை வசூலிக்கும் பணியைப் பயனுறுதியாக மேற்கொள்ள முடியும். இது கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளில் பெருமளவு வெற்றியுடன் முயற்சிக்கப்பட்டுள்ளது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் பிரதமக் கடன் சங்கங்களால் கரும்புச் சாகுபடிக்காக அளிக்கப்பட்ட கடன்களை வசூலிக்கின்றன. எனவே, கூட்டுறவுப் பதனப்படுத்துதலின் வளர்ச்சி, கூட்டுறவுக் கடனளிப்பின் பெருவாரியான விரிவாக்கத்தை வளர்ச்சி செய்யும், மற்றும், அது பதனப்படுத்தும் சங்கங்களின் உற்பத்திப் பொருள் களின் விற்பனையை மேற்கொள்ளக்கூடிய கூட்டுறவு நுகர்வோர் நிறுவனங்களின் வளர்ச்சிக்கும் உதவும். கூட்டுறவுப் பதனப்படுத் துதலின் முக்கியப் பணியை வலியுறுத்திக், காலஞ்சென்ற பேராசிரியர் கேட்கில் (Prof. Gadgil) அவர்கள் பின்வருமாறு கூறிப் போந்தார். 'ஒருபுறம் அது விவசாயக் கடன் முறையின் செயற் பாட்டையும், விற்பனை முறையின் செயற்பாட்டையும் பலப்படுத்து கிறது. மற்றொருபுறம் அது கிராமத்தைத் தொழில் மயமாக்கு தலுக்கான ஒரு விரிந்த ஆதாரத்தை அளிக்கிறது.'

## 2. கூட்டுறவுப் பதனப்படுத்துதலின் முன்னேற்றம் (Progress of Co-operative Processing)

கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகளை நிறுவுவதற்கான செயல் திட்டமொன்று 2ஆவது ஐந்தாண்டுத் திட்டத்தில்தான் தொடங்கப் பட்டது. 2ஆவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கான செயல் திட்டம், 48 பருத்திக் கொட்டை நீக்கும் ஆலைகள் (Cotton Gins) உட்பட, 166 பதனப்படுத்தும் அமைப்புகள் அமைக்கப் படுதலை எதிர்நோக்கியது. எனினும், 1958ஆம் ஆண்டில் கூட்டுறவுக்

கொள்கை பற்றிய தேசிய வளர்ச்சி அவையின் தீர்மானத்தின் விளைவாக, மாநிலங்களால் அமுல் செய்யப்பட்ட கூட்டுறவு வளர்ச்சிக்கான விரிவுபடுத்தப்பட்ட திட்டத்தையொட்டி, 464 அமைப்புகள், திட்டக் காலத்தின்போது நிறுவப்பட்டன. இவையன்றியும் சுமார் 100 பதனப்படுத்தும் அமைப்புகள், சில மாநிலங்களில், சிறப்பாகப் பருத்திக் கொட்டை நீக்கும் துறையில், 2ஆவது திட்டத்திற்கு முன்பாகவோ அதற்கு வெளியாகவோ நிறுவப்பட்டன.

மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது, சரியானதும், விரைவானதுமான கூட்டுறவுப் பதனப்படுத்துதலின் வளர்ச்சிக்கான தக்க நடவடிக்கைகளை யோசனை கூறுவதற்காகவும், நடப்பிலுள்ள நிலைமையை ஆய்வு செய்யும் நோக்கத்துடனும், தேசியக் கூட்டுறவு வளர்ச்சி மற்றும் பொருட் சேமிப்புக் கிடங்கு வாரியம் (National Co-operative Development and Warehousing Board) 1961ஆம் ஆண்டில் ஒரு குழுவை அமைத்தது. கூட்டுறவுப் பதனப்படுத்துதல் பற்றிய அக் குழு, சரியான திட்டமிடுதலுக்கும், வாய்ப்பு வசதிகளை மதிப்பீடு செய்தலுக்கும் பின்னர்த்தான், கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகள் நிறுவப்படலாமென்றும், கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகள் நிறுவப்படுவதற்கான திட்டங்களைத் தயாரிப்பதில் மாநில அரசுகளுக்கு உதவி செய்யும் பொருட்டு, கூட்டுறவுப் பதனப்படுத்துதலை வளர்ப்பதற்கான மாநில மட்டத்து வாரியங்கள் அமைக்கப்படலாமென்றும் பரிவுரை செய்திருந்தது. அத்தகைய வாரியமொன்று தமிழ் நாட்டில் அமைக்கப்பட்டுள்ளது. 3ஆவது ஐந்தாண்டுத் திட்டத்தில், 618 அமைப்புகள் இலக்குக்கெதிரே 1,062 அமைக்கப்பட்டு உதவப்பட்டன. 1970 ஆம்ஆண்டு டிசம்பர் இறுதியில் நிறுவப்பட்ட/உதவப்பட்ட கூட்டுறவு விவசாயப் பதனப்படுத்தும் அமைப்புகளின் மொத்த எண்ணிக்கையானது, 1,762-க்கு உயர்ந்தது. ஐந்தாண்டுத் திட்டக் காலங்களில், அவற்றின் முன்னேற்றம் அடுத்த பக்கத்தில் 'மாநில மட்டத்து வாரியங்கள்' என்ற தலைப்பில் தந்துள்ள பட்டியலின் கண்டவாறு அமைந்திருந்தது.

நிறுவப்பட்ட உதவியளிக்கப்பட்ட 1,762 அமைப்புகளுள், 31-12-70ஆம் நாளன்று 1,342 அமைக்கப்பட்டன. அதாவது, அவற்றுள் ஏறக்குறைய 76 சதவிகிதம். 1970ஆம் ஆண்டு மார்ச் மாதம்வரை, இவ் வமைப்புகளுக்கு நிதியளிப்பதற்காக வழங்கப்பட்ட அரசுதவி ரூ. 38 கோடிக்கு இருந்தது. இதில் அதிக அளவு, பங்கு மூலதன வடிவத்திலிருந்தது. இவ் வமைப்புகளின் மொத்த நிலை முதலீடு (Block Investment) ரூ. 400 கோடியளவிற்கிருக்கும் என்று மதிப்பீடு செய்யப்படுகிறது. கூட்டுறவுத்

மாநில மட்டத்து வாரியங்கள்

| | 2ஆவது திட்டம் | 3ஆவது திட்டம் | 1967–70 | மொத்தம் |
|---|---|---|---|---|
| உணவுத் தானியங்கள் | 170 | 644 | 46 | 860 |
| பருத்தி | 128 | 125 | 10 | 263 |
| எண்ணெய் வித்துகள் | 114 | 119 | 21 | 254 |
| கரும்பு | 40 | 39 | 61 | 140 |
| | (20 சர்க்கரை ஆலைகள்) | (37 சர்க்கரை ஆலைகள்) | (57 சர்க்கரை ஆலைகள்) | (114 சர்க்கரை ஆலைகள்) |
| சணல் | 12 | 36 | 2 | 50 |
| பழவகைகளும் காய்கறிகளும் | 7 | 25 | 6 | 38 |
| மற்றவை | — | — | 10 | 10 |
| தோட்டப் பயிர்கள் | 13 | 33 | 8 | 54 |
| குளிர் பதனப் பொருட் சேமிப்பு அமைப்புகள் | 13 | 41 | 36 | 90 |
| | 497 | 1,062 | 203 | 1,762 |

துறையில் 1,762 பதனப்படுத்தும் அமைப்புகளில், 200-க்கும் மேற்பட்டவை, ஒவ்வொன்றும் 50 இலட்சத்திற்கும் அதிகப்பட்ட நிலை முதலீட்டைக் கொண்ட, பெரிய தொழில்களாக (Major Industries) வகைப்படுத்தப் பட்டுள்ளன. இவ் வமைப்புகள், பிரதானமாகச் சர்க்கரை ஆலைகளாகவும், சர்க்கரைப் பக்க விளைவுகள் தொழில்களாகவும், (Sugar byeproducts industries) (வடிசாலைகள்—distilleries) நூற்பாலைகளாகவும், சணல் ஆலைகளாகவும், வனஸ்பதித் தொழிற்சாலைகளாகவும், சால்வன்ட் எக்ஸ்டிராக்ஷன் அமைப்புகளாகவும் (Solvent Extraction Plants), மாட்டுத்தீவனம் தொழிற்சாலைகளாகவும், பெருமளவு பல பொருள்கள், பழவகைகள், காய்கறிவகைகள் பதனப்படுத்தும் அமைப்புகளாகவும் உள்ளன.

4ஆவது ஐந்தாண்டுத் திட்டம் 550 பதனப்படுத்தும் அமைப்புகள் நிறுவப்படுவதை எதிர்நோக்கியது. 4ஆவது திட்டக் காலத்தில் ஏற்பட்ட மிகவும் குறிப்பிடத்தக்க ஓர் அபிவிருத்தியானது, ஒரு பலம் பொருந்திய பதனப்படுத்துதல் துறையின், குறிப்பாகச் சர்க்கரைத் தொழில்துறையின் வளர்ச்சியாக இருந்தது. 1,600-க்கும்

அதிகமான பதனப்படுத்தும் அமைப்புகள், குடியானவர்கள் கூட்டுறவுச் சங்கங்களால் நிறுவப்பட்டிருந்தன. இவற்றுள் மிக முக்கியமானவை சர்க்கரைத் தொழில் துறையி லிருந்தன. தொடக்கத்தில் பெரும்பாலும் ஒன்றுமில்லாமல், 1971-72ஆம் ஆண்டுப்பருவத்தில், கூட்டுறவுத்துறையானது,மொத்தச் சர்க்கரை உற்பத்தியில் சுமார் 42 சதவிகிதத்திற்காகப் பொறுப்பாக இருந்தது. பருத்தி, எண்ணெய் விதைகள், நெல், பழவகைகளும் காய்கறி வகைகளும் ஆகியவையின் பதனப்படுத்துதலிலுங்கூடக் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மிகப் பெரிதாக இருந்துள்ளது. இந்த விவசாயப் பொருள்களைப் பதனப்படுத்துதலில் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு முறையே சுமார் 20 சதவிகிதமாகவும், 8 சதவிகிதமாகவும், 10 சதவிகிதமாகவும், 15 சதவிகிதமாகவும் இருந்திருக்குமென்று மதிப்பீடு செய்யப்பட்டது. 5 ஆவது ஐந்தாண்டுத் திட்டத்தில் நிறுவப்படவேண்டிய கூட்டுறவுப் பதனப்படுத்தும் அமைப்புகளின் எண்ணிக்கை, 2,330-க்கு உயர வேண்டியுள்ளது.

**3. கூட்டுறவுப் பதனப்படுத்தும் சங்கங்களின் தற்போதைய பொது நிலைமை** (General present position of Co-operative Processing Societies)

(i) **கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள்**:—1970-71 ஆம் ஆண்டு இறுதியில், இந்தியாவில் 141 கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் இருந்தன. இவ் வெல்லாச் சர்க்கரை ஆலைகளும், 13,306 சங்கங்களையும், 4,77,701 கரும்பு விளைவிப்பவர்களையும், 19,338 மற்றவர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டிருந்தன. நாளொன்றுக்கு 98,017 டன்கள் ஒரு மொத்தமான அமைக்கப்பட்ட உற்பத்தி வசதியைக்கொண்ட 73 ஆலைகள் அவ் வாண்டின்போது உற்பத்தியில் இருந்தன. இவ் வாலைகள் 120 இலட்ச டன்கள் கரும்பை அவ் வாண்டின்போது நசுக்கின. சர்க்கரை உற்பத்தியின் பெறுமானம் ரூ. 171 கோடியாக இருந்தது. சர்க்கரை மற்றும் அதன் பக்க விளைவுகளின் மொத்த விற்பனை ரூ. 205 கோடியாக இருந்தது. 1970–71ஆம் ஆண்டு இறுதியில், சர்க்கரையின் இறுதி இருப்புச் சரக்கு ரூ. 110 கோடி மதிப்புள்ளதாக இருந்தது. இந்த ஆலைகள், விவசாயத் தேவைகளையுங்கூட ரூ. 3·8 கோடி மதிப்பில் 1970-71 ஆம் ஆண்டின் போது வழங்கின.

(ii) **பஞ்சினின்று பருத்திக் கொட்டைகளை நீக்கிப் பஞ்சமுத்தம் செய்யும் சங்கங்கள்** (Cotton Ginning and Pressing Societies)

இச் சங்கங்களின் எண்ணிக்கை, 1970-71ஆம் ஆண்டு இறுதியில் 172 ஆக இருந்தது. இவற்றுள், 139 சங்கங்கள், பஞ்சிலிருந்து பருத்திக் கொட்டைகளைப் பிரிக்கும் தொழிலில் ஈடுபட் டிருந்தன. 77 சங்கங்கள் பருத்திக் கொட்டையைப் பிரித்து அழுத்தம் செய்யும் இயந்திரங்களைச் சொந்தமாகப் பெற்றிருந்தன. 1970-71ஆம் ஆண்டின்போது, இச் சங்கங்கள் 24 இலட்சக் குவின்டால் பருத்தியைப் பஞ்சிலிருந்து பருத்திக் கொட்டையை நீக்கின. இவையன்றியும், 62 விற்பனைச் சங்கங்கள் பதனப்படுத்தும் நடவடிக்கைகளை மேற்கொண்டிருந்தன. அந்த ஆண்டின் போது இச் சங்கங்களால் கொட்டை நீக்கப்பட்ட பருத்தியின் அளவு 6 இலட்சம் குவின்டால்களாக இருந்தது.

(iii) **இதர விவசாயப் பதனப்படுத்தும் சங்கங்கள்** (Other Agricultural Processing Societies)

1970-71 ஆம் ஆண்டிறுதியில்,இதரப் பிரதம விவசாயப் பதனப் படுத்தும் சங்கங்களின் எண்ணிக்கை 1,118 ஆக இருந்தது. பீகார் மாநிலத்திலுள்ள 150 சங்கங்கள் நீங்கலாக (இச் சங்கங்களைக் குறித்துத் தகவல் கிடைக்கவில்லை) எஞ்சியுள்ள சங்கங்களாவன, 128 நெல் அரைவை ஆலைகள் (அரிசி ஆலைகள் நீங்கலாக), 171 அரிசி ஆலைகள், 245 எண்ணெய்பிழியும் சங்கங்கள், 32 பழவகைகள், காய்கறிகள் சங்கங்கள், இதரப் பண்டங்களைப் பதனப்படுத்துவதில் ஈடுபட்டிருந்த 392 சங்கங்கள் முதலியன. இச் சங்கங்களில், 7,690 சங்கங்களும் 1,93,704 தனி நபர்களும் உறுப்பினர்களாக இருந்தனர். பதனப் படுத்தப்பட்ட பொருள்கள் விற்பனையின் பெறுமானம் 1970-71ஆம் ஆண்டில் ரூ. 8 கோடியாக இருந்தது. இச் சங்கங்களில், 221 மட்டுந்தான் அவ் வாண்டின்போது இலா பத்தை ஈட்டியிருந்தன. எஞ்சியிருந்த 897 சங்கங்கள் நட்டத் திலாவது இலாபமும் நட்டமும் இல்லாமலாவது இயங்கின.

முன் குறிக்கப்பட்ட 1,118 பிரதமப் பதனப்படுத்தும் சங்கங் களில், 464 மட்டும், உண்மையாகவே, பதனப்படுத்தும் நடவடிக் கையில் ஈடுபட்டிருந்தன. மற்றும், 383 பிரதம விற்பனைச் சங் கங்களும் (பருத்தி பதனப்படுத்தும் சங்கங்கள் நீங்கலாக), 24 மாநில மைய விற்பனைச் சங்கங்களுங்கூட விவசாய விளைபொருள் பதனப் படுத்துதலை மேற்கொண்டிருந்தன. எல்லா விற்பனைச் சங்கங்களாலும், பதனப்படுத்தும் சங் கங்களாலும், 1970-71ஆம் ஆண்டின் போது, பதனப்படுத்தப் பட்ட விளைபொருளின் மொத்த அளவு, கீழ்க்காணும் விவரப்படி, 69 இலட்சம் குவின்டால்களாக இருந்தது.

| பதனப்படுத்தப்பட்ட விளைபொருள்கள் | குவின்டால்கள் |
|---|---|
| 1. நெல் அரைவை ஆலைகளால் (அரிசி ஆலைகள் நீங்கலாக) உமி நீக்கப் பட்ட நெல். | 39 |
| 2. அரிசி ஆலைகளால் உமிநீக்கப்பட்ட நெல். | 14 |
| 3. பிழிந்தெடுக்கப்பட்ட எண்ணெய் விதைகள். | 6 |
| 4. பதனப்படுத்தப்பட்ட பழவகை களும், இதரப் பண்டங்களும் (பருத்தி நீங்கலாக). | 10 |
| | 69 |

**4. சில பெரிய விவசாய விளைபொருள்களைப் பதனப் படுத்துதல்** (Processing of certain major agricultural produce)

பெரிய விவசாய விளைபொருள்கள் சிலவற்றைக் குறித்துக் கூட்டுறவுப் பதனப்படுத்தும் நடவடிக்கையின் வரலாற்றுச் சுருக்கம் கீழே தரப்பட்டுள்ளது:

(i) **கரும்பு**:—1956-57ஆம் ஆண்டில் தனியார் துறையில் உரிமம் அளிக்கப்பட்ட 135 சர்க்கரை ஆலைகளுக்கெதிரே, கூட்டுற வுத் துறையில் உரிமம் அளிக்கப்பட்ட சர்க்கரை ஆலைகளின் எண்ணிக்கை 38 ஆக இருந்தது. 1970ஆம் ஆண்டு டிசம்பர் மாத இறுதியில், தனியார் துறையில் 153 உரிம மளிக்கப்பட்ட சர்க்கரை ஆலைகளுக்கெதிரே, உரிம மளிக்கப்பட்ட கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் எண்ணிக்கை 114ஆக உயர்ந்தது. உரிம மளிக்கப்பட்ட திறன், முறையே 21.80 இலட்சம் டன்களாகவும், 126.83 இலட்சம் டன்களாகவும் இருந்தது. 1969-70ஆம் ஆண்டு, கரும்பு நசுக்கும் பருவத்தில், 70 கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் உற்பத்தியி லிருந்தன. அவை, 138.85 இலட்சம் டன்கள் கரும்பை நசுக்கின. இது, அந்த ஆண்டில் நசுக்கப்பட்ட மொத்தக் கரும்பில் 33 சத விகிதத்திற்கும் அதிகமாக இருந்தது. சர்க்கரை ஆலைகளின் உறுப் பினர் எண்ணிக்கை, 1956-57ஆம் ஆண்டில் 1.13 இலட்சத்திலிருந்து, 1969-70ஆம் ஆண்டிறுதியில், 4.23 இலட்சத்திற்கு உயர்ந்தது. இதில் கரும்பு விளைவிப்பவர்களின் எண்ணிக்கை 3.90 இலட்சமாக இருந்தது. அதாவது, மொத்த உறுப்பினர் எண்ணிக்கையில் 92 சத விகிதமாக இருந்தது. கரும்பு விளைவிப்பவர்களின் பங்கு மூலதனத் தொகையும் அவர்களின் கூட்டுறவுச் சங்கங்களுடைய பங்கு மூல

தனத் தொகையும் ரூ. 6.41 கோடியிலிருந்து ரூ. 30.43 கோடிக்கு உயர்ந்தது. இது சர்க்கரை ஆலைகளின் மொத்தப் பங்கு மூல தனத்தில் 63 சதவிகிதமாக இருந்தது. அரசு அளித்த பங்கு மூலதன உதவித்தொகை ரூ. 16.70 கோடியாக இருந்தது. 1968ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், அப்போது உற்பத்தியிலிருந்த 58 கூட்டுற வுச் சர்க்கரை ஆலைகளின் வாபஸ் பெறக்கூடாத வைப்புகளின் மொத்தத் தொகை ரூ. 13.02 ஆகவும், காப்பிருப்புகளின் தொகை ரூ. 44.45 ஆகவுமிருந்தன. ரூ. 96.25 கோடி மொத்தப் பெறுமான முள்ள ஆஸ்திகளுக் கெதிரே, அவற்றின் சொந்த நிதிகள் ரூ. 74.13 கோடியளவுக்கு இருந்தன. இது ஆஸ்திகளின் மொத்தப் பெறு மானத்தில் 77 சதவிகிதத்திற்கும் அதிகமாக இருந்தது. இந்தியத் தொழில் நிதிக் கழகமானது (Industrial Finance Corporation of India) நீண்டகாலக் கடன்கள் வாயிலாகக், கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் மூலதனத் தேவைகளின் பெரும்பகுதியைப் பூர்த்தி செய்கிறது. பெரும்பான்மையான சந்தர்ப்பங்களில், அது ஆயுள் காப்பீட்டுக் கழகத்துடன் கூட்டாகச் சேர்ந்து இக் கடன்களை யளிக் கிறது. இந்தியத் தொழில் நிதிக் கழகமும், இந்திய ஆயுள் ஈட்டுறுதிக் கழகமும் சேர்ந்து 68 கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளுக்கு ரூ 60.25 கோடித் தொகைக்கு, நிலைக் கடன்களை (Block Loans) ஒப்பளித்து, 1970ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதிவரை ரூ. 50.25 கோடியை விடுவித்தது. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் இதுவரை ரூ. 22.64 கோடித் தொகையைத் திருப்பிச் செலுத்தியுள்ளன. பல மான நிதிநிலைமையை அமைத்ததனால், 1969-70ஆம் ஆண்டில் உற் பத்தியிலிருந்த 70 கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளுள் 43 ஆலைகள் தங்கள் நசுக்கும் நடவடிக்கைத் திறனை விரிவுபடுத்துவதற்கான திட்டங்களை மேற்கொண்டிருந்தன. அநேக சர்க்கரை ஆலைகள் செலவைத் தங்கள் சொந்த நிதியாதாரங்களிலிருந்து ஏற்றிருந்தன. 10 ஆலைகள் தங்கள் நடவடிக்கைகளை நானுவிதமாக்குவதற்கும், சர்க்கரைக் கழிவு (molasses), கரும்புச் சக்கை (bagasse), முதலியன போன்ற பக்கவிளைவுப் பொருள்களைப் பயன்படுத்துவதற்கும் நடவடிக்கைகளை எடுத்துள்ளன. தொழிற்சாராயம் (Industrial alcohol) முதலியவற்றை உற்பத்தி செய்வதற்காகச் சாராய வடி சாலைகளை (Distilleries) அமைப்பதன் மூலம் இந் நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றன. கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் தங்களை மாநில மட்டத்துக் கூட்டமைப்புகளாகவும், தேசிய மட்டத்து இணையங்களாகவும் கூட்டமைத்துக் கொண்டுள்ளன. மாநில மட்டத்தில், 7 கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் கூட்டமைப்புகள் இருந்தன. அவை, தேசியக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் கூட்டமைப்பிற்கு இணைக்கப்பட்டிருந்தன.

தேசியக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் கூட்டமைப்பு 1960ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. இணைக்கப்பட்ட கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் செயற்பாட்டை ஒருமைப்படுத்துவதும், வசதிப்படுத்துவதும், புதிய கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளை அமைப்பதற்கு உதவுவதுமே, அதன் நோக்கமாக உள்ளது. 30-6-75ஆம் நாளன்று, அதன் உறுப்பினர் எண்ணிக்கை 18 ஆக இருந்தது. இதில், 129 ஆலைகளுக்கும் பிரதிநிதியாகவுள்ள 3 மாநிலக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் கூட்டமைப்புகளும், 7 மாநிலங்களிலிருந்து நேரடியாக இணைக்கப்பட்ட கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளும் அடங்கியிருந்தன. தேசியக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் அமைப்புடன், மாநிலக் கூட்டமைப்புகளின் மூலம் அல்லது நேரடியாக இணைக்கப்பட்ட ஆலைகளின் மொத்த எண்ணிக்கை 139ஆக இருந்தது. 30-6-74ஆம் நாளன்று, உரிமங்கள்/நோக்கப் பத்திரங்கள் (Licenses/Letters of intent) வழங்கப்பட்ட ஆலைகளின் மொத்த எண்ணிக்கை 175 ஆக இருந்தது.

பெருமளவு, சர்க்கரைத் தொழிலில் வளர்ச்சி ஏற்பட்டதற்குக் காரணமாக இருந்தது, கூட்டுறவு நிறுவனங்களுக்குச் சலுகை அளிக்கின்ற ஒரு கொள்கையை அரசு பின்பற்றியதே. சர்க்கரை ஆலைகளுக்கு உரிமம் வழங்குதலில், கூட்டுறவு நிறுவனங்களுக்கு முன்னுரிமை யளிப்பதானது அரசின் கொள்கையாக வுள்ளது. அரசு உதவியின் விளைவாகக், கூட்டுறவுச் சர்க்கரை நிறுவனங்கள், கரும்பு பதனப்படுத்துதலில் ஈட்டப்பட்ட உபரி இலாபங்களைக் குடியானவர்களுக்கு நேர்மையாகப் பகிர்வு செய்வதன் மூலம் குடியானவர்களின் வாங்குந்திறனுக்குப் பெருமளவு ஒரு கூடுதலை உண்டாக்குவதிலும், அதே சமயத்தில் முதலீடு வசதி அமைத்தலில் (Capital formation) ஒரு திருப்திகரமான பங்கைப் பராமரிப்பதிலும் வெற்றியடைந்துள்ளன. உரிமம் வழங்குவதில் உறுதியான முன்னுரிமையளித்தும், சர்க்கரைக்கும், கரும்புக்கும் இலாபகரமான விலைகளை உறுதியளித்தும், அதன் மூலம் சர்க்கரைத் தொழிலில் போட்டிக் கூறைக் குறைத்தும் அரசு கடைப்பிடிக்கும் ஒரு கொள்கையின் காரணமாகக் கூட்டுறவுச் சர்க்கரை நிறுவனங்கள் இவ் வெற்றியைப் பெற முடிந்தது.

அடுத்துத் தரப்பட்டுள்ள அட்டவணை, உற்பத்தியிலிருக்கும் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் எண்ணிக்கையையும், அவற்றின் சர்க்கரை உற்பத்தியையும், 1970-71ஆம் ஆண்டிற்குப் பிந்திய ஆண்டுகளில் மொத்தச் சர்க்கரை உற்பத்திக்குக் கூட்டுறவுச் சங்கங்களின் உற்பத்தியின் சதவிகிதத்தையும் தருகின்றது.

| ஆண்டு அக்டோபர் செப்டம்பர் | உற்பத்தியிலிருக்கின்ற சர்க்கரை ஆலைகளின் எண்ணிக்கை | | சர்க்கரை உற்பத்தி (டன்கள்–இலட்சத்தில்) | | மொத்த உற்பத்திக்குக் கூட்டுறவு உற்பத்தியின சதவிகிதம் |
|---|---|---|---|---|---|
| | கூட்டுறவு | மொத்தம் | கூட்டுறவு | மொத்தம் | |
| 1971–72 | 70 | 215 | 12.85 | 31.33 | 41.3 |
| 1972–73 | 85 | 228 | 14.67 | 38.72 | 37.8 |
| 1973–74 | 84 | 229 | 15.54 | 39.49 | 39.4 |

எனவே, கூட்டுறவுத் துறையில் சர்க்கரை உற்பத்தி(தாற்காலிகமானது) வளர் விதமாக அதிகரித்துக் கொண்டு வந்துள்ளது.

31-3-74ஆம் நாளன்று கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளின் உறுப்பினர் எண்ணிக்கை நிலைமையானது கீழ்வருமாறு இருந்தது.

| உறுப்பினர் வகை | எண்ணிக்கை | பங்கு மூலதனத் தொகை (கோடியில்) |
|---|---|---|
| கூட்டுறவு ஆலைகள் | 125 | — |
| விளைவிப்பவர்கள் | 6,47,049 | 49.9 |
| விளைவிப்பவரல்லாதவர்கள் | 28,276 | 3.7 |
| கூட்டுறவு நிறுவனங்கள் | 13.433 | |
| மாநில அரசுகள் | — | 35.2 |
| | 6,88,758 | 88.8 |

(ii) **நெல் :-** 1970ஆம் ஆண்டு டிசம்பர் இறுதிவரை, 817 கூட்டுறவு அரிசி ஆலைகள் உதவப்பட்டன. அவற்றுள், தீவிர விவசாய வளர்ச்சித் திட்ட மாவட்டங்களில் அமைக்கப்பட்டுள்ள 6 நவீன அரிசி ஆலைகளுட்பட 646 அரிசி ஆலைகள் ஏற்கெனவே அமைக்கப்பட்டுள்ளன. கூட்டுறவுத் துறையில் ஏற்படுத்தப்பட்ட மொத்தப் பதனப்படுத்தும் வசதித்திறன் ஏறக்குறைய 26 இலட்சம் டன்கள் நெல் ஆகும். இது நாட்டில் மொத்த அரிசி அரவைச் சக்தியில் 5 சதவிகிதமாக உள்ளது. 6 நவீன அரிசி ஆலைகளை அமைப்பதற்காக ரூ. 107.94 இலட்ச அளவுக்கு மொத்த நிதியுதவி, தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தால், நீண்டகாலக் கடனாகவும் மானியமாகவும் சம்பந்தப்பட்ட மாநிலங்களுக்கு ஒப்பளிக்கப்பட்டது. எல்லா அமைப்புகளின் அரவைத் தளவாடங்கள் முற்றிலும் நிறுவப்பட்டு, எல்லா அமைப்புகளும் உற்பத்தியிலுள்ளன. நவீன அரிசி ஆலைகள் நடப்பிலுள்ள அரிசி ஆலைகளைவிடத் தனிப்பட்ட அனுகூலங்களைப் பெற்றுள்ளனவென்று காணப்

பட்டது. ஆகையால், இந்திய அரசு, 1969ஆம் ஆண்டில், அரிசி அரைவைத் தொழில்கள் (ஒழுங்குபடுத்தல்) சட்டத்தைத் (Rice Milling Industries, (Regulation) Act) திருத்தம் செய்தது. இத் திருத்தத்தின்படி, அரிசி அரவையாளர்கள் தங்கள் அரிசி ஆலைகளை, நிருணயிக்கப்பட்ட காலவரையின்போது, நவீன மாக்குவதற்குக் கடமைப்பட்டுள்ளனர். அதன் விளைவாகக் கூட்டுறவு நிறுவனங்கள், நடப்பிலுள்ள தம் அரிசி ஆலைகளை நவீனப்படுத்துவதற்காக, ஒரு பெரிய திட்டத்தை மேற்கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகின்றன. அத்தகைய திட்டத் திற்கு, ரூ. 52 கோடிக்கு மேலான ஒரு முதலீடு தேவைப்படுமென்று மதிப்பீடு செய்யப்படுகிறது. அரிசி ஆலைகளில் சில, பக்க விளைவுப் பொருள்கள் பயன்படுத்துதலை மேற்கொண்டு, அக் காரியத்திற்காக 4 அரிசி உமி எண்ணெய் ஆலைகளை (Rice Bran Oil Mills) அமைத் துள்ளன. இந் நான்கு ஆலைகளும் ஆந்திரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், கர்நாடகம், தமிழ்நாடு ஆகிய மாநிலங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொன்றுக அமைக்கப்பட்டுள்ளன. இவற் றுள், 3 ஆலைகள் பொருத்தப்பட்டுள்ளன; எஞ்சிய ஒன்று பொருத் தப்பட்டு வருகின்றது.

(iii) **பருத்தி** :- 31-3-70ஆம் நாளன்று 73 பருத்தி விளைவிப் பவர்களின் கூட்டுறவு நூற்பாலைகள் இருந்தன. அவை, 1.15 இலட்ச உறுப்பினர்களையும், ரூ. 10.16 கோடி செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தையும் கொண்டிருந்தன. இப் பங்கு மூலதனத் தில், பருத்தி விளைவிப்பவர்களின் பங்கு மூலதனமும் அவர்களின் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனமும் ரூ. 3.7 கோடியும், மாநில அரசுகளின் பங்கு மூலதனம் ரூ. 643 கோடியும் அடங்கி யிருந்தன. இந்தியத் தொழில் நிதிக் கழகம், இதுவரை 11 பருத்தி விளைவிப்பவர்களின் கூட்டுறவு நூற்பாலைகளுக்கு ரூ. 5.66 கோடியை நிலைக் கடன்களாக (Block Loans) ஒப்பளித்துள்ளது. 13 பருத்தி விளைவிப்பவர்களின் கூட்டுறவு ஆலைகள் உற்பத்தி நடவடிக்கையில் ஈடுபட்டிருந்தன. மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டக் கால இறுதியில், பருத்தி விளைவிப்பவர்களின் கூட்டுறவு நூற்பாலை களுக்கு உரிமம் வழங்கப்பட்ட கதிர்கள் சக்தி (Spindlage), 4.2 இலட்சக் கதிர்களாக (Spindles) இருந்தது. 1969-70ஆம் ஆண்டில், இந் நூற்பாலைகள் தங்களுக்குத் தேவைப்பட்ட பருத்தியில், 90 சதவிகிதத்தை, விளைவிப்பவர்—உறுப்பினர்களிடமிருந்து கொள் முதல் செய்தன. இவ் வாலைகளில் பல, 16.4 சதவீத மொத்த இலாபத்தை ஈட்டின. 1969-70ஆம் ஆண்டில், அவை பயன் படுத்திய கதிர்ச் சக்தி 74 சதவீதமாக இருந்தது. அநேக ஆலை களின், உற்பத்திச் செலவு, கதிர் ஒன்றுக்கு ரூ. 16.20 பைசாவுக்குக்

குறைந்துள்ளது. தேய்மானமும், வட்டியும் நீங்கலாக, கதிரொான்றுக்குச் செலவு ரூ. 8.12 பைசாவாக உள்ளது. இது, தனியார் துறையிலுள்ள எந்த ஆலைகளுக்கும் ஒப்பிடத்தக்கதாக வுள்ளது.

பிரதம மட்டத்தில், பருத்தி பதனப்படுத்துதல், அதாவது பஞ்சினின்று கொட்டை நீக்குதலும், பருத்தியை அழுத்தலுங் கூட, கூட்டுறவுத் துறையில் உறுதியாக வளர்ந்து கொண்டு வருகிறது. கடந்த 10 ஆண்டுகளில், கூட்டுறவுப் பருத்திக் கொட்டை நீக்கும், பருத்தி அழுத்தம் செய்யும் சங்கங்களின் எண்ணிக்கை 126-லிருந்து 217-க்கு அதிகப்பட்டுள்ளது. கொட்டை நீக்கப்பட்டு, அழுத்தப்பட்ட பருத்தியின் அளவு 3.10 இலட்சக் கட்டுகளிலிருந்து 6.33 இலட்சக் கட்டுகளுக்கு அதிகரித்தது. இது, நாட்டின் மொத்தப் பருத்தி உற்பத்தியில் சுமார் 12 சதவீதமாக இருந்தது. பருத்தி வழங்குதலிலும் அதன் விலைவாசியிலும் கடினமான நிலைமையிலிருந்தும்கூட, பருத்திக் கொட்டை நீக்கும் சங்கங்கள், இந்த முன்னேற்றத்தை அடைந்துள்ளன.

தலைமை விற்பனைக் கூட்டமைப்புகள், பருத்தி அங்காடிகளில் கூட்டுறவுப் பருத்திக் கொட்டை நீக்குதலுக்கும், பதனப்படுத்துதலுக்கும் பெருகிவரும் வகையில் ஆதரவளித்து வருகின்றன. உதாரணமாக, 1969-70ஆம் ஆண்டில், மராட்டிய மாநில விற்பனைக் கூட்டமைப்பு, மாநிலத்திலுள்ள கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்து 41.129 இலட்சக் கட்டுகள் பருத்தியைக் கொள்முதல் செய்து, ரூ. 8.12 இலட்சத்திற்கு மதிகமான பருத்தி பதனப்படுத்தும் கட்டணங்களையும், ரூ.1.88 இலட்சம் தரகையும் செலுத்தியது. எனவே, விற்பனைக் கூட்டமைப்பு, மாநிலத்திலுள்ள கூட்டுறவுப் பருத்தி பதனப்படுத்தும் சங்கங்களின் செயற்பாட்டைத் தீவிரப் படுத்த உதவின. அதே மாதிரியான வகைகளில் ஒரு தொடக்கம், மத்தியப் பிரதேசத்திலுங்கூடச் செய்யப்பட்டுள்ளது. இந்தியப் பருத்திக் கழகத்தின் (Cotton Corporation of India) தோற்றம், பருத்தி பதனப்படுத்துதலிலும், விற்பனையிலும், பெருமளவு பொறுப்பை மேற்கொள்வதற்குத் தலைமை விற்பனைக் கூட்டமைப்புகளை மேலும் பலப்படுத்துமென்று எதிர்பார்க்கப்படுகிறது. சர்க்கரை உற்பத்தி வளர்ச்சியில் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகளால் ஆற்றப்பட்ட பணிமுறை வகையில், கூட்டுறவு அமைப்புகள் பருத்தி உற்பத்தியைத் தரத்திலும், அளவிலும் வளர்ச்சி செய்வதில்கூட ஒரு முக்கியத் தொண்டை ஆற்ற முடியும். நிதியாதாரங்களின்மையால், பருத்தி விளைவிப்பவர்களின் கூட்டுறவு நூற்பாலைகளும், பருத்தி பதனப்படுத்தும் சங்கங்களும் இத் துறையில் இதுவரையில் யாதொரு குறிப்பிடத்தக்க முன்

னேற்றத்தையும் அடையாமலுள்ளன. 'அனைத்திந்தியக் கூட்டுறவு நூற்பாலைகள் கூட்டமைப்பு' (All India Federation of Co-operative Spinning Mills), பருத்தி வளர்ச்சி பற்றிய இப் பிரச்சனையை அதன் உறுப்பினர்-ஆலைகளின் அலுவல் எல்லையிலும் கூட்டுறவுப் பருத்தி பதனப்படுத்தும் சங்கங்களின் அலுவல் எல்லையிலும் பரிசீலிக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

(iv) **எண்ணெய் வித்துகள்** :-கூட்டுறவுத் துறையில் எண்ணெய் விதைகளைப் பதனப்படுத்துதலானது, இதுவரை பிரதானமாக, நிலக்கடலைக்கு மட்டும் மேற்கொள்ளப்பட்டுள்ளது. நிலக்கடலை, நிலக்கடலை எண்ணெய், புண்ணாக்கு ஆகியவைகளின் விலைவாசி ஏற்ற இறக்கங்களிலிருந்தும், விலைவாசி ஏற்றத்தாழ்வுகளிலிருந்தும், எழுகின்ற வரையறைகள் இருப்பினும், கூட்டுறவு எண்ணெய் ஆலைகள் 1960-61ஆம் ஆண்டில் 0.90 இலட்சக் குவிண்டால்களிலிருந்து 1969-70ஆம் ஆண்டில் 3.7 இலட்சக் குவிண்டால்கள் நிலக்கடலையைப் பிழிந்தன. இக் காலவரையில், எண்ணெய் ஆலைகளின் எண்ணிக்கை 114-லிருந்து 246-க்கு அதிகரித்துள்ளது. எண்ணெய் ஆலைகளின் செயற்பாட்டை உறுதிப்படுத்தும் பொருட்டு, அவை, சால்வன்ட் எக்ஸ்டிராக்ஷனும், வனஸ்பதியும், மாட்டுத் தீவனமும், தயாரித்தல் போன்ற இரண்டாவது இடைநிலைப் பதனப்படுத்தும் கட்டங்களுடனும், மூன்றாவது இடைநிலைப் பதனப்படுத்தும் கட்டங்களுடனும், ஒன்றிணைக்கப்பட்டு வருகின்றன. கடந்த 5 ஆண்டுகளில், 5 சால்வன்ட் எக்ஸ்டிராக்ஷன் அமைப்புகளும், 2 வனஸ்பதித் தொழிற்சாலைகளும், 3 மாட்டுத் தீவனத் தொழிற்சாலைகளும் கூட்டுறவுத் துறையில் தோன்றியுள்ளன. எல்லா 5 சால்வன்ட் எக்ஸ்டிராக்ஷன் இயந்திர அமைப்புகளும் அமைக்கப்பட்டு, அவற்றுள் 3 கடந்த நான்கைந்து ஆண்டுகளாக உற்பத்தியிலுள்ளன. உற்பத்தியிலுள்ளவை இப்பொழுது இலாபங்களை ஈட்டிக்கொண்டும், தங்களின் நிறுவப்பட்ட வசதித் திறனில் 70 சதவிகிதத்திற்கு மதிகமாக உபயோகித்துக் கொண்டுமுள்ளன. பருத்தி விதை பதனப்படுத்துதலை மேற்கொள்வதற்குக் கூட, கூட்டுறவு நிறுவனங்கள் ஊக்குவிக்கப்பட்டு வருகின்றன. அண்மையில், 3 அத்தகைய அமைப்புகள் கூட்டுறவுத் துறையில் பல்வேறு பருத்தி விளைவிக்கும் மண்டலங்களில் நிறுவப்பட்டுள்ளன.

(v) **பழவகைகளும் காய்கறிகளும்** :-கூட்டுறவுத் துறையிலுள்ள பழவகைகள், காய்கறிகள் பதனப்படுத்தும் அமைப்புகளின் எண்ணிக்கை 1961-62ஆம் ஆண்டில் 11-லிருந்து 1969-70ஆம் ஆண்டில் 38-க்கு உயர்ந்தது. 1961ஆம் ஆண்டில், கூட்டுறவு நிறுவனங்கள் 153.9 டன்கள் பழவகைகளையும், காய்கறிகளையும் மட்டுந்தான் பதனப்

படுத்தின. ஆனல், 1968-69ஆம் ஆண்டில், அவை ரூ. 73.42 இலட்சம் பெறுமானத்தில் 2, 428 டன்கள் பழவகைகளையும், காய்கறிகளையும் பதனப்படுத்தின. இக் கூட்டுறவு நிறுவனங்கள் முதன்மையாகத் தகர டப்பிகளில் அடைக்கப்பட்ட பழங்களையும் (Canned Fruits), பழப்பாகுகளையும் (Jams), பழத்துண்டுகளையும் (Jellies), பழச்சாற்றினையும் (Juices) தயாரித்தன. 1969-70ஆம் ஆண்டில், பழவகைகள், காய்கறிகள் கூட்டுறவுச் சங்கங்கள், ரூ. 80 இலட்சம் மதிப்புள்ள பழவகைகளையும், காய்கறிகளையும், குவைத்து, டோரா, பகரான், இலங்கை, சிங்கப்பூர், மலேசியா, ஈரான் முதலியன போன்ற நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தன. வாழைப்பழம் ஏற்றுமதியில், ஜல்கானிலும் (மராட்டிய மாநிலம்), பர்தோலியிலும் (குசராத்து மாநிலம்) இயங்கும் கூட்டுறவுப் பழவகைகள் விற்பனைக் கூட்டமைப்புகள் ஒரு குறிப்பிடத்தக்க பணியைத் தொடர்ந்தாற்றின. இக் கூட்டுறவு நிறுவனங்கள் ஒன்றுசேர்ந்து ரூ 71.40 இலட்சம் மதிப்புள்ள வாழைப்பழங்களை விரிகுடா நாடுகளுக்கு 1968-69ஆம் ஆண்டில் ஏற்றுமதி செய்தன.

இமாசலப் பிரதேசம், ஜம்மு-காஷ்மீர் ஆகிய மாநில அரசுகள், ஆப்பிள் பழங்கள் பதனப்படுத்துதலையும், விற்பனை செய்தலையும் ஆதரிப்பதற்குத் தனி நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளன. தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் ஆய்வுரையின் பேரில், இமாசலப் பிரதேசம், மாநில மட்டத்தில் ஆப்பிள் பழங்கள் விளைவிப்பவர்களின் கூட்டுறவு விற்பனைப் பதனப்படுத்துதல் சங்கம் ஒன்றை அமைப்பது பற்றியும், செயற்படுத்துவது பற்றியும் அரசுக்கு ஆய்வுரை வழங்குவதற்கு, உயர்மட்டத்து ஆய்வுரைக்குழு ஒன்றை அமைத்துள்ளது. ஜம்மு-காஷ்மீர் மாநிலத்தின் அரசு, அதே மாதிரியான நடவடிக்கைகளை மேற்கொண்டு, ஆப்பிள் பழங்கள் விளைவிப்பவர்களின் கூட்டுறவு விற்பனைச் சங்கம் ஒன்றை அமைத்துள்ளது. அச் சங்கம் அண்மையில் செயற்படத் தொடங்கியுள்ளது.

நவீனமானதும், தானே இயங்குகின்றதுமான இயந்திரங்களைக்கொண்ட மைய-அளவு, பெரிய-அளவுப் பழவகைகள் காய்கறிகள் பதனப்படுத்துதல் அமைப்புகளை அமைப்பதற்குக் கூட்டுறவுச் சங்கங்கள் ஊக்குவிக்கப்பட்டு வருகின்றன. அத்தகைய 4 பெரிய அளவு அமைப்புகள் கர்நாடகத்திலும், தமிழ்நாட்டிலும், பீகார் மாநிலத்திலும் ஏற்கெனவே அமைக்கப்பட்டுள்ளன. மேற்கொண்டு அத்தகைய 3 அமைப்புகள் பல்வேறு அமைப்புக் கட்டங்களிலுள்ளன.

**கூட்டுறவுக் குளிர்பதனப் பொருட் சேமிப்பு அமைப்புகள்:** தற்போது, பழவகைகள், காய்கறிகள் ஆகியவைகளின் நுகர்வோர் விலையில் குடியானவர்கள் 25 சதவீதம் முதல் 30 சதவீதம் வரையுள்ள பாகத்தை மட்டுந்தான் பெறுகின்றனர். நுகர்வோர் விலையில் குடியானவர்களின் பங்கை மேம்படுத்துவதற்குப் பழவகைகள், காய்கறிகளின் விற்பனையைக் கூட்டுறவு மயமாக்குதல், முக்கியமானதாக உள்ளது. இத் துறையில் குளிர்பதனப் பொருட்சேமிப்பு அமைப்புகள் முக்கியமான பணியை மேற்கொள்ளவேண்டியுள்ளன. ஆகையால், நாட்டில், பழவகைகள், காய்கறிகள் விளைகின்ற முக்கியப் பகுதிகளில், குளிர்பதனப் பண்டச் சேமிப்பு அமைப்புகளைக் கூட்டுறவுத் துறையில் அமைப்பதற்காக முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன.

கூட்டுறவுக் குளிர்பதனப் பண்டச் சேமிப்பு அமைப்புகளின் எண்ணிக்கை 1960-61ஆம் ஆண்டில், 12,000 டன்கள் சக்தியுடன் 13-லிருந்து, 1970ஆம் ஆண்டில் 1.30 இலட்ச டன்கள் சக்தியுடன் 90-க்கு உயர்ந்துள்ளது. நாட்டின் மொத்தச் சக்தியில், கூட்டுறவுக் குளிர்பதனப் பொருட் சேமிப்பு அமைப்புகளுடைய சக்தி உயர்வின் சதவிகிதமானது 4-லிருந்து 10 ஆக இருந்தது. 1969 ஆம் ஆண்டுச் ஜூன் மாத இறுதியில், 31 குளிர்பதனப் பண்டச் சேமிப்பு அமைப்புகள் செயற்பாட்டிலிருந்தன. அவற்றின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 37,528 ஆக இருந்தது. இதில், 35,454 தனிநபர்ப் பழவகைகள், மற்றும் காய்கறிகள் விளைவிப்பவர்களும், அவர்களுடைய 1,807 கூட்டுறவுச்சங்கங்களும், 367 மற்றவர்களும் அடங்கியிருந்தனர். அவற்றின் பங்கு மூலதனம் ரூ. 88.40 இலட்சமாக இருந்தது. இதில் பழவகைகள், மற்றும், காய்கறிகள் விளைவிப்பவர்களின் பங்கு மூலதனமும், அவர்களுடைய கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனமும் 61.88 இலட்சமாக இருந்தது. இந்த 31 அமைப்புகளுள், 23 அமைப்புகள் 100 சதவிகிதம் வரைக்கும், 4 அமைப்புகள் 90 வரைக்கும், தங்கள் சக்தியை உபயோகப்படுத்தின. எஞ்சியிருந்த 4 அமைப்புகள் மட்டும், 80 சதவிகிதத்திற்குக் குறைவாகத் தங்கள் சக்தியைப் பயன்படுத்தின.

(vi) **தோட்டப் பயிர்கள்:**—தோட்டப்பயிர்களைப் பதனப்படுத்துவதற்காகக் கூட்டுறவுத் துறையில் 55 பதனப்படுத்தும் அமைப்புகள் அமைக்கப்பட்டுள்ளன. அவை, கொப்பரை, தேயிலை, முந்திரிப்பருப்பு, காஃபி ஆகியவற்றின் பதனப்படுத்துதலை மேற்கொள்கின்றன. இந்த 55 பதனப்படுத்துதல் அமைப்புகளுள், 32 அமைப்புகள் கொப்பரை பதனப்படுத்துதலுக்காகவும், 12

அமைப்புகள் தேயிலைக்காகவும், 6 முந்திரிக்காகவும், 5 காஃபிக் காகவும் அமைக்கப்பட்டன. தேயிலை பதனப்படுத்துதலிலும், காஃபி பதனப்படுத்துதலிலும், கூட்டுறவு அமைப்புகள் திருப்திகர மான முன்னேற்றத்தைப் பதிவு செய்துள்ளன. உதாரணமாக, 1969-70ஆம் ஆண்டில், தேயிலைக் கூட்டுறவு அமைப்புகள் 178 இலட்சம் மதிப்புள்ள தேயிலையைப் பதனப்படுத்தின. இவை, 1968-69 ஆம் ஆண்டில், ரூ. 113 இலட்சம் மதிப்புள்ள தேயிலையை மட்டுமே பதனப்படுத்தியிருந்தன. நீலகிரியில் செயற்படும் எல்லாத் தேயிலைக் கூட்டுறவு அமைப்புகளும் இலாபங்களைக் காட்டின. 1968-69 ஆம் ஆண்டில், காஃபி பதனப்படுத்தும் அமைப்புகள் ரூ. 220.11 இலட்சம் மதிப்புள்ள காஃபியைப் பதனப்படுத்தின. கொப்பரை பதனப்படுத்தும் அமைப்புகள் ரூ. 90 இலட்சம் மதிப்புள்ள கொப்பரையைப் பதனப்படுத்தின.

## 5. பதனப்படுத்துதல் நடவடிக்கை அமைப்பின் வகை (Pattern of organisation of processing activities)

விவசாய விளைபொருள்களின் கூட்டுறவுப் பதனப்படுத்து தலானது தன்னிச்சையான பதனப்படுத்துதல் சங்கங்களால் அல்லது கூட்டுறவு விற்பனைச் சங்கங்களால் மேற்கொள்ளப்படு கிறது. அவை, விற்பனைச் சங்கங்களில், அச் சங்கங்களுக்குப் பிற் சேர்க்கையாக ஏற்படுத்தப்பட்ட அமைப்புகளாக உள்ளன. தமிழ் நாடு உட்பட, பெரும்பாலான மாநிலங்களில் இதுதான் வழக்கமாக உள்ளது. சர்க்கரை ஆலைகள், நூற்பாலைகள், சால்வன் எக்ஸ் டிராக்ஷன் அமைப்புகள், மாட்டுத் தீவனம் தொழிற்சாலைகள், முதலியன போன்ற பெரிய—அளவுப் பதனப்படுத்தும் அமைப்புகள். விளைவிப்பவர்களால் பிரத்தியேகமாக நிறுவப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களால், அளவையும், அமைப்பு இடத்தையும் பொறுத்துக் கூட்டமைப்பாகவோ, தனிமையாகவோ அமைக்கப்படுகின்றன. அத்தகைய தன்னிச்சையான விளைவிப்பவர்களின் பதனப்படுத்தும் அமைப்புகளை அடையாளப்படுத்துவதற்காக நிருணயிக்கப்பட்ட விதியின்படி, அரசு நீங்கலாக உறுப்பினர்களிடமிருந்து வசூலிக்கப் பட்ட பங்கு மூலதனத்தில் குறைந்த அளவு 5 சதவீதம், விளை விப்பவர்களுடையதாக இருக்க வேண்டியும், அவர்களின் பங்கு மூலதன வைப்பானது, பதனப்படுத்துதலுக்காகக் கச்சாப் பொருள்களை வழங்குவதற்காகச் சம்பந்தப்பட்ட பயிரிலுள்ள ஏக்கர் நிலங்கள் அளவுக்கு இணைக்கப்படவேண்டியு முள்ளது.

## 6. கூட்டுறவுப் பதனப்படுத்துதலுக்காக அளிக்கப்படும் வசதிகள் (Facilities provided for Co-operative Processing)

விவசாயப் பதனப்படுத்துதல் தொழில்களை அமைப்பதற்காக, உற்பத்திச் சக்தி அல்லது நிலப்பரப்பு வடிவத்தில், எவ்விதமான ஒதுக்கிவைத்தலும், கூட்டுறவுப் பதனப்படுத்துதலுக்குக் கிடையாது. சர்க்கரை ஆலைகளைக் குறித்த உரிமம் வழங்குவதில் மட்டுந்தான், கூட்டுறவு அமைப்புகளுக்கு அரசால் சலுகை அளிக்கப்படுகிறது. நிதி வழங்குதலிலுங்கூட, கூட்டுறவு அமைப்புகளின் விண்ணப்பங்களை முன்னுரிமை வகையில் பாவிக்கும் ஒரு கொள்கையை எந்த நிதி நிறுவனமும் மேற்கொள்ளுகிறதில்லை. உண்மையாகவே, பதனப்படுத்துதல் நடவடிக்கையை மேற்கொள்ளும் கூட்டுறவுச் சங்கங்கள், போட்டியிடும் நிலைமையின்கீழ்ச் செயற்படுகின்றன. எனினும், அவைகளுக்கு அரசாலளிக்கப்படும் உதவி, பிரதானமாகத் தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் மூலம் வழங்கப்படுகிறது. இக் கழகத்தின் வசம், விவசாய விளைபொருள்களின் பதனப்படுத்துதலைக் கூட்டுறவு அமைப்புகள் மேற்கொள்வதைத் திட்டமிடுதல், வளர்ச்சி செய்தல், நிதி வழங்குதல் ஆகிய பொறுப்புகளுள்ளன. கூட்டுறவுப் பதனப்படுத்துதல் செயல் திட்டங்களைத் திட்டமிடுதல், வளர்ச்சி செய்தல் ஆகிய துறைகளில், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம் உறுதியான ஒரு செயல் விளைவைச் செய்துள்ளது. அதன் விளைவாக, விவசாயப் பதனப்படுத்துதல் வளர்ச்சியில், கூட்டுறவு அமைப்புகளின் முன்னேற்றம் குறிப்பிடத்தக்கதாக இருந்துள்ளது. நிதி வழங்குதலைக் குறித்துங்கூட, தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம் விவசாயப் பதனப்படுத்துதல் அமைப்புகளுக்குப் பிரதானமாகப் பங்கு மூலதன உதவித் தொகையளித்தல் வடிவத்தில், மாநில அரசுகளுக்கு உதவி வழங்கியுள்ளது. 1969-70ஆம் நிதி ஆண்டின்போது, பதனப்படுத்துதல் வளர்ச்சித் திட்டங்களை அமுல் செய்வதற்காக, மாநில அரசுகளுக்குக் கழகத்தால் வழங்கப்பட்ட மொத்த உதவி ரூ. 225.1 இலட்சம் அளவிற்கிருந்தது. அண்மையில், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம், பின்தங்கிய பகுதிகளில் விவசாயப் பதனப்படுத்துதலின் வளர்ச்சிக்காக, அவசியமான வழிகாட்டுதலை வழங்குவதற்கு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளது.

## 7. மேலாண்மைத் திறன் (Managerial Skill)

பதனப்படுத்துதல் அமைப்புகளின், சிறப்பாகச் சிற்றளவு மைய அளவு அமைப்புகளின், மேலாண்மைத்திறனை மேம்படுத்துவதற்கும், பலப்படுத்துவதற்கும், மாநிலக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்புகள்மூலம், மேலாண்மைப்பணியாளர் தொகுதித் தொழில்

நிலைப்பிரிவுத் தொகுப்பையும், சிறிய பதனப்படுத்துதல் அமைப்பு களின் மேலாண்மையை மையப்படுத்துதலையும் செய்வதற்கான திட்டங்கள் வகுக்கப்பட்டுப் பெரும்பான்மையான மாநிலங்களில் அத் திட்டங்களை அமுல்படுத்துவதற்கு நடவடிக்கைகள் மேற் கொள்ளப்பட்டுள்ளன. வைகுந்த் மேத்தா கூட்டுறவு மேலாண்மை மற்றும், கூட்டுறவுப் பயிற்சிக் கல்லூரியின் மூலம், பதனப்படுத்து தல் அமைப்புகளின் மேலாண்மைப் பணியாளர் தொகுதியின் பயிற்சிக்காகத் தனிச்சிறப்பு ஏற்பாடுகளைத் தொடக்குவதற்குங்கூட நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. பொதுத் துறையிலும், தனியார் துறையிலு முள்ள நிறுவனங்களி லுள்ள பயிற்சி வசதி களுங்கூட இக் காரியத்திற்காகப் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. அவசியப்படும் சந்தர்ப்பங்களில், அன்னிய நாட்டு ஒத்துழைப்பு ஏற்பாடுகளுங்கூடச் செய்யப்படுகின்றன. உதாரணமாக, தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம், எண்ணெய் வித்துகள் பதனப் படுத்துதலில், அமெரிக்க நாட்டு வல்லுநர்களின் சேவைகளைப் பயன்படுத்தி, எண்ணெய் வித்துகள் பதனப்படுத்துதல் பயிற்சிக் காக ஏற்பாடு செய்துள்ளது.

## 8. தமிழ்நாட்டில் கூட்டுறவுப் பதனப்படுத்துதல் (Co-operative Processing in Tamil Nadu)

தமிழ்நாட்டில், கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள், தேயிலைத் தொழிற்சாலைகள் முதலியன போன்ற பெரிய அமைப்புகள் தவிர, தனிப்பட்ட பதனப்படுத்துதல் சங்கங்கள் எதுவுமில்லை. கூட்டுறவு விற்பனைச் சங்கங்களே, பதனப்படுத்துதல் அமைப்புகளைப் பின் சேர்ப்புகளாக நிறுவியுள்ளன. விற்பனைச் சங்கங்களுக்குச் சொந்தமான பதனப்படுத்துதல் அமைப்புகளாவன: பருத்திக் கொட்டை நீக்குதல் (18), நிலக் கடலைத் தோல் நீக்குதல் (25), எண்ணெய் எடுத்தல் (6), அரிசி உமி நீக்குதல் (36), காஃபி பதனப் படுத்துதல் (1), நவீன அரிசி ஆலைகள் (13), அரிசித் தவிடு எண் ணெய் எடுத்தல் (1), பழவகைகளைத் தகர டப்பிகளில் அடைத்தல் (1), ஏலக்காய் எண்ணெய் எடுத்தல் (1), மரவள்ளிக் கிழங்கு பதனப் படுத்துதல்(1),அன்னுசிப்பழம் பதனப்படுத்துதல் (1)ஆகிய இயந்திர அமைப்புகளாகும். பதனப்படுத்துதல் அமைப்புகளைப் பின்சேர்ப் பாக அமைப்பதற்கு, விற்பனைச் சங்கங்களுக்குப் பங்குமூலதன மாகவும். கடன்களாகவும் உதவியளிக்கப்படுகின்றது. 71-72ஆம் ஆண்டின்போது அளிக்கப்பட்ட மொத்த நிதியுதவி ரூ. 3.25 இலட் சத்திற் கிருந்தது (ரூ. 0.62 இலட்சம் கடனுகவும், ரூ. 2.63 இலட் சம் மானியமாகவும்). கூட்டுறவுத்துறையில், 13 நவீன அரிசி ஆலை கள் உள்ளன. அரிசி ஆலைகளை அமைத்துள்ள கூட்டுறவு விற்பனைச்

சங்கங்கள் கொள்முதல் நடவடிக்கைகளுக்கான நடைமுறை மூல தனத்தைத் திரட்டுவதற்கு அவற்றிற்கு வகை செய்யும்பொருட்டு அரசு 1970-71 ஆம் ஆண்டில் 11 சங்கங்களுக்கு ரூ. 23.01 இலட்ச மளவிற்கும், 1971-72 ஆம் ஆண்டில் ஒரு சங்கத்திற்கு ரூ. 1.11 இலட்சமளவிற்கும், பங்கு மூலதனமாக நிதியுதவி வழங்கியுள்ளது. அரிசி ஆலைகளிலிருந்து கிடைக்கும் உமியை இலாபகரமாகப் பயன் படுத்தும் பொருட்டுத் தஞ்சைமாவட்டத்தில் தஞ்சைக் கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு ரூ. 19.25 இலட்சம் செலவில் ஓர் அரிசித் தவிடு எண்ணெய் அமைப்பை நிறுவியுள்ளது. இதற்கு அரசு ரூ. 14·81 இலட்சம் (பங்கு மூலதனம் ரூ. 4.4 இலட்சம், கடன் ரூ. 9·87 இலட்சம்) உதவி யளித்துள்ளது. அரிசித் தவிடு எண்ணெ யானது, அந்நியச் செலாவணியைக் கொண்டுவரும் ஒரு பக்கவிளை வுப் பொருளாக வுள்ளது. 1971–72ஆம் ஆண்டின்போது, பதனப்படுத்துதல் அமைப்புகள் ரூ. 373·93 இலட்சம் மதிப்புள்ள 25,397 மெட்ரிக் டன்கள் விவசாய விளைபொருள்களைப் பதனப் படுத்தின. தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு ஒரு வனஸ்பதித் தொழிற்சாலையையும், நிலக்கடலை அமைப்பையும், மரவள்ளிக்கிழங்குத் தொழிலையும் அமைப்பதற்கான திட்டங்களை ஆலோசனை செய்துவருகிறது. காகித ஆலை ஒன்றை நடத்துதற் கான ஒரு கூட்டுறவுச் சங்கம் பதிவு செய்யப்பட்டுள்ளது. இவ் வாலை, பின்தங்கிய பகுதியில் அமைப்பதற்கு உத்தேசிக்கப்பட் டிருந்தது. சூரியகாந்திவிதை எண்ணெய் தயாரிப்பதற்காக, 2 அமைப்புகளை, ஒன்று கோவை மாவட்டத்திலும், மற்றொன்று தென்னார்க்காடு மாவட்டத்திலும் நிறுவுவதற்காகவுங்கூட நிதி யுதவியை அரசு ஒப்பளித்துள்ளது.

நூற்பாலைகள், சர்க்கரை ஆலைகள் போன்ற பெரிய அளவு பதனப்படுத்துதல் அமைப்புகளைப் பொறுத்தவரையில், தமிழ்நாட்டில் பருத்தி விளைவிப்பவர்களுக்காக நூற்பாலைகள் எதுவுமில்லை; நூலை உபயோகிப்பவர்களுக்காக மட்டுமே, 12 ஆலைகள் உள்ளன. சர்க்கரை ஆலைகளைப் பொறுத்த மட் டில், 1970 ஆம் ஆண்டுச் ஜூன் இறுதியில், 10 கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள் இருந்தன. இவற்றில், 41,446 மொத்த எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் இருந்தனர். இவர்களுள், 41,355 விளைவிப்பவர்களாகவும், 7 சங்கங்களாகவும், 84 மற்ற வர்களாகவும் இருந்தனர். அவர்களின் மொத்தச் செலுத்தப் பட்ட பங்கு மூலதனம் ரூ.6.90 கோடியாக இருந்தது. இதில், அரசின் பங்கு மூலதனம் ரூ.2.43 கோடியாகவும், சங்கங்களின் பங்கு மூலதனம் ரூ.0.27 கோடியாகவும், தனிநபர் விளைவிப்ப

வர்களின் பங்கு மூலதனம் ரூ.4.14 கோடியாகவும் மற்ற வர்களின் பங்கு மூலதனம் ரூ.25,000 ஆகவு மிருந்தது. அவற் றின் மொத்த நடைமுறை மூலதனம் ரூ.25.98 கோடியாக இருந்தது. 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், அவை குறுகிய கால நடைமுறை மூலதனத்திற்காக ரூ.6.78 கோடி யையும், மத்தியக்கால, நீண்டகால நிலை முதலுக்காக ரூ.4.46 கோடியையும் கடன் வாங்கி யிருந்தன. அக் கடன்கள், அரசிட மிருந்தும், மைய நிதியமைப்புகளிடமிருந்தும், இந்தியத் தேச வங்கியிடமிருந்தும், தொழில் நிதிக் கழகங்களிடமிருந்தும், தொழில் வளர்ச்சி வங்கியிடமிருந்தும் பெறப்பட்டன. இந்த 10 சர்க் கரை ஆலைகளும், ரூ.11.86 கோடி மதிப்புள்ள 95,085 டன்கள் சர்க்கரையைக் கரும்பிலிருந்து தயாரித்தன. அந்த ஆண்டின்போது, விற்பனை செய்யப்பட்ட சர்க்கரை ரூ.15.43 கோடி யளவிற்கும், பக்கவிளைவுப் பொருள்கள் 0.26 கோடிக்கு மிருந்தன. அவை ரூ.0.60 கோடி மதிப்பிற்கு விவசாயத் தேவைகளை விநியோகித்தன. அவை ரூ.10.32 கோடியளவிற் குக் குறுகிய காலக் கடன்களை உறுப்பினர்களுக்கு அளித்து, ரூ.0.018 கோடிக் கடன்களை வசூலித்தன. 5 ஆலைகள், கடன் சங்கங்களின் கடன்களைக் கரும்புச்சாலையிலிருந்து ரூ.2.03 கோடியளவிற்கு வசூலித்தன. இந்த ஏற்பாட்டில் ஈடுபட் டிருந்த கடன் சங்கங்களின் எண்ணிக்கை 924 ஆகவும், உறுப்பி னர்களின் எண்ணிக்கை 9,590 ஆகவு மிருந்தன. 2 ஆலைகள், ரூ.0.16 கோடி இலாபத்திலும், 4 ஆலைகள் ரூ.0.47 கோடி நட்டத்திலும், 4 ஆலைகள் இலாபமும், நட்டமு மில்லாமலும் இயங்கின.

தமிழ்நாட்டில், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் திட்டத்தின்கீழ், இலாகா அதிகாரிகளுக்குப் பதிலாகப் பிரதம விற்பனைச் சங்கங்களுக்குப் பணியாளர்களை யனுப்புவதற்காக ஒரு மேலாண்மை அதிகாரிகளின் தொகுப்பை ஏற்படுத்து வதற்குத் தமிழ்நாடு கூட்டுறவு விற்பனைக் கூட்டமைப்பு ஒரு தொடக்கம் செய்துள்ளது. இந்தத் திட்டத்தின்படி, ஒவ்வொன்றிலும், 44 அதிகாரிகளைக் கொண்ட 2 அதிகாரிகள் தரங்கள் இருக்கும். அவர்கள் 3 ஆண்டுகள் காலத்திற்காகத் தெரிந்தெடுக்கப்பட்டுப் பயிற்சியளிக்கப்படுகின்றனர். இத் திட்டத் தின் மொத்தச் செலவு ரூ. 3 இலட்சமாகும். தமிழ்நாடு கூட் டுறவு விற்பனைக் கூட்டமைப்பு முதல் தொகுப்பு அதிகாரிகளைத் தெரிந்தெடுத்து, அவர்களில் சிலரை, விற்பனைச் சங்கங்களுக்கு, வேலையில் அமர்வதற்காக அனுப்பியுள்ளது.

# 20. கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள்
## (Co-operative Farming Societies)

1. **கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களின் வகைகள்** :- பரவலாகக் கூறுமிடத்து, கூட்டுறவுப் பண்ணைத் துறையில் நான்கு வகையான சங்கங்கள் அங்கீகரிக்கப்பட்டுள்ளன. இந் நான்கு வகைகளின் அத்தியாவசியக் கூறுகள் கீழே சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

(i) ஒரு கூட்டுறவு மேலான பண்ணைச் சங்கமானது, (Co-operative Better Farming Society), பண்ணைத் தொழிலில் மேம்படுத்தப்பட்ட முறைகளைப் புகுத்துவதற்கு உத்தேசிக்கப்பட்டுள்ளது. அதன் உறுப்பினர்கள் அதனால் விதிக்கப்பட்ட ஒரு சாகுபடித் திட்டத்தைப் பின்பற்றுவதற்கு இசைகின்றனர். ஆனால், இதரத் துறைகளில், ஒருவருக்கொருவர் சுதந்திரமாக உள்ளனர். எனினும், விதைகளையும், உரங்களையும், கூட்டுக்கொள்முதல் செய்வதற்கும், விளைபொருள்களைக் கூட்டு விற்பனை செய்வதற்கும், இதரக் கூட்டு முயற்சிகளுக்கும் இசைகின்றனர்; சங்கமும் இத் துறைகளில் உறுப்பினர்களுக்கு உதவலாம்.

(ii) ஒரு கூட்டுறவுக் குத்தகைப் பண்ணைச் சங்கமானது (Co-operative Tenant Farming Society), முற்றுரிமைப் புலனாகவோ, குத்தகைப் புலனாகவோ, நிலத்தைச் சொந்தமாகப் பெற்றுள்ளது; ஆனால், இந் நிலம் சிறு நில உடைமைகளாக (Small Holdings) வகுக்கப்பட்டு, அவை ஒவ்வொன்றும், சங்கத்தின் ஓர் உறுப்பினராகவும் தம் குடும்பத்துடன் நிலத்தில் குடியிருப்பவராகவு முள்ள தனிநபர்ப் பயிரிடுபவருக்குக் குத்தகைக்கு விடப்படுகிறது. அன்னார், சங்கத்திற்குத் தம் நில உடைமைக்கான (நிலங்கள் குத்தகைப் புலனாக விருப்பின்) குத்தகைத் தொகையைச் செலுத்துகின்றார்; நிலங்கள் சங்கத்திற்குப் பராதீனம் செய்யப்பட்ட அரசு நிலங்களாக விருப்பின், அவர் நிலத்தீர்வையும், இதரத் தீர்வைகளையும் செலுத்துகின்றார். தம் சொந்தக் கணக்கில், அவர் நிலங்களைச் சாகுபடி செய்து, சாகுபடியின் இலாபத்தைத் தமக்கே வைத்

துக்கொள்கிறார். சங்கமானது, கடன்கள், விதைகள், உரங்கள், கருவிகள் முதலியவற்றை அவருக்கு வழங்குதல் மூலமாகவும், சாத்தியப்படும் போதெல்லாம் அவருடைய விளைபொருள்களை விற்பனை செய்தல் மூலமாகவும், அவருடைய சாகுபடித் தொழிலில் அவருக்கு உதவி புரிகின்றது. சங்கத்தின் உபரி (இலாபம்) ஏதாவது ஏற்பட்டால், அதில் ஒரு பகுதி, உறுப்பினர்கள் ஒவ்வொருவராலும் செலுத்தப்பட்ட குத்தகைத் தொகை முதலியவற்றின் அளவுக் கிணங்க உறுப்பினர்களிடையே பகிர்ந்தளிக்கப்படும்.

(iii) ஒரு கூட்டுறவுக் கூட்டுப் பண்ணைச் சங்கமானது (Co-operative Joint Farming Society), நிலமுடையவர்களால் தங்கள் நிலங்களை ஒன்றாகத் தொகுக்கப்பட்டு, அந்நிலங்கள் சங்கத்தால் சாகுபடி செய்யப்படுவதற்காக ஒப்படைக்கப்படுகின்றன. ஆனால், அவர்கள் தங்களுடைய நிலவுரிமையைத் தங்கள் வசமே வைத்துக் கொள்கின்றனர். நிலங்களின் சாகுபடி, சங்கத்தால் தன் சொந்தக் கணக்கில் செய்யப்படுகிறது. நிலமுடையவர்கள், பண்ணையில், விருப்பமிருந்தால் வேலை செய்யலாம். அத்தகைய சந்தர்ப்பத்தில், அவர்கள் நடப்புக் கூலிகள் அளிக்கப்படுவர். இதரத் தொழிலாளர்களுங்கூடக் கூலிக்கு வேலை செய்யலாம். சாகுபடிக் காரியங்களுக்குத் தக்கவாறு, நிலங்கள், பகுதிகளாக (Blocks) எல்லைகள் எப்படியிருந்தாலும் ஆலோசிக்காமல், உரிமை அடிப்படையில் வகுக்கப்படுகின்றன. செலவுகள் போக, ஒன்று தொகுக்கப்பட்ட நிலங்களிலிருந்து கிடைக்கும் வருமானம் சங்கத்தின் இலாபமாக அமைகின்றது. ஒவ்வோர் உறுப்பினரும் தம்மால் கொடுக்கப்பட்ட நிலத்தின் மதிப்பு விகிதத்தில் இலாபங்களில் ஒரு பாகத்தைப் பெறுவதற்கு உரிமை பெற்றுள்ளார். ஒவ்வோர் உறுப்பினரும், தம் நிலப்பகுதியின்மீது செய்யப்பட்ட ஏதாவது அபிவிருத்திக்கான செலவிற்காகவுங்கூட, பணம் செலுத்த வேண்டியிருக்கும்.

(iv) ஒரு கூட்டுறவுத் தொகுப்புப் பண்ணைச் சங்கமானது (Co-operative Collective farming Society), முற்றுரிமைப் புலனாகவோ குத்தகை உரிமைப்புலனாகவோ நிலங்களை வைத்துக்கொள்வதுடன், எல்லா இதர உற்பத்திச் சாதனங்களையுங்கூடக் கூட்டுப் பொறுப்பின்கீழ் வைத்துள்ளது. அல்லது. தன் உறுப்பினர்களால் தனக்கு அவர்களின் நிலங்கள் மாற்றப்படுதல் மூலம் பெற்ற நிலங்களைச் சொந்தமாக வைத்துள்ளது. சங்கத்திற்கு மாற்றப்பட்ட நிலத்தின் மதிப்பிற்குச் சமமான

பங்குகள் (shares) உறுப்பினர்களுக்குச் சங்கத்தில் ஒதுக்கப்படுகின்றன. நிலங்களைச் சங்கத்தின் உறுப்பினர்கள் கூலி பெற்றுச் சங்கத்தின் கணக்கில் சாகுபடி செய்கின்றனர். நிலத்தின் விளைபொருள்கள் சங்கத்திற்குச் சொந்தமாகும். செலவுகள் போக, இலாபங்கள், இதர ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கத்தைப் போன்று, பகிர்வு செய்யப்பட்டு, உறுப்பினர்கள், தங்களால் ஈட்டப்பட்ட கூலிகளின் பேரில் அதிகப்படி ஊதியம்(போனஸ்) அளிக்கப்படுகின்றனர்.

மேலே (i) (ii) பத்திகளில் குறிக்கப்பட்ட சங்க வகைகள் செயற்பாட்டைப் பொறுத்தமட்டில், ஏறக்குறைய ஒரே மாதிரியானவையாக வுள்ளன; வேறுபாடானது, ஒரு கூட்டுறவு மேலான பண்ணைச் சங்கத்தில் உறுப்பினரே நிலத்திற்கு உரிமையாளராக இருக்க, ஒரு கூட்டுறவுக் குத்தகைப் பண்ணைச் சங்கத்தில் உறுப்பினர் சங்கத்தின்கீழ் ஒரு குத்தகையாளராக மட்டுமே இருக்கிறார் என்பதுதான். பண்ணைத் தொழில், தனியார் சுவாதீனக் கொள்கை அடிப்படையில் செய்யப்படுகிறது.

அம்மாதிரியே, மேலே (iii) (iv) பத்திகளில் குறிக்கப்பட்ட சங்கவகைகள், செயற்பாட்டைப் பொறுத்தமட்டில், ஏறக்குறைய ஒரே மாதிரியானவையாக வுள்ளன; வேறுபாடானது, ஒரு கூட்டுறவுக் கூட்டுப் பண்ணைச் சங்கத்தில் நில உரிமை தனிநபர் உறுப்பினர்கள் வசமுள்ளதாக இருக்க, ஒரு கூட்டுறவுத் தொகுப்புப் பண்ணைச் சங்கத்தில் நிலவுரிமை சங்கத்தின் வசமுள்ளது என்பதுதான்.

கண்டிப்பாகக் கூறுமிடத்து, கூட்டுப் பண்ணைச் சங்கங்கள் என்பவை இவ்விரண்டு வகையான பண்ணைச் சங்கங்களை மட்டுந்தான் குறிக்கவேண்டும். நிலங்களை ஒன்றுதொகுத்தலும், பொறுப்பின் பகிர்வுமே, கூட்டுறவுப் பண்ணையின் தனிப்பட்ட அம்சங்களாகும். எனவே, மேலான பண்ணைச் சங்கங்களும், குத்தகைப் பண்ணைச் சங்கங்களும், கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களாகப் பாவிக்கப்பட வேண்டியதில்லை.

**2. இந்தியாவில் கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களின் பொது நிலவரம் (கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களும், தொகுப்புப் பண்ணைச் சங்கங்களும்) :** கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களின் எண்ணிக்கையானது, தொகுப்புப் பண்ணைச் சங்கங்களின் எண்ணிக்கையைவிட, அதிகமாக வுள்ளது. 1970ஆம் ஆண்டுச் சூன்மாத இறுதியில், நாட்டிலிருந்த 8,819 கூட்டுறவுப்

பண்ணைச் சங்கங்களுள், கூட்டுப் பண்ணைச் சங்கங்களின் எண்ணிக்கையும், தொகுப்புப் பண்ணைச் சங்கங்களின் எண்ணிக்கையும் முறையே 5,119 ஆகவும், 3,220 ஆகவு மிருந்தன. 'இச் சங்கங்கள் எல்லா மாநிலங்களிலும் இயங்குகின்றன. ஆனால், அவற்றின் நடவடிக்கைகளில், பஞ்சாப், உத்தரப்பிர தேசம் ஆகிய மாநிலங்களிலுள்ள சங்கங்களிலும், ஒரு குறைந்த அளவு மராட்டியம், கர்நாடகம், அரியானா, குசராத்து ஆகிய மாநிலங்களிலுள்ள சங்கங்களும், ஏறக்குறைய நல்ல முன்னேற்றத்தை யடைந்துள்ளனவென்று கூறலாம். எனினும், அத்தகைய சங்கங்களின் நடவடிக்கைகள் சிறிதாக இருந்தன.' கீழ்க் காணும் அட்டவணை, 1967–68ஆம் ஆண்டு முதல் 1970–71 ஆம் ஆண்டுவரை யுள்ள நான்கு ஆண்டுகளில், எல்லாப் பண்ணைச் சங்கங்களின் (கூட்டுப்பண்ணைச் சங்கங்களும், தொகுப்புப் பண்ணைச் சங்கங்களும்) முன்னேற்றத்தைக் காட்டுகிறது.

**எல்லாப் பண்ணைச் சங்கங்கள் (கூட்டுப் பண்ணைச் சங்கங்களும், தொகுப்புப் பண்ணைச் சங்கங்களும்) :—**

| | 1967–68 | 1968–69 | 1969–70 | 1970–71 | தமிழ் நாடு |
|---|---|---|---|---|---|
| 1. எண்ணிக்கை | 8048 | 8143 | 8819 | 9473 | 20+3[1] |
| 2. உறுப்பாண்மை (ஆயிரங்கணக்கில்) | 212 | 219 | 241 | 257 | 618+137 |
| 3. சாகுபடியின் கீழுள்ள பரப்பு (ஹெக்டேர் ஆயிரங்கணக்கில்) | 298 | 280 | 313 | 359 | 542+– |
| 4. உற்பத்தியின் மதிப்பு | 864.2 | 843.2 | 783.7 | 917.7 | 17+– |
| 5. விற்பனையின் மதிப்பு | 802.7 | 764.4 | 777.1 | 852.5 | 8+– |
| 6. அளிக்கப்பட்ட கடன்கள் | | | | | |
| (அ) குறுகிய காலம் | 32.2 | 27.9 | 37.3 | 47.58 | 0.10+– |
| (ஆ) மத்தியக் காலம் | 7.4 | 6.6 | 6.3 | 11.25 | – |
| 7. பெறப்பட்ட அரசுதவி | | | | | |
| (அ) கடன்கள் | 75.9 | 47.9 | 37,2 | 46.43 | – |
| (ஆ) மானியங்கள் | 40.3 | 19.9 | 36.8 | 56.23 | – |

[1] செயலற்றவை

குறிப்பு : அட்டவணையில் கடைசிக் கலத்திலுள்ள எண்கள், தமிழ் நாட்டில் முறையே கூட்டுப் பண்ணைச் சங்கங்களுக்கும் தொகுப்புப் பண்ணைச் சங்கங்களுக்கும் தொடர்பானவை.

**கூட்டுப் பண்ணைச் சங்கங்கள்:** கூட்டுப் பண்ணைச் சங்கங்களின் எண்ணிக்கை, 30—6—70ஆம் நாளன்று, 5,199-லிருந்து, 30—6—71ஆம் நாளன்று 5,070-க்குக் குறைந்தது. இச் சங்கங்களின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 1,22,334 ஆக விருந்தது. அதில், 86,601 எண்ணிக்கையுள்ள உறுப்பினர்கள் செயற்பட்டிருந்தனர். இச் சங்கங்கள் அதிகாரத்தின்கீழிருந்த மூன்று இலட்ச ஹெக்டேர்கள் (7½ இலட்ச ஏக்கர்கள்) நிலங்களுள், இரண்டு இலட்ச ஹெக்டேர்கள் (5 இலட்ச ஏக்கர்கள்) நிலங்கள் மட்டுமே, அல்லது 65 சதவிகித நிலங்கள், அவ் வாண்டின்போது விதைக்கப்பட்ட நிகரப் பரப்பாக அமைந்தன. பயிரிடப்பட்ட மொத்தப்பரப்பு இரண்டு இலட்ச ஹெக்டேர்களாக (5 இலட்ச ஏக்கர்கள்)விருந்தது. இச் சங்கங்களின் உற்பத்தியின் மதிப்பு, 1968—69ஆம் ஆண்டில் ரூ. 7 கோடியிலிருந்து, 1969—70 ஆம் ஆண்டில் ரூ.6 கோடிக்குக் குறைந்தது. 1970—71ஆம் ஆண்டின்போது ரூ.7 கோடிக்கு உயர்ந்தது. 1970—71ஆம் ஆண்டின்போது, 1,817 சங்கங்கள் இலாபத்திலும், 1,733 சங்கங்கள் நட்டத்திலும், எஞ்சிய 1,520 சங்கங்கள் இலாபமும் நட்டமு மில்லாமலும் இயங்கின.

**தொகுப்புப் பண்ணைச் சங்கங்கள்:** தொகுப்புப் பண்ணைச் சங்கங்களின் எண்ணிக்கை, 1970ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் 3,620-லிருந்து, 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், 4,403-க்கு அதிகரித்தது. 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், இச் சங்கங்களின் தனிநபர் உறுப்பினர் எண்ணிக்கை, 1,35,094 ஆக விருந்தது. இச் சங்கங்களின் அதிகாரத்தின்கீழிருந்த பரப்பு, 1970—71ஆம் ஆண்டில், இரண்டு இலட்ச ஹெக்டேர்களாக விருந்தது. இதில், விதைக்கப்பட்ட பரப்பு, ஓர் இலட்ச ஹெக்டேர்களாக (2½ இலட்சம் ஏக்கர்கள்) விருந்தது. 1970—71ஆம் ஆண்டின்போது, உற்பத்தியின் மதிப்பு, முந்திய ஆண்டைப் போன்று, ரூ. 2 கோடியாக விருந்தது. 1,222 சங்கங்கள் இலாபத்திலும், 1,309 சங்கங்கள் நட்டத்திலும், எஞ்சிய 1,872 சங்கங்கள் இலாபமும் நட்டமு மில்லாமலும் இயங்கின. 'தேசியக் கூட்டுறவுப் பண்ணை ஆலோசனை வாரியம்' (National Co-operative Farming Advisory Board), கூட்டுறவுப் பண்ணை பற்றிய திட்டங்களைத் தீட்டி, கூட்டுறவுப் பண்ணைச் செயல்திட்டங்களை வளர்ச்சி செய்கின்றது. 1968ஆம் ஆண்டுச் சனவரியில், இவ் வாரியம், ( i ) புதிய சங்கங்கள் செயல்திட்டத்தின் வளர்ச்சிக்காகச் சாதகமான சூழ்நிலையை யுடைய எல்லைகளில் மட்டுந்தான், அமைக்கப்பட வேண்டும். ( ii ) ஒவ்வொரு சங்கமும் நிலங்களின் மொத்தத் தொகுப்

பைப் பற்றிய ஓர் உறுதியான செயல்திட்டத்தைக் கொண்டிருக்க வேண்டும். (iii) சங்கத்தின் எல்லா நிலங்கள் விஷயத்திலும் கூட்டுறவுச் சாகுபடி கையாளப்படவேண்டும். (iv) செயல் திட்டத்திற்காக விதிக்கப்பட்ட கொள்கைகளைக் கடைப்பிடிக்கும் சங்கம் மட்டுந்தான் நிதியுதவி யளிக்கப்பட வேண்டுமென்று பரிவுரை செய்தது.

பெரும்பான்மையான மாநிலங்கள் ஆலோசனை வாரியங்களை அமைத்துள்ளன. இச் சங்கங்களின் செயலாளர்களுக்கும் மேலாளர்களுக்கும், பயிற்சியளிக்குந் தெரிந்தெடுக்கப்பட்ட விரிவாக்கப் பயிற்சி நிலையங்களில் கூட்டுறவுப் பண்ணைப் பிரிவுகள் அமைக்கப்பட்டுள்ளன. இந் நிலையங்கள்கூட, விரிவாக்கச் சிப்பந்திகளுக்காகப் பாடப்படிப்புகளை யமைத்துக் கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களின் நடப்பு உறுப்பினர்களுக்கும். எதிர்பார்க்கப்படும் உறுப்பினர்களுக்கும் கிராமமுகாம்களை (Village Camps) அமைப்பதில் உதவிபுரிகின்றன.

**தமிழ்நாடு—கூட்டுப் பண்ணைச் சங்கங்கள்:** 30–6–72ஆம் நாளன்று, தமிழ்நாட்டில், 468 உறுப்பினர்களையும், ரூ.0.20 இலட்சம் செலுத்தப்பட்ட பங்குமூலதனத்தையுங் கொண்ட 14 கூட்டுப் பண்ணைச் சங்கங்க ளிருந்தன. உறுப்பினர்களால் ஒன்றுதொகுக்கப்பட்ட 1,433 ஏக்கர்களுள், 837 ஏக்கர்கள் சாகுபடியின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. அறுவடை செய்யப்பட்ட விளைபொருள்களின் மொத்த மதிப்பு ரூ.0.19 இலட்சத்திற்குத் தொகைப்பட்டது. இச் சங்கங்கள் விவசாய நடவடிக்கைகளுக்காகத் தேவைப்பட்ட குறுகிய காலக் கடன்கள், மாவட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகளால், அரசு உத்தரவாதத்தின் பேரில் வழங்கப்பட்டன. இச் சங்கங்கள் ரூ.1.04 இலட்சமளவிற்கு நட்டமடைந்தன.

## தொகுப்புப் பண்ணைச் சங்கங்கள்

**(அ) அரசு நிலங்களின்மீது அமைக்கப்பட்ட சங்கங்கள்:** 30–6–72ஆம் நாளன்று, 137 உறுப்பினர்களையும், ரூ.0.02 இலட்சம் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தையுங் கொண்ட 3 சங்கங்க ளிருந்தன. இச் சங்கங்களுக்குப் பராதீனம் செய்யப்பட்ட 443 ஏக்கர்களில் 140 ஏக்கர்கள் மீட்கப்பட்டன. இந்த 3 சங்கங்களும் செயற்படாத நிலையி லிருந்தன.

**(ஆ) கிராமதான நிலங்கள்மீது அமைக்கப்பட்ட சங்கங்கள்:** 3,520 உறுப்பினர்களையும், ரூ.0.02 இலட்சம் செலுத்தப்பட்ட

பங்கு மூலதனத்தையும் கொண்ட 33 கிராமதானச் சர்வோதயக் கூட்டுறவுச் சங்கங்க ளிருந்தன. இச் சங்கங்களின் உறுப்பினர்கள், நன்கொடைப் பத்திரங்கள் வாயிலாக, 2,370 ஏக்கர்களைக் கொண்ட ஒரு பரப்பைச் சங்கங்களுக்கு நன்கொடை அளித்தன. இவற்றுள் 859 ஏக்கர்கள் சாகுபடியின்கீழ்க் கொண்டு வரப்பட்டன. அறுவடை செய்யப்பட்ட விளைபொருள்களின் மதிப்பு ரூ.4.14 இலட்சமாக விருந்தது. அரசால் வழங்கப்பட்ட கடன்களில் ரூ.2.71 இலட்சம் நிலுவைத் தொகை யிருந்தது. இதில் ரூ.0.69 இலட்சம் தவணை தவறி யிருந்தது. மத்தியக் கூட்டுறவு வங்கிகளால் வழங்கப்பட்ட கடன்களில் நிலுவைத் தொகை ரூ.0.56 இலட்சமாக விருந்தது. இதில் ரூ.0.55 இலட்சம் தவணை தவறி யிருந்தது. 7 சங்கங்கள் ரூ.0.01 இலட்சம் இலாபத்திலும் 26 சங்கங்கள் ரூ.0.92 இலட்சம் நட்டத்திலும் இயங்கின.

**(இ) பூதான நிலங்களின்மீது அமைக்கப்பட்ட சங்கங்கள்:** 780 உறுப்பினர்களையும், ரூ.0.02 இலட்சம் செலுத்தப்பட்ட மூல தனத்தையும் கொண்ட 14 பூதானக் கூட்டுறவுச் சங்கங்க ளிருந்தன. இச் சங்கங்கள் வசமிருந்த 1,801 ஏக்கர்களுள், 494 ஏக்கர்கள் சாகுபடியின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. அறுவடை செய்யப்பட்ட விளைபொருள்களின் மதிப்பு ரூ.0.67 இலட்சமாக விருந்தது. அரசு கடன்களில் ரூ.1.02 இலட்சம் நிலுவைத் தொகை யிருந்தது. 11 சங்கங்கள் ரூ.0.35 இலட்சமளவிற்கு நட்டமடைந்தன.

**3. கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களின் முன்னேற்றம்:** முதல் ஐந்தாண்டுத் திட்டமானது 10 ஆண்டுகளைக் கொண்ட ஒரு காலவரையில், ஒன்றுதொகுத்தல், கூட்டுநிருவகித்தல் ஆகியவை மூலம் நிலங்களின் ஏராளமான ஒருபாகம் கூட்டுறவு முறைகளில் சாகுபடி செய்யப்படும் வகையில், கூட்டுறவுப் பண்ணை வளர்ச்சிக்கான ஒரு வலிவுள்ள அடித்தளத்தை வழங்கக்கூடிய நடவடிக்கைகள் எடுக்கப்பட வேண்டுமென்று சுட்டிக்காட்டியிருந்தது. சென்னையில் கூட்டுறவு பற்றிய திரு. நாராயணசாமி பிள்ளைக் குழு (1956) கூட்டுப் பண்ணையானது அனைவராலும் வரவேற்கப்படக்கூடியதாக இராது என்றும், பெரும்பகுதிகளாக அரசு நிலங்கள் கிடைக்கும் இடங்களில் தொகுப்புப் பண்ணை முயற்சிக்கப்பட வேண்டுமென்றும், கருத்துத் தெரிவித்தது. எனினும், விவசாய உற்பத்தியில் ஒரு குறிப்பிடத்தக்க பெருக்கத்திற்காக, நிலங்களை ஒன்றுதொகுத்தல்மூலம் பெரிய அளவு நடவடிக்கைகள் அவசியமாக இருக்குமென்று அக் குழு கருதியது. தமிழ்நாட்டில், முதல் கூட்டுப்பண்ணைச்

சங்கம் 1956ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. 1959ஆம் ஆண்டில், திரு. நிஜலிங்கப்பா அவர்களைத் தலைவராகக் கொண்ட கூட்டுறவுப் பண்ணை பற்றிய ஒரு செயற்குழுவை, அமைப்பையும், நிருவாகத்தையும் பற்றிய வகைகளையும் முறைகளையும் பரிசீலித்துக் கூட்டுப்பண்ணைச் செயல்திட்டத்தை வளர்ச்சி செய்வதற்கான நடவடிக்கைகளைப் பரிவுரை செய்யும்பொருட்டு, இந்திய அரசு அமைத்தது. நிலங்களை ஒன்றுதொகுத்தலும், பண்ணை நடவடிக்கையிலுள்ள பொறுப்பிலும் நட்டவச்சத்திலும் பங்குகொள்ளுதலுமே கூட்டுறவுப் பண்ணையின் தனிப்பட்ட அம்சங்களாக விருக்கின்றன வென்றும், மேலான பண்ணைச் சங்கங்களும் குத்தகைப் பண்ணைச் சங்கங்களும் கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களாக வகைப்படுத்தப்படக் கூடாதென்றும் அக் குழு கருதியது. அதன் பரிவுரையின் பேரில், நாட்டில் ஒவ்வொரு முன்னோடித் திட்டப்பகுதியிலும் ஒன்று அல்லது இரண்டு வட்டாரங்களைக் கொண்ட ஓர் அடக்கமான பரப்பில் 10 கூட்டுப்பண்ணைச் சங்கங்களும், தொகுப்புப் பண்ணைச் சங்கங்களும் அடங்கியவண்ணம், 320 முன்னோடித் திட்டப் பகுதிகளை அமைப்பதற்கான ஒரு திட்டத்தை இந்திய அரசு அங்கீகரித்தது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் முதல் 4 ஆண்டுகளில் நிறுவப்படுவதற்காகத் தமிழ்நாட்டிற்கு அத்தகைய 12 திட்டப்பகுதிகள் ஒதுக்கப்பட்டன. உதவியளவுங்கூட இந்திய அரசால் நிருணயிக்கப்பட்டது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது, இந்தியாவில் எல்லா மாவட்டங்களிலும் அத்தகைய முன்னோடித் திட்டப்பகுதிகள் நிறுவப்பட்டன. இலக்கு 3,180 சங்கங்களாக விருந்தது; 2,749 சங்கங்கள் அமைக்கப்பட்டன. இச் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 57,364 ஆக விருந்தது. இவர்கள் கூட்டுச்சாகுபடிக்காக 2,77,482 ஏக்கர்களைக்கொண்ட ஒரு பரப்பை ஒன்றுதொகுத்தல் செய்தனர். திட்டப்பகுதி யல்லாத பகுதிகளிலுங்கூடச் சங்கங்கள் தொடர்ந்து அமைக்கப்பட்டன. 1966ஆம் ஆண்டுச் சூன்வரை, 2,752 கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் திட்டப்பகுதி யல்லாத பகுதிகளில் நிறுவப்பட்டிருந்தன. அவை, 61,471 உறுப்பினர்களையும், மூன்று இலட்சம் ஏக்கர்களைக் கொண்ட ஒரு மொத்தப் பரப்பையுங் கொண்டிருந்தன. தமிழ்நாட்டில், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத் தொடக்கத்திற்கு முன்பு 21 கூட்டுப் பண்ணைச் சங்கங்களிருந்தன. மூன்றாவது திட்டத்தில், முதல் மூன்றாண்டுகளின் போது, 43 கூட்டுப் பண்ணைச் சங்கங்கள் திட்டப்பகுதிகளிலும் 7 சங்கங்கள் திட்டப்பகுதி யல்லாத பகுதிகளிலும் அமைக்கப்பட்டன. 1963ஆம் ஆண்டில், தமிழ்நாட்டில் கூட்டுறவுப்

பண்ணையின் செயற்பாட்டைப் பரிசீலித்த குழுவின் ஓர் அறிக்கையின்படி, கூட்டுப்பண்ணைச் சங்கங்களின் உறுப்பினர்கள் கூட்டுச் சாகுபடியைக்குறித்து உற்சாகமில்லாமல் இருந்தனர்; பண்ணை நடவடிக்கைகளுள் பங்கு கொள்ளாமலிருந்த தலத்திலில்லா உறுப்பினர்கள் ஒருபெரும் விகிதத்தி லிருந்தனர்; ஒன்றுதொகுக்கப்பட்ட நிலங்களின் ஒரு பெரும்பான்மையான பகுதி புஞ்சை நிலங்களாக விருந்தது; இக் காரணிகள் சங்கங்களின் வளர்ச்சியைத் தடைப்படுத்தின; சில சங்கங்கள் கலைக்கப்பட்டன; சில சங்கங்கள் உதவியளிக்கப்பட்ட பின்னருங் கூடச் செயற்படத் தொடங்கவில்லை; மற்றும், ஒருசில சந்தர்ப்பங்களில் நிலக்கிழார்கள் தங்கள் நிலங்களை ஒன்றுதொகுப்பதற்குப் பின்வாங்கவும், மறுக்கவும் செய்தனர். இவ் வுண்மைகள் 1965ஆம் ஆண்டில், 'தமிழ்நாடு மாநிலப் பண்ணை வாரிய'த்தால் ஆலோசிக்கப்பட்டு, அதன் பரிவுரையின் பேரில், புதிய கூட்டுப் பண்ணைச் சங்கங்களையும், தொகுப்புப் பண்ணைச் சங்கங்களையும் அமைப்பதற்குப் பதிலாக, நடப்புச் சங்கங்களை அபிவிருத்தி செய்வதற்கு எதிர்கால முயற்சிகள் செலுத்தப்பட வேண்டுமென்று அரசு உத்திரவிட்டது. 1967ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், 60 கூட்டுப் பண்ணைச் சங்கங்க ளிருந்தன. அவற்றின் உறுப்பினர்கள் 4,863 ஏக்கர் நிலங்களை ஒன்றுதொகுத்தல் செய்தனர். 2,394 ஏக்கர்கள் மட்டுமே சாகுபடியின்கீழ்க் கொண்டுவரப்பட்டன. அவைகளுக்கு ஒப்பளிக்கப்பட்ட மொத்த நிதியுதவித்தொகை ரூ.17.39 இலட்சத்தில் ரூ.9.35 இலட்சம் உபயோகிக்கப்பட்டது. 43 சங்கங்கள் நட்டத்தில் இயங்கிக் கொண்டிருந்தன.

இந்திய அரசால், காலஞ்சென்ற பேராசிரியர் டி.காட்கில் அவர்களின் தலைமையின்கீழ் நியமிக்கப்பட்ட கட்டளைக் குழு (Committee of Direction), கூட்டுறவுப் பண்ணைகளைப் பற்றிய கள ஆராய்ச்சிகளைச் செய்து, தன் அறிக்கையில்(1965) பின்வருமாறு கூறியிருந்தது: 'நாட்டை முழுமையாகக் கருதுமிடத்து, கூட்டுறவுப் பண்ணை இன்னும் உறுதியாக வேரூன்றிவிட்டதென்று கூறமுடியாது; எனினும், அச் செயல்திட்டம் உற்பத்தியைப் பெருக்கி எதிர்கால வளர்ச்சிக்கான வாய்ப்பு வசதியை உண்டுபண்ணுவதற்குத் தன் திறனைச் செயல்விளக்கம் செய்துள்ளது.' மாற்றியமைக்கப்பட்ட மாதிரிவகை அரசு நிதியுதவியை அக் குழு பரிவுரை செய்தது. அப் பரிவுரைகளையொட்டி, ஒரு கூட்டுப்பண்ணைச் சங்கம் இப்பொழுது ரூ.39,100 பெறுவதற்கு உரிமை பெற்றுள்ளது. இதில், பங்குமூலதன உதவித் தொகை ரூ. 2,000-ம் கிடங்கு-மாட்டுத் தொழுவம் கட்டுவதற்

காகக் கடனும், மானியமும் சேர்ந்து முறையே ரூ.5.000-ம், ரூ.20,000 ஓர் உச்ச மளவுக்குட்பட்டும், ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 100 வீதத்திலும் நில அபிவிருத்திக்கடனும், கூட்டுப் பண்ணைச் சங்கமொன்றுக்கு ரூ. 1,200 ஓர் உச்சமளவுக்குட்பட்ட மேலாண்மைச் சிப்பந்தி மானியமும் அடங்கியுள்ளன. ஒரு தொகுப்புப்பண்ணைச் சங்கமும்கூட, மேற்குறிக்கப்பட்ட வீதங்களில் உதவிபெற உரிமை பெற்றுள்ளது; ஆனால், நில அபிவிருத்திக் கடன் ரூ.30,000 ஓர் உச்சமளவிற்குட்பட்டு ஏக்கர் ஒன்றுக்கு ரூ. 150 வீதத்திலும், மேலாண்மைச் சிப்பந்தி மானியம் சங்கமொன்றுக்கு ரூ. 2,100 வீதத்திலும் அளிக்கப்படுகின்றன.

பண்ணைச் சங்கங்களின் தற்போதைய நிலைமை, மேலே 2ஆவது பத்தியில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. சென்னையில் சந்தானம் குழுவினர் (1961), பெரும்பான்மையான கூட்டுப்பண்ணைச் சங்கங்களின் நிலைமை திருப்திகரமாக இல்லாமலிருந்ததென்றும், எந்தப் புதிய சங்கங்களும், மாவட்ட ஆட்சியாளரையும், மாவட்டக் கூட்டுறவுப் பதிவாளரையும், மாவட்ட வேளாண்மைத்துறை அதிகாரியையும், மத்தியக் கூட்டுறவு வங்கியின் தலைவரையுங்கொண்ட ஒரு குழுவானது, அத்தகைய புதிய சங்கங்களுக்கு நல்ல வெற்றி வாய்ப்புகளுள்ளனவென்று கருதி அவை அமைக்கப்படலாமென்று பரிவுரை செய்தாலொழியப் பதிவு செய்யப்படக்கூடாது என்றும் குறிப்புச் செய்தனர். தனியார் நிலங்களை ஒன்றுதொகுத்தல்மூலம் கூட்டுப் பண்ணைச் சங்கங்கள் அமைக்கப்படுகின்ற இடங்களில், 20 ஆண்டுகளுக்குக் குறையாத காலவரைகளுக்காக நிலங்களின் ஒன்றுதொகுத்தல் இருக்க வேண்டுமென்று அக் குழுவினர் மேலும் கூறியுள்ளனர். ஒன்றுதொகுக்கப்பட்ட நிலங்களுக்கான வாடகையாக ஒரு குறிப்பிட்ட ரொக்க வாடகையை, உறுப்பினர்களுக்குச் செலுத்தப்பட வேண்டுமென்றும், எந்த உறுப்பினராவது உறுப்பினர் பதவியிலிருந்து வாபஸ் பெறுவதற்கு விரும்புகின்றபோது, சங்கத்தின் பண்ணைக்கு ஓரங்களிலுள்ள சம மதிப்புள்ள நிலங்களை மட்டுமே பெறுவதற்கு அவர் உரிமையுள்ளவராக இருக்க வேண்டுமென்றும், அவ்வாறிருந்தால்தான் கூட்டுச்சாகுபடி ஓர் அடக்கமான பகுதியில் தொடர்ந்திருக்க முடியுமென்றும் அக் குழுவினர் கருதினர்.

**4. கூட்டுப் பண்ணையின் தகுதிகளும், தகுதியின்மைகளும்:** நம் நாட்டில், கூட்டுப் பண்ணைச் சங்கங்களுக்கும், தொகுப்புப் பண்ணைச் சங்கங்களுக்கு முள்ள வாய்ப்பைச், சில

விவரித்தல், பரிசீலனை செய்வது அவசியமாகும். தனிநபர்ப் பண்ணைத் தொழிலைக்காட்டிலும், கூட்டுறவுப் பண்ணை அளிக்கும் நன்மைகள் பின்வருமாறு:—

(i) கூட்டுறவுப் பண்ணையானது, செட்டாகவில்லாத நிலவுடைமைகளைச் (Un Economic Holdings) செட்டானவையாகவும், தன்னிறைவாகவு முள்ள பகுதிகளாக மாற்றியமைத்து, அதன்மூலம் கால்நடை உழைப்பு, மனித உழைப்பு ஆகியவற்றின் மிக யுக்தியுள்ள உபயோகத்தை நிச்சயப்படுத்துகிறது.

(ii) அது, உறுப்பினர்களால் ஒன்றுதொகுக்கப்பட்ட இதரப் பண்ணைத் தளவாடங்களின் மிகயுக்தியுள்ள உபயோகத்தை நிச்சயப்படுத்துகிறது. அதோடு, பூச்சிக் கொல்லிகள், பம்புகள், விதை டிரில்கள், தானியம் போரடிக்கும் இயந்திரங்கள், தானியம் புடைக்கும் இயந்திரங்கள் போன்ற தனிநபர்க் குடியானவர்களால் பராமரிக்கப்படுவதற்கு முடியாத, மேம்படுத்தப்பட்ட கருவிகளும், கூட்டுறவுப் பண்ணைகளில் பராமரிக்கப்படக்கூடும்.

(iii) தனிநபராகப் போதிய கடனைப் பெறமுடியாத சிறுகுடியானவர்கள் கூட்டுறவுப் பண்ணைகளில் சேருவதன்மூலம் போதிய கடனைப் பெறமுடியும்.

(iv) கூட்டுறவுப் பண்ணையானது, உறுப்பினர்களின் விஞ்ஞான அறிவை ஒன்றுதொகுத்தல் செய்வதற்கு வகை செய்கிறது. குடியானவர்கள், நிறுவனங்களாக அமைக்கப்பட்டிருந்தால், புதிய தொழில் நுட்பங்களைத் தொடங்கிவைப்பதற்கும், அவைகளைப் பற்றிக் குடியானவர்களுக்கு அறிவு புகட்டுவதற்குங்கூட, அரசு வேளாண்மைத்துறை அதிகாரிகளுக்கு மிக எளிதாகவுள்ளது. ஆகையால், கூட்டுறவுப் பண்ணைகளில் மேலான பண்ணைத் தொழிலும் அதன் விளைவாக உற்பத்திப் பெருக்கமும் சாத்தியப்படுகிறது.

(v) கூட்டுறவுப் பண்ணை, உற்பத்திப் பெருக்கத்தை விளைவிக்கும் மேலான ஒரு விவசாயத் திட்டமிடுதலையும் வகை செய்கிறது.

(vi) பண்ணைத் தேவைகளின் விநியோகம் மேலான முறையில் செய்யப்படுவதும் சாத்தியப்படும். விளைபொருள்களைக் கூட்டுவிற்பனை செய்வதன்மூலம், விளைபொருள்களின் விற்பனைச் சமயத்தில் இடைநிலையாளர்களின் சுரண்டலும் நீக்கப்படக்கூடும்.

(vii) அதிகமான எண்ணிக்கையில், படித்த வாலிபர்கள் இந் நிறுவனங்களில் தங்களுக்குப் பொருத்தமுள்ள பல்வேறு தொழில்களில் வேலை கொடுக்கப்படக் கூடும். கிராமத்தில் கூட்டுறவு வாழ்க்கை வளர்ச்சிக்கும், உள்ளூர்த் தலைமை வளர்ச்சிக்கும்; சமுதாயத் தலைமை வளர்ச்சிக்குங்கூட அது ஏதுவாக விருக்கும்.

மேற்கண்ட அனுகூலங்க ளிருப்பினும், கீழே குறிக்கப்பட்ட குறைபாடுகளால், உற்பத்தியில் ஏற்படக்கூடிய ஒருசிறு அதிகரிப்பு அனுகூலம் நிர்மூலமாக்கப்படுமென்று வாதிக்கப்படுகிறது.

(i) தனிநபர்ப் பண்ணைத் தொழிலில் ஒவ்வொரு குடியானவரும், அவர் குடும்பமும் வயல்களில் வேலைசெய்து தங்கள் உழைப்பை அநேக வழிகளில் அளிக்கின்றனர். ஆனால், அவர்கள் கூட்டுப் பண்ணையில் வேலை செய்தால், அவர்களின் உழைப்பிற்காக ரொக்கத்தில் கூலி செலுத்தப்பட வேண்டியிருக்கும்; அதனால் சங்கத்திற்குக் கூடுதலான செலவு ஏற்படுகிறது.

(ii) குடியானவரும், அவர் குடும்பமும் கூட்டுப்பண்ணையில் கூலிக்காக வேலைசெய்யும்போது, அவர்கள் உழைப்பின் தரமும், விளைவும், தங்கள் சொந்தப் பண்ணைகளில் அவர்கள் வேலை செய்யும் போது இருப்பதைக் காட்டிலும் மிகக் குறைவாக இருக்கும். ஏனென்றால், தங்கள் சொந்தப் பண்ணைகளில் வேலை செய்யும்போது, உடைமை உணர்ச்சியினால் எழும் அக்கறையுடன் அவர்கள் வேலை செய்கின்றனர். இக் காரணியானது, கூட்டுப் பண்ணையில் செய்யப்படும் சாகுபடியின் செலவைக்கூட அதிகப் படுத்தும்.

(iii) தனிநபர் முறையில் நிலங்கள் சாகுபடி செய்யப்பட்டால் மேற்பார்வையும் மிகப்பயனுறுதியாகவும், செலவொன்றுமில்லாமலும் மேற்கொள்ளப்படக்கூடும். ஆனால், ஒரு கூட்டுப் பண்ணையில், மேற்பார்வைக்கு ஊதியம் கொடுக்கப்பட வேண்டியிருக்கிறது; மற்றும், அதே சமயத்தில் மேற்பார்வையும், தனிநபர்ப் பண்ணைத் தொழிலில் போன்று அவ்வளவு பயனுறுதியாக இருக்க முடியாது. ஏனென்றால், கூட்டுப் பண்ணையில் மேற்பார்வையானது, நிலவுடைமையாளர்கள் போன்று அவ்வளவு அக்கறை கொள்ள எதிர்பார்க்கப்படமுடியாத ஊதியம்பெறும் அல்லது ஊதியம் பெறாத நிர்வாகிகளால் செய்யப்படுகின்றது. இச் சங்கங்களையமைப்பதற்கு அதிக எண்ணிக்கையில் மக்கள் முன்வருவதற்குத் தடையாக நிற்கின்ற சில நடைமுறைப் பிரச்சினைகள்கூடவுள்ளன. ஒரு கூட்டுறவுப் பண்ணையில் சேருவதனால் ஒருவர்

தம் தனி நபர்ச் சுதந்திரத்தை இழக்கிறார். கூட்டு முடிவுகளுக்கும், கூட்டுச் செயல்களுக்கும் சாதகமாகத் தம் செயல் சுதந்திரத்தை அவர் விட்டுக் கொடுத்துவிட வேண்டியிருக்கிறது. இரண்டாவதாக, ஒரு தனிநபர்ப் பண்ணையில், வருமானத்தின் அளவும், விளைபொருளின் அளவும் குடியானவரால் அளிக்கப்பட்ட உழைப்பு அளவின் நேரடியான விளைவாக உள்ளது. ஆனால், கூட்டுறவுப் பண்ணையில் தம் உழைப்பு அளிப்பின்மீது, சங்க நிர்வாகம் அல்லது எல்லா உறுப்பினர்களும் போடுகின்ற மதிப்பைத்தான் அவர் ஏற்றுக்கொள்ள வேண்டியுள்ளது. மூன்றாவதாக, உறுப்பினர்கள் நிலவுடைமை பற்றிய தங்கள் முழு உரிமைகளைச் சிறப்பாக நிலங்களை மாற்றுவதற்கான தங்கள் உரிமைகளை உபயோகிப்பதில், ஒரு வெட்டுக்கு உட்படவேண்டும். ஏனென்றால், ஓர் உறுப்பினர் தம் நிலங்களைத் தாம் விரும்பியவாறெல்லாம் விற்பனை செய்வது அல்லது பராதீனம் செய்வது அவ்வளவு எளிதாக இராது. நான்காவதாக, ஒரு குடும்பப் பண்ணைவகையில், உற்பத்திக்காக மிக அதிகமான ஓர் ஊக்கம் உள்ளது. ஒரு கூட்டுறவுப் பண்ணையில் உழைப்பின் பலன் எல்லா உறுப்பினர்களுக்கும் சமமாகப் போகவேண்டியுள்ளது என்று கருதப்படுவதால், கடுமையான உழைப்பிற்கான ஊக்கம் குறைக்கப்படுகிறது. இறுதியாக, ஒரு கூட்டுறவுப் பண்ணையில், சமுதாய ரீதியாக மிக அதிகமாக விரும்பப்படுகின்றதும், உற்பத்திக்கு ஒரு சாதனமாக விருக்கின்றதுமான உழைப்புச் சுதந்திரம் குறைக்கப்படுகிறது.

மேற்குறிக்கப்பட்ட காரணிகள், நாட்டில் கூட்டுறவுப் பண்ணைத் திட்டத்தின் மெதுவான முன்னேற்றத்திற்குப் பொறுப்பாக வுள்ளன.

### 5. கூட்டுப் பண்ணைச் சங்கங்களின் செயற்பாட்டிலும், தொகுப்புப் பண்ணைச் சங்கங்களின் செயற்பாட்டிலுமுள்ள முக்கியக் கூறுகள்

**(1) கூட்டுப் பண்ணைச் சங்கங்கள்:** இந்தியாவில், கூட்டுறவுப் பண்ணைத் திட்டமானது, சில சமயங்களில், சில வட்டாரங்களிலிருந்து செய்யப்படும் சில குற்றங்காணுதலுக் குட்பட்ட பொருளாக இருந்துள்ளது. ஆகையால், திட்டத்தின் அத்தியாவசிய அம்சங்களை விளக்குவது அவசியமாக வுள்ளது.

(i) இத் திட்டமானது, முற்றிலும் சுயேச்சையானது; எனவே, நாட்டில் கூட்டுறவுப் பண்ணைத் திட்டத்தின் நடையைக் கட்டாயப்படுத்த எதுவும் செய்யப்படக்கூடாது.

(ii) நிலவுடைமையானது மாற்றமில்லாமல் தொடர்ந்துள்ளது. நிலமானது சாகுபடிக் காரியத்திற்காக மட்டும் ஒன்று தொகுக்கப்பட்டு, நிலவுடைமை இலாப ஈவு செலுத்தப்படுவதன் மூலம் அங்கீகரிக்கப்படுகிறது.

(iii) தங்கள் சிறிய நிலத்துண்டுகளைச் சிக்கனமாகச் சாகுபடி செய்ய முடியாமல், நெருங்கியுள்ள நிலத்துண்டுகளையுடைய சிறு நிலவுடைமையாளர்கள் அத்தகைய ஒரு சங்கத்தையமைக்கின்றனர். அவர்கள் தங்கள் நிலங்களை ஒன்றுதொகுத்தல் செய்து, தங்கள் விவசாய உற்பத்தியையும், வேலை வாய்ப்பையும், மொத்த வருமானத்தையும் பெருக்கும் நோக்கத்துடன் கூட்டாகச் சாகுபடி செய்வதற்கு இசைகின்றனர்.

(iv) சொந்த நிலமுள்ள குடியானவர்களும், பண்ணை நடவடிக்கையில் உதவிபுரிகின்ற நிலமில்லாத தொழிலாளர்களும் உட்பட எல்லாக் குடியானவர்களும் இச் சங்கத்தில் உறுப்பினராகச் சேரலாம். சாதாரணமாகத் தலத்திலில்லாத நிலக்கிழார்களை (வயது, நோய், அரசு பணியில் வேலை முதலிய காரணங்களால் பண்ணைவேலையில் பங்குகொள்ள முடியாமலிருந்தவர்கள் நீங்கலாக) உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்ளப்படக்கூடாது. சங்கத்தின் மொத்த உறுப்பினர் எண்ணிக்கையில் அத்தகைய தலத்திலில்லாத நிலக்கிழார்கள் 1/3-க்கு அதிகப்படக்கூடாது.

(v) பொதுவாகக் கூறுமிடத்து, ஒரு கூட்டுறவுப் பண்ணையானது, அதன் வசமுள்ள பண்ணை இயந்திரங்கள், இதரத் தளவாடங்கள் ஆகியவைகளைக் கருதியும், சங்க எல்லையில் நிலவுகின்ற நிலைமைகளைக் கருதியுங்கூடப் பண்ணையைச் செட்டானதும், தன்னிறைவானதுமான நிலத்துண்டாகச் சாகுபடி செய்வதற்குச் சாத்தியப்படும் பொருட்டு, தன்வசம் போதிய நிலத்தைக் கொண்டிருக்க வேண்டும். அரசுதவிக்காகவுங்கூட, ஒரு சங்கம் தகுதியுடையதாக இருக்கும்பொருட்டு மாநில அரசுகள், ஒரு சங்கத்திற்குத் தேவைப்படும் உறுப்பினர்களின் குறைந்தபட்ச எண்ணிக்கையையும், குறைந்தபட்ச நிலப்பரப்பையும் நிருணயித்துள்ளன.

(vi) கூட்டுறவுப் பண்ணை ஒரு சுயேச்சையான நிறுவனமாகவும், அதன் உறுப்பினர்கள் தாங்கள் விரும்பும் போதெல்லாம் உறுப்பினர் பதவியிலிருந்து வாபஸ் பெறுவதற்கு உரிமையுள்ளவர்களாகவும் இருந்தாலும், தொடர்ச்சியான நலத்தை முன்னிட்டு ஒரு குறைந்தபட்சக் காலவரை இருக்க வேண்டும். நிலங்கள் உறுப்

பினர்களால், 5 ஆண்டுகளைக் கொண்ட ஒரு குறைந்தபட்சக் கால வரைக்காக ஒன்றுதொகுக்கப்பட வேண்டுமென்று பரிவுரை செய்யப்பட்டுள்ளது. இக் காரியத்திற்காக, உறுப்பினர்கள், முதலில் தங்கள் நிலங்களைத் தொகுப்புச் செய்வதற்கு இசைகின்ற குறைந்தபட்சக் காலவரையைக் குறிப்பிட்டு, சங்கத்திற்கும் உறுப் பினர்களுக்கு மிடையே ஓர் ஒப்பந்தம் நிறைவேற்றப்பட வேண்டும். எனினும், உறுப்பினருக்கு அதே நிலத்துண்டைக் கொடுப்பதற்கு முடியாமலிருக்கலாம். அந் நிலத்தை உறுப்பினருக்கு அவ்வாறு கொடுப்பதனுல் பண்ணைத்திட்டமும், பண்ணைநடவடிக்கை களும் பாதிக்கப்படுகின்ற சந்தர்ப்பத்தில், உற்பத்திச் சக்தி யில் சமமான மற்ருெரு நிலத்துண்டு, விலகிப்போகும் உறுப் பினருக்குக் கொடுக்கப்படும்.

(vii) உறுப்பினர்களின் உழைப்பிற்காகவும், வேலைக்காகவும், சங்கத்தால் நிருணயிக்கப்பட்ட விகிதங்களில் அதன் வருமானத் தைப் பொறுத்துக் கூடுதலான ஊதியத்தை அவர்கள் பெறுவர். கூட்டுறவுப்பண்ணையில் சேருவதற்குக் குடியானவர்களை ஊக்குவிக் கும் பொருட்டு, அவர்கள் தங்கள் நிலங்களைச் சாகுபடிக்காக வேறு சிலருக்குக் குத்தகைக்கு விட்டால் பெற்றிருக்கக்கூடிய அதே குறைந்த கைம்மாற்றைக் கூட்டுறவுப் பண்ணை, அவர்கள் நிலத் திற்காகக் கொடுக்குமென்று அவர்கள் உறுதியளிக்கப்படவேண்டும். மற்றும், தொகுக்கப்பட்ட நிலத்தின்மீதுள்ள உறுப்பினருடைய நிலவுடைமை உரிமையை ஏற்றுக்கொண்டதற்குச் சங்கத்தால் அவருக்கு நிலவுடைமை இலாபஈவு செலுத்தப்படுகிறது.

(viii) நிலம் மட்டுமன்றி, உறுப்பினர்களின் கால்நடையும், கருவிகளுங்கூடத் தொகுக்கப்பட வேண்டியிருக்கிறது. அதற்காக, உறுப்பினர்கள் போதிய நட்ட ஈட்டுத்தொகை செலுத்தப்பட வேண்டும். அத் தொகையை உறுப்பினர்கள் சங்கத்திலேயே பங்கு மூலதனமாகவும், வைப்புகளாகவும் முதலீடு செய்யலாம்.

(ix) செய்யப்பட்டபண்ணை நடவடிக்கைகள் உற்பத்திப் பெருக் கத்தை விளைவிக்கும் பொருட்டு, விவசாயத்துறை அதிகாரிக ளுடனும், சமுதாய வளர்ச்சித்துறை அதிகாரிகளுடனும் கலந்தா லோசித்து விவசாய உற்பத்தித் திட்டங்களைத் தயாரிப்பதும், அதைத் திறமையாக அமுல்படுத்துவதும், சங்கமாற்ற வேண்டிய ஒரு முக்கியப் பணியாகும். உறுப்பினர்களுக்குக் கூடுதலான வேலை வாய்ப்பை வழங்கும்பொருட்டு, குடிசைத் தொழில் திட்டங் கூட உற்பத்தித் திட்டத்தில் அடங்கியிருக்க வேண்டும். கிணறு கள் வெட்டுதல், குழாய்க்கிணறுகள் அமைத்தல், வரப்புகளைக்

கட்டுதல், வயல்களைச் சுற்றி வேலியமைத்தல் முதலியவற்றிற் காக ஒரு நீண்டகாலத் திட்டமுங்கூடத் தயாரிக்கப்படவேண்டும்.

(x) சங்கம், தன் உறுப்பினர்களிடமிருந்து, நிலங்கள் சுவாதீனம் பெற்றவுடன், அந் நிலங்கள் மதிப்பீடு செய்யப்பட வேண்டும். அவ்வாறு நிருணயிக்கப்பட்ட மதிப்புத்தொகை உறுப்பினர்களால் அளிக்கப்பட்ட பங்குமுதலாகப் பாவிக்கப் படக்கூடாது. அத் தொகை, நிலவுடைமை இலாபஈவுப் பகிர்வுக் காரியத்திற்காகப் பயன்படுத்தப்படுகிறது.

(xi) சமயோசிதம் போல், சங்கத்தலைவர் அல்லது மேலாளர் அல்லது நிருவாகக் குழுவின் வழிகாட்டலின்கீழும், மேற்பார்வை யின்கீழும், பண்ணை நடவடிக்கைகள் உறுப்பினர்களால் நடத்தப் படுகின்றன.

(xii) உறுப்பினர்களின் பல்வேறு கடமைகள் அவர்களின் சக்தி யையும், ஆற்றலையும் பொறுத்து நிருணயிக்கப்படுகின்றன. பண்ணை கள் பெரியவையாக இருந்தால், தொழிலாளர்கள் தொகுதி களாகப் பிரிக்கப்பட்டு, அத்தகைய ஒவ்வொரு தொகுதியும், தொகுதித் தலைவர் ஒருவரின் பொறுப்பில் வைக்கப்பட்டு, உறுதியான நடவடிக்கைகளும் ஒப்படைக்கப்படுகின்றன.

(xiii) சங்க எல்லையில் நிலவும் விகிதங்கள் அடிப்படையில், செய்யப்பட்ட வேலைக்காகக் கூலிகள் நிருணயிக்கப்படலாம். பொது வாக, கூலிகளின் விகிதத்தில் 70 சதவிகிதம் வரை முன்பணம் அளிக்கப்படுகின்றன. அது, பின்னர் அவர்களுக்குச் செலுத்தப் பட வேண்டிய தொகைகளுக்கு ஈடு செய்யப்படுகின்றது.

(xiv) தொகுப்பாக விளைவிக்கப்பட்ட விளைபொருளுங்கூடத் தொகுப்பாக விற்பனை செய்யப்பட்டு, விற்பனைத்தொகை, சாகு படிச் செலவுபோக, உறுப்பினர்களிடையே அவர்களால் ஒன்று தொகுக்கப்பட்ட நிலங்கள் விகிதத்திலும், அவர்களால் செய் யப்பட்ட வேலை விகிதத்திலும், பரஸ்பரமாக ஒத்துக்கொள்ளப் பட்ட அடிப்படைக் கிணங்கவும் விநியோகிக்கப்படுகின்றன. தங்கள் நிலங்களை ஒன்றுதொகுத்தல் செய்து ஆனால், பண்ணை யில் வேலைசெய்யாத உறுப்பினர்கள் நிலவுடைமை இலாபஈவு மட்டுந்தான் செலுத்தப்படுகின்றனர். நிலங்களைத் தொகுத்தும், பண்ணையிலும் வேலை செய்யும் உறுப்பினர்கள் நிலவுடைமை ஈவும், கூலியுங்கூடச் செலுத்தப்படுகின்றனர்.

(xv) சங்கம் மேம்படுத்தப்பட்ட சாகுபடிமுறைகளை மேற் கொள்வது மட்டுமன்றி, நிலங்களிலிருந்து மேலான விளைவையும் மிக அதிகமான வருமானத்தையும் நிச்சயப்படுத்தும் பொருட்டு

மேலான விதையையும், உரத்தையும், நவீனத் தளவாடங்களையுங் கூட உபயோகப்படுத்துவது அவசியமாகிறது. இக் காரியத்திற்காக விவசாயத்துறை, சமுதாய வளர்ச்சித்துறை அதிகாரிகளின் சேவைகளைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

**(2) தொகுப்புப் பண்ணைச் சங்கங்கள்;** தொகுப்புப் பண்ணைச் சங்கம் ஓர் உழைப்புத் தீவிர நிறுவனமாக (Labour Intensive Institution) உள்ளது. அதில் உறுப்பினர்கள் அவசியமாக நிலமுடையவர்களாக இருக்கத் தேவையில்லை. தங்கள் நிலங்களைத் தாங்கள் ஒன்றுதொகுக்க வேண்டியது மில்லை. நிலமுடையவர்களாகவும் அல்லது குத்தகையின்பேரில் நிலத்தைப் பெறுபவர்களாகவும் அல்லது நிலத்தை வாங்குபவர் களாகவு முள்ள குடியானவர்களின் சங்கங்களாக இச் சங்கங்க ளுள்ளன. எனினும், உறுப்பினர்கள் ஏதாவது நிலமுடையவர் களாக இருந்தால், அந் நிலத்தைக் குத்தகையின்பேரில், சங்கம் பெறுவதில் தடை ஒன்றுமில்லை. இவ் வண்ணம் கிடைத்த நிலங் களில் உறுப்பினர்கள் கூட்டாக உழைத்துக் கூலிபெறுகின்றனர். சங்கத்தின் நிகர வருமானம், பின்னர்க் காப்பிருப்புகளுக்காகவும், இதர நிதிகளுக்காகவும் ஏற்பாடு செய்யப்பட்ட பிறகு, உறுப்பினர்களிடையே பகிர்வு செய்யப்படுகிறது. சங்கம், பங்கு மூலதனத்திலிருந்தும், வைப்புகளிலிருந்தும், கடன்களி லிருந்தும், உதவித்தொகைகளி லிருந்தும், நிதிகளைத் திரட்டு கின்றது.

அத்தகைய ஒரு சங்கம் சில துறைகளில் கூட்டுப் பண்ணைச் சங்கத்திலிருந்து வேறுபடுகிறது. இச் சங்கங்களில், நிலவுடைமை இலாபஈவு கிடையாது. ஆனல், உறுப்பினர்கள் சங்கங்களுக்குச் குத்தகையின் பேரில் நிலத்தைக் கொடுத்தால், அவர்களுக்குக் குத்தகைப்பணம் செலுத்தப்படலாம். இரண்டாவதாக, ஒரு கூட்டுப்பண்ணைச் சங்கத்தில் எல்லா உறுப்பினர்களும் வயலில் அவசியமாகத் தொழிலாளர்களாக இருக்கத் தேவையில்லை. ஆனல், ஒரு தொகுப்புப் பண்ணைச் சங்கத்தில், பண்ணையில் வேலை செய்யாத ஒருவர் சேருவதில், பொருளில்லை.

**6. கூட்டுறவுப் பண்ணையின் எதிர்காலம்:** முன்னர்க் கூறியபடி, கூட்டுறவுப் பண்ணையானது பல்வேறு பொருளாதார, சமுதாய நன்மைகளைப் பெற்றுள்ளது. 'நாம் கூட்டுறவுப் பண் ணையை மேற்கொள்ளும்வரை விவசாயத்தின் முழுப்பயனைப் பெறமுடியாது' என்று ஒரு சமயத்தில் மகாத்மாகாந்தி அவர் கள் கூறினர். ஆனல், அதே சமயத்தில் முன்னர்க் குறிப்பிட்ட படி, கூட்டுறவுப் பண்ணையில் பல்வேறு சிக்கல்களும், நடை

முறைச் சிரமங்களு முள்ளன. கூட்டுறவுப் பண்ணைத் திட்டமானது, 1959ஆம் ஆண்டுச் சனவரியில் நடைபெற்ற நாக்பூர் இந்தியத் தேசியக் காங்கிரஸ் கூட்டத்திற்குப் பிறகு, முக்கியத்துவத்தை ஏற்றது. அக் காங்கிரஸ் கூட்டத்தில் நிறைவேற்றப்பட்ட, 'விவசாய அமைப்புவகை' என்பது பற்றிய ஒரு தீர்மானம் பின்வருமாறு கூறியது: 'எதிர்கால விவசாய வகை, கூட்டுறவுக் கூட்டுப்பண்ணை வகையாக இருக்கவேண்டும். இதில் நிலங்கள் கூட்டுச் சாகுபடிக்காக ஒன்றுதொகுக்கப்படும், குடியானவர்கள் தங்கள் சொத்துரிமைகளைத் தொடர்ந்து வைத்திருப்பார்கள், தங்கள் நிலத்திற்கு விகிதமாக, நிகர விளை பொருள்களிலிருந்து ஒரு பங்கைப் பெறுவர். மற்றும் ஒரு முதல் நடவடிக்கையாகக் கூட்டுப்பண்ணை அமைப்பிற்கு முன்பு, சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள் நாடுமுழுவதிலும் அமைக்கப்படவேண்டும். இக் கட்டம் மூன்றாண்டுகளுக்குள் முடிக்கப்பட வேண்டும். எனினும், இக் காலவரைக்குள் சாத்தியப்படும் இடத்திலும், குடியானவர்களால் பொதுவாக ஒப்புக்கொள்ளப்பட்டும் கூட்டுச் சாகுபடி தொடங்கப்படலாம்.' இதற்குப் பிறகு, இத்துறையில் எடுக்கப்பட்ட நடவடிக்கைகளும், அடைந்த முன்னேற்றமும் முன்னரே விவரிக்கப்பட்டுள்ளன. இச் சங்கங்களை நடத்துவதில் பெற்ற அனுபவம் எல்லா மாநிலங்களிலும் ஒருபடித்தானதாக விருக்கவில்லை. அத்தகைய சங்கங்கள் அதிக எண்ணிக்கையைக் கொண்டும், ஏறக்குறைய நல்ல முன்னேற்றத்தையு மடைந்துள்ள மாநிலங்களிலுங்கூட, அவற்றின் நடவடிக்கைகள் சிறிதாக இருந்துள்ளன. அத்தகைய சங்கங்களின் செயற்பாட்டில் தொக்கியிருக்கும் சிரமங்களும், சிக்கல்களுமே இதற்குக் காரணமாக இருக்கலாம். இந்தியாவில் குடியானவர்கள் தொன்றுதொட்டே நிலத்தில் பற்றுக்கொண்டவர்கள். இத் தனிக் காரணமே, உறுப்பினர்களிடமிருந்து நிலவுரிமைச் சங்கத்திற்குச் செல்லுகின்ற தொகுப்புப் பண்ணைக்குச் சாதகமான அனுகூலங்கள் பலவற்றைவிடப், பெருமளவு மிகையான பலத்தைக் கொண்டுள்ளது. ஆகையால், உறுப்பினர்கள் விருப்பமாகவும், தன்னிச்சையாகவும், ஒரு குறிப்பிட்ட காலவரைக்குக் கூட்டுப் பண்ணைக்காகத், தங்கள் நிலங்களை அவற்றின் உடைமையைத் தம்வசமே வைத்துக்கொண்டு ஒன்றுதொகுத்தல் செய்கின்ற, கூட்டுறவுப் பண்ணை வகையை மட்டும் ஏற்றுக்கொள்வதும், அதைப் பிரபல்யப்படுத்துவதும் ஒரு கொள்கையாக ஒப்புக்கொள்ளப்பட்டுள்ளது. தொகுப்புப் பண்ணையை அரசு நிலங்களிலும், பூதான அல்லது கிராமதான நிலங்களிலும் மேற்கொள்ளப்படுவதற்கு விட்டுவிடப்பட வேண்டும். எனவே, கூட்டுறவுப் பண்ணையின் 2 வகைகளும் புதிய பகுதி

களில், அங்கு நிலவியிருக்கும் நிலைமைகளையும், அத்தகைய சங்கங்கள் அமைக்கப்படுவதற்கு அப் பகுதிகளின் தகுதியையும், ஆராய்ந்த பிறகே நீடிக்கப்பட வேண்டும்.

விவசாய உற்பத்திப்பெருக்கமும், ஓர் ஏக்கருக்குக் குறைவாகவுள்ள சராசரிச் சாகுபடி நிலத்துண்டுடைய சிறு குடியானவர்களுக்குக் கிடைக்கும் வசதிகளன்றியும், கூட்டுப் பண்ணைச் சங்கங்களின் செயற்பாடானது, கிராமத்தில் கூட்டுறவு வாழ்க்கையை உற்பத்தி செய்வதற்கும், உள்ளூர்ச் சமுதாயத் தலைமையை வளர்ப்பதற்கும், அனைத்துமாகக் கிராமப் பொருளாதார அமைப்பில் ஒரு மேம்பாட்டைக் கொண்டுவருவதற்கும் எதிர்பார்க்கப்படுகிறது. ஆகையால், கூட்டுறவுப் பண்ணையைப் பிரபலியப்படுத்துவதற்கான முயற்சிகள் எடுக்கப்பட வேண்டியுள்ளன. கூட்டுறவுப் பண்ணை யமைப்பானது, குடியானவர்களின் சொந்த நலத்திற்கே யென்று குடியானவர்கள் அறிவும், நம்பிக்கையும் புகட்டப்பட வேண்டும். கூட்டுறவு அடிப்படையின் பேரில் பல்வேறு சேவைகளையும் வழங்கி வளர்ச்சிபெற்ற நாடுகளில் சாதிக்கப்பட்டுள்ளது போன்று, உற்பத்தித்திறன் பெருமளவு அதிகப்படுத்தப்படக்கூடுமென்று செயல்விளக்கம் செய்யப்பட வேண்டும். சாகுபடி செய்யப்படும் நிலத்துண்டின் விரிவினால், பண்ணை, தொழில்நுட்ப அனுகூலங்களைப் பெறுகின்றது. இது மற்றொரு பெரிய நன்மையாகும். எல்லாவற்றையும் விட, கூட்டுறவுப்பண்ணை வளர்ச்சிக்கேற்பத் தக்கதொரு சமுதாய வானிலையை உண்டுபண்ணுவது அவசியமாகவுள்ளது.

# 21. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள்

## (Consumers' Co-operatives)

**1. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்கான தேவை:** நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள், பொருள்களைச் சாதகமான நிபந்தனைகளில், உற்பத்தி இடங்களிலிருந்து சொந்தமாகக் கொள்முதல் செய்வதற்காகவும், பின்னர் உறுப்பினர்களுக்கு நியாய விலைகளில் அவற்றை நேர்மையாக விநியோகம் செய்வதற்காகவும் அமைக்கப்பட்ட, நுகர்வோர்களின் தன்னிச்சையான நிறுவனங்களாகும். தற்போது, தனியார் வர்த்தகர்களின் கைவசத்திலுள்ள விநியோக வர்த்தகமானது சில குறைபாடுகளை யுடையது என்ற மெய்ம்மையிலிருந்து அத்தகைய நுகர்வோர் நிறுவனங்களுக்கான தேவை எழுகின்றது. வர்த்தகர்கள் தங்கள் வியாபாரத்தில், பெரும்பாலும் இலாபம் ஈட்டும் நோக்கத்தால் தூண்டப்பட்டு, அடிக்கடி ஒழுங்கீனச் செயல்களுக்குச் செல்வதாகக் கூறப்படுகிறது. பொருள்கள், விற்பனைச் சமயத்தில் அடிக்கடி குறைவாக நிறையிடப்பட்டும், விரும்பப்பட்ட தரத்தி லில்லாமலு முள்ளன. விதிக்கப்படும் விலையுங்கூட நியாயமானதாக இல்லை. பற்றுக்குறையி லிருக்கும் பண்டங்கள் அடிக்கடி பதுக்கிக் கொள்ளப்பட்டு, அவற்றின் விநியோகத்தில் வேற்றுமை காண்பிக்கப்படுகிறது. பதுக்கலுக்கும், கொள்ளை இலாபமடித்தலுக்கும், கள்ள விற்பனைக்கும், விலைவாசி உயர்வுக்கும் வழி செய்கின்றன. இவ்வாறாக விலைவாசி மட்டம் செயற்கையாக உயர்த்தப்பட்டு, நுகர்வோர்கள் தாங்கள் செலவு செய்கின்ற தொகைக்கான முழுமதிப்பைப் பெறுகின்றதில்லை. அப்பிரச்சினைகளைத் தீர்க்க ஒரு சில அளவிற்கு, அரசால், கட்டுப்பாடு விதிப்பினை மூலம் முயற்சிக்கப்பட்டாலும், நிலைமையைச் சமாளிக்க அம் முயற்சிகள் எல்லாச் சந்தர்ப்பங்களிலும் போதுமானவையாக இரா. மேலும், இருப்புச்சரக்கு, மொத்தத்தின்மீது கட்டுப்பாடு இருந்து, பொதுத்துறை விநியோக முறையானது எல்லா மட்டங்களிலும் திறமையாக இயங்கினால் மட்டும்தான், கட்டுப்பாடு விதிப்புப் பயனுறுதியானதாக இருக்கக் கூடும். இயல்பான காலங்களிலும், அபூர்வமான நிலைமைகளிலும் நிலவரத்தைச் சமாளிப்பதற்கு ஏறக்குறைய நிரந்தரத் தன்மையுள்ள ஒரு தீர்வு, நாடு முழுவதிலும் நுகர்வோர் கூட்-

டுறவுச் சங்கங்களின் ஒரு கிளைப்பின்னலமைப்பை நிறுவுவதில் உள்ளது.

**2. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் நன்மைகள்:** மக்களுக்கு நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் நன்மைகள் பல உள.

(i) கூட்டுறவுப் பண்டசாலைகள் பெரும்பாலும் உற்பத்தியிடங்களிலிருந்து மொத்தத்தில் கொள்முதல் செய்வதால் அவை தங்கள் உறுப்பினர்களுக்கு நியாய விலையில் பண்டங்களை வழங்கக்கூடும். அவை ஓர் இலாப நோக்கத்துடன் இயங்குவதில்லை. எனினும், அவற்றால் விற்பனை செய்யப்பட்ட பொருள்கள்மீது கிடைத்த ஒரு சிறு இலாபத்தின் பேரில் அவை இயங்க வேண்டும்; ஆனால், இந்த உபரி எதிர்பாராத நட்டங்களை ஏற்றுக்கொள்வதற்கும், தங்கள் நிதிகளை வலுப் படுத்துவதற்கும் உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. இந்த உபரியில் பெரும்பான்மையானது உறுப்பினர்களுக்கு இலாபஈவு வடிவத்திலும், வாங்குதல்மீது தள்ளுபடி (rebate) வடிவத்திலும், திரும்பச் செல்கின்றது.

(ii) கூட்டுறவுப் பண்டசாலைகள் பெரும்பாலும் தங்கள் உறுப்பினர்களுக்கு மட்டும் பொருள்களை வழங்குவதால், சரியான நிறையுடனும், அங்கீகரிக்கப்பட்ட தரத்துடனும், ஒரு குறிப்பிட்ட விலையிலும், கலப்படமில்லாத பொருள்களை வழங்குவது அவற்றின் கொள்கையாக வுள்ளது. சில அத்தியாவசியப் பொருள்களின் தயாரிப்பைத் தாங்களே தொடங்குவதும், கூட்டுறவுப் பண்டசாலைகளின் ஒரு நீண்டகாலக் கொள்கையாக வுள்ளது. அவை அவ்வாறு செய்தால், பொருள்களின் சுத்தத்தையும், வழங்குதல் செலவில் குறைப்பையும், அவை மேலும் நிச்சயப்படுத்தலாம்.

(iii) இதரக் கூட்டுறவு நிறுவனத்தைப் போன்று, ஒரு நுகர்வோர் நிறுவனமும் சனநாயக ரீதியாக நிருவாகம் செய்யப்படுகிறது. உறுப்பினர்களின் பொது அனுகூலத்திற்குப் பொருள்கள் கொள்முதல், விநியோகம், விலை நிருணயம் முதலியன போன்ற துறைகளில், பண்டசாலையின் கொள்கையை அமைக்கக்கூடிய உச்ச அதிகாரம் சங்கப் பேரவை வசம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. மற்றும், சில சமுதாய நன்மைகளும், நுகர்வோர் நிறுவனங்களிலிருந்து சமுதாயத்திற்குக் கிடைக்கின்றன.

(vi) தனியார் கடைக்காரர்கள், வாடிக்கையாளர்களைக் கடன்பேரில் வாங்குவதற்கு, ஊக்குவிக்கப்படுகின்றனர். இது, வாடிக்கையாளரை வர்த்தகருக்குக் கட்டுப்பாட்டின் கீழ் வைத்து, வர்த்தகர் வாடிக்கையாளரைச் சுரண்டுவதற்கு வகை செய்கிறது. ஆனால், கூட்டுறவுப் பண்டசாலை ரொக்கத்திற்காக மட்டுந்தான் விற்பனை செய்கிறது. மற்றும், வாடிக்கையாளர், தமக்கு வேண்டிய இருப்புச் சரக்கைத் தெரிந்தெடுத்துக் கொள்வதற்கும் சரியான நிறையைக் கேட்பதற்கும், உரிமை கொண்டுள்ளார்.

( V ) கூட்டுறவுப் பண்டசாலையில் ரொக்கக் கொள்முதல் முறையானது உறுப்பினர்களிடையே சிக்கனத்தை வளர்க்கின்றது. வாடிக்கையாளர், பண்டங்களை வாங்குகின்ற காலத்தில், தம் வருவாய்க்கிணங்கச் செலவைக் கட்டுப்படுத்த முயற்சி செய்வதுமட்டுமன்றி, செலவிடும்போது அவர் மிச்சப்படுத்துதலும்கூடச் செய்கிறார் (Saves as he spends). ஏனென்றால், கொள்முதல்கள் மீது ஆண்டிறுதியில் அளிக்கப்படும் அதிகப்படி ஊதியம் (போனஸ்) அத்தகைய மிச்சங்களின் சேகரிப்பாகும். ஒருவர், பண்டசாலையிலிருந்து எவ்வளவு அதிகமாகக் கொள்முதல் செய்கிறாரோ, அவ்வளவு அதிகமாகப் போனசும் இருக்கும்.

(vi) கூட்டுறவுப் பண்டசாலையானது, பற்றாக்குறைப் பண்டங்களையும், கட்டுப்பாட்டுப் பண்டங்களையும், நேர்மையாக விநியோகம் செய்வதற்காகத் தகுதியானதும், நம்பத்தகுந்ததுமான ஓர் அமைப்பாக வுள்ளது. உணவுப் பங்கீடு செய்யப்பட்ட பொருள்கள் விநியோகத்தை அரசு இதற்கு ஒப்படைக்கின்றபோது, விற்பனைகள் உறுப்பினர்களுக்கு மட்டும் கட்டுப்படுத்தப்படாம லிருக்கின்றமையால், அது பொதுமக்களுக்கும் தொண்டாற்றுகிறது.

(vii) கூட்டுறவுப் பண்டசாலைகள், தங்கள் இலாபங்களின் ஒரு பாகத்தைக் கல்விக் காரியங்களுக்காக ஒதுக்கீடு செய்கின்றன. குழந்தைகளிடையே பரிசு போட்டிகள் அமைக்கப்படுகின்றன; தங்கள் குழந்தைகளுக்குக் கல்வி அறிவு புகட்டுவதற்கு உறுப்பினர்களுக்கு வகை செய்வதற்காகப் படிப்பு உதவிப்பணங்கள், புத்தகங்கள் முதலியன அளிக்கப்படுகின்றன; நூல்நிலையங்கள் ஆதரிக்கப்படுகின்றன; படிப்பகங்கள், பொழுதுபோக்கு மன்றங்கள் முதலியன வாயிலாகச் சோர்வை நீக்கப் பொழுதுபோக்கும் வழங்கப்படுகிறது. இந் நடவடிக்கைகள் கூட்டுறவுத் துறைகளுக்கு மட்டும் கட்டுப்படுத்தப்படாமல், அவை பொதுக் கல்வியறிவையும், பண்பாட்டையும் வளர்க்கின்றன. மக்களுக்காகச் செயற்

படுகின்ற ஒரு வலிவுள்ள நுகர்வோர் இயக்கம், இவ்வாறாகச் சமுதாயத்திற்குப் பொருளாதார, சமுதாய வளர்ச்சிக்கான அரிய பணிகளைப் புரியக்கூடும்.

**3. இந்தியாவில் நுகர்வோர் இயக்கத்தின் வரலாறு:** நுகர்வோர் இயக்கமானது—உண்மையிலேயே இன்று பொருள் கொள்ளப்பட்டபடி, கூட்டுறவு இயக்கமானது—இங்கிலாந்து நாட்டில் தோன்றியது. அங்குத்தான் முதன்முதலில் 1844ஆம் ஆண்டில் இராக்டேல் முன்னோடிகளால் ஒரு நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலை அமைக்கப்பட்டது. அக் காலத்திலிருந்து நுகர்வோர் கூட்டுறவு நிறுவனங்கள் மேலைநாடுகளில் பெருமளவு முன்னேற்றமடைந்து, அந் நாடுகளின் தேசியப் பொருளாதார அமைப்புகளில் ஒரு முக்கிய இடத்தை வகித்து வந்துள்ளன. இந்தியாவிலுங்கூட, பெரும்பாலும், கூட்டுறவு இயக்கமானது ஒரு நுகர்வோர் சங்கம், அதாவது, 1904ஆம் ஆண்டில், சென்னை நகரத்தில் திருவல்லிக்கேணி நகரச் சங்கம் (T. U. C. S.) அமைக்கப்பட்டபோது தொடங்கியது. எனவே, இந்தியாவில் முதல் நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலையை அமைப்பதில் ஒரு தலைமையையும், வழிகாட்டலையும் எடுத்திருந்த பெருமை சென்னையைச் சாரும். திருவல்லிக்கேணிச் சங்கத்தின் முன்வழி உண்டாக்கியவர்கள் இராக்டேல் முன்னோடிகளின் உதாரணத்தினால் ஆவேசமடைந்து, இராக்டேல் எக்கியுடபிள் பயனீயர்சு (Equitable Pioneers) கூட்டுறவுச் சங்கத்தின் மாதிரியில் தங்களை அமைத்துக்கொண்டிருந்தனர். 1904-ல் அமைக்கப்பட்ட இச் சங்கம் நாட்டிலுள்ள மிக வெற்றிகரமான கூட்டுறவுத் தொழில்துணிவுகளில் ஒன்றாகத் தொடர்ந்திருக்கின்றது. அத்தகைய வெற்றிகரமான சங்கங்களின் அபூர்வ உதாரணங்களைத் தவிர, நாட்டில் மிக அண்மைக்காலம்வரை நுகர்வோர் இயக்கம் அதிக முன்னேற்றமடைந்துள்ளதாகக் கூறமுடியாது.

நெடுங்காலமாக நாட்டில் நுகர்வோர் இயக்கமானது மக்களாலேயே எடுக்கப்பட்ட முன்முயற்சியின்மீதே முழுவதும் சார்ந்திருந்தது. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களை வளர்ச்சி செய்வதற்கான எந்தத் திட்டத்தையும் அரசு மேற்கொள்ளவில்லை. இரண்டாவது உலகப் பெரும்போருக்கு முன்பு, நாட்டில் 400-க்கும் குறைவான நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் மட்டுமே இருந்தன. அவற்றில் பெரும்பாலானவை தமிழ்நாடு, கர்நாடகம், மராட்டியம் ஆகிய மாநிலங்களில் அமைக்கப்பட்டிருந்தன. இரண்டாவது உலகப் பெரும்போரின்போது, நியாயவிலைக் கடைகளாக உரிமம் வழங்கப்படுவதில் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அளிக்

பட்ட சலுகையின் காரணமாக, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் ஓர் ஆக்கத்தைப் பெற்றன. 1952ஆம் ஆண்டில், 9,757 பிரதமக் கூட்டுறவுப் பண்டசாலைக ளிருந்தன. அவை 18.50 இலட்சம் உறுப்பினர்களையும், ரூ. 82 கோடி வருடாந்தர விற்பனைப் புரள்வையும் பெற்றிருந்தன. இச் சங்கங்களில் பெரும்பாலானவை, உணவுப் பங்கீடு செய்யப்பட்ட பொருள்களையும், பற்றுக்குறைப் பொருள்களையும் மட்டுமே விநியோகம் செய்வதற்குத் தங்கள் வாணிகத்தை அடைத்திருந்தன. எனவே, கட்டுப்பாடுகள் நீக்கப்பட்டு, உணவுப் பங்கீடு எடுக்கப்பட்டவுடன், அவற்றில் பல, தனியார் வர்த்தகர்களிடமிருந்து எழுந்த சுதந்திரமான போட்டிக் கெதிரே, தங்களைக் காப்பாற்றிக் கொள்வதற்குச் சங்கடமுற்றன. 1960–61ஆம் ஆண்டிறுதியில், 7,058 பிரதம சங்கங்கள் மட்டுந்தான் இருந்தன. அவை, 13.41 இலட்சம் உறுப்பினர்களையும், 44.23 கோடி விற்பனைப் புரள்வையும் பெற்றிருந்தன. அநேக சங்கங்கள் செயற்படாத நிலைமையி லிருந்தன. 2,722 சங்கங்கள் சொற்ப இலாபத்தில் செயற்பட்டிருந்தன.

நுகர்வோர் பண்டசாலைகளின் வளர்ச்சிக்காக, முதல் அல்லது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களில் எந்தத் தனிப்பட்ட திட்டங்களும் இல்லாம லிருந்தன. 1961ஆம் ஆண்டில், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றிய டாக்டர் நடேசன் குழுவினர், பண்டசாலைகளின் பங்குமூலதனத்தில் அரசு பங்கு கொள்ளுதல் உட்படப் பல்வேறு பரிவுரைகளைச் செய்தனர். மூன்றுவது ஐந்தாண்டுத் திட்டம் கீழ்க்காணும் முறைகளில், நிதியுதவிக்கான திட்டங்களைக் கொண்டிருந்தது. (i) வலிவுகுன்றிய நுகர்வோர் பண்டசாலைகளை மறுமலர்ச்சி யடையச் செய்தலுக்காக மேலாண்மைச் சிப்பந்தி மானியம், (ii) பங்கு மூலதனத்தில், அரசு பங்கு கொள்ளுதல், (iii) எண்ணெய் தயாரிக்கும் இயந்திரங்களையும், காஃபி அரவை இயந்திரங்களையும் அமைப்பதற் கடன்கள்.

1962ஆம் ஆண்டில், சீன ஆக்கிரமிப்பால் ஏற்பட்ட தேசிய நெருக்கடி நிலைமையில், இந்திய அரசு ஒரு புதிய திட்டத்திற்கு ஆதரவாளராய் இருந்தது. அதாவது, நுகர்வோர்களுக்கு, குறிப்பாக நகரப்பகுதிகளில், நியாயவிலைகளில் நுகர்பொருள்களை நேர்மையாக விநியோகிக்கும் நோக்கத்தைக் கொண்டது, மைய அரசால் ஆதரவளிக்கப்பட்ட திட்டம் (Centrally sponsored scheme). இத் திட்டம், 'தேசியக் கூட்டுறவு வளர்ச்சி மற்றும் தானியச் சேமிப்புக் கிடங்கு வாரியத்'தால் அமைக்கப்பட்ட, டாக்டர் நடேசன் குழுவின் அறிக்கையை அத்தியாவசியமாக அடிப்படையாகக் கொண்டிருந்தது. இத் திட்டத்தின் அத்தியாவசிய அம்சங்களி லொன்று, நான்கு அடுக்கு

அமைப்பை நிறுவுதலாக இருந்தது. அதாவது தேசிய மட்டத்தில் தேசியக் கூட்டமைப்பும், மாநில மட்டத்தில் மாநிலக் கூட்டமைப்புகளும், நகரமட்டத்திலும், பட்டினமட்டத்திலும் பல பிரதமப் பண்டசாலைகளால் ஆதரிக்கப்பட்ட மொத்த விற்பனைப் பண்டசாலைகளும், 50,000-மும், அதற்கு மதிகமாகவு முள்ள ஒரு மக்கள்தொகையைக் கொண்டுள்ள எல்லா நகரங்களிலும், பட்டினங்களிலும் மொத்த விற்பனைப் பண்டசாலைகளையமைத்தல் எதிர் நோக்கப்பட்டது. அரசால் ஆதரிக்கப்பட்ட திட்டங்களில், (அ) பெரிய நகரங்களிலும் பட்டினங்களிலு முள்ள பொதுமக்கள், (ஆ) பொதுத்துறை தனியார்துறை நிறுவனங்களின் ஊழியர்கள், தொழில்துறைத் தொழிலாளர்கள், (இ) அரசு ஊழியர்கள் ஆகியவர்களுக்கிடையே கூட்டுறவுப் பண்டசாலைகளை யமைத்தலும், மற்றும், (ஈ) சேவைக் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகவும், விற்பனைச் சங்கங்கள் மூலமாகவும், கிராமிய மக்கள்தொகைக்கு அடிப்படை அத்தியாவசிய நுகர்பொருள்கள் வழங்குதலை நிச்சயப்படுத்துவதற்கான ஒரு திட்டமும் அடங்கியிருந்தன. நுகர்பொருள்களின் கொள்முதலிலும், வழங்குதலிலும் மற்றும் இதரப் பணிகளிலும் சில்லறை விற்பனைச் சங்கங்களுக் குதவும் நோக்கத்துடன், மாநிலமட்டத்துக் கூட்டமைப்புகள் ஏறக்குறைய எல்லா மாநிலங்களிலும் அமைக்கப்பட்டன. பங்கு மூலதனத்திற்கு உதவித்தொகை வடிவத்திலும், மேலாண்மைச் சிப்பந்திச் செலவிற்கு மானிய வடிவத்திலும், அரசு அவற்றிற்கு நிதியுதவி வழங்கியுள்ளது. மாநிலக் கூட்டமைப்புகளின் ஒரு கூட்டமைப்பான, தேசியக் கூட்டுறவு நுகர்வோர் கூட்டமைப்பு 1965ஆம் ஆண்டு அக்டோபரில் நிறுவப்பட்டது. அதுவுங்கூட இந்திய அரசிடமிருந்து நிதியுதவியையும் இதர ஆதரவையும் பெற்றுள்ளது. தேசியக் கூட்டமைப்பின் பங்கு மூலதனமாக, இந்திய அரசு ரூ. 15 இலட்சம் உதவியுள்ளது. மற்றும், அது 1970ஆம் ஆண்டு வரையுள்ள ஐந்தாண்டுகளின்போது, மேலாண்மைச் சிப்பந்திமானியம் ரூ. 3.96 இலட்சம் வழங்கியுள்ளது. 1967ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்திற்குள், எல்லா 14 மாநிலக் கூட்டமைப்புகளும் தேசியக் கூட்டமைப்பின் உறுப்பினர்களாகி யிருந்தன. இத் திட்டத்தின்கீழ், 30–6–70ஆம் நாளன்று, ரூ. 154.15 கோடி விற்பனைப் புரள்வைக் கொண்ட 375 மொத்த விற்பனைப் பண்டசாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. திட்டத்தின் தொடக்கக் காலங்களில், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்கான உதவி, தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகத்தின் மூலமாக வழிப்படுத்தப்பட்டது. 1965–66 ஆம் ஆண்டில், நுகர்வோர் இயக்க வளர்ச்சிக்கான நேரடிப் பொறுப்பை இந்திய அரசு எடுத்துக்கொள்ள வேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது.

1966ஆம் ஆண்டில், இந்திய ரூபாய் மதிப்புக் குறைப்பின் விளைவாக, நாட்டில் அத்தியாவசியப் பொருள்களின் விலைவாசி ஏறத் தொடங்கியது. பணவீக்கப் போக்குகளையும், விலைவாசி ஏற்றத்தையும் தடுக்கும் நோக்கத்துடன், இந்திய அரசு, ஒரு செயல்விளைவுச் செயல்திட்டத்தின் (Impact Programme) மூலம் மைய அரசால் ஆதரவளிக்கப்பட்ட திட்டத்தைத் துரிதப்படுத்தி நுகர்வோர் கூட்டுறவுச் செயல்திட்டங்களை மேலும் விரிவாக்குவதற்கு முடிவு செய்தது. 100 புதிய மொத்த விற்பனைப் பண்டசாலைகளையும், 2,000 பிரதமப் பண்டசாலைகளையும், கிளைகளையும் அமைப்பதற்கு அது உத்தேசித்தது. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள், குறிப்பாகப் பெரிய நகரங்களில், சில்லறை விநியோக வர்த்தகத்தில் சில செயல்விளைவைச் செய்யக்கூடிய வகையில் ஒரு பெரிய விதத்தில் செயற்படுவதற்கு வகை செய்யப்பட வேண்டுமென்றும், அரசு முடிவு செய்தது. 2 இலட்சத்திற்கும் அதற்கு மதிமாகவு முள்ள ஒரு மக்கள்தொகையைக் கொண்ட எல்லாப் பெரிய நகரங்களையும் தழுவுவதற்கு, 50 துறைப் பண்டசாலைகளை (Departmental Stores) (சிறப்பு அங்காடிகள்) அமைப்பதற்கு உத்தேசிக்கப்பட்டது. துறைப் பண்டசாலைகளை அமைப்பதற்காக, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசு தாராளமான நிதியுதவியை ஒப்பளித்தது. இச் செயல்திட்டத்தைத் துரிதப்படுத்துவதற்காக ரூ.10 கோடியை அது ஏற்பாடு செய்தது. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பற்றுக்குறை அத்தியாவசியமான பொருள்களைக் கொள்முதல் செய்வதில் உதவுவதற்கு மைய அரசு, உணவு, வேளாண்மைத் துறையில் (கூட்டுறவுத் துறை), ஒரு மையக்கொள்முதல், மற்றும் வழங்குதல் நிறுவனம் அமைக்கப்பட்டது. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் நிர்வாகத்தையும், மேற்பார்வைச் சிப்பந்திகளையும் பலப்படுத்துவதற்காக, மாநில அரசுகள் கூடுதலான நிதியுதவி யளிக்கப்பட்டன. இத் திட்டத்தின்கீழ், நடப்பிலுள்ள மொத்த விற்பனைப் பண்டசாலைகளால் துறைப் பண்டசாலைகள் தொடங்கப்பட்டன. சில இடங்களில், துறைப் பண்டசாலைகளை நடத்துவதற்குப் புதிய சங்கங்கள் ஆரம்பிக்கப்பட்டன. வேறு சில இடங்களில், மொத்த விற்பனைக் கூட்டுறவுப் பண்டசாலைகளின் கூட்டமைப்புகளால் துறைப் பண்டசாலைகள் தொடங்கப்பட்டன. 30–6–71ஆம் நாளன்று, ரூ.33 கோடிக்கு மொத்த விற்பனைப் புரள்வைக் கொண்டு, 107 துறைப் பண்டசாலைகள் செயற்பட்டிருந்தன. அவற்றில் பல, தாங்கள் செயற்படுகின்ற இடங்களில், நுகர்பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்துவதில் உண்மையாகவே வெற்றியடைந்துள்ளன. அவை சில்லறைக் கடைகளில் தொழில்நுட்பங்களையுங்கூடத் தொடங்கி வைத்துள்ளன.

நாட்டில் கூட்டுறவுப் பண்டசாலைகள் அடைந்திருந்த முன்னேற்றத்தைக் கீழ்க்காணும் அட்டவணையில் காணலாம்.

**நுகர்வோர் பண்டசாலைகளால் செய்யப்பட்ட விற்பனை**

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| | பண்டசாலைகளின் எண்ணிக்கை | உணவுத் தானியங்கள் | மற்றவை | மொத்தம் | பண்டசாலைகளின் எண்ணிக்கை | உணவுத் தானியங்கள் | மற்றவை | மொத்தம் | பண்டசாலைகளின் எண்ணிக்கை | உணவுத் தானியங்கள் | மற்றவை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| மொத்த விற்பனைப் பண்டசாலைகள் | 385 | 99·0 | 89·8 | 188·8 | — | 83·0 | 80·0 | 163·3 | 400 | 79·0 | 87·1 | 166·1 |
| பிரதமப் பண்டசாலைகள் | 13,950 | 119·1 | 64·1 | 183·2 | 13913 | 107·0 | 63·4 | 170·4 | 13562 | 107·3 | 71·7 | 175·4 |
| மொத்தம் | — | 218·1 | 153·9 | 372·0 | — | 190·0 | 143·4 | 333·4 | — | 187·2 | 158·8 | 341·5 |

எனினும், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சியானது நாட்டின் பல்வேறு பாகங்களில் ஓரளவு சமமற்றதாக இருந்துள்ளது. தமிழ்நாடு, கர்நாடகம், ஆந்திரம் போன்ற ஒரு சில மாநிலங்களில் முன்னேற்றம் ஊக்கமளிக்கும் வகையில் இருந்துள்ளது; இதர மாநிலங்களில் அது சிறிது மந்தமாகவே இருந்துள்ளது.

**4. இந்தியாவில் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் தற்போதைய பொது நிலைமை**: 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் 17 மாநில மட்டத்து மொத்த விற்பனைப் பண்டசாலைகளும், 378 மாவட்ட மட்டத்து மொத்த விற்பனைப் பண்டசாலைகளும், 13,156 பிரதமக் கூட்டுறவுப் பண்டசாலைகளு மிருந்தன. மாநில மட்டத்து மொத்த விற்பனைப் பண்டசாலைகள் 1,625 உறுப்பினர்களைப் பெற்றிருந்தன. அவர்களில், 633 நுகர்வோர் பண்டசாலைகளும், 109 இதரக் கூட்டுறவுச் சங்கங்களும், 883 தனிநபர்களும் அடங்கியிருந்தனர். அவற்றின் செலுத்தப்பட்ட மூலதனம் ரூ.1.38 கோடியாக இருந்தது. அதில், ரூ.88 கோடி அரசிடமிருந்தும், ரூ.0.41 கோடி நுகர்வோர் பண்டசாலைகளி லிருந்தும், ரூ.0.0739 கோடி இதர நிறுவனங்களிலிருந்தும், ரூ.0.0031 கோடி தனிநபர்களிடமிருந்தும் பெற்றிருந்த பங்கு மூலதன மாகும். அவற்றின் நடைமுறை மூலதனம் ரூ.5.15 கோடியளவிற்கு இருந்தது. அவற்றின் கடன் பெற்ற முதல், 1970—71ஆம் ஆண்டிறுதியில், ரூ.1.53 கோடியாக இருந்தது. அதில் மைய நிதியமைப்புகளுக்கு ரூ.0.55 கோடியும், வாணிக வங்கிகளுக்கு ரூ.0.35 கோடியும், அரசுக்கு ரூ.0.43 கோடியும், மற்றவர்களுக்கு ரூ.19 கோடியும் கொடுக்க வேண்டியிருந்தது. அவற்றின் மொத்த விற்பனைகள் ரூ.10.61 கோடிக் கிருந்தன. 12 மாநில மட்டத்து மொத்த விற்பனைப் பண்டசாலைகள் இலாபத்திலும், எஞ்சியவை நட்டத்திலும் இயங்கின.

1970-71ஆம் ஆண்டிறுதியில் 378 மொத்த விற்பனைப் பண்டசாலைகள் மாவட்ட மட்டங்களிலும் இதர மட்டங்களிலு மிருந்தன. அவை 2,344 கிளைகளைக் கொண்டிருந்தன. அவற்றின் உறுப்பினர்கள் எண்ணிக்கை 9,10,316 ஆக இருந்தது. அதில், 6,623 நுகர்வோர் பண்டசாலைகளும், 11,421 இதரக் கூட்டுறவுச் சங்கங்களும், நிறுவனங்களும் 8,92,266 தனிநபர்களும் அடங்கியிருந்தனர். அவற்றின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ.10.25 கோடியாக இருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.6.61 கோடியும் நுகர்வோர் பண்டசாலையிலிருந்து ரூ.1.32 கோடியும், இதரக் கூட்டுறவுச் சங்கங்கள், நிறுவனங்களிடமிருந்து ரூ.0.72 கோடியும், தனிநபர்களிடமிருந்து ரூ.1.58 கோடியும் அடங்கியிருந்தன. அவற்றின் நடைமுறை மூலதனம் ரூ.47.98 கோடி

யளவிற்கு இருந்தது. 1970—71ஆம் ஆண்டிறுதியில், அவற்றின் கடன்பெற்ற முதலில், நிலுவைத் தொகை ரூ.17.39 கோடியாக விருந்தது. அதில், மைய நிதியமைப்புகளுக்கு ரூ.9.90 கோடியும், வாணிக வங்கிகளுக்கு ரூ.0.83 கோடியும், அரசுக்கு ரூ.5.11 கோடியும், மற்றவர்களுக்கு ரூ.1.54 கோடியும் கொடுக்க வேண்டியிருந்தன: அவ் வாண்டின்போது, அவற்றின் மொத்த விற்பனைகள் 136.50 கோடியளவிற்கு இருந்தன. 130 மொத்த விற்பனைப் பண்டசாலைகள் இலாபத்திலும், 222 நட்டத்திலும், எஞ்சியவை 26 இலாபமும், நட்டமு மில்லாமலும் இயங்கின.

1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், 13,156 பிரதமப் பண்டசாலைக ளிருந்தன. அவற்றுள் 6,098 செயற்படாமலிருந்தன. அவை 2,104 கிளைகளைக் கொண்டிருந்தன. அவற்றின் உறுப்பினர்கள் எண்ணிக்கை 34,13,167ஆக விருந்தது. அதில், 211 நுகர்வோர் பண்டசாலைகளும், 6,678 இதரக் கூட்டுறவுச் சங்கங்களும், நிறுவனங்களும், 34,06,728 தனிநபர்களும் அடங்கியிருந்தனர். அவற்றின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ.8.82 கோடியாக இருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.1.64 கோடியும், நுகர்வோர் பண்டசாலைகளிலிருந்து ரூ.0.09 கோடியும், இதரக் கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்தும், இதர நிறுவனங்களிடமிருந்தும் ரூ.29.63 கோடியும், தனிநபர்களிடமிருந்து ரூ.6.88 கோடியும் அடங்கியிருந்தன. அவற்றின் நடைமுறை மூலதனம் ரூ.37.62 கோடி யளவிற்கு இருந்தது. அவற்றின் கடன்பெற்ற முதலில் நிலுவைத் தொகை, 1970—71ஆம் ஆண்டிறுதியில், ரூ.5.95 கோடிக்கு இருந்தன. அதில், மைய நிதி யமைப்புகளுக்கு ரூ.2.65 கோடியும், வாணிக வங்கிகளுக்கு ரூ.0.046 கோடியும், அரசுக்கு ரூ.0.77 கோடியும், மற்றவர்களுக்கு ரூ.2.47 கோடியும் கொடுக்க வேண்டியிருந்தன. அவ் வாண்டின்போது, மொத்த விற்பனைகள் ரூ.145.16 கோடிக்கு இருந்தன. 4,695 சங்கங்கள் இலாபத்திலும், 4,101 சங்கங்கள் நட்டத்திலும், 4,360 சங்கங்கள் இலாபமும் நட்டமு மில்லாமலும் இயங்கின.

**தேசிய நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்பு:** இது, தேசிய மட்டத்தில், நாட்டிலுள்ள நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் தலைமை நிறுவனமாகும். 1965ஆம் ஆண்டில் பதிவு செய்யப்பட்டு, 1966ஆம் ஆண்டில்,அது தன் அலுவலைத் தொடங்கியது. அதன் அங்கத்துவம், 14 மாநிலக் கூட்டமைப்புகளையும், இந்திய அரசையும், இந்திய தேசியக் கூட்டுறவு ஒன்றியத்தையுங் கொண்டுள்ளது. 1967ஆம் ஆண்டிற்குள், நாட்டின் எல்லா மாநில நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்புகளும் அதன் உறுப்பினர்

களாகி யிருந்தன. தன் தலைமை அலுவலகத்தைப் புதுடில்லியில் நிறுவி, கிளை அலுவலகங்களின் மூலம் பம்பாய், சென்னை, கல்கத்தா, கௌஹாத்தி, நாகப்புரி, கொச்சின் ஆகிய நகரங்களில் அது செயற்படுகின்றது. பம்பாயிலும் சென்னையிலும் கல்கத்தாவிலு முள்ள மண்டல அலுவலகங்கள், தங்கள் எல்லையிலுள்ள ஆலைகளிலிருந்து துணிவகைகளைக் கொள்முதல் செய்து, அவற்றை நாடு முழுவதிலும் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் அவற்றின் மாநிலக் கூட்டமைப்புகளுக்கும் விநியோகம் செய்வதற்கு ஏற்பாடு செய்வதில் குறிப்பாக ஈடுபட்டுள்ளன. தங்கள் எல்லையிலுள்ள நுகர்வோர் பண்டசாலைகளுக்கு அவற்றின் மாநிலக் கூட்டமைப்புகளுடன் ஒத்துழைப்பதன்மூலம், பருப்புவகைகள், உணவுத் தானியங்கள் முதலியவைகளின் வழங்குதலையுங் கூட அவை கையாளுகின்றன. 1969ஆம் ஆண்டிலிருந்து, பறிமுதல் செய்யப்பட்டதும், கைப்பற்றப்பட்டதுமான நுகர்பண்டங்களை நாட்டின் மத்திய ஆயத்துறை, சுங்கத்துறை ஆட்சியாளர் (Collector of Customs and Central Excise), தேசிய நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்புக்கு, நாட்டிலுள்ள நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் விநியோகத்திற்காக விடுவிக்கின்றார். அவ்வப்போது, அரசால், தன் இறக்குமதிக் கொள்கையின்கீழ் இறக்குமதி செய்யப்பட, அனுமதிக்கப்பட்ட உலர்ந்த பழவகைகளையும், பேரீச்சம் பழங்களையும் அத்தகைய இதர நுகர்பொருள்களையும் இறக்குமதி செய்வதற்கான உரிமங்கள்கூட, தேசியக் கூட்டமைப்பு வழங்கப்படுகின்றன. கீழ்க்காணும் விவரப்பட்டியல், தேசியக் கூட்டமைப்பால் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அல்லது அவற்றின் மாநிலக் கூட்டமைப்புகளுக்குக் கடந்த மூன்றுண்டுகளின்போது வழங்கப்பட்ட பொருள்களின் மதிப்பைக் காட்டுகின்றது.

| (ரூபாய் இலட்சக்கணக்கில்) | 1967–68 | 1968–69 | 1969–70 |
|---|---|---|---|
| 1. துணிவகைகள் | 138.39 | 131.62 | 167.74 |
| 2. மளிகைச் சரக்குகள் | 38.50 | 54.33 | 88.55 |
| 3. இறக்குமதி செய்யப்பட்ட பொருள்கள் | 33.76 | 71.29 | 45.71 |
| 4. அரசு வர்த்தகக் கழகத்திலிருந்து (State Trading Corporation) மசாலை வகைகள் | 25.49 | 23.72 | 2.14 |
| 5. பறிமுதல் செய்யப்பட்ட நுகர் பொருள்கள் | 0.03 | 6.39 | 79.16 |
| 6. மற்றவை | 0.50 | 0.05 | 0.02 |
| மொத்தம் | 236·67 | 287 40 | 383·32 |

தேசியக் கூட்டமைப்பு 1969—70ஆம் ஆண்டிறுதியில், ரூ.20.70 இலட்சம் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தைப் பெற்றிருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.15 இலட்சமும், உறுப்பினர் கூட்டமைப்புகளிலிருந்து ரூ. 5.70 இலட்சமும் அடங்கியிருந்தன. 1969—70ஆம் ஆண்டின்போது, அதன் மொத்த விற்பனைகள் ரூ.383.32 இலட்சமளவிற்கு இருந்தன. இலாப ஈவு அன்றியும், சுமார் ரூ. 14 இலட்சமளவிற்கு ஆதரிப்புப் போனசை (Patronage Bonus), யூனியன் பிரதேசங்களில் மாநிலக் கூட்டுறவமைப்புகளுக்கும், நுகர்வோர் சங்கங்களுக்கும் கடந்த மூன்றாண்டுகளின் போது அளித்தது. எனினும், அதன் நடவடிக்கைகளின் பருமம், யாதொரு செயல்விளைவையும் செய்வதற்கு, மிகச் சிறியதாக உள்ளது. அதன் வளர்ச்சி நடவடிக்கைகளுள், பயனுள்ள நூல்களை வெளியிடுதல், கடைத் தளவாடங்களுக்குப் புதுமாதிரி அமைப்புமுறை செய்தல், மேலாண்மை ஆலோசனைப் பணிவளர்ச்சி செய்தல் ஆகியவை அடங்கியுள்ளன.

**5. தமிழ்நாட்டில் நுகர்வோர் இயக்கத்தின் வரலாறு:** திருவல்லிக்கேணி நகரக் கூட்டுறவுச் சங்கம் (T.U.C.S.) 1904 ஆம் ஆண்டில் நிறுவப்பட்டபோது, இந்தியாவில் முதன்முதல் கூட்டுறவு இயக்கத்தைத் தொடங்கி வைத்த பெருமையைத் தமிழ் நாடு எடுத்துக்கொள்ளக் கூடும். 1915ஆம் ஆண்டுக்கு முன்னர், 15 கூட்டுறவுப் பண்டசாலைகள் மட்டுமே இருந்தன. முதலாவது உலகப் போரின் விளைவாக ஏற்பட்ட விலைவாசிகளின் பெரும் ஏற்றத்தினால் கொடுக்கப்பட்ட ஊக்கத்தின் விளைவாக, அவற்றின் எண்ணிக்கை 1921ஆம் ஆண்டிற்குள் 103-க்கு உயர்ந்தது. 1930ஆம் ஆண்டில் ஏற்பட்ட பொருளாதார மந்தம், 1938—39ஆம் ஆண்டுகளில் எண்ணிக்கையை 85-க்குக் குறைத்தது. இரண்டாவது உலகப்போர் மீண்டும் ஒரு சாதகமான வானிலையை ஏற்படுத்தியது. உணவுப் பங்கீட்டுக் கடைகளை நடத்துதலுட்படக் கட்டுப்படுத்தப்பட்ட பொருள்களை விநியோகிப்பதற்கான தக்க அமைப்பை, அரசு, கூட்டுறவுப் பண்டசாலைகளில் கண்டது. அரசால் கட்டுப்படுத்தப்பட்ட விநியோகத்தின்கீழ் உறுதியளிக்கப்பட்ட வாணிகமும்,போட்டியின்மையும் அதிகமுயற்சியின்றிப் பெருமளவுள்ள நடவடிக்கைகளைப் பெறுவதற்கு, அவற்றிற்கு வகை செய்தன. அவற்றின் எண்ணிக்கை, 1939—40ஆம் ஆண்டில் 236-லிருந்து, 1948—49ஆம் ஆண்டில் 1,764-க்கு அதிகரித்தது. இக்காலவரையில், வருடாந்தர விற்பனைகள் ரூ. 36 இலட்சத்திலிருந்து ரூ. 23 கோடிக்கு உயர்ந்தன. இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு, சகசநிலை திரும்பியவுடன் நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகள் சிதைவுறத் தொடங்கின. 1955—56ஆம்

ஆண்டில், அவற்றின் எண்ணிக்கை 1,053-க்குக் குறைந்து, வருடாந்தர நடவடிக்கைகளும் ரூ. 7 கோடிக்குக் குறைவாயின. 1962 ஆம் ஆண்டில், சீன ஆக்கிரமிப்பும், 1966ஆம் ஆண்டில் ரூபாயின் மதிப்புக் குறைப்பும், அத்தியாவசியப் பண்டங்களின் விலைவாசியை ஏறச்செய்து, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் புதிய வேகத்தைத் தந்தன. 1967ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், 1,712 பிரதமப் பண்டசாலைக ளிருந்தன. அவற்றின் விற்பனைகள் 1966–67ஆம் ஆண்டின்போது, ரூ. 31 கோடிக்கு இருந்தன. இந்தக் காலவரையில்தான், மொத்த விற்பனைப் பண்டசாலைகள், சென்னை மாநில நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்புப் போன்ற மைய நிறுவனங்கள் அமைக்கப்பட்டன (1966).

**6. தமிழ்நாட்டில் தற்போதைய நிலைமை:** 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், ஒரு மாநில மட்டத்து மொத்த விற்பனைப் பண்டசாலையும் (தமிழ்நாடு மாநில நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்பு), 30 மொத்த விற்பனைப் பண்டசாலைகளும், 1,592 பிரதமப் பண்டசாலைகளு மிருந்தன. தமிழ்நாடு மாநில நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்பு, 32 நுகர்வோர் பண்டசாலைகளை மட்டும் உறுப்பினராகக் கொண்டிருந்தது. இதரச் சங்கங்கள் அல்லது நபர்கள் யாவரும் அதில் உறுப்பினராக இல்லை. அதன் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ.10.20 இலட்சமாக இருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.6.61 இலட்சமும், நுகர்வோர் பண்டசாலைகளிலிருந்து ரூ.4.20 இலட்சமும் அடங்கி யிருந்தன. அதன் நடைமுறை மூலதனம் ரூ.26.15 இலட்சமாக இருந்தது. 1970–71ஆம் ஆண்டிறுதியில், அதன் கடன்பெற்ற முதலில் நிலுவைத் தொகை ரூ.9.84 இலட்சமாக விருந்தது. அதன் கடன்பெற்ற முதல், மைய நிதியமைப்புகளிலிருந்து மட்டுமே பெறப்பட்டன. 1970–71ஆம் ஆண்டின் போது, அதன் மொத்த விற்பனைகள் ரூ.88.17 இலட்சமாக இருந்தன. எனினும், அது, அவ் வாண்டின்போது, ரூ.7,000/- நட்டத்தில் இயங்கிற்று.

தமிழ்நாட்டிலுள்ள 36 மொத்த விற்பனைப் பண்டசாலைகள் தங்கள் 716 கிளைகளுடன் 2,22,059 உறுப்பினர்களைப் பெற்றிருந்தன. அவர்களுள் 1,095 நுகர்வோர் பண்டசாலைகளும், 4,829 இதரக் கூட்டுறவுச் சங்கங்களும் நிறுவனங்களும் 2,16,083 தனி நபர்களும் அடங்கியிருந்தனர். அவற்றின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ.164.64 இலட்சமாக இருந்தது. அதில் அரசிடமிருந்து ரூ.87.45 இலட்சமும், நுகர்வோர் பண்டசாலைகளிலிருந்து ரூ.15.85 இலட்சமும், இதரக் கூட்டுறவுச் சங்கங்கள், நிறு

வனங்களிடமிருந்து ரூ.38.25 இலட்சமும், தனி நபர்களிடமிருந்து ரூ.31.09 இலட்சமும் அடங்கியிருந்தன. அவற்றின் நடைமுறை மூலதனம் ரூ. 2,087.22 இலட்சமளவிற்கு இருந்தது. அவற்றின் கடன் பெற்ற முதல் ரூ.453.97 இலட்சமளவிற்கு இருந்தது. அதில் ரூ.332.83 இலட்சம் மைய நிதியமைப்புகளுக்கும், ரூ.3.95 இலட்சம் வாணிக வங்கிகளுக்கும், ரூ.96.75 அரசுக்கும் கொடுக்க வேண்டியிருந்தன. அவ் வாண்டின்போது அவற்றின் விற்பனைகள் ரூ.2,931.95 இலட்சமளவிற்கு இருந்தன. 8 மொத்த விற்பனைப் பண்டசாலைகள் இலாபத்திலும், 21 நட்டத்திலும், 1 இலாப, நட்ட மில்லாமலும் இயங்கின.

1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் தமிழ்நாட்டில் 1,592 பிரதமப் பண்டசாலைக ளிருந்தன. அவற்றுள் 108 சங்கங்கள் செயலற்றுக் கிடந்தன. பிரதமப் பண்டசாலைகள் 324 கிளைகளைப் பெற்றிருந்தன. அவற்றின் உறுப்பினர் எண்ணிக்கை 6,28,690 ஆக இருந்தது. அதில் 8 நுகர்வோர் பண்டசாலைகளும், 962 இதரக் கூட்டுறவுச் சங்கங்களும் நிறுவனங்களும், 6,27,720 தனிநபர்களும் அடங்கியிருந்தனர். அவற்றின் பங்கு மூலதனம் ரூ.143.36 இலட்சமளவிற்கு இருந்தது. அதில் அரசிடமிருந்து 24.85 இலட்சமும், தனிநபர்களிடமிருந்து ரூ.116.19இலட்சமும், இதரக் கூட்டுறவுச் சங்கங்கள், நிறுவனங்களிடமிருந்து, ரூ.2.32 இலட்சமும் அடங்கியிருந்தன. அவற்றின் நடைமுறை மூலதனம் ரூ.999.07 இலட்சமளவிற்கு இருந்தது. அவற்றின் கடன் பெற்ற முதல், 1970—71ஆம் ஆண்டிறுதியில் ரூ.97.52 இலட்சமாக இருந்தது. அதில் ரூ.63.33 இலட்சம் மைய நிதியமைப்புகளுக்கும், ரூ.1.99 இலட்சம் வாணிக வங்கிகளுக்கும்,ரூ.3.45 இலட்சம் அரசுக்கும், ரூ.28.75 இலட்சம் மற்றவர்களுக்கும் கொடுக்க வேண்டி யிருந்தன. 1970—71ஆம் ஆண்டின்போது, அவற்றின் மொத்த விற்பனைகள் ரூ. 2,921.24 இலட்சமளவிற்கு இருந்தன. அவ் வாண்டின்போது, 641 பண்டசாலைகள் இலாபத்திலும், 835 நட்டத்திலும், 116 இலாப நட்டமில்லாமலும் இயங்கின.

பிரதமப் பண்டசாலைகளிடையே, 20 மகளிர் கூட்டுறவுப் பண்டசாலைகளாக இருந்தன. அவை 6,483 உறுப்பினர்களைப் பெற்றிருந்தன. 1971—72ஆம் ஆண்டின்போது, அவற்றின் விற்பனை ரூ.69.19 இலட்சமளவிற்கு இருந்தன. மற்றும், 443 பள்ளி, கல்லூரி மாணவர்கள் பண்டசாலைக ளிருந்தன. அவை 82,021 உறுப்பினர்களைப் பெற்றிருந்தன. அவற்றால் விற்பனை செய்யப் பட்ட புத்தகங்கள், எழுதுபொருள்களின் மதிப்பு ரூ.52.72இலட்ச மளவிற்கு இருந்தது. மாணவர்கள் பண்டசாலைகள், ஒரு கூட்

டுறவுப் பண்டசாலையின் செயற்பாட்டையும், அதன் நன்மைகளையும் மாணவர்களுக்குச் செயல்விளக்கம் செய்வதற்குங்கூட உத்தேசிக்கப்பட்டுள்ளன.

126 நுகர்வோர் கூட்டுறவுப் பண்டசாலைகள் தொழில் துறைத் தொழிலாளர்களுக்காகவும், தோட்டத் தொழிலாளர்களுக்காகவும், 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில் இயங்கின. அவை 1,72,113 உறுப்பினர்களையும், ரூ.46.75 இலட்சம் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தையும் பெற்றிருந்தன.

1971—72ஆம் ஆண்டிறுதியில் 13 துறைப் பண்டசாலைகள் (சிறப்பங்காடிகள்) இருந்தன. இக் கூட்டுறவுச் சிறப்பங்காடிகள், மாவட்டக் கூட்டுறவு வழங்குதல் விற்பனைச் சங்கங்கள் அல்லது மொத்த விற்பனைப் பண்டசாலைகளின் பகுதிகளாக இருந்தன. அவ் வாண்டு இறுதிவரை கூட்டுறவுச் சிறப்பங்காடிகளில் பங்கு மூலதனமாக ரூ. 46 இலட்சத்தை அரசு முதலீடு செய்திருந்தது. 1971—72ஆம் ஆண்டின்போது, சிறப்பங்காடிகளால் செய்யப்பட்ட விற்பனைகள் ரூ.1,158.13 இலட்சமளவிற்கு இருந்தன. 13 சிறப்பங்காடிகளுள் 8 அங்காடிகள் ரூ.5.86 இலட்சம் இலாபத்திலும், எஞ்சியவை ரூ. 18.41 இலட்சம் நட்டத்திலும் வேலை செய்தன. பெரிய சிறப்பங்காடிகளன்றியும், சிறிய சிறப்பங்காடிகளுங்கூட (Mini Super-Markets) முக்கியத் தாலுக்கா மையங்களிலும், நகரப் பகுதிகளிலும் அமைக்கப்பட்டன. இவற்றின் நோக்கம், உறுப்பினர்களுக்கு ஒரே கூரையின்கீழ் எல்லா அத்தியாவசியப் பொருள்களையும் நியாயமான விலைகளில் வழங்குதலாகும். அவை மொத்த விற்பனைப் பண்டசாலைகளாலாவது அல்லது நன்கு இயங்கும் பிரதமப் பண்டசாலைகளாலாவது நடத்தப்படுகின்றன. 30-6-72 ஆம் நாளன்று 30 சிறிய சிறப்பங்காடிகளிருந்தன. தமிழ்நாட்டில் சிந்தாமணி கூட்டுறவுச் சிறப்பங்காடி இந்தியாவின் முதல் எண் சிறப்பங்காடியாகப் பாராட்டப்பட்டுள்ளது. அண்மையில் அது தன் நடவடிக்கைகளைச் சென்னை மாநகரத்திற்கு நீட்டித்துள்ளது. அது நகர நுகர்வோர்களுக்குத் தரமான பொருள்களை நியாய விலைக்கு வழங்கப் பெரிதும் முயற்சி செய்கின்றது.

தமிழ்நாடு நுகர்வோர் கூட்டுறவுக் கூட்டமைப்பு 1966ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. மாநிலத்திலுள்ள மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கான ஒரு தலைமை நிறுவனமாக, அவற்றின் செயற்பாட்டை ஒருமைப்படுத்தி, அத்தியாவசியப் பொருள்களைத் தயாரிப்பவர்களிடமிருந்து அல்லது உற்பத்திக் கிடங்குகளிலிருந்து கொள்முதல் செய்து வழங்குவதில் அவற்றிற்கு உதவிபுரியும் நோக்கத்துடன் அது தொடங்கப்பட்டது. 12 மாவட்டக் கூட்டுறவு

வழங்குதல் விற்பனைச் சங்கங்களுட்பட எல்லா 30 மொத்த விற்பனைப்பண்டசாலைகளும் அதன்உறுப்பினர்களாகஇருக்கின்றன. 30–6–72ஆம் நாளன்று அதன் செலுத்தப்பட்ட பங்குமூலதனம் ரூ.1,103.0 இலட்சமாக இருந்தது. அதில் பங்கு மூலதனமாக அரசு ரூ. 4.5 இலட்சத்தை முதலீடு செய்துள்ளது. கூட்டுறவுப் பதிவாளரைத் தலைவராகக் கொண்ட அதன் இயக்குநர் குழு அனைத்தும் அரசால் நியமிக்கப்பட்டுள்ளது. மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கு இந்திய அரசால் ஏற்பாடு செய்யப்பட்டபடி, தயாரிப்பாளர்களிடமிருந்து அத்தியாவசியப் பொருள்களின் வழங்குதலை ஒருமைப்படுத்துத லன்றியும், மாநிலக் கூட்டமைப்பு, கோதுமை, பருத்தி வகைகள் முதலியவற்றை இதர மாநிலங்களிலிருந்து கொள்முதல் செய்து வழங்குதல் செய்வதற்காகவுங்கூட ஏற்பாடு செய்கிறது. 1971–72ஆம் ஆண்டின்போது, இக் கூட்டமைப்பு, பறிமுதல் செய்யப்பட்ட பொருள்களையும், துணி வகைகளையும், மளிகைச் சரக்குகளையும், மருந்து வகைகளையும், இதர நுகர்வோர் பொருள்களையும் ரூ.82.26 இலட்ச மதிப்பிற்குக் கொள்முதல் செய்து ரூ. 83.91 இலட்சமளவிற்கு விற்பனை செய்தது.

நுகர்வோர் இயக்கம் பெரும்பாலும் தமிழ்நாட்டில் ஒரு நிலையான முன்னேற்றமடைந்து கொண்டுள்ளது. 1973–74 ஆம் ஆண்டின்போது, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் மொத்த விற்பனைப் புரள்வு ரூ.67.98 கோடியைத் தீண்டிற்று. இதற்கு முன் ஆண்டில், அது ரூ.55.621 கோடியாகவிருந்தது. இது, சில்லறை வர்த்தகத்தின் 14 சதவீதமாக இருந்தது. இச் சங்கங்களால் மக்கள்தொகையில் 31 சதவீதம் பயனடைந்தனர். நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் விற்பனைப் புரள்வு 5ஆவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தின் இறுதியில், ரூ.80 கோடிக்கு உயருமென்று எதிர்பார்க்கப்படுகிறது.

## 7. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் செயற்பாட்டின் முக்கியக் கூறுகள்

**(i) அமைப்பு வகை** (Organisational Pattern): ஒரு பிரதமப் பண்டசாலை கூடுமானவரை பெரியதாக இருக்க வேண்டும். ஒரு பெரிய அளவுப் பண்டசாலை, நுகர்வோர்களுக்காகப் பற்பல சேவைகளை மேற்கொள்வதற்கு ஒரு மேலான நிலைமையிலிருக்கும். நன்கு பயிற்சியுற்று, நல்ல ஊதியம் பெறுகின்ற சிப்பந்திகளை அது அமர்த்தக்கூடும்; மிக அதிகமான வாணிகத்தை அது பெற முடியும்; அதனால் மேற்செலவும் குறைவாகிறது. ஒரு நுகர்வோர் பண்டசாலையானது, தன்னிறைவு பெறுவதற்குச் சுமார்

ரூ.10 இலட்சமளவிற்கு வருடாந்தர விற்பனைகளைப் பெற்றிருக்க வேண்டுமென்று கருதப்படுகிறது. பிரதமப் பண்டசாலைகளுக்கு மேலே மொத்த விற்பனைப் பண்டசாலைகளும், மாநிலக் கூட்டமைப்புகளும், தேசியக் கூட்டமைப்புகளும் உள்ளன. இவ்வமைப்பு, சமஷ்டி என்று கூறப்படலா மென்றாலும், மொத்த விற்பனைப் பண்டசாலைகள் சில்லறை வாணிகத்தையுங்கூட நடத்துகின்றன. ஒருபடித்தான யாதொரு சூத்திரத்தை நிருணயிக்க முடியாவிட்டாலும், பல்வேறு பகுதிகளின் நடவடிக்கைகளை ஒருங்கிணைத்தல் அவசியமாகும்.

**(ii) நிர்வாகம்:** ஒரு பிரதம நுகர்வோர் பண்டசாலை, தன் அலுவலெல்லையில் வசிக்கின்ற—ஒப்பந்தம் செய்வதற்குத் தகுதி படைத்த—தனிநபர்களையும், மற்றும், அங்கீகரிக்கப்பட்ட நிறுவனங்களையும் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொள்கிறது. உறுப்பினர்களால் தெரிந்தெடுக்கப்பட்ட இயக்குநர் குழுவின் வசம் பண்டசாலையின் நிருவாகம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. ஓர் இயக்குநராகத் தெரிந்தெடுக்கப்படுவதற்கு, ஓர் உறுப்பினர், தேர்தலுக்கு முந்திய கூட்டுறவாண்டின்போது ஒரு குறைந்த பட்ச மதிப்புள்ள பொருள்களைப் பண்டசாலையிலிருந்து கொள்முதல் செய்திருக்கவேண்டும். கொள்முதல் நடவடிக்கையையும், விலை நிருணயிப்பையுங் கவனிப்பதற்காகத் தங்களிடையே, பொதுவாக ஒரு கொள்முதல் குழு இயக்குநர்களால் அமைக்கப்படுகிறது. அக் குழு உயர்மட்டத்து நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்தும், தனியார் வர்த்தகர்களிடமிருந்தும் கொள்முதல் செய்கின்றது.

**(iii) விசுவாசம்:** ஒரு பண்டசாலையின் வெற்றிகரமான செயற்பாட்டிற்கு ஒரு முக்கியமான தேவையானது, உறுப்பினர்கள்பால் விசுவாசமாகும். உறுப்பினர்களிடையே கூட்டுறவுக் கல்வியைப் பரப்புவதன் மூலம் நல்ல பலன் பெற முடியுமென்றாலும், இதர வழிகளாலுங்கூட உறுப்பினர்களின் விசுவாசம் நிச்சயப்படுத்த வேண்டியிருக்கிறது. அவற்றுள் ஒன்று, கொள்முதல்களின்மீது தள்ளுபடி அளித்தலாகும் (Rebate). மற்றும், பண்டசாலையால் வழங்கப்பட்ட பொருள்களின் தரம் சுத்தமாகவும், புதியதாகவும் இருக்க வேண்டும். சரியான நிறைகளும் அளவுகளும், சரியான தராசும் உபயோகிக்கப்பட்டு, அவை எந்த உறுப்பினராலும் ஆய்வுக்குட்பட வேண்டும்.

**(iv) விற்பனை முறைகள்:** கூட்டுறவுப் பண்டசாலைகளில் செய்யப்படும் விற்பனை (இராக்டேல் முறை என்று வழங்கப்

படும்) பொதுவாகப் பின்வரும் மூன்று பிரதான அம்சங்களைக் கொண்டது.

(அ) நடப்பு அல்லது அங்காடி விலையில் விற்பனை

(ஆ) ரொக்கத்திற்காக விற்பனை

(இ) உறுப்பினர்களுக்கு விற்பனை

**(அ) நடப்பு விலையில் விற்பனை:-** நிலவுகின்ற விலையில், அதாவது, நடப்பு விலையில் விற்பனை செய்தல் சில நன்மைகளுக்காகப் பின்பற்றப்படுகிறது. அவையாவன: (அ) பண்டசாலைகளுக்கும் தனியார் வர்த்தகர்களுக்குமிடையே போட்டி ஏற்படுத்தப்பட்டு வர்த்தகர்கள் கோபமூட்டப்படாமல் இருக்கக் கூடும்; (ஆ) ஏனையவர்களுக்காகப் பொருள்களைக் கொள்முதல் செய்து தாங்கள் இலாபமடைவதற்கு உறுப்பினர்கள் மயக்கப்படாமலிருக்கக்கூடும்; (இ) ஓர் உபரி அமைக்கப்படக்கூடும்; (ஈ) கொள்முதல்கள் காரணத்தால் அடைந்த நட்டங்கள் வேறு சில கொள்முதல்களில் அடைந்த இலாபத்தின் மூலம் சரிப்படுத்தப் படக்கூடும்; (உ) பண்டசாலை ஆகமொத்தமான ஓர் இலாபத்தில் இயங்குகிறதா என்பதைத் தீர்மானித்துப் பண்டசாலையினால் ஈட்டப்பட்ட மொத்த இலாபங்களை மதிப்பீடு செய்வதற்குச் சாத்தியப்படக்கூடும். அடக்கவிலைக்கு விற்பனை செய்தல் (Selling at cost) என்ற முறை பின்பற்றப்பட்டால், பண்டசாலைக்கு ஓர் உபரியும் இராது. மற்றும், மூலதன அமைப்புக் கவனிக்கப்படாமல் பண்டசாலை எப்பொழுதுமே ஒரு வலுவற்ற பகுதியாக இருக்கும். அதே சமயத்தில், அங்காடி விலை அல்லது நடப்பு விலை பின்பற்றப்பட்டால், அது பொது விலைவாசி மட்டத்தைக் குறைப்பதற்கு உதவி புரியாது. எனவே, பண்டசாலைகள் 'நடைமுறை விலைவாசிக் கொள்கை'யைப் (Active Price Policy) பின்பற்றலாமென்று யோசனை கூறப்படுகிறது. இதன்படி, அடக்கவிலையுடன் ஒரு சிறு இலாபம் சேர்க்கப்பட்ட அடிப்படையின் பேரில் விலைகள் நிருணயிக்கப்படுகின்றன. சாதாரணமாக, இவ்வாறு நிருணயிக்கப்பட்ட விலை அங்காடி விலைக்கு மேற்படக்கூடாது. அடக்க விலைகளைக் குறைத்து அங்காடி விலையைவிடச் சிறிது குறைவாக விலைகளை நிருணயிப்பதற்கு முயற்சிகள் எடுக்கப்பட வேண்டும். அத்தகைய ஒரு கொள்கை விலைவாசியை உயராமல் நிறுத்தி வைக்கப் பண்டசாலைகளுக்குதவும். தேய்மானத்திற்காகவும், நிதிகளைப் பலப்படுத்துவதற்காகவும் உபயோகப்படுத்தப்படக் கூடிய ஓர் உபரியுங்கூடப் பண்டசாலைக்கு மிச்சப்படும். அதற்கு மேலும் ஏற்பட்ட மிச்சம் உறுப்பினர்களுக்கு, அவர்களால்

செய்யப்பட்ட கொள்முதல்கள் விகிதத்தில் தள்ளுபடி செலுத்தப் படலாம்.

**(ஆ) ரொக்கத்திற்காக விற்பனை:** அங்கீகரிக்கப்பட்ட நிறுவனங்கள் விஷயத்தில் தவிர, விற்பனைகள் கண்டிப்பாக ரொக்க அடிப்படையின் பேரில் செய்யப்பட வேண்டுமென்பது நுகர்வோர் கூட்டுறவின் ஒரு கொள்கையாகும். கடன் அடிப்படையின்பேரில் விற்பனை, நுகர்வோர்க்கு விலை ஏற்றத்தை விளைவிக்கும். ஏனென்றால், கடன் விற்பனைகளுக்குக் கணக்குகள் வைக்கப்பட வேண்டும்; கடன் பாக்கிகளை வசூலிப்பது ஒரு தொல்லை மிகுந்ததும் செலவு அடங்கியதுமான ஒரு விவகாரமாகும்; வராக்கடன்களுக்காக ஒதுக்குச் செய்யப்பட வேண்டும். கடன் பேரில் கொள்முதல்கள் செய்யப்பட்டால், கொள்முதல்கள்கூட அனுகூலமான நிபந்தனைகளின்கீழ்ச் செய்யப்பட முடியாது. மேலும், மூலதனம் கடன் விற்பனைகளில் பூட்டப்பட்டிருந்தால், பண்டசாலைகளை நடத்துவதற்குக் கூடுதல் மூலதனம் தேவைப்படும். இம் மூலதனம் வட்டிக்கு வாங்கப்பட வேண்டுமாதலால், பண்டங்களின் விலைவாசி உயர்த்தப்படும். மற்றும், உறுப்பினர் நலத்தை முன்னிட்டுக் கடன்பேரில் கொள்முதல் செய்யும் வழக்கம் சரியானதன்று. ஏனென்றால், அது அவரை வீணான செலவைச் செய்யும்படி ஊக்குவிக்கும்.

**(இ) உறுப்பினர்களுக்கு மட்டும் விற்பனை:** கூட்டுறவுப் பண்டசாலையின் முதன்மையான நோக்கம், தன் உறுப்பினர்களுடைய தேவைகளுக்காக விநியோகம் செய்தலாதலால், சாதாரணமாக ஒரு விதி ரீதியாக, விற்பனை, உறுப்பினர்களுக்குச் செய்யப்பட வேண்டும். இல்லாவிடில், உறுப்பினரல்லாதவர்களான வர்த்தகர்கள் பண்டசாலையில் ஒரு நியாயவிலைக்கு விற்கப்படுகின்ற பொருள்களைக் கொள்முதல் செய்து அவற்றை மறுவிற்பனை செய்யவுங்கூட முயற்சிக்கலாம். மற்றும், ஒரு பண்டசாலை உறுப்பினரல்லாதவர்களுக்குக்கூட விற்பனை செய்தால் அது ஒரு வாணிக உணர்ச்சி வளர்ச்சிக்கு வழிசெலுத்தி, பண்டசாலையை வர்த்தகராக மாற்றிவிடலாம். ஆனால், சில சந்தர்ப்பங்களில், உறுப்பினரல்லாதவர்களுக்கு விற்பனை செய்தல் அவசியமாக இருக்கலாம். அவர்களை உறுப்பினர்களாக்குவதற்குத் தாற்காலிகமான ஒரு காலவரைக்காகவாவது உறுப்பினரல்லாதவர்களுக்கு விற்பனைசெய்வது அவசியப்படலாம். மற்றும், பண்டசாலை, அரசால் கட்டுப் படுத்தப்பட்ட பொருள்களின் விநியோக வேலை ஒப்படைக்கப் படுகின்றபோது, மக்களிடையே அத்தகைய பொருள்களின் நேர்மையான விநியோகத்தை நிச்சயப்படுத்தும் பொருட்டு, உறுப்

பினரல்லாதவருக்குங்கூட விற்பனை செய்வதற்கு அவசியம் ஏற்படலாம். சென்னைக் கூட்டுறவுச் சங்கங்களின் விதிகளின் 49ஆவது விதியின்படி, கூட்டுறவுப் பதிவாளரின் முன்னனுமதியுடன் உறுப்பினரல்லாதவர்களுக்கும் விற்பனை செய்யப்படலாம். அத்தகைய அனுமதி தேவையெழும்போதெல்லாம் அளிக்கப்படுகிறது.

(v) **கொள்முதலின்மீது போனசு வழங்குதல்:** இது, கூட்டுறவு நுகர்வோர் நிறுவனச் செயற்பாட்டின், மிக முக்கியக் கொள்கையாகும். உண்மையாகவே இராக்டேல் பயனீயர்சுகளின் ஓர் அடிப்படைக் கொள்கை 'கொள்முதலின்மீது இலாப ஈவு' (Dividend on Purchases) அல்லது 'கொள்முதலின்மீது போனசு' (Bonus on Purchases) என்ற முறையாகும். சட்டப்படியான காப்பு நிதிக்கும், சட்டத்தால் கோரப்பட்ட இதர இனங்களுக்கும், ஒதுக்கீடு செய்த பிறகு இலாபம் எல்லா உறுப்பினர்களிடையே அவர்களால் நபர்களாகச் செய்யப்பட்ட கொள்முதலின் தொகையின் வீதத்தில் பகிர்வு செய்யப்படுகின்றன. இம் முறையானது ஒவ்வோர் உறுப்பினருக்கும், பண்டசாலையினிடம் அவருடைய விசுவாச விகிதப்படி ஒரு வெகுமதியை அளிக்கிறது. பண்டசாலையின் அல்லது யாதொரு வாணிகத் துணிவின் வெற்றியானது அதன் பங்கு மூலதனத்தைவிட மேலாக வாடிக்கையாளர்கள்மீது சார்ந்திருக்கிறது. ஆகையால், பண்டசாலையின் இலாபம் அதன் வெற்றியைத் தங்கள் விசுவாசத்தின் மூலம் நிச்சயப்படுத்துகின்றவர்களுக்குப் போக வேண்டியது நியாயமானதும், சரியானதுமான ஒன்று. பண்டசாலைகளின் இலாபங்களில் ஒரு பகுதி காப்பு நிதிக்காகவும், கல்வி, பிரசாரம் ஆகிய காரியங்களுக்காகவும் ஒதுக்கப்படுகிறது.

(vi) **விற்பனைத் திறம்** (Sales Manship) : பணித்திறத்தை மேம்படுத்துவதன் முக்கியத்துவமும், அதன் மூலம் நுகர்வோர்களுக்கும் நிறுவனத்திற்குமிடையே வாணிகத் தொடர்புகளை மேம்படுத்துவதன் முக்கியத்துவமும் வற்புறுத்தப்பட வேண்டுவதில்லை. விற்பனையாளர் வாடிக்கையாளர்களிடத்தில் மிகவும் மரியாதையாகவும், உதவியாகவும் இருக்க வேண்டும். பண்டசாலைக்காக நல்லெண்ணத்தையும், புகழையும் ஏற்படுத்துவதற்கு அவர் பெரிதும் தொண்டாற்றலாம். வாடிக்கையாளர்களிடத்தில் ஒரு விற்பனையாளரின் நன்னடத்தையும், மரியாதையான பணியும் விற்பனைகளை மேம்படுத்துவதற்கு நேரடியாக உதவி, அவர்களின் விசுவாசத்தைப் பெறவுங்கூட உதவுகிறது.

(vii) **கொள்முதல் செய்தல்:** நுகர்வோர் பண்டசாலைகள் முடிந்தவரை தங்கள் தேவைகளை மொத்த விற்பனைப் பண்ட

சாலைகளிலிருந்து கொள்முதல் செய்யவேண்டும். மொத்த விற்பனைப் பண்டசாலை, தனக்கு இணைக்கப்பட்ட பிரதமச் சங்கங்களின் உறுப்பினர்களுடைய தேவைகளைக் கருத்தில் வைத்து, தன் கொள்முதல் கொள்கையை வகுக்க வேண்டும். அவை உற்பத்தி மையங்களிலிருந்து மொத்தமான கொள்முதல்களைச் செய்தும், மொத்த விற்பனைப் பதிலாண்மைகளைப்பெறுவதற்கும் முயற்சிக்க வேண்டும். இந்தியாவில் பல்வேறு நிலையான வாணிக நிறுவனங்கள் தங்கள் உற்பத்திப் பொருள்களைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு வழங்குவதற்கு இசைந்துள்ளன. நெசவாலைகள் தங்கள் உற்பத்தியில் ஒரு சில பகுதியை நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்காக ஒதுக்கி வைத்துள்ளன. கம்பளித் துணிவகைகள், பின்னல் கம்பளி ஆகியவைகளின் வீதப்பங்கு ஒன்று கொடுக்கப்பட்டுள்ளது. காஃபி வாரியமும், முக்கியமான தேயிலை உற்பத்தியாளர்களும், பண்டசாலைகளால் செய்யப்பட்ட தங்கள் பொருள்களின் கொள்முதல்கள் மீது கழிவைக் (Discount) கொடுப்பதற்கு இசைந்துள்ளனர். பொதுமக்களுக்கு விற்பனை செய்யப்படுவதற்காக மைய வருவாய் வாரியம் பண்டசாலைகளுக்குப் பறிமுதல் செய்யப்பட்ட பொருள்களை வழங்குகின்றது. அத்தியாவசியப் பொருள்களின் விநியோகத்திற்காக, நியாயவிலைக் கடைகளாகப் பண்டசாலைகள் அங்கீகரிக்கப்பட்டுள்ளன. நுகர்பொருள்களுக்கான இறக்குமதி உரிமங்கள் மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கு அளிக்கப்படுகின்றன. அரசு வர்த்தகக் கழகத்தால் இறக்குமதி செய்யப்பட்ட பற்பல பொருள்களுங்கூட இப் பண்டசாலைகளுக்காக ஒதுக்கப்படுகின்றன.

**8. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதற்கான திட்டங்கள்:** 1962ஆம் ஆண்டு அக்டோபரில், இந்திய அரசு, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சியைத் துரிதப்படுத்துவதற்காகப் பல திட்டங்களை ஆதரவு செய்தது. இத் திட்டங்கள் பல்வேறு வகுப்பு மக்களுக்குச் சேவை செய்வதற்காகத் தயாரிக்கப்பட்டன. இத் திட்டங்களின் ஒரு சுருக்கம், கீழே தரப்பட்டுள்ளது:

**(i) நகர்ப் புறங்களில் பொதுமக்களுக்கான திட்டங்கள்:** அத்தியாவசியப் பொருள்களின் விலைவாசிகளை நிலைப்படுத்தும் நோக்கத்துடன், 50,000-க்கு மேற்பட்ட மக்கள்தொகையைக் கொண்ட பட்டணங்களில், மையப் பண்டசாலைகள், பிரதமப் பண்டசாலைகள் சங்கிலித் தொடராக அமைக்கப்படுவதை அத் திட்டம் எதிர்நோக்கியது. அத் திட்டத்தின்கீழ், மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கும், அவற்றின் கிளைகளுக்கும்,

பிரதமப் பண்டசாலைகளுக்கும், பங்கு மூலதன உதவித்தொகை, நடைமுறை முதற்கடன், டிரக்கு வண்டிகளுக்காகவும் கிடங்குகளுக்காகவும், கடனும் மானியமும், மேலாண்மைச்சிப்பந்திச் செலவுகளுக்காக மானியமும் ஆகியவை வாயிலாகத் தாராளமான நிதியுதவி யளிக்கப்பட்டது. மொத்த விற்பனைச் சங்கங்களுக்கான நிதியுதவிப் பாணியானது சரிசம அடிப்படையில் ரூ. 1 இலட்சத்திற்குப் பங்குமூலதன உதவித்தொகை,மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மூலம் ரூ.2 இலட்சத்திற்குச் சுத்த ரொக்கக் கடனுதவி, கிடங்குகளுக்காகவும், டிரக்கு வண்டிகள், தளவாடங்கள் வாங்குவதற்காகவும், ரூ.1. இலட்சமளவிற்குக் கடனும் மானியமும் (25 சதவீதம் மானியமும், 75 சதவீதம் கடனும்) மேலாண்மைச் சிப்பந்திச் செலவுகளுக்காகவும் வாடகைக்காகவும், மூன்றிலிருந்து ஐந்தாண்டு காலவரைக்குப் பரப்பப்பட்ட ரூ.10,000 அளவுக்கு மானியமும் ஆகியவையாகும். பிரதமப் பண்டசாலைகளுக்கான நிதியுதவிப் பாணியானது, சரிசம அடிப்படையில் ரூ.2,500 பங்கு மூலதன உதவித்தொகை, மேலாண்மைச் சிப்பந்திச் செலவுகளுக்காகவும் வாடகைக்காகவும், ரூ. 2,000 அளவிற்கு மூன்றிலிருந்து ஐந்தாண்டுகள் காலவரைக்குப் பரப்பப்பட்ட மானியமாக இருந்தது. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அவசியமான நிதியுதவி வழங்குவதற்கும், நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகத்திற்காகவும், மேற்பார்வைக்காகவும் அரசு உயர்நிலைச் சிப்பந்திகளை அமர்த்துவதற்காகவுங்கூட, வசதி செய்யும் பொருட்டு இந்திய அரசால் நிதிகள் மாநில அரசுகளுக்கு வழங்கப்பட்டன.

**வேகவளர்ச்சிச் செயல்திட்டம்** (Accelerated Programme):- 1966ஆம் ஆண்டில், இந்தியஅரசால் தொடங்கப்பட்ட இச் செயல் திட்டத்தின்கீழ், ஏற்கெனவே அமைக்கப்பட்ட நுகர்வோர்பண்டசாலைகளின் சங்கிலித் தொடரைப் பலப்படுத்தி, நியாயவிலைகளில் அத்தியாவசியப் பொருள்களின் நேர்மையான விநியோகத்தை நிச்சயப்படுத்துவதற்காக, அவற்றைப் பயனுறுதியானவையானதும், நிரந்தரமானவையானதுமான கருவிகளாகச் செய்தல், நோக்கமாக இருந்தது. இச் செயல்திட்டத்தின் ஒரு முக்கியமான அம்சமானது, இரண்டு இலட்சத்திற்கும், அதற்கு மேலாகவுமுள்ள ஒரு மக்கள்தொகையைக் கொண்ட பட்டணங்களில் பலபிரிவுப் பண்டசாலைகளை (சிறப்பு அங்காடிகளை – Departmental Stores) அமைத்தலாகும். ஒரு பலபிரிவுப் பண்டசாலையானது, ஒரே கூரையின்கீழ்ப் பெரிதும் பல்வேறுபட்ட நுகர்பொருள்களை வழங்க வேண்டியுள்ளது.

தயாரிப்பாளர்களிடமிருந்து விநியோக முதற்கட்டத்திலேயே கிடைக்கின்ற அத்தியாவசியப் பொருள்களைக் கொண்டும், இதரப் பொருள்களின் பெரிய விற்பனைப் புரள்வைக் கொண்டும், அது நடப்பு விலைக்குச் சிறிது குறைவாக விற்பனை விலைகளை நிரு ணயித்து அதன் வாயிலாக விலைவாசி மட்டத்தை இறக்கி வைக்க வேண்டும். இத் திட்டத்தின்கீழ், சிறப்பங்காடிகள், நடப்பு அல்லது புதிய மொத்த விற்பனைப் பண்டசாலைகளால் தங்கள் கிளைகளாக நிறுவப்பட வேண்டியிருக்கின்றன. ஒரு மாநகரத்தி லுள்ள ஒரு சிறப்பங்காடிக்காக ரூ.10 இலட்சமளவிற்குப் பங்கு மூல தன உதவித்தொகையும், மேசை, நாற்காலி வகைகளுக்காகவும், பொருத்தப்பட்ட சாமான்களுக்காகவும் ரூ.7 இலட்சமளவிற்குக் கடனும் மானியமும் (75 சதவீதம் கடனாகவும், 25 சதவீதம் மானியமாகவும்) கொடுக்கப்படுகின்றன. 2-லிருந்து 5 இலட்சம் மக்கள்தொகையைக் கொண்ட பட்டணங்களில், ரூ.3 இலட்ச மளவிற்குப் பங்குமூலதன உதவித்தொகையும், மேசை நாற்காலி வகைகளுக்காகவும், பொருத்தப்பட்ட சாமான்களுக்காகவும் ரூ.2 இலட்சமளவிற்குக் கடனும் மானியமும் அளிக்கப்படுகின்றன. 1.5-லிருந்து 2 இலட்சம் வரை மக்கள்தொகையைக் கொண்ட ஒரு பட்டணத்திலுள்ள ஒரு சிறப்பங்காடிக்காக, (தனிச் சந் தர்ப்பங்களில், சூழ்நிலை வரம்பு மேலும் தளர்த்தப்படுகிறது.) ரூ.1.5 இலட்சமளவிற்குப் பங்கு மூலதன உதவித்தொகையும், மேசை, நாற்காலி வகைகளுக்காகவும், பொருத்தப்பட்ட சாமான் களுக்காகவும் ரூ.0.50 இலட்சமளவிற்குக் கடனும் மானியமும் வழங்கப்படுகின்றன. எல்லா நிறுவனங்களுக்கும் மேலாண்மைச் சிப்பந்தி மானியமும்கூட வழங்கப்படுகிறது.

1969ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், மத்திய அரசால் ஆதர வளிக்கப்பட்ட திட்டங்களின்கீழ், 371 மொத்த விற்பனைப் பண்ட சாலைகளும், 14,000 பிரதமப் பண்டசாலைகளும் கிளைகளும் இருந் தன. 30–6–69ஆம் நாளன்று மொத்த விற்பனைப் பண்டசாலை களின் மொத்தப் பங்கு மூலதனம் ரூ.10.78 கோடியாக இருந்தது. அது, 1965–66ஆம் ஆண்டிறுதியில் ரூ. 4 கோடியாக மட்டுமே இருந்தது. உறுப்பினர் எண்ணிக்கையுங்கூட 44 இலட்சத்திற்கு அதிகரித்து, நகர மக்கள்தொகையில் 15 சதவீதத்தைத் தழுவிற்று. 30–6–70ஆம் நாளன்று துறைப்பண்டசாலைகளின் எண்ணிக்கை 101-க்கு அதிகரித்தது. 1968–69ஆம் ஆண்டின் போது, அவற்றின் விற்பனை ரூ.30 கோடியளவிற்கு இருந்தன. கூட்டுறவுச் சங்கங்களால் கையாளப்பட்ட நுகர்வோர் வர்த்த கத்தின் பருமம் விரிவடைந்து, சில்லறை விற்பனை 1962–63ஆம்

ஆண்டில் ரூ. 40 கோடியிலிருந்து 1968—69ஆம் ஆண்டில் சுமார் ரூ. 280 கோடிக்கு அதிகரித்தது.

பலபிரிவுப் பண்டசாலைகள், பொதுவாக, சில நவீனத்தொழில் நுட்பங்களைத் தொடங்கிவைப்பதில் ஒரு தலைமையை யளித்தும், கவர்ச்சிகரமான அமைப்புப் பிரிவையும், பொருள்களை ஆடம்பர மாகப் பரப்பிக் காண்பித்தலையும் வழங்கியுள்ளன. பொருள்களை முன்னரே சிப்பங்கட்டுதல், கருர்விலைகள், செய்தி தெரிவிக்கும் சீட்டு ஒட்டுதல் (Informative Labelling) போன்ற வசதிகளையும், நுகர்வோர் உதவிச் சாதனங்களையும்கூடத் தொடங்கிவைத் துள்ளன. அவைகளில் சில, தங்கள் மளிகைச் சரக்குகள்துறையில் சுயபணியைத் தொடங்கிவைத்துள்ளன. கோவை மாவட்டத்தி லுள்ள 'சிந்தாமணி சிறப்பு அங்காடி' நகரத்தின் சுற்றுப்புறங் களில் வசிக்கின்ற உறுப்பினர்—வாடிக்கையாளர்களுக்கு, அவர்கள் ரூ.15 குறுமத்திற்குப் பொருள்களை வாங்கினுல், தன் பேருந்து களில் இலவசமான சவாரிகளை வழங்குகிறது. துறைப்பண்ட சாலைகளில் பல, சில்லறை வர்த்தகத்தின்மீதும், தங்கள் அலு வலெல்லையில் நுகர்பொருள்களின் விலைவாசி மட்டத்தின்மீதும், சில செயல்விளைவைச் செய்துள்ளன. எனினும், அவற்றில் சில நட்டமடைந்தன. கோவை மாவட்டத்திலுள்ள சிந்தாமணி துறைப்பண்டசாலை ஒரு பெரும வெற்றியை அடைந்துள்ளது. 1969—70ஆம் ஆண்டில், அது ரூ.25 இலட்சமளவுள்ள ஒரு சராசரி மாத விற்பனையைப் பெற்று, ரூ.3.57 இலட்சம் நிகர இலாபத்தை எட்டியது.

மொத்த விற்பனைப் பண்டசாலைகள் தங்கள் மாநிலங்களில், மாநில மட்டத்தில் கூட்டமைப்புகளாகவுங்கூட அமைத்துக்கொண் டிருந்தன. 1970ஆம் ஆண்டிற்குள் 14 கூட்டமைப்புகள் அமைக் கப்பட்டிருந்தன. புதுடில்லியில் தன் தலைமை அலுவலகத்தைக் கொண்ட தேசியக் கூட்டுறவு நுகர்வோர் கூட்டமைப்புங்கூட 1965ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டது.

**(i) நுகர்வோர் பண்டசாலைகளுக்கான உத்தரவாதத் திட்டம்:** மொத்த விற்பனைப் பண்டசாலைகள் போதிய நடைமுறை மூலதனத்தைப் பெறுவதற்கு வகைசெய்யும் நோக்கத்துடன், இந்திய அரசு 1966ஆம் ஆண்டில், பொருள்கள் அடைமானத்தின் மீது அவைகளுக்கு நிதியுதவுவதற்குக் கேட்டுக்கொள்ளப்பட்ட இந்திய தேசிய வங்கிக்கும் அதன் துணையமைப்புகளுக்கும், ஓர் உத்தரவாதத் திட்டத்தைத் தொடங்கிவைத்தது. இத் திட்டத்தின்

கீழ் ஒரு மொத்த விற்பனைப் பண்டசாலை, பொருள்களின் மதிப்பில் 10 சதவீத ஒரு விளிம்பைத் தன் சொந்த நிதியாதாரங்களிலிருந்து ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. இந்திய அரசின் உத்தரவாத மானது, உத்தரவாதம் அமுலுக்குக் கோரப்படுகின்ற நாளன்று, மொத்த விற்பனைப் பண்டசாலையால் கொடுக்கப்பட வேண்டிய முன்பணங்களின் 25 சதவீதமளவுக்கு இருக்கும். இத் திட்டம் தேசிய நுகர்வோர் கூட்டமைப்பிற்கும், மாநிலக் கூட்டமைப்பு களுக்கும்கூட நீடிக்கப்பட்டுள்ளது. 31–3–1971ஆம் நாளன்று 140 சங்கங்களுக்கு ரூ. 1,539.78 இலட்சம் தொகைக்காக உத்தரவாதம் வழங்கப்பட்டிருந்தது. இத் திட்டம் பிரதமப் பண்டசாலைகளைத் தழுவவில்லை. மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மொத்த விற்பனைப் பண்டசாலைகளுக்கு அவைகளின் வாணிக நடவடிக்கைகளுக்காக ஏற்கெனவே கடனளித்துள்ள சந்தர்ப்பங் களில், இத் திட்டத்தின்கீழ், இந்திய தேசிய வங்கியிடமிருந்து அந் நிதிச் செலவு ஈடு செய்தல்களைப் பெறுவதற்கு அவை அனுமதிக்கப்பட்டுள்ளன.

பொருள் பட்டியல்கள்மீது (Inventories) ஏற்பட்ட நட்டங்களுக்கு மானியம் வழங்குவதற்கான ஒரு திட்டங்கூடத் தயாரிக்கப்பட்டது. இத் திட்டத்தின்படி அரசு தேசிய நுகர் வோர் கூட்டமைப்புக்கு அது தன் இலாபங்களில் 10 சதவீதத்தை அந் நட்டங்கள் நிதிக்கு உதவ வேண்டுமென்ற நிபந்தனையின்பேரில் அதனால் செய்யப்பட்ட மொத்தக் கொள்முதல்களில் 2 சத வீதத்தை அந் நிதிக்கு உதவித்தொகையாகக் கொடுத்தது. இப் பொருள் பட்டியல் நட்டங்கள் நிதியானது, தேசிய நுகர்வோர் கூட்டமைப்பால் செய்யப்பட்ட மொத்தக் கொள்முதல்களினால் ஓர் எதிர்கால நாளன்று எழக்கூடிய நட்டங்களைத் தள்ளுபடி செய்வதற்காகப் பயன்படுத்தப்படுவதற்கு உத்தேசிக்கப்படுகிறது. மாநிலக் கூட்டமைப்புகளுக்காக அதேமாதிரியான ஒரு திட்டம் ஆலோசனை கூறப்பட்டது. அவைகளின் விஷயத்தில் சரிசம நிதிகள் மாநில அரசுகளால் வழங்கப்பட வேண்டியிருந்தன. 1971–72ஆம் ஆண்டின்போது, தமிழ்நாடு அரசு தமிழ்நாடு நுகர்வோர் கூட் டுறவுக் கூட்டமைப்பிற்கு இது சம்பந்தமாக ரூ.0.04 இலட்சம் நிதியுதவி யளித்தது. இது விவசாயப் பொருள்களின் கொள்முதலி லும், விற்பனையிலும் விலைவாசி ஏற்ற இறக்கத்தினால் ஏற்பட்ட நட்டவச்சத்தைத் தழுவும் பொருட்டு, 'விவசாயப் பண்டங்கள் பட்டியல்' நட்ட நிதிக்கு வழங்கப்பட்டது.

பொதுமக்களுக்காகப் பிரதமப் பண்டசாலைகளன்றியும், ஊழி யர்களுக்காகவும், மாணவர்களுக்காகவும், அண்மையில் மகளி

ருக்காகவும் பிரத்தியேகமாகப் பண்டசாலைகள் அமைக்கப்பட்டுள்ளன.

**(ii) தொழில்துறைத் தொழிலாளர்களுக்கும் ஊழியர்களுக்குமான திட்டம்:** 1962ஆம் ஆண்டில், இந்திய அரசு 300 அல்லது அதற்கு மேற்பட்ட ஊழியர்களைக் கொண்ட எல்லாத் தொழிற்சாலைகளிலும் நுகர்வோர் பண்டசாலைகள்அமைக்கப்பட வேண்டுமென்று பரிவுரை செய்தது. ஊழியர்களுக்காக அமைக்கப்பட்ட பண்டசாலைகளில் பங்குமூலதனமாக உதவியளிப்பதற்காக, ஒவ்வொருவருக்கும் ரூ.30 முன்பண மளிப்பதை அனுமதிக்கும் வகையில், ஊழியர் வருங்காலச் சேமிப்புநிதித் (Employees Provident Fund) திட்டம் திருத்தப்பட்டது. தொழிற்சாலைகளின் நிர்வாகங்களுங்கூடப் பங்கு மூலதனத்திற்காக ரூ. 2,500 உதவித்தொகையையும், நடைமுறை மூலதனமாக ரூ. 10,000 உதவித்தொகையையும் வட்டியில்லாமல் அளிப்பதற்குத் தேவைப்படுகின்றன. மற்றும், வாடகையில்லாத இடவசதியும், மேசை, நாற்காலி வகைகளுக்காகவும், சிப்பந்திச் செலவுகளுக்காகவும், ரூ.1,800 மூன்றாண்டுகளுக்குப் பரப்பப்பட்ட மானியமும், தொழிற்சாலை நிருவாகங்கள் வழங்க வேண்டும். 1969ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்திற்குள், 2,760 அத்தகைய பண்டசாலைகள் அமைக்கப்பட்டிருந்தன. அவை, 300-க்கும் மேற்பட்ட தொழிலாளர்களைக் கொண்ட நிறுவனங்களில் 68 சதவீதத்தைத் தழுவியிருந்தன. அவற்றின் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ.1.30 கோடியாக விருந்தது. 1968–69ஆம் ஆண்டின் போது, அவற்றின் மொத்த விற்பனைகள் ரூ.47 கோடியளவிற்கு இருந்தன. ஓர் ஊழியர்கள் பண்டசாலையின் சிறப்பு அம்சமானது உறுப்பினர்களுக்குக் கடன்பேரில் விற்பனைகள் செய்யப்பட்டு அவற்றின் மதிப்பு அவர்களுடைய ஊதியத்திலிருந்து வேலை கொடுப்பவர்களால் வசூலிக்கப்படுவதாகும். இப் பண்டசாலைகளை, உரிமம் வழங்கப்பட்ட நியாயவிலைக் கடைகளாக மாநில அரசுகள் அங்கீகரித்துள்ளன.

**(iii) பதனப்படுத்தும் அமைப்புகள்** (Processing Units) : ஒரு சில நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள், எண்ணெய் ஆலைகளையும், மசாலைச்சாமான் அரைவை இயந்திரங்களையும், மாவு அரைவை நிலையங்களையும், காஃபி வறுத்து அரைக்கும் இயந்திரங்களையும் அமைத்துள்ளன. இக் காரியத்திற்காக, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் இந்திய அரசிடமிருந்து நிதியுதவி பெறத் தகுதி பெற்றுள்ளன. மூலதனம் ரூ.1 இலட்சத்திற்கு மேற்படாமலிருந்தால், நிலைமுதல் செலவில் 100 சதவீதமும், மூலதனச் செலவு

ரூ.1 இலட்சத்திற்கு மேற்பட்டால் அச் செலவில் 40 சதவீதம் வரையிலும், இந்திய அரசு உதவியளிக்கிறது. இப் பண்டசாலைகள் மூன்றாண்டுகளுக்கு ஒரு வழுக்கு வீதத்தில் மேலாண்மைச் சிப்பந்தி மானியத்தைப் பெறவும் தகுதி பெற்றுள்ளன. தங்கள் சொந்தப் பதனப்படுத்துதல் பகுதிகளை அமைப்பதன் மூலம், தரமான பொருள்களை நியாயவிலைகளில் வழங்குவதற்கு அவை உதவி செய்யக்கூடும்.

(iv) **இரயில்வே ஊழியர்கள் பண்டசாலைகள் :** இரயில்வே ஊழியர்களிடையே கூட்டுறவுப் பண்டசாலைகள் முதன்முதலில் 1948ஆம் ஆண்டில் அமைக்கப்பட்டன. அவ் வாண்டில், இரயில்வே வாரியம், இரயில்வே இலாகாவால் நடத்தப்பட்ட தானியக் கடைகளுக்குப் பதிலாகக் கூட்டுறவுப் பண்டசாலைகள் அமைக்கப்பட வேண்டுமென்று முடிவு செய்தது. இரயில்வே வாரியத்தால் இப் பண்டசாலைகள் சில நிதியுதவி யளிக்கப் படுகின்றன. அவையாவன : ரூ. 2,500 வரை சரிசம அடிப்படையில் பங்கு மூலதனத்தில் பங்கு கொள்ளுதலும், ரூ.10,000 வரை வட்டியுள்ள கடனும், உறுப்பினர்களின் பாக்கிகளை அவர்களுடைய சம்பளப்பட்டியல்களிலிருந்து பிடிக்கப் படுதலும் முதலியவை. 1969ஆம் ஆண்டிற்குள், 418 இரயில்வே ஊழியர்கள் நுகர்வோர்பண்டசாலைகளிருந்தன. அவை, 2,16,000 உறுப்பினர்களையும், ரூ.36,00,000 பங்கு மூலதனத்தையும், ரூ.62 இலட்சம் நடை முதல் மூலதனத்தையும், பெற்றிருந்தன. 1968–69ஆம் ஆண்டின்போது, அவை ரூ.923 இலட்சம் மதிப் புள்ள பொருள்களை விற்பனை செய்தன; ரூ.8.46 இலட்சம் நிகர இலாபத்தை ஈட்டியிருந்தன.

9. **ஒப்பிடும் வகையில், இந்தியாவில் நுகர்வோர் இயக்கத் தின் மந்தமான முன்னேற்றத்திற்குக் காரணங்கள் :** நுகர் வோர் கூட்டுறவுச் சங்கங்கள் விருப்பப்படுமளவிற்கு வளர்ச்சி யடைந்துள்ளன வென்றோ, எந்த நோக்கத்துடன் அவை அமைக்கப் பட்டு அரசால் ஆதரிக்கப்பட்டனவோ அந் நோக்கத்தைப் பாராட்டுதலுக்குரிய அளவிற்கு அவை நிறைவேற்றியுள்ளன வென்றோ கூற முடியாது. அவற்றின் நடவடிக்கைகளில் ஒரு சிறு வீழ்ச்சி உள்ளது என்பதைப் புள்ளி விவரங்கள் வெளிப்படுத்து கின்றன. மொத்த விற்பனைப் பண்டசாலைகளின் விற்பனைகள், 1969–70ஆம் ஆண்டில் ரூ.166 கோடியிலிருந்து, 1970–71ஆம் ஆண்டில் ரூ.147 கோடிக்குக் குறைந்தன.

பிரதமப் பண்டசாலைகளின் விற்பனைகளுங்கூட 1969–70 ஆம் ஆண்டில் ரூ.175 கோடியிலிருந்து, 1970–71ஆம் ஆண்டில் ரூ.145 கோடிக்கு வீழ்ச்சியடைந்தன. 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் 13,156 பிரதமப் பண்டசாலைகளுள் 4,098 அதாவது, ஏறக்குறைய 30 சதவீதப் பண்டசாலைகள் செயற்படாமலிருந்தன. 1967ஆம் ஆண்டில், 371 மொத்த விற்பனைப் பண்டசாலைகளுள் 246 இலாபத்தில் இயங்கியிருந்து, 1971-ல் 378 மொத்த விற்பனைப் பண்டசாலைகளுள் 130 மட்டுமே இலாபத்தில் இயங்கின. 1967ஆம் ஆண்டில் இலாபத் தொகை ரூ.124 இலட்சமாக இருந்து 1971ஆம் ஆண்டில் இலாபத் தொகை சுமார் ரூ. 39 இலட்சமாக இருந்தது. நட்டத்தில் இயங்கியிருந்த மொத்த விற்பனைப் பண்டசாலைகளின் எண்ணிக்கை 1966 ஆம் ஆண்டில் 43-லிருந்து 1971ஆம் ஆண்டில் 222-க்கு அதிகரித்திருந்தது. அவற்றால் அடைந்திருந்த நட்டத் தொகையும் ரூ.25 இலட்சத்திலிருந்து ரூ.189 இலட்சத்திற்கு அதிகரித்திருந்தது. பிரதமப் பண்டசாலைகளுங்கூட அதேமாதிரியான ஒரு போக்கைக் காட்டின.

நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் மேற்குறிக்கப்பட்ட நிலைமைக்குக் காரணங்கள் பின்வருமாறு:

(i) ஒரு நுகர்வோர் கூட்டுறவுச் சங்கம், ஒரு கடன் சங்கத்தைவிட, அமைப்பதற்கும் நிருவாகம் செய்வதற்கும் மிகக் கடினமாக உள்ளது. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கத்தின் நிருவாகத்திற்கு ஒரு சில அளவு வாணிகத்திறனும் அனுபவமும் தேவைப்படுகிறது. மற்றும், அதன் நடவடிக்கைகளை மேற்பார்வை செய்வதற்கும், கணக்குகளைப் பராமரிப்பதற்கும் அதிக உழைப்புத் தேவைப்படுகிறது.

(ii) இந்தியாவில் நுகர்வோர் இயக்கமானது, போர்கள், பற்றாக்குறை நிலைமை, வழங்குதல் அவசரம், அகவிலை போன்ற தனிச் சூழ்நிலைகளின்போது மட்டுந்தான் சிறப்புக் கவனத்தைப் பெற்றுள்ளது. அதற்கு வளர்ச்சிக் காலங்களும், வீழ்ச்சிக் காலங்களும் இருந்துள்ளன. இயக்கம் வெற்றியடைந்து ஓர் எதிர்காலத்தைப் பெற வேண்டுமானால், அது சாதாரணச் சூழ்நிலைகளின்போதும், தனிப்பட்ட சூழ்நிலைகளின்போதும், நுகர்வோர்கள் நலத்திற்குப் பணிசெய்யும் பொருட்டு, நுகர்வோர் நிறுவனங்களைச் சாதாரணக் காலங்களின் போதுங்கூட அமைத்துப் பலப்படுத்துவது நோக்கமாக விருக்கவேண்டும்.

(iii) **நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்பிலும் வளர்ச்சியிலும் நுகர்வோரின் பங்குகொள்ளுதல் இல்லாமை :** நுகர்வோர்கள், இக் கூட்டுறவு நிறுவனங்களின் உறுப்பினர் களாகச் சேர்க்கப்பட்ட பிறகுங்கூட, அவர்களின் அங்கத்துவம் அடிக்கடி பேருக்கு மட்டுந்தான் உள்ளது. அது, அக் கூட்டுறவு நிறுவனங்களின் வாணிகத்திலும், நிருவாகத்திலும், அவர்க ளுடைய பயனுறுதியான பங்குகொள்ளுதலில் காணப்படவில்லை. எங்கேயாவது ஒரு சிறு பங்கு கொள்ளுதல் இருந்திருந்தால், அது கூட்டுறவுப் பண்டசாலைகளிலிருந்து கட்டுப்படுத்தப்பட்ட பொருள்களை வாங்குவதற்கு மட்டுமே பெரிதும் வரையறுக்கப் பட்டுள்ளது. இதற்குக் காரணம், அங்கத்துவத்தில், உரிமைகளும் கடமைகளும் அடங்கியுள்ளன என்பதை உறுப்பினர்கள் உணராம லிருப்பதே. நுகர்வோர்களுக்கான முறையான உறுப் பினர் கல்விச் செயல்திட்டமில்லாமை, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சித் திட்டத்தில் ஒரு குறையாக வந்துள்ளது.

(iv) **நிருவாகத்தின்பால் வாணிகத்திறனும் அனுபவமும் இன்மை :** இச் சங்கங்களின் நிருவாகம் உறுப்பினர்களின் தேவை களுக்குக் கவனம் செலுத்தாமலிருந்தது. கட்டுப்பாட்டுப் பொருள் களை விற்பனை செய்வது மட்டும், கட்டுப்பாடில்லாத அங்காடியில் வாணிகம் செய்வதற்கு அவசியமான அனுபவத்தை இந் நிறு வனங்களின் நிருவாகத்திற்கு அளிக்காதென்றும், கட்டுப்பாடு எடுக்கப்பட்ட சமயங்களில் வாணிகம் செய்தல் கடினமாக இருக்குமென்றும் அவர்கள் உணர வேண்டியிருக்க, பெரும்பா லான கூட்டுறவுப் பண்டசாலைகளில் நிருவாகம் கட்டுப்பாட்டுப் பண்டங்களின் வாணிகத்திற்கே தங்களைத் தொடர்ந்து வரை யறைப்படுத்திக்கொண்டுள்ளன. மாநிலமட்டத்திலும், தேசிய மட்டத்திலும் அமைக்கப்பட்ட கூட்டமைப்புகள், தங்கள் வாணி கத்திற்காக உறுப்பினர் நிறுவனங்களுக்குச் செல்லாமல், அரசை எதிர்பார்த்துள்ளன. எனவே, இக் கூட்டமைப்புகளின் முயற்சி கள் பற்றுக்குறையிலிருக்கும் அத்தியாவசியப் பொருள்களின் வீதப் பங்குகள் (Quota) தங்கள் மூலம் அரசால் வாய்க்கால் படுத்து வதை நிச்சயப்படுத்தும் வகையில்தா னிருந்துவருகின்றன. ஏனென்றல், அத்தகைய வாணிகத்தின் மூலம் தங்களைக் காப்பாற் றிக் கொள்வதற்கு ஒரு விளிம்பு தங்களுக்குக் கிடைக்கும் என்று அவை எதிர்பார்க்கின்றன. தங்கள் உறுப்பினர் நிறுவனங்களு டைய தேவைகளைக் கண்டறிய அவற்றுடன் தொடர்பு கொள் வதற்கும், அவற்றுடன் ஆலோசித்து உறுப்பினர்களுக்குத் தாங்கள் உண்மையாகவே பயனுள்ளவையாக இருக்கக்கூடிய வாணிகமுன்ற

களை வளர்ச்சி செய்வதற்கும், இக் கூட்டமைப்புகள் நடவடிக்கை எதுவும் எடுத்ததில்லை.

(v) **சாரமற்ற மேலாண்மைத் திறன் :** இயக்குநர்களின் தரத்தைக் காட்டிலும் சிப்பந்திகளின் தரத்தின்மீதுதான் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் உள்ளடங்கிய பலம் பிரதானமாகச் சார்ந்துள்ளது. கூட்டுறவுப் பண்டசாலைகளின் அன்றாட நிருவாகத்தை, மேலாண்மை செய்வதற்கு அவசியப்படும் வாணிகத்திறனைச் சங்கத்தின் நிர்ந்தரச் சிப்பந்தியினிடையே கண்டெடுக்கப்பட்டு வளர்க்கப்பட வேண்டும். நுகர்வோர் இயக்கமானது, அரசு அதிகாரிகளின்மீது சார்ந்திருப்பதற்குப் பதிலாக நன்கு பயிற்சி பெற்ற நபர்களைக் கொண்டதும், பதவி உயர்வுக்கான வாய்ப்புகளைக் கொண்டதுமான தன் சொந்த மேலாண்மைப் பணிமுறைப் படிவங்களை (Managerial Cadres) வளர்ச்சி செய்ய வேண்டும். ஏனென்றால், அரசு அதிகாரிகள் அவ்வப்போது நிறுவனங்களிலிருந்து மாற்றப்படக்கூடும்.

(vi) **விவேகமற்ற மற்றும் கவனிப்பில்லாத அல்லது தீய எண்ணத்துடன் செய்யப்பட்ட கொள்முதல் :** கொள்முதல் செய்தல் சிறப்புத் தேர்ச்சியுள்ள ஒரு நடவடிக்கையாகும். எனவே, இயக்குநர்கள் தாங்களே கொள்முதல் செய்வதற்குப் பதிலாக அதை அனுபவம் பெற்ற ஊதியம் பெறும் சிப்பந்திகளுக்கு ஒப்படைக்க வேண்டும். பெரும்பாலும் இயக்குநர்கள் கொள்முதல்கள் செய்யும் அனுபவத்தைப் பெற்றிராம லிருக்கக்கூடும். இந் நடவடிக்கையானது, நிறுவனங்களுக்குள்ளேயே ஊதியம் பெறும் சிப்பந்திகளுக்கிடையே வளர்ச்சி பெறவேண்டிய அத்தியாவசியமாக ஒரு தொழில்நுட்பத் திறனாக உள்ளது. இயக்குநர்கள் போலல்லாது, ஊதியம் பெறும் சிப்பந்திகள் பண்டசாலைகளின் நிர்வாகக் குழுவின் ஒழுங்குக் கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு இருக்கின்றனர்.

(vii) **இருப்புச் சரக்குகளில் ஏராளமான குறைவுகள் :** நிருவாகம், விழிப்புடன் இருந்து, சிறு திருட்டுகளுக்குப் பொறுப்பாகவுள்ள நபர்கள்மீது பயனுறுதியானதும் பயமுறுத்தித் தடுக்கக் கூடியதுமான நடவடிக்கையை எடுக்க வேண்டும். இருப்புச் சரக்குகளில் குறைவுகள் ஏற்படும் விதங்களைத் தீர ஆய்வு செய்யவும் வேண்டும். மற்றும், தக்க தடுப்பு நடவடிக்கைகளையும் எடுக்க வேண்டும்.

(viii) **உறுப்பினர்கள்பால் விசுவாசமின்மை.**

(ix) **தொழிலாளர் இயக்கத்திற்கும், நுகர்வோர் இயக்கத்திற்குமிடையே நெருங்கிய இணைப்புஇன்மை:** *நுகர்வோர் இயக்கமானது நல்வாழ்வுச் செயல்திட்டங்களில் ஒன்ருகத் தொடங்கப் பட்டது. அதில், மேலைநாடுகளில் தொழிலாளர் சங்கங்கள் தீவிர அக்கறை எடுக்கின்றன. நம் நாட்டில் எதிர்காலச் செயல்திட்டங்களில் ஒன்று தொழிலாளர் இயக்கத்தை நுகர்வோர் இயக்கத்துடன் இணைப்பதற்காக இருக்க வேண்டும்.*

(x) **சொந்தமான நிதிகள் போதாமையும், விகிதப்படி பாரமான நடைமுறைச் செலவுகளும்:** *நிலையான நிதி நிலைமையை வளர்ச்சி செய்யும் காரியத்திற்காக, நுகர்வோர்—உறுப்பினர்களின் சேமிப்புகளைத் திரட்டுவதற்கு நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களால் ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும்.*

(xi) **மக்கள் தலைமை போதிய அளவு இல்லாமை.**

**10. இந்தியாவில் நுகர்வோர் இயக்கத்தைப் பலப்படுத்துவதற்கான யோசனைகள் :** *சில தனிப்பட்ட சூழ்நிலைகளையும், அவசர நெருக்கடிநிலைகளையும் சமாளிப்பதற்கு மட்டுமன்றி விநியோகத் துறையில் நாட்டின் நுகர்வோர் இயக்கத்தை ஓர் இயல்பான பொருளாதார நடவடிக்கையாக வளர்ச்சி செய்யும் ஒரு திடமான, சுறுசுறுப்பான செயல்திட்டத்தைப் பின்பற்றுவதற்கு அரசின்பாலும், நுகர்வோர்களின்பாலும் ஒரு பூர்வாங்க முயற்சி தேவைப்படுகிறது. நுகர்வோர் இயக்கம் மேற்கொண்டு எடுக்கவேண்டிய முயற்சி தொடர்பாக, யோசனை கூறப்பட்ட பல்வேறு நடவடிக்கைகளுள் சில பின்வருமாறு:*

(i) இயக்கத்தில் மக்கள் ஈடுபாடு அதிகமாகவும், பயனுறுதியாகவும் இருக்கும் பொருட்டு, உறுப்பினர் கல்விக் களமான செயல்திட்டத்தின்மூலம் பண்டசாலைகளின் அமைப்பிலும், நிருவாகத்திலும் உறுப்பினர்களாகத் தங்கள் உரிமைகளை மட்டுமன்றி, தங்கள் கடமைகளையுங்கூட உணர்ந்து பொதுமக்கள் ஒரு தீவிர அக்கறையை யெடுப்பதற்கு ஊக்குவிக்கப்பட வேண்டும்.

(ii) அங்காடி ஆராய்ச்சியையும், உறுப்பினர்களின் தேவைகளையும் அடிப்படையாகக் கொண்டு, பிரதமக் கூட்டுறவுச் சங்கங்களின் வாணிக நடவடிக்கைகளையும், அவற்றின் கூட்டமைப்பு நிறுவனங்களின் வாணிக நடவடிக்கைகளையும் ஒழுங்குபடுத்துதல் வேண்டும். நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் தேவைகளை ஒன்றுதொகுத்து உற்பத்தி நிலைகளிலிருந்து மொத்தக்

கொள்முதல் செய்தல், மொத்த விற்பனைப் பண்டசாலைகள், மாநில மட்டத்துக் கூட்டமைப்புகள் ஆகியவை ஆற்ற வேண்டிய ஒரு முக்கியக் கடமையாகும். தங்கள் சொந்த வரையறைகள் காரணமாகவும், உறுப்பினர் சங்கங்கள் நேரடியான கொள்முதல்களைச் செய்யும் தங்கள் உரிமைகளை வாபஸ் செய்ய விருப்பமின்மை காரணமாகவும், மாநிலமட்டத்துக் கூட்டமைப்புகள், தேசிய மட்டத்துக் கூட்டமைப்பு ஆகியவைகளின் செயல்விளைவு இத் துறைகளில் போதிய அளவுக்கு இருந்ததில்லை. மொத்தக் கொள்முதல், பருவகாலக் கொள்முதல், கவனமான பொருள் பட்டியல் கண்காணிப்பு ஆகியவை சரியான ஒரு கொள்முதல் கொள்கையின் அத்தியாவசிய அம்சங்களாக உள்ளன. இவை மட்டுந்தான் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள், பொதுமக்களுக்குத் தரமான பண்டங்களைப் போட்டியான விலைகளில் கிடைக்கச் செய்யும் நோக்கத்தைச் சாதிப்பதற்கு வகைசெய்யும்.

(iii) தகுதியும் பயிற்சியும் பெற்ற சிப்பந்திகளின் ஒரு தொகுப்பை அமைப்பதற்கு, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் நிர்வாகத்தின்பால் ஓர் உறுதியான கொள்கை வேண்டும். மொத்த விற்பனைப் பண்டசாலைகளின் அடிப்படைப் பணியாளர் தொகுதி, தனிப்புத்திக் கூர்மையையும் பயிற்சியையும் பெற்றுத் தகுதி படைத்தவர்களாக இருக்க வேண்டும். மொத்த விற்பனைப் பண்டசாலைகளில் அமர்த்தப்படுவதற்காக, பொது மேலாளர், உதவிப் பொது மேலாளர், தலைமைக் கணக்கர் முதலிய பதவிகளுக்காக ஒரு பொதுவான பணிமுறைப் பிரிவு (Cadre) அமைக்கப்பட வேண்டும். கொள்கை வகுத்தலுக்காகவும், பண்டசாலையின் செயற்பாட்டைக் குறித்துக் காலமுறையான ஆய்வுக்காகவு முள்ள தன் பொறுப்புகளுக்குட்பட்டு, அன்றாட நிர்வாகத்தில் இயக்குநர் குழுவிலிருந்து தலையீடின்றி, அடிப்படைப் பணியாளர்களுக்குத் தங்கள் கடமைகளைப் புரிவதற்கு உரிமை இருக்கவேண்டும். பொது மேலாளர் அல்லது மேலாண்மை இயக்குநர் போன்ற உச்சப் பதவிகளுக்கு வாணிகநிர்வாகத்தில் (Business Management) ஒரு பயிற்சிப் பாடப்படிப்பில் தேர்ச்சி பெற்றவர்களே அதிகமாக விரும்பப்பட வேண்டும். கூட்டுறவு நிர்வாகத்தைப் பற்றிய வைகுந்த மேத்தா தேசிய நிலையம், நுகர்வோர் பண்டசாலைகளுக்காக, நிர்வாகத்தில் ஒரு பாடப்படிப்பை நடத்தி வந்துள்ளது.

(iv) பல்வேறு குறியீட்டுகளையும், பல்வேறு சிப்ப அளவுகளையும் கொண்ட விரிவான பரப்புவகைப் பொருள்களை வழங்குதல் வேண்டும். பண்டசாலைகள் தங்கள் வாணிகத்தைப் பல தரமாக்கி, நுகர்வோர்களின் கோரிக்கைகளையும் கருத்தில்வைத்து,

முடிந்தவரையில் அதிக எண்ணிக்கையாகவுள்ள நுகர்பண்டங்களை விற்பனை செய்ய வேண்டும்.

(v) பண்டசாலைகளால் சில்லறை வாணிகத் தொழில் நுட்பம் வளர்ச்சி செய்யப்பட வேண்டும். பண்டசாலைகள் சரியான இடங்களில், நன்கு வெளிச்சம் செய்யப்பட்டதும், காற்றோட்டமுள்ளதும், விசாலமுள்ளதுமான கட்டடங்களில்அமைக்கப்பட்டு அவை தரமான அடிப்படைகளில் (Standard Packets) பொருள்களை முன்னதாகக் கட்டிவைத்தல், விலையைக் குறியிடுதல் போன்ற நடைமுறைகளைப் பின்பற்றி நுகர்வோர்களை நல்ல முறையில் கவனித்து அலங்காரமான புறச் சோடனையையும் (Window Dressing) ஏற்பாடு செய்யவேண்டும்.

(vi) தொடர்ச்சியான வழங்கல் பராமரிக்கப்பட வேண்டும். நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள், விற்பனைகளுக்குத் தொடர்பான கொள்முதலைச் சரியாகத் திட்டமிடுதல், பொருள் பட்டியல் கண்காணிப்பு, சீராக விற்பனைக்குத் தொடர்பான பண்டங்களின் ஓட்டம், தக்கமுறையில் வரவுசெலவுத் திட்டம் தயாரித்தல் முதலியவை உட்பட நவீன நிருவாகத் தொழில் நுட்பங்களைப் பின்பற்ற வேண்டும்.

(vii) விற்பனைச் சிப்பந்திகளுக்குப் பங்கு கொள்ளுதல் உணர்ச்சியை அதிகமாகக் கொடுக்கக்கூடிய ஒரு சரியான சூழ்நிலை (Atmosphere) ஏற்படுத்தப்பட வேண்டும். நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள், ஊழியர்களுக்குத் தக்கதொரு ஊக்கமளிப்புத் திட்டத்தைத் தயாரிக்க வேண்டுமென்று யோசனை கூறப்பட்டுள்ளது. நடைமுறைப்படுத்த எளிதான சீரான அடிப்படையின் மீது உருவாக்கப்பட்ட ஓர் ஊக்கமளிப்புத் திட்டம், ஊழியர்கள் தங்கள் செயல்திறத்தை வளர்த்துத் தங்கள் தொழிற்புரள்வை அதிகப்படுத்துவதற்கு ஊக்கத்தைக் கொடுக்கும் மிகச் சிறந்த சக்திகளுள் ஒன்றாகவுள்ளது. ஒவ்வொரு விற்பனையாளருக்காகவும் நிருணயிக்கப்பட்ட விற்பனைகளின் குறைந்தபட்ச மட்டத்திற்கும் மேற்பட்டுச் செய்யப்பட்ட விற்பனை அதிகரிப்பின்மீது ஒரு தரகு அல்லது ஊக்கமளிப்புப் படி அளிக்கப்பட வேண்டும். அத் தரகு அல்லது படியானது ஒரு வளர்விதத்தில் இருக்க வேண்டும்.

# 22. தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்
## (Industrial Co-operatives)

### 1. பொது

தொழிற் கூட்டுறவுத் துறையானது இரண்டு வகுப்புகளைக் கொண்டது; அதாவது, நெசவாளர் சங்கங்களும், நெசவாளர் சங்கங்கள் நீங்கலாக இதரத் தொழிற் சங்கங்களும். நெசவாளர் சங்கங்கள் மூன்று தலைப்புகளின்கீழ் மேலும் பிரிக்கப்படலாம்—கதர்ச் சங்கங்கள், கைத்தறிச் சங்கங்கள், விசைத்தறிச் சங்கங்கள். கதர்ச் சங்கங்களின்கீழும், கைத்தறிச் சங்கங்களின்கீழும் பருத்தி, கம்பளி, பட்டுச் சங்கங்கள் உள்ளன. இதரத் தொழிற் சங்கங்கள், இவ் வத்தியாயத்தின் பிற்சேர்க்கை 1-ல் எடுத்துக் காட்டப்பட்டுள்ளபடி, சில விரிவான வகுப்புகளாகப் பிரிக்கப்படலாம். தொழிற் சங்கங்களின் அமைப்பானது, பொதுவாக, இரண்டு அடுக்குக் கொண்டதாக வுள்ளது. அதாவது, பிரதமச் சங்கங்கள் மாநில மட்டத்திலுள்ள கூட்டமைப்புக்கு இணைக்கப்பட்டுள்ளன. மாநிலங்கள் சிலவற்றில் மாவட்ட அல்லது மண்டல மட்டங்களிலுங்கூடச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பிரதமத் தொழிற் சங்கங்கள், பெரும்பாலும், உற்பத்திச் சங்கங்களாகவும், தலைமை மட்டத்து நிறுவனங்களும் இடைநிலைமட்டத்து நிறுவனங்களும் பொதுவாக ஒரு சேவை வகையானவையாகவும் (Service type) உள்ளன. பிரதமச் சங்கங்கள், தொழிற்சாலை அடிப்படையின்பேரில் உற்பத்தியை மேற்கொள்கின்றன; அல்லது தங்கள் கணக்கின்பேரில், உறுப்பினர்களின் குடிசைகளிலும், அல்லது தொழிற்கொட்டகைகளிலும் பொருள்களை உற்பத்தி செய்கின்றன. அடுத்த பக்க அட்டவணை கடந்த மூன்றாண்டுகளின்போது, பிரதமத் தொழிற்சாலைகளின் உற்பத்தி, விற்பனை, நடவடிக்கைகளைக் காட்டுகிறது.

### 2 நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள்

**(i) கைத்தறி நெசவுத் தொழிலின் முக்கியத்துவம்:-** ஏறக்குறைய 30 இலட்சம் தறிகளையும், அவற்றின்மீது சார்ந்துள்ள ஒரு கோடிக்கும் மேலான ஒரு மக்கள்தொகையையும் கொண்டு, கைத்தறி நெசவுத் தொழில் நம் நாட்டின் மிகப்பெரிய குடிசைத்

அட்டவணை
உற்பத்தியும், விற்பனையும்

ரூபாய், கோடிக் கணக்கில்

| உற்பத்தி | 1967-68 | 1968-69 | 1969-70 |
|---|---|---|---|
| நெசவாளர் சங்கங்கள் — | 48·1 | 45·6 | 56·1 |
| இதரத் தொழிற் சங்கங்கள் — | 32·7 | 30·2 | 28 5 |
| | 80·8 | 75·8 | 84.6 |
| **உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் விற்பனை** | | | |
| நெசவாளர் சங்கங்கள் — | 60·9 | 51·2 | 63.7 |
| இதரத் தொழிற் சங்கங்கள் — | 35·1 | 33·0 | 33·9 |
| | 96·0 | 84·2 | 97·6 |

தொழிலாகவுள்ளது. நாட்டின் துணித் தேவைகளில் ஏறக்குறைய மூன்றிலொரு பாகம், கைத்தறி நெசவுத் தொழிலால் பூர்த்தி செய்யப்படுகிறது. தமிழ்நாட்டில் மட்டும், 1963ஆம் ஆண்டில், சுமார் 5.50 இலட்சக் கைத்தறிக ளிருந்தன வென்று மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. இவற்றில் பட்டுத் துணி வகைகளின் உற்பத்தியில் ஈடுபட்டிருந்த சுமார் 20,000 கைத்தறிகள் அடங்கியிருந்தன. ஏறக்குறைய 20 இலட்சமுள்ள ஒரு மக்கள்தொகை இத் தொழில்மீது சார்ந்துள்ளது. சுமார் ரூ.48 கோடிக்கு மதிப்பீடு செய்யப்பட்ட சுமார் 3,900 கெஜங்கள் துணியை வருடாந்தரம் உற்பத்தி செய்யும் இத் தொழில், மாநிலத்தின் பொருளாதார அமைப்பில், ஒரு முக்கிய இடத்தை வகித்துள்ளது.

**(ii) நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களை அமைப்பதற்கான அவசியம் :** பெரும்பாலும் உடலுழைப்பினால் செய்யப்படும் ஒரு பரவலாக்கப்பட்ட குடிசைத் தொழிலாகக் கைத்தறி நெசவுத்தொழில் உள்ளதால், மின்சாரத் தொழில்களுள்ள இக் காலத்தில், அது கடினமாகப் பிரச்சினைகளை நோக்க வேண்டியுள்

ளது. விலைவாசி, தரம், புதுமாதிரி வேலைப்பாடு போன்ற பல்வேறு துறைகளில் நன்கு அமைக்கப்பட்ட ஆவுளி ஆலைத் தொழிலுடன், அது போட்டியிட வேண்டியுள்ளது. போதிய அளவிலும், நியாயமான விலையிலும், நூலைப் பெறுவதில் சங்கடமும், நெசவாளர்களின் நீடித்த காலமான கடன்சுமையும், இதரப் பிரச்சினைகளாக வுள்ளன. நெசவாளர்கள் பொதுவாக ஏழையாகவும், துணி தயாரிப்பில் அவசியமான நிதியை முதலீடு செய்வதற்கு இயலாமலு முள்ளனர். எப்பொழுதுமே ஒரு நெசவாளி, நூல் வழங்குகின்ற இடைநிலையாளர்களுக்காகக் கூலிக்குத் துணியைத் தயாரிக்கிறார். நிறுத்தி வைத்திருக்கும் சக்தி அவருக்கு இல்லாததனால் அவர் பொருள்களை இடைநிலையாளர்களுக்குக் கொடுத்து விடுகிறார். இத் தொழிலின் இலாபங்கள் இடைநிலையாளர்களுக்குப் போகின்றன. நெசவாளர்களுக்கு நிதியுதவியையும், தொழில்நுட்ப வழிகாட்டுதலையும் வழங்கி, அவர்களை இடைநிலையாளர்களால் அல்லது அழைக்கப்படுகிறபடி நெசவாளர் முதலாளிகளால் (Master Weavers) சுரண்டப்படுவதிலிருந்து காப்பாற்றும்பொருட்டு, அவர்களை ஒரு நிறுவனத்தின்கீழ்க் கொண்டுவருவது அவசியமாகவுள்ளது. கூட்டுறவுச் சங்கத்தைத் தவிர வேறு எந்த நிறுவனமும் விரும்பப்பட்ட பலனை அடைய முடியாதென்று உணரப்பட்டுள்ளது. பெரும்பாலான மாநிலங்களில், பிரதம மட்டத்திலிருந்து தலைமை மட்டத்துவரை அமைக்கப்பட்ட நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள், நிதியளித்தல், விற்பனை செய்தல், பொதுப்பணிகளை ஏற்பாடு செய்தல், பயிற்சியளித்தல் முதலிய பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளன.

**(iii) சங்கங்களின் நோக்கங்கள் :** நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் நோக்கங்களாவன : உறுப்பினர்களுக்கு மூலப் பொருள்களை, முக்கியமாக, நூலை வழங்குதலும், அதற்காக அவற்றை மொத்தக் கொள்முதல்கள் செய்தலும், தொழிலை நடத்துவதற்காக நிதிகளைச் சேகரித்தலும், புதிய மேம்படுத்தப்பட்ட மாதிரிப் பொருள்களை உற்பத்தி செய்வதற்கு உறுப்பினர்களுக்குத் தொழில்நுட்ப உதவியை அளித்தலும், சாயம் போடுதல்— அச்சடித்தல்— வெளுத்தல் போன்ற பொதுப் பணிகளை அளித்தலும், உறுப்பினர்களால் உற்பத்தி செய்யப்பட்ட துணிவகைகளை விற்பனை செய்தலுமாகும்.

**(iv) சங்கங்களின் அமைப்பும், செயற்பாடும் :** பொதுவாகச் சங்கங்கள், குறிப்பிட்ட விவரங்களின்படி நூலிலிருந்து துணியைத் தயாரிக்கும் உறுப்பினர்களுக்கு நூல் வழங்குகின்றன. அவ்வாறு தயாரிக்கப்பட்ட துணி, சங்கத்திற்கு அனுப்பப்பட்டுச்

சங்கத்தால் விற்பனை செய்யப்படுகிறது. செய்யப்பட்ட வேலைக்காகத் தொழிலாளர்கள் கூலி பெறுகின்றனர். சாதாரணமாக, ஒரு சங்கம், வாழ்திறனுள்ளதாக— தன்னிறைவுள்ளதாக— செய்யப்படுவதற்கு, 200-லிருந்து 300 கைத்தறிகளைப் பெற்றுள்ளது. கைத்தறிகளையும், இதரக் கருவிகளையும் வழங்குகின்ற உற்பத்தி நிலையங்களையுங்கூடச் சங்கங்கள் பராமரிக்கின்றன. முதலீடுங்கூடச் சங்கத்தால் செய்யப்படுகிறது. இவ் வுற்பத்தி நிலையங்களில் உறுப்பினர்கள் வந்து கூலிக்கு வேலை செய்கின்றனர். உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் விற்பனைக்காகச் சங்கம் பொறுப்பாகவுள்ளது. ஏதாவது இலாபம் ஏற்பட்டால், அஃது உறுப்பினர்களிடையே அவர்களால் வாங்கப்பட்ட கூலிகளின் வீதத்தில், பகிர்வு செய்யப்படுகின்றது. சில சங்கங்கள், ஒன்று அல்லது ஒன்றுக்கு மேற்பட்ட உற்பத்தி நிலையங்களைப் பராமரிப்பதுடன் உறுப்பினர்களுக்கு அவர்களின் தனிப்பட்ட தொழிலை வளர்ப்பதற்குங்கூட உதவுகின்ற ஒரு கலப்புவகைச் சங்கங்களாகவுமுள்ளன. நெசவாளர் இயக்கத்தின் அடிப்படை அமைப்பானது, தனி நபர் நெசவாளர்களை உறுப்பினர்களாகக் கொண்ட பிரதமச் சங்கமாகும். எனினும், இச் சங்கங்கள் நெசவாளர்களின் பல்வேறு பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கான போதிய ஆதாரங்க ளில்லாம லுள்ளன. ஆலைகளிலிருந்து நெசவாளர்களுக்கு நேரடியாக நூல் வழங்குதலைக் கையாளுவதற்காகவும், ஒரு விரிவான அளவில் துணி விற்பனையை ஏற்பாடு செய்வதற்காகவும், ஓர் உயர்நிலை நிறுவனம் தேவைப்படுகிறது. மாறுபடும் விருப்பங்களுக்காகவும், நாகரிகங்களுக்காகவும், மாதிரிகளுக்காகவும், பழக்கங்களுக்காகவும், சொகுசுகளுக்காகவும், ஆராய்ச்சியையும் அங்காடி ஆய்வுகளையும் மேற்கொள்வதற்குங்கூடப் பிரதமச் சங்கங்களுக்குச் சாதனங்கள் கிடையா. எனவே, மாநிலங்களில் தலைமைச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இத் தலைமைச் சங்கங்களின் கடமையானது, இணைக்கப்பட்ட பிரதமச் சங்கங்களின் நடவடிக்கைகளை வசதி செய்தலும், சிறப்பாக மூலப்பொருள்களையும் கருவிகளையும் வழங்குதலும், அவற்றின் செய்பொருள்களை விற்பனை செய்தலுமாகும். இச் சங்கங்கள், பிரதமச் சங்கங்களையும், மண்டலச் சங்கங்களையும் உறுப்பினர்களாகப் பெற்றுள்ளன.

## 3. நெசவாளர் கூட்டுறவு இயக்கத்தின் வரலாறு

நெடுங்காலமாகக் கைத்தறி நெசவாளர்களின் பொருளாதார மறுவாழ்விற்கும், மேம்பாட்டிற்கும் அவர்களை வழிநடத்துவதற்கு, அவர்களிடையே பயனுறுதியான நிறுவனம் எதுவுமில்லாமலிருந்தது. 1935ஆம் ஆண்டில், இந்திய அரசு, மானியத் திட்டமொன்றைத் தயாரித்தது. அத் திட்டத்தின்கீழ், கைத்தறி நெச

வுத் தொழிலை மேம்படுத்தும் காரியத்திற்காக ஆண்டொன்றுக்கு ரூ. 5 இலட்சம்வரை, மாநில அரசுகளுக்கு மானியம் அளிக்கப் பட்டது. இரண்டாம் உலகப் பெரும் போரின் தொடக்கத்தில், நூல் பற்றுக்குறை காரணமாக இத் தொழிலில் தேக்கம் ஏற்பட் டது. 1941ஆம் ஆண்டில், கைத்தறித் தொழிலின் பிரச்சினை களைப் பரிசீலித்து அதன் மேம்பாட்டிற்கான நடவடிக்கைகளைப் பரிவு செய்வதற்கு, இந்திய அரசு, 'உண்மையைக் கண்டறியும் குழு' ஒன்றை (Fact Finding Committee) அமைத்தது. நெசவாளர்களின் நிலைமையை மேம்படுத்துவதிலும், அவர்களின் தொழிலைச் சீர்படுத்துவதிலும், கூட்டுறவு முறையின் முக்கியத்து வத்தை அக் குழு வலியுறுத்தியிருந்தது. அதன் பரிவுரைகளை யொட்டி, இந்திய அரசு 1952ஆம் ஆண்டில், ஜவுளித் தொழில் ஆணையாளரைத் (Textile Commissioner) தலைவராகக் கொண்ட ஓர் 'அனைத்திந்தியக் கைத்தறி வாரியத்தை' (All India Handloom Board) அமைத்தது. இவ் வாரியத்திற்குக் கைத்தறித் தொழிலின் மறுவாழ்விற்காகவும், ஒருங்கிணைப்புக்காக வும் கொள்கைகளை வகுக்கும் பணி ஒப்படைக்கப்பட்டது.

அனைத்திந்தியக் கைத்தறி வாரியத்தின் 'விற்பனை மற்றும் ஆராய்ச்சிக் குழு' (Marketing and Research Committee), கைத்தறி நெசவாளர்களின் மிகச்சிறந்த நலன்களுக்காகவும் அதே சமயத்தில் உற்பத்திச் செலவுகளைக் குருமத்திற்கும் குறைத்து விற்பனைத் துறையில் தேவையற்ற இடைநிலையாளர்களை ஒழிக்கும் குறிக்கோளை அடையச் செய்யக்கூடிய, நிறுவன வகையைத் தன் முதற் கூட்டத்தில் விவாதித்து, சென்னை மாகாணத்தில் பின்பற் றப்பட்ட முறைகளின் பேரில் அமைக்கப்பட்டதும், ஒருமைப் படுத்தப்பட்டதுமான நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் மிகப் பொருத்தமுள்ள வகையான நிறுவனங்களாகத் தோன்றுகின்றன என்று கருத்துத் தெரிவித்தது. மாநில அரசுகளும்கூட, ஒரு சரியான நிறுவன வகையானது கூட்டுறவுச் சங்க வகையேயாகும் என்ற கருத்தை ஒப்புக்கொண்டன. ஆகையால், கைத்தறி வாரியம், கூட்டுறவு முறைகளில் அமைக்கப்பட்ட கைத்தறித் தொழிலுக்கு நிதியுதவியை உறுதிசெய்தது.

தமிழ்நாட்டில் முதல் நெசவாளர் கூட்டுறவுச் சங்கம் செங்கை மாவட்டத்தில் காஞ்சிபுரத்தில் அமைக்கப்பட்டது. 1920ஆம் ஆண்டிற்குப் பிறகு, ஒரு பெரிய எண்ணிக்கையில் சங்கங்கள் தொடங்கப்பட்டன. ஆனால், அவை வெற்றி பெற முடி யாமல், அவற்றில் பல கலைக்கப்பட வேண்டியிருந்தது. நூல் விலைவாசியில் விரிவான ஏற்ற இறக்கங்களும், விற்பனையில் சங்

கடங்களும், போதிய நிதியின்மையுமே தோல்விக்கு முதன்மையான காரணங்களாக விருந்தன. சங்கங்களின் செயற்பாட்டை ஒருமைப் படுத்துவதற்கும், அதற்கு உதவி செய்வதற்கும், ஒரு மைய நிறுவனம் அவசியமாக இருந்ததென்று உணரப்பட்டது. 1930ஆம் ஆண்டில், உலகப் பொருளாதார மந்தத்தினுல் கைத்தறித் தொழில் பாதிக்கப்பட்டு, இந்திய அரசு ஓர் உதவித்தொகையை அளித்து அத் தொழிலுக்கு உதவ முன்வந்தபோது, தமிழ்நாட்டில் 1935ஆம் ஆண்டில் இந்திய அரசின் உதவித்தொகையைக் கொண்டு ஒரு தலைமை நெசவாளர் சங்கம் அமைக்கப்பட்டது. அப்போதிலிருந்து, பிரதமச் சங்கங்களின் எண்ணிக்கையிலும், நடவடிக்கையிலும் ஒரு நிலையான விரிவாக்கம் இருந்துவந்துள்ளது. 1942ஆம் ஆண்டில், நெசவாளர்களுக்குத் தொடர்ச்சியான வேலையை வழங்குவதற்கான 'கைத்தறித் தரத்துணித் திட்டத்'தை (Handloom Standard Cloth Scheme) அமுல்படுத்துதல், அரசால் தலைமைச் சங்கத்திற்கு ஒப்படைக்கப்பட்டது. அதற்குப் பிறகு, நூல் கட்டுப்பாடு உத்தரவும், நூல் வழங்குவதற்காகச் செய்யப்பட்ட ஏற்பாடுகளும், நெசவாளர்கள் தங்கள் நூல் தேவைகளை வெளியிலிருந்து பெறுவதைவிட மிக எளிய வகையில் தங்கள் சங்கங்களிலிருந்து பெறுவதற்கு, அவர்களுக்கு வகைசெய்தன. 1946ஆம் ஆண்டில், முடிந்த அளவு ஏராளமான நெசவாளர்களைச் சங்கங்களுக்குள் கொண்டு வருவதற்கு, அரசு ஒரு பெரு முயற்சியை மேற்கொண்டது. 1948ஆம் ஆண்டிற்குள், நெசவாளர்களில் 25 சதவீதத்திற்கு மதிகமானவர்கள் இச் சங்கங்களால் தழுவப்பட்டனர். 1952ஆம் ஆண்டில், இந்திய அரசா லமைக்கப்பட்ட அனைத்திந்தியக் கைத்தறிவாரியம் இந்திய அரசின் இசைவுடன் பல திட்டங்களைத் தயாரித்து, ஒவ்வொரு வகைத் திட்டத்திற்காக அளிக்கப்பட வேண்டிய நிதியுதவி வகையையுங்கூட உருவாக்கியது. ஒவ்வொரு மாநிலத்திற்காக நிதியுதவியின் உச்ச அளவு ஒவ்வோர் ஆண்டும் நிருணயிக்கப்பட்டது. கைத்தறித் தொழிலின் வளர்ச்சிச் செலவை யேற்பதற்காக, 1953ஆம் ஆண்டில், ஆலைத்துணியின்மீது கூடுதலான ஒரு சுங்கவரியை விதிப்பதற்கும், அதிலொரு பாகத்தைக் கைத்தறித் தொழிலின் வளர்ச்சிக்காக ஒரு 'மேல்வரி நிதி'க்கு (Cess Fund) ஒதுக்கி வைப்பதற்கும், இந்திய அரசு முடிவு செய்தது. இந்த 'மேல்வரி நிதி' 1960ஆம் ஆண்டில் ரத்து செய்யப்பட்டது. மேல்வரி நிதியில் சேர்ந்த தொகைகள் பொது வருவாய்களுக்கு ((General Revenues) வரவு வைக்கப்பட்டுக் கைத்தறி வளர்ச்சியின்மீதான செலவு, இந்திய அரசின் 'ஒன்றிணைக்கப்பட்ட நிதி' (Consolidated Fund) யிலிருந்து ஏற்கப்பட்டு வருகிறது. முதன்மையாக, மூலப் பொருள்களையும், நிதியங்களையும் சாதக

மான நிபந்தனைகளின்மீது விற்பனை வசதிகளையும், பெறுவதற் கான தக்க நிறுவன அமைப்பாகிய கூட்டுறவுச் சங்கங்களின் மூலம் கைத்தறித் தொழிலை நிலைப்படுத்துவதற்காகவும், வளர்ச்சி செய்வதற்காகவும் அரசால் நிதியுதவி யளிக்கப்படுகிறது.

## 4. நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்கான திட்டங்கள்

நெசவாளர் உறுப்பினர்களுக்குத் தொடர்ச்சியான வேலைவசதியை யளிக்கும் நோக்கத்துடனும், சங்கங்களுக்கு அவசிய மான நிதியுதவியை வழங்கும் நோக்கத்துடனும், தமிழ்நாட்டில் கூட்டுறவுத் துறையில் கைத்தறித் தொழிலின் வளர்ச்சிக்காகப் பல்வேறு திட்டங்கள் அமுல்படுத்தப்பட்டு வருகின்றன. அமுல் படுத்தப்பட்டு வரும் பல்வேறு திட்டங்களும் அத்தகைய ஒவ் வொரு திட்டத்திற்கான நிதியுதவி வகையும், கீழே சுட்டிக்காட் டப்பட்டுள்ளன:

**(i) பங்கு மூலதன உதவி:** நெசவாளர் கூட்டுறவுத் துறைக்குள் (Within The Co-operative Fold) அதிகமான கைத்தறி நெசவாளர்களைக் கொண்டுவருவதும், நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனத்தைப் பலப் படுத்துவதும், இத் திட்டத்தின் நோக்கமாகவுள்ளது. ஒரு நெச வாளர் கூட்டுறவுச் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்க்கப்பட்ட ஒரு கைத்தறி நெசவாளர் சங்கத்தில் தன் பங்கு மூலதனத்திற்காக ரூ.100 உச்ச அளவுக்குட்பட்டதும், வட்டியுடன் நான்காண்டுகளில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டியதுமான ஒரு கடனைப் பெறு வதற்குத் தகுதியுடையவராவர். சங்கங்களின் நடப்பு உறுப்பி னர்களுக்குத் தங்கள் பங்கு மூலதனத்தைப் பலப்படுத்துவதற் காகவுங்கூட, ஒவ்வோர் உறுப்பினருக்கும் ரூ.75 உச்ச அளவுக் குட்பட்ட கடன்க ளளிக்கப்படுகின்றன.

**(ii) ஆராய்ச்சியும், தொழில் நுட்பமும்:-** இத் திட்டத்தின் கீழ், நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் உறுப்பினர்களுக்குக் கடன்களும், உதவித்தொகைகளும் முறையே 25 சதவீதத்திலும், 75 சத வீதத்திலும் அளிக்கப்படுகின்றன. தயாரிக்கப்பட்ட துணித் தரத்தையும், மாதிரி வகையையும் மேம்படுத்தும் பொருட்டும், உற்பத்திச் செலவைக் குறைக்கும் பொருட்டுங்கூட தறிஅச்சு, தறிப் பண்ணை, அச்சுவிழுது, சாயமிடுவதற்கான தளவாடங்கள், சட்டத் தறி போன்ற கைத்தறிக் கருவிகளை வாங்குவதற்காக இந் நிதியுதவி யளிக்கப்படுகிறது. சாயச்சாலைகளையும் (Dye-houses), முடிவு செய்து அமுக்கும் இயந்திரங்களையும் (Finishing and Calendering

Plant), ரகம் தயாரிக்கும் தொழிற்சாலைகளையும் (Pattern-Making Factories), அமைப்பதற்காகவுங்கூடச் சங்கங்களுக்கு நிதியுதவி யளிக்கப்படுகின்றன.

(iii) **தள்ளுபடி** (Rebate) **யளிக்கும் திட்டம்**: பொது மக்களுக்கு விற்பனை செய்தலை ஊக்குவிக்கும் நோக்கத்துடன், 1954ஆம் ஆண்டிலிருந்து தள்ளுபடியளிப்பு மானியத்தை அரசு அளித்து வந்துள்ளது. இந்தத் தள்ளுபடி, நெசவாளர் சங்கங்களால் செய்யப்படும் கைத்தறித்துணி விற்பனையின்மீது சாதாரண நாள்களின்போது, ரூபாயில் 5 பைசா வீதமும், 3 பைசா வீதமும் முறையே சில்லரை விற்பனைக்காகவும், மொத்த விற்பனைக்காகவும் அளிக்கப்படுகிறது. அனைத்திந்தியக் கைத்தறி வாரம் போன்ற சிறப்புக் காலங்களின் போதும், தீபாவளி, பொங்கல் முதலிய பண்டிகைகளின் போதும், ரூபாய்க்கு 10 பைசா வீதம் தள்ளுபடி அளிக்கப்படுகிறது.

(iv) **விற்பனையும் விளம்பரமும்**: இத் திட்டத்தின்கீழ், புதிய விற்பனைக் கூடங்களையும் (Sales Depots), விற்பனைக் கேந்திரங்களையும் (Emporia) அமைப்பதற்காகவும் மாதிரிப் பொருள்பெட்டிகளை விநியோகித்தல், செய்தித்தாள்களிலும், இதழ்களிலும் விளம்பரம் செய்தல், பொருட்காட்சியில் பங்கு கொள்ளுதல் போன்ற விளம்பர நடவடிக்கைகளை மேற்கொள்வதற்காகவும், தமிழ்நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்திற்கும், பிரதம நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் நிதியுதவி யளிக்கப்படுகிறது.

(v) **நெசவாளர் தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்**: தங்கட்குச் சொந்தமான கைத்தறியில்லாத நெசவாளர்களுக்காக, அவர்களுக்குத் தொடர்ச்சியான வேலையை வழங்கும் நோக்கத்துடன் இவ் வகைச் சங்கங்கள் தனியாக அமைக்கப்படுகின்றன. கைத்தறிகளையும், அதன் துணைக்கருவிகளையும் வாங்குவதற்காகவும், உறுப்பினர்களுக்குப் பங்கு மூலதன முன்பணம் வழங்குவதற்காகவும், பணிக்கொட்டகைகளைக் கட்டுவதற்காகவும் நிதியுதவி அளிக்கப்படுகின்றன. இச் சங்கங்களின் உறுப்பினர்கள் ஒரு பொதுக் கூடத்தில், சங்கத்தால் ஏற்படுத்தப்பட்ட கைத்தறிகளில் கூலிக்காகப் பணிசெய்து, தங்கள் உற்பத்தியின்மீது இலாபங்களிலிருந்து போனசுங்கூடப் பெறுகின்றனர். முதல் மூன்றுண்டுகளுக்குச் சிப்பந்திகளை அமர்த்துவதற்காகவும், வாடகை செலுத்துவதற்காகவுங்கூட, மானியம் வழுக்குவீதத்தில் அளிக்கப்படுகின்றது. இச் சங்கங்களில் பெரும்பாலானவை தயார் அங்காடியை யுடையனவாக விருக்கும். துப்பட்டிகள், படுக்கை

விரிப்புகள், வண்ணக் குட்டைத்துண்டுகள், சர்ட்டிங்துணிகள், அலங்காரத் துணிவகைகள் ஆகியவற்றைத் தயாரிக்கின்றன. தமிழ்நாட்டில் சுமார் ரூ. 42 இலட்சமளவிற்கு ஆண்டு உற்பத்தியைக் கொண்ட சுமார் அத்தகைய 27 நெசவாளர் சங்கங்களுள்ளன.

**(vi) பட்டுச் சங்கங்கள்:** பட்டு, செயற்கைப்பட்டு நெசவாளர்களுக்காகத் தனிப்பட்ட சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன பங்கு மூலதனம், கருவிகளை வாங்குதல், மேசை நாற்காலி வகைகளை வாங்குதல், வாடகை செலுத்துதல், சிப்பந்திகளை அமர்த்துதல் ஆகிய காரியங்களுக்காகப் பட்டுச் சங்கங்கள் தனியுதவி அளிக்கப்படுகின்றன.

**(vii) மேலாண்மைச் சிப்பந்திகளுக்கான மானியம்:** இத்திட்டத்தின்கீழ், நிதிநிலைமையில் வலிவுகுன்றிய சங்கங்களுக்கு, மேலாண்மைச் சிப்பந்திச் செலவிற்காக நான்காண்டுகளுக்கு வழுக்கு வீதத்தில் மானிய வடிவத்தில் உதவியளிக்கப்படுகிறது. சங்கமொன்றுக்கு முதலாண்டிற்கான குருமம் உதவி ரூ. 1,000 ஆகும். சங்கத்தில் 100 கைத்தறிகள் இருக்க வேண்டும்; அதில் 50 நெசவாளர்கள் பணிபுரிந்திருக்க வேண்டும்; சங்கங்கள் அதன் இருப்பு நிலைக் குறிப்பின்படி நிகர நட்டமடைந்திருக்க வேண்டுமென்ற நிபந்தனைகளுக்குட்பட்டு இவ் வுதவி யளிக்கப்படுகிறது.

**(viii) பிரதம நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தின் பங்கு மூலதனத்தில் அரசு பங்கு கொள்ளுதல்:** பிரதம நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மூலதனத்தில் அரசு பங்கு கொள்ளுதல், முதன்முதலாக 1967–68ஆம் ஆண்டில், அனைத்திந்தியக் கைத்தறி வாரியத்தின் நிலையான குழுவின் பரிவுரைகள் அடிப்படையின் பேரில், தொடங்கி வைக்கப்பட்டது. நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு நடைமுறை மூலதனக் கடன்களை வழங்கும் ரிசர்வ் வங்கி, சில தரங்களை நிருணயித்துள்ளது. அவற்றின்படி, சங்கம், தன் கடன் பெற்ற முதலில் 10 சதவீதமான ஒரு விளிம்பைக் காண்பிக்கத் தேவைப்படுகிறது. இத் துறையில் இறுதிநிலைச் சங்கங்களுக்கு உதவி செய்யும் பொருட்டு, அரசு, அவற்றின் பங்கு மூலதனத்திற்காக உதவுவதன் மூலம், பங்கு மூலதன நிதியாதாரங்களைப் பயன்படுத்திக்கொண்டு வருகிறது.

**(ix) நல்வாழ்வுத் திட்டங்கள்:** கைத்தறித் தொழில் வளர்ச்சிக்கான பல்வேறு திட்டங்களை அமுல்படுத்துவதுடன், நெசவாளர்களின் சமுதாய, பொருளாதார நிலைமையை மேம்படுத்துவதற்கும் கீழே குறிப்பிட்டுள்ளபடி நல்வாழ்வுத் திட்டங்களை மேற்கொள்ளுவதன் மூலம் சிறப்பு நடவடிக்கைகளையுங்கூட அரசு எடுத்துள்ளது.

**(அ) வீட்டு வசதி:** இத் திட்டம், மேலான வீட்டுவசதி-பணி மனைகளை வழங்குவதற்காகத் தயாரிக்கப்பட்டுள்ளது. கடன்கள், மானியங்கள் ஆகியவை வாயிலாக நிதியுதவி அளிக்கப்படுகிறது. ஒரு வீட்டின் உயர்ந்தபட்ச மதிப்பு ரூ.3,500 ஆகும். அதில் ரூ.2,000 கடனாகவும், ரூ.1,250 மானியமாகவும் அளிக்கப்பட்டு, எஞ்சியுள்ள ரூ.250 அல்லது வீட்டு மதிப்பின் 10 சதவீதம், இதில் எது உயர்ந்ததோ அது,உறுப்பினரால் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. இத் திட்டத்தின்கீழ், ரூ.127.65 இலட்ச மொத்தச் செலவில் 2,683 வீடுகள் கட்டப்பட்டுள்ளன. எனினும், 1962ஆம் ஆண்டிலிருந்து புதிய வீட்டு வசதித் திட்டங்கள் மேற்கொள்ளப்படவில்லை.

**(ஆ) கட்டாயச் சிக்கன நிதித் திட்டம்:** நெசவாளர்களின் மனத்தில் சேமிப்புப் பழக்கத்தை உண்டுபண்ணுவதற்கு 1962–63 ஆம் ஆண்டிலிருந்து ஒரு தனித்திட்டம் அரசால் அமுல்செய்யப் பட்டு வருகிறது. இத் திட்டம் அதிகமான சங்கங்களுக்கும், உறுப்பினர்களுக்கும் வளர்விதமான வகையில் நீடிக்கப்பட்டுள்ளது. இத் திட்டத்தின்கீழ், ஒவ்வொரு நெசவாளர்-உறுப்பினரும் தம்மால் சம்பாதிக்கப்பட்ட கூலியில் ரூபாய் ஒன்றுக்கு 6 பைசா வீதம் செலுத்துகிறார்; அரசு 4 பைசாவும், சம்பந்தப்பட்ட நெசவாளர் கூட்டுறவுச் சங்கம் 2 பைசாவும் உதவுகின்றன. இத் தொகையானது,சம்பந்தப்பட்ட மாவட்டக் கூட்டுறவு வங்கியில் உறுப்பினர் பெயரில் முதலீடு செய்யப்படுகிறது. வீடு கட்டுதல், திருமணம் செய்தல் முதலியன போன்ற பயனுள்ள—சிறப்பாக அவசியப்படும்—காரியங்களுக்காக முன்பணம் பெறுவதற்கு உறுப்பினர்களுக்கு உரிமையுண்டு. 1967ஆம் ஆண்டிறுதியில், கட்டாயச் சிக்கன நிதியின் மொத்தத் தொகை சுமார் ரூ.27 இலட்சமாக இருந்தது.

### (x) இதரத் திட்டங்கள்

**(அ) பரிசளிப்புத் திட்டம்:** இத் திட்டத்தின்கீழ், புதிய கவர்ச்சிகரமான ரகங்களில் (Designs) உற்பத்தியை அதிகரிக்கத் தூண்டும் பொருட்டுப் பல்வேறு வகைகளில் மிகச் சிறந்த கைத்தறித் துணிவகைகளுக்காக ரொக்கப் பரிசுகள் அளிக்கப்படுகின்றன.

**(ஆ) புள்ளி விவரங்களைச் சேகரித்தல்:** இது மாநிலத்தில் கூட்டுறவுத் துறைக்குள்ளும், வெளியேயுமுள்ள உற்பத்திக்கும் விற்பனைக்கும் கைத்தறிப் பொருள்களின் இருப்புச் சரக்குகளுக்கும் தொடர்பான புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதற்காக ஒரு திட்டமாக வுள்ளது. மாவட்டங்களில் உள்ளூர் மையங்களிலிருந்து எடுக்கப்பட்ட தற்செயலான மாதிரிச் சரக்குகள் (Random

Sampling) முறையைப் பின்பற்றிப் புள்ளிவிவரத்துறை நெறியாளரால் இத் திட்டம் அமுல்படுத்தப்படுகிறது.

**(இ) திட்டத்தின்மீதான நிறுவனச் செலவுகள்:** இத் திட்டத்தின்கீழ், கைத்தறித் திட்டங்களின் அமுலுக்காக அமர்த்தப்பட்ட இலாகாச் சிப்பந்திகளின் பேரில் செய்யப்பட்ட செலவுகளை ஏற்பதற்காக, நிதியுதவி உத்தேசிக்கப்பட்டுள்ளது. சிப்பந்திகளின்பேரில் ஒவ்வோர் ஆண்டும் செய்யப்பட்ட செலவு தொகையானது, திட்டச் செலவில் இந்தத் தலைப்பின்கீழ்ப் பற்று வைக்கப்படும்.

**(ஈ) பயிற்சி:** உற்பத்தித் தொழில் நுட்பத்தை மேம்படுத்தும் பொருட்டும், கவர்ச்சிகரமான புதுமாதிரி ரகங்களை உருவாக்கும் பொருட்டும், நெசவாளர் சங்கங்களின் உறுப்பினர்கள், தமிழ் நாடு கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தின் பயிற்சி நிலையங்களில் மூன்று மாத காலத்திற்குப் பயிற்சி யளிக்கப்பட்டனர். கணக்குகள் பராமரிப்பிலும், நிருவாகம் செய்தலிலும், நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் சிப்பந்திகள் பயிற்சி யளிக்கப்படுகின்றனர். பயிற்சியாளர்கள் ஒரு குறிப்பிட்ட மாதிரிவகையின்படி உதவிப்பணங்கள் அளிக்கப்படுகின்றனர். 1969–70ஆம் ஆண்டின் போது, ஒரு திருத்தப்பட்ட பயிற்சித் திட்டத்தை அரசு ஒப்பளித்தது. அதன்படி, நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் உறுப்பினர்களுக்கு, அவர்களின் பணியிடங்களிலேயே நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகவே, தகுதிபெற்ற உறுப்பினர்களால் பயிற்சி யளிக்கப்பட வேண்டும். அவ் வாண்டின்போது, 12 மையங்களில் பயிற்சியளிப்பதற்கு உத்தேசிக்கப்பட்டது. ஒவ்வொரு பாடப்படிப்பும் 360 உறுப்பினர்களுக்கு 40 நாள்கள் காலத்திற்காக இருக்கும். அத்தகைய 5 பாடப்படிப்புகள் ஓராண்டில் நடத்தப்படும். ஒவ்வொரு பயிற்சியாளரும் மாதமொன்றுக்கு ரூ.100 உதவிப்பணம் அளிக்கப்படுவார். பயிற்சி மையங்கள் எல்லையிலுள்ள நெசவாளருக்காகச் செயல்விளக்கப் பகுதிகளாகவுங் கூட, பணிபுரியும். ஒவ்வொரு பயிற்சியாளரும் பாடப்படிப்பின் முடிவில் ஒரு கைத்தறியும் இதர மேம்படுத்தப்பட்ட கருவிகளும் அளிக்கப்படுவார். பயிற்சிக்குப் பிறகு, நெசவாளர்கள் சங்கத்திற்காகப் புதிய ரகங்களைத் தயார் செய்வதை நிச்சயப்படுத்துவதற்கு நடவடிக்கை எடுக்கப்படும். 1970ஆம் ஆண்டு முதல் இத் திட்டம் அமுல்படுத்தப்பட்டு வருகிறது.

கடன்கள் வாயிலாகவும், மானியங்கள் வாயிலாகவும், அரசின் செலவு இரண்டாவது திட்டக் காலத்தின்போது, ரூ.713 இலட்சமாகவும், மூன்றாவது திட்டக் காலத்தின்போது ரூ.750.30

இலட்சமாகவும், 1966—67ஆம் ஆண்டுமுதல் 1968-69 ஆண்டு வரையான வருடாந்தரத் திட்டக் காலங்களின்போது, ரூ.432.14 இலட்சமாகவும், நான்காவது திட்டக் காலத்தின் போது, 1971—72 ஆம் ஆண்டுவரை ரூ.581.88 இலட்சமாகவும் இருந்தது. 1950ஆம் ஆண்டிலிருந்து, இந்திய அரசு சில ரகங்கள் பருத்தி ஜவுளிகளைப் பிரத்தியேகமாகக் கைத்தறிகளால் தயாரிக்கப் படுவதற்காக ஒதுக்கிவைத்தது. ஒதுக்கிவைக்கப்பட்ட ஜவுளியில் கைத்தறியால் தற்போது பிரத்தியேகமாகத் தயாரிக்கப்படும் வண்ணச் சேலைகள் அடங்கியுள்ளன.

### 5. நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் எவ்வாறு நிதிகளைத் திரட்டுகின்றன?

கைத்தறித் தொழிலின் மிக முக்கியமான ஒரு தேவையானது, துணி உற்பத்திக்காகவும், விற்பனைக்காகவும் நடைமுறை முதலாகும். நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள், மத்தியக் கூட்டுறவு வங்கியிலிருந்து, சாதாரணமாகத் தங்கள் செலுத்தப் பட்ட பங்கு முதலிலும், காப்பு நிதியிலும் 8 மடங்குகள் வரை கடன் வாங்குவதற்கு அனுமதிக்கப்படுகின்றன. தொடக்கத்தில் மத்தியக் கூட்டுறவு வங்கிகள் நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களுக் குத் தங்கள் தொழிலை நடத்துவதற்கு நிதிவழங்கின. இந் நிதியுதவி யானது பெயரளவானதாக மட்டுமே இருந்ததாகத் தெரியவந்தது. 1953—56ஆம்ஆண்டு முதல் பிரதம நெசவாளர் கூட்டுறவுச் சங் கங்களுக்காகவும், தலைமை நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்திற் காகவும் நடைமுறை முதல் கடன்களை மேல்வரி நிதியிலிருந்து அரசு ஒப்பளித்தது. கைத்தறித் தொழிலானது, வளர்வித வகையில் கூட்டுறவு முறைகளில் அமைக்கப்பட்டுவந்து, நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் நடைமுறை முதல் தேவைகள் நிலையாக அதிகரித்தபோது, நடைமுறை முதல் வழங்குவதற்கான ஏற் பாட்டை ஓர் உறுதியான நிரந்தர அடித்தளத்தின்மீது வைக்கும் பிரச்சினையை அரசு ஆலோசனை செய்தது. 1957ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் ரிசர்வ் வங்கிச் சட்டத்தின் பிரிவு 17(2) (ஆஆ)வின் கீழ் ரிசர்வ் வங்கி கைத்தறி நிதி யுதவிக்கான பொறுப்பை ஏற்றுக் கொண்டு, இந் நிதி மாநிலக் கூட்டுறவு வங்கியின் மூலமும், மாவட் டக் கூட்டுறவு மத்திய வங்கிகளின் மூலமும் வழிப்படுத்தப்படு கின்றது. இந் நிதி நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு உற்பத்திக்காகவும் விற்பனைக்காகவும் சலுகையான வட்டி விகிதங் களில், வங்கி வட்டிக்கும் 1½ சதவீதம் குறைவாக வழங்கப்படுகிறது. 1969—70ஆம் ஆண்டின்போது, ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப் பட்ட குறுகிய காலக் கடன் வரம்புகள் ரூ.818.4 இலட்சத்திற்கு

இருந்தன. அவ் வாண்டு இறுதியில், நிலுவைப் பாக்கித்தொகை ரூ.641.82 இலட்சமாக இருந்தது. இவை மட்டுமன்றி ரிசர்வ் வங்கி, ஆந்திரப்பிரதேசம், தமிழ்நாடு, கேரளம் ஆகிய மாநிலங்களில் தலைமை நெசவாளர் சங்கங்களுக்கு 1969–70ஆம் ஆண்டின் போது, முறையே ரூ.22 இலட்சத்திற்கும், ரூ.30 இலட்சத்திற்கும் ரூ. 15 இலட்சத்திற்கும் கடன்வரம்புகள் ஒப்பளித்தது. இவ் வரம்புகளின்கீழ், 1969–70ஆம் ஆண்டுகளில் வாங்கப்பட்ட மொத்தக் கடன் தொகைகள் ரூ.11.34 இலட்சமாக இருந்தன. தமிழ்நாட்டில் பிரதம நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களாலும், மாநில நெசவாளர் கூட்டுறவுச் சங்கத்தாலும் பயன்படுத்தப் பட்ட கடன் வரம்புகள், இரண்டாவது திட்டக் காலத்தில் ரூ.587.99 இலட்சமாகவும் மூன்றாவது திட்டக் காலத்தில் ரூ.685 இலட்சமாகவும் நான்காவது திட்டக்காலத்தில் 1971–72 ஆம் ஆண்டின்போது ரூ.625.29 இலட்சமாகவும் இருந்தன.

நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள், ரிசர்வ் வங்கி கடன் வழங்கும் வட்டி விகிதத்திலேயே நிதிகளைப் பெறுகின்றன. இப் பணிக்காக, மாநிலக் கூட்டுறவு வங்கிக்குத் தலைமை நெசவாளர் சங்கத்திற்கு அளிக்கப்பட்ட நிதிகளைக்குறித்து, ஒரு சதவீதம் மானியமும், மாநிலக் கூட்டுறவு வங்கிக்கும், மத்தியக் கூட்டுறவு வங்கிகளுக்கும், பிரதம நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் அளிக்கப் பட்ட நிதிகளைக் குறித்து 3 சதவீதம் மானியமும், மாநில அரசு அளிக்கின்றது.

நெசவாளர் சங்கங்களுக்கு அளிக்கப்பட்ட நடைமுறை முதலுக்கான கடன்கள் திருப்பிச் செலுத்தப்படாமையால் எழுகின்ற நட்டத்திலிருந்து, மாநிலக் கூட்டுறவு வங்கியையும் மத்தியக் கூட்டுறவு வங்கிகளையும் பாதுகாக்கும் பொருட்டு, ஓர் உத்தரவாத மளிப்புத்திட்டமும்கூட உள்ளது. இவ் வுத்தரவாதமானது நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு வங்கிகளால் அளிக்கப்பட்ட நிதிகளில் 5 சதவீதம் உச்ச அளவுக்குட்பட்டது. இந்திய அரசு மொத்தத்தில் 50 சதவீதத்தையும், மாநில அரசு 40 சதவீதத்தையும், வங்கிகள் எச்சத்தையும் ஏற்கின்றன.

### 6. நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் அலுவல்கள்

**உற்பத்தியும் விற்பனையும்:** தமிழ்நாட்டில் நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள், தமிழ்நாட்டு மக்களின் தேவைகளுக்கேற்பவும், இதர மாநிலத் தேவைகளுக் கேற்பவுங்கூட, சேலைகள், வேட்டிகள் குட்டைத்துண்டுகள், படுக்கை விரிப்புகள், துப்பட்டிகள், அலங்காரத்துணிகள், சர்ட்டிங் துணிகள், லுங்கிகள் முதலியன போன்ற பல்வேறு வகையான துணிவகைகளைத் தயாரிக்கின்றன.

இதர நாடுகளுக்கு ஏற்றுமதிக்கான துணி வகைகள்கூடத் தயாரிக்கப்படுகின்றன. கைத்தறிச் சங்கங்கள், கைத்தறித்துணி உற்பத்தியிலும் விற்பனையிலும் பெருமளவு முன்னேற்றமடைந்துள்ளன. 31—3—56ஆம் நாளில் முடிவடைந்த முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின்போது, அவை 733.40 இலட்சம் கெஜங்கள் துணியைத் தயாரித்து ரூ.5.91 கோடி மதிப்பிற்கு விற்பனைகளைச் செய்தன. இரண்டாவது திட்டக் காலத்தின்போது, 978.90 இலட்சம் கெஜங்கள் துணியைத் தயாரித்து ரூ.9.84 கோடிக்கு விற்பனை செய்தன. மூன்றுவது திட்டக் காலத்தின்போது, 1,150 இலட்சம் கெஜங்கள் துணியைத் தயாரித்து ரூ.12.50 கோடி மதிப்பிற்கு விற்பனைகள் செய்தன. 1966—67ஆம் ஆண்டுமுதல், 1968—69 வரையான ஆண்டுகளின்போது 2,416.6 கெஜம் துணிகளைத் தயாரித்து ரூ.32.25 கோடி மதிப்பிற்கு விற்பனைகள் செய்தன. நான்காவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தின்போது, 1971-72 ஆம் ஆண்டு வரை (1969—70ஆம் ஆண்டு முதல் 1971—72ஆம் ஆண்டுவரை) அவை 2,140 கெஜங்கள் துணியைத் தயாரித்தது. ரூ.42.35 கோடி மதிப்பிற்கு விற்பனைகளைச் செய்தன.

தமிழ்நாட்டில், பட்டுக் கைத்தறி நெசவாளர்கள், சூரத்திலிருந்து (Surat) ஒவ்வோர் ஆண்டும் ரூ. 1 கோடிக்கும் அதிகப்பட்ட அளவுக்குத் தங்கச் சரிகையை வாங்கி வந்துள்ளனர். தங்கச் சரிகையைத் தமிழ்நாட்டிலேயே கிடைக்கச் செய்யும் நோக்கத்துடன், காஞ்சிபுரத்தில் சுமார் ரூ.25 இலட்சம் செலவில் சரிகையைத் தயாரிக்கும் ஓர் அமைப்பு நிறுவப்பட்டு வருகிறது.

ஆண்டொன்றுக்குச் சுமார் ரூ.12 கோடியளவிற்கு உற்பத்தி, விற்பனைப் புரள்வைக் கொண்ட, தமிழ்நாட்டில் கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கங்களின் ஒரு பின்னலமைப்பு, நெசவாளர் உறுப்பினர்களுக்கு அரிய உதவியை வழங்கிக் கொண்டிருக்கின்றன. இத் தொழிலின் வருங்காலமானது, தொடர்ந்து மேம்பட்டுக் கொண்டிருக்கும் உற்பத்தித் தொழில்நுட்பங்களைக் கொண்ட தற்கால நிலைமைக்குத் தன்னைச் சீர்படுத்திக் கொள்ளும் திறனின் பேரில், பெருமளவு சார்ந்திருக்கும். மேம்படுத்தப்பட்ட கைத்தறிகளையும் துணைக் கருவிகளையும் வழங்குதல் தொழில்நுட்பப் பதனப்படுத்துதல், தொழில் நுட்பப் பயிற்சி, ஆராய்ச்சி ஆகியவற்றிற்கான திட்டம், தரக்கட்டுப்பாட்டுத் திட்டங்கள் முதலியன, ஐந்தாண்டுத் திட்டங்களில் கைத்தறித் தொழில் செயல்திட்டத்தில் ஒரு முக்கியமான இடமளிக்கப்பட்டுள்ளன.

### 7. கூட்டுறவு விசைத்தறிச் சங்கங்கள்

தமிழ்நாட்டில் விசைத்தறிகளுக்காகக் கூட்டுறவுச் சங்கம் எதுவும் கிடையாது. விசைத்தறிகளைத் தொடங்கி

வைத்தலானது, கைத்தறி நெசவாளர்களுக்கு, உடனடியான சில வேலையிழப்பை விளைவிக்கும் என்று அஞ்சப்படுகிறது. சந்தானம் குழுவினர் (1969), விசைத்தறிகளைத் தொடங்கி வைப்பதற்காகக் கட்டடங்களைக் கொண்ட செயல்திட்டமொன்று உருவாக்கப்பட வேண்டுமென்று பரிவுரை செய்துள்ளனர். பல்வேறு மாகாணங்கள் விசைத்தறிகளை மேற்கொண்டுள்ளனவென்றும், அவைகளைத் தமிழ்நாட்டில், ஊக்குவிக்காமலிருப்பது யுக்தமானதாக இராதென்றும் அவர்கள் கருத்துக் கொண்டனர். விசைத்தறிக் கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சலுகையான வட்டி விகிதத்தில், நடைமுறை முதலை வழங்குவதற்கு, ரிசர்வ் வங்கி சம்மதித்துள்ளது. ஆகையால், ஒவ்வொருவரும் ஒரு விசைத்தறியைப் பெற்ற 25 தனிநபர் நெசவாளர்கள் குறுமத்தைக் கொண்டு, புதிய விசைத்தறிக் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்படலாமென்று அக் குழுவினர் யோசனை கூறியுள்ளனர். விசைத்தறிகளைத் தொடங்கி வைப்பதற்கான நிதியுதவியானது, கூட்டுறவுத் துறைக்கே அடைக்கப்பட வேண்டுமென்று அவர்கள் மேலுங் கூறியுள்ளனர்.

## 8. நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் தற்போதைய நிலைமை

(i) **இந்தியா முழுவதிலும்:** தேசிய நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கமன்றியும், 30—6—71ஆம் நாளன்று 24 தலைமை நெசவாளர் சங்கங்களும், 102 மைய நெசவாளர் சங்கங்களும். 12,027 பிரதம நெசவாளர் சங்கங்களு மிருந்தன. 12,027 பிரதம நெசவாளர் சங்கங்களில் 6,161 சங்கங்கள், அதாவது 51.2 சதவீதம் செயலற்றுக் கிடந்தன. செயலிலிருந்த சங்கங்களில், 8.05 இலட்சம் தனிநபர்களும், 586 சங்கங்களும் சேர்ந்து 8.06 இலட்சம் உறுப்பினர்க ளிருந்தனர். செயலற்ற சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 4.06 இலட்சமாக விருந்தது. அவற்றின் மொத்த நடைமுறை முதல் ரூ.56.89 கோடியளவிற்கு இருந்தது, அவற்றின் செலுத்தப்பட்ட பங்கு முதல் ரூ.9.05 கோடியாக இருந்தது. அதில் அரசிடமிருந்து ரூ.0.60 இலட்சமும், சங்கங்களிலிருந்து ரூ.0.61 இலட்சமும், பங்குகள் எடுப்பதற்காக அரசு கடன்களளிக்கப்பட்ட தனிநபர்களிடமிருந்து ரூ.1.13 கோடியும், தங்கள் சொந்த நிதியாதாரங்களிலிருந்து பங்கு முதலளித்துள்ள தனிநபர்களிடமிருந்து ரூ.6.70 கோடியும் அடங்கியிருந்தன. 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், அவற்றின் கடன் பெற்ற முதல் ரூ.20.51 கோடியாக இருந்தது. அதில் அரசிடமிருந்து ரூ.7.51கோடியும், மையநிதியமைப்புகளிலிருந்து ரூ.9.92

கோடியும், மற்றவர்களிடமிருந்து ரூ.3.07 கோடியும் அடங்கியிருந்தன. சங்கங்கள், உற்பத்தித்துறையில் 3.31 இலட்சம் நபர்களுக்காகவும், நிர்வாகத் துறையில் 27,744 நபர்களுக்காகவும், வேலைவாய்ப்பை வழங்கின. உற்பத்தி செய்யப்பட்ட துணி வகைகள் ரூ.59.61 கோடி மதிப்பிற்கும், விற்பனை செய்யப்பட்ட துணி ரூ.72.71 கோடி மதிப்பிற்கும் இருந்தன. சங்கங்களி லிருந்த கைத்தறிகளின் மொத்த எண்ணிக்கை சுமார் 10 இலட்சமாக இருந்தது. அதில் சுமார் 3.8 இலட்சம் இயங்கிக் கொண்டிருந்தன. 4,548 சங்கங்கள் ரூ.2.53 கோடி இலாபத்திலும், 3,635 சங்கங்கள் ரூ.1.98 கோடி நட்டத்திலும் 3,844 சங்கங்கள் இலாபமும், நட்டமு மில்லாமலும் இயங்கின.

1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், 62 கூட்டுறவு நூற்பாலைகளிருந்தன. அவற்றுள் 18 பருத்தி விளைவிப்பவர்களுக்காக அமைக்கப்பட்டன. 28 நூல் உபயோகிப்பவர்களுக்காக அமைக்கப்பட்டன; 16 கலப்பு வகையானவையாக இருந்தன. இந்த 62 ஆலைகளில், மராட்டியத்தில் 19-ம், தமிழ்நாட்டில் 12-ம் இருந்தன. தமிழ்நாட்டிலுள்ள ஆலைகள் நூல் உபயோகிப்போர்கள் வகையைச் சேர்ந்தன. 1970ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், இவ் வாலைகளில் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 1,44,439 ஆக விருந்தது. அதில் 16,591 சங்கங்களாகவும் 1,27,848 தனிநபர்களாகவும் இருந்தனர். அவற்றின் நடைமுறை முதல் 30–6–70ஆம் நாளன்று ரூ.63.5 கோடிக்கு மொத்தப்பட்டன. அவற்றின் மடிப்பின்கீழிருந்த கதிர்களின் எண்ணிக்கை சுமார் 9 இலட்சமாக இருந்தது. அவற்றின் உற்பத்தி மதிப்பு 1969–70 ஆம் ஆண்டில் ரூ. 25 கோடியாக இருந்து, 1970–71ஆம் ஆண்டில் ரூ. 35 கோடியாக உயர்ந்தது. விற்பனையுங்கூட 1967–68ஆம் ஆண்டில் ரூ.16.2 கோடியிலிருந்து 1969–71ஆம் ஆண்டில் ரூ.27.4 கோடிக்கு உயர்ந்தது.

பம்பாயில் இயங்கும் 'அனைத்திந்தியக் கைத்தறித்துணி விற்பனைக் கூட்டுறவுச் சங்கம்' (All India Handloom Fabrics Marketing Co-operative) மாநிலக் கைத்தறிநெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கங்கள், பிரதம நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள், கைத்தறித் தொழிலில் ஈடுபட்டுள்ள தனிநபர்கள் ஆகியவர்களின் ஒரு தேசியத் தலைமை நிறுவனமாகும். நாட்டிற்குள்ளும், அயல்நாடுகளிலுங் கூடக் கைத்தறி உற்பத்திப் பொருள்களின் விற்பனையை வளர்ச்சி செய்வதற்கு, அனைத்திந்தியக் கைத்தறி வாரியத்தால் அச் சங்கம் ஆதரவளிக்கப்பட்டது. அதன் முதன்மையான தொழில், அதன் உறுப்பினர்களிடமிருந்து கைத்தறிப் பொருள்களை வாங்குதலும்,

இந்தியாவிற்குள்ளும் வெளியேயும் அவற்றின் விற்பனைக்காக ஏற்பாடு செய்தலு மாகும். உள்நாட்டு விற்பனைக்காக அது பம்பாயிலும், சென்னையிலும், கல்கத்தாவிலும், புதுடில்லியிலும், பெங்களூரிலும், அகமதாபாத்திலும் கைத்தறி இல்லங்களை (Handloom Houses) நடத்தி வருகிறது. வெளிநாட்டு விற்பனைக்காக, அது கோலாலம்பூரிலும், சிங்கப்பூரிலும், ஏடனிலும், லாகோசிலும், நைரோபியிலும் மொரிசீயஸிலும், அதன் அயல்நாட்டுக் கிளைகளை (Over - seas Branches) அமைத்துள்ளது. 1969—70ஆம் ஆண்டின்போது, உள்நாட்டு விற்பனை நிலையங்களுக்காகத் தன் உறுப்பினர்களிடமிருந்து அச் சங்கம் ரூ.184.5 இலட்ச மளவுக்கு கைத்தறிப் பொருள்களை வாங்கியது. அதன் உள்நாட்டு விற்பனைகள் ரூ.254.9 இலட்சத்திற்கு இருந்தன. அச் சங்கத்தின் விற்பனைகள், 1969—70ஆம் ஆண்டின்போது, ரூ.124.6 இலட்ச மளவிற்கு இருந்தன. 1969—70ஆம் ஆண்டின் போது அச் சங்கம் ரூ.6.5 இலட்சம் இலாபத்தை ஈட்டியது.

(ii) **தமிழ்நாட்டில்:** 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், 695 பிரதம நெசவாளர் சங்கங்க ளிருந்தன. அவற்றில், 14 கைத்தறிப் பட்டுச் சங்கங்களாகவும், எஞ்சியவை பருத்திக் கைத்தறிச் சங்கங்களாகவு மிருந்தன. இந்த 695 சங்கங்களில், 139 செயலற்றுக் கிடந்தன. செயலிலிருந்த சங்கங்களில் தனிநபர்கள் மட்டும் உறுப்பினர்களாக இருந்தனர். அவர்களின் எண்ணிக்கை 1,22,000 ஆக விருந்தது. செயலற்ற சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 27,207 ஆக இருந்தது. 1971ஆம் ஆண்டிறுதியில், அவற்றின் மொத்த நடைமுறை முதல் ரூ.13.74 கோடியளவிற்கு இருந்தது. அவற்றின் மொத்தப் பங்கு முதல் ரூ.2.51 கோடியாக இருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.9.23 கோடியும் சங்கங்களிடமிருந்து ரூ.0.48 கோடியும், அரசு கடன்களிலிருந்து உதவப்பட்ட நபர்களிடமிருந்து ரூ.6.63 கோடியும் தங்கள் சொந்த நிதி யாதாரங்களிலிருந்து செலுத்திய தனிநபர்களிடமிருந்து ரூ.1.16 கோடியும் அடங்கியிருந்தன. 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், அவற்றின் மொத்தக் கடன் பெற்ற முதல் ரூ.3.24 கோடியளவிற் கிருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.0.98 கோடியும், மைய நிதி யமைப்புகளிலிருந்து ரூ.2.19 கோடியும், மற்றவர்களிடமிருந்து ரூ.0.059 கோடியும் அடங்கியிருந்தன. அவை ரூ.15.06 கோடி மதிப்புள்ள துணிவகைகளைத் தயார் செய்து, ரூ.17.06 கோடி மதிப்புள்ள துணியை விற்பனை செய்தன. 443 சங்கங்கள் ரூ.0.87 கோடி இலாபத்திலும், 240 சங்கங்கள் ரூ.0.45 கோடி நட்டத்திலும் 12 சங்கங்கள் இலாபமும் நட்டமுமில்லாமலும் இயங்கின.

தமிழ்நாட்டில், 5.56 இலட்சக் கைத்தறிகளுள், 1.59 இலட்சக் கைத்தறிகள் கூட்டுறவுத் துறைக்குள் ளிருந்தன. 1974ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், 747 பிரதம நெசவாளர் சங்கங்களிருந்தன. அவை 815 இலட்ச மீட்டர் கைத்தறித் துணியை ரூ.32.81 கோடி மதிப்பில் தயாரித்து, ரூ.25.40 கோடி மதிப்புள்ள பொருள்களை விற்பனை செய்தன.

தமிழ்நாடு கைத்தறி நெசவாளர்கள் கூட்டுறவுச் சங்கம், (சென்னை மாகாணக் கைத்தறி நெசவாளர் கூட்டுறவுச் சங்கமென்ற பெயரில்) பிரதம நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகளை ஒருமைப்படுத்தும் நோக்கத்துடனும், கூட்டுறவுத்துறையில் கைத்தறித் தொழிலை அமைத்து வளர்க்கும் நோக்கத்துடனும் 1935ஆம் ஆண்டில் நிறுவப்பட்டது. நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களுக்கான தலைமை நிறுவனமாகிய இச் சங்கத்தில் 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், 842 உறுப்பினர்களிருந்தனர். அவர்களில், 695 பிரதம நெசவாளர் சங்கங்களும், 147 தனிநபர்களும் அடங்கியிருந்தனர். அதன் செலுத்தப்பட்ட பங்கு முதல் ரூ.43.12 இலட்சமாக இருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.22.50 இலட்சமும், சங்கங்களிடமிருந்து ரூ.17.53 இலட்சமும் தனிநபர்களிடமிருந்து ரூ.3.09 இலட்சமும் அடங்கியிருந்தன. அவ் வாண்டு இறுதியில், அதன் கடன்பெற்ற முதல் ரூ.273.21 இலட்ச மளவிற்கு இருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.62.70 இலட்சமும், மைய நிதி அமைப்புகளிலிருந்து ரூ.210.51 இலட்சமும் அடங்கியிருந்தன. அது 37.63 இலட்சம் மதிப்புள்ள நூலையும், ரூ.25.49 இலட்சம் மதிப்புள்ள மூலப் பொருள்களையும், ரூ.233.55 இலட்சம் மதிப்புள்ள முடிவு செய்யப்பட்ட பொருள்களையும், இறுதிக் கையிருப்புச் சரக்காக வைத்திருந்தது. 1970–71ஆம் ஆண்டின்போது, அது ரூ.1.65 இலட்சம் இலாபத்தில் இயங்கியது. அது, தமிழ்நாட்டில் 248 விற்பனை நிலையங்களையும் வெளிநாட்டில் 99 விற்பனை நிலையங்களையும், 25 பதிலாண்மைகளையும் பெற்றிருந்தது. அது, மூன்று சாயத் தொழிற்சாலைகளையும், ஒரு நெசவுத் தொழிற்சாலையையும், நான்கு தொகுப்பு நெசவு நிலையங்களையும் நடத்துகிறது; 16 கிடங்குகளைச் சொந்தமாக வைத்துள்ளது. அதன் கைத்தறித்துணிவாங்குதல்களும், விற்பனைகளும் குறையாமல் அதிகரித்துக்கொண்டு வந்துள்ளன. 1972–73, 1973–74ஆம் ஆண்டுகளின்போது, அதன் கைத்தறித் துணிக்கொள்முதல், முறையே ரூ.782 இலட்சமளவிற்கும், ரூ.1,252 இலட்சமளவிற்கு மிருந்தன. இவ் வாண்டுகளில், விற்பனைகள் முறையே ரூ.916 இலட்சமளவிற்கும், ரூ.1,434 இலட்சமளவிற்கு மிருந்தன. ஆனால், விற்பனை செய்யப்பட்ட

துணிக்கான வர்த்தகப் பெயர் 'கோ—ஆப்டெக்ஸ்' (Co-optex) ஆகும். ஏற்றுமதி வர்த்தகமும்கூடத் துரிதப்படுத்தப்பட்டு வருகிறது. அண்மையில், அது பங்களாதேசுக்குக் கைத்தறித்துணி வாங்குவதற்காக, ரூ.15 இலட்சத்திற்காக ஓர் ஆணையைப் (Order) பெற்றுள்ளது. துணிக் கொள்முதலுக்கான நிதியுதவியைத் தேச வங்கி, தமிழ்நாடு மாநிலக் கூட்டுறவு வங்கியின் மூலம் வழங்குகிறது. தமிழ்நாடு அரசு, பங்கு மூலதனக் கடன்கள், உதவித்தொகைகள், மானியங்கள், தள்ளுபடி முதலிய வடிவத்தில் நிதியுதவி வழங்குகிறது. 1974—75ஆம் ஆண்டின்போது, கைத்தறித்துணி உற்பத்தி விற்பனைக்கான ரிசர்வ் வங்கியால் ஒப்பளிக்கப்பட்ட ரொக்கக்கடன் வரம்பு சுமார் 450 இலட்சமாக இருந்தது. நூல் கொள்முதலுக்காகவும், விநியோகத்திற்காகவும் ரூ.300 இலட்சமுள்ள ஒரு தனிப்பட்ட கடன்வரம்பு ஒப்பளிக்கப்பட்டது. 10 சதவீதக் காப்பைப் (cover) பராமரிப்பதற்குச் சங்கத்திற்கு வகை செய்யும்பொருட்டு, ரூ.20 இலட்சமுள்ள 'வழிவகைகள் முன்பணத்தை' (Ways and Means Advance) அரசு வழங்கியுள்ளது. அதனால் செய்யப்படும் கைத்தறித்துணி விற்பனைகள், ஊக்கமளிப்புத் திட்டங்களாலும், அதன் பணியாளர்களுக்கு ரொக்கப் பரிசளிப்புகளாலும் துரிதப்படுத்தப்பட்டு வருகின்றன.

### தமிழ்நாட்டில் கூட்டுறவு நூற்பாலைகள்

நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களுக்கு நியாயவிலைகளில் தரமான நூலை வழங்குதல், நூலின் அங்காடி விலைவாசியை நிலைப்படுத்துதல் ஆகிய நோக்கங்களுடன், தமிழ்நாட்டில், அரசு 12 கூட்டுறவு நூற்பாலைகளை நிறுவியுள்ளது. சென்னை, நீலகிரி, தருமபுரி ஆகிய மாவட்டங்களைத் தவிர, ஒவ்வொரு மாவட்டத்திலும் சுமார் 2 இலட்சக் கதிர்கள் அமைக்கப்பட்ட திறனைக் கொண்டு 20 கவுண்டுகளிலிருந்து 100 கவுண்டுகள் வரையான பல்வேறு கவுண்டுகள் கொண்ட பருத்தி நூலைத் தயாரிக்கும் ஒரு நூற்பாலை நிறுவப்பட்டுள்ளது. இவ் வாலைகளின் மொத்தஞ் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ.367.21 இலட்சமாக உள்ளது. அதில், அரசின் பங்கு மூலதனம் ரூ.202.46 இலட்சமாக இருந்தது. நிதித் தேவைகளைச் சமாளிக்கக் கூட்டுறவு நூற்பாலைகளுக்கு வகை செய்யும்பொருட்டு, அவ்வப்போது அரசு நேர்வழிக் கடன்களை அளித்துள்ளது. இக் கடன்களின்கீழ், 1974ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நிலுவைத் தொகை ரூ.104.97 இலட்சமாக இருந்தது. நிறுவன நிதியமைப்புகளிலிருந்து அவற்றால் வாங்கப்பட்ட காலவரைக் கடன்களையும், நடைமுறைக் கடன்களையும் திருப்பிச்

செலுத்துவதற்காக, நூற்பாலைகளுக்குச் சாதகமாக உத்தரவாத உதவியையுங்கூட ரூ.975.50 இலட்சமளவிற்கு அரசு நீடித்துள்ளது. பல்வேறு கவுண்டுகள் நூலின் சராசரி வருடாந்தர உற்பத்தியானது, ரூ. 9 கோடிக்குச் சிறிது அதிகமான மதிப்புள்ள சுமார் 66,000 மூட்டைகளாக வுள்ளது. உற்பத்தியில் சுமார் 80 சதவீதம், மாநிலச் சங்கத்தால், மாநிலத்திலுள்ள விவசாயச் சங்கங்களுக்கு விநியோகத்திற்காக எடுத்துக்கொள்ளப்படுகிறது.

தமிழ்நாட்டில் நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களின் நிர்வாகக் கண்காணிப்பு, கைத்தறி இயக்குநர் (Director of Handloom) வசம் ஒப்படைக்கப்பட்டுள்ளது.

## 9. இதரத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்

**பொது:** குடிசைத் தொழிலுட்பட ஒரு தொழிலில் ஈடு பட்டுள்ள தொழிலாளர்களுக்காக, வேலைவாய்ப்பு அளித்தல், குறைந்த அல்லது சிறிய வருவாயுள்ள நபர்கள் தங்கள் சொந்தத் தொழில்களைத் தொடங்குவதற்கு வகைசெய்தல் ஆகியவற்றை முதன்மையான நோக்கமாகக் கொண்டு, ஒரு தொழிற் கூட்டுற வுச் சங்கம் நிறுவப்படுகிறது. நாட்டின் பொருளாதார அமைப் பின் மொத்தமான வளர்ச்சியின் ஒரு பகுதியாகத் தொழிற்கூட் டுறவுச் சங்கங்களை அமைத்தல் அரசால் ஊக்குவிக்கப்படுகிறது. மூலப்பொருள்களைக் கொள்முதல் செய்தல், மேம்படுத்தப்பட்ட அதே சமயத்தில் ஒப்பிடும் வகையில் அதிக விலையில்லாத தள வாடங்களைப் பெறுதல், நிலைமுதல் (Block Capital) தேவை களுக்காகவும், நடப்பு நடைமுறை முதல் தேவைகளுக்காகவும் நிதியுதவி பெற நியாயமான நிபந்தனைகள் பேரில் நீண்டகால, குறுகியகால நிதியாதாரங்களைக் கண்டறிதல், முடிவு செய் யப்பட்டபொருள்களை விற்பனை செய்தல் ஆகிய துறைகளில் பற்பல பிரச்சினைகளைக் குடிசைத் தொழில்கள் எதிர்நோக்கின. கைத்தொழிலாளிகளையும், நுட்பக் கைவினைஞர்களையும் கொண்டு கூட்டுறவுச் சங்கங்களாக அமைத்தலானது, இச் சிரமங்களைப் போக்குவதற்கு அவர்களுக்கு உதவுமென்று எதிர்பார்க்கப்பட்டது. ஆனால், கைத்தொழிலாளர்களும், நுட்பக் கைவினைஞர்களும் பெரும்பாலும் ஏழைகளாயிருப்பதால், அத்தகைய கூட்டுறவுச் சங்கங்களைத் தொடங்குவதற்காகவும், செயற்படுத்துவதற்காகவும் அவசியமான குறைந்தபட்ச மூலதனத்தைத் தங்கட்குள்ளேயே அவர்கள் எழுப்பமுடியாமலிருக்கின்றனர். கூட்டுறவுச் சங்கங் கள் எங்கெங்கு தொடங்கப்பட்டாலும், அவற்றின் உறுப்பினர் களால் எதிர்நோக்கப்பட்ட அதே மாதிரியான சிரமங்களை அவை

அனுபவித்து, அச் சிரமங்களை வெற்றிகரமாகச் சமாளிப்பதற்குப் போதிய அளவு பலமில்லாதவையாக அவை இருந்தன.

விடுதலையடைந்த பின்னர், 1948ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திய இந்திய அரசின் 'தொழிற்கொள்கைத் தீர்மானம்' 'குடிசை, சிற்றளவுத் தொழில்கள், தனிநபர்களுக்காகவும் கிராம அல்லது கூட்டுறவுத் தொழில்முயற்சிக்காகவும் வாய்ப்பையும், வேலையிழந்த – இடம்பெயர்ந்த நபர்களின் – மறுவாழ்வுக்காக வழிவகைகளையும் அளிப்பதால், அவை தேசியப் பொருளாதார அமைப்பில் மிக முக்கிய ஒரு பணியைப் பெற்றுள்ளன. இத் தொழில்கள், குறிப்பாக, உள்ளூர் நிதியாதாரங்களை மேலான முறையில் பயன்படுத்துவதற்காகவும், உணவு, துணி, விவசாயக் கருவிகள் போன்ற சிலவகையான அத்தியாவசிய நுகர்பொருள்களைக் குறித்து உள்ளூர்த் தன்னிறைவை அடைவதற்காகவும் ஏற்றவையாக உள்ளன' என்று கூறியது. இத் தொழில்களுக்கான நிறுவன வடிவத்தைப் பரிசீலித்து, 'முதன்மையான குறிக்கோள்களி லொன்று, தொழிலின் இத் துறையில், தனிப்பட்ட ஒரு கூட்டுறவு ஒருதலைப்பட்சத்தை அளிப்பதாக விருக்கும்' என்று அத் தீர்மானத்தில் இந்திய அரசு மேலுங் கூறி, நாடு முழுவதிலும் சிற்றளவுத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் அமைத்தலை எதிர்நோக்கியது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில், திட்டக் குழு, கிராமத் தொழில்கள் கிராம அபிவிருத்தித் செயல்திட்டங்களில் ஒரு மைய இடத்தைப் பெற்றுள்ளன வென்று வலியுறுத்தி, ஆகையால், அத் தொழில்களின் வளர்ச்சியானது விவசாய உற்பத்திப் பெருக்கத்தைப் போன்றே, அரசு நடவடிக்கையின் ஒரு பொறுப்பாக இருக்கவேண்டு மென்று வலியுறுத்தியது. குடிசைத் தொழிலாளர்களை, அவர்கள் இடைநிலையாளர்கள்மீது சார்ந்திருப்பதிலிருந்து மீட்பதற்காகவும், தொழில்நுட்ப வழிகாட்டலும், இதர உதவி நடவடிக்கைகளும், கிராமக் கைத்தொழிலாளர்களுக்குச் செல்வதை உறுதிப்படுத்துவதற்காகவும், இக் கைத்தொழிலாளர்களைத் தொழிற்கூட்டுறவுச் சங்கங்களாக அமைப்பது அவசியமாகவுள்ளது என்று திட்டக்குழு கருதியது. குடிசை, சிற்றளவுத் தொழில்களென்ற விரிவான வகுப்பிற்குள் பல்வேறு வகைத் தொழில்களுக்கு அதிகமான கவனத்தைச் செலுத்தும்பொருட்டு, மைய அரசு பல்வேறு வாரியங்களை அமைத்துள்ளது. அவையாவன: 1952ஆம் ஆண்டில், அனைத்திந்தியக் கைத்தறி வாரியமும், 1952ஆம் ஆண்டில், அனைத்திந்தியக் கைத்தொழில் வாரியமும், 1952ஆம் ஆண்டில் அனைத்திந்தியக் கதர், கிராமத் தொழில் ஆணைக்குழுவும், 1954ஆம் ஆண்டில் சிற்றளவுத் தொழில் வாரியமும், 1954ஆம் ஆண்டில், நார்க்

கயிறு வாரியமும், 1954ஆம் ஆண்டில் மையப் பட்டு வாரியமும், இவ் வாரியங்களால் தொடங்கி வைக்கப்பட்ட பல்வேறு உதவி நடவடிக்கைகளின் பயனாக, இத் தொழில்களி லொரு வேகப் படுத்தப்பட்ட வளர்ச்சி இருந்தது. இவ் வளர்ச்சியானது, இத் தொழில்துறைகளில் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சி களுக்குங்கூட உதவியது.

## 10. இந்தியாவில் இதரத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் தற்போதைய நிலை

பிற்சேர்க்கை I, 30–6–71ஆம் நாளன்று, பிரதமத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் எண்ணிக்கையையும், உறுப்பினர் எண்ணிக்கையையும் காட்டும். 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நெசவாளர் சங்கங்கள் நீங்கலாக, 34,282 பிரதமத் தொழிற் சங் கங்க ளிருந்தன. அவற்றுள், 15,072 அல்லது 44 சதவீதம் செயலி லிருந்தன. செயலி லிருந்த பிரதமச் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 10,32,113 ஆக விருந்தது. அதில், 2,669 சங்கங்களாகவும். 10,29,444 தனிநபர்களாகவும், மற்ற வர்களாகவும் இருந்தனர். தொழிற் சங்கங்களின் மொத்தம் செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் ரூ.11.81 கோடியாக இருந் தது. அதில், அரசிடமிருந்து ரூ.1.75 கோடியும், சங்கங்களிட மிருந்து ரூ.0.44 கோடியும் அடங்கியிருந்தன. அரசிடமிருந்து பெற்ற கடன் உதவியின் மூலம் தனிநபர்களும், மற்றவர் களும் செலுத்திய பங்கு மூலதனம் ரூ.0.60 கோடியாக இருந் தது. தங்கள் சொந்த நிதியாதாரங்களிலிருந்து, தனிநபர்களும், மற்றவர்களும் செலுத்திய பங்குமூலதனம் ரூ.9.01 கோடியாக விருந்தது. கடன்பெற்ற முதலின்கீழ், 30–6–71ஆம் நாளன்று நிலுவையிலிருந்த தொகை ரூ.22.85 கோடியாக விருந்தது. அதில், ரூ.8.30 கோடி அரசுக்கும், ரூ.6.78 கோடி மைய நிதியமைப்பு களுக்கும் ரூ.7.77 கோடி மற்றவர்களுக்கும் கொடுக்க வேண்டி யிருந்தன. இச் சங்கங்களின் மொத்த நடைமுறை முதல் ரூ.11.81 கோடியாக விருந்தது. பிரதமத் தொழிற் சங்கங்களின் உற்பத்தி மதிப்பு 1970–71ஆம் ஆண்டின்போது, ரூ.31.64 கோடியாக வும், விற்பனைகள் ரூ.34.09 கோடியாகவும் இருந்தன. 9,509 சங்கங்கள் மட்டுமே, அதாவது மொத்தச் சங்கங்களில் 27.77 சதவீதம் இலாபத்தில் வேலை செய்தன. அவற்றின் இலாபங்கள் ரூ.1.77 கோடியாக விருந்தன. சங்கமொன்றுக்குச் சராசரி இலா பம் சுமார் ரூ. 1,850 ஆக மட்டுமே வருகிறது.

1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், தொழிற்சங்கங்களின் கூட்டமைப்புகளுங்கூட இருந்தன. 19 மாநிலச் சங்கங்களிருந்தன.

அவற்றுள் 6 சங்கங்கள் செயலற்றுக் கிடந்தன. மற்றும், 123 மையச் சங்கங்க ளிருந்தன. அவற்றுள், 52 செயலற்றுக் கிடந்தன. கூட்டமைப்புகள், தங்கள் உறுப்பினர் சங்கங்களுக்கு விநியோகம், விற்பனை மற்றும் இதரச் சேவைகளை வழங்கியிருந்தன. மா நிலங்கள் சிலவற்றில், அவை கடன்களை வழங்கியும், மற்றும், அல்லது தாங்களே உற்பத்தியில் ஈடுபட்டு மிருந்தன. ஆயினும், தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சிக்கு அவற்றால் எடுக்கப்பட்ட நடவடிக்கை மிகச் சொற்பமாக இருந்தது. மா நிலச் சங்கங்களுக்கிடையே, மராட்டியத்திலும், தமிழ்நாட்டி லும் உள்ளவைகள் மட்டும், சில அளவுக்குக் குசராத்திலுள்ள சங்கமும், சுமாரான ஒரு பெரிய வாணிகத்தை வளர்த்துள்ளன.

1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், மாநிலச் சங்கங்களின் நடைமுறை முதல் ரூ.3.77 கோடியாக இருந்தது; அவற்றின் உற்பத்தியானது ரூ.0.56 கோடியாகவும், மூலப்பொருள்கள் விநியோகம் ரூ.0.071 கோடியாகவு மிருந்தன. நிலுவைக்கடன்கள் ரூ.2.29 கோடியாக விருந்தன. மையச் சங்கங்களைப் பொறுத்த மட்டில், அவற்றின் நடைமுறை முதல் 1970–71ஆம் ஆண்டின் போது ரூ.4.74 கோடியாகவும், உற்பத்தி ரூ.1.66 கோடி யாகவும், மூலப்பொருள்கள் விநியோகம் ரூ.1.11 கோடி யாகவு மிருந்தன. 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நிலுவைக் கடன்கள் ரூ.2.74 கோடியாக இருந்தன.

**தொழிற் கூட்டுறவு வங்கிகள்:** 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், மூன்று மாநிலத் தொழிற்கூட்டுறவு வங்கிகளிருந்தன. மைசூர், இராஜஸ்தான், தமிழ்நாடு ஆகிய மாநிலங்கள் ஒவ் வொன்றிலும் ஒரு வங்கி இருந்தது. மைசூரில் மட்டும் தொழிற் கூட்டுறவுக் கடனமைப்பு மூன்று அடுக்கானதாக இருந்தது. மற்ற இரண்டு மாநிலங்களில் அதாவது, தமிழ்நாட்டிலும், இராஜஸ்தானிலும், ஓர் இரண்டு அடுக்குக் கூட்டமைப்பு உள்ளது. மாநிலத் தொழிற் கூட்டுறவு வங்கி, தொழிற் கூட்டுறவுச் சங்கங் களுக்கும், கைத்தொழிலாளர்களுக்கும் நேரடியாக நிதியளிக்கிறது. மற்றும், குசராத்து, மராட்டியம், மைசூர், பஞ்சாப் ஆகிய மாநிலங்களில் 52 மையத் தொழிற்கூட்டுறவு வங்கிக ளிருந்தன. மாநிலத் தொழிற்கூட்டுறவு வங்கிகளைச் சீரமைத்து, அவைகளை மாநிலக் கூட்டுறவு வங்கிகளைப் போன்ற இயல்பான கூட்டுறவு நிதிவழங்கு மமைப்புகளுடன் கொண்டுவரும் பிரச்சினையானது சம்பந்தப்பட்ட மாநில அரசுகளின் ஆலோசனையின்கீழ் இருந்து வருகிறது. மாநிலத் தொழிற்கூட்டுறவு வங்கிகள், மாநிலக் கூட்டுறவு வங்கிகளுக்குச் சுதந்திரமாக, ரிசர்வ் வங்கியின் நிதி

யுதவி யளிப்பிற்காகவாவது அல்லது கடன் உத்தரவாதத் திட்டக் காரியத்திற்காகவாவது, ரிசர்வ் வங்கியால் அங்கீகரிக்கப்படாது என்று ரிசர்வ் வங்கி தெரிவித்த கருத்தையொட்டி, இப் பிரச்சினை மாநில அரசுகளின் ஆலோசனையில் உள்ளது.

## 11. தமிழ்நாட்டில் தொழிற்கூட்டுறவுச் சங்கங்களும் அவற்றின் செயற்பாடும்

**(அ) பொது முன்னேற்றம்:** 1956ஆம் ஆண்டில், பல்வேறு கிராம, சிற்றளவுத் தொழில்களில் ஈடுபட்டிருந்த 1,512 சங்கங்கள் தமிழ்நாட்டி லிருந்தன. அவ் வாண்டில், இச் சங்கங்கள் மீது, நிருவாகக் கண்காணிப்பு, கூட்டுறவு இலாகாவிலிருந்து தொழில், வாணிக இலாகாவிற்கு மாற்றப்பட்டது. கதர், கிராமத்தொழில் வளர்ச்சிக்காக, 'மாநிலக் கதர், மற்றும் கிராமத் தொழில் வாரியம்' அமைக்கப்பட்டதும். கிராமத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின்மீது, கண்காணிப்பு 1960ஆம் ஆண்டில் அவ் வாரியத்திற்கு மாற்றப்பட்டது. 2,068 சங்கங்களுள், 748 சங்கங்கள் இவ்விதம் மாற்றப்பட்டன. இவற்றுள், 1,430 பனைவெல்லத் தயாரிப்புச் சங்கங்க ளடங்கியிருந்தன. இதர வகைத் தொழிற்கூட்டுறவுச் சங்கங்கள் தொழில் வாணிக இயக்குநரின் கண்காணிப்பின்கீழ்த் தொடர்ந்திருந்தன. 1971 ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நெசவாளர் சங்கங்கள் நீங்கலாக 2,678 தொழிற் சங்கங்க ளிருந்தன. அவற்றுள், 667 சங்கங்கள் செயலற்றுக் கிடந்தன. செயலி லிருந்த சங்கங்களில் தனிநபர்களும், மற்றவர்களும் மட்டுமே உறுப்பினர்களாக விருந்தனர். உறுப்பினர் எண்ணிக்கை 2,53,889 ஆக விருந்தது. அவற்றின் மொத்த நடைமுறை முதல் ரூ.7.72 கோடியாக இருந்தது. அவற்றின் மொத்தப் பங்கு மூலதனம் ரூ.0.86 கோடியாக இருந்தது. அதில் அரசிடமிருந்து ரூ.0.99கோடியும்,சங்கங்களிடமிருந்து ரூ.0.010 கோடியும், அரசு கடனளிப்பு மூலம் பங்குக ளெடுத்துள்ள நபர்களிடமிருந்து ரூ.0.23 கோடியும், தங்கள் சொந்த நிதியாதாரங்களைக் கொண்டு பங்குமூலதனம் செலுத்திய நபர்களிடமிருந்து ரூ.0.53 கோடியும் அடங்கியிருந்தன. சங்கங்களின் கடன் பெற்ற முதலின்கீழ், 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நிலுவைக் கடன்கள் ரூ.2.10 கோடியாக இருந்தன. அவற்றில், அரசுக்கு ரூ.0.58 கோடியும், மைய நிதியமைப்புகளுக்கு ரூ.0.45 கோடியும், மற்றவர்களுக்கு ரூ.1.86 கோடியும் கொடுக்கவேண்டி யிருந்தன. 70—71ஆம் ஆண்டின்போது, அவற்றின் உற்பத்தி மதிப்பு ரூ.3.46 கோடியாகவும், விற்பனைகளின் மதிப்பு ரூ.6.32 கோடியாகவு மிருந்தன. 24 சங்கங்கள்

தங்கள் உறுப்பினர்களுக்கு ரூ.0.048 கோடி மதிப்பிற்கு மூலப் பொருள்களை வழங்கின. 1970–71ஆம் ஆண்டின்போது, 655 சங்கங்கள் ரூ.0.19 கோடி இலாபத்திலும், 1982 சங்கங்கள் ரூ.0.72 கோடி நட்டத்திலும், 41 சங்கங்கள் இலாபமும் நட்டமு மில்லாமலும் வேலைசெய்தன.

தமிழ்நாட்டில் இயங்குகின்ற பல்வேறு தொழிற்கூட்டுறவுச் சங்கங்கள், பிரதானமாகப் பல்வேறு இலாக்காக்களின் மூலம் அரசால் அமைக்கப்பட்டுள்ளன. இச் சங்கங்களின் நிருவாகம், நியமிக்கப்பட்ட இயக்குநர் குழுக்கள் வச முள்ளது. சங்கங்களின் மேலாளர்கள் தொழில் இலாகாவிலிருந்து அனுப்பப் பட்ட அதிகாரிகளாவர். நியமிக்கப்பட்ட இயக்குநருக்குப் பதிலாகப் படிப்படியாக, இயக்குநர்களைத் தேர்ந்தெடுப்பதே அரசின் உத்தேசமாகவுள்ளது. எனினும், உறுப்பினர்களின் பிற்பட்ட பொருளாதார நிலைமையின் காரணமாக, இது நிறைவேற்றப்படுவதற்கு நெடுங்காலமாகும். உறுப்பினர்கள், உடனே கோருவது வேலைவாய்ப்பும், கூலியுமே. நிறுவப்பட்ட தொழில்களில், தொழிலாளர்களுக்குக் கிடைக்கும் கூலியை ஒப்பிடும் போது தொழிற்கூட்டுறவுச் சங்கங்கள் அளிக்கும் கூலி சிறியதாக இருந்தாலும், அவை அவர்களுக்கு வேலையையும், கூலியையும் அளிக்கின்றன.

### (ஆ) சிலவகைத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் முன்னேற்றம்

**(i) கூட்டுறவுத் தேயிலைத் தொழிற்சாலைகள்:** தொழிற் கூட்டுறவுச் சங்கங்களுள், தேயிலைத் தொழிற்சாலைகள் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவையாகும். முதன்முதலாகத் தேயிலைத் தொழிற்சாலை, 1962ஆம் ஆண்டு தொடங்கப்பட்டது. முதலிரண்டு சங்கங்கள், 5 ஏக்கர் பரப்பளவுவரை சொந்தமாகவுடைய சிறு பயிரிடுபவர்களுக்குப் பயனளிப்பவையாக நிரூபித்ததால், 1965ஆம் ஆண்டு, தேயிலை வாரியத்தின் உதவியைக் கொண்டு, மேலும், 6 தொழிற்சாலைகளை அமைப்பதற்கான ஒரு முழுதுக்குமான திட்டம் தயாரிக்கப்பட்டது. தேயிலைத் தொழிற்சாலைகள், மாநிலத் தொழிற்கூட்டுறவு வங்கியால் தன் சொந்த நிதி ஆதாரங்களி லிருந்தாவது, அல்லது தேயிலை வாரியத்தால் அளிக்கப்பட்ட கடன்களி லிருந்தாவது அளிக்கப்பட்ட நிலைக் கடன்களைக் (Block Loans) கொண்டு, கட்டப்பட்டன. நடைமுறை முதலுக்காகவுங்கூட, இவ் வங்கி கடன்களை அளித்துள்ளது. ஒரு தொழிற்சாலையின் மூலதனச் செலவு ரூ.9.10 இலட்சமாக இருந்தது. அதில் பங்குமூலதனம் வழியாக ரூ.3.10

இலட்சமும், தேயிலை வாரியத்திலிருந்து கடனாக ரூ.6 இலட்சமும் எழுப்பப்பட்டன. இந்த 8 தேயிலைத் தொழிற்சாலைகளனைத்தும், நீலகிரி மாவட்டத்தில் அமைக்கப்பட்டுச் சுமார் 45 டன்கள் பச்சைத் தேயிலைகளைக் கையாண்டு, 11 டன்கள் தேயிலையை நாள்தோறும் தயாரித்தன. இத் தேயிலைத் தொழிற்சாலைகள் உறுப்பினர்களிடமிருந்து தேயிலைகளை வாங்கி, அவற்றைத் தயாரிக்கப்பட்ட தேயிலையாகப் பதனப்படுத்தி, அவற்றைக் கொச்சியிலும், குனூரிலும் ஏலங்களில் விற்பனை செய்கின்றன. சிறிய பயிரிடுபவர்களால் சொந்தமாக வைத்துக் கொள்ளப்பட்டுள்ள சுமார் 24,000 ஏக்கர்த் தேயிலை நிலங்களுள், சுமார் 8,000 ஏக்கர்கள் இந்தத் தொழிற்சாலைகளால் தழுவப்படுகின்றன. பயிரிடுபவர் தம்மால் வழங்கப்பட்ட பச்சைத் தேயிலைகளுக்காக ஒரு மேலான விலையைப் பெறுகிறார். அவர் தொழிற்சாலையிலிருந்து உரங்களையுங்கூட ஓராண்டில் முதற்பருவத்திற்காக அரை விலையிலும், இரண்டாவது பருவத்திற்காக முழு விலையிலும் பெறுகிறார். இவ் விலை, பச்சைத் தேயிலைகளின் விற்பனைத் தொகைகளிலிருந்து, சிறு தவணைகளில் வசூலிக்கப்படுகின்றது. இத் தொழிற்சாலைகள், தயாரிக்கப்பட்ட தேயிலையின் பெரும்பாகத்தைத் தலைமைத் தேயிலைச் சந்தையான கொச்சியிலும், எச்சத்தைக் குனூரிலும் விற்பனை செய்கின்றன. 1973–74ஆம் ஆண்டின்போது, இந்த 8 தேயிலைத் தொழிற்சாலைகளும், 24.62 இலட்சம் டன் தேயிலையைத் தயாரித்து, ரூ.126 இலட்சம் மதிப்பிற்குத் தேயிலையை விற்பனை செய்தன.

இக் கூட்டுறவுத் தேயிலைத் தொழிற்சாலைகள் வெற்றிகரமாகச் செயற்பட்டு, இலாபங்களை ஈட்டி வந்துள்ளன. அவை தங்கள் கடன்பாக்கியை, வங்கிக்கும், தேயிலை வாரியத்திற்கும் காலந்தவறாது திருப்பிச் செலுத்தியுள்ளன. நாளடைவில், தேயிலை வாரியத்தின் கடன் திருப்பிச் செலுத்தப்படுகிறபோது, உறுப்பினர்கள் தங்கள் பச்சைத் தேயிலைகளுக்காக அவர்கள் தற்போது பெறுகின்ற விலைகளைவிட மேலான விலைகளையுங்கூட எதிர்பார்க்கலாம். இத் திட்டம் வெற்றிகரமாகச் செயற்பட்டு வந்துள்ளது. வட்டிக்கடைக்காரர்கள், தேயிலைத் தொழிற்சாலைகள், அவைகளின் தரகர்கள் ஆகியவர்களின் பிடியிலிருந்து காப்பாற்றப்பட்ட ஐயாயிரத்துச் சில்லரை சிறிய தேயிலைத் தோட்டக்காரர்களுக்கு அஃது ஓர் இரண்டாவது வருமானத்தை அளித்துள்ளது. மேலும் கூட்டுறவுத் தொழிற்சாலைகள் அமைக்கப்பட்டு வருகின்றன.

'நீலகிரி சிறிய தேயிலை பயிரிடுபவர்கள் சேவைத் தொழிற்கூட்டுறவுச் சங்கம்' (Nilgiris Small Tea Growers Service Industrial Co-operative Society) 1966ஆம் ஆண்டில், சிறிய தோட்டப்பயிர்களுக்கு உரவகைகள், பூச்சிக்கொல்லிகள் முதலியவற்றின் உபயோகத்தின் மூலம் தேயிலைகளின் மேலான விளைச்சலைப் பெற உதவுவதற்கு நிறுவப்பட்டது. இச் சங்கம் மொத்தமாக எருவைக் கொள்முதல் செய்து அதைப் பல்வேறு தேயிலைத் தொழிற்சாலைகளுக்கு விநியோகிக்கின்றது. தேயிலைத் தொழிற்சாலைகள், முறையே அதை ஒரு கட னடிப்படையில் தேயிலை பயிரிடுபவர்களுக்கு வழங்குகின்றன. இக் கடன், உறுப்பினர்களால் வழங்கப்படும் பச்சை இலைகளின் விற்பனைத் தொகையிலிருந்து ஈடுசெய்யப்படுகிறது. நாளடைவில் இச் சேவாசங்கம், சிறிய தேயிலை விளைவிப்பவர்களுக்கு மறுநடுதல் (Replanting), உரமிடுதல், தோட்டங்களை மேலான முறையில் பராமரித்தல் ஆகியவற்றிற்காக வல்லுநர் அறிவுரைகளையும் வழங்கவேண்டு மென்று உத்தேசிக்கப்படுகிறது. நெருக்கமான பருவத்தின் போது, 'நெருக்கடி விற்பனை' (Distress Sales) எதுவுமில்லாமல் இருக்கும் பொருட்டு, நாளடைவில் தன் சொந்தக் கிடங்குகளை வைத்துக்கொள்வதுங்கூடச் சங்கத்தின் நோக்கமாக வுள்ளது.

**(ii) தீக்குச்சித் தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்:** தீக்குச்சித் தொழிலில் 15 சங்கங்கள் அமைக்கப்பட்டு, அவற்றில் 11 சங்கங்கள், தொழிலாளர்—உறுப்பினர்களை மட்டும் கொண்டுள்ளன. இந்த 11 சங்கங்கள், ஒரு பொதுவான பட்டியல் சீட்டின்கீழ் (Label) தீக்குச்சிகளைத் தயாரிக்கின்றன. 1966–67ஆம் ஆண்டில், அவற்றின் உற்பத்தி ரூ.10.78 இலட்ச மதிப்பிற்கு இருந்தது. இச் சங்கங்களில் 2,111 உறுப்பினர்க ளிருந்தனர். இதர 4 சங்கங்கள் சிறிய தீக்குச்சித் தயாரிப்பவர்களுக்காக வுள்ளன. அவை, உறுப்பினர்—தயாரிப்பாளர்களின் தீக்குச்சிகளை மிகச்சிறந்த அனுகூலத்திற்கு விற்பனை செய்யும் சேவை நிறுவனங்களாக வுள்ளன. மொத்தக் கொள்முதல் செய்தல், உறுப்பினர்களுக்கு மூலப்பொருள்களை விநியோகித்தல், தரக்கட்டுப்பாட்டைப் பராமரித்தல் போன்ற இதரப் பணிகளையுங்கூட அவை புரிகின்றன. ஒரு சேவைச் சங்கம், அதனுல் பின்பற்றப்பட்ட ஒரு பொதுவான பட்டியல் சீட்டின்கீழ் தீக்குச்சிகளைத் தயாரிக்கும் சுமார் 100 உறுப்பினர்களைக் கொண்டுள்ளது. இச் சங்கங்களில் முதலானது, 1964ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டது. 1966–67ஆம் ஆண்டின்போது,

அவற்ருல் செய்யப்பட்ட விற்பனைகளின் மதிப்பு ரூ.80.30 இலட்சமாக இருந்தது.

**(iii) உலோகத் தொழிலாளர்கள் சங்கங்கள்:** 27 உலோகச் சங்கங்க ளுள்ளன. இவை ரூ.58.75 இலட்சத்திற்கு மதிகமான வருடாந்தரப் புரள்வைப் பெற்று ஒவ்வோர் ஆண்டும் ரூ. 6 இலட்சத்தைக் கூலியாகக் கொடுக்கின்றன. உலோகக்கட்டிகளையும், உலோக உதிரித்துண்டுகளையும், உலோகச் சங்கங்களால் தேவைப்படுகின்ற உலோகத் தகடுகளாகவும், சக்கரவில்லைகளாகவும் (Discs) மாற்றுகின்ற ஒரு கூட்டுறவு உலோக உருட்டாலை (Rolling Mills) திருச்சியில் உள்ளது.

**(iv) செங்கல் தொழிலாளர் சங்கங்கள்:** இச் சங்கங்களில் பெரும்பாலானவை திருப்திகரமாகச் செயற்படுகின்றன. மேலும், முன்னேற்றமடைவதற்கான வாய்ப்புகளையும் அவை பெற்றுள்ளன. இவை, மேம்படுத்தப்பட்ட உற்பத்தி முறைகளைப் பெரும்பாலும் பயன்படுத்தி, உயர்தரமான செங்கற்களைத் தயாரிக்கின்றன.

**(v) கைத்திறன் தொழிற் சங்கங்கள்:** கைத்திறன் தொழிற் சங்கங்கள், கிராமங்களில் பயிற்சி பெற்ற கைத்தொழிலாளர்களுக்கும், கைவினைஞர்களுக்கும் வேலைவாய்ப்பை வழங்குவதற்கு அமைக்கப்பட்டுள்ளன. விளையாட்டுப் பொருள்களையும், பொம்மைகளையும், பாய்களையும், பிரம்புச் சாமான்களையும், பனையோலைச் சாமான்களையும், கல்விக்கிரகங்களையும், மரச்சாமான்களையும், கலைத்தட்டுகளையும், இச் சங்கங்கள் தயாரிக்கின்றன. 1968ஆம் ஆண்டு மார்ச்சு இறுதியில், 10,000–க்குமதிகமான உறுப்பினர்களைக் கொண்ட அத்தகைய 137 சங்கங்க ளிருந்தன. பாரம்பரியக் கலைகளையும், கைத்தொழில்களையும் பராமரிப்பதற்கு அவை உதவியுள்ளன. ஆண்டொன்றுக்குச் சுமார் ரூ.23 இலட்சமுள்ள ஒரு விற்பனைப் புரள்வை அவை பெற்றுள்ளன. பிரதமச் சங்கங்களால் தயாரிக்கப்பட்ட பொருள்களை விற்பனை செய்வதற்காக, 1960ஆம் ஆண்டில், ஒரு தலைமைச் சங்கம் அதாவது, 'சென்னை மாநிலக் கைத்திறன் தொழிற்கூட்டுறவு விற்பனைச் சங்கம்' (The Madras state Handi Crafts Co-operative Societies)தொடங்கப்பட்டது. 1961ஆம் ஆண்டில், தொழில் இலாகாவின் விற்பனை நிலையங்களில் சில, இந்த விற்பனைச் சங்கத்தின் கண்காணிப்பிற்கு மாற்றப்பட்டன. இச் சங்கம், 1962ஆம் ஆண்டில், மாநிலங்களுக் கிடையேயான ஒரு விற்பனைக் கேந்திரத்தைப் புதுடில்லியில் திறந்துள்ளது. மொத்தத்தில் 9 விற்பனைக்கேந்திரங்களையும், 2 சில்லரை விற்பனை நிலையங்களையும் அது நடத்தி

வருகிறது. 1967–68ஆம் ஆண்டின்போது, அது ரூ.9.24 இலட்சம் மதிப்புள்ள கைத்திறன் தொழிற்பொருள்களைக் கொள் முதல் செய்தது. இந்த வேலைப்பாடமைந்த கலைப்பொருள்கள் சுற்றுலாப் பயணிகளிடையேயும், அயல்நாட்டவர்களிடையேயும் பெருமளவில் கோரப்படுகின்றன.

**(vi) நார்க் கயிறு தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்:** இவை இத் தொழிலில் ஈடுபட்டுள்ள கிராமமக்களுக்கு உதவி செய்வதற்கும், அவர்கட்குத் தொடர்ச்சியான வேலையையும், நியாயமான கூலியையுங் கொடுப்பதற்கும் அமைக்கப்பட்டுள்ளன. 1968ஆம் ஆண்டு மார்ச்சு இறுதியில், ஆண்டொன்றுக்கு ரூ.10 இலட்சம் புரள்வைக் கொண்ட சுமார் 35 சங்கங்க ளிருந்தன. இரண்டு மாவட்ட மட்டத்து நார்க்கயிறு விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள், ஒன்று நாகர்கோவிலிலும், மற்றொன்று சேலத்திலும் உள்ளன. இணைக்கப்பட்ட பிரதமச் சங்கங்களில் தயாரிக்கப்பட்ட பொருள்களை அவை விற்பனை செய்கின்றன.

**(vii) டாக்சி, ஆட்டோரிக்ஷா** (Auto-Rickshaw) **தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்:** இதுவரை 22 அத்தகைய சங்கங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன. அவை தங்கள் உறுப்பினர்கட்குத் தவணைக்கொள்முதல் முறையின்பேரில் 286 மகிழுந்துகளையும் (Cars) 221 ஆட்டோரிக்ஷாக்களையும் விற்பனை செய்துள்ளன. இச் சங்கங்களுக்கு ரூ.87.47 இலட்சம், அரசாலும், தொழில் வங்கியாலும் வழங்கப்பட்டுள்ளன.

**(viii) தொழில்நுட்பக் கூட்டுறவுச் சங்கங்கள்:** அண்மையாண்டுகளில், தொழிற்கூட்டுறவுத் துறையில் ஒரு முக்கிய வளர்ச்சியானது, தொழில்நுட்பத் தகுதிபெற்ற நபர்களால் கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்படுவதாகும். தகுதிபெற்ற வேலையில்லாத நபர்களின் நன்மைக்காகக் கீழ்க்காணும் மூன்று வகையான கூட்டுறவுச் சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

(1) பொறியியல் பொருள்களின் உற்பத்தியை மேற்கொண்டு தொழில்நுட்பமுள்ளவர்களை ஊழியர்களாக அமைத்துக்கொள்ளும் சங்கங்கள்.

(2) பணிக் கொட்டகைகள் முதலியவற்றை அமைப்பதற்கு ஏற்பாடு செய்தும், தொழில்நுட்பமுள்ளவர்கள் தங்கள் சொந்தத் தொழிலை அமைப்பதற்கு உதவிபுரிந்தும் வருகின்ற சேவை வகையான சங்கங்கள்.

(3) படித்து வேலையில்லாத பெண்மணிகளின் நன்மைக்காக உற்பத்திச் செயல்திட்டங்களைக் கொண்ட கூட்டுறவுச் சங்கங்கள். இவ் வகையான சங்கங்களை யமைப்பதோடு, படித்து வேலையில்லாதவர்களுக்கு வேலைவழங்கும் நோக்கத்துடன், அவர்கள் நடப்புச் சங்கங்களில் உறிஞ்சப்படுவதற்காகப் பயிற்சியும் ஏற்படுத்தப்படுகின்றது. 1973–74ஆம் ஆண்டின் போது 5 இலட்ச வேலைவாய்ப்புச் செயல்திட்டத்தின்கீழ் (Half A Million Job Programme), 13 பயிற்சித் திட்டங்கள் அரசால் ஒப்பளிக்கப்பட்டன. இத் திட்டங்களில், 85 பொறியியல் பட்டதாரிகளும், 148 பட்டயம் பெற்றிருப்பவர்களும் (Diploma-Holders), 314 தொழிற்பயிற்சி நிலையத்தின் சான்றிதழ் (I. T. I. Certificate) பெற்றிருப்பவர்களும், 350 இதரத் தகுதி பெற்ற நபர்களும், பொறியியல், உந்துபணி (Auto Servicing) மின்இயல், மின்அணு இயல் (Electronics), தச்சுத்தொழில், தையல்தொழில் போன்ற பல்வேறு துறைகளில் பயிற்சி பெறுவர். 1974–75ஆம் ஆண்டின்போது, ரூ.4.06 இலட்சம் பயிற்சிச் செலவாகவும், ரூ.11.34 இலட்சம் கூட்டுறவுச் சங்கங்களை யமைத்த நபர்களுக்குப் பங்குமூலதனக் கடன்களாகவும் அளிக்கப்பட்டன. இந்தக் கூட்டுறவுச் சங்கங்களில் பங்கு ஈடுபாடாக ரூ.27.78 இலட்சம் ஒப்பளிக்கப்பட்டது. 50 இலட்சத் தொழில் வாய்ப்புத் திட்டத்தின்கீழும், தொழில்நுட்பத் தகுதி பெற்ற நபர்களால் சுமார் 800 நபர்கள் வேலைவாய்ப்பு வசதியைக்கொண்ட 23 கூட்டுறவுச் சங்கங்கள் பதிவு செய்யப்பட்டுள்ளன.

(ix) **இதரவகைச் சங்கங்கள்:** தச்சுத் தொழில், கருமாரத்தொழில், ஆபரணக்கல் வெட்டுதல், பூட்டுகள் தயாரித்தல் முதலியனபோன்ற இதரச் சிறு தொழில்களுக்காகவுங் கூடச் சங்கங்கள் உள்ளன.

(x) **சென்னை மாநிலச் சிற்றளவுத் தொழிற்சங்கம்** (Madras State Small Scale Industrial Society): இது பிரதமத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களாலும், சிற்றளவுத் தொழிற்சாலைக்காரர்களாலும், தேவைப்படுகின்ற மூலப்பொருள்களைக் கொள்முதல் செய்வதற்கும், விநியோகிப்பதற்கும் ஏற்பாடு செய்கின்ற, ஒரு மாநிலமட்டத்து நிறுவனமாகும்.

### (இ) தொழிற் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசுதவி

தொழிற் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பல்வேறு வகையான உதவியை அரசு வழங்கியுள்ளது. சங்கங்களில் பங்குமூலதனமாக

முதலீடு செய்யப்படுவதற்காக, ஓர் உறுப்பினருக்கு ரூ.20 முதல் ரூ.2,000 வரை பரவியுள்ள பங்குமூலதனக் கடன்கள் அளிக்கப்படுகின்றன. இக் கடன்கள் எளிய தவணைகளில் கூலியிலிருந்து பிடிப்பதன் மூலம் வசூலிக்கப்படுகின்றன. சங்கங்கள் அவசியப்படும் கடன்வாங்கும் சக்தியைப் பெறும் பொருட்டு, தெரிந்தெடுக்கப்பட்ட தொழிற்சங்கங்களின் காப்புநிதிக்காக மானியங்கள் அளிக்கப்படும். கிடங்குகளைக் கட்டுவதற்காகவும், ஒருசில சங்கங்களுக்குக் கடன்களும், மானியங்களுங்கூட அளிக்கப்படுகின்றன. பொருளாதாரத்தில் பின் தங்கிய வகுப்பினர்களுக்காக அமைக்கப்பட்ட சங்கங்களைப் பொறுத்தமட்டில், கருவிகளையும் இயந்திரங்களையும் வாங்குவதற்காகவும், பணிக்கொட்டகைகளைக் கட்டுவதற்காகவும் கடன்களும், உதவித்தொகைகளும் அளிக்கப்படுகின்றன. சிறிய சங்கங்களுக்குச் சிப்பந்தி சாதல்வார் செலவுகளுக்காக மானியங்கள்கூட ஒப்பளிக்கப்படுகின்றன. இலாகா சிப்பந்திகளின் சேவைகள் (மேலாண்மைச் சிப்பந்தி அல்லது தொழில்நுட்பச் சிப்பந்தி) இலவசமாக அல்லது சங்கத்தின் நிதிநிலைமையைப் பொறுத்துச் செலவின் ஒரு பகுதி, அல்லது முழுச்செலவு வசூலிக்கப்படும் அடிப்படையின் பேரில், சங்கங்களுக்கு உதவப்படுகின்றன. தொழில்-வாணிக இயக்குநர், இச் சங்கங்களுக்குக் கட்டுப்படுத்தப்பட்ட பொருள்களையும், கிடைப்பதற்கரிய மூலப் பொருள்களையும் வழங்குவதற்கு ஏற்பாடு செய்கிறார். சரக்குச் சாமான்களைக் கொள்முதல் செய்யும் துறையில், இலாகா அமைப்புகளுக்கு அடுத்தபடியாகத் தொழிற்கூட்டுறவுச் சங்கங்களுக்கு முன்னுரிமை வழங்க அரசு இலாக்காக்கள் கேட்டுக் கொள்ளப்பட்டுள்ளன.

### (ஈ) தமிழ்நாடு மாநிலத் தொழிற் கூட்டுறவு வங்கி

1961ஆம் ஆண்டில், சென்னை மாநிலத் தொழிற்கூட்டுறவு வங்கி நிறுவப்படும்வரை, தொழிற்கூட்டுறவுச் சங்கங்கள் அரசு இலாகாமூலம் மட்டுமே நிதியுதவப்பட்டன. இவ் வங்கி, பிரதானமாகத் தொழிற்கூட்டுறவுச் சங்கங்களுக்கு நிதியுதவ அமைக்கப்பட்டது. இவ் வங்கியின் உறுப்பினர்கள், தொழிற்கூட்டுறவுச் சங்கங்களாகவும், சிற்றளவுத் தொழிலமைப்புகளாகவும், தனிநபர்களாகவு முள்ளனர். 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், இவ் வங்கி, 328 தொழிற்கூட்டுறவுச் சங்கங்களையும், 43 தனிநபர்களையும்; தன் உறுப்பினர்களாகக் கொண்டிருந்தது. அதன் மொத்தப் பங்கு மூலதனம் ரூ.48.91 இலட்சமாக இருந்தது. அதில், அரசிடமிருந்து ரூ.25.30 இலட்சமும், கூட்டுறவுச் சங்கங்களிடமிருந்து ரூ.23.25 இலட்சமும், தனிநபர்களிடமிருந்து

ரூ.0.36 இலட்சமும் அடங்கியிருந்தன. 1971–72ஆம் ஆண்டி னிறுதியில், அது ரூ. 84.92 இலட்சம் அளவிற்கு வைப்புகளைப் பெற்றிருந்தது. வங்கியால் பெற்ற, ஆறு மாதங்களுக்கு அதிக மான காலமுள்ள தவணை வைப்புகளின்மீது ரூ. 25 இலட்சமள விற்கு, அசலையும், வட்டியையும் அரசு உத்தரவாதமளித் துள்ளது. அதன் மொத்த நடைமுறை முதல் ரூ.193.26 இலட்சமாக விருந்தது. அரசிடமிருந்தும், தேச வங்கியிட மிருந் தும் பெற்ற இதரக் கடன் முதல், 1972ஆம் ஆண்டுச் சூன் இறுதி யில், ரூ.34.69 இலட்சமாக இருந்தது. 1971–72ஆம் ஆண்டின் போது, அது ரூ.92.53 இலட்சமளவிற்குக் கடன்களை (ரொக்கக் கடனுகவும், கடனுகவும்) அளித்தது. 1963–64ஆம் ஆண்டில், ரூ.16.74 இலட்சம் மட்டுமே வழங்கியிருந்தது. 30–6–72ஆம் நாளன்று, நிலுவையிலிருந்த ரூ.141.19 இலட்ச மொத்தக் கடன்களில் ரூ.136.74 இலட்சம் தொழிற் கூட்டுறவுச் சங்கங் களைக் குறித்தும், ரூ.4.45 இலட்சம் தனிநபர்களைக் குறித்தும் இருந்தன. அது, 1971–72ஆம் ஆண்டின்போது, ரூ.2.2 இலட் சம் இலாபத்தில் இயங்கி, 3 சதவீதம் இலாப ஈவைத் தெரி வித்தது. இதுவரை, இத் தொழில் வங்கியை ஒரு தலைமை வங்கி யாக ரிசர்வ் வங்கி அங்கீகரிக்கவில்லை. எனவே, ரிசர்வ் வங்கி யால் அளிக்கப்படும் மறுநிதி வசதிகளையும், இதரக் கடன் உத்தர வாத வசதிகளையும், இவ் வங்கி பெறமுடியாம லுள்ளது. தன் உறுப்பினராகச் சேர்க்கப்பட்ட தொழிற் கூட்டுறவுச் சங்கங் களுக்கும், சிற்றளவுத் தொழிலமைப்புகளுக்குங்கூட அது கால முறைக் கடன்களை வழங்குகிறது. ஒரு பிரதமத் தொழிற் கூட்டுறவுச் சங்கத்திற்காக ரூ. 5 இலட்சமும், ஒரு மைய அல்லது தலைமைத் தொழிற் கூட்டுறவுச் சங்கத்திற்காக ரூ.10 இலட்சமும், ஒரு சிற்றளவுத் தொழிலமைப்புக்காக ரூ.2 இலட்சமும், உயர்ந்த பட்சக் கடன் அனுமதிக்கப்படுகின்றது. கடன்கள் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய உச்சக் காலவரை ஐந்தாண்டுக் கால மாகும். தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் கடன் மனுக்களும், சிற்றளவுத் தொழிலமைப்புகளின் கடன் மனுக்களுங்கூட, தொழில் இலாகாவின் மாவட்ட அதிகாரிகளால் பரிசீலிக்கப் பட்டுத் தொழில் வாணிகத்துறை இயக்குநரின் பரிவுரைகளின் பேரில் கடன்களை வங்கி ஒப்பளிக்கிறது.

## 12. நிலைமையை விவரிக்கும் பட்டியல்

1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், இந்தியாவிலும், தமிழ் நாட்டிலும், தொழிற் கூட்டுறவுச் சங்கங்களின் நிலைமையைக் காட்டும் ஒரு விவரப்பட்டியல், பிற்சேர்க்கையில் கொடுக்கப்பட் டுள்ளது.

பிற்சேர்க்கை

**பிரதமத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்** (தொழில் வாரியாக)

30-6-1971ஆம் நாளில் (ரூபாய், இலட்சக்கணக்கில்)

| சங்க வகைகள் | சங்கங்களின் மொத்த எண்ணிக்கை | செயலற்ற சங்கங்கள் எண்ணிக்கை | செயலிலுள்ள சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை | செலுத்தப்பட்ட பங்கு மூலதனம் | | நடைமுறை முதல் | கடன் பெற்ற முதல் | | உற்பத்திக்காக அமர்த்தப்பட்டவர் எண்ணிக்கை | உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் மதிப்பு 1970-71-ல் | விற்பனை செய்யப்பட்ட பொருள்களின் மதிப்பு | இலாபத்தில் இயங்கிய சங்கங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | | | மொத்தம் | அரசு பங்கு மூலதனம் | | மொத்தம் | அரசிடமிருந்து | | | | |
| | (1) | (2) | (3) | (4) | | (5) | (6) | | (7) | (8) | (9) | (10) |
| தோலுரித்தலும் தோல் பதனிடுதலும் | 1902 (53) | 1396 (18) | 14,280 (1205) | 29·74 (0·69) | 1·16 (—) | 187·72 (14·66) | 79·45 (6·45) | 31·48 (0·16) | 6020 (1205) | 30·00 (3·98) | 34·22 (4·64) | 496 (24) |
| மட்கலச் சாமான்கள் தயாரித்தல் | 1281 (144) | 743 (45) | 22,778 (4,854) | 23·36 (2·74) | 3·48 (—) | 159·90 (26·01) | 77·93 (8·70) | 23·31 (0·23) | 10321 (4854) | 49·29 (11·84) | 57·46 (12·16) | 347 (50) |
| நெல், தானிய வகைகள் கைக்குத்தல் | 2012 (143) | 1373 (40) | 26,459 (5,004) | 31·31 (1·61) | 7·63 (—) | 246·97 (52·43) | 135·75 (30·17) | 53·62 (0·08) | 15,007 (5004) | 127·62 (25·86) | 144·54 (26·18) | 486 (53) |
| எண்ணெய் தயாரித்தல் | 3877 (176) | 2066 (38) | 58,014 (2,752) | 52·47 (4·83) | 1·25 (—) | 422·72 (121·80) | 254·42 (67·20) | 69·03 (0·38) | 16,570 (2752) | 592·01 (191·34) | 497·55 (178·19) | 1028 (24) |
| பனைவெல்லம் | 4869 (1550) | 2641 (398) | 253973 (202041) | 43·42 (9·70) | 0·12 (—) | 251·75 (112·30) | 43·67 (21·65) | 4·45 (0·05) | 2,21,983 (202047) | 275·97 (133·10) | 256·23 (110·62) | 1089 (404) |
| கரும்பு வெல்லமும், நாட்டுச் சர்க்கரையும் | 952 (20) | 510 (4) | 16,351 (979) | 45·07 (6·96) | 0·14 (—) | 156·22 (5·68) | 79·84 (5·05) | 34·56 (0·05) | 6567 (977) | 53·86 (0·05) | 57·27 (0·05) | 305 (6) |
| பழவகைகளையும், காய்கறி வகைகளையும் தகரடப்பிகளில் அடைத்தல் | 41 (2) | 37 (1) | 465 (57) | 2·03 (0·06) | 0·20 (—) | 7·30 (0·53) | 4·45 (60·50) | 3·70 (—) | 24 (—) | 0·44 (—) | 0·38 (—) | 1 (—) |

**பிரதமத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்** (தொடர்ச்சி)

| | (1) | (2) | (3) | (4) | | (5) | (6) | | (7) | (8) | (9) | (10) |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| இதரக் கிராமத் தொழில்கள் | 4493<br>(68) | 2616<br>(23) | 130459<br>(4,135) | 115·30<br>(1·23) | 15·38<br>(—) | 612·53<br>(25·84) | 288·04<br>(13·00) | 71·88<br>(0·03) | 21764<br>(4135) | 299·55<br>(8.55) | 345·36<br>(9·42) | 1433<br>(20) |
| கைத்திறன் கைத் தொழில்கள் | 2789<br>(159) | 1617<br>(35) | 64,207<br>(10, 221) | 46.97<br>(4.23) | 2.85<br>(0.63) | 319.41<br>(40.77) | 100.97<br>(9.44) | 57.90<br>(4.37) | 19125<br>(1925) | 129.26<br>(23.03) | 195.72<br>(28.92) | 848<br>(8) |
| பொது, பொறியியல்தொழில்கள் | 2125<br>(7) | 896<br>(—) | 38,674<br>(311) | 224.25<br>(1.58) | 46.25<br>(0.35) | 783.01<br>(27.10) | 298.65<br>(13.08) | 83.38<br>(9.54) | 15,903<br>(150) | 442.80<br>(10.68) | 463.29<br>(12.51) | 766<br>(1) |
| இரசாயனப் பொறியியல் தொழில்கள் | 577<br>(—) | 425<br>— | 38,674<br>— | 224.25<br>— | 41.25<br>— | 783.01<br>— | 164.32<br>— | 31.77<br>— | 1440<br>— | 47.81<br>— | 54.35<br>— | 160<br>— |
| தோல் பொருள்கள் | 1999<br>(9) | 1361<br>(1) | 15,244<br>(489) | 28.67<br>(0.31) | 1.72<br>(0.11) | 150.93<br>(9.54) | 69.24<br>(2.95) | 31.55<br>(1.36) | 7099<br>(13) | 47.81<br>(3.77) | 54.35<br>(4.20) | 598<br>(2) |
| கட்டடப் பொருள்கள் | 1135<br>199 | 589<br>(37) | 23762<br>(4451) | | | 276.06<br>(34.55) | 57.37<br>(1.83) | 4.96<br>(0.20) | 9456<br>(3981) | 130.80<br>(14.88) | 137.35<br>(16.53) | 263<br>(31) |
| பட்டுப்புழு வளர்ப்பு | 145<br>(1) | 98<br>(—) | 14,706<br>(447) | 5.25<br>(0.65) | 2.74<br>— | 18.44<br>(1.71) | 5.94<br>(0.65) | 4.35<br>(—) | 139<br>(—) | 1.39 | 6.42 | 55 |
| நார்க்கயிற்றுத் தொழில் | 662<br>(20) | 254<br>(8) | 97,137<br>(1109) | 21.09<br>(0.88) | 0.61<br>(0.35) | 237.08<br>(6.49) | 128.75<br>(3.14) | 125.49<br>(3.04) | 30728<br>(65) | 76.02<br>(2.03) | 140.92<br>(3.96) | 110<br>(—) |
| நூற்நூற்புத் தொழில் | 197<br>(13) | 107<br>(81) | 15,854<br>(4260) | 4.07<br>(0.29) | (—)<br>(—) | 67.08<br>(19.43) | 22,40<br>(2.12) | 2.00<br>(0.11) | 8787<br>(4260) | 130.80<br>(14.88) | 137.35<br>(16.53) | 46<br>(17) |
| பலவகைச் சங்கங்கள் | 5218<br>(114) | 2539<br>(11) | 2,25, 367<br>(11, 514) | 353.34<br>(54·45) | 58.40<br>(8.30) | 1325.11<br>(273.73) | 447.57<br>(95.09) | 183.62<br>(35.18) | 34,336<br>(1554) | 751.67<br>(189.94) | 840·15<br>(245.78) | 1478<br>(30) |

குறிப்பு : அடைப்புக் குறி எண்கள் தமிழ்நாட்டிற்குத் தொடர்பானவை,

# 23. வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்கள்

## (Housing Co-operatives)

### 1. வீட்டுவசதி நடவடிக்கையில் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு

அடிப்படையான நம் தேவைகளுள் நல்ல வீடும் ஒன்றாக உள்ளது. அதன் முக்கியத்துவமானது உணவுக்கும் உடைக்கும் மட்டுமே அடுத்ததாக வுள்ளது. ஒரு நபரின் உடல்நலத்திற்கும், சீரான வாழ்க்கைக்கும், அன்றாட வாழ்க்கைக் கடமைகளை வசதி யாக நிறைவேற்றுவதற்கும், ஒரு வீடு அத்தியாவசியமாக உள்ளது. ஒரு நாட்டின் நல்வாழ்வு அதனால் அடையப்பெற்ற வாழ்க்கைத் தரத்திலும் வீட்டுவசதியிலும் பிரதிபலிக்கப்படுகிறது.

வீட்டு வசதிப் பிரச்சினை இரண்டு கூறுகளைக் கொண்டது. அதாவது, (1) வீட்டுவசதிப் பற்றாக்குறையும், (2) சுகாதாரக் கண்ணோட்டத்திலிருந்தும், மக்கள் நல்வாழ்வுக் கண்ணோட்டத்தி லிருந்தும், திருப்தியில்லாத வீட்டுவசதி நிலைமையும். (இவ் விரண்டு அம்சங்களும் சேரிப் பகுதிகளிலும், கிராமப் பகுதிகளிலும் காணப் பட்டாலும், முதலாவது அம்சம் நகர்ப்புறங்களிலும், இரண் டாவது அம்சம் கிராமப் பகுதிகளிலும் மிக அதிகமாகக் காணப் படுகின்றது.) மக்கள்தொகைப் பெருக்கம், கிராமப் பகுதிகளி லிருந்து நகர்ப் பகுதிகளுக்குக் குடியேறுதல், வீட்டுவசதிக்காக வளர்ந்துவருகின்ற தேவையோடு தனியார் தொழில் துணிவு ஒப்பிடும் வகையில் நடைபோடுவதற்கு இயலாமை, ஆகியவை நகர்ப் பகுதிகளில் வசிப்புப் பகுதிகளின் பற்றாக்குறையை விளைவித் துள்ளது. நகர்ப் பகுதிகளில் வீட்டுவசதி ஒரு பிரச்சினையாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தது. கிராமப் பகுதிகளிலுங்கூட இப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு உறுதியான நடவடிக்கை எடுப்ப தற்கான அவசியம் அண்மையில்தான் ஏற்றுக்கொள்ளப்பட்டது.

நாட்டில் வீட்டுவசதிப் பற்றாக்குறையைச் சீர்படுத்துவதில் வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு முக்கியமான பணியை

மேற்கொள்ளக்கூடும். ஒவ்வொரு குடும்பமும் ஒரு நியாயமான நிரந்தரத் தன்மையுள்ள ஒரு தனிப்பட்ட இருப்பிடத்தைப் பெற்றிருக்க வேண்டுமென்ற நினைப்பின் பேரில், நான்காவது ஐந்தாண்டுத் திட்டத்தின் தொடக்கத்தில் வீட்டுவசதிப் பற்றுக் குறை சுமார் 8.37 கோடி யூனிட்டுகளாக மதிப்பீடு செய்யப் பட்டது. நகர்ப் பகுதிகளில் 1.9 கோடியாகவும், கிராமப் பகுதி களில் 7.18 கோடியாகவும் இந்தியாவில் தன்மையுள்ள கூட்டுறவு விட்டு வசதி இயக்கம் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன்னர்த் தொடங்கியது. இந்திய அரசு 1950ஆம் ஆண்டிலிருந்து கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்கள் அமைப்பை ஊக்குவித்துள்ளது. முதல் மூன்றாண்டுகள் திட்டங்களின் செல்வாக்கின்கீழ் இவ் வியக்கம் வளர்ச்சி பெற ஆரம்பித்தது. பெரிய தொழிற் பட்டணங்களிலும், நகரங்களிலும், அது பெருமளவு முன்னேற்ற மடைந்துள்ளது. மராட்டியம், குசராத்து, சென்னை, ஆந்திரப் பிரதேசம் ஆகிய மாநிலங்களில் கூட்டுறவு வீட்டு வசதி இயக்கம் பெருமளவிற்கு வளர்ச்சி செய்யப்பட்டுள்ளது. எனினும், கிரா மங்கள் உட்பட நாட்டில் அத்தகைய கூட்டுறவுச் சங்கங்கள் பெருவாரியாக வளர்ச்சி செய்வதற்கு இன்னும் அவசியமுள்ளது. மைய அரசு, மாநில அரசுகள், கூட்டுறவுச் சங்கங்கள், தனிநபர்கள் பொறியாளர்கள், கட்டடம் கட்டுபவர்கள் ஆகியவர்களின் உதவியுடன் வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்கள் வளர்ச்சி செய்யப்பட வேண்டும். அது, தன்னுதவியின் மூலமும், பரஸ்பர முயற்சியின் மூலமும், குறைந்த விலையில் வீடுகளை வழங்குவதற்குப் பேருதவி செய்யும்.

## 2. வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்களின் நன்மைகள்

பிரதானமாக ஒரு வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கமானது தன் உறுப்பினர்களின் வீட்டுவசதித் தேவையைப் பூர்த்தி செய் வதில் அக்கறை கொண்டுள்ளது. கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்கள் அரசு கடன்களைப் பெற்று, அவற்றை உறுப்பினர்கள் தங்கள் சொந்தக் குடியிருப்புக்காகத் தங்கள் சொந்த வீடுகளைக் கட்டுவதற்கு அவர்களுக்கு வகைசெய்யும் நோக்கத்துடன், நியாய மான வட்டி விகிதங்களில் 20 ஆண்டுகள் வரையுள்ள கால வரைகளுக்காக உறுப்பினர்களுக்கு அக் கடன்கள் அளிக்கப்படு கின்றன. பெற்ற கடன்களைத் திருப்பிச் செலுத்துவதற்குத் தங்கள் வருவாயிலிருந்து சேமித்து வைப்பதற்கு அது அவர்களுக்கு வகை செய்வதால், இக் கடனளிப்புமுறை உறுப்பினர்களிடையே சிக்கனத்தை வளர்க்கின்றது. கூட்டுறவு அமைப்பானது, ஒரு வீடு அமைக்கும் சங்கத்தின் (House Construction Society)

வடிவத்தை எடுத்து, வீடுகளைக் கட்டி, அவ் வீடுகளைத் தன் உறுப்பினர்களுக்குத் தவணைக்கொள்முதல் முறையில் குத்தகைக்கு விடுகிறது. இதன் நோக்கம் கட்டடச் செலவைச் சிக்கனப்படுத்துவதும், கூட்டு முயற்சியால் கட்டடங்கள் அமைப்பதைத் துரிதப்படுத்துவதுமாகும். பொதுவாக, தங்களுக்குச் சொந்த வீடுகள் இல்லாதவர்கள் மட்டுமே உறுப்பினர்களாகச் சேர்க்கப்படுகின்றதால், வீடுகள் பிரதானமாகச் சொந்தக்காரர்களே தங்குவதற்காகக் கட்டப்படுகின்றன. அப்படி இதற்கு ஏதாவது விலக்குச் செய்யப்பட்டால் அவ் விலக்கானது, ஓர் உறுப்பினர் ஒரு வீடு மட்டும் அளிக்கப்படக்கூடும் என்ற நிபந்தனையின் பேரிலும், புதிய வீட்டைச் சங்கத்தால் நிருணயிக்கப்பட்ட நியாய வாடகையில், வாடகைக்கு விடுவதற்கு அவர் ஒப்புக்கொள்கிறார் என்ற நிபந்தனையின்பேரிலும் செய்யப்படுகிறது. பொதுவாக, வீடுகள் பற்றுக்குறையை மீட்பதற்காக இந்த விலக்குச் செய்யப்படுகிறது.

எந்த நகரமைப்புத் திட்டத்திலும், தனிநபர்கள் சங்கங்களாகத் தங்களை யமைத்துக்கொண்டால், வீடு கட்டுவதில் அக்கறைகொண்ட தனிப்பட்ட நபர்கள் பலருடன் நடவடிக்கை வைத்துக்கொள்வதற்குப் பதிலாக அச் சங்கங்களுடன் நடவடிக்கை எடுக்கக்கூடு மாதலால், திட்ட அதிகாரியின் வேலை பெருமளவு வசதிப்படுத்தப்படும். மற்றும், கூட்டுறவு வீட்டு வசதித் தொழில்துணிவானது, உறுப்பினர்கள் தாங்களே, தங்கள் ஒருமித்த பொறுப்பில் வீட்டிற்குச் சொந்தக்காரராக அமைந்திருப்பதால், வீட்டுக்காரர்களுடைய அகாரணமான தலையீட்டை ஒழித்துவிடுகிறது.

## 3. வீட்டுவசதிச் சங்கங்களின் பல்வேறு வகைகள்

வீட்டுவசதிச் சங்கங்கள் தனிநபர் உடைமை முறையை யாவது அல்லது சமத்துவக் கூட்டுடைமை முறையையாவது (Co-partnership) அடிப்படையாகக் கொண்டுள்ளது. தனிநபர் உடைமை முறை அடிப்படையின் பேரிலுள்ள ஒரு சங்கம், உறுப்பினர்களுக்கு ஏற்கெனவே சொந்தமாகவுள்ள வீட்டு மனைகளின்மீது அல்லது சங்கத்திடமிருந்து வாங்கப்பட்ட வீட்டு மனைகளின்மீது தாங்களே வீடுகளைக் கட்டுவதற்கு வகை செய்ய உறுப்பினர்களுக்குக் கட னளிக்கிறது. சமத்துவக் கூட்டுடைமை முறையானது 2 வகைப்படும். ஒன்று, உடைமை வகை; மற்றொன்று, வாடகைக் குடியிருப்பு வகை. சமத்துவக் கூட்டுடைமை முறை அடிப்படையிலுள்ள ஒரு சங்கத்தில், தவணைக் கொள்முதல் முறையின் மூலம் உறுப்பினர், இறுதியாக வீட்டின் உடை

மையாளராகிறார். வாடகைக் குடியிருப்புமுறை அடிப்படையி லுள்ள ஒரு சங்கத்தில், உறுப்பினர் எப்பொழுதுமே ஒரு வாடகையாளராக இருப்பார். மேற்கூறப்பட்ட விரிவான இரண்டு முறைகள் அடிப்படையின் பேரில் வீட்டுவசதிச் சங்கங்கள் பின்வருமாறு வகைப்படுத்தப்படலாம். (1) உறுப்பினர்கள் தாங்களே வீடுகளைக் கட்டுவதற்காகக் கடன்களளிக்கும் கட்டடச் சங்கங்கள் (Building Societies), (2) உறுப்பினர்களுக்குக் கடனளித்தலை மட்டுமன்றி அவர்களின் பிரதிநிதிகளாக வீடு கட்டு தலையுங்கூட மேற்கொள்ளும் வீடு கட்டும் சங்கங்கள் (House Building Societies), (3) தாங்களே வீடுகளைக் கட்டி யமைத்துக் கட்டடங்களைத் தவணைக் கொள்முதல் முறையில் உறுப் பினர்களுக்கு விற்கின்ற வீடு கட்டி அமைக்கும் சங்கங்கள் (House Construction Societies), (4) மேற்கூறப்பட்ட மூன்றுவகைச் சங்கங்களின் குணும்சங்களைப் பெற்றிருப்பது மட்டு மன்றி, குடிநீர், வடிகால், கல்வி முதலியன போன்ற வசதிகளை வழங்குதலையும் மேற்கொள்ளும் கூட்டுறவு நகரியம் (Co-operatives Township). மேற்கூறப்பட்ட வீட்டுவசதிச் சங்கங்கள் ஒவ்வொன் றின் பிரதான அம்சங்கள் வருமாறு: (i)நகரப் பகுதிகளிலும், அரை யளவு நகரப்பகுதிகளிலுமுள்ள தனிநபர் உடைமை அடிப்படை யைக்கொண்ட ஆரம்பத்தில் அமைக்கப்பட்ட கூட்டுறவு வீடு கட்டும் சங்கங்கள், உறுப்பினர்களுக்குச் சொந்தமான அல்லது சங்கத்தின் மூலம் தங்களுக்காக வாங்கப்பட்ட வீட்டுமனைகளின் பேரில் வீடுகளைக் கட்டுவதற்காக, உறுப்பினர்களுக்குக் கடன்களை வழங்குகின்றன. பொதுவாக, வீடுகளைக் கட்டுதல் உறுப்பினர் களுக்கே விட்டுவிடப்படுகிறது. அது, வீடுகளைக் கட்டுவதற்காக, 20 ஆண்டுகள் காலவரையில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய, கடன்களை வழங்கும்—ஏறக்குறைய ஒரு நீண்டகாலக்—கடன் சங்க மாக உள்ளது. வீட்டின் உடைமை உறுப்பினர்கள் வசம் ஒப் படைக்கப்பட்டுள்ளது. உறுப்பினர்கள் அவ் வீடுகளைக் கடன்களுக்கு ஆதாரமாகச் சங்கத்திற்கு ஈடு வைக்கின்றனர். அம் மாதிரியாகவே கிராம வீட்டு வசதிச் சங்கங்களும் இயங்குகின்றன. (ii) வீடு கட்டி அமைக்கும் சங்கங்கள், இப் பணிகளையன்றியும், தாங்களே உறுப்பினர்களின் பிரதிநிதிகளாக, வீடுகள் கட்டியமைத்தலை மேற்கொள்கின்றன. இச் சங்கங்கள் நிலங்களைக் கொள்முதல் செய்து, மனைப்பிரிவுத் திட்டங்களைத் (Layouts) தயார்செய்து உறுப்பினர்களுக்கு மனைகளை ஒதுக்கீடு செய்து, நிருணயிக்கப் பட்ட மாதிரியமைப்புகளுக்கு (Type-Designs) இணங்க வீடுகளைக் கட்டுகின்றன. பொது வசதிகள் வழங்கப்படுகின்ற சந்தர்ப்பங்களில் அத்தகைய வசதிகளின் செலவு உறுப்பினர் களிடையே பகிர்வு செய்யப்பட்டு வீட்டுமனை விலையுடன்

வசூலிக்கப்படுகிறது. (iii) வீடுகட்டி அமைக்கும் சங்கங்கள் சமத்துவக் கூட்டுடைமை வாடகைக் குடியிருப்பு முறை அடிப் படையைக் கொண்டுள்ளன. அவை நிலங்களை வாங்கி, அவற்றை வீட்டு மனைகளாகப் பிரித்து, தங்கள் சொந்தக் கணக்கில் வீடுகளைக் கட்டியமைத்துத் தவணைக் கொள்முதல் முறையில் உறுப்பினர் களுக்கு அவற்றை ஒதுக்கீடு செய்கின்றன. இம் முறைப்படி, ஒரு வாடகையாளர்—உறுப்பினர்—சாதாரணமாக 20 ஆண்டு கள் காலத்திற்குப் பரப்பப்பட்ட ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை செலுத்துதல்களைச் செய்த பிறகு, வீட்டின் இறுதியான உடைமையாளராகிறார். உறுப்பினர்கள் தவணைக்கொள்முதல் தவணைகளை முழுதும் செலுத்தி முடிக்கிறவரை, சங்கங்கள் வசமே உடைமை இருந்துவருகின்றது. (iv) கூட்டுறவு நகரியம் உறுப்பினர்களுக்காக வீடுகளைக் கட்டியமைத்தல் மட்டுமன்றி, ஒரு நகராட்சிப் பட்டினத்தின் எல்லா நல்வாழ்வு வசதிகளையுங் கூட வழங்குகின்றது. இவ் வகையான சங்கம் தனிநபர் உடைமை முறையையாவது அல்லது வாடகைக் குடியிருப்பு முறையை யாவது அடிப்படையாகக் கொள்ளலாம். அதன் சிறப்பு அம்சமானது, பொது நல்வாழ்வு நிறுவனத்தின், அதாவது நகராட்சியின் இடத்தை அது எடுத்துக்கொள்கிறது. நிலங்களை வாங்கி, ஒரு புதிய குடியிருப்பை அமைப்பதற்காக, அவற்றை வீட்டுமனைகளாகப் பிரித்து உறுப்பினர்களுக்கு வீடு கட்டுவதற் காகக் கடன்கள் அளிப்பதுடன், சாலைகள், பூங்காக்கள், வடி கால், சாக்கடைக்கழிவு, குடிநீர், விளையாட்டுத் திடல்கள், பள்ளிகள் போன்ற நல்வாழ்வு வசதிகளையும் வழங்கிப் பராமரிக் கின்றது. உதாரணமாக, தமிழ்நாட்டில் காட்பாடி கூட்டுறவு நகரியம் உள்ளது. சங்கம் தன் சொந்தக் கணக்கில் வீடுகளைக் கட்டி உறுப்பினர்களுக்குத் தவணைக் கொள்முதல் முறையில் வாடகைக்கு விடுகிறது. மற்றும், உறுப்பினர்களுக்குத் தாங்களே வீடு கட்டுவதற்காகவுங்கூடக் கடன்கள் வழங்குகின்றது. (v) வாடகைக் குடியிருப்பு வீட்டுவசதிச் சங்கங்கள். இச் சங்கங்களில் வீட்டுடைமை அல்லது மனை உடைமையானது சங்கங்கள் வச முள்ளது; உறுப்பினர்கள், வாடகையைச் செலுத்துவதன் பேரில் வாடகைக் குடியிருப்பு உரிமைமட்டும் பெற்றுள்ளனர். சொத் தனைத்தும் சங்கத்தின் உடைமையிலும், நிர்வாகத்திலும் உள்ளது. சங்கத்தால் கட்டப்பட்ட வீடுகள், வாடகைக் குடியிருப்பு அடிப்படையில், மிகச் சிக்கனமான ஒரு வாடகையில் உறுப்பினர் களுக்கு ஒதுக்கீடு செய்யப்படுகின்றன. (vi) பம்பாயிலிருக் கின்ற மற்றொருவகைச் சங்கம், குடியிருப்புத் தட்டு உடைமைச் சங்க மென்று (Flat Ownership Society) வழங்கப்படும் சங்க

மாகும். இதில் தனியார் வீடுகட்டுபவர்கள், வீட்டு மனைகளை வாங்கி அதில் பல குடியிருப்புத் தட்டுக் கட்டடங்களைக் (Multy-Flat Buildings) கட்டுகிறார்கள். பிறகு கட்டடங்கள் பல்வேறு நபர்களுக்கு விற்கப்படுகின்றன. அக் கட்டடங்களை வாங்குகிறவர்கள் ஒரு கூட்டுறவுச் சங்கமாகத் தங்களை அமைத்துக் கொள்ள வேண்டுமென்றும், அச் சங்கம் குடியிருப்புத் தட்டு உடைமையாளர்களுக்கு—உறுப்பினர்களுக்கு—பராமரிப்பும், மற்றும் இதரப் பொதுப்பணிகளையும் வழங்க வேண்டுமென்ற நிபந்தனையின் பேரிலும் விற்கப்படுகின்றன.

இப் பல்வேறு வகை வீட்டுவசதிச் சங்கங்களுள், தனிநபர் வீட்டுடைமை அடிப்படையையும் சமத்துவக் கூட்டுடைமை அடிப்படையையுங்கொண்ட கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்கள் மிகப் பிரபலியமாகவுள்ளன; ஏனென்றால், அவை பொதுவாக மக்கள் பெரிதாக விரும்பும் தனிநபர் வீட்டுடைமையை அனுமதிக்கின்றன.

தமிழ்நாட்டில் வீட்டுவசதிச் சங்கங்கள் சுமார் 1947ஆம் ஆண்டுவரை தனிநபர் வீட்டுடைமை அடிப்படையின் பேரில் தான் அமைக்கப்பட்டன. அதற்குப் பிறகுதான் சங்கங்கள் சமத்துவக் கூட்டுடைமை முறையின் பேரில் அமைக்கப்பட்டு வந்தன. சமத்துவக் கூட்டுடைமை வாடகைக் குடியிருப்பு முறை அடிப்படையைக் கொண்ட வீட்டுவசதிச் சங்கங்கள் தமிழ்நாட்டில் மக்களால் அதிகமாக விரும்பப்படவில்லை. கல்விப் பொறுப்பு நிறுவனங்களும் கல்வி நிறுவனங்களும் தங்கள் ஆசிரியர்களுக்கும் இதரச் சிப்பந்திகளுக்கும் இருப்பிட வசதியை வழங்குவதற்காக வீடுகள் கட்டுவதை மேற்கொள்ளுவதற்காக, அந் நிறுவனங்கள் அத்தகைய சங்கங்களை அமைத்துள்ளன.

இவ் வகையான வீட்டுவசதிச் சங்கங்களன்றியும், தமிழ் நாட்டில் வீடு அடைமான சங்கங்கள் (House Mortgage Societies) என்று வழங்கப்படும் சங்கங்களுமுள்ளன. இச் சங்கங்களுங்கூட, வீடு பற்றாக்குறையை நிவர்த்திக்கின்றன. அவை, வீடுகட்டுவதற்காகவும், வீட்டிற்கு அபிவிருத்திசெய்தல், வீடுகள் மீதுள்ள அடைமானங்களை மீட்டல் போன்ற இதரக் காரியங்களுக்காகவும், 20 ஆண்டுகள்வரை நீண்டகாலக் கடன்களை வழங்குகின்றன.

தங்கள் பெயர்களில் அல்லது தங்கள் மனைவிகள்—கணவர்கள்—பெயர்களில், அல்லது வயது வராத தங்கள் குழந்தைகளின் பெயர்களில் சொந்தமாக வீடுகளைப் பெற்றில்லாத நபர்களுக்கு மட்டுமே பொதுவாக வீட்டுவசதிச் சங்கங்கள்

கடன்களை ஒப்பளிக்கின்றன. எனினும், ஒரு கிராமத்தில் ரூ.5,000-க்கு மேற்படாத மதிப்புள்ள ஒரு வீட்டைச் சொந்தமாகவுடைய ஒரு நபருக்கும், ஒரு நகரவீட்டில் பகுதியான பாத்தியதையை வகித்து அதில் வசிக்காத ஒரு நபருக்கும் விலக்கு அளிக்கப்படுகிறது.

## 4. வீட்டுவசதிச் சங்கங்களின் பொது நிலைமை

### (i) அனைத்திந்திய நிலைமை

அண்மையாண்டுகளில், வீடுகட்டும் நடவடிக்கைகளில் ஒரு அதிகரிப்பு இருந்ததென்பது கீழ்க்காணும் அட்டவணையிலிருந்து தெரியவரும்.

(ரூபாய், கோடிக் கணக்கில்)

| | கட்டப்பட்ட தனிப் பட்ட வீடுகள் (Independent constructed) | | கட்டப்பட்ட குடியிருப்புகள் (Tenement constructed) | |
|---|---|---|---|---|
| ஆண்டு | எண்ணிக்கை | மதிப்பு | எண்ணிக்கை | மதிப்பு |
| 1967–68 | 14,339 | 9.15 | 14,397 | 22.9 |
| 1968–69 | 23,227 | 15.9 | 20,900 | 33.6 |
| 1969–70 | 19,264 | 17.4 | 25,470 | 41.2 |
| 1970–71 | 17,568 | 28.4 | 15,805 | 25.9 |

1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில், 6,783 உறுப்பினர்களையும் ரூ.10.07 கோடி செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தையுங்கொண்ட 16 மாநில மட்டத்துச் சங்கங்களிருந்தன. அவற்றின் கடன்பெற்ற முதல் ரூ.88.68 கோடியாக விருந்தது. இதில், அரசிடமிருந்து பெற்ற ரூ.50 கோடியும் மற்றவர்களிடமிருந்து பெற்ற ரூ.75.71 கோடியும் அடங்கியிருந்தன. ரூ.19.41 கோடியளவிற்கு அவை கடன்கள் வழங்கின. ரூ.96.11 கோடி நிலுவையி லிருந்தது. அவ் வாண்டின்போது அவை ரூ.22.76 இலட்சத்திற்கு மதிப்புள்ள தனிப்பட்ட 343 வீடுகளைக் கட்டின. அவற்றின் உறுப்பினர்கள் ரூ.455.6 இலட்சத்திற்கு மதிப்புள்ள 9,616 வீடுகளைக் கட்டினர். அவை யாதொரு குடியிருப்பையும் கட்டவில்லை. அவற்றுள் 13 சங்கங்கள் இலாபத்திலும் 3 சங்கங்கள் நட்டத்திலும் இயங்கின. 30–6–70ஆம் நாளன்று பிரதம வீட்டு வசதிச் சங்கங்களின் எண்ணிக்கை 16,308 ஆக இருந்தது. அது 1971 ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் 18,050-க்கு உயர்ந்தது. அவை 11,82,353 உறுப்பினர்களையும், ரூ.31.45 கோடி செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தையும் கொண்

டிருந்தன. அவற்றின் நடைமுறை முதல் ரூ.373.52 கோடியாக இருந்தது. அதில் அரசிடமிருந்து ரூ.30.32 கோடியும், மைய நிதியமைப்புகளிட மிருந்து ரூ.70.10 கோடியும் மற்றவர்களிட மிருந்து ரூ.116.96 கோடியும் அடங்கியிருந்தன. 1970–71 ஆம் ஆண்டின்போது அவை ரூ.16.94 கோடியளவிற்குக் கடன்களை வழங்கின. ரூ.67.59 கோடி நிலுவையி லிருந்தது. அவ் வாண்டின் போது அவை ரூ.5.44 கோடிக்கு மதிப்புள்ள 4,134 தனிப்பட்ட வீடுகளைக் கட்டின. அவற்றின் உறுப்பினர்கள் ரூ.23.02 கோடிக்கு மதிப்புள்ள 13,434 வீடுகளைக் கட்டினர். அவை ரூ.25.93 கோடிக்கு மதிப்பிடப்பட்ட 15,805 குடியிருப்புகளைக் கட்டின. 6,617 சங்கங்கள் இலாபத்திலும், 6,853 சங்கங்கள் நட்டத்திலும், 45,880 சங்கங்கள் இலாபமும் நட்டமும் இல்லா மலும் இயங்கின.

### (ii) தமிழ்நாட்டு நிலைமை

தமிழ்நாட்டில் 30–6–71 ஆம் நாளன்று ஒரு மாநில மட்டத்துச் சங்கமும் 1,037 பிரதம வீட்டு வசதிச் சங்கங் களுமிருந்தன. மாநில மட்டத்துச் சங்கம் 121 உறுப்பினர்களை யும், ரூ.86.54 இலட்சம் செலுத்தப்பட்ட பங்கு மூலதனத்தை யுங் கொண்டிருந்தது. அதன் நடைமுறை மூலதனம் ரூ.684.76 இலட்சமாக இருந்தது. அதன் கடன் பெற்ற முதல் ரூ.5.70 கோடியாக இருந்தது. அதில் மைய நிதியமைப்புகளிலிருந்து ரூ.5.45 கோடியும், மற்றவர்களிடமிருந்து ரூ.0.25 கோடியும் அடங்கியிருந்தன. அது ரூ.1.83 கோடியளவிற்குக் கடன்கள் அளித்தது. ரூ.6.57 கோடி நிலுவையி லிருந்தது. அது யாதொரு தனிப்பட்ட வீடுகள் அல்லது குடியிருப்புகள் கட்டுவதை மேற் கொள்ளவில்லை.

பிரதம வீட்டுவசதிச் சங்கங்களின் எண்ணிக்கை 1,037 ஆக விருந்தது. அவை 1,69,667 உறுப்பினர்களையும் ரூ.3.53 கோடி செலுத்தப்பட்ட பங்குமூலதனத்தையும் பெற்றிருந்தன. அவற்றின் கடன்பெற்ற முதல் ரூ.15.47 ஆக விருந்தது. அதில் அரசிடமிருந்து ரூ.6.91 கோடியும், மைய நிதியமைப்புகளி லிருந்து ரூ.6.22 கோடியும், மற்றவர்களிடமிருந்து ரூ.2.33 கோடியும் அடங்கியிருந்தன. அவை ரூ.3.64 கோடியளவிற்குக் கடன்களை வழங்கின. ரூ.16.80 கோடி நிலுவையி லிருந்தது. அவை ரூ.16.66 இலட்சத்திற்கு மதிப்பிடப்பட்ட 135 தனிப் பட்ட வீடுகளைக் கட்டின. அவற்றின் உறுப்பினர்கள் ரூ.128.97 இலட்சத்திற்கு மதிப்பிடப்பட்ட 953 வீடுகளைக் கட்டின. மற்றும், அவை ரூ.13.63 இலட்சத்திற்கு மதிப்பிடப்பட்ட 162

குடியிருப்புகளைக் கட்டின. 415 சங்கங்கள் இலாபத்திலும், 533 சங்கங்கள் நட்டத்திலும் எஞ்சியவை இலாபமும் நட்டமு மில்லாமலும் இயங்கின.

## 5. ஐந்தாண்டுத் திட்டங்களில் வீட்டுவசதித் திட்டங்கள்

வீடுகள் கட்டுவதற்காக உதவி வழங்குவதற்கு மைய அரசாலும், மாநில அரசுகளாலும் பலதிட்டங்கள் தொடங்கி வைக்கப்பட்டுள்ளன. வீட்டு வசதிச் சங்கங்களின்மூலம் அமுல் படுத்தப்பட்டு வருகின்ற திட்டங்கள் சுருக்கமாகக் கீழே விளக் கப்பட்டுள்ளன.

### (i) குறைந்த வருவாய் வகுப்பு வீட்டுவசதித் திட்டம் (Low Income Group Housing Scheme)

இத் திட்டம் 1954ஆம் ஆண்டில் தொடங்கி வைக்கப்பட்டு, இந்திய அரசால் மாநில அரசுகளுக்கு 30 ஆண்டுகளுக்காகக் கடன்கள் வழங்கப்படுகின்றன. மாநில அரசுகள், மேற்கொண்டு தனி நபர்களுக்கும், உள்ளாட்சி நிறுவனங்களுக்கும், கூட்டுறவுச் சங்கங்களுக்கும் வீடுகள் கட்டுவதற்காகக் கடன்கள் வழங்கு கின்றன. ஆண்டொன்றுக்கு ரூ.7,200-க்கு மேற்படாத வரு மானத்தையுடைய நபர்களுக்கு (அல்லது அவர்களின் கூட்டுறவுச் சங்கங்களுக்குக்) கடன்கள் வழங்குவதற்காக இத் திட்டம் ஏற்பாடு செய்கிறது. வீடொன்றுக்கு ரூ.12,500 உச்சத்திற்குட்பட்டு, வீட்டு மதிப்பின்படி அபிவிருத்திக் கடன்தொகை கட்டுப்படுத்தப் பட்டுள்ளது. கடன் 20 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டும். கட்டடத்தின் மதிப்பீடு செய்யப்பட்ட உச்ச மதிப்பு ரூ.25,000-க்கு மேற்படக்கூடாது. கடன்தொகை, கட்டட வேலை முன்னேறுகின்றதை அனுசரித்துத் தவணைகளில் அளிக்கப்படுகிறது. ஒரு நகர வீட்டுவசதிச் சங்கத்தில் சேரும் ஒரு நபர் அக் கடனைப் பெறலாம். 1971–72ஆம் ஆண்டுவரை, 1,43,450 வீடுகளைக் கட்டுதல் எல்லா அமைப்புகளாலும் இத் திட்டத்தின்கீழ் முடிவுபெற்றிருந்தன.

### (ii) நடுத்தர வருவாய் வகுப்பு வீட்டுவசதித் திட்டம் (Middle—Income Group Housing Scheme)

இத் திட்டம் 1959ஆம் ஆண்டில் தொடங்கி வைக்கப்பட்டது. இத் திட்டத்தின்கீழ் ரூ.600-க்கு மேற்பட்டும், ரூ.1250-க்கு மேற் படாமலு முள்ள மாத வருவாயுள்ள தனிநபர்களுக்கு நேரடியாக அல்லது, கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகக் கடன்கள் வழங்கக் கூடும். ஒரு நபர் ஒரு நகர வீட்டுவசதிச் சங்கத்தில் சேர்ந்து வீடுகள் கட்டுவதற்காக ஒரு கடனைப் பெறக்கூடும். ஓர்

உறுப்பினர் பெறக்கூடிய உச்சக் கடனளவு ரூ.25,000 ஆகும். 20 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தப்படவேண்டும். கடன் தொகை கட்டடவேலை முன்னேறுகின்றதை அனுசரித்துத் தவணைகளில் வழங்கப்படுகிறது. உறுப்பினரால் கட்டப்படும் கட்டடத்தின் மதிப்பீடு செய்யப்பட்ட உச்சமதிப்பு ரூ.35,000-க்கு மேற்படக்கூடாது. ஏற்கெனவே கட்டப்பட்ட வீடுகளை வாங்குவதற்காகவுங்கூடத் தகுதியுள்ள நபர்களுக்குக் கடன்கள் வழங்கப்படலாம். இத் திட்டம், பொதுவாக, இந்திய ஆயுள் காப்பீட்டுக் கழகத்தால் மாநில அரசுகளுக்குக் கடன்களாக அளிக்கப்பட்ட நிதிகளிலிருந்து நிதியுதவப்படுகிறது. 1971—72ஆம் ஆண்டுவரை 25,730 வீடுகள் எல்லா அமைப்புகளாலும் இத் திட்டத்தின்கீழ்க் கட்டப்பட்டிருந்தன.

**(iii) தொழில்துறைத் தொழிலாளர்களுக்கான மானியமளிக்கப்பட்ட வீட்டு வசதித் திட்டம்** (Subsidised Housing Scheme for Industrial Workers)

1952ஆம் ஆண்டில் தொடங்கிவைக்கப்பட்ட இத் திட்டம், தொழில்துறைத் தொழிலாளர்களால் அல்லது அவர்களுக்காக வீடுகள் கட்டுவதற்குக் கடன்கள் வழங்குவதை ஏற்பாடு செய்கிறது. இத் திட்டத்தின்கீழ், தொழிற்சாலைகள் சட்டத்தில் விளக்கம் செய்யப்பட்டுள்ள ஒரு தொழிலாளி தொழில் துறைத் தொழிலாளர்களுக்காகப் பிரத்தியேகமாக அமைக்கப்பட்ட ஒரு கூட்டுறவு வீடு கட்டித்தரும் சங்கத்தில் சேர்ந்து, 25 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய கடனை ரூ.5,500 உச்சமளவிற்குப் பெறலாம். தொழிலதிபர்களால் தங்கள் தொழிலாளர்களுக்காக அமைக்கப்படுகின்ற வீட்டு வசதிக் குடியிருப்புக்களுக்காகவுங்கூடக் (Housing Colonies) கடன்கள் வழங்கப்படுகின்றன. பின்னர், 1966ஆம் ஆண்டில், தொழில்துறைத் தொழிலாளர்களுக்காகவும், சமுதாயத்தில் பொருளாதாரத்துறையில் பலம்குன்றிய பிரிவினர்களுக்காகவும் ஒருங்கிணைக்கப்பட்ட மானியமளிப்பு வீட்டுவசதித் திட்டம் தொடங்கப்பட்டது. இத் திட்டமானது, 1952ஆம் ஆண்டில் தொடங்கி வைக்கப்பட்ட தொழில்துறைத் தொழிலாளர்களுக்கான மானியமளிக்கப்பட்ட வீட்டுவசதித் திட்டமும், 1962ஆம் ஆண்டில் குறைந்த வருவாய் வகுப்பு வீட்டுவசதித் திட்டத்தின் கீழ் ஆரம்பிக்கப்பட்ட பொருளாதாரத் துறையில் பலம் குன்றிய சமுதாயப் பிரிவினர்களுக்கான வீட்டுவசதித் திட்டமும் இணைந்த ஓர் இணைப்பாகும். இந்த ஒன்றிணைக்கப்பட்ட திட்டம் 1966ஆம் ஆண்டு அமுலுக்கு வந்தது. தொழில்துறைத் தொழிலாளர்களும், ரூ.350-க்கு மேற்படாத மாதக்கூலி வருவாய் உடைய

நபர்களும் மற்றவகையில் தகுதி பெற்றிருந்தால், இத் திட்டத்தின்கீழ்க் கட்டப்பட்ட வீடுகளை அங்கீகரிக்கப்பட்ட கட்டடச் செலவில் 50 சதவிகிதத்திற்கு மானியமளிக்கப்பட்ட வாடகைகளின்பேரில் ஒதுக்கீடு செய்யப்படுவதற்கு உரிமையுள்ளவர்களாவார். ஒரு வேலையளிப்பவர் வீடுகளைக் கட்டுவதற்கு விரும்பாதபோது மாநில அரசுகள், அவருடைய தரப்பில் அவர் முன்பணமாக அங்கீகரிக்கப்பட்ட கட்டடச் செலவில் நான்கில் ஒரு பாகத்தைச் செலுத்தினால், வீடுகட்டுதல் மேற்கொள்ளக் கூடும். 1971–72ஆம் ஆண்டுவரை, 1,76,275 வீடுகள் இத் திட்டத்தின்கீழ்க் கட்டப்பட்டிருந்தன.

**(iv) தோட்டத் தொழிலாளர்களுக்கான மானியமளிக்கப்பட்ட வீட்டுவசதித் திட்டம்** (Subsidised Housing Scheme for Plantation Workers)

1956ஆம் ஆண்டில் தொடங்கப்பட்டு 1–4–1970ஆம் நாளிலிருந்து ஒரு மத்தியத்துறைத் திட்டமாக (Centrally Sponsored Scheme) உள்ளது இத் திட்டம். தங்கள் தொழிலாளர்களுக்காக வாடகை யில்லாத வீடுகளைக் கட்டுவதற்காக, அங்கீகரிக்கப்பட்ட திட்டச் செலவில் 87½ சதவீத அளவிற்குத் (37½ சதவீதம் மானியமும், 50 சதவீதம் கடனும்) தோட்ட முதலாளிகளுக்கு நிதியுதவி யளிப்பை ஏற்படுத்துகிறது. எஞ்சியுள்ள 12½ சதவீதமானது, தோட்ட முதலாளிகளாலேயே உதவப்படவேண்டும். தோட்டத் தொழிலாளர்களின் கூட்டுறவுச் சங்கங்கள் விஷயத்தில் அங்கீகரிக்கப்பட்ட திட்டச் செலவில் 90 சதவீதம் அளவிற்கு (65 சதவீதம் கடனாகவும், 25 சதவீதம் மானியமாகவும்)நிதியுதவி யளிக்கப்படுகிறது. எஞ்சியுள்ள 10 சதவீதமானது கூட்டுறவுச் சங்கங்களாலேயே ஏற்படுத்திக் கொள்ளப்பட வேண்டும். தற்போது இத் திட்டம் அசாம், கேரளா, தமிழ்நாடு, கர்னடகம், மேற்குவங்கம், திரிபுரா ஆகிய மாநிலங்களில் அமுல்படுத்தப்பட்டு வருகிறது. திட்டத்தின் தொடக்கத்திலிருந்து 1971–72ஆம் ஆண்டு இறுதிவரை, 1,747 வீடுகள் இத் திட்டத்தின்கீழ்க் கட்டிமுடிக்கப்பட்டன.

**(v) கிராம வீட்டுவசதித் திட்டம்** (Village or Rural Housing Scheme)

1957ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் தொடங்கி வைக்கப்பட்ட இத் திட்டமானது, (i) இலவசமாகவோ பெயரளவான ஒரு விலையிலாகவோ, நிலமில்லாத விவசாயத் தொழிலாளர்களுக்கு வீட்டுமனைகளை ஒதுக்கீடு செய்வதற்காக, மாநில அரசுகளுக்கு உதவித் தொகைகளையும், (ii) வீடொன்றுக்கு

ரூ.10,000-க்கு மேற்படாமல் கட்டடச் செலவில் 80 சதவீதம் வரை கிராமங்களில் வீடுகளைக் கட்டுவதற்காகவும், அபிவிருத்தி செய்வதற்காகவும், 20 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தப்பட வேண்டிய கடன்களையும் (ஒரு கட்டடத்தின் உச்சமதிப்பு ரூ.15,000-க்கு மேற்படக்கூடாது), கிராமங்களில் சுற்றுப்புற நிலைமைகளை மேம்படுத்துவதற்குச் சாலைகளையும், வடிகால்களையும் அமைப்பதற்காக மாநில அரசுகளுக்கு உதவித்தொகைகளையும் வழங்குகின்றது. இத் திட்டம் கூட்டுறவுச் சங்கங்களின் மூலங்கூட அமுல்படுத்தப்படக்கூடும். 1971–72ஆம் ஆண்டு இறுதிவரை 50,525 வீடுகள் இத் திட்டத்தின்கீழ்க் கட்டிமுடிக்கப் பட்டிருந்தன.

## 6. தமிழ்நாட்டில் வீட்டுவசதித் கூட்டுறவுச் சங்கங்கள்

வளமான வாழ்வுக்குத் தேவையான–வசதியான–வீடுகளின் அவசியம் 1924ஆம் ஆண்டு முதலே உணரப்பட்டு அதற்காக வீடு கட்டும் சங்கங்கள் மூலம் அதன் உறுப்பினர்களுக்குக், குடியிருப்பு வீடுகள் கட்டிக்கொள்ள 20 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தும் கடன்கள் வழங்கப்பட்டு வந்தன. 1924ஆம் ஆண்டு முதல் 1939ஆம் ஆண்டு வரை, பல்வேறு வீட்டுவசதிச் சங்கங்கள் மூலம் அப்போதைய சென்னை மாகாணத்தில், ஏறத்தாழ 2,300 வீடுகள் அரசினரின் நிதியுதவி மூலம் கட்டப்பட்டன. இரண்டாவது உலக மகாயுத்தத்தின் காரணமாக 1939 முதல் 1946 வரை வீடுகள் கட்டக் கடன்கள் வழங்க முடியாத சூழ்நிலை ஏற்பட்டது. எனினும், 1946-ல் குடியிருப்பு வீடுகளின் பற்றாக் குறையை உணர்ந்த அரசினர் இந்த நெருக்கடியை நீக்க முயற்சி எடுத்தனர். அதன்படி சென்னை நகரிலும் மற்றும் சில இடங்களிலும் வீட்டுவசதியைப் பெருக்கிடத்தக்க ஆலோசனைகள் வழங்குமாறு ஒரு தனி அதிகாரியை நியமித்தனர். 1947-ல் எல்லா நகரங்களிலும் வீட்டு வசதிச் சங்கங்களைத் தொடங்குமாறு அரசினரால் உத்தரவிடப்பட்டது. அதன் பயனாக 100 வீடுகளாவது ஒவ்வொரு நகராட்சி அல்லது பேரூராட்சிகளில் கட்டப்பட வேண்டுமென்ற நோக்கத்துடனும் வீட்டு மனைகளுக்கான பகுதியை தேர்ந்தெடுக்கவும், வீட்டுவசதிச் சங்கங்கள் தொடங்கவும் ஆங்காங்கே வீட்டு வசதிக் குழுக்கள் ஏற்படுத்தப்பட்டன.

அரசினர் தந்த உதவியாலும், ஒத்துழைப்பாலும் மாநிலம் முழுவதும் பல்வேறு கூட்டுறவு வீடுகட்டும் சங்கங்களும், நகரியங்களும் தொடங்கப்பட்டன. இன்றையநாளில் கீழ்க்கண்ட பல்வேறு வீடுகட்டும் சங்கங்கள் இயங்கிவருகின்றன.

| | | |
|---|---|---|
| 1. | சாதாரணக் கட்டடச் சங்கங்கள் | 397 |
| 2. | வீடு கட்டும் சங்கங்கள் | 122 |
| 3. | வீடு கட்டி அமைக்கும் சங்கங்கள் | 37 |
| 4. | நகரியம் | 2 |
| 5. | தொழிலாளர்களுக்கான வீடு கட்டித்தரும் சங்கங்கள் | 35 |
| 6. | கிராமக் கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்கள் | 430 |
| 7. | வாடகைக் குடியிருப்பு வீட்டுவசதிச் சங்கங்கள் | 2 |
| 8. | வீட்டுமனைச் சங்கங்கள் | 70 |
| | மொத்தம் | 1,095 |

மேற்கண்ட சங்கங்கள் அங்கத்தினர்களுக்காக வீடுகள் கட்டும் பொறுப்பை ஏற்று ரூ.1,296 லட்சம் மதிப்புள்ள 20,400 வீடுகளைக் கட்டியுள்ளன. கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் ஏற்படுத்தப்பட்ட குடியிருப்புப் பகுதிகளை மாநில முழுமையும் காணலாம்.

**கிராம வீட்டுவசதித் திட்டங்கள்**

மேற்கண்ட சங்கங்கள் நகர்ப்புற மக்களுக்கே நிறைந்த பலனைத் தந்ததால், 1950-லிருந்து கிராம வீட்டுவசதித் திட்டங்கள் தொடங்கப்பட்டன. இத் திட்டத்தின்கீழ் அதிகப்பட்சக் கடனைத் தனிநபர் ஒருவருக்கு 20 ஆண்டுகளில் திருப்பிச் செலுத்தப்படும் வகையில் ரூ.10,000 வரை வழங்கப்பட்டு வந்தது. கிராமப்புறங்களில் அவர்களது விவசாய வருவாயைக் கருத்தில் கொண்டு அரையாண்டுத் தவணைகளில் கடனைத் திருப்பிச் செலுத்தும் சலுகையும் தரப்பட்டது. கிராம வீட்டு வசதிச் சங்கங்களின் எண்ணிக்கை, கடன்பட்டுவாடா செய்யப்பட்ட விவரம் பின்வருமாறு:

| சங்கங்களின் எண்ணிக்கை | பட்டுவாடாச் செய்யப்பட்ட கடன்தொகை (ரூபாய், இலட்சத்தில்) | கட்டப்பட்ட வீடுகள் |
|---|---|---|
| 430 | 122.17 | 1,567 |

## தொழிலாளர்களுக்கு வீடு கட்டி அமைக்கும் திட்டம்

பொதுமக்களுக்கு, வீடுகள் கட்டிக்கொள்வதற்கான உதவிகள் மேற்கண்டவாறு அளிக்கப்பட்டு வந்தபோதிலும், ஆலைகள், தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்களுக்கான வீட்டு வசதி 1959ஆம் ஆண்டு மத்திய அரசின் மானிய உதவியுடன் மலிவு வீட்டுவசதித் திட்டம் தொடங்கப்பட்டது. பல்வேறு இடங்களில் தொழிலாளர்களுக்கான வீடு கட்டும் சங்கங்கள் தொடங்கப்பட்டன. அவற்றின் விவரமும், கட்டப்பட்ட வீடுகளும் கீழே குறிப்பிடப்பட்டுள்ளன.

| சங்கங்களின் எண்ணிக்கை | பட்டுவாடாச் செய்யப்பட்ட கடன் தொகை (ரூபாய், இலட்சத்தில்) | கட்டப்பட்ட வீடுகள் |
|---|---|---|
| 31 | 129.58 | 2,962 |

1954 வரை, வீடுகள் கட்டக் கடன் வழங்குவதற்கு மாநில அரசு ஒதுக்கிய தொகை வீட்டு வசதித்துறைப் பதிவாளரின் பொறுப்பில் விடப்பட்டது. பின்பு, மைய அரசு குறைந்த வருமானத் தொகையினருக்கான வீட்டு வசதித் திட்டம், நடுத்தர வருமானத் தொகையினருக்கான வீட்டு வசதித் திட்டம், தொழிலாளர்களுக்கான வீட்டு வசதித் திட்டம் ஆகிய திட்டங்களைத் தோற்றுவித்து உதவிகளைத் தந்தது. மேற்படி திட்டத்தின்கீழ் வீட்டு வசதிச் சங்கங்களின் மூலம் சென்ற ஐந்தாண்டுகளில் அளிக்கப்பட்ட கடன்களின் விவரம் பிற்சேர்க்கை 1-ல் கொடுக்கப்பட்டுள்ளது. 1924ஆம் ஆண்டிலிருந்து ஏறத்தாழ 20,400 வீடுகள் கட்டிமுடிக்கப்பட்டு வீடுகட்டும் சங்கங்கள் தங்களின் பணியைச் சிறப்புற முடித்துள்ளன.

அரசின் நிதியுதவி குறிப்பிட்ட அளவே இருந்ததால், மேற்படி வீடுகட்டும் சங்கங்களுக்குக் கூட்டுறவு வீட்டு வசதிப் பதிவாளர் அவர்கள் மூலமாக ஒதுக்கப்பட்ட நிதி ஆண்டுதோறும் குறைக்கப்பட்டு, போதுமானதாக இல்லாததால் எல்லாவிதமான வீட்டு வசதிச் சங்கங்களும், நிதி வசதிக்காகத் தமிழ்நாடு கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கத்துடன் இணைந்து கொள்ள வேண்டும் என்று கொள்கை அளவில் 1972-ல் அரசினரால் முடிவெடுக்கப்பட்டது. அவ்வாறு எடுக்கப்பட்ட முடிவின்படி பல்வேறு வீட்டுவசதிச் சங்கங்கள் தங்கள் நிதியைத் தற்போது 'தமிழ்நாடு கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கத்தில்' பெற்று வருகின்றன.

## தமிழ்நாடு கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கமும், பிரதமச் சங்கங்களும்

தமிழ்நாடு அரசின் மூலம் நிதியுதவி பெற்று வீடுகட்டும் சங்கங்களும், கிராமக் கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்களும் புதிய வீடு கட்டுவதற்குக் கடன்கள் வழங்கிவந்த போதிலும் 'தமிழ்நாடு கூட்டுறவு வீட்டுவசதிச் சங்க' மெனத் தற்போது வழங்கப்பெறும் மையச் சங்கம் 'சென்னைக் கூட்டுறவு மைய வீடு அடைமான வங்கி' என்ற பெயரில் பதிவு செய்யப்பட்டு 15–7–1950ஆம் நாளிலிருந்து செயற்பட்டு வருகிறது. மையச் சங்கம் தொடங்குவதற்கு முன்னரே சென்னை நகரில் இரண்டு வீடு அடைமான வங்கிகளும், கோவையில் ஒரு வீடு அடைமான வங்கியும், ஈரோட்டில் ஒரு வீடு அடைமான வங்கியும், தஞ்சையில் ஒரு வீடு அடைமான வங்கியும் செயற்பட்டு வந்தன. மேற்படி ஐந்து வங்கிகளுக்கும் அப்போதிருந்த தென்னிந்தியக் கூட்டுறவுக் காப்பீட்டுக் கழகம் நிதியுதவி புரிந்து வந்தது. மேற்படி ஐந்து வங்கிகளின் பணியினைப் பாராட்டிய தமிழ்நாடு அரசு எல்லா நகராட்சிகளிலும் வீடு அடைமான வங்கிகள் ஏற்படுத்த வேண்டும் என்று விரும்பியது. காப்பீட்டு நிறுவனங்கள் (Insurance Company) நாட்டுடைமையாக்கப் பட்ட பின்னர் மேற்படி வீடு அடைமான வங்கிகளுக்கும், புதியதாக ஆரம்பிக்கப்படும் வங்கிகளுக்கும் நிதியுதவி புரிய ஒரு மைய அமைப்புத் தேவைப்பட்டு மேற்படி வீடு அடைமானச் சங்கங்களையும், தனிநபர்கள் சிலரையும் உறுப்பினர்களாகக் கொண்டு 'சென்னைக் கூட்டுறவு மைய வீடு அடைமான வங்கி' 18–3–1959ஆம் நாளில் பதிவு செய்யப்பட்டது. பின்பு வங்கிகளைக் கட்டுப்படுத்தும் சட்டத்திலிருந்து விதிவிலக்குப் பெற 'வங்கி' என்ற சொல் 'சங்கம்' என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டுத் தற்போது அது 'தமிழ்நாடு கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கம்' என்ற பெயருடன் இயங்கி வருகிறது.

வீடு கட்டும் சங்கங்களும், மற்றும் வீட்டு வசதிச் சங்கங்களும் புதிய வீடு கட்டுவதற்கு மட்டுமே கடன்கள் அனுமதித்து வந்தன. ஆனால், ஏற்கெனவே கட்டியுள்ள வீட்டின் பேரில் அதிக வட்டிக்குக் கடன்வாங்கி வீடுகள் கடனில் மூழ்குவதைத் தடுக்கவும் ஓலைவீட்டை ஓட்டு வீடாகவும், ஓட்டு வீட்டைத் தார்சு வீடாகவும் மாற்றி, வீட்டை விரிவாகக் கட்டிக்கொள்வதற்கு மேற்படி வீடுகட்டும் சங்கங்களின் நிதியுதவி பெறமுடியாத நிலையில், வீடு அடைமானச் சங்கங்கள்

மேற்படி காரியங்களுக்கு நிதியுதவி வழங்கியது குறிப்பிடத் தக்க ஒன்றாகும். தொடக்கம் முதல் ஜூன் 1973ஆம் ஆண்டு முடிய, மையச் சங்கம் கீழ்க்கண்ட விவரப்படி முன்கடன் தீர்க்கவும், வீடு விஸ்தரிக்கவும், கடன்கள் பட்டுவாடாச் செய்துள்ளது.

| | |
|---|---|
| முன்கடன் தீர்க்க | ரூ.1,90,11,957 |
| வீடு விரிவாக்க | ரூ.2,79,12,804 |

**உறுப்பினர்களும், பங்குத் தொகையும்**

மையச் சங்கம் தொடங்கிய முதலாண்டிலேயே 25 நகராட்சிகளில் வீடு அடைமான வங்கிகள் ஆரம்பிக்கப்பட்டு மைய வங்கியுடன் இணைத்துக்கொள்ளப்பட்டன.

வீடு கட்டும் சங்கங்களுக்கு நிதியுதவி வழங்கத் தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் ஆயுள் காப்பீட்டுக் கழகத்தை நாடிய போது, ஆயுள் காப்பீட்டுக் கழகத்தினர் தமிழ்நாட்டிற்கு மையக் கூட்டுறவு வீடு அடைமானச் சங்கம் மூலம் மட்டுமே வீடு கட்டிக் கொள்வதற்கான நிதியுதவி செய்யப்படும் என்று தெரிவித்த தால், தமிழ்நாடு அரசு உத்தரவின்படி மேற்படி சங்கம் வீடு அடைமானச் சங்கங்களைத் தவிரப் பல்வேறு வீடுகட்டும் சங்கங் களையும் உறுப்பினராகச் சேர்த்துக் கொண்டுள்ளது. அதன்படி மையச் சங்கத்துடன் இணைக்கப்பட்ட பிரதமக் கூட்டுறவு வீடு அடைமானச் சங்கங்கள் (120), பல்வேறு வீடுகட்டும் சங்கங்கள் (183), கிராமக் கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்கள் (79) ஆகியவற்றின் எண்ணிக்கை 382 ஆகும். தமிழ்நாடு அரசு முதலீடு செய்துள்ள பங்குத் தொகை ரூ.85 இலட்சத்தையும் சேர்த்து மையச் சங்கத்தின் செலுத்தப்பட்ட பங்குமூலதனம் ரூ.2,17,58,400 ஆகும்.

**கடன்கள்**: தமிழ்நாடு கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கத்தின் நிதி வசதி முழுவதும் ஆயுள் காப்பீட்டுக் கழகத்திடமிருந்து தான் கிடைத்துவருகிறது. அவ்வாறு பெறப்படும் ஒவ்வொரு கடனுக்கும் தமிழ்நாடு அரசு தன் உத்தரவாதத்தைத் தந் துள்ளது. மையச் சங்கத் தொடக்கத்திலிருந்து, ஆயுள் காப் பீட்டுக் கழகம் ஒப்பளித்த கடன் தொகை ரூ.13.92 கோடி யாகும்.

ஆயுள் காப்பீட்டுக் கழகக் கடனைத் தவிர, தவணை வைப்புத் தொகைகளைப் பெற்றுக்கொள்ள ரூ.50 இலட்சம் வரை, மையச் சங்கத்திற்குத் தமிழ்நாடு அரசு உத்தரவாதம் அளித்துள்ளது.

**பிரதமச் சங்கங்களுக்கு வழங்கப்பட்ட கடன்கள்**

தமிழகத்திலுள்ள பிரதமக் கூட்டுறவு வீடு அடைமானச் சங்கங்களின் மூலம் மட்டுமே கடனுதவி புரிந்து வந்த மையச் சங்கம், தமிழக அரசின் உத்தரவுப்படி 26–2–73 ஆம் நாள் முதல் பல்வேறு வீடுகட்டும் சங்கங்கள், கிராமக் கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்கள் ஆகியவைகளின் மூலம் கடனுதவி புரிந்துவருகிறது.

சங்க ஆரம்பம் முதல் 1971–72 வரை, மையச் சங்கத்தால் பட்டுவாடாச் செய்யப்பட்ட கடன்தொகை ரூ.11.12 கோடியாக இருந்தது. கடந்த இரண்டாண்டுகளில், அதாவது 1972–73, 1973–74 ஆம் ஆண்டுகளில் மையச் சங்கத்தால் பட்டுவாடாச் செய்யப்பட்ட கடன் தொகை ரூ.6.76 கோடியாக இருந்தது.

சங்கத் தொடக்கத்திலிருந்து, பட்டுவாடாச் செய்யப்பட்ட கடன் தொகை ரூ.18.24 கோடியாகும்.

வீடு கட்டும் சங்கங்களை இணைத்துக்கொள்ளும்வரை, மையச் சங்கம் தனிநபருக்கு உச்ச அளவுக் கடனாக ரூ.20,000 மட்டுமே அனுமதித்து வந்தது. திருப்பிச் செலுத்தும் கால அளவும் 15 ஆண்டுகளாகவே இருந்துவந்தது. தற்போது தனிநபரின் உச்ச அளவுக் கடன் ரூ.30,000 ஆகவும், கால அளவு 20 ஆண்டுகளாகவும் உயர்த்தப்பட்டுள்ளது. கிராமக் கூட்டுறவு வீட்டுவசதிச் சங்கங்களைப் பொறுத்தவரை, தனிநபர் உச்ச அளவுக்கடன் ரூ.10,000 ஆக நிருணயிக்கப்பட்டுள்ளது.

தற்போது கடன்பட்டுவாடா முறையும் மாற்றப்பட்டுள்ளது. அதாவது, உறுப்பினர்களுக்குக் கடன் ஒப்பளிக்கப்பட்டு அவர் அடைமானப் பத்திரம் எழுதிப் பதிவு செய்து தந்ததும் 30 சதவீதத்தை முதல் தவணையாக வழங்கலாமென ஆலோசனை கூறியதன் பேரில், தற்போது முதல் தவணை 30% வழங்கப்படுகிறது. மேற்படி 30%ஐக் கட்டடத்தில் செலவழித்து அஸ்திவாரம் வரையிலாவது கட்டி முடித்த பின்னர் இரண்டாவது தவணை 60% வழங்கப்படுகிறது. கட்டடம் முழுவதும் கட்டி முடித்த பின்னர், இறுதித்தவணை 10% வழங்கப்படுகிறது.

1974–75 நிதியாண்டிற்கு மையச் சங்கத்தின் தேவை ரூ.10 கோடியாக இருக்கும். இத் தேவையை முழு அளவில் பூர்த்தி செய்ய ஆயுள் காப்பீட்டுக் கழகத்தைத் தமிழக அரசு அணுகும்.

வீடு அடைமானச் சங்கங்களுட்பட எல்லாவகையான வீட்டு வசதிச் சங்கங்களுக்கும் கடன் வழங்குவதற்கான மாநில மட்டத்து நிதியமைப்பான தமிழ்நாடு கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கத்தின் நிதியாதாரங்களைப் பெருக்கும் பொருட்டு, 1969 ஆம் ஆண்டில் சந்தானம் குழுவினர், அச் சங்கம் தமிழ் நாடு மாநில நிலவள வங்கி போன்று, அரசு உத்தரவாதத் துடன் கடனீட்டுப் பத்திரங்களை வெளியிடலாமென்ற யோசனை யைக் கூறினர். இந்த யோசனை கவனிப்பிற்குரியது. இச் சங்கம் அரசிடமிருந்தும், ஆயுள் காப்பீட்டுக் கழகத்திட மிருந்தும் தான் வெளியிட இருக்கும் கடனீட்டுப் பத்திரங்களி லிருந்தும் பெற்ற நிதிகளை ஒன்றுதொகுத்து, மாநிலத்திலுள்ள வீட்டு வசதிச் சங்கங்களுக்கு நியாயமான வட்டி விகிதங்களில் நிதி வழங்கக் கூடும். இது தமிழ்நாட்டில் கூட்டுறவு வசதி நடவடிக்கைகளை விரிவாக்கம் செய்வதற்குப் பேருதவியாக இருக்கும்.

1966ஆம் ஆண்டுச் சூன் மாதத்தில் எல்லா வீட்டு வசதிச் சங்கங்களின் நிர்வாகக் கண்காணிப்புக் கூட்டுறவுப் பதிவாளரிட மிருந்து, மாநிலத்தில் வீட்டுவசதி நடவடிக்கைகள் வளர்ச்சிக்குப் பொறுப்பு வகிக்கும் தமிழ்நாடு வீட்டுவசதி வாரியத்தின் தலைவருக்கு மாற்றப்பட்டது. அவர் வீட்டுவசதிக் கூட்டுறவுச் சங்கங்களின் அலுவலால் பதிவாளராக இருக்கிறார்.

## பிற்சேர்க்கை I

**குறைந்த வருவாய் வகுப்பு வீட்டு வசதித் திட்டம், தொழிலாளர் வீட்டு வசதித் திட்டம், நடுத்தர வருவாய் வகுப்பு வீட்டு வசதித் திட்டம் ஆகியவைகளின்கீழ், கடந்த 6 ஆண்டுகளாக, அதாவது 1967-68ஆம் ஆண்டிலிருந்து 1972-73ஆம் ஆண்டுவரை, ஏற்படுத்தப்பட்ட நிதியத்தையும், செய்யப்பட்ட செலவு தொகையையும், கட்டப்பட்ட வீடுகளின் எண்ணிக்கையையுங் காட்டும் விவரப் பட்டியல்**

| ஆண்டு | குறைந்த வருவாய் வகுப்பு வீட்டு வசதித் திட்டம் | | | தொழிலாளர் வீட்டு வசதித் திட்டம் | | | நடுத்தர வருவாய் வகுப்பு வீட்டு வசதித் திட்டம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஏற்படுத்தப்பட்ட தொகை | செலவு செய்யப்பட்ட தொகை | கட்டப்பட்ட வீடுகளின் எண்ணிக்கை | ஏற்படுத்தப்பட்ட தொகை | செலவு செய்யப்பட்ட தொகை | கட்டப்பட்ட வீடுகளின் எண்ணிக்கை | ஏற்படுத்தப்பட்ட தொகை | செலவு செய்யப்பட்ட தொகை | கட்டப்பட்ட வீடுகளின் எண்ணிக்கை |
| | (ரூபாய், இலட்சத்தில்) | | | (ரூபாய், இலட்சத்தில்) | | | (ரூபாய், இலட்சத்தில்) | | |
| 1967-68 | 17.50 | 17.20 | 222 | 5.00 | 5.09 | 219 | 10.00 | 10.00 | 59 |
| 1968-69 | 22.20 | 22.31 | 259 | 8.80 | 8.80 | 104 | 12.50 | 12.50 | 27 |
| 1969-70 | 22.00 | 22.79 | 150 | 5.50 | 5.57 | 308 | 10.00 | 10.00 | 50 |
| 1970-71 | 33.00 | 33.99 | 386 | 3.73 | 3.73 | 55 | 20.00 | 20.01 | 100 |
| 1971-72 | 41.00 | 40.55 | 350 | 4.73 | 4.73 | 77 | 25.00 | 25.00 | 146 |
| 1972-73 | 25.53 | 25.74 | 175 | 1.08 | 1.08 | 30 | 25.00 | 25.00 | 118 |

## பிற்சேர்க்கை 11

**கிராம வீட்டு வசதித் திட்டத்தின்கீழ், கடந்த 6 ஆண்டுகளாக, அல்லது 1967-68ஆம் ஆண்டிலிருந்து 1972-73ஆம் ஆண்டு வரை, ஏற்படுத்தப்பட்ட நிதியத்தையும், செய்யப்பட்ட செலவு தொகையையும், கட்டப்பட்ட வீடுகளின் எண்ணிக்கையையுங் காட்டும் விவரப்பட்டியல்**

| | கிராம வீட்டுவசதித் திட்டம் | | |
|---|---|---|---|
| ஆண்டு | ஏற்படுத்தப்பட்ட தொகை | செலவு செய்யப்பட்ட தொகை | கட்டப்பட்ட வீடுகளின் எண்ணிக்கை |
| | | (ரூபாய் இலட்சத்தில்) | |
| 1967-68 | 6.00 | 6.03 | 85 |
| 1968-69 | 10.00 | 10.13 | 164 |
| 1969-70 | 10.00 | 10.41 | 153 |
| 1970-71 | 10.00 | 10.27 | 140 |
| 1971-72 | 10.00 | 10.00 | 150 |
| 1972-73 | 8-77 | 8.77 | 100 |

# 24. பால் வழங்கும் கூட்டுறவுச் சங்கங்கள்

(Milk Supply Co-operative Societies)

## 1. கூட்டுறவுப் பால் சங்கங்களின் பயன்பாடு

மனித வர்க்கத்திற்குத் தெரிந்த மிகச்சிறந்த உணவாக, பால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. அது ஊட்டச் சத்துள்ளதும், பாதுகாப்பை யளிப்பதுமான உணவு. ஒவ்வொருவருக்கும் அன்றுடம் தேவையான குறைந்த அளவு ஊட்டச் சத்து 8 அவுன்சாக மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. ஆனுல், இந்தியாவில் தலா பால் நுகர்வும், பால்பண்டங்கள் நுகர்வும் சுமார் 5.8 அவுன்சாக மட்டு முள்ளது. தமிழ்நாட்டில், அது 4.18 அவுன்சாக மட்டுந்தான் உள்ளது. அனைத்திந்தியச் சராசரி அதற்கும் குறைவாகவுள்ளது. இச் சொற்பமான பால்நுகர்வுக்குக் காரணங்களில் முதலாவதாகப் பால் உற்பத்தியானது போதிய அளவுக்கு இல்லை. இதற்குக் காரணம் கால்நடைச் செல்வத்தின் வறுமையன்று (உண்மையாகவே இந்தியநாடு உலகத்தின் கால்நடைத் தொகையில் 1/3 பாகத்தைப் பெற்றுள்ளது.); கால்நடைகள் தருகின்ற குறைந்த கறவையேயாகும். மேலை நாடுகளில், சிலவற்றில், கால்நடை தருகின்ற விளைவு 3,700-லிருந்து 7,000 பவுண்டுகளாக இருக்க, இந்தியப் பசு தருகின்ற சராசரி விளைவு ஆண்டொன்றுக்கு 413 பவுண்டுகள் மட்டும் தான். கால்நடைகள் சரிவர உணவளிக்கப்படாமலும், பேணப் படாம லிருப்பதுமே இக் குறைவான விளைவுக்குக் காரணமாகும். இந்தியாவில் கால்நடைத் தொகையில் 95 சதவீதம் கிராமங் களி லுள்ளன. கால்நடைக்கு உரிமையாளர்கள் பெரும்பாலும் குறைந்த வருவாயுள்ளவர்களாக இருப்பதால், அவர்கள் கால் நடைகளைச் சரியாகப் பராமரிப்பதற்கு இயலாம லுள்ளனர். மற்றும், பால் பண்ணை நடத்துதலை ஒரு தொழிலாக மேற் கொள்வதற்குக்கூட, அவர்கள் சாதகமான நிலைமையி லில்லை. பால்நுகர்வோர் இடங்களிலிருந்து நெடுந்தூரத்தில் அவர்கள் வசிப்பதால், பாலை நல்ல நிலைமையில் இடம்பெயர்த்தல் செய் வதற்கு அவர்களுக்குச் சாத்தியப்படாமலிருக்கிறது. ஆகையால்,

தங்கள் இல்லத்திலேயே பாலை விற்கமுடியுமானால் ஒரு குறைந்த விலைக்குங்கூட, பாலை விற்பதற்கு அவர்கள் தயாராக வுள்ளனர். இந் நிலவரமானது, எல்லா வழிகளிலும் பால் உற்பத்தியாளர் களைச் சுரண்டல் செய்து, அவர்களின் பாலுக்காக அவர் களுக்கு ஒரு நியாய விலையைக் கொடுக்க மறுக்கின்ற இடைநிலை யாளர்கள் தோன்றுவதற்குக் காரணமாக இருந்துள்ளது. விலைக் கவர்ச்சி இல்லாமையினால், தங்கள் கறவை மாடுகளை அசட்டை செய்யும் போக்குக் குடியானவர்கள்பால் உள்ளது. நுகர்வோர் கண்ணோட்டத்திலிருந்துங்கூட, இந் நிலைமையானது திருப்திகரமானதென்று கூறமுடியாது. இலாபம் சம்பாதிப்பதை நோக்கமாகக் கொண்ட இடைநிலையாளர்—வர்த்தகர்கள்— பாலை நுகர்வோர்களுக்கு விற்பதற்கு முன்பே பாலைக் கலப் படம் செய்கின்றனர். விலையுங்கூட, பாலின் தரத்தைக் குறித்து நியாயமானதென்று கூறமுடியாது.

பால்பண்ணையை நடத்துதல், தங்களுக்கு ஊதியம் தரும் ஒரு திட்டமாக இருக்கும் பொருட்டு, பால் உற்பத்தியாளர்கள் சரிவர நிறுவப்பட வேண்டும். விஞ்ஞான முறையில் உணவளித் தல், விஞ்ஞான முறையில் வளர்த்தல் போன்ற கால்நடை களின் மேலான நிருவாகத்தின்மூலம் கால்நடைகளின் பால் விளைவு அதிகப்படுத்தப்பட வேண்டும். நுகர்வோர் கட்டத்தில், பாலின் தரம் நிச்சயப்படுத்தப்பட வேண்டும். இடைநிலை யாளர்கள் நீக்கப்பட்டு நுகர்வோர்களுக்கு ஒரு நியாயவிலையில் பால் கிடைக்க வேண்டும். இந் நோக்கங்களை யடைவதற்கு மிகத் தகுதியான அமைப்புவகையானது கூட்டுறவு அமைப்பு வகையே என்று காணப்பட்டது. பால் உற்பத்தியாளர்களைத் தக்க தொகுதிகளில் ஒன்றுசேர்ப்பதன் மூலம், கூட்டுறவு அமைப்புப் பால் உற்பத்தியில் மேம்படுத்தப்பட்ட முறைகளைப் பின்பற்றுவதற்கும், பால் வர்த்தகத்தின் இடைநிலையாளர்களின் எண்ணிக்கையைக் குறைப்பதற்கும், தங்களுக்கு ஒரு நியாய மான இலாபத்தை நிச்சயப்படுத்துவதற்கும் தங்களுக்கு வகை செய்வதோடு, அதே சமயத்தில் அது நுகர்வோர்களுக்குக் குறைந்த செலவில் நல்ல பாலை வழங்குகிறது. கூட்டுறவு முறை யானது, வெளிநாடுகளில் வெற்றிகரமாக அமல் செய்யப் பட்டுக் கூட்டுறவுப் பால்பண்ணை நடத்துதல் டென்மார்க்கு, ஆலந்து, அயர்லாந்து, நியூசிலாந்து போன்ற அநேக நாடுகளில் ஒரு முன்னேறிய கட்டத்திலுள்ளது. இந் நாடுகளில் வெண் ணெய், பால் பண்டங்களின் மொத்த உற்பத்தியில் மிகப் பெரும் பாகம் கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் உற்பத்தி செய்யப்படு கிறது. எனினும், நம் நாட்டில் பால் கூட்டுறவுச் சங்கங்களின்

முன்னேற்றம் அத்தகைய ஒரு பரந்த அளவில் இல்லை. ஆயினும், அண்மைக் காலத்தில் சில மாநிலங்களில் சில தனிப்பட்ட அபிவிருத்தி இருந்துள்ளது.

## 2. பால் கூட்டுறவுச் சங்கங்களின் நோக்கங்கள்

கால்நடை வளர்ப்பை மேம்படுத்துவதன் மூலமும், கால்நடைகளுக்குப் போதுமானதும், சரிசமமானதுமான தீவனத்தை அளிப்பதன் மூலமும், பால் உற்பத்திப் பெருக்கு, நாட்டின் வளர்ச்சித் திட்டங்களின் ஒரு முக்கியப் பகுதியாக உள்ளது. குடியானவர்கள் பால் கூட்டுறவுச் சங்கங்களாகத் தங்களை அமைத்துக் கொண்டால், இந்தப் பிரச்சினைகள் பெருமளவுக்குத் தீர்க்கப்படும். இச் சங்கங்களின் நோக்கமாவன: (i) நல்ல கறவை மாடுகளைக் கொள்முதல் செய்தல் போன்ற ஆரம்ப முதலீட்டுச் செலவை ஏற்பதற்காக உறுப்பினர்களுக்குக் கடன் வழங்குதல்; (ii) கால்நடை இனத்தையும், தீவனத்தையும் மேம்படுத்துவதற்குக் குடியானவர்களுக்குத் தொழில்நுட்ப ஆய்வுரையளித்தல்; (iii) தக்க மாட்டுத் தீவனத்தை நியாயமான விலையில் கிடைக்கச் செய்தல்; (iv) மாட்டு விற்பனைக்காக ஏற்பாடு செய்தல்; (v) பால்பண்ணை நடவடிக்கைகளை மேற்கொள்வதன் மூலம் விவசாயிகளுக்கு ஒரு துணைத் தொழிலை வழங்கி, பால் கூட்டுறவுச் சங்கங்கள் உதவுகின்றன. மேய்ச்சலுக்காக மேய்ச்சல் நிலங்கள் கிடைத்தல் காரணமாகவும், விவசாயிகள் வசம் பசும்புல் தீவனமும், வைக்கோல் தீவனமும் கிடைத்தல் காரணமாகவும் கிராமங்களி லிருக்கும் நிலைமையானது கறவை மாடுகளைப் பராமரிப்பதற்கு ஏற்றதாக உள்ளது. கிராமங்களில் சிதறிக் கிடக்கும் கிராமக் கூட்டுறவுப் பால் வழங்கும் சங்கங்களைக் கூட்டமைப்பதற்கும், அவற்றின் உற்பத்தியை ஒன்றுதொகுத்து அதைப் பாலுக்காக ஓர் அதிகமான கேட்புள்ள நகர்ப்புறங்களில் விநியோகிப்பதற்கும், கூட்டுறவுப் பால்வழங்கும் ஒன்றியங்கள் அமைக்கப்படுகின்றன. பால் கூட்டுறவுச் சங்கங்கள், அத்தியாவசியமாக, உற்பத்தியாளர்கள் நிறுவனங்களாக இருப்பினும், நுகர்வோர் கண்ணோட்டத்திலிருந்தும், பால் விநியோகம் சமமான முக்கியத்துவத்தைக் கொண்டுள்ளது. அதாவது, நியாயவிலைகளில் சுத்தமான பாலை வழங்குதல் என்கின்ற இத் துறையிலுங்கூட, கூட்டுறவுச் சங்கங்கள் ஒரு பயனுள்ள பணியை ஆற்றமுடியும்.

## 3. தற்போதைய பொது நிலைமை

**(அ) இந்தியாவில்:** 1971-72ஆம் ஆண்டுச் சூன் மாதம் இறுதியில், மாநில மட்டத்துப் பால்வழங்கும் ஒன்றியங்கள் 2-ம்,

இதரப் பால்வழங்கும் ஒன்றியங்கள் 148-ம், பால் உற்பத்தி வழங்குதல் சங்கங்கள் 11,909-ம் இருந்தன. பால்வழங்கும் ஒன்றியங்களின் (இரண்டு வகைகளும்) உறுப்பினர்கள் 9,609 சங்கங்களாகவும், 22,050 தனிநபர்களாகவும் மற்றவர்களாகவு மிருந்தனர். பால் உற்பத்தி வழங்குதல் சங்கங்கள், 196 சங் கங்களேயும் 10,23,134 தனிநபர்களேயும் மற்றவர்களேயும் உறுப்பினர்களாகக் கொண்டிருந்தன. ஒன்றியங்களாலும், சங்கங் களாலும் விற்பனே செய்யப்பட்ட பால், பால்பண்டங்கள் ஆகியவைகளின் மொத்த மதிப்பு 1970—71ஆம் ஆண்டின்போது முறையே ரூ.59 கோடியாகவும், ரூ.49 கோடியாகவு மிருந்தன. இது 1967—68ஆம் ஆண்டில் முறையே ரூ.29 கோடியாகவும், ரூ.34 கோடியாகவு மிருந்தன. 1970—71ஆம் ஆண்டின்போது, ஒன்றியங்களாலும் சங்கங்களாலும் அளிக்கப்பட்ட கடன்கள் முறையே ரூ.2 கோடியாகவும், ரூ.4 கோடியாகவும் தொகைப் பட்டன.

அடுத்து 477ஆம் பக்க அட்டவணே, நாட்டில் பால் கூட் டுறவுச் சங்கங்களின் முன்னேற்றத்தைக் காட்டுகிறது.

பால்வழங்கும் சங்கங்கள் வாங்கிய கடன்கள் ரூ.503.40 இலட்சத்திற்குத் தொகைப்பட்டன. இதில், 192.25 இலட்சம் அரசிடமிருந்தும், ரூ.125.23 இலட்சம் மைய நிதியமைப்பு களிடமிருந்தும் ரூ.5.92 இலட்சம் மற்றவர்களிடமிருந்தும் வாங்கப்பட்டவை. பால் வழங்கும் ஒன்றியங்களின் கடன்பெற்ற முதல் ரூ.938.40 இலட்சமளவிற்கு இருந்தது. அதில், ரூ.637.69 இலட்சம் அரசிடமிருந்தும் ரூ.141.30 மைய நிதி யமைப்புகளிடமிருந்தும், ரூ.159.41 மற்றவர்களிடமிருந்தும் பெறப்பட்டவை. 1970—71ஆம் ஆண்டின்போது, பால்வழங் கும் சங்கங்கள் ரூ.400.72 இலட்சமளவிற்குக் குறுகிய காலக் கடன்களேயும், மத்திய காலக் கடன்களேயும் அளித்தன. பால் வழங்கும் ஒன்றியங்கள் ரூ.159.53 இலட்சமளவிற்குக் கடன் களே யளித்தன. அத்தகைய கடன்களின் நிலுவைத் தொகை கள், 1971ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், முறையே ரூ.487.75 இலட்சமாகவும், ரூ.165.90 இலட்சமாகவுமிருந்தன. 5,523 பால்வழங்கும் சங்கங்கள் இலாபத்திலும், 3,934 பால் வழங்கும் சங்கங்கள் நட்டத்திலும், 2,452 சங்கங்கள் இலாப நட்ட மில்லாமலும் இயங்கின. பால்வழங்கும் ஒன்றியங்களுள், 68 இலாபத்திலும், 65 நட்டத்திலும், 17 இலாப நட்ட மில்லா மலும் இயங்கின.

அட்டவணை

| | 1957-58 | 1960-61 | 1967-68 | 1970-71 |
|---|---|---|---|---|
| | (ரூபாய், இலட்சத்தில்) | | | |
| **பிரதமச் சங்கங்கள்** | | | | |
| (i) எண்ணிக்கை | 1,914 | 3,200 | 9,175 | 11,909 |
| (ii) உறுப்பினர்கள் | 1,68,342 | 2,38,097 | 6,66,541 | 1,023 |
| (iii) பங்கு மூலதனம் | ரூ. 28.6 | ரூ. 49.05 | ரூ. 185 | 316.32 |
| (iv) நடைமுறை மூலதனம் | ரூ. 103.2 | ரூ. 158.43 | ரூ. 736 | 1,981 |
| (v) பால், பால் பண்டங்கள் ஆகியவைகளின் விற்பனை மதிப்பு | ரூ. 350.4 | ரூ. 543.90 | ரூ. 3,400 | 4,937 |
| **பால் ஒன்றியங்கள்** | | | | |
| (i) எண்ணிக்கை | 73 | 94 | 126 | 150 |
| (ii) உறுப்பினர்கள் — சங்கங்கள் | 1,384 | 2,314 | 7,183 | 9,609 |
| உறுப்பினர்கள் — தனிநபர்கள் | 7,859 | 13,214 | 23,277 | 22,050 |
| (iii) பங்கு மூலதனம் | — | — | — | ரூ. 210.99 |
| (iv) நடைமுறை மூலதனம் | ரூ. 135 | ரூ. 282 | ரூ. 1.170 | ரூ. 2,849 |
| (v) பால், பால் பண்டங்கள் ஆகியவைகளின் விற்பனை மதிப்பு | ரூ. 315 | ரூ. 472 | ரூ. 2,947 | ரூ. 5,881 |

மத்திய அரசின் 'உணவு விவசாயத் துறை' யால் அமைக்கப்பட்ட 'பால்பண்ணை, கால்நடைப் பராமரிப்புக் கூட்டுறவுச் சங்கங்களைப் பற்றிய செயற்குழு' வருங்காலத்தில் பால் வழங்குதலைப் பற்றிய எல்லாப் புதிய திட்டங்களும் கூட்டுறவு அடிப்படையின் பேரில் தொடங்கப்பட வேண்டுமென்று பரிவுரை செய்திருந்தது. அரசால் நடத்தப்படும் நடப்பிலுள்ள பால் திட்டங்களுங்கூடப் படிப்படியாகப் பால் வழங்கும் ஒன்றியங்களுக்கு மாற்றப்பட வேண்டும். டில்லி, பம்பாய், கல்கத்தா போன்ற பெரிய நகரங்களில் நடத்தப்படுகின்ற பால் திட்டங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் பெருகிவரும் வகையில் இணைக்கப்பட வேண்டும். இப் பால் திட்டங்களுக்குக் கிராம மட்டத்திலமைக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் மூலம், பால் வழங்குதல் ஏற்படுத்தப்படவேண்டும். மற்றும், பால் கொள்முதல், பால் வசூலித்தல், பால் விலையைச் செலுத்துதல் முதலியவைகளைப் பற்றித் திட்டஅதிகாரிகளுக்கு ஆய்வுரை வழங்கச் சிறு ஆலோசனை வாரியங்கள் அமைக்கப்பட வேண்டும்.

**(ஆ) தமிழ்நாட்டில்:** தமிழ்நாட்டில் 1971ஆம் ஆண்டுச் சூன் மாத இறுதியில் 2,566 பால் வழங்கும் சங்கங்களும், 23 பால் வழங்கும் ஒன்றியங்களு மிருந்தன. பால் வழங்கும் சங்கங்களில், தனி நபர்கள் மட்டுமே உறுப்பினர்களாக விருந்தனர். அவர்களின் எண்ணிக்கை 2,83,575 ஆக விருந்தது. சங்கத்தின் பங்குமூலதனம் ரூ.73.61 இலட்சமாக விருந்தது. இதில் அரசு பங்கு மூலதனம் ரூ.4.80 இலட்சமாகவும், தனிநபர்களின் பங்கு மூலதனம் ரூ.68.81 இலட்சமாகவும் இருந்தன. இச் சங்கங்களின் நடைமுறை மூலதனம் ரூ.381.93 இலட்சமாக விருந்தது. அவை வாங்கிய கடன்கள் ரூ.90.29 இலட்சத்திற்கிருந்தன. இதில், 52.51 இலட்சம் அரசிடமிருந்தும், ரூ.24.32 இலட்சம் மத்திய நிதியமைப்புகளிடமிருந்தும், ரூ.13.46 இலட்சம் மற்றவர்களிடமிருந்தும் வாங்கப்பட்டன. அவை ரூ.11.71 இலட்சமளவிற்குக் குறுகிய காலக் கடன்களையும், மத்திய காலக் கடன்களையும் வழங்கின. இக் கடன்களில், நிலுவையிலிருந்த தொகை, ஆண்டிறுதியில் ரூ.123.09 இலட்சமாக விருந்தது. அவற்றால் விற்பனை செய்யப்பட்ட பால், பால் பண்டங்களின் மதிப்பு, 1970—71ஆம் ஆண்டின்போது, ரூ.564.64 இலட்சமளவிற்கு இருந்தது. 677 சங்கங்கள் இலாபத்திலும், 1,813 சங்கங்கள் நட்டத்திலும், எஞ்சிய 76 சங்கங்கள் இலாப நட்ட மில்லாமலும் இயங்கின.

23 பால்வழங்கும் ஒன்றியங்களின் உறுப்பினர்கள் எண்ணிக்கை 9,524 ஆக விருந்தது. இதில், 1,693 சங்கங்களும்,

7,831 தனிநபர்களும் அடங்கியிருந்தனர். அவற்றின் பங்கு மூலதனம் ரூ.14.03 இலட்சமாக விருந்தது. இதில், ரூ.9.37 இலட்சம் சங்கங்களிடமிருந்தும், ரூ.2.86 இலட்சம் தனிநபர் களிடமிருந்தும் ரூ.1.80 இலட்சம் அரசிடமிருந்தும் பெறப்பட் டன. அவற்றின் நடைமுறை மூலதனம் ரூ.95.24 இலட்சமாக விருந்தது. அவைகளால் வாங்கிய கடன்கள் ரூ.47.06 இலட்சத்திற்கிருந்தன. இதில், ரூ.37.16 இலட்சம் அரசிட மிருந்தும், ரூ.3.31 இலட்சம் மத்திய நிதி யமைப்புகளிட மிருந்தும், ரூ.10.59 இலட்சம் மற்றவர்களிடமிருந்தும் வாங் கப்பட்டன. அவை ரூ.12.21 இலட்சமளவிற்குக் குறுகிய காலக் கடன்களையும், மத்திய காலக் கடன்களையும் வழங்கின. 1970–71ஆம் ஆண்டுச் சூன் இறுதியில், நிலுவைக் கடன்தொகை ரூ.10.44 இலட்சத்திற் கிருந்தது. 1970–71ஆம் ஆண்டின் போது, அவற்றால் விற்பனை செய்யப்பட்ட பால்பண்டங்களின் மதிப்பு ரூ.202.21 இலட்சமாக விருந்தது. 10 ஒன்றியங்கள் இலாபத்திலும், 13 நட்டத்திலும் இயங்கின.

### 4. கெய்ரா மாவட்டப் பால் உற்பத்தியாளர் ஒன்றியம் (Kaira District Milk Producers Union)

குஜராத் மாநிலத்திலுள்ள கெய்ரா மாவட்டத்தில், பால் கூட்டுறவு நிறுவனங்கள் துறையில், உண்மையாகவே ஒரு வெற்றிகரமான பரிசோதனைத் திட்டம் அமல் செய்யப் பட்டுள்ளது. அம் மாவட்டத்தில் 400-க்கும் அதிகமான கிராமங் களில் பிரதமப் பால்சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இச் சங்கங்களில் மொத்த உறுப்பினர் எண்ணிக்கை 70,000-க்கும் அதிகப்பட்டது. இச் சங்கங்கள் மேற்கொண்டும் தங்களைக் கெய்ரா மாவட்டத்துப் பால் உற்பத்தியாளர்கள் ஒன்றிய மாக அமைத்துக் கொண்டுள்ளன. கிராம மட்டத்துச் சங்கங்கள், தங்கள் உறுப்பினர்களிடமிருந்து அன்றாடம் காலையிலும் மாலை யிலும் பாலை வசூலித்து, ஒரு பெரிய பதனப்படுத்தும் தொழிற் சாலையை அமைத்துள்ள மத்தியப் பால்பண்ணைக்கு அதை வழங்குகிறது. இந்தத் தொழிற்சாலையில் பதனப்படுத்தப் பட்ட பால் பம்பாய்க்கு வழங்கப்படுகிறது. உபரிப் பாலானது, வெண்ணெய், பால்தூள், குழந்தைகள் உணவு முதலியவற்றைத் தயார் செய்வதற்காகப் பயன்படுகிறது. 'அமுல்' வெண் ணெயும், குழந்தை உணவும் இந்தியாமுழுவதிலும் ஒரு புகழைப் பெற்றுள்ளன. கெய்ரா மாவட்டத்து உற்பத்தியாளர்கள் ஒன்றியத்தை ஒரு வெற்றியாகச் செய்துள்ள ஒரு முக்கியமான காரணியானது, அதன் எல்லையில் ஆண்டு முழுவதிலும் உற்

பத்தி செய்யப்பட்ட பால் அனைத்தையும் சிக்கனமான விலைகளில் வாங்குவதை அது மேற்கொண்டிருந்ததே. இத் திறனைக் கட்டிப்பால் (Condensed Milk), வெண்ணெய், பாலாடைக்கட்டி, குழந்தை உணவு போன்ற பால்பண்ணைப் பண்டங்களைத் தயாரிப்பதற்காகவே, உபரிப்பாலைப் பயன்படுத்துவதன்மூலம் அது பெற்றுள்ளது.

சென்னையில் சந்தானம் குழுவினர், தமிழ் மாநிலத்திலும் பால் உற்பத்தியாளர்களுக்கு அதே மாதிரியான வசதிகளை யளிக்கும் பொருட்டுப் பால்வழங்கும் ஒன்றியங்களி லொன்றால் அல்லது அவ் வொன்றியங்களின் ஒரு கூட்டமைப்பால், கூட்டுறவுத் துறையில் பால்பண்டங்களைத் தயாரிப்பதற்காக ஒரு தொழிற்சாலை அமைக்கப்படவேண்டுமென்றும், உபரிப் பால் கிடைக்கின்ற இடங்களில் அது துணையமைப்புகளைப் பெற்றிருக்கலாமென்றும், பால்பண்டங்கள் தொழிற்சாலையை அமைத்தல், பால் உற்பத்தியை ஊக்குவிக்குமென்றும், பால்பண்ணைகளை நடத்துதல் தமிழ்நாட்டின் விவசாயப் பொருளாதார அமைப்பில் ஒரு முதன்மையான பிழைப்புத் தொழிலாக வேரூன்றி விடுமென்றும் பரிவுரை செய்தனர்.

## 5. தமிழ்நாட்டில் கூட்டுறவுப் பால் சங்கங்களின் வளர்ச்சியும், நடவடிக்கைகளும்

கிராமக் கூட்டுறவுப் பால் சங்கங்கள் முதலில் சென்னை நகரத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் தொடங்கப்பட்டுப் பின்னர் அவை ஓர் ஒன்றியமாகக் கூட்டமைக்கப்பட்டன. சென்னை நகரத்தைச் சுற்றியுள்ள கிராமப்பகுதிகளில், பால்சங்கங்களின் உறுப்பினர்களால் உற்பத்தி செய்யப்பட்ட உபரிப் பாலை வசூலித்து, அதை நகர மக்களுக்கு விநியோகம் செய்வதற்குச் 'சென்னைக் கூட்டுறவுப் பால்வழங்கும் ஒன்றியம்' 1927ஆம் ஆண்டிலமைக்கப்பட்டது. இவ் வொன்றியமானது, இந்தியாவில் முதன் முதலமைக்கப்பட்ட கூட்டுறவுப் பால் ஒன்றியமாக விருந்தது. இப் பரிசோதனையின் வெற்றியைக் கொண்டு, மாநிலத்தின் பல்வேறு பகுதிகளில் கிராமக் கூட்டுறவுப் பால்சங்கங்கள் அமைக்கப்பட்டுள்ளன. அதிக அளவுக்குப் பாலை, அதாவது நாளொன்றுக்கு 1,000 லிட்டர்களுக்கும் அதிகமாக, உற்பத்தி செய்கின்ற அத்தகைய சில சங்கங்கள், பட்டினங்களில் விநியோகிப்பதற்காக அவை தங்கள் சொந்த விற்பனை நிறுவனங்களைப் பெற்றுள்ளன. இதரப் பகுதிகளில், கூட்டுறவுப் பால் வழங்கும் ஒன்றியங்கள் அமைக்கப்பட்டு, அவற்றிற்குப் பிரதமச் சங்கங்கள் இணைக்கப்படுகின்றன. இச் சங்கங்கள் தங்கள் உற்பத்தியை ஒன்றியத்திற்கு வழங்குகின்றன. ஒன்றியம்

கிராமங்களிலிருந்து பால் வசூலித்தலை ஏற்பாடு செய்து, அதை நகர மக்களுக்கு விற்பனை செய்வதற்கு ஏற்பாடு செய்கிறது.

தற்போது, தமிழ்நாட்டில் 2,566 பிரதமச் சங்கங்களும், 23 கூட்டுறவுப் பால்வழங்கும் ஒன்றியங்களுமுள்ளன. இச் சங்கங்களை விரிவுபடுத்தி அவற்றைத் தங்கள் வாடிக்கையாளர்களுக்குப் பயனுள்ளவையாகச் செய்யும் நோக்கத்துடன், அவைகளை, நாளொன்றுக்கு 500 லிட்டர்கள் பால் உற்பத்தி வாய்ப்பு வசதியைக் கொண்ட தன்னிறைவுள்ள அமைப்புகளாகச் சீரமைப்பதற்குத் திட்டமிடப்பட்டுள்ளது. அத்தகைய அமைப்புகளின் எண்ணிக்கையைப் பற்றிய இலக்கு 900; இதில் இதுவரை ஏறக்குறைய 200 அமைக்கப்பட்டுள்ளன. எஞ்சிய சங்கங்களை யமைக்கும் பணி 1973ஆம் ஆண்டில் முடிவு பெறுவதற்கு எதிர்பார்க்கப்பட்டது. அத்தகைய ஒரு பலமான அமைப்பானது, மேல் வளர்ச்சிக்கான நடவடிக்கைகளைப் பெருமளவு மேற்கொள்வதற்கும், அவற்றின் மூலம், அதிகமான உறுப்பினர்கள் கிராமப்பகுதிகளில் பால்பண்ணை அபிவிருத்தியையும், கிராம விவசாய மக்கள்தொகையின் பொருளாதார முன்னேற்றத்தையும் வளர்ச்சி பெறச் செய்யக் கூடிய வகையில் அவர்களுடைய தேவைகளை வழங்குவதற்கும், மிக்க தகுதியுள்ளதாக விருக்கும்.

பெரிய பட்டணங்களிலும், பஞ்சாயத்துகளிலும் பால் கூட்டுறவுச் சங்கங்க ளமைக்கப்பட்டு அவை அப் பகுதிகளிலுள்ள மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன. எல்லா கூட்டுறவுப் பால்சங்கங்களிலும், வருடாந்தர உற்பத்தி 1965–66ஆம் ஆண்டின்போது 372.65 இலட்சம் லிட்டர்களிலிருந்து, 1970–71ஆம் ஆண்டின்போது 843.48 இலட்சம் லிட்டர்களுக்கு அதிகரித்தது. இது நாளொன்றுக்குச் சராசரி 2.31 இலட்சம் லிட்டர்களுக்கும் கணக்கிடப்படுகிறது. 8 பால் பதனப்படுத்தும் இயந்திர அமைப்புகள் கூட்டுறவுத் துறையில் அரசு உதவியைக் கொண்டு, சென்னையிலும், கோவையிலும், திருச்சியிலும், தஞ்சையிலும், கடலூரிலும், நாகர்கோவிலிலும், கோடைக்கானலிலும், உதகையிலும் அமைக்கப்பட்டுள்ளன. அவற்றின் மொத்த மூலதன முதலீடு ரூ.68.51 இலட்சமாகும். இவ் வமைப்புகளில், ஒவ்வொன்றும் நாளொன்றுக்குச் சுமார் 5,000-லிருந்து 15,000 லிட்டர்களைக் கையாளுகின்றன. இப் பதனப்படுத்தப்பட்ட பாலைக் கூட்டுறவுச் சங்கங்கள், முறையான பட்டணங்களில் விநியோகம் செய்வது மட்டுமன்றி,

உபரிப் பாலைச் சென்னையிலும் மதுரையிலுமுள்ள அரசு பால் பண்ணைத் திட்டங்களுக்கு வழங்குகின்றன. வேலூர், சேலம், கடலூர், ஈரோடு, திண்டுக்கல், தூத்துக்குடி, நாகர்கோவில் முதலிய இதரப் பெரிய பட்டணங்களில், பால்வழங்கும் ஒன்றியங்கள் பணியாற்றுகின்றன. விருதுநகர், ஸ்ரீவில்லிபுத்தூர், சங்கரன்கோவில், மானாமதுரை, மன்னார்குடி, செங்கோட்டை, நாகப்பட்டினம், மாயூரம் போன்ற இடங்களில் நாளொன்றுக்கு 1,000 லிட்டர்களுக்கும் அதிகமான பாலைக் கையாளும் பெரிய சங்கங்களுங்கூட உள்ளன.

சென்னையிலும், மதுரையிலும், அரசினர் பால்பண்ணைத் திட்டங்களும், ஈரோட்டில் ஊட்டமளிப்புப் பால்பண்ணையும் (Feeder Dairy) அமைக்கப்பட்ட பிறகு, பால்பண்ணைத் திட்டங்களைப் போஷிப்பதற்காக, இந் நகரங்களுக்குப் பக்கத்திலுள்ள பகுதிகளில் ஏராளமான கூட்டுறவுப் பால்சங்கங்கள் நிறுவப்பட்டுள்ளன. மாநிலத்தின் இதரப் பகுதிகளிலுள்ள கூட்டுறவுப் பால் சங்கங்களுங்கூட, தங்கள் உபரிப் பாலையும் சில சந்தர்ப்பங்களில் தங்கள் பால் உற்பத்தியில் பெரும்பான்மையையும், அரசு பால் பண்ணைக்கு அனுப்புகின்றன. சராசரியில், 58,520 லிட்டர்கள் பால் ஒவ்வொரு நாளும் அரசு பால்பண்ணைத் திட்டங்களுக்கு மாநிலத்திலுள்ள 423 பால் கூட்டுறவுச் சங்கங்களால் வழங்கப்படுகிறது.

கூட்டுறவுப் பால் சங்கங்களை அரசு பல்வேறு வழிகளில் உதவி செய்தும், பால் உற்பத்தியைப் பெருக்குவதற்கு அவர்களை ஊக்குவித்தும் வந்துள்ளது. பால் உற்பத்தியையும், வசூலித்தலையும் பெருக்கும் பொருட்டும், தொடர்ந்துவந்த ஐந்தாண்டுத் திட்டங்களின்கீழ், கூட்டுறவுப் பால்சங்கங்களுக்குக் கடனுதவி அரசு வழங்குகிறது. கறவை மாடுகளை வாங்குவதற்காகவும், ஊர்திகளையும், குளிர்பதனப் பெட்டிகளையும் வாங்குவதற்காகவும், மாட்டுத் தொழுவங்களைக் கட்டுவதற்காகவும், சுகாதார முறையில் பாலைக் கையாளுவதற்குப் பால்பண்ணைக் கட்டடங்களைக் கட்டுவதற்காகவும் இச் சங்கங்களுக்குக் கடன் அரசு வழங்குகிறது. இதுவரை, கிராமப் பால்பண்ணை விரிவாக்கப்பணித் திட்டத்தின்கீழ் அரசு அத்தகைய காரியங்களுக்காக ரூ.24.30 இலட்சம் ஒப்பளித்தது. இதனால் நன்மையடைந்த சங்கங்கள், ஒன்றியங்களின் எண்ணிக்கை 107 ஆகும்.

தெரிந்தெடுக்கப்பட்ட கூட்டுறவுப் பால்சங்கங்கள் தங்கள் நிதியாதாரங்களைப் பெருக்குவதற்கும், தங்கள் நடவடிக்கைகளை

விரிவுபடுத்துவதற்கும் வகை செய்யும் பொருட்டும் கடன் வாங்குந் திறனைப் பெருக்கிக் கொள்வதற்கும்கூடப் பங்குமூல தனத்தில் அரசு பங்குகொள்ளுதல் வாயிலாக உதவப்படுகின்றன. இத் திட்டம், 4ஆவது ஐந்தாண்டுத் திட்டத்திலிருந்து அமுல்படுத் தப்பட்டு, முதல் மூன்றாண்டுகளின்போது, 142 சங்கங்களும், ஒன்றியங்களும் ரூ.10.65 இலட்சம் அளிக்கப்பட்டன.

**கூட்டுறவுப் பால் சங்கங்களின் இதர நடவடிக்கைகள் :** கால்நடையை அபிவிருத்தி செய்வதற்கும், நாளொன்றுக்கு 0.16 லிட்டராக விருக்கும் கறவை மாடுகளின் ஒரு குறைவான பால்விளைவை அபிவிருத்தி செய்வதற்கும், திட்ட மொன்று அமுல்படுத்தப்பட்டு வருகிறது. பால் உற்பத்திப் பெருக்கத் திற்காக ஈடுபடுத்தப்படும் தொழில்நுட்பப் பொருள்களை வழங்கு வதற்கான இத் திட்டத்தின்கீழ், பால்கொட்டகைப் பகுதிகளி லுள்ள குடியானவர்களுக்குச் சொந்தமான 2,50,000 மாடுகள் குறுக்கு வளர்ப்புக் (Cross breeding) காரியங்களுக்காகத் தெரிந்தெடுக்கப்படும். உற்பத்தியாளர்களுக்கு எல்லாப் பணிகளைப் புரிவதும், உற்பத்தியில் ஈடுபடுத்தப்படும் எல்லாப் பொருள்களை வழங்குவதுமே இத் திட்டத்தின் பொது அணுகுமுறையாகும். இதில், அம்மைகுத்த லுட்படக் கால்நடை பற்றிய உதவியும், பால்பண்ணை விரிவாக்கப் பணியும், மாட்டுத்தீவனம் சாகு படிக்காக ஆய்வுரையும் உதவியும், மாட்டுத்தீவனமும், மாட்டு வளர்ப்பு வசதிகளும் வழங்குதலும் உள்ளடங்கி யிருக்கும். கூட்டுறவுப் பால் சங்கங்களுக்கு முர்ரா எருமைகளும், எருதுகளும் ஒரு சிறிய அளவிற்குச் சலுகையான விலைகளில் வழங்கப்படு கின்றன. சங்கங்களின் உறுப்பினர்கள், மத்தியக் காலக் கடன் ஒப்பளிப்பு வாயிலாக, உயர்வளர்ப்பு மாடுகளை வாங்குவதற்கு ஊக்குவிக்கப்படுகின்றனர். பசும்புல் சாகுபடிக்காகவும், மாட்டுத் தீவனங்கள் உற்பத்திக்காகவுங்கூடச் சங்கங்கள் உதவியளிக்கப் படுகின்றன. பசும்புல் பண்ணைகளை அமைப்பதற்காக 6 கூட்டுற வுச் சங்கங்களும், மாட்டுத் தீவனம் தயாரிப்பு இயந்திரங் களை அமைப்பதற்காக 9 சங்கங்களும், மாடுகளை அழிவிலிருந்து காப்பாற்றுதல் - தீவனம் உற்பத்திப் பண்ணைகளை யமைப்பதற் காக 3 சங்கங்களும் உதவியளிக்கப்பட்டன. உலக உணவுச் செயல்திட்டப் பிராஜக்டின்கீழ், இலாகா அமைப்புகளில் தயாரிக் கப்பட்ட கம்ப்யூட் (Comput) மாட்டுத்தீவனத் திட்டத்தால் கூட்டுறவுப் பால் சங்கங்களுக்கு—தங்கள் உறுப்பினர்களுக்கு—விநியோகிப்பதற்காக வழங்கப்படுகிறது.

அட்டவணைச் சாதிகளுக்கும், மலைவாசிகளுக்கும், புனர் வாழ்வளிக்கும் ஒரு நடவடிக்கையாகக், கூட்டுறவுப் பால் சங்கங்களின் அரிசன உறுப்பினர்களுக்குக் கறவை மாடுகளை வாங்குவதற்காக அரிசன நலத் திட்டத்தின்கீழ், கடன்கள் மூலமும் மானியங்கள் மூலமும் அரசு உதவியளிக்கிறது. அரிசனங்கள் நன்மைக்காக அமைக்கப்பட்ட இச் சங்கங்கள், பாத்திரங்களை வாங்குவதற்காகவும், மேலாண்மைச் சிப்பந்திச் செலவை ஏற்பதற்காகவுங்கூட மானியத் தொகை வழங்கப்படுகின்றது. மாட்டுத் தொழுவங்களைக் கட்டுவதற்காகவுங்கூட உதவியளிக்கப்படுகின்றது. அரிசனங்கள் நன்மைக்காக 301 சங்கங்கள் அமைக்கப்பட்டு, ரூ.21.52 இலட்சம் கடனாகவும், ரூ.23.35 இலட்சம் மானியமாகவும் 1971—72ஆம் ஆண்டுவரை அரசால் ஒப்பளிக்கப்பட்டுள்ளன. இத் திட்டத்தினால், 11,699 உறுப்பினர்கள் பயனடைந்தனர். இத் திட்டத்தை அரசு இப்பொழுது மாற்றியமைத்துள்ளது. திருத்தப்பட்ட திட்டத்தின்படி, ஒவ்வொரு சங்கத்திலும் 150 அரிசன உறுப்பினர்கள் சங்கத்தைத் தன்னிறைவுள்ளதாகச் செய்யும் பொருட்டு, உதவியளிக்கப்பட வேண்டியுள்ளனர். ஒவ்வோர் அரிசன உறுப்பினரும் 3 கறவை மாடுகளை வாங்குவதற்காகக் கடனும், மானியமும் (முறையே ரூ.375ம், ரூ.125ம்), மூன்றாவது மாட்டை வாங்குவதற்கு முழுமையான கடனும் அளிக்கப்படுகிறது. இவ் வுதவி, சம்பந்தப்பட்ட அரிசன உறுப்பினர், பால்பண்ணை நடத்துதலின்மீது ஒரு தொடர்ச்சியான தொழிலாகச் சார்ந்திருக்கச் செய்யும்பொருட்டு அளிக்கப்படுகிறது.

தமிழ்நாட்டில் கூட்டுறவுப் பால் சங்கங்கள் மற்றும், ஒன்றியங்கள்மீதான நிருவாகக் கண்காணிப்பும், சட்டப்படியான கண்காணிப்பும், கூட்டுறவுப் பதிவாளரிடமிருந்து, பால் உற்பத்தி மற்றும், பால்பண்ணை வளர்ச்சிக்கான ஆணையாளருக்கு, 1965ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் மாற்றப்பட்டது.

# 25. கூட்டுறவில் மிக அண்மையான போக்குகள்

(Latest Trends In Co-operation)

**1. கூட்டுறவு முறையின் பயனுறுதித் தன்மை அரசாலும் திட்டக்குழுவாலும் ஏற்கப்படுதல்:** (Recognition by Government and the Planning Commission of the effectiveness of the Co-operative method)

நாடு விடுதலையடைந்த பின்பு, கூட்டுறவு வளர்ச்சியின் மிக முக்கியமான ஒரு அம்சமானது, மக்களின், சிறப்பாகச் சமுதாயத்தின் பலங்குன்றிய பிரிவினர்களின் சமுதாயப் பொருளாதார நல்வாழ்வுத் திட்டங்களில் கூட்டுறவு முறையின் பயனுறுதித் தன்மை அரசாலும், திட்டக்குழுவாலும் அங்கீகரிக்கப்பட்டதாகும். ஏழ்மையை அகற்றி மக்களிடையே தற்சார்பை ஊக்குவிக்கும் குறிக்கோளின் ஒரு பாகமாக, நம் பொருளாதார அமைப்பின் பல்வேறு துறைகளில் — விவசாயத் துறையிலும், தொழில்துறையிலும்—கூட்டுறவு வளர்ச்சியைப் பேணுவதே தன் நோக்கமாக வுள்ளது என்பதை அரசு தெளிவுபடுத்தியுள்ளது. நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் கூட்டுறவுச் சங்கங்கள், மேற்கொள்ளக்கூடிய தீவிரப் பங்கை அரசு அங்கீகரித்துள்ளது. கூட்டுறவுச் சங்கங்கள், குறிப்பாக விவசாயக் கடன் கூட்டுறவுப் பதனிடுதல் மற்றும் சிலவகையான தொழிற்கூட்டுறவுச் சங்கங்கள் போன்ற துறைகளில், கணிசமான பலன்களை அடைவதற்கு உதவியுள்ளன. வரப்போகும் ஆண்டுகளில், கூட்டுறவுச் சங்கங்களுக்காக ஒரு பெரிய பங்கை ஒப்படைப்பதற்கு அரசு தன் கடமையாகத் தீர்மானித்துள்ளது. இப் போக்கு நீடித்தால், கூட்டுறவு இயக்கம் நம் நாட்டுப் பொருளாதார அமைப்பில் மேலும் அதிகமான முக்கியப் பங்கை எதிர்பார்க்க முடியும்.

**2. அரசு பங்காளித்துவம்** (State Partnership)

இரண்டாவதாக, 1954ஆம் ஆண்டில் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை வெளியிடப்பட்ட பிறகு அரசு

பங்காளித்துவமும், அரசு பங்குகொள்ளுதலும், நம் நாட்டுக் கூட்டுறவு வளர்ச்சிக்கொள்கை, கூட்டுறவு வளர்ச்சித் திட்டம் ஆகியவற்றின் ஓர் அத்தியாவசிய அம்சமாக ஏற்பட்டுள்ளன. ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடன் இலாகா, விவசாய மறுநிதி வசதிக் கழகம், தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம், இந்தியத் தொழில் நிதிக் கழகம், மாநிலத் தொழில் நிதிக் கழகங்கள் போன்ற பல தனிப்பட்ட அமைப்புகளும், அரசு வரவு செலவுத் திட்ட நிதியாதாரங்களும், எல்லாத் துறைகளிலு முள்ள கூட்டுறவு நிறுவனங்களுக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. பங்குமூலதன உதவித்தொகை, நடைமுறை மூலதனம், மேலாண்மைச் சிப்பந்தி மானியம், சலுகையான கடன் நிதி, உத்தரவாதங்கள் முதலியன போன்ற பல்வேறு வடிவங்களில் இவை கூட்டுறவு நிறுவனங்களுக்கு உதவி வழங்குகின்றன. அரசிடமிருந்து இந்த மிகப்பெரும் உதவியில்லாவிடில் கூட்டுறவு நடவடிக்கையானது தற்போதுள்ள பருமத்தை அடைந்திருக்க இயலாது. அரசு பங்காளித்துவக் கருத்தமைப்பும், தேசிய மட்டத்தில் ஒருங்கிணைந்த திட்டத்தின் அவசியமும், இப்பொழுது ஒப்புக்கொள்ளப்பட்டு வருகின்றன. கூட்டுறவு இயக்கத்திற்குள்ளேயும், வெளியேயும் உள்ள தலைவர்களாலும், சிந்தனையாளர்களாலும் அவை தவிர்க்க முடியாதன என்றுங்கூட ஒப்புக்கொள்ளப்படுகின்றன. ஆயினும், இது கூட்டுறவு நிறுவனங்களின்மீது அரசின் நிரந்தரக் கட்டுப்பாடு என்று பொருள்படாது. காலப்போக்கில், கூட்டுறவு நிறுவனங்கள் தற்சார்பை அடையுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. எந்த அளவுக்கு மற்றும், எந்தக் காலத்திற்குள் இது அடையப்படக் கூடும் என்று கூறுவதற்கும் கடினமாக வுள்ளது. கூட்டுறவு நிறுவனங்கள் இந்த இலட்சியத்தைத் தங்கள் முன்பு அமைத்துக்கொண்டு ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் அதை அடைய முயலவேண்டும்.

அரசு பங்காளித்துவத்துடன் நெருங்கிய தொடர்புகொண்டிருப்பது தேசியத் திட்ட மிடுதலாகும். தேசியத் திட்டமிடுதலானது, சமுதாயத்தின் பொருளாதார வாழ்க்கையனைத்தும் வளர்ச்சி பெறச் செய்வதை நோக்கமாகக் கொண்டிருப்பதால், கூட்டுறவு இயக்கத்தின்மீது தேசியத் திட்டமிடுதலின் செயல்விளைவு எளிதில் புரிந்துகொள்ளக் கூடியதாக வுள்ளது. தேசியத் திட்டங்களில் கூட்டுறவு வளர்ச்சித் திட்டத்தைச் சேர்த்துக்கொள்வதன் பயனை அங்கீகரிப்பதன் விளைவாக, கூட்டுறவு இயக்கம் சில பொருளாதார நடவடிக்கைத் துறைகளில் ஓர் ஆக்கத்தைப்பெற்று, குறிப்பிடத்தக்க முன்னேற்றத்

தைக் காண்பித்துள்ளது. கூட்டுறவு வளர்ச்சிக்கான பல்வேறு திட்டங்கள் தொடர்ந்து வந்த ஐந்தாண்டுத் திட்டங்களில் பொதுவான பொருளாதார வளர்ச்சித் திட்டத்தின் பகுதியாக இருக்கின்றன. மற்றும், திட்டக்குழு, கூட்டுறவு நிறுவனங்களுக்குத் தற்போது இருப்பதைவிட ஒரு பெரிய பங்கை, ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் அளித்துள்ளது. இப் போக்கு நீடிக்கக்கூடும். அது, கூட்டுறவு நிறுவனங்கள், விவசாயம், மற்றும் தொழில், மக்கள்தொகையின் அதிகரித்துவரும் ஒரு பிரிவினருக்குச் சேவை செய்யும் வண்ணம், கூட்டுறவு நிறுவனங்களின் நடவடிக்கைகளை விரிவுபடுத்திப் பரவலாக்கச்செய்யும்.

**3. சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்களுக்கு உதவி செய்தல்மீது வலியுறுத்தல்** (Emphosis on aid to weake sections of society.)

மூன்றாவதாக, சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்களுக்கு உதவ வேண்டிய அவசியத்தின்மீது ஓர் அதிகரித்துவரும் வலியுறுத்தல் கூட்டுறவு வளர்ச்சிக்கான எல்லாத் திட்டங்களிலும் விதிக்கப்படுகிறது. கூட்டுறவு நிறுவனங்களின் உதவியை உண்மையாகவே நாடுபவர்களைக் கூட்டுறவு நிறுவனங்கள் தீண்டவில்லையென்றும், அவை சமுதாயத்தின் நடுத்தர—உயர்தர—வகுப்பினர்களுக்கு மட்டுமே பலனளித்துவந்தன வென்றும் நம்பப்படுகிறது. தற்போது, திட்டமிடுவதிலும், திட்டங்களை அமுல் செய்வதிலும், சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்களுக்கு உதவும் வகையில் ஒரு திருப்பம் காணப்படுகிறது. விவசாயக் கடன் துறையில், மிகச் சிறு சாகுபடியாளர்களுக்கும் மிகக் கீழ் இறுதிச் சாகுபடியாளர்களுக்கும் நிலமில்லாத தொழிலாளர்களுக்கும் கடனுதவி யளிப்பதில் அதிகமான கவனிப்புச் செலுத்தப்பட்டு வருகிறது. 'சிறு குடியானவர்கள் வளர்ச்சியமைப்'பும் (Small Farmers Development Agency), மற்றும் இறுதிநிலைக் குடியானவர்கள்—விவசாயத் தொழிலாளர்கள்—அமைப்பும் (Marginal Farmers and Agricultural Labourers Agency) போன்ற சிறப்புத் திட்டங்கள், தெரிந்தெடுக்கப்பட்ட மாவட்டங்களில் கூட்டுறவு நிறுவனங்களின் தீவிர ஈடுபாட்டின் மூலமாக அமுல்படுத்தப்பட்டு வருகின்றன. கடன் கூட்டுறவுச் சங்கங்களின் கடன்கொள்கைகளும், நடைமுறைகளும் சிறு குடியானவர்களுக்குச் சாதகமாக மறுதிருப்பம் செய்யப்பட்டுள்ளன. உதாரணமாக, ஒரு குறிப்பிட்ட சங்கத்தினருக்குக் கிடைக்கும் நிதியாதாரங்கள் அதன் எல்லா உறுப்பினர்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குப் போதாமலிருப்பின், சிறு சாகுபடியாளர்களின் தேவைகள், ஒரு முன்னுரிமை அடிப்

படையில் பூர்த்தி செய்யப்படுவதை நிச்சயப்படுத்த வேண்டும். விவசாயக் கடன் சங்கங்களில் நிலுவையிலிருக்கும் கடன்களின் குறைந்த பட்சம் 20 சதவீதம் கடன்கள், சிறுகுடியானவர்கள், குத்தகைச் சாகுபடியாளர்கள், நிலமில்லாத விவசாயத் தொழிலாளர்கள் ஆகியவர்களுக்கு அளிக்கப்பட்ட கடன்களைக் குறித்தவையாக விருக்க வேண்டுமென்று, ரிசர்வ் வங்கி நிபந்தனை விதித்துள்ளது. பெரிய சாகுபடியாளர்கள், தாங்கள் வாங்கும் கடன்களில் ஒப்பிடும் வகையில் அதிகமான ஒரு விகிதாச்சாரத்தைப் பங்கு மூலதனத்திற்காக உதவத் தேவைப்படுகின்றனர். இதனால் பங்கு மூலதனத்திற்கு உதவ வேண்டிய சுமையானது, சிறு குடியானவர்கள்மீது குறைவாக இருக்கும். 1970ஆம் வருடத்திய தமிழ்நாடு கூட்டுறவுச் சங்கங்களின் திருத்தச் சட்டம், மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் நிருவாகக் குழுக்களில் சிறு குடியானவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கான ஏற்பாடு செய்துள்ளது. சிறு குடியானவர்களின் நலன்களைப் பேணுவதற்காக, விவசாயக் கடன் சங்கங்களின் நிருவாகக் குழுவில் அவர்களுக்காகத் தனிப் பிரதிநிதித்துவமளிக்கப்பட வேண்டுமென்று சந்தானம் குழுவினர் பரிவுரை செய்துள்ளனர்.

கடந்த பத்தாண்டின் போது, சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினருக்கான கூட்டுறவு நிறுவனங்களை அமைப்பதற்கு ஓரளவு வெற்றியுடன் முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன. பால்பண்ணை, கோழிப்பண்ணை, மீன்பண்ணைக் கூட்டுறவுச் சங்கங்கள் பெரிய எண்ணிக்கையில் நிறுவப்பட்டு வருகின்றன. இத்தலைப்பின்கீழ், திட்ட நிதியாதாரங்களில் பாராட்டிற்குரிய ஒரு பகுதி இக் கூட்டுறவு நிறுவனங்களுக்காக ஒதுக்கீடு செய்யப்பட்டு வருகின்றது. ஒரு சில மாநிலங்களில் சில அளவுக்கு முன்னேற்றமடைந்துள்ள கூட்டுறவுப்பண்ணை, புதிய நில உச்சவரம்பு விதிப்புக்குப் பிறகு தற்போது ஓர் அதிகமான பங்கை ஏற்கக்கூடும். போக்குவரத்துக் கூட்டுறவுச் சங்கங்கள், தொழில் மற்றும் கட்டடச் சங்கங்கள், கூட்டுத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள், சலவைத் தொழிலாளர் கூட்டுறவுச் சங்கங்கள், சிறு கைத் தொழிலாளர் சங்கங்கள், ரிக்ஷா இழுப்பவர்கள் சங்கங்கள் முதலிய சங்கங்களை அமைத்தல் இந்தத் திசையில் செய்யப்பட்ட இதர முயற்சிகளாகும்.

1–4–74ஆம் நாளன்று அமுலுக்கு வந்த, தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகச் சட்டத்தின் 2ஆவது திருத்தத்தின்கீழ், விவசாயத் துறையில் கூட்டுறவுப் பொருளாதார வளர்ச்சிக்

கான கிராம உள்ளமைப்பு, பலங்குன்றிய பகுதியினர்மீதும், பின்தங்கிய பகுதிகளின்மீதும் ஒரு வலியுறுத்தலுடன் பலப் படுத்தப்படும். அதன் நடவடிக்கைகள் பால்பண்ணை, கோழிப் பண்ணை, மீன்பண்ணை, சிறிய காட்டு விளைபொருள்கள் ஆகிய வற்றைத் தழுவும்.

**4. இயக்கம் பலவகையாக்கப்படுதல்** (Diversification of the movement)

நான்காவதாக, இயக்கம் அண்மையில் பொருளாதார நடவடிக்கையின் புதிய துறைகளில் நுழைந்துள்ளது. இன்னும் அது பெருமளவு கடன் இயக்கமாக இருப்பினும், கூட்டுறவுப் பதனிடுதல், கூட்டுறவுக் கிடங்குவசதி, வீட்டு வசதி, நுகர்வோர் நிறுவனங்கள், தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள், பால்பண்ணை, மீன்பண்ணை முதலிய துறைகளில் அது புதிய வளர்ச்சியை அடைந்துள்ளது. சில பெரிய அளவுத் தொழில் முயற்சிகளும் ஒரு கூட்டுறவு அடிப்படையின் பேரில் மேற்கொள்ளப்பட்டுள்ளன. உதாரணமாகக் கூட்டுறவுச் சர்க்கரை ஆலைகள், கூட்டுறவு நூற்பாலைகள், கூட்டுறவு உரத் தொழிற்சாலைகள், கூட்டுறவுத் தேயிலைத் தொழிற்சாலைகள், கூட்டுறவு நவீன அரிசி ஆலைகள் முதலிய நிறுவனங்கள் அமைக்கப்பட்டுள்ளன. ஒரு கூட்டுறவு அடிப்படையின் பேரில், வண்டிப்பட்டைத் தொழிற் சாலை (Tyre Industry) கேரளாவில் தொடங்குவதற்கு உத்தேசிக் கப்பட்டுள்ளது. அண்மையில் ஒரு பல அமைப்புகள் கூட்டுற வுச் சங்கம் (Multi-Unit Co-operative Society), அதாவது, 'பெட்ரோஃபில்ஸ் கூட்டுறவுச் சங்கம்' (Petrofils Co-operative Society, Limited), வரையறுக்கப்பட்டது. போலிஸ்டர் இழை நூல் (தொகுப்புநூல்—Synthetic yarn) உற்பத்திக்கான ஒரு பொறியை அமைக்கும் நோக்கத்துடன் நிறுவப்பட்டுள்ளது. இந் நிறுவனம் நெசவாளிகளுக்கும், பின்னல் வேலைத் தொழிலா ளர்களுக்கும் நூல் வழங்குவதற்காகப் பரோடா நகரத்திற்கு அருகில் அமைக்கப்பட்டுள்ளது. அது கூட்டுறவுத் துறையில் நூல் உபயோகிப்பவர்களுக்கும் அரசுக்கும் இடையிலான ஒரு கூட்டு முயற்சியாகும்.

விவசாயக் கூட்டுறவுச் சங்கங்களைக் குறித்த மிகஅண்மை யான ஒரு போக்கானது, சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதி யினர்களைக் குறிப்பாக நன்மையடையச் செய்யும்பொருட்டுக் கோழிப்பண்ணை, பன்றிவளர்ப்பு, பால்வழங்குதல் போன்ற விவசாயத்திற்குத் தொடர்புள்ளதும், துணையானதுமான தொழில் களை அல்லது 'கலப்புப் பண்ணைத் தொழிலை' ஊக்குவிப்ப

தற்கு வலியுறுத்தல் செய்யப்படுவதாகும். ஜப்பானியர்கள் தங்கள் பண்ணைத் தொழிலை இலாபகரமாகச் செய்வதற்கான ஒரு காரணமானது நிலவுடைமைகள் சிறியவையாக இருப்பினும் அவர்களுடைய வருமானம் துணைத் தொழில்களால் கூடுதல் செய்யப்படுவதே. ஆகையால், நிலத்திலிருந்து குடியானவர்கள் பெறும் வருமானம் இந்தத் துணைத் தொழில்களிலிருந்து கிடைக்கும் வருமானத்தால் கூடுதலாக்கக் கூடிய வண்ணம், கோழிப் பண்ணை, பால் வழங்குதல், பன்றி வளர்ப்பு முதலியன போன்ற தொழில்களைக் குடியானவர்கள் மேற்கொள்வதற்கு ஊக்கமளிப்பு முயற்சிகள் செய்யப்படுகின்றன. குடியானவர்களின் நிலைமையை மேம்படுத்துவதற்காக ஐந்தாண்டுத் திட்டம் இவ்வகையான நடவடிக்கைகளுக்கு அதிகமான உதவியை அளிப்பதற்கு ஏற்பாடு செய்துள்ளது.

### 5. கூட்டுறவு வாணிகத்தின் பெரிய அளவும் சிக்கனமானதுமான தன்மை (Voluminous and Complex native of Business)

ஐந்தாவதாக, கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகள், அதிகரித்துவரும் வகையில், பெரிய அளவு கொண்டதாக மட்டுமன்றி, பல்வேறுபட்டதாகவும், சிக்கனமானதாகவும் ஆகியுள்ளன. சங்கங்களின் அன்றாட வேலையைக் கவனிப்பதற்குக் கவுரவப்பணிமுறை அமுலிலிருந்த நாள்கள் பெரும்பாலும் முடிந்துவிட்டன. தற்போது உத்தேசிக்கப்பட்ட பிரதமக் கடன் சங்கங்களுங்கூட, கூட்டுறவுக் கொள்கைகள், நடைமுறைகள், கணக்குப் பதிவு இயல் முதலியவை பற்றிய ஓர் அறிவு முழுமையும் பெற்று, ஊதியம் பெறும் முழுநேர அலுவலர்களின் பணியைக் கோருகின்றன. மத்தியக் கூட்டுறவு வங்கிகளும்கூட, நடவடிக்கைகள் அதிகரித்துப் பலவகைப்பட்டிருத்தல் மட்டுமன்றி, அவை கடன் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அன்றியும், பல்வேறு தொழில் நிறுவனங்களுக்கும் நிதியளிக்க வேண்டியிருப்பதால், உயர் பயிற்சியும் தகுதியும் பெற்ற சிப்பந்திகளைக் கோருகின்றன. இச் சிப்பந்திகள் வங்கித்தொழிலிலும், வாணிக நிர்வாகத்திலும் வல்லுநர்களாக இருக்கவேண்டும். தலைமைக் கூட்டுறவு வங்கிகளும், விற்பனை, நுகர்பொருள், வர்த்தகம், நெசவுத்தொழில், குடிசைத்தொழில் முதலியவற்றிற்கான தலைமை நிறுவனங்களும், வாணிக அறிவுத் திறனும், வாணிக நிர்வாகத் தேர்ச்சியும் பெற்ற பணியாளர்களைக் கோருகின்றன. கூட்டுறவுச் சங்கங்கள், கடந்த காலத்திலும், தற்போதுங்கூடத் தங்கள் நிறுவனங்களை நடத்துவதற்காக அரசு சிப்பந்திகள்மீது, மிக அதிகமாகச் சார்ந்துள்ளன. இக் காரியத்திற்காக ரிசர்வ் வங்கி, வாணிகக் கூட்டுறவு வங்கிகள் அல்லது உயர்நிலை நிறுவனங்களிலிருந்துங்கூடப் பணியாளர்கள்

வாங்கப்படுகின்றனர். அண்மையில், இந்தப் பழக்கத்தைப் பற்றிய மனப்பான்மையில் ஒரு மாறுதல் ஏற்பட்டு, பல்வேறு மட்டங்களிலுள்ள கூட்டுறவுச் சங்கங்களை நிர்வகிப்பதற்காக உயர்பயிற்சியும், தகுதியும் பெற்ற மேலாண்மைச் சிப்பந்திகளின் முக்கிய அவசியம் அதிகமாக உணரப்படுகிறது.

**6. நடப்புக் கூட்டுறவு நடவடிக்கைத் துறைகளில், புதிய அமைப்புகளின் நுழைவு** (Entry of new agencies in the existing fields of co-operative activity)

ஆறுவதாக, கூட்டுறவு இயக்கம் தற்போது பொருளாதார அமைப்பின் இதரத் துறைகளிலிருந்து, தனியார்துறை, பொதுத் துறையிலிருந்து, புதிய சவால்களை ஏற்க வேண்டியுள்ளது. மிகவும் பயனுறுதி வகையான பல்வேறு வாணிக நிறுவனங்கள் இன்று உருவாக்கப்பட்டுள்ளன. தனியார் வாணிகம், வர்த்தகத்தின் போட்டியைத் தவிர, அண்மையாண்டுகளில் அரசு ஒரு பெரிய அளவில் வாணிகத்தில் நுழைந்ததன் காரணமாகக் கூட்டுறவு நிறுவனங்களால் எதிர்நோக்கப்பட்ட போட்டிப் பிரச்சினைகள் அதிகமாகியுள்ளன. விவசாயக் கடன்துறையில், கூட்டுறவுச் சங்கங்கள் நாட்டுடைமையாக்கப்பட்ட வாணிக வங்கிகளின் போட்டியை எதிர்நோக்க வேண்டியுள்ளன. நுகர்வோர் கூட்டுறவுத் துறையில் 'நுகர்பொருள் வாணிகக் கழகம்' 'அரசு வர்த்தகக் கழகங்கள்' முதலியன போன்ற அரசு ஆதரவு பெற்ற கழகங்களுடன் கூட்டுறவு நிறுவனங்கள் போட்டியிட வேண்டியுள்ளது. அதிகரித்துவரும் ஓர் அளவில் அரசு விவசாய விளைபொருள்களின் கொள்முதலை மேற்கொண்டவுடன் இத் துறையில் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் பங்கு பாதிக்கப்பட்டுள்ளதாகத் தோன்றுகிறது. இயல்பாகவே தனியார் அல்லது கூட்டுறவுத் தொழில் முயற்சிகளுக்குக் கிடைக்க முடியாத பல வசதிகளைப் பொதுத்துறை நிறுவனங்கள் பயன்படுத்திக்கொள்ளும் நிலைமையில் உள்ளன. எனவே, அவை, தனியார் வாணிக நிறுவனங்களைவிட அதிகமாகக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு ஒரு பயமுறுத்தலாக அமைந்துள்ளன. கூட்டுறவு நிறுவனத்தின் ஒரு முக்கியத் தகுதியானது, நிருவாகத்தின் மூலமாகவும், கட்டுப்பாடு செலுத்தும் வாயிலாகவும், மக்கள் அதில் ஈடுபாடு கொண்டிருப்பதாகும். ஆனால், அக் காரணத்தினால் மாத்திரமே கூட்டுறவுச் சங்கங்கள் அரசு ஆதரவுக்கும், ஊக்குவிப்புக்கும் தகுதி பெறா. இச் சந்தர்ப்பத்தில்தான், கூட்டுறவு நிறுவனங்கள் தங்கள் கண்ணோட்டம், கொள்கைகள், நிறுவன முறைகள், நிருவாகம் மற்றும் மேலாண்மைச் சிப்பந்தியமைப்பு

முதலியவற்றை மறுதிருப்பம் செய்யும் பணியில் தங்களை ஈடு படுத்திக்கொள்ள வேண்டும். அப்போதுதான், அவை உயர்அளவு வாணிகத் தேர்ச்சியையும் திறனையும் அடைந்து ஏகபோக நிலைமைகளின்கீழ் மட்டுமன்றி, போட்டியான நிலைமை களின்கீழுங்கூடச் செயற்படக்கூடும்.

**7. இயக்கத்தில் அரசியல் ஊடுறுவல்** (Infiltration of Politics in to the movement)

ஏழாவதாக, கூட்டுறவு நிறுவனங்களுக்கு ஒரு பய முறுத்தலைத் தருகின்ற வகையில் கூட்டுறவு இயக்கத்தில் அரசியல் ஊடுறுவி யுள்ளது. கூட்டுறவுச் சங்கங்கள் மாந்தர் களுக்குப் பொதுவாழ்க்கையில் ஒரு பயிற்சித்தளத்தை வழங்கு கின்றன. கூட்டுறவுத் துறையில் பணியாற்றிவரும் ஒருவருக்கு, அரசியல் உலகத்தில் நுழைவது, மேற்கொண்டபடியாகத்தான் இருக்கிறது. அரசியல் மக்களாட்சி வெற்றிகரமாகச் செயற்படு வதற்கான ஒரு மிக அத்தியாவசிய உள்ளமைப்பாகக் கூட்டுற வுச் சங்கங்கள் அமைந்திருப்பதால், கூட்டுறவு இயக்கம் அரசியல் துறையில் ஜனநாயகத் தலைவர்களுக்கான ஆற்றலை வழங்குவதற்காக, ஒரு வளம் பொருந்திய ஆதாரமாகிறது. ஆனால், துரதிருஷ்டவசமாகத் தலைகீழான போக்குக் காணப் படுவதாகக் கூறப்படுகிறது. அதாவது, அரசியலில் முன்னுக்கு வந்துள்ள நபர்கள் கூட்டுறவுத் துறையிலுங்கூட நுழைவதற்கு முயல்கின்றனர். இதில் அடங்கிக் கிடக்கும் அபாயம் யாவரும் அறிந்ததே. ஒரு கூட்டுறவுச் சங்கத்தின் பெரும்பான்மை யானவர்களின் அரசியல் இணைப்பு, சில சமயங்களில் அதன் செயற்பாட்டைப் பழுதாக்க வழிசெய்கிறது. அரசியல் ஜன நாயகத்தின் அடிப்படைகளில் மக்களை அறிவு புகட்டுவதற்கான ஒரு நல்ல பயிற்சித்தளமாகக் கூட்டுறவுச் சங்கங்கள் அமைந்திருந் தாலும், அவை அரசியல் செல்வாக்கின் அபாயங்களுக்குத் தங்களைக் காட்டிக்கொடுத்துக் கொள்ளக்கூடாது. இப் போக்குத் தடைபடுத்தப்பட்டாலொழிய இயக்கம் சங்கடத்தில் சிக்கிக் கொள்ள நேரிடலாம்.

**8. கூட்டுறவில் ஊன்றிய நலமிகளின் பெருக்கம்** (Growth of vested interests in co-operation)

எட்டாவதாக, அண்மையாண்டுகளில் கூட்டுறவு நிறு வனங்கள் ஊன்றிய நலமிகள் என்றழைக்கப்படுபவர்களை வளர்க் கும் திசையில் போய்க்கொண்டிருக்கின்றன வென்று கருதப் படுகிறது. கூட்டுறவு ஒரு தனிவகையான ஊன்றிய நலமிகளு

டன் தன்னைச் சம்பந்தப்படுத்திக்கொள்ளும் ஓர் அபாயமும் உள்ளது. பெரிய குடியானவர்களுக்கு எதிராகச் சிறுகுடியானவர்கள், ஒரு சமூகம் அல்லது சாதிப்பிரிவுக்கு எதிராக மற்றொரு சாதிப்பிரிவு, ஓர் அரசியல் கோஷ்டிக்கு எதிராக மற்றொரு கோஷ்டி முதலியன போன்ற பல்வேறு நலமிகளுக்கும் அல்லது பிரிவுகளுக்கு மிடையிலான மோதலைப்பொறுத்து ஊன்றிய நலமிகள் பல்வேறு உருவங்களை எடுக்கின்றனர். இம் மாதிரியான மோதல் அநேக முள்ளன. அவற்றின் சில கீழே குறிக்கப்பட்டுள்ளன.

(i) அங்கத்துவம் மறுப்பைத் தெரியப்படுத்துவதற்குத் தவறுதல்.

(ii) சிறுபான்மைப் பிரிவினர்களுக்குப் பிரதிநிதித்துவ வாய்ப்பை மறுத்து, சில நபர்கள் அடிப்படை அலுவல் பதவிகளை ஏறக்குறைய நிலையாக வகித்துக் கொண்டிருத்தல்.

(iii) சில சந்தர்ப்பங்களில் பொய்யான கடன் வரம்பை நிருணயித்தலும், இதரச் சில சந்தர்ப்பங்களில் கடன் வரம்புகளைப் புறக்கணித்தலும்.

(iv) சிறு சாகுபடியாளர்கள் தங்கள் பலத்திற்கும், தேவைக்கும் பொருத்தமான கடன்களைப் பெருதிருத்தலை விளைவிக்கும் வகையில், நேர்மையில்லாத கடன்கள் விநியோகம்.

(v) ஒரே குடும்பத்திலுள்ளவர்கள் ஏராளமாக உறுப்பினர்களாக இருத்தலும், குடும்பத்தில் ஓர் அங்கத்தினருக்கு அதிகமான பேர்களுக்குக் குறிப்பாக நிருவாகக் குழு உறுப்பினர்கள் துறையில் கடன்கள் அளித்தலும்.

(vi) சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் பொருள்களையும் பற்றுக்குறைப் பொருள்களையும் ஒப்பிடும் வகையில் வசதியுள்ள நபர்களுக்கு விநியோகம் செய்தல்.

(vii) கணக்குகளைக் குயுக்தியாகக் கையாளுதல் முதலியன.

இப் போக்குகள் எங்கிருந்தாலும் அவற்றைப் பயனுறுதியாகத் தடை செய்ய வேண்டுவது அவசியமாகும்.

**9. முக்கிடக் கூட்டுறவுச் சங்கங்களின் நடைமுறைக் கூறுகளில் காணப்படும் போக்குகள்** (Trends in the operational features of Societies)

கடைசியாகச் சங்கங்களின் நடைமுறை அம்சங்களில் காணப்படும் சில போக்குகளைப் பற்றிக் குறிப்பிடலாம். கடன் சங்கங்களைக் குறித்த போக்கு, ஏறக்குறையப் பெரிய சங்கங்கள்—வாழ்வுத் திறனுள்ள தன்னிறைவு வகைச் சங்கங்கள்—

வரையறுக்கப்பட்ட பொறுப்பு அடிப்படையின் பேரில் அமைக்கப்படுவதற்குச் சாதகமாக வுள்ளது. பயிர்க்கடன் முறையைத் தொடங்கி வைப்பதன் மூலமாகவும், கீழ் இறுதிநிலைக் குடியானவர்கள், இறுதிநிலைக் குடியானவர்கள், குத்தகைச் சாகுபடியாளர்கள், விவசாயத் தொழிலாளர்கள் ஆகியவர்களுக்குக் கடனுதவி அளிப்பதன்மீது வலியுறுத்தல் செய்வதன் மூலமாகவும், சங்கங்களின் கடன்கொள்கைகளும், நடைமுறைகளும், சீரமைக்கப்பட்டுள்ளன. நீண்ட காலக் கடன் துறையில், பாசன வளங்களை வளர்ச்சி செய்தலின்மீது வலியுறுத்தல் விதிக்கப்பட்டு விவசாய உற்பத்திக்காகப் பெரும்பாலும் பிரத்தியேகமான கடன்கள் அளிக்கப்படுகின்றன. இக் காரியத்திற்காக, சிறப்பு வளர்ச்சிக் கடனீட்டுப் பத்திரங்களும் வெளியிடப்படுகின்றன. நகரக் கடன்வசதி, தொழிற் காரியங்களுக்காக ஓர் அதிகரித்து வரும் அளவில் அளிப்பதற்கு முயற்சிக்கப்படுகிறது. விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள் அதிக உற்சாகத்துடன் பதனப்படுத்தும் நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளன. தனிப்பட்ட பதனப்படுத்தும் அமைப்புகள் பெரியவையும், சிறியவையும் அதிகரித்து வருகின்றன. சில பொருள்கள் விஷயத்தில் வெளிநாட்டு அங்காடிகளும் கூடப் பயன்படுத்தப்படுகின்றன. பால் கூட்டுறவுச் சங்கங்கள், பால் உற்பத்தித் துறையிலும் பால் விநியோகத்திலும் புதிய தொழில் நுட்பங்களை வளர்த்துள்ளன. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் பெரிய அளவுப் பண்டசாலைகள், மொத்த விற்பனைப் பண்டசாலைகள், சிறப்பு அங்காடிகள் ஆகியவைகளை அமைப்பதன் மூலமாகவும் அவைகளால் பதனப்படுத்தும் மற்றும் உற்பத்தி செய்யும் அமைப்புகள் நிறுவப்படுவதன் மூலமாகவும். புதிய வளர்ச்சியைப் பெற்றுள்ளன. தொழிற்கூட்டுறவுச் சங்கங்கள், தேயிலைக் கூட்டுறவுத் தொழிற்சாலைகள் போன்ற புதிய துறைகளில் நுழைந்து வருகின்றன. பொருளாதாரத் துறையில் பின்தங்கிய பகுதியினர்களின் நலனுக்காகப் பல்வேறு விதமான சங்கங்கள் தனிப்பட்ட முறையில் அமைக்கப்பட்டு வருகின்றன. மாவட்ட மட்டங்களிலும், மாநில மட்டங்களிலும், தேசிய மட்டத்திலும் உயர்நிலைக் கூட்டுறவு நிறுவனங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. கூட்டுறவு நிறுவனங்களில் நியமிக்கப்பட்டுள்ள பணியாளர் தொகுதிக்கான பயிற்சித் திட்டங்கள் தீவிரப்படுத்தப்பட்டு, சிறப்புத் தேர்ச்சி நடவடிக்கைகளில் பயிற்சிக்கான புதிய பாடப்படிப்புகள் தொடங்கப்பட்டு வருகின்றன. பொதுவாக, மக்களிடையே கூட்டுறவு நிறுவனங்களின் பயனைக் குறித்து அதிகரித்துவரும் ஓர் உணர்வு காணப்படுகிறது.

# 26. இந்தியக் கூட்டுறவு இயக்கத்தின் நுண்ணாய்வு மதிப்பீடு

# (Critical Evaluation of the Co-operative Movement In India)

## 1. பொது:

இந்தியாவில், கூட்டுறவு இயக்கம் பொருளாதார அமைப்பின் பல்வேறு துறைகளில் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை அடைந்துள்ளது. தற்போது இந்தியாவில் சுமார் 3.25 இலட்சம் எண்ணிக்கையுள்ள எல்லாவகையான கூட்டுறவுச் சங்கங்களும் உள்ளன. அவற்றில் சுமார் 48 சதவீதக் குடும்பங்களைத் தழுவுகின்ற ஏறத்தாழ 60 மில்லியன் உறுப்பினர்கள் உள்ளனர். அவற்றின் செலுத்தப்பட்ட பங்குமூலதனம் ரூ.725 கோடியாகவும், நடைமுறை மூலதனம் ஏறக்குறைய ரூ. 6,000 கோடியாகவும் உள்ளன. அவற்றின் பல்வேறு நடவடிக்கைகளுள், விவசாயக் கடனும், வங்கித் தொழிலும் ஒரு பெருமைக்குரிய இடத்தை வகித்துள்ளன. சுமார் 1.58 இலட்சப் பிரதம விவசாயக் கடன் சங்கங்கள் உள்ளன. 1955–56ஆம் ஆண்டில் பிரதமச் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை 7.79 மில்லியன்களாக இருந்து, 1972–73 ஆம் ஆண்டில் சுமார் 32 மில்லியன்களுக்கு அதாவது நான்கு மடங்குக்கு அதிகரித்தது. அவற்றால் 1955–56ஆம் ஆண்டில் அளிக்கப்பட்ட கடன் தொகை ரூ.50 கோடிக்கும் சிறிது குறைவாக இருந்து, 1972–73 ஆம் ஆண்டில் சுமார் ரூ.700 கோடிக்கு அதிகரித்தது. மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் வைப்புகள் ரூ.55 கோடியிலிருந்து, சுமார் ரூ.650 கோடிக்கு அதிகரித்தன. கூட்டுறவு நிலவள வங்கிகள், குறுகிய கால, மத்தியக் காலக் கடனமைப்புகளைவிட மிகச்சிறந்த முன்னேற்றத்தைப் பதிவு செய்துள்ளன. 1955–56ஆம் ஆண்டில் மாநில நிலவள வங்கியில் நிலுவைக்கடன் தொகை ரூ.13 கோடியாக விருந்து 1972–73 ஆம் ஆண்டில் ரூ.810 கோடிக்கு, அதாவது 60 மடங்குகளுக்கு மதிகமாக உயர்ந்தது. கிராமக் கடன் விசாரணைக் குழுவினர் 1951–52ஆம் ஆண்டிலிருந்த நிலைமையைப் பரிசீலனை

செய்தபோது, எல்லா ஆதாரங்களாலும் ஒன்றுசேர்ந்து அவ்வாண்டின்போது வழங்கப்பட்ட மொத்த விவசாயக் கடனில் கூட்டுறவுச் சங்கங்களால் 3 சதவீதம் மட்டுமே வழங்கப்பட்டது என்று மதிப்பீடு செய்யப்பட்டது. 1961–62ஆம் வருடத்திய 'கிராமக் கடன் மற்றும் முதலீடு விசாரணை' (Rural Debt and Investment Survey) கூட்டுறவுச் சங்கங்கள் மொத்த முதலீட்டில் 15 சதவீதம் அளித்துள்ளன என்று தெரிவித்துள்ளது. தற்போது கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு மொத்த முதலீட்டில் 1–3-க்கு உயர்ந்திருக்கலாம் என்று மதிப்பீடு செய்யப்படுகிறது. ஐந்தாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் இறுதி ஆண்டில், கூட்டுறவுச் சங்கங்கள் ரூ. 1,300 கோடி அளவிற்குக் குறுகிய காலக் கடன்கள் வழங்கும் என்று எதிர்நோக்கப்படுகிறது. திட்டக் கால மனைத்தின்போது அளிக்கப்பட வேண்டிய மத்தியக்கால, நீண்டகாலக் கடன்கள் ரூ. 1,800 கோடியாகும் என்று மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. இந்த இலக்குகள் அடையப்பெற்றால் நாட்டில் எல்லா நிறுவனங்களாலும் இதர அமைப்புகளாலும் வழங்கப்பட்ட கடன் தொகையில், கூட்டுறவுச் சங்கங்கள் பாதிக்கும் மிக மேலாக அளித்திருந்திருக்கும். இது எவ்வகையிலும் ஒரு சிறிய சாதனையன்று.

1950–51ஆம் ஆண்டில் கூட்டுறவு விற்பனைச் சங்கங்களால் கையாளப்பட்ட விவசாய மற்றும் நுகர்பொருள்களின் பெறுமானம் சுமார் ரூ.47 கோடியாக விருந்து 1970–71ஆம் ஆண்டில் ஏறக்குறைய ரூ.650 கோடிக்கு அதிகரித்தது. ஐந்தாவது திட்டக் கடைசி ஆண்டில், அவை ரூ. 1,600 கோடிப் பெறுமானமுள்ள பொருள்களைக் கையாளக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. கூட்டுறவுச் சங்கங்கள் உணவுத் தானியக் கொள்முதலில் (Procurement) அதிகரித்துவரும் ஓர் அளவில் ஈடுபட்டுள்ளன. உரவகைகளை விநியோகம் செய்வதிலும், பிரபலியமாக்குதலிலும், அவை முன்னோடிகளாக இருந்து பெரும்பான்மையான விநியோகஸ்தராகத் தொடர்ந்திருந்துவந்துள்ளன. பதனப்படுத்தும் நடவடிக்கைகள் துறையில், கூட்டுறவுச் சங்கங்கள் பாராட்டத்தக்க முன்னேற்றத்தை அடைந்துள்ளன. உதாரணமாக, 1955–56ஆம் ஆண்டில் மொத்தச் சர்க்கரை உற்பத்தியில் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு 1.5 சதவீதமாக விருந்து, 1970–71ஆம் ஆண்டில் சுமார் 34 சதவீதத்திற்கும், 1971–72ஆம் ஆண்டில் சுமார் 42 சதவீதத்திற்கும் உயர்ந்துள்ளது. அவ்வாறே, ஐவுளி உற்பத்தியிலுங்கூடக் கூட்டுறவு நிறுவனங்கள் முன்னேற்றம் அடைந்துள்ளன. பால்பண்ணையிலும் பால் வழங்குதலிலும் குறிப்பிடத்தக்க விரிவாக்கம் இருந்துள்ளது.

1970–71ஆம் ஆண்டில் நுகர்பொருள்கள் விநியோகம் ரூ.241 கோடியளவுக்கு இருந்தது. அஃது ஐந்தாவது திட்டக் கடைசி ஆண்டில் ரூ.700 கோடிக்கு மதிகமாக இருக்கக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இம் மாதிரியான விரிவாக்கமும், நாணு விதமாக்கலும் சிறுதொழில்களிலும் குடிசைத் தொழில்களிலும், வீட்டு வசதியிலும் எதிர்நோக்கப்படுகின்றன.

எனினும், உற்பத்தியின் மற்றும், விநியோகத்தின் ஒரு சாதனமாகவும், சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்களை மீட்பதற்கான ஒரு நிறுவனமாகவும், இந்தியாவில் கூட்டுறவுச் சங்கங்கள், கீழ்க்காணும் காரணங்களால் ஒரு பெரிய வெற்றியை அடையக்கூடவில்லை.

முதலாவதாக, இயக்கத்தின் முன்னேற்றம் எல்லா மாநிலங்களிலும் ஒருபடித்தானதாக இருக்கவில்லை. நாட்டில் பல்வேறு மாநிலங்களுக்கு அல்லது மண்டலங்களுக்கு இடையிலான இயக்கத்தின் வளர்ச்சியில் ஒரு காணத்தக்க சமமில்லாமை உள்ளது. எனவே, நாட்டில் கூட்டுறவுச் சங்கங்களின் நடவடிக்கைகளில் எல்லா மாநிலங்களும் சமமாகப் பங்கெடுத்துக்கொள்ளவில்லை. உதாரணமாக, 1970–71ஆம் ஆண்டின் போது கூட்டுறவுச் சங்கங்களால் அளிக்கப்பட்ட மொத்தக் குறுகிய கால, மத்தியக் காலக் கடன்களில் சுமார் 57.8 சதவீதம் பஞ்சாப், மராட்டியம், குஜராத், தமிழ்நாடு, கேரளா ஆகிய ஐந்து மாநிலங்களால் வழங்கப்பட்டன. அசாம், மணிப்பூர், திரிபுரா, மேகாலயா, மேற்கு வங்காளம், பீகார், ஒரிசா, இராஜஸ்தான், ஜம்மு-காஷ்மீர், நாகாலந்து ஆகிய 10 மாநிலங்களிலும் ஒன்றுசேர்ந்து அளிக்கப்பட்ட மொத்தக் கடன்களில் 8.2 சதவீதம் மட்டுமே வழங்கின. நீண்ட காலக் கடன் துறையிலும் இதே மாதிரியான முன்னேற்றம் இருந்துள்ளது. விவசாய விளைபொருள்களின் விற்பனை விஷயத்தில் ஏறக்குறைய 75 சதவீதம் மராட்டியம், உத்தரப்பிரதேசம், பஞ்சாப், குசாரத் ஆகிய 4 மாநிலங்களால் மேற்கொள்ளப்பட்டது என்று மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. நுகர்வோர் நிறுவனங்கள் துறையில், தமிழ்நாடு, ஆந்திரப்பிரதேசம், மைசூர் போன்ற ஒருசில மாநிலங்களில் சுமாரான முன்னேற்றம் அடையப்பட்டுள்ளது; இதர மாநிலங்களில் முன்னேற்றம் மெதுவாக உள்ளது. தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் துறையில், மராட்டியம், தமிழ்நாடு, பஞ்சாப் போன்ற சில மாநிலங்களில் அவை நன்றாகச் செயற்பட்டுக் கொண்டிருக்கின்றன. ஆனால், மத்தியப் பிரதேசம், ஒரிசா, மேற்கு வங்காளம், அசாம் போன்ற மாநிலங்

களில் நிலைமை மாறுக வுள்ளது. மண்டலங்களுக் கிடையிலான இயக்க வளர்ச்சியில் ஏற்றத்தாழ்வு தெளிவாகப் புலப்படுகிறது; இது சரிப்படுத்தப்பட வேண்டும்.

இரண்டாவதாக, அதன் பல்வேறு துறைகளுக்கிடையேயுங் கூட இயக்க வளர்ச்சியில் ஏற்றத்தாழ்வு உள்ளது. விவசாயத் துறையில், கூட்டுறவுக் கடன் வளர்ச்சிக்கும், கூட்டுறவு விற் பனை வளர்ச்சிக்கு மிடையே ஒரு ஏற்றத்தாழ்வுக் கூறு பல்வேறு பயிர்களில் தொடர்ந்து காணப்பட்டு வருகிறது. விவசாய நிதி உதவித்தொகையில், கூட்டுறவுச் சங்கங்கள் மூன்றிலொரு பங்குக்கு அதிகமான கிராமக் கடன்களை வழங்குகின்றன. ஆனால், விவசாய விளைபொருள்களின் விற்பனையில் கூட்டுறவுச் சங்கங் களின் பங்கு மிகச் சிறியதாகத் தொடர்ந்து வந்துள்ளது. இயக்கத்தின் இவ் விரு துறைகளும், குறிப்பாகப் பிரதம மட் டத்தில் ஒரு முதிர்ச்சியான வளர்ச்சி மட்டத்தை அடைந்தால் விவசாயக் கடனுக்கும், விவசாய விற்பனைக்கு மிடையிலான இணைப்புப் பெரிதும் வசதியாக்கப்படும். கிராம மட்டத்தில், பிரதமக் கடன் சங்கங்களுடன் பயனுறுதியாக இணைக்கப்பட்ட விற்பனைச் சங்கங்கள் கடன் மற்றும் சாகுபடியில் ஈடுபடுத்தப் படும் பொருள்கள் அளிப்பும் விவசாய விளைபொருள்களின் விற்பனையும் ஒருங்கிணைந்த ஒரு முறையின் மையப் புள்ளியாக ஆகவேண்டும். விவசாயமல்லாத துறையில், நகரக் கூட்டுறவுக் கடனிலும், வங்கித் தொழிலிலும் பெரும் முன்னேற்றமும் வீட்டு வசதித் துறைகளில் ஓரளவிற்கு வெற்றியும் அடையப் பட்டிருப்பினும், இதரத் துறைகளில் நகரக் கூட்டுறவு வளர்ச்சி சற்று மெதுவாக இருந்துள்ளது. உதாரணமாக, நகரப் பகுதி களில் நுகர்வோர் இயக்கம் ஒப்பிடும் வகையில் வலிவற்றுள் ளது. நாட்டின் சில்லரை விற்பனை வர்த்தகத்தில் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் மொத்தப் பங்கு சற்று சொற்பமான தாகத் தொடர்ந்து வந்துள்ளது. ஒழுங்குமுறையான ஒரு விநியோக வர்த்தக முறைக்குத் தன்னிறைவுள்ள ஒரு துணை நிறுவனமாக. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்களின் பங்கு போதிய அளவு வற்புறுத்தப்படவில்லை. மொத்தக் கொள்முதலை யும், நுகர்பொருள்கள் சில்லரை விநியோகத்தையும், நுகர் வோர் சேவைகளையும் மேற்கொள்ளும் தன்னிறைவுள்ளதும், தனிப்பட்டதுமான நுகர்வோர் கூட்டுறவு நிறுவனங்கள், நாடெங்கும் பெருவாரியாக அமைக்கப்பட்டு வளர்க்கப்பட வேண்டும்.

மூன்றாவதாக, இயக்கத்தில் சரியான உள்ளமைப்பு உறவும், பிரிவுகளுக்கு இடையிலான சரியான உறவும் இல்லாமலுள்ளது. நம் இயக்கத்தின் அமைப்பின் தன்மையானது பெரும்பாலும் மூன்று அல்லது இரண்டு அடுக்குகளைக் கொண்ட கூட்டாட்சியாக வுள்ளது. பிரதம அமைப்புகள் தங்கள் உயர்நிலை நிறுவனத்தைப் போதிய அளவிலும், முழுமையாகவும் ஆதரிப்பதில்லை. இயக்கத்தின் பல்வேறு அடுக்குகளிடையே சரியான நல்லுறவும், ஒருமைப்பாடும் இல்லாம லுள்ளது. குறிப்பாக, நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் விஷயத்திலும், விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள் விஷயத்திலும், இக் குறையானது இருந்துள்ளது. அங்ஙனமே இயக்கத்தில் குறிப்பாக, நுகர்வோர், விற்பனை, தொழிற் கூட்டுறவுச் சங்கங்களுக்கு இடையே நிறுவன விசுவாசமும், கூட்டுறவு உள்ளுறவும் இல்லாமல் உள்ளன. இயக்கம் திறம்படப் பணியாற்றுவதற்கு இவ் விஷயங்களில் ஒரு தெளிவான உடன்பாடும், நல்லுணர்வும் திசையறிதலும் தேவைப்படுகின்றன.

நான்காவதாக, நிலவரம்புச் சட்டங்கள், நிலக் குத்தகைச் சீர்திருத்தங்கள் ஆகியவற்றால் ஏற்பட்ட சொத்து உறவு மாறுதல் காரணமாக, வகுப்பு அமைப்பில் தோன்றியுள்ள மாறுதல்களைக் கூட்டுறவு இயக்கம் பாராட்டக்கூடிய அளவுக்கு பிரதிபலிக்கவில்லை. வளர்ந்து வந்த ஊன்றிய நலமிகள், சிறு குடியானவர்களைக் கூட்டுறவுச் சங்கங்களின் அனுகூலங்களிலிருந்து தொடர்ந்து மூடிவைத்து வந்துள்ளனர். சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்கள், கூட்டுறவுத் துறையின்கீழ் பயனுறுதியாகக் கொணரப்பட வேண்டும். அப்போதுதான், கூட்டுறவுப் பொருளில்லாதவர்களின் வளர்ச்சிக்கான ஒரு கருவியாக இயங்கி, சமுதாயத்துறையிலும், பொருளாதாரத்துறையிலும் பலங்குன்றிய மக்களின் நடைமுறைச் சக்தியாக ஜனநாயகச் சமதர்மத்திற்கு வழிசெலுத்த முடியும்.

ஐந்தாவதாக, கூட்டுறவு இயக்கம் அரசியல் மயம் (Politicisation) ஆக்கப்படும் பயமுறுத்தல் வளர்ந்துள்ளது. அண்மையாக, இந்தியாவில் கூட்டுறவு இயக்கம் அரசியல் செல்வாக்கு ஆபத்துகளுக்கு அதிகரித்துவரும் வகையில், காட்டிக் கொடுக்கப்பட்டு வருகிறது. கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சியில் அரசு மேற்கொள்ளும் பங்கு, பொருளாதார நடவடிக்கையின் பல்வேறு துறைகளில் மேலும், மேலும் பரவிக் கொண்டிருப்பதால் இது நேரிடுகிறது.

ஆருவதாக, எந்தப் பொருளாதார நிறுவனத்தின் வளர்ச்சியிலும், தலைவர்கள் ஒரு முக்கியக் காரணியாக வுள்ளனர். கிராம மட்டத்தில், உள்ளூர்த் தலைவர்கள் கூட்டுறவு நிறுவனங்களில் மேலும் தேவைப்படுகின்றனர். ஏனென்ருல், கிராம மட்டத்திலுள்ள பிரதம அமைப்புகள், கூட்டுறவு இயக்கத்தின் கால்கோளாக வுள்ளன. தன்னுதவி, பரஸ்பர உதவிக்கொள்கைகளுக்கும், செயற்பாட்டின் ஒழுங்குப்பாட்டிற்கும் இணங்கியிருக்க வேண்டிய அவசியத்தையும், விசுவாசத்தையும் உறுப்பினர்களுக்கு உணர்த்தக்கூடிய தலைவர்கள் மிகவும் அதிகமாக இல்லை.

கடைசியானதும், மிக முக்கியமானதுமான காரணம் கூட்டுறவுச் சங்கங்களில் தொழில் தேர்ச்சி பெற்ற நிருவாகம் இன்மையே. கூட்டுறவு இயக்கம் நானுவிதமாக்கப்பட்டு, அதன் நடவடிக்கைகளின் பருமமும், சிக்கான தன்மையும் வேகமாக வளர்ந்து கொண்டிருக்கின்றன. துரிதமானதும், சுதந்திரமானதுமான முடிவுகளை யெடுப்பதற்குத் தேவையான அதிகாரம் அளிக்கப்பட்ட ஓர் உயர்பயிற்சியும், தகுதியும் பெற்ற மேலாண்மைச் சிப்பந்திகள் முற்றிலும் முக்கியமாக வுள்ளனர். இந்தியாவில் மேலாண்மைச் சிப்பந்தித் தொடர்பான பல்வேறு பணிமுறைப் பிரிவுகளை நாம் இன்னும் ஏற்படுத்தவில்லை. மேலும், உறுப்பினர் கல்வி ஒரு திருப்திகரமான அடிப்படையில் இன்னும் வைக்கப்படவில்லை.

## 2. விவசாயக் கூட்டுறவுக் கடன்வசதி

கடந்த இருபதாண்டுகளில், கூட்டுறவுக் கடன், சிறப்பாக விவசாயத்துறையில், நாட்டின் பொருளாதார அமைப்பின் வளர்ச்சியில் ஒரு முக்கியமான பணியை ஆற்றியுள்ளது என்பது உண்மையே. எண்ணிக்கை ரீதியில் நம் நாடு, குறிப்பாகத் தமிழ் நாடு, மிகப்பெரும் வளர்ச்சியைப் பதிவு செய்துள்ளது. ஆனுல், தரம் தொடர்பான அம்சங்களில் அது அதிகம் முன்னேற்றம் பெறவேண்டியுள்ளது. பெரும்பாலும், கூட்டுறவு நிறுவனங்கள், கடனளிப்பு விஷயத்தில் தரத்திற்குப் போதிய கவனம் கொடுப்பதில்லை. கடன் எந்த வகையில் பயன்படுத்தப்படுகின்றது என்பதைவிட நிதியுதவி அளவிலும் கடனளிப்புப் பருமத்திலும் தான் கூட்டுறவு நிறுவனங்கள் அதிகமாக அக்கறை காட்டி வருகின்றன. உயர்மட்டத்து நிதியமைப்புகளுங்கூட, இந்த அம்சங்களை மேற்பார்வையிடுவதில், போதிய அளவு பயனுறுதியாக இருந்துவருவதில்லை. கடன் துர்ப்பிரயோகத்திற்கு வாய்ப்பில்லாமல் செய்வதைப் போதிய அளவு நிச்சயப்படுத்துவதற்

கும் அவை பயனுறுதியாக இருக்கவில்லை. விளைவிக்கப்பட்ட பயிர்களைக் குறித்துக் கடனளிப்பும், கடனளிப்பிலும் கடன் வசூலிலும் காலக் கெடுவும் அடங்கியுள்ள 'பயிர்க் கடன்முறை' (Crop Loan system) கடந்த பத்தாண்டுகளாக அமுல் செய்யப்பட்டதன் விளைவாக, உண்மையில் சில அபிவிருத்தி ஏற்பட்டுள்ளது.

கடனளிப்பின் தரத்திற்குத் தொடர்பான அம்சங்களை அபிவிருத்தி செய்வதற்குக் கீழ்க்காணும் துறைகளில் அதிகக் கவனம் செலுத்தப்பட வேண்டும். (i) சாகுபடியில் ஈடுபடுத்தப் படும் பொருள்களை வாங்குவதற்கான கடன் தேவைப்படுகின்ற அளவுக்கு, அப் பொருள்களை வழங்குதல் மூலம் கடனளிப்பதன்மீது வலியுறுத்தல் அதிகமாக விருக்க வேண்டும். இக் காரியத்திற்காகக் கடன் சங்கங்கள் மூலமாக உரவகைகள் விநியோகம் முழுத் தேர்ச்சிப்படுத்தப்பட வேண்டும். பூச்சிக் கொல்லி மருந்துகள், விதைகள் ஆகியவைகளைக் குறித்துங் கூட இம் மாதிரியான ஓர் ஏற்பாடு அவசியமாகவுள்ளது. (ii) கடன் வசூல், விளைபொருள் விற்பனையுடன் நிலையாக ஒன்றிணைக்கப்பட வேண்டும். (iii) கடனளிப்பும், பண்ணைத் தொழில் வழிகாட்டலும் ஒன்றாக இயங்குவதற்கு, மத்தியக் கூட்டுறவு வங்கிகளின் மேற்பார்வைச் சிப்பந்திகள் விவசாய விரிவாக்கப் பணியில் பயிற்சி அளிக்கப்பட வேண்டும். இத்துடன் கடனளிப்பைக் குறித்துக் கொள்கை முடிவுகளை எடுப்பதில் நிருவாகத்திற்கு உதவிபுரிய மத்தியக் கூட்டுறவு வங்கிகள் தங்கள் அதிகாரிகள் பணிப் பிரிவில் உயர்தகுதிபெற்ற தொழில்நுட்பப் பணியாளர்களை வைத்திருக்க வேண்டும். (iv) பிரதமச் சங்கங்கள் மட்டத்திலும், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மட்டத்திலும் மேலாண்மைச் சிப்பந்திப் பணிப் பிரிவைத் தொழில் தேர்ச்சியுடையதாகச் செய்வதற்குக் கட்டாயமான அவசியமும் உள்ளது.

கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள், ஓர் வலிவற்ற வைப்பு ஆதாரம் என்ற ஓர் அடிப்படையான ஒரு நோயினால் துன்புறுகின்றன. நாட்டில், மாநிலக் கூட்டுறவு வங்கி மட்டத்திலும், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் மட்டத்திலும், நடைமுறை மூலதனத்திற்கு வைப்புகள் 40 சதவீதமாக மட்டுமே அமைந்துள்ளன. பிரதம மட்டத்தில், வைப்புகள் நடைமுறை மூலதனத்திற்கு 7 சதவீதமாக மிகவும் குறைந்துள்ளன. தற்போது உள்ளபடி கூட்டுறவுச் சங்கமானது, ஒரு கடனளிப்பு அமைப்பாகவே கருதப்பட்டு வருகிறது. வைப்புகளை ஈர்க்கும் நிறுவனமாக அது கருதப்படுகிறதில்லை. வைப்புகளைத் திரட்டும் துறையில், கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள் வாணிக வங்கிகளின்

நடைமுறைகளிலிருந்தும், செயல்முறைகளிலிருந்தும் பெரிதும் கற்க வேண்டியுள்ளன. பொதுமக்கள் மனத்தில் அவை, நிதி ரீதியாகப் பெறுமானமுள்ளவையாகவும், செயல்முறை ரீதியாகத் திறனுள்ளவையாகவு முள்ள நிறுவனங்களாகத் தங்கள் உருவத்தை நிலைநாட்ட வேண்டும். இக் காரியத்திற்காகச் சிறப்பாக உயர்நிலை நிதி நிறுவனங்கள், தங்களால் செய்யப்படுகின்ற காசோலைகளை வசூலித்தல், உண்டியல்களை வழங்குதல், பணம் அனுப்பும் வசதிகளை வழங்குதல் முதலியன போன்ற வங்கித் தொழில் சேவைகளை, விளம்பரப்படுத்துவதன் மூலம், தொடர்புள்ள பிரசாரத்தையும், விளம்பரத்தையும் மேற்கொள்ள வேண்டும். அண்மை யாண்டுகளில், வைப்புச் சேகரிப்பில், குறிப்பாக, மத்தியக் கூட்டுறவு வங்கிகள் அதிகமான கிளைகளைத் திறந்த பிறகு, ஒரு கணிசமான முன்னேற்றம் இருந்து வந்துள்ளது. எனினும், இந்த அதிகரிப்பானது, கிராமப் பகுதிகளில் திரட்டப்படுவதற்குச் சேமிப்புகள் தாராளமாகக் கிடைப்பதைப் பிரதிபலிக்கவில்லை. கடந்த 15 ஆண்டுகளின்போது, 'பசுமைப் புரட்சி' கிராமப் பகுதிகளில் அதிகமான செழிப்பை விளைவித்துள்ளது. எனவே, இப் பகுதிகளில் திரட்டப்பட வேண்டிய வைப்புகள் இருக்கவேண்டும். கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள் இவ் வைப்புகளைத் திரட்டுவதற்கு ஒரு சிறப்பு முயற்சியை மேற்கொள்ள வேண்டும். அவை தங்கள் சொந்த நிதியாதாரங்களின்மீது சார்ந்திருக்க முடிந்து, உயர்நிலை நிதியமைப்புகளிலிருந்து வழங்கப்பட்ட கடன் நிதியாதாரங்களின்மீது சார்ந்திராம லிருக்க முடிந்தால் கடனளிப்பு நிருவாகம் நெகிழ்ச்சியையும் பயனுறுதியையும் அதிகமாகப் பெற்றிருப்பதைக் காணக்கூடும்.

மற்றும், சாகுபடியாளர் குடும்பங்களைத் தழுவுதல், அவர்கள் பயனுறுதியான உறுப்பினர்களாக விருத்தல், சிறு குடியானவர்களுக்கும், குத்தகைக் குடியானவர்களுக்கும் அதிகமான கவனம் செலுத்துதல், தவணை தவறிய பாக்கிகளைக் குறைத்தல், மற்றும், அவைபோன்ற துறைகளில் அதிக முன்னேற்றம் அடைய வேண்டியுள்ளது. இம் முன்னேற்றத்தைச் சரியான வழிகாட்டுதலாலும் பயனுறுதியான மேற் பார்வையாலும் பெறமுடியும்.

### 3. நகரக் கூட்டுறவுக் கடன்வசதி

நம் நாட்டில், குறிப்பாகத் தமிழ்நாட்டை உள்ளிட்ட சில மாநிலங்களில், கூட்டுறவு நகரவங்கிகள் பாராட்டுதலுக்குரிய முன்னேற்றத்தை அடைந்திருந்தாலும், அவை, இன்றைய பொரு

ளாதார அமைப்பில் வளர்ந்துவரும் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்குத் தங்கள் கொள்கைகளையும், செயல்திட்டங்களையும் மறுதிருப்பம் செய்வதில் அதிகமான முன்னேற்றத்தை அடையவில்லை என்று கூறுவது பொய்யாகாது. மிகப் பரவலான ஒரு மக்கள் தொகைக்குத் தங்கள் நிறுவனத்தின் நன்மைகளை அளிப்பதற்காகவும், உற்பத்தியைப் பெருக்கி வேலைவாய்ப் பின்மையை ஒழிப்பதற்காகவும், திட்டங்களை உருவாக்கவும், அமுல்படுத்தவும் அவற்றால் முடியவில்லை. உற்பத்தியைப் பெருக்குவதற்கும், மக்களின், குறிப்பாக இதுவரை இவ் வங்கிகளால் நன்மை யடையாத பலங்குன்றிய பகுதியினர்களின் சமுதாயப் பொருளாதார வாழ்க்கையை மேம்படுத்துவதற்கும், எந்த அளவுக்கு இவ் வங்கிகள் சேவை புரிந்துள்ளன வென்பதுதான், செய்யப்பட வேண்டிய திராவகச் சோதனையாகும். இச் சோதனையைக் கண்டு ஆராய்ந்தால், இவ் வங்கிகள் இன்னும் அதிகமான சேவைகளைப் புரிய வேண்டியுள்ளன. தொழிற் சமுதாயத்திற்காக, அவற்றின் திறனையும் பயனையும் மேம்படுத்துவதற்கான திட்டங்கள் தயாரிக்கப்பட்டு அமுல்படுத்தப் படவேண்டும். நகரக் கூட்டுறவு இயக்கமானது இன்றைய தேவைகளுக்குச் செவ்வைப்படுத்தப்பட வேண்டும்—குறிப்பாகச் சிற்றளவுத் தொழிலமைப்புகளுக்கு நிதியுதவுவதில். அப்போது தான் அது நம் நாட்டின் தொழிற் பொருளாதார அமைப்பில் தனக்குரிய முக்கிய இடத்தை வகிக்கக்கூடும்.

## 4. விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள்

நம் நாட்டின் விவசாய வர்த்தகத்தில், கூட்டுறவு நிறுவனங்களின் பங்கு சுமார் 8 சதவீதம் முதல் 10 சதவீதம் வரையாக இருக்கின்றது என்று மதிப்பீடு செய்யப்பட்டுள்ளது. நாட்டின் எல்லா மண்டிகளும் பிரதம விற்பனைச் சங்கங்களால் தழுவப்பட்டுள்ளன. இஃதன்றியும் மையச் சங்கங்களும், மாநில மட்டத்துக் கூட்டமைப்புகளும், தேசிய விவசாயக் கூட்டமைப்பும் உள்ளன. 1970–71ஆம் ஆண்டின்போது, தேசிய விவசாயக் கூட்டமைப்பால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள்களின் பெறுமானம் ரூ.10 கோடிக்கிருந்தது. மையச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளை பொருள்களின் பெறுமானம் ரூ.138 கோடியாகவும், தலைமைச் சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள் களின் பெறுமானம் ரூ.140 கோடியாகவும், பிரதம விற்பனைச்

சங்கங்களால் விற்பனை செய்யப்பட்ட விவசாய விளைபொருள் களின் பெறுமானம் ரூ.271 கோடியாகவும் ஆக மொத்தத்தில் ரூ.549 கோடியாக இருந்தது. மாநிலக் கூட்டமைப்புகள் ரூ.142 கோடியளவிற்கும், மையச் சங்கங்கள் ரூ.94 கோடி யளவிற்கும், பிரதம விற்பனைச் சங்கங்கள் ரூ.150 கோடிக்கும், ஆக மொத்தம் ரூ.386 கோடிக்கு விவசாயத் தேவைகளைப் பெரும்பாலும் உரவகைகளை வழங்கின. மையச் சங்கங்களாலும் பிரதமச் சங்கங்களாலும் வழங்கப்பட்ட நுகர்வுப் பொருள்களின் பெறுமானம் ரூ.112 கோடியாக விருந்தது. 1971 டிசம்பர் இறுதியில் தேசிய விவசாயக் கூட்டமைப்பின் மாநிலங்களுக் கிடையிலான வர்த்தகமும், ஏற்றுமதி வர்த்தகமும், முறையே ரூ.1.43 கோடியாகவும், ரூ.3.68 கோடியாகவும் இருந்தது. விவசாயக் கடன் சங்கங்களாலும், விற்பனைச் சங்கங்களாலும் கட்டப்பட்ட சேமிப்புக் கிடங்குகளினால் கூட்டுறவு நிறுவனங் களின் சேமிப்புக் கிடங்குக் கொள்ளளவு, முறையே 19.62 இலட்சம் டன்களுக்கும், 21.09 இலட்சம் டன்களுக்கும் அதி கரித்துள்ளது. அளவு ரீதியில், அடையப்பட்ட முன்னேற்ற மானது, எவ்விதத்திலும் குறைந்ததாக இல்லை.

எனினும், இன்னும் அதிகமான முன்னேற்றம் செய் வதற்கான இடமுள்ளது—குறிப்பாக ஆண்டுதோறும் விவ சாயத் துறைக்குக் கூட்டுறவு நிறுவனங்களின் மூலம், அதி கரித்துவரும் கடனுதவி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது என்பதை நினைக்கும்போது, விற்பனைச் சங்கங்களில் பல சுறுசுறுப்பாக இல்லாமலுள்ளன. உண்மையிலேயே, ஒரு பெரிய எண்ணிக்கை யுள்ள விற்பனைச் சங்கங்கள், விவசாய விளைபொருள்களின் விற்பனையை மேற்கொள்ளவில்லை. அப்படி மேற்கொண்டிருந் தாலுங்கூட அவற்றின் விற்பனைப் புரள்வு கணிசமாக இல்லை. 3,613 மொத்த எண்ணிக்கையுள்ள மாநில மத்தியப் பிரதமச் சங்கங்களுள் 1,193 சங்கங்கள் விற்பனை செய்வதில் ஈடுபடவில்லை. விவசாய விளைபொருள்களின் விற்பனையை மேற்கொண்ட சங்கங் களுள், 689 சங்கங்களின் விற்பனைப் புரள்வு ரூ.1 இலட் சத்திற்குக் குறைவாகவும் 614 சங்கங்களின் விற்பனைப் புரள்வு ரூ.1 இலட்சத்திற்கும் ரூ.5 இலட்சத்திற்கும் இடையேயும்; 330 சங்கங்களின் விற்பனைப் புரள்வு ரூ.5 இலட்சத்திற்கும் ரூ.10 இலட்சத்திற்கு மிடையேயும், 784 சங்கங்களின் விற்பனைப் புரள்வு ரூ.10 இலட்சத்திற்கு மேலாகவும் இருந்தது. மற்றும், கடன் விற்பனை இணைப்பு விஷயத்தில் எல்லா விற்பனைச் சங்கங்களும்

பதனப்படுத்தும் சங்கங்களும் 1970–71ஆம் ஆண்டில், ரூ.63 கோடி யளவுக்குக் கடன்களை வசூலித்தன. எல்லாப் பிரதம விவசாயக் கடன் சங்கங்களாலும் செய்யப்பட்ட மொத்த வசூல்களுக்கு, விற்பனைச் சங்கங்கள் மூலமாகவும், பதனப்படுத்தும் சங்கங்கள் மூலமாகவும் செய்யப்பட்ட வசூல்களின் சத வீதம் 12.5-க்கு மட்டுமே இருந்தது.

ஏற்கெனவே பெற்றுள்ள பலன்களை ஒருங்கிணைப்பதற்கு மட்டுமன்றி, வரப்போகும் ஆண்டுகளில் இன்னும் அதிகமானதும், துரிதமானதுமான முன்னேற்றத்தை அடைவதற்கும் கூட, கூட்டுறவு விற்பனைச் சங்கங்களின் சீரமைப்புக்கான ஒரு விரிவான செயல்திட்டமும், வளர்ச்சிச் செயல் திட்டமும் அவசியமாகும்.

## 5. நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள்

இந்தியாவில், 1960ஆம் ஆண்டு முதல், மைய, மாநில அரசுகளால் எடுக்கப்பட்ட பல்வேறு நடவடிக்கைகளின் காரணமாக, நுகர்வோர் இயக்கம் பெருமளவு வளர்ச்சி பெற்றுள்ளது. நாட்டில் 4.5 மில்லியன் குடும்பங்களுக்கும் அதிகமானவர்கள் நுகர்வோர் பண்டசாலைகளின் உறுப்பினர்களாகவுள்ளனர். சுமார் 14,000 பிரதமப் பண்டசாலைகளும், 385 மொத்த விற்பனைப் பண்டசாலைகளும் 107 கூட்டுறவுச் சிறப்பு அங்காடிகளும், 14 மாநில மட்டத்துக் கூட்டமைப்புகளும், 1 தேசியக்கூட்டமைப்பும், தேசியக் கிளைப் பின்னலமைப்பாக அமைந்துள்ளன. அவை செய்துள்ள மொத்த விற்பனை ரூ.350 கோடிக் கிருந்தது. நுகர்வோர் இயக்கத்தின் விரிவாக்கத்திற்கான பல்வேறு திட்டங்கள் அமுல்படுத்தப்பட்டதன் முக்கியக் குறிக்கோள்களில் ஒன்றுனது, நுகர்பொருள்களின் விலைவாசியின் மீது அவை ஒரு செம்மைப்படுத்தும் செல்வாக்கை உண்டுபண்ணக்கூடும் என்பதே. இக் குறிக்கோள், துறைப்பண்டசாலைகளும், பெரிய பிரதமப் பண்டசாலைகளும் செயற்பட்டுக் கொண்டிருந்த பகுதிகளில், சில அளவுக்கு அடையப்பட்டுள்ளது என்று கூற முடிந்தாலும், விலைவாசியின்மீது சங்கங்களின் செல்வாக்கு அளவை மதிப்பீடு செய்வது கடினமாக வுள்ளது. எனினும், செயற்கைப் பற்றுக்குறைக்கும், விலைவாசி ஏற்றத்திற்கும் எதிராக அவை ஒரு மத்தியிலிருக்கும் மெத்தையாகச் செயற்பட்டுள்ளன என்பது உண்மையே. விலைவாசியைப் பயனுறுதியாக நிலைநிறுத்துவதற்காக, நுகர்வோர்

கூட்டுறவுச் சங்கங்களின் ஒரு கிளைப் பின்னலமைப்புச் செயற்பட வேண்டுவது மட்டுமன்றி, பல நடவடிக்கைகள் அரசிறை, பணவியல், நிர்வாகச் சட்ட நடவடிக்கைகள் ஒரே காலத்தில் மேற்கொள்ளப்பட வேண்டுவதும் அவசியமாகும். பெரும் பற்றுக்குறைப் பொருள்களையும், கட்டுப்பாட்டுப் பொருள்களையும் விநியோகிப்பதற்கான அமைப்புகளாக அவை நம்பத்தக்கவையாக இயங்கி, ஒரு குறிப்பிடத்தக்க பணியைக் குறிப்பாகத் தமிழ்நாடு போன்ற சில மாநிலங்களில் புரிந்துள்ளன. வர்த்தகத்தின் மொத்தப் பருமம் கணிசமாக இருந்தும் நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் சிலவிடங்களில் சில்லரை விற்பனை வர்த்தகத்தில் சில தாக்கைச் செய்திருந்தாலும், இந்த முன்னேற்றம் தர ரீதியாகவும் நுகர்வோர்களுக்குச் செய்யப்படும் சேவை ரீதியாகவும் அவற்றிற்களிக்கப்பட்ட ஆதரவுக்குத் தக்கவாறுள்ளதென்றும் அல்லது இயல்பான எதிர்பார்க்கைகளுக்குப் போதுமானதாக வுள்ளதென்றும் கூறமுடியாது. பிரச்சினைகளையும் நிலவரங்களையும் சமாளிப்பதற்கு, உபாயமான அடிப்படையின்பேரில், அதற்கென அமைத்த அணுகுதல்தான் செய்யப்படுகிறதென்றும் இயக்கம் உறுதியான கால்கோள்களின் மீது அமைக்கப்படவில்லையென்றும் பொதுவாகக் கருதப்படுகிறது என்பதாகக் கருத்துத் தெரிவிக்கப்பட்டுள்ளது. இந்தியாவில் நுகர்வோர் இயக்கத்தின் முன்னேற்றம் ஒப்பிடும்வகையில் மந்தமாக இருப்பதற்கான காரணங்களும், அதன் தொடர்ச்சியானதும் நிலையானதுமான வளர்ச்சியை நிச்சயப்படுத்துவதற்கு எடுக்கப்பட வேண்டிய நடவடிக்கைகளும் சம்பந்தப்பட்ட அத்தியாயத்தில் விவரிக்கப்பட்டுள்ளன. அவசர நிலை, போர்கள், பற்றுக்குறை நிலைமைகள் போன்ற அசாதாரணக் காலங்களின்போது மட்டுமன்றிச் சாதாரணக் காலங்களிலும், இயக்கம் விநியோக வர்த்தக முறையின் ஒரு பயனுறுதியானதும் ஒருங்கிணைந்ததானதுமான பாகமாகச் செயற்பட வேண்டிய வகையில், நுகர்வோர் இயக்கத்தின் வளர்ச்சி அமைய வேண்டும். நுகர்வோர் நிறுவனங்களின் அனுகூலங்களைச் சிறப்பாக எதிர்பார்க்கின்ற தொழிலாளர்களின் ஓர் இயக்கமாக நுகர்வோர் இயக்கம் இன்னும் வளர்ச்சியடையவில்லையென்பது யாராலும் மறுக்க முடியாது. நுகர்பொருள்கள் சிலவற்றின் உற்பத்தியை மேற்கொள்ளுதல் உள்ளிட்ட ஒரு பலம் பொருந்தியதும், நுகர்வோர்களுக்குச் சொந்தமானதும், மக்களுக்காகச் செயற்படுகின்றதுமான வாணிகம், பல சேவைகளையும், பலன்களையும் மக்களுக்கு அளிக்க முடியும்.

## 6. தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்

தொழில் துறையில், நெசவாளர் கூட்டுறவுச் சங்கங்களும், கூட்டுறவு நூற்பு ஆலைகளும் குறிப்பிடத்தக்க முன்னேற்றத்தை அடைந்துள்ளன. இதரத் தொழிற் கூட்டுறவுச் சங்கங்களைப் பொறுத்தமட்டில், அவற்றின் எண்ணிக்கையிலிருக்கும் வளர்ச்சிக்குச் சமமாக அவற்றின் நடைமுறை வளர்ச்சியில்லையென்று கருதப்படுகிறது. இச் சங்கங்களில் பல, ஒரு குறைந்த வாணிகப் புரள்வைப் பெற்றிருப்பதன் விளைவாக, இலாபத்தில் இயங்கும் சங்கங்களின் சதவீதமானது குறைந்து வரும் போக்கிலுள்ளது.

# 27. இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் எதிர்காலம்

## (Future of Co-operation In India)

### 1. விவசாயக் கடன்வசதி (Agricultural Credit)

இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் தற்போதைய படத்தின் அடிப்படையிலும், அது வருங்காலத்தில் அடையக்கூடிய மாறுதல்களின் அடிப்படையிலும் கூட்டுறவுத் துறையில் விவசாயக் கடன் சங்கம் அதன் எண்ணிக்கையிலும், உறுப்பினர் எண்ணிக்கையிலும் அல்லது தேசியப் பொருளாதார அமைப்பிற்கு அதன் உதவியிலுங்கூடப் பிரதானமானதாக இருக்குமென்று ஒருவர் நியாயமாகக் கூறக்கூடும். பொருளாதார அமைப்பின் ஒரு முக்கியமானதும் பெரியதுமான துறையாக விவசாயம் தொடர்ந்திருக்குமென்பது மட்டுமன்றி, அது சிறு விவசாயிகளின் கையில் இருக்கவும் நேரிடும். தொழில்நுட்ப முன்னேற்றத்தின் காரணமாக, உயர்ந்துகொண்டு போகும் வகையில் அதிகச் செலவுள்ளதாகக் கூடிய விவசாயத்தை நடத்துவதற்கு இக் குடியானவர்களிடத்தில் போதிய அளவு சொந்த நிதியாதாரங்கள் இல்லாமையால், விவசாயக்கடன் தொடர்ந்து பிரதானமாகத் தேவைப்படும். விவசாய வளர்ச்சியின் காரணமாகவும் விவசாயிகளின் அதிகரித்துவரும் வருமானத்தின் காரணமாகவும் விவசாயக் கடன் சங்கங்கள் உரவகைகள், விதைகள், இயந்திரங்கள் முதலியவற்றில் பெரிய அளவு வாணிகத்தைச் செய்யக்கூடுமென்று எதிர்பார்க்கப்படக்கூடும். இறுதிநிலை அல்லது கீழ் இறுதிநிலைக் குடியானவர்களின் தேவைகளுக்கும், வசதியுள்ள தன்னிறைவுள்ள குடியானவர்களின் தேவைகளுக்கு மிடையிலான போராட்டத்தில் அவை அதிகரித்து வருமளவில் தங்களைச் சிக்கவைத்துக் கொள்ளக்கூடும். ஒரு வேளை, ஒரு கிராமத்தில் அல்லது கிராமத் தொகுதியில் எல்லா வகையான குடியானவர்களுக்கும் ஒரே சங்கம் இயங்கி வரும் தற்போதைய முறைக்குப் பதிலாக, பல்வேறு வகையான குடியானவர்களுக்கு இயங்கும் சங்கங்கள், அதாவது இறுதிநிலை, கீழ் இறுதிநிலைக் குடியானவர்களின் தேவைகளுக்குப்

பணியாற்றும் சங்கங்கள், நடுத்தரக் குடியானவர்களுக்குப் பணி யாற்றும் சங்கங்கள், மிகப் பெரிய குடியானவர்களுக்குப் பணி யாற்றும் சங்கங்கள் முதலியவைகள் இருக்கக்கூடும். ஒருவேளை இந்த வளர்ச்சியானது வங்கித்தொழில் ஆணைக்குழு, விவசாய ஆணைக்குழு ஆகியவைகளின் பரிவுரைகளுக்கு இணங்கியிருக்கும். எனினும், அத்தகைய ஒரு வளர்ச்சியானது, கிராமச் சமுதா யத்தின் ஒட்டுமொத்தமான கூட்டுறவு வளர்ச்சிக்கு மிகவும் அவசியமாகவுள்ள அச் சமுதாயத்தின் ஓரியலான தன்மையை யும், ஒருங்கிணைந்த செயற்பாட்டையும் பாதிக்க நேரிடும் என்று கூறப்படுகிறது. இந் நிலைமையில், பிரதமக் கடன் சங்கங் கள் தங்கள் அங்கத்துவத்தை இறுதிநிலை, கீழ் இறுதிநிலைக் குடி யானவர்களுக்கும், சிறு குடியானவர்களுக்கும் மட்டுமே அமைத்துக் கொண்டு, பெரிய விவசாயிகள், வர்த்தக வங்கிகள் போன்ற அமைப்புகளால் கடனுதவியளிக்கப்படுவதற்கு விட்டுவிடப்பட வேண்டுமென்ற ஏற்பாடு சாத்தியமான ஒரு நடவடிக்கையாக இருக்கும்.

கூட்டுறவுக் கடன் ஏற்பாடுகள் சீரமைக்கப்படவும், மறுதிருப்பம் செய்யப்படவும் வேண்டுமென்ற ஒரு கருத்து வங்கித் தொழில் அதிகார வட்டாரங்களில் நிலவி வருகிறது. பிரதம மட்டத்தில், குடியானவர்கள், தம் தேவைகள் அனைத்தையும் ஒரே தொடர்பு இடத்தில் பெறுவதற்கு வகை செய்கின்ற ஓர் ஒருங்கிணைந்த கடன்முறை உருவாக்கப்பட வேண்டுமென்று கருதப்படுகிறது. சிறு குடியானவரின் பிரச்சினை யானது கடன்பிரச்சினை மட்டுமன்று. ஆனால், அது, நீர், உரம், மேலான விதை, பூச்சிக்கொல்லி போன்ற சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் பொருள்களைப் பெறுகின்ற பிரச்சினைகளாகவுங் கூட வுள்ளது. கடனளிப்பானது, சாகுபடியில் ஈடுபடுத்தப்படும் பொருள்கள் வழங்குதலுடனும், தொழில்நுட்ப வழிகாட்டுதல் வழங்குதலுடனும், ஒருங்கிணைக்கப்பட வேண்டியுள்ளது. அவ் வாறே, நிலத்தில் செய்யவேண்டிய முதலீட்டிற்கான கடனுக் காகவும், குடியானவர் தம் கடன் தேவைகளனைத்தையும் பற்றி ஒரு முழுமையான பார்வையை எடுக்கக் கூடிய ஒரே அமைப்பை அணுகும் நிலைமையிலிருந்தால் அது மிகச் சிறந்த ஓர் ஏற்பாடாக இருக்கும். இக் கருத்தைக் கொண்டுதான், விவசாயத்தைப் பற்றிய தேசியக்குழு, 'குடியானவர் களின் சேவைச் சங்கம்' (Farmers' Service Society) என்று வழங்கப்படும் ஒரு நிறுவனத்தைப் பரிவுரை செய்தது. அத்தகைய ஒரு சங்கம் வெற்றிகரமாக இயங்குவதற்கு, ஓர் உயர் அளவு மேலாண்மைத் தகுதி தேவைப்படும். பிரதமச்

சங்கம் அடிப்படை மட்டத்தில் எல்லாவிதக் கடன் வசதிகளையும் வழங்கினால் அதே முறையானது உயர்மட்டங்கள் வரைக்கும் கொண்டு போகப்படலாம் என்று கூறப்படுகிறது. மற்றும், தற்போது ஏறக்குறைய தனிப்பட்டுச் செயற்படுகின்ற கூட்டுற வுக் கடனமைப்பின் இரண்டு பிரிவுகளுக்குப் பதிலாக (குறுகிய காலம், மற்றும் நீண்டகாலம்), ஒரே பிரிவுக் கடனமைப்பு உரு வாக்கப்படலாம். மேற்கொண்டும் ஓர் அமைப்பு மாறுதல் ஆலோசனை கூறப்படுகிறது. அதாவது குறிப்பாக மத்தியக் கூட்டுறவு வங்கிகள் வலிவற்றிருக்கும் மண்டலங்களில் தலைமைக் கூட்டுறவு வங்கியானது சங்கங்களுக்கு நேரடியான நிதியுதவியை மேற்கொள்ளலாம் என்பது.

விவசாய உற்பத்தியைப் பெருக்குவதும், உணவுத் தானியங்களி லாவது தன்னிறைவு அடைவதுமே இன்றைய அவசரமான தேவையாக வுள்ளது. சமுதாய நீதிக் கண்ணோட்டத்தில் மட்டு மன்றி, விவசாய உற்பத்தியைப் பெருக்குதல் கண்ணோட்டத் திலிருந்துங்கூட, விவசாயத்தை நவீனமாக்குவதற்கும், தீவிரப் படுத்துவதற்கும் அமுல்படுத்தப்பட்ட செயல்திட்டங்களில் சிறு குடியானவர்களும் பங்கு கொள்வதற்கு வகை செய்யப்படு வது முக்கியமாகவுள்ளது. ஆகையால், கூட்டுறவுக் கடனமைப்புச் சீரமைக்கப்படவும், மறுதிருப்பம் செய்யப்படவும் எதிர்பார்க்கப் படலாம். தன்மீது விதிக்கப்பட்டிருக்கும் பொறுப்புகளைப் பய னுறுதியாகவும், திறமையாகவும் நிறைவேற்றுவதற் [illegible] நிலையிலிருக்கும் பொருட்டு, அவ்வாறு செய்யப்பட வேண்டிய அவசியத்தையுடைய மண்டலங்களிலாவது அது செய்யப்பட வேண்டும்.

1975ஆம் ஆண்டுச் சூலை மாதத்தில், இந்தியப் பிரதம[illegible]ல் அறிவிக்கப்பட்ட 20 அம்சப் பொருளாதாரத் திட்டத்தின் ஒரு பகுதியாகப் பிராந்திய வங்கிகளை அமைப்பதற்கு இந்திய அரசு முடிவு செய்துள்ளது. மற்றும், அது, 1977 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திற்கு முன்பு, 50 பிராந்தியக் கிராம [illegible] களைத் தொடங்க வேண்டுமென்ற ஓர் இலக்கையும் நிரு ணயித்துள்ளது. அவற்றுள், 15 வங்கிகள், 1975ஆம் ஆண்டுக் காலத்தில் தொடங்கப்படுவதற்கு உத்தேசிக்கப்பட்[illegible]. அத்தகைய ஒவ்வொரு வங்கியும் ரூ.1 கோடிக்கு அ[illegible] கப்பட்ட மூலதனத்தையும் ரூ.25 இலட்சத்திற்குச் [illegible] தப்பட்ட மூலதனத்தையும் பெற்றிருக்கும். மத்திய [illegible] சாலும், சம்பந்தப்பட்ட மாநில அரசுகளாலும், ஆ[illegible] செய்கின்ற (வாணிக) வங்கிகளாலும், பங்கு மூல[illegible]

50 : 15: 35 விகிதத்தில் எழுப்பப்படும். பிராந்தியக் கிராம வங்கியின் மூலதனத்தில் இதர நிறுவனங்களுடைய பங்கு கொள்ளுதலும், தனிநபர்களுடைய பங்கு கொள்ளுதலும் இராது. பிராந்தியக் கிராம வங்கிகள் அமைக்கப்படும் பகுதி யானது, ஒப்பிடும் வகையில் பின் தங்கிய பகுதியாக அல்லது ஒரு மலைச்சாதியினர் பகுதியாக அல்லது வாணிக வங்கிகளும், கூட்டுறவுச் சங்கங்களும் குறைவாகத் தழுவியுள்ள பகுதி யாக இருக்க வேண்டும். மற்றும், இப் பகுதியானது வளர்ச் சிக்காக ஓர் உண்மையான வாய்ப்பு வசதியைக் கொண்டதாக வும் கடன் பாய்ச்சல் உறுதியளிக்கப்பட்டவுடன் ஒரு முன் னேற்றத்திற்காகச் சித்தமாகவும் இருக்கவேண்டும். இவ் வங்கிகள் சிறு இறுதிநிலைக் குடியானவர்கள், சிறு கைத்தொழிலாளர்கள், நிலமில்லாத தொழிலாளர்கள் ஆகியவர்களுக்கு மட்டும்தான் கடன்களை அளிக்கவேண்டும். நபர்களுக்கு ஒப்பளிக்கப்படும் கடன் அளவின்மீது ஓர் உச்சவரம்புங்கூட விதிக்கப்படும். பிராந் தியக் கிராம வங்கிகள், தங்கள் நிதிகளில் ஒரு சிறிய பகுதியை நுகர்வுக் கடன்களுக்காக ஒதுக்கிவைக்க வேண்டும். நுகர்வுக் கடன்கள், கல்வி, அல்லது மருத்துவச் செலவு போன்ற காரி யங்களுக்காகக் கட்டுப்படுத்தப்பட வேண்டும். வட்டி விகிதத் தைக் குறைக்கும் பொருட்டு, இப் புதிய பிராந்தியக் கிராம வங்கிகளைக் கூட்டுறவு வங்கிகளுக்குச் சமானமாக வைப்பதற் காக ரிசர்வ் வங்கிச் சட்டம் திருத்தப்படுவதற்கு உத்தேசிக்கப் பட்டுள்ளது.

எனவே, இந்தப் பிராந்தியக் கிராம வங்கிகள் கிராமிய வாடிக்கையாளர்களுடைய, சிறப்பாக, நிலமில்லாத தொழி லாளர்களும் சிறு கைத்தொழிலாளர்களும் உள்ளிட்ட சிறு குடியானவர்கள், இறுதிநிலைக் குடியானவர்கள் ஆகியவர்க ளுடைய தனிப்பட்ட சிறப்புத் தேவைகளைப் பூர்த்தி செய்ய வேண்டியிருக்கும். இக் காரியத்திற்காக, கிராமப்புறத்தில் '*பிரதமக் குடியானவர்கள் சேவைச் சங்கங்களை*' (Primary Farmers' Service Societies) அமைப்பதற்கு உத்தேசிக்கப்பட்டுள்ளது. ஏனென்றால், அவை சிறு குடியானவர்கள், இறுதிநிலைக் குடி யானவர்கள், நிலமில்லாத தொழிலாளர்கள் ஆகியவர்களுக் கான மிகப் பொருத்தமான அடிமட்டத்து நிறுவனங்களாக உள்ளன. மற்றும், இப் புதிய கடன்முறையானது குடியான வர்கள் சேவைக் கூட்டுறவுச் சங்கங்களின் மாதிரியின்பேரில் கிராம வங்கிகளுக்கும் சீரமைக்கப் பட்ட பலநோக்குக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு மிடையிலான ஒரு பயனுறுதியான இணைப்பின் அடிப்படையில் அமைக்கப்பட்டிருக்கும்.

பிராந்தியக் கிராம வங்கிகளைப் பற்றிய ஓர் அறிவிப்பில், மத்திய நிதித்துறையின் பத்திரிகைக்குறிப்பு ஒன்று (செப்டம்பர் 1975) 'கூட்டுறவுச் சங்கங்களின் எல்லை தழுவுதலும், செயலும் நியாயமான அளவிற்குத் திருப்திகரமாக இருக்கின்ற மாநிலங்களின் விஷயத்தில், கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கேடு விளைவிக்காத வகையில் பிராந்திய வங்கிகளின் வளர்ச்சி இருப்பதையும், கடனமைப்பில் இரட்டிப்பு இல்லாமல் இருப்பதையும், நிச்சயப்படுத்துவதற்குக் கவனம் செலுத்தப்படவேண்டும். கூட்டுறவு இயக்கம் பொதுவாகப் பலம் பொருந்தியிருக்கின்ற ஒரு மாநிலத்திற்குள்ளேயுங்கூடக் கூட்டுறவு அமைப்பு வலிவற்றிருக்கின்ற இடங்களும் பகுதிகளும் உள்ளன. இப் பகுதிகளில் பிராந்தியக் கிராம வங்கிகளை அமைப்பதற்கான ஒரு வாய்ப்பு இன்னும் உள்ளது' என்று கூறுகிறது.

## 2. கூட்டுறவு விற்பனையும், பதனிடுதலும் (Co-operative Marketing and Processing)

விற்பனை நடவடிக்கைகளில் தொடர்ந்த விரிவாக்கமன்றியும், இதுவரை அடையப்பட்ட முன்னேற்றத்தைக் கருதினால், கூட்டுறவுப் பதனிடுதல் பலமான ஒரு முன்னேற்றத்தை அடையலாம் என்று எதிர்பார்க்கக்கூடும். கூட்டுறவு விவசாயப் பதனிடுதல் துறையில், ஒரு பெரிய முன்னேற்றம் காணப்பட்டுள்ளது. இத் துறையானது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தின்போது பெரும்பாலும் நிறுவனம் எதுவுமில்லாத ஒரு நிலையிலிருந்து தொடங்கித் தற்போது ரூ. 400 கோடிக்கு மதிகமான ஒரு மொத்தநிலை முதலீட்டைப் பெற்றுள்ள (Total Block Investment) பல்வேறு அளவுள்ளவையும், வகையானவையுமான 1,800-க்கு மதிகமான அமைப்புகளை உள்ளடக்கியுள்ளது. நவீனக் கூட்டுறவுப் பதனிடுதலின் பெருந்தகுதியானது அஃது ஒரு வளர்ச்சிக்கான திறனுள்ள செயலாக இருப்பதே. மராட்டியத்திலுள்ள கரும்புத் தொழிலமைப்புகள் கூட்டம் இந்த அம்சத்தை நன்கு செயல்விளக்கம் செய்கின்றது. எனவே, கூட்டுறவுப் பதனிடுதலானது, உற்பத்திக் கண்ணோட்டத்திலிருந்து மட்டும் மதிப்பீடு செய்யப்படக் கூடாது; ஆனால், ஒரு நிலப்பகுதியின் பொருளாதார அமைப்பை நவீனமாக்குதலில் அதன் மறைமுகமான செல்வாக்குங்கூடக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட வேண்டும். வருங்காலத்தில் கூட்டுறவுப் பதனிடுதல் தொழிலைப் பேரமைப்புச் செய்வதற்கான வாய்ப்புகள் உள்ளன.

விற்பனைச் சங்கங்கள், நுகர்வோர் சங்கங்கள், தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள் போன்ற இதரவகையான கூட்டுறவுச் சங்கங்களின் எதிர்கால வாய்ப்புகளைப் பற்றிய ஆய்வு, முந்திய அத்தியாயத்தில் செய்யப்பட்டுள்ளது.

### 3. தொழில் தேர்ச்சி பெற்ற நிருவாகம் (Professional Management)

கூட்டுறவு இயக்கத்தின் எதிர்காலம் (கடனியக்கமும், கடனல்லாத இயக்கமும்) பல்வேறு வகுப்பு ஊதியம் பெறும் பணியாளர்களின் கல்வியறிவு, அமைப்புத் திறன், தொழில் திறன் ஆகியவற்றின்மீது பெருமளவு சார்ந்துள்ளது. இயக்கம் பெரிய அளவுகளை யடைந்து, அவற்றின் நடவடிக்கைகள் பல் வேறு வகையாகவும், சிக்கனத்தன்மை பெற்றவையாகவும் இருப்பதால், அவை கவுரவ மனிதர்களால் அல்லது தொழிலில் பயிற்சியில்லாதவர்களால் நடத்தப்படமுடியாது. அரசு அலுவலர்கள், அல்லது ரிசர்வ் வங்கி அலுவலர்கள், மாநிலக் கூட்டுறவு வங்கிகளின் அலுவலர்கள் அல்லது இதர உயர் நிலை நிதி நிறுவனங்களின் அலுவலர்கள் ஆகியவர்களின் சேவைகளின்மீது இயக்கம் சார்ந்திருந்தால், அதன் நிருவாகத்தில் இயக்கம் தற்சார்பு கொண்டுள்ளதாக வுள்ளது என்று உரிமை கொண்டாட முடியாது. சுதந்திரமான முடிவுகளை எடுப்பதற்காக அவசியமான அதிகார மளிக்கப்பட்ட ஓர் உயர்பயிற்சியும், தகுதியும் பெற்ற மேலாண்மைப் பணியாளர்தொகுதி, இன்று, பெரிதும் தேவைப்படுகிறது. தலைமை வங்கிகள், மத்தியக் கூட்டுறவு வங்கிகள் போன்ற உயர்நிலைக் கூட்டுறவு வங்கித் தொழில் நிறுவனங்களும், சர்க்கரைத் தொழிற்சாலைகள், நூற்பாலைகள், உர உற்பத்தித் தொழிற்சாலைகள், விற்பனை மற்றும் வர்த்தக நிறுவனங்கள், பெரிய நுகர்வோர் நிறுவனங்கள், கூட்டுறவுச் சிறப்பு அங்காடிகள் போன்ற தொழில் நிறுவனங்களும், தொழிலமைப்பு, தொழில் நிருவாகம், தொழில் கட்டுப்பாடு ஆகியவற்றில் சிறந்த அறிவைப் பெற்ற, உயர் பயிற்சியடைந்த தொழில் நுட்பச் சிப்பந்திகளால் நிருவகிக்கப் படவேண்டியுள்ளன. ஒருவகையில், அத்தகைய சிப்பந்திகளை ஏற்படுத்துதல் அன்றாட நிருவாகத்திற்காகக் கூட்டுறவுச் சங்கங்கள் அரசு சிப்பந்திகளின்மீது சார்ந்திருப்பதைக் குறைக்கும். அந்த அளவிற்குக் கூட்டுறவு நிறுவனங்களின் நிருவாகத்தில் அரசு ஈடுபாடு குறைந்திருக்கும். மற்றும், அஃது இயக்கத்தை அரசு பணியாள ரல்லாததாக்கும் திசையில் ஒரு நடவடிக்கையாக இருக்கும். இரண்டாவதாக, அன்றாட நிருவாகத்திற்கான முழுப்பொறுப்பு, தலைமைச் செயலதிகாரிகளிடம் ஒப்பு

விக்கப்பட்டு இயக்குநர்குழுவானது கொள்கை வகுத்தலிலும், வழிகாட்டுதல் முறைகளை நிருணயித்தலிலும் மட்டுமே செயற் படுகின்ற ஒரு தொழில் தேர்ச்சி நிருவாக முறை உருவாக்கப் படக்கூடும். அரசு பணியாளரல்லாத தேர்ந்தெடுக்கப்பட்ட குழுக் களுக்கும், தொழில் தேர்ச்சி பெற்றவர்களின் நிருவாகத்திற்கு மிடையே, ஆரோக்கியமான ஓர் உறவு அமைக்கப்பட வேண்டி யுள்ளது. ஒரு தற்சார்பற்ற கண்ணோட்டத்தையும், சுதந்திர மான நிருணயித்தலேயும், நிருவாகத்திறனேயும், மேலாண்மைச் சிப்பந்திகள் நிறுவனங்களின்மீது கொண்டு வருவார்களாதலால் இவ் வேற்பாடு சங்கங்களின் திறனுள்ள நிருவாகத்திற்கு உகந்த தாக இருக்கும். சங்கங்களின் உள்நிருவாகத்தில் இயக்குநர் களின் தலையீட்டையும் அது பெருமளவு தடுப்புச் செய்யும். அரசியல் அல்லது இதரச் செல்வாக்குகளும் தடை செய்யப்படும். காலக் கிரமத்தில் அதேமாதிரியான பணிப்பிரிவுகள் மாநிலங் களுக்கிடையே அலுவலர்கள் பரிவர்த்தனையை வசதி செய்யும் பொருட்டு, தேசிய மட்டத்திலும் உருவாக்கப்படக்கூடும். அத்தகைய அலுவலர்கள் பரிவர்த்தனையானது பொதுவாக இயக்கத்திற்குப் பயனுள்ளதாக விருக்கும். மற்றும், அஃது ஓர ளவுக்கு பிராந்தியங்களுக்கிடையிலான சமமின்மைகளையும் போக்க உதவும். ஒரு மாநிலத்திலுள்ள உயர் அதிகார அலுவ லர்களின் அறிவும், அனுபவமும் இதர மாநிலங்களின் இயக்கத் திற்குக் கிடைக்கக் கூடும். அது தேசிய ஒருமைப்பாட்டை வளர்ப்பதற்குங்கூட உதவும். தொழில் தேர்ச்சி பெற்றவர்களின் நிருவாகம் கூட்டுறவுச் சங்கங்களின் சனநாயக அமைப்பிற்கு முரணாக இராது. அது கூட்டுறவு நிறுவனங்களின் பயனைக் குறைக்கவோ அரசு பணியாள ரல்லாத கூட்டுறவாளர்களின் ஆர்வத்தையும், அக்கறையையும் குறைக்கவோ செய்யாது. மாறாக, திறனுள்ளவையும் வெற்றிகரமானவையுமான கூட்டுறவு நிறுவனங்கள், கூட்டுறவு இயக்கத்திடத்தில் மிக அதிகமான நம்பிக்கையை உண்டாக்கி அதன் விளைவாக, அதில் பொது மக்கள் அதிகமாகப் பங்குகொள்ளுதலுக்கு வழிசெலுத்தி இயக் கத்திற்கு மக்களின் மிக அதிகமான ஆதரவையும், விசுவாசத் தையும் பெற்றுத் தரக்கூடும். பல்வேறு வகையான உயர் கூட் டுறவு நிறுவனங்களுக்காக மேலாண்மை அல்லது நிருவாகச் சிப்பந்திகளின் பணிமுறைப் பிரிவுகளை ஏற்படுத்தி, அந் நிறுவனங் களின் எதிர்கால வளர்ச்சிக்காகத் தகுதி படைத்த தொழில் தேர்ச்சியுள்ள நிருவாகத்தை வளர்ப்பதற்குத் தக்க நடவடிக் கைகள் உருவாக்கப்பட வேண்டுவது அவசரத் தேவையான ஒரு விஷயமாகும்.

### 4. ஊன்றிய நலமிகளை நீக்குதல் (Elimination of the Vested Interests)

கூட்டுறவுச் சங்கங்களில் ஊன்றிய நலமிகளை நீக்கும் பிரச்சினையானது, மிர்தாக் குழுவினராலும் சந்தானம் குழுவினராலும் பரிசீலிக்கப்பட்டது. இவ் விரண்டு குழுக்களும் ஊன்றிய நலமிகளை நீக்குவதற்கான பல்வேறு நடவடிக்கைகளை யோசனை கூறியுள்ளனர். அவற்றில் முக்கியமானவையாவன: (i) கூட்டுறவுச் சங்கங்களில் திறந்த அங்கத்துவத்தைக் கண்டிப்பாக நடைமுறைப்படுத்துதல். (ii) சிறு குடியானவர்களுக்கும், சமுதாயத்தின் பலங்குன்றிய பிரிவினர்களுக்கும், சங்கங்களின் நிருவாகக் குழுவில் இடங்களை ஒதுக்கிவைத்தல் செய்து, அவர்களின் நியாயமான உரிமைக் கோரிக்கைகளுக்குப் போதுமான கவனம் செலுத்தப்படுவதையும், ஒரு சில பெரிய நிலச் சொந்தக்காரர்கள் அல்லது பணக்காரர்கள் சங்கங்களின் பலன்களைத் தாங்களே கைப்பற்றிக் கொள்ளாமலிருப்பதையும் நிச்சயப்படுத்த வேண்டும். (எகிப்து போன்ற நாடுகளில் பெரிய நிலச் சொந்தக்காரர்கள் சட்டத்தால் கூட்டுறவுச் சங்கங்களின் அங்கத்துவத்திலிருந்து தடை செய்யப் பட்டுள்ளனர்.) (iii) முறையான தேர்தல்களும், தேர்தல் நடைமுறையின்மீது ஒருதலைப் பக்கமில்லாத கட்டுப்பாடும். (iv) நிருவாகக் குழு அலுவல்—இயக்குநர்களுக்கு அளிக்கப்படும் கடன்களை ஒழுங்குப்பாடு செய்தல். (v) கணக்குப் பதிவு நடைமுறையின்மீது விழிப்பும், காலந் தவருத தணிக்கையும். (vi) மேலாண்மைப் பணி முறைப் பிரிவுகளை அமைத்தல். (vii) சிப்பந்திகளின் கல்வியும் பயிற்சியும். (viii) உபயோகமானதும், பயனுறுதியானதுமான உறுப்பினர்-கல்விச் செயல்திட்டம்.

ஊன்றிய நலமிகளின் வளர்ச்சியை அடக்குவதற்குக் கூறப்பட்ட இதர ஒரு முக்கியமான யோசனையானது, ஒரு சங்கத்தில் ஒரு வரையறுக்கப்படாத எண்ணிக்கையுள்ள பதவிக் காலங்களுக்காக ஒருவர் தொடர்ந்து பதவியை வகித்தல்மீது தடைப்பாடுகளையும், பல சங்கங்களில்—பிரதமச் சங்கங்களில் அல்லது கூட்டமைப்புச் சங்கங்களில்—ஒருவர் ஒரே சமயத்தில் பதவியை வகித்தல்மீது தடைப்பாட்டையும் விதித்தல், ஒவ்வொரு பதவிக் காலமும், மூன்றுண்டுகளைக் கொண்டுள்ள இரண்டு தொடர்ந்த பதவிக் காலங்களுக்காக ஒரு சங்கத்தில் இயக்குநராக இருந்த எவரும், மூன்றுண்டுகளைக் கொண்ட மற்றொரு பதவிக் கால விடவு கழிந்துபோயிருந்தா லொழிய, மீண்டும் ஓர் இயக்குநராகத் தேர்ந்தெடுக்கப்படக் கூடாதென்று சந்தானம் குழுவினர் பரிவுரை செய்தனர். ஒரு சங்கத்திற்கு மதிகமான

சங்கங்களில் எவரும் ஒரு நிருவாகக் குழு அலுவல்-இயக்குநராக இருக்கக் கூடாதென்றும், பதிவு செய்யப்பட்ட மூன்று சங்கங்களுக்கு மதிகமான சங்கங்களில் எவரும் ஓர் இயக்குநராக ஒரே காலத்தில் இருக்கக் கூடாதென்றுங்கூட அக் குழுவினர் யோசனை கூறினர். தமிழ் நாட்டில் தற்போது ஐந்து பதிவான சங்கங்களுக்கு மதிகமான சங்கங்களில் எவரும் ஒரே சமயத்தில் இயக்குநராக இருக்கக் கூடாதென்ற கட்டுப்பாடு இருந்து வருகிறது.

ஓர் இயக்குநரின் பதவிக் காலத்தையும், அவர் இயக்குநராக இருக்கக்கூடிய சங்கங்களின் எண்ணிக்கையையும் கட்டுப்படுத்தும் சட்டமியற்றுதலை மராட்டியம், கர்நாடகம் போன்ற சில மாநிலங்கள் நிறைவேற்றியுள்ளன. எனினும், சட்டமியற்றல் மட்டுமே இக் கேட்டைக் களைந்துவிட முடியாதென்று கூறக்கூடும். அது முடிந்தவரை, ஊன்றிய நலமிகள் வளரமுடியாத நிலைமைகளை ஏற்படுத்தத்தான் உதவும். உண்மையிலேயே, சட்டமியற்றலானது, அனுபவமும், நேர்மையும் படைத்த சேவை அர்ப்பணம் செய்த சில மனிதர்களை இயக்கம் இழக்கச் செய்யும். மற்றும், அஃது ஒரு நபர்கள் பிரிவை ஆட்சியில் அமர்த்துவதற்கு வகை செய்து, ஒரு வகை ஊன்றிய நலமிகளை அகற்றி, மற்றொரு வகை ஊன்றிய நலமிகளை உண்டாக்கவும் செய்யும். சட்ட நடவடிக்கைகள் வெற்றியடைய வேண்டுமானால், உறுப்பினர்-கல்வியும், கூட்டுறவாளர்களிடையே விவேகமுள்ள ஒரு பொதுக் கருத்தை உண்டாக்குதலும், அத்தியாவசியமாகவுள்ளன. தற்போது, கூட்டுறவுச் சங்கங்களின் நன்மைகளைப் பற்றிய பெருகி வரும் ஓர் உணர்வு பொது மக்களிடை உள்ளது என்பதை யாரும் மறுக்க முடியாது. நன்கு ஆலோசிக்கப் படாத எந்த நடவடிக்கையையும் பொதுமக்கள் விரைவாக எதிர்த் தாக்குச் செய்து, சமுதாய அநீதியைக் கொண்ட எந்த நடவடிக்கைக்கு மெதிராக தங்களுடைய கருத்தை உறுதியாக வெளியிடுகின்றனர். சரியான நிருவாகத்தை உறுப்பினர்கள் தெரிந்தெடுப்பார்களென்று நியாயமாக எதிர்பார்க்கலாம். இல்லாவிடில், ஜனநாயகத்தில் ஒரு நம்பிக்கையின்மையை அது காட்டும். விஷயமறிந்த, விவேகமுள்ள, விழிப்புள்ள ஓர் அங்கத்துவந்தான், ஊன்றிய நலமிகளின் வளர்ச்சிக்கு எதிரான மிகச் சிறந்த உத்தரவாதமாகவுள்ளது. அத்தகைய அங்கத்துவத்தை அமைத்து வளர்ப்பதற்காக, கூட்டுறவுச் சங்க உறுப்பினர்களின் உரிமைகளைப் பற்றியும், பொறுப்புகளைப் பற்றியும், பாமர மக்கள் கல்விக்கான ஒரு செயல்திட்டம் விறுவிறுப்பாக அமுல்படுத்தப்படவேண்டுவது அத்தியாவசியமாகவுள்ளது.

## 5. கூட்டுறவு இயக்கத்தை அரசியல் பற்றற்றதாகச் செய்தல் (Depoliticisation of the Co-operative Movement)

கூட்டுறவு நிறுவனங்களின் நிருவாகத்தில், அரசியல் தலைவர்கள் தீவிரப் பங்கு கொள்ளுதலிலிருந்து அகற்றுவதற்கான ஒரு நடவடிக்கையாக, சந்தானம் குழுவினர் (1969), சட்டமன்ற உறுப்பினர்கள்—மாநிலச் சட்டமன்ற உறுப்பினர்களும், பாராளு மன்ற உறுப்பினர்களும்—இயக்குநர்களாகவிருக்க அனுமதிக்கப் பட்டாலும் கூட்டுறவுச் சங்கங்களில் நிருவாகக் குழு அலுவல் இயக்குநர்களாக இருக்கக் கூடாதென்று பரிவுரை செய்தனர். சட்டமன்ற உறுப்பினர்கள், சட்டமியற்றும் வேலையிலும் தங்கள் தொகுதிகளிலுள்ள வேலைகளிலும் அதிகமாக ஈடுபட்டிருப்பர் என்றும், இயக்கத்தின் முன்னேற்றத்திற்குகந்ததாக இருக்க முடியாத ஓர் அரசியல் உள்நோக்கத்துடன் அவர்கள் முடிவுகளை யெடுக்க நேரிடும் என்றும், அக் குழுவினர் கருத்துக் கொண்டனர். அமெரிக்க ஐக்கிய நாடுகளில், பெரிய கூட்டுறவுச் சங்கங்களில் சில, அரசியல் பதவிகளை வகிக்கும் நபர்கள் இயக்குநர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுவதிலிருந்து தடை செய்துள்ளன என்று தெரிகிறது. ஆகையால், கூட்டுறவுச் சங்கங்களில் சட்ட மன்ற உறுப்பினர்கள் பதவி வகிப்பதன்மீது ஒரு சட்டப்படியான தடை விதிக்கப்பட வேண்டுமென்று அக் குழுவினர் பரிவுரைசெய்தனர். மற்றும், ஒரு சங்கத்தின் நிருவாகக்குழு அலுவல்-இயக்குநர், மாநிலச் சட்டமன்றத்திற்கான அல்லது பாராளுமன்றத்திற்கான தேர்தலில் போட்டியிட விரும்பினால், அவர் தேர்தல் நியமனத் தாளைத் தாக்கல் செய்வதற்கு முன்பு, சங்கத்தில் அவர் வகித்துள்ள பதவியை இராஜினாமாச் செய்யவேண்டுமென்றுங்கூட அக் குழுவினர் பரிவுரை செய்தனர். எனினும், தற்போதைய அரசியல் வளர்ச்சிக் கட்டத்தில், அரசியலை இயக்கத்திலிருந்து முழுமையாக எடுத்துவிடுவது கடினமாக இருக்கும். அரசியல் ஊழியர் ஒருவர் ஒரு நிருவாகத்திற்குள்ளிருக்கும் சந்தர்ப்பத்தில், அவர் நிறுவனத்தின் நடவடிக்கைகளை அந் நிறுவனத்திற்குள்ளே யிருந்து ஒரு நடவடிக்கையாகப் பார்க்க வேண்டுமே தவிர, ஓர் அரசியல் கட்சியின் ஓர் உறுப்பினராக அந் நிறுவனத்திற்கு வெளியேயிருந்து ஒரு நடவடிக்கையாகப் பார்க்கக் கூடாது. தனிப் பட்ட சொந்தநலம் அல்லது கட்சி நலம் என்ற கண்ணுடன் சில கொள்கை முடிவுகளை யெடுத்தல் போன்ற ஆரோக்கியமற்ற செயல் முறைகளைத் தடுப்பதற்கு, உள்ளமைந்த ஓர் ஏற்பாடு தேவையாகவுள்ளது. கூட்டுறவுச் சங்கங்களில் அரசியல் நுழைவால் ஏற்படும் தீமை பயக்கும் விளைவுகளை வராமல் தடுப்பதற்கும் கூட்டுறவு நிறுவனங்களை அரசியல் அதிகாரம் மற்றும் ஆதரிப்புப்

பீடங்களாக உபயோகிக்க முயலும் அத்தகைய நபர்களைக் கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து தூரமாக வைப்பதற்கும், விவேக முள்ள, துணிவுள்ள, விழிப்புள்ள ஓர் அங்கத்துவமும், சமுதா யத்தின் ஒழுக்கப் படித்தரமும் அதிகமாகத் தேவைப்படுகின்றன.

## 6. கூட்டுறவில் தலைமை (Leadership in Co-operation)

கூட்டுறவு இயக்கத்திற்கான பலத்திற்குப் பெரியதோர் ஆதாரம், கூட்டுறவு நிறுவனங்களின் நிருவாகத்திற்குத் தேர்ந் தெடுக்கப்படுகின்றவர்களுக்கு இருக்கவேண்டிய பற்றற்ற சேவை மனப்பான்மையில் இடம் பெற்றிருக்கிறது. கூட்டுறவுச் சங் கங்கள் அலுவல்களின் பொறுப்பிலுள்ளவர்கள் தங்கள் சொந்த நடத்தையாலும் உதாரணத்தாலும், தன்னுதவி, பரஸ்பரஉதவி, நடைமுறை ஒழுக்கக் கட்டுப்பாடு, விசுவாசம் ஆகிய கொள் கைகளைக் கடைப் பிடிப்பதற்கான அவசியத்தை உறுப்பினர்களின் மனத்தில் பதியச் செய்யக்கூடியவர்களாக இருக்க வேண்டும். சங்கங்களில் தங்கள் பதவியை அவர்கள் அதிகாரத்திற்காகவும், கவுரவத்திற்காகவுமான வாய்ப்புகளாகப் பாவிக்கக் கூடாது. புறம்பான பிரதிபலன்களால், அதாவது அரசியல் அல்லது ஜாதி சம்பந்தமான ஆலோசனைகளால், தூண்டப்படாமல், நிறுவனங் களைச் சரியான முறைகளில் வழிகாட்டியும், இயக்கியும் வருதலானது, அவர்கள்மீது விதிக்கப்பட்டுள்ள ஒரு கடுமை யான பொறுப்பாகும். அவ்வாறு அவர்கள் இயங்கினால் தான், இயக்கத்தில் பொதுமக்களுக்குள்ள நம்பிக்கையானது வளர்ந்து, இயக்கத்தில் அவர்கள் அதிகரித்து வரும்வகையில், பங்கு கொள்வதைப் பெறமுடியும். பல்வேறு மட்டங்களிலுள்ள கூட்டுறவு நிறுவனங்களின் நிருவாகத்தில் தீவிரமாகத் தங்களை ஈடுபடுத்திக் கொள்வதற்குத் தகுதியுள்ள நபர்களைப் பெறுவதற்குச் சாத்தியப்படுகின்ற அளவுக்குத்தான், கூட்டுறவு இயக்கம் தன் குறிக்கோள்களை விரைவாக அடைவதற்கு எதிர்பார்க்க முடியும். ஆகையால், பிரதம மட்டம் முதல் தேசிய மட்டம் வரையிலான எல்லா மட்டங்களிலும், தலைவர்கள் — தகவலறிந்த, ஆற்றல் வாய்ந்த, பொதுநல உணர்ச்சிபடைத்த தலைவர்கள்—ஏற்படுவது சம்பந்தப்பட்ட எல்லோராலும் ஊக்குவிக்கப்படவேண்டியது மிக முக்கியமானதாகும். மேத்தா குழுவும் சந்தானம் குழுவும், அத்தகைய தலைவர்களை வளர்த்து ஊக்குவிப்பதன் அவசியத்தைப் பெரிதும் வலியுறுத்தியுள்ளன. இயக்கத்தின் அடித்தளங்களாகப் பிரதம அமைப்புகள் அமைந்திருப்பதாலும், உயர்நிலைக் கூட் டமைப்பு நிறுவனங்களின் நிருவாகத்திற்காகப் பிரதம அமைப்பு களிலிருந்து மனிதர்கள் பெறப்படுகிறமையாலும், கிராம

மட்டத்தில் உள்ளூர்த் தலைவர்களை உண்டாக்குவது குறிப்பான முக்கியத்துவம் வாய்ந்தது. வருங்காலத் தலைவர்கள் வகையின் மீதுதான் பெருமளவு கூட்டுறவின் வருங்காலம் சார்ந்திருக்கும்.

## 7. புதிய கொள்கைகளையும் செயல்திட்டங்களையும் நடைமுறைப்படுத்துவதற்குப் போதுமான காலம் தேவை (New Policies and Programmes should be given a fair trial)

எந்தக் கொள்கைக்கும் ஒரு நியாயமான ஆதரவு அளிக்கப்பட வேண்டும். வளர்ச்சியானது உறுதிப்பாட்டுடன் இணைக்கப்பட வேண்டும். அடிக்கடி கொள்கை மாறுதல்களாலும் கூட்டுறவு அபிவிருத்தியின் பாணியினாலும் வளர்ச்சியானது பாதிக்கப்படக் கூடாது. நாம் புதுக் கருத்துகளைப் புறக்கணிக்கக் கூடாதென்றாலும் அப் புதுக் கொள்கையானது பயனுறுதியாக அமுலாக்கப்பட்டு அதன் பலன்கள் ஆய்வு செய்யப்படக் கூடிய ஒரு நியாயமான காலத்திற்காகவாவது ஒரு முடிவான நிலையை நிச்சயப்படுத்த முடிந்தாலொழிய, உத்தேசிக்கப்பட்ட எவ்விதப் புதிய ஏற்பாட்டிலும் பொதுமக்களின் நம்பிக்கையை இழந்து, புதிய கொள்கைகளையும், செயல் திட்டங்களையும் மனப் பூர்வமாக அமல்படுத்துவதில் தடையேற்படக் கூடுமாகையால், இயக்கத்தின் வளர்ச்சி தாமதமடையும். உதாரணமாக, விவசாயக் கடன் சங்கங்கள் விஷயத்தில், கொள்கை மாற்றம் அடிக்கடி இருந்து வந்த காரணத்தால் அவற்றின் வளர்ச்சி ஓரளவிற்குத் தடை செய்யப்பட்டிருந்தது. தங்களை வளர்ச்சி செய்து கொள்வதற்காகக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு ஒரு நியாயமான கால வரையையும் வாய்ப்பையும் அளிக்கின்ற கொள்கையைக் கடைப்பிடித்தல்தான் பெரும்பலன்களை விளைவிக்கின்ற நோக்கத்தைக் கொண்டுள்ளதாக இருக்கும்.

## 8. அரசினரின் பங்கு (Role of the State)

கடந்த காலத்தில், நாட்டின் கூட்டுறவு வளர்ச்சியில் அரசினர் ஒரு முக்கியப் பங்கையெடுத்திருந்தனர். அவ்வாறே வருங்காலத்திலும் ஒரு முக்கியப் பங்கை யேற்கத் தொடர்ந்திருப்பர். இயக்கம் தன் சொந்த நிதியாதாரங்களை—நிதிகளையும் பணியாளர் தொகுதியையும் — எதிர்பார்க்கக்கூடிய வருங்காலத்தில் பெறுவதற்குரிய நிலையில் இருக்க முடியுமென்று எதிர்நோக்குவதற்குக் கடுமையாக உள்ளது. எனவே, அரசினர் உதவியளிக்கும் காலக் கட்டத்தின்போது, அரசுக்கும் கூட்டுறவுச் சங்கங்களுக்குமிடையிலான உறவு, இயக்கத்தின் தன்னாட்சித் தன்மையையும், சுதந்திரத் தன்மையையும் பாதிக்காத வண்ணம் இருத்தல்

வேண்டும். இயக்கத்திற்கு அரசு தன் ஆதரவை அளிக்கத்தான் வேண்டுமென்றாலும், அதே சமயத்தில் அது சங்கங்களிடையே ஒரு முன்முயற்சியை ஊக்குவித்தும், அவற்றின் தலைவர்களுக்கு ஆர்வமளித்தும், அவற்றின் நிருவாகத்தில் தேவையற்ற தலையீடு செய்யாமலும், நிறுவனத்தில் அரசியல் புகாமலிருப்பதை நிச்சயப்படுத்தியும் செயற்பட வேண்டும். எல்லாத் திட்டமிடுதலிலும் அரசு துறையையும் தனியார் துறையையும் போன்று, கூட்டுறவுத் துறைக்கும் ஒரு தனிப்பட்டதும் நன்கு தெளிவாக்கப்பட்டதுமான இடத்தை அரசு அளிக்க வேண்டும்; மற்றும், வருங்காலத்திலும் அது அவ்வாறு அளிக்கும் என்பதில் ஐயப்பாடு சிறிதுமில்லை. முடிந்தவரை சமுதாயத்தின் ஒரு பெரும் பிரிவான பகுதியின் நலன்களுக்குத் திறம்படவும் பல்வேறு வழிகளிலும் பணியாற்றுகின்ற ஒரு முறையில், செயற்படுவது கூட்டுறவுச் சங்கங்களின் ஒரு கடமையாகும். இக் கண்ணோட்டங்களைக் கருத்தில் கொண்டு பார்த்தால், கூட்டுறவுச் சங்கங்களின் வளர்ச்சியிலும் செயற்பாட்டிலும் அரசு முக்கியமானதும் அத்தியாவசியமானதும் தொடர்ந்துள்ளதுமான ஒரு பங்கை யேற்றிருக்க வேண்டியுள்ளது.

## 9. கூட்டுறவின் இறுதி இலட்சியம்

தேசியப் பொருளாதார அமைப்பில் கூட்டுறவுத் துறை வளர்ச்சியடைந்து தன் அத்தியாவசியமான பணியை யாற்றுவதற்காக இயக்கம், முன்னரே குறிக்கப்பட்ட, தன் பலக்குறைவுகளைப் போக்கிக் கொள்ள வேண்டியது அவசியமாகும். பொதுமக்களிடையே, பயனுறுதியானதும், தீவிரமானதும், தொடர்ச்சியானதுமான கல்வி புகட்டுவதன் மூலம், ஒரு கூட்டுறவு உணர்ச்சியும், உணர்வும் பெருமளவில் வளர்ச்சி செய்யப்பட வேண்டும். இயக்கம் சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்களுக்கு உதவும் வகையில் இயங்கி, அதிகமான தற்சார்புக்காகவும், சுயஒழுங்குப்பாட்டிற்காகவும் இடைவிடாது முயல வேண்டும். கூட்டுறவு இயக்கத்தின் தற்போதைய வளர்ச்சி வேகம் பராமரிக்கப்பட்டும் விரைவுபடுத்தப்பட்டும், கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சாதகமாக அரசு ஆதரவும் சலுகையும் நீடித்தால், வருகின்ற ஆண்டுகளில் இயக்கம் நம்நாட்டின் பொருளாதார அமைப்பில் ஒரு முதன்மையானதும், மிக முக்கியமானதுமான சக்தியாகத் திகழும். தன் சொந்தச் செயற்பாட்டின் காரணமாகவும், இதர அமைப்புகளின் வாணிகத்தின்மீது ஒரு குணப்படுத்தும் சக்தியாகவும், கூட்டுறவானது கிராமங்களிலும், பட்டினங்களிலுமுள்ள மக்களின் அன்றாட வாழ்க்கையின் பிரிக்க

முடியாத ஒரு பகுதியாக ஏற்பட்டு, அவர்களின் பொருளாதார, சமுதாய முன்னேற்றத்திற்காகச் சமமான வாய்ப்புகளை அளிக்கும் என்பது திண்ணம். அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட மேலான ஓர் இலட்சியத்தைக் கொண்டிருப்பதால், ஒரு ஜன நாயகச் சமஉடைமைச் சமுதாயத்தின்—பொதுவாக அரசு ஆதரவைப் பெற்று—பொருளாதார அமைப்பில் எல்லாத் துறைகளிலும் மிக முதன்மையான ஒரு பங்கை யேற்பதற்கு அது மிக அதிகமான வேகத்துடன் முன்னேறக்கூடும்.

இந்திய அரசியலமைப்பின் படைப்புத் தந்தைகள் ஒரு 'கூட்டுறவுப் பொதுநல ஐக்கிய அமைப்பை'க் (Co-operative Common Wealth) கனவு கண்டனர். இக் கனவு, நினைவாவதற்கு நெடுங்காலமாகலாம். ஆனால், நிலை மாறுங்காலத்தில், கூட்டுறவு இயக்கமானது, சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்களுக்கான ஆட்சி மாற்றத்தைப் பிரதிபலிப்பதற்காகவும், பொருளாதாரம் மற்றும் சமுதாய வளர்ச்சிப் பாதையை நோக்கிப் பொருளில்லாதவர்களின் முன்னேற்றத்தின் ஒரு பிரதிநிதியாகப் பணியாற்றுவதற்காகவும், கூட்டுறவு இயக்கம் பெருமளவு திருத்தியமைக்கப்படவேண்டும். பேராசிரியர் டி.ஜீ. கார்வே (Prof. D. G. Karve) அவர்களின் கூற்றுப்படி 'நாட்டின் குடிமக்களனைவரிடையே ஆற்றப்படும் கூட்டுறவுத் தொண்டுதான் ஒரு பொருளாதார அமைப்பை ஒரு பொதுநல — ஐக்கிய - அமைப்பாகச் செய்கிறது.' இப் பணிகளுக்காகக் கூட்டுறவு இயக்கம் தன்னை வருங்காலத்தில் அர்ப்பணித்துக் கொள்ள வேண்டியுள்ளது. ஏனென்றால், ஒரு புகழ்பெற்ற பொருளியல் வல்லுநர் கூறியபடி, 'கூட்டுறவின் இலட்சியம், ஒவ்வொருவரும் ஒரு முழுமையான தனிப்பட்ட வாழ்க்கைக்கும், எல்லோரும் சமுதாயத்தில் ஒரு முழுவாழ்க்கைக்கும் உயர முடியச் செய்யும் பொருட்டுத் தற்சார்பையும், தொகுப்புணர்வையுங் கொண்ட மனிதர்களை உருவாக்கச் செய்வதாகும்'.

# அறிக்கைகள்

1. இந்தியாவில் கூட்டுறவைப் பற்றிய மேக்லகன் குழுவின் அறிக்கை (1915).

2. சென்னையில் கூட்டுறவைப் பற்றிய டவுன்செண்ட் குழுவின் அறிக்கை (1928).

3. சென்னையில் கூட்டுறவைப் பற்றிய விஜயராகவாச் சாரி குழுவின் அறிக்கை (1939–40).

4. கூட்டுறவுத் திட்டக்குழுவின் (சராய்யா) அறிக்கை—1951; இந்திய அரசு.

5. அனைத்திந்தியக் கிராமக் கடன் விசாரணைக் குழுவின் அறிக்கை—தொகுதி II; பொது அறிக்கை 1954—கோர்வாலா.

6. சென்னையில் கூட்டுறவைப்பற்றிய நாராயணசாமி பிள்ளைக் குழுவின் அறிக்கை (1955–1956).

7. கூட்டுறவுக் கடனைப் பற்றிய மேத்தா குழுவின் அறிக்கை—இந்திய அரசு (1960).

8. அனைத்திந்தியக் கிராமக்கடன் மறு ஆய்வுக் குழுவின் அறிக்கை—இந்திய அரசு (1969).

9. மிர்தாக் குழுவின் அறிக்கை—இந்திய அரசு (1965).

10. தவணை தவறிய பாக்கிகளைப் பற்றிய டாட்டேகுழுவின் அறிக்கை—ரிசர்வ் வங்கி (1974).

11. தமிழ்நாட்டில் கூட்டுறவுச் சங்கங்களின் செயற்பாட்டைப் பற்றிய ஆண்டு நிருவாக அறிக்கைகள்—தமிழக அரசின் கூட்டுறவுத் துறையால் வெளியிடப்பட்டவை—சென்னை.

12. தமிழ்நாட்டில் கூட்டுறவு பற்றிய சந்தானம் குழுவின் அறிக்கை (1969).

# மேற்கோள் நூற்பட்டியல்
## (Bibliography)


1. 'சீனுவிலும் ஐப்பானிலும் கூட்டுறவு'—மகேஷ்சந்த், எம்.ஏ.

2. 'வெளிநாடுகளில் கூட்டுறவு'-டாக்டர் சி.பி.மமோரியா, டாக்டர் ஆர்.டி. சக்சேனு.

3. 'கூட்டுறவின் கோட்பாடும், வரலாறும், நடைமுறையும்'—ஆர்.டி. பேடி.

4. 'பொது நல ஐக்கிய அமைப்பு நாடுகளில் விவசாயக் கூட்டுறவு'—மார்கரெட் டிக்பி.

5. 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்திற்குத் தொடர்பான புள்ளிவிவரப் பட்டியல்கள், 1971—72. பாகம் I, கடன் வசதிச் சங்கங்கள்'— ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடன்துறையால் வெளியிடப்பட்டது.

6. 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்திற்குத் தொடர்பான புள்ளிவிவரப் பட்டியல்கள், 1970—71. பாகம் II—கடன் பற்றற்ற சங்கங்கள்' — ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடன்துறையால் வெளியிடப்பட்டது.

7. 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தின் ஆய்வு 1968—1970'—ரிசர்வ் வங்கியின் விவசாயக் கடன்துறையால் வெளியிடப்பட்டது.

8. 'கூட்டுறவின் சட்டமும் கொள்கைகளும்'-எச்.கால்வர்ட்.

9. 'இந்தியாவில் கூட்டுறவு இயக்கத்தில் அண்மையான போக்குகள்'—ஆர்.பி. தியாகி.

10. 'காமர்ஸ்'—ஆண்டு மலர்—1974.

11. 'இந்தியா'—1972, 1973, 1974. இந்திய அரசின் செய்தி, ஒலிபரப்புத்துறையால் வெளியிடப்பட்ட, ஒரு மேற்கோள் ஆண்டு மலர்.

12. 'தமிழ்நாடு கூட்டுறவு இதழ்' வெளியீடுகள். தமிழ்நாடு கூட்டுறவு ஒன்றியத்தால் வெளியிடப்பட்டவை — சென்னை.

# கலைச்சொற்கள்

## A

Additional Registrar — கூடுதல் பதிவாளர்
Advance — முன்பணம்
Agency — பதிலாண்மை, முகமை, அமைப்பு
Agent — பிரதிநிதி, பதிலாள்
Agricultural Credit Stabilisation Fund — விவசாயக் கடன் வசதி நிலை பெருக்கும் நிதி, விவசாயக் கடன் வசதி நிலைப் படுத்தும் நிதி
Agricultural Refinance Corporation — விவசாய மறுநிதிக் கழகம்
Agricultural Relief and Guarantee Fund — விவசாயக் கடன் நிவாரணம் மற்றும் உத்தரவாதம் நிதி
Agro-Engineering and Service Co-operative Federation — வேளாண்மைப் பொறியியல் பணிக் கூட்டுறவுக் கூட்டமைப்பு
Associate Membership — துணை அங்கத்துவம்

## B

Bad debt Reserve — வராக் கடன் காப்பிருப்பு
Banking Services — வங்கித்தொழில் சேவைகள்
Bankers' Bank — வங்கிகளின் வங்கி
Benami Loan — பொய்க் கடன்கள்
Block Capital — நிலை முதல்
Block Investment — நிலை முதலீடு
Block Loan — நிலை கடன்
Board of Management — நிருவாகக் குழு
Bureau — நிலையம்
Business Organisation — வர்த்தக நிறுவனம்

## C

| | | |
|---|---|---|
| Capital | — | மூலதனம், முதல் |
| Capitalism | — | முதலாளித்துவம் |
| Cash Credit | — | ரொக்கக் கடன் |
| Cash Trading | — | ரொக்க வாணிகம் |
| Cheque | — | காசோலை |
| Clean Bill | — | சுத்த உண்டியல் |
| Collective Farming Societies | — | தொகுப்புப் பண்ணைச் சங்கங்கள் |
| Commercial Banks | — | வாணிக வங்கிகள் |
| Commission | — | ஆணைக்குழு—தரகு, கழிவு |
| Commission Agency System | — | தரகு பதிலாண்மை முறை |
| Committee | — | குழு |
| Commodity | — | பண்டம், பொருள் |
| Communism | — | பொது உடைமை |
| Consumers' Co-operatives | — | நுகர்வோர் கூட்டுறவுச் சங்கங்கள் |
| Contributory Liability | — | உடந்தையான பொறுப்பு. |
| Contribution | — | உதவித்தொகை |
| Co-operative Common Wealth | — | கூட்டுறவுப் பொதுநல ஐக்கிய அமைப்பு |
| Co-operative Farming Societies | — | கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் |
| Co-operative Housing Societies | — | கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்கள் |
| Co-operative Member Education | — | கூட்டுறவு உறுப்பினர் கல்வி |
| Co-operative Marketing | — | கூட்டுறவு விற்பனை |
| Co-operative Processing | — | கூட்டுறவுப் பதனப்படுத்துதல் |
| Co-operative Spinning Mills | — | கூட்டுறவு நூற்பு ஆலைகள் |
| Co-operative Stores | — | கூட்டுறவுப் பண்டசாலை |
| Co-operative Sugar Mills | — | கூட்டுறவுச் சர்க்கரைஆலைகள் |
| Co-operative Supervising Union | — | கூட்டுறவு மேற்பார்வை ஒன்றியம் |
| Co-operative Township | — | கூட்டுறவு நகரியம் |
| Co-operative Training | — | கூட்டுறவுப் பயிற்சி |
| Co-operative Urban Bank | — | கூட்டுறவு நகர வங்கி |
| Cost price | — | அடக்க விலை |
| Credit Guarantee Corporation | — | கடன் உத்தரவாதக் கழகம் |

Credit Society — கடன் வசதிச் சங்கம்
Crop Loan System — பயிர்க் கடன் முறை
Current Deposit — நடப்பு வைப்பு

**D**

Debentures — கடனீட்டுப் பத்திரங்கள்
Debenture Redumption Fund — கடனீட்டுப் பத்திரம் மீட்சி நிதி
Debtor — கடனாளி
Demand — தேவை, கேட்பு
Demand Draft — கேட்புப் பணவிடை
Democratic Socialism — மக்களாட்சிச் சம உடைமை
Departmental Stores — பலபிரிவுப் பண்டசாலை
Deposit — வைப்புகள்
Deposit Insurance Scheme — வைப்புகள் காப்பீட்டுத் திட்டம்
Depression — மந்தம்
Diploma — பட்டயம்
District Central Co-operative Banks — மாவட்ட மத்தியக் கூட்டுறவு வங்கிகள்
Director — இயக்குநர்
Dividend — இலாப ஈவு

**E**

Employees' Co-operative Credit Societies — ஊழியர்கள் கூட்டுறவுக் கடன் வசதிச் சங்கங்கள்
Equity — நடுநிலை, நேர்மை
Evolution — பரிணமம், மலர்ச்சி
Extension Officer — விரிவாக்க அலுவலர்

**F**

Failed Wells Fund — நீர் கிடைக்காக் கிணறுகள் நிதி
Features — அம்சங்கள், இயல்புகள், கூறுகள்
Federation — கூட்டமைப்பு
Federal — கூட்டாட்சி
Fixed Capital — நிலையான முதல்
Fixed Deposit — தவணை வைப்பு

Floor price — அடித்தள விலை, தரை விலை
Fluid resources — எளிதில் பணமாக்கக் கூடிய ஆதாரங்கள்

## G

General Body — பேரவை
General Manager — பொது மேலாளர்
Ginning — பஞ்சிலிருந்து பருத்திக் கொட்டை நீக்குதல்
Godown — கிடங்கு
Government — அரசு
Grading — தரப்படுத்துதல்
Guarantee Liability — உத்தரவாதப் பொறுப்பு

## H

Handicraft — கைத்திறன் தொழில்
Horticulture — தோட்டக்கலை
House Construction Co-operative Societies — வீடுகட்டும் கூட்டுறவுச் சங்கங்கள்
Hypothecation Credit — அடைமானக் கடன்

## I

Individualism — தனியார் சுவாதீனக் கொள்கை
Individual Maximum Borrowing Power — தனிநபர் உச்சக் கடனளவு
Industrial Co-operative Societies — தொழிற் கூட்டுறவுச் சங்கங்கள்
Industrial Development Bank of India — இந்தியத் தொழில் வளர்ச்சி வங்கி
Inflation — பணவீக்கம்
Insurance — காப்பீடு, ஈட்டுறுதி
Integrated Scheme — ஒருங்கிணைந்த திட்டம்
Internation Co-operative Alliance — அனைத்து நாட்டுக் கூட்டுறவு ஒன்றிணைப்பு

## J

Joint Farming — கூட்டுப் பண்ணைத்தொழில்

## L

Labour Contract Co-operative Societies — தொழில் ஒப்பந்தக் கூட்டுறவுச் சங்கங்கள்
Large-size Primary Agricultural Credit Societies — பெரிய அளவு பிரதம விவசாயக் கடன் வசதிச் சங்கங்கள்
Leadership — தலைமை, தலைவர்கள்
Letter of Credit — பற்றுத் திருமுகம்
Licence — உரிமம்
Lift Irrigation Societies — ஏற்றுநீர்ப் பாசனச் சங்கங்கள்
Limited Liability — வரையறுக்கப்பட்ட பொறுப்பு
Liquid Assets — ரொக்கமாகக் கூடிய சொத்துகள்
Long-term Loan — நீண்ட காலக் கடன்
Loss — நட்டம்

## M

Margin — இறுதிநிலை, விளிம்பு
Marginal Farmers — இறுதிநிலைக் குடியானவர்கள்
Market Intelligence — சந்தைத் தகவல்; சந்தை நிலவரத்தைப் பற்றிய அறிவு
Market Price — அங்காடி விலை
Maximum Borrowing Power — உச்சக் கடனளவு
Medium-term Loan — மத்தியக் காலக் கடன்
Member — உறுப்பினர், அங்கத்தினர்
Milk Supply Co-operative Societies — பால் வழங்கும் கூட்டுறவுச் சங்கங்கள்
Mini Super Market — சிறிய சிறப்பு அங்காடி
Money Market — பணச் சந்தை
Multi-Purpose Society — பல நோக்குச் சங்கம்
Mutual help — பரஸ்பர உதவி

## N

National Co-operative Development Corporation — தேசியக் கூட்டுறவு வளர்ச்சிக் கழகம்
National Agricultural Credit (Long-term Operations) Fund — தேசிய விவசாயக்கடன்(நீண்டகால நடவடிக்கைகள்) நிதி

Nationalisation — நாட்டுடைமையாக்கல்
Nationalised Commercial Banks — நாட்டுடைமையாக்கப்பட்ட வாணிக வங்கிகள்
National Planning Commission — தேசியத் திட்டக் குழு
Nominal Member — பெயரளவு உறுப்பினர்
Non-Credit Society — கடன் பற்றற்ற சங்கம்

## O

Office bearers — நிருவாகக் குழு அலுவலர்கள்
Open Membership — திறந்த அங்கத்துவம்
Overdrafts — அதிகப் பற்றுகள்
Overdues — தவணை தவறிய பாக்கிகள்

## P

Parcel — சிப்பம்
Personal Liberty — தன்னுரிமை
Philosophy — தத்துவம்
Pledge credit — அடகு கடன்
Politics — அரசியல்
Politicisation of the Co-operative Movement — கூட்டுறவு இயக்கத்தை அரசியல் மயமாக்குதல்
Pooled price — தொகுப்புச் சராசரி விலை
Pooling — தொகுத்தல், திரட்டுதல்
Potentially viable — தன்னிறைவு வாய்ப்புள்ள
Pressing — அழுத்தம்செய்தல்
Price Fluctuation Fund — விலைவாசி ஏற்றஇறக்க நிதி
Price Support — விலை ஆதரவு
Primary Agricultural Co-operative Credit Societies — பிரதம விவசாயக் கூட்டுறவுக் கடன்வசதிச் சங்கங்கள்
Private Sector — தனியார் துறை
Procurement of Food Grains — உணவுத் தானியக் கொள்முதல்
Professional Management — தொழில் தேர்ச்சி பெற்ற நிருவாகம்
Profit motive — இலாப நோக்கு
Public Sector — பொதுத் துறை

**Q**

Quorum — குறைவெண் வரம்பு
Quota — வீதப்பங்கு

**R**

Raw material — கச்சாப் பொருள், மூலப் பொருள்
Regulated market — ஒழுங்குமுறைபடுத்தப்பட்ட அங்காடி, ஒழுங்குமுறைச் சந்தை
Rehabilitation — மறுவாழ்வு, புனர்வாழ்வு
Reserves — காப்பிருப்புகள்
Reserve Bank of India — இந்திய ரிசர்வ் வங்கி
Reserve Fund — காப்புநிதி
Revolving Fund — சுழல் நிதி
Revolving Credit System — சுழல் ரொக்கக்கடன் முறை
Risk Fund — நட்டவச்ச நிதி
Rural Credit — கிராமக் கடன்
Rural Debentures — கிராமக் கடனீட்டுப் பத்திரங்கள்

**S**

Savings — சேமிப்புகள்
Scheduled Caste — அட்டவணைச் சாதியினர்
Scheme — திட்டம்
Security — பிணையம், பாதுகாப்பு
Self-help — தன்னுதவி, சுயஉதவி
Seminar — கருத்தரங்கு
Symposium — கருத்துக்கோவை
Short-term loans — குறுகிய காலக் கடன்கள்
Single Purpose Society — ஒரு நோக்குச் சங்கம்
Sinking Fund — கடன்கழிவு நிதி, கடன் தீர்க்கும் நிதி
Socialism — சம உடைமை, சமதர்மம்
Socialistic Pattern of Society — சம உடைமை வகைச் சமுதாயம்
Special Bad debt Reserve — வராக்கடன் சிறப்புக் காப்பிருப்பு
Special Development Debentures — சிறப்புக் கடனீட்டுப் பத்திரங்கள்

State — மாநிலம்
State Bank of India — இந்திய ஸ்டேட் வங்கி
State Co-operative Bank — மாநிலக் கூட்டுறவு வங்கி
State Co-operative Land Development Bank — மாநிலக் கூட்டுறவு நிலவள வங்கி
Statement — விவரப்பட்டியல்
State Partnership — அரசு கூட்டாளித்துவம்
State Participation — அரசு பங்குகொள்ளுதல்
Sub-Marginal Farming — கீழ் இறுதிநிலைப் பண்ணைத் தொழில்
Subsidiary occupation — துணைத் தொழில்கள்
Subsidy — மானியம்
Super Market — சிறப்பு அங்காடி
Surplus — உபரி

**T**

Taccavi loans — தக்காவிக் கடன்கள்
Target — இலக்கு
Television — தொலைக்காட்சி
Thrift — சிக்கனம்
Trading — வணிகம், வர்த்தகம் செய்தல்
Treasurer — பொருளாளர்
Turnover — வர்த்தகப் புரள்வு, விற்பனைப் புரள்வு
Trustee — பொறுப்பாளர்

**V**

Vested Interests — ஊன்றிய நலமிகள்
Viable Society — தன்னிறைவுள்ள சங்கம்
Vote — வாக்கு
Voluntary — தன்விருப்பார்ந்த, தன்னிச்சையான

**W**

Warehouse — பொருள் சேமிப்புக் கிடங்கு
Weaker Sections of Society — சமுதாயத்தின் பலங்குன்றிய பகுதியினர்
Weavers Co-operative Society — நெசவாளர் கூட்டுறவுச் சங்கம்
Welfare State — மக்கள்நல நாடு
Working Capital — நடைமுறை முதல், நடைமுறை மூலதனம்